


வாக்குறுதியைத் தரும் கட்சியை, பாரதமே திரண்டெழுந்து ஆதரித்து, ஆட்சியில் அமர்த்தலாம். அத்தகைய தார்மிக பலம் எந்தக் கட்சிக்கு இருக்கிறது?

# ரஜினிக்கு வாழ்த்து!

**கா**ங்கிரஸ் தலைமைக்குத்தான் நன்றி சொல்லவேண்டும். 'அரசியலில் இறங்கி எந்த வொரு கட்சிக்கும் ஆதரவு அளிக்கப் போவதில்லை' என ரஜினிகாந்த் மனங்கசந்துபோய் முடிவெடுக்க, காங்கிரஸ் தலைமையின் மசமசப்புதானே காரணம்!

ரஜினியின் அரசியல் பிரவேசம் குறித்து முன்பு நாம் எழுதிய தலையங்கத்தில் (6.8.95 இதழ்) அரசியல் வேறு, சினிமா வேறு; நடிப்பு வேறு, நிஜம் வேறு என்பதைச் சுட்டிக் காட்டி யிருந்தோம். கடைநிலைத் தொண்டராகத் தொடங்கி, படிப்படியாகப் பயிற்சி பெற்று முன்னேற வேண்டிய களம் அரசியல். சினிமா உலகில் விலைபோகும் தோற்றமும் ஸ்டைலும் மட்டுமே ஒருவரை வெற்றிகரமான அரசியல்வாதியாக்கிவிட முடியாது. அந்த ஆளுமையையும் புகழையும் பயன்படுத்தி திடீரென்று அரசியலுக்கு வந்தவர்கள் நல்லாட்சியாளர்களாகப் பிரகாசித்த வரலாறே கிடையாது என்று எடுத்துக் காட்டியிருந்தோம்.

அரசியலுக்கு வெளியே இருந்தபடி ஒரு கட்சியைத் தேர்ந்தெடுத்து ரஜினி தமது ஆதரவை அளிக்க வேண்டும் என்றும் கூறியிருந்தோம்.

இப்போது அதற்கேற்பவே முடிவெடுத்துள்ளார் ரஜினிகாந்த்.

தமிழ்நாட்டு அரசியல்வாதிகள் இந்த விஷயத்தை இதோடு விட்டுவிடமாட்டார்கள். ஒவ் வொரு கட்சியும் ரஜினியைத் தமது வட்டத்துக்குள் இழுத்து ஆதரவு பெற தொடர்ந்து முயற்சி செய்யும். அவர்கள் இழுப்புக்கு வளைந்து கொடுக்காமல் அவர் தொடர்ந்து உறுதியுடன் இருக்க வேண்டும்.

# கனாக் கண்

புதுதில்லி ரயில்வே ஸ்டேஷனில் எனக்காக ஏ.வி. ராஜகோபால் காத்திருந்தான். சட்டைக்கு மேல் ஸ்வெட்டர், அதற்கு மேல் ஜெர்க்கின், காதுக்கும் தலைக்குமாக மப்ளர், கைகளுக்கு கிளவுஸ், நிலக்கரி சுரங்க நபர் போல் தடித்த ஷூவெல்லாம் மாட்டிக் கொண்டு, சட்டென்று பார்க்க அடையாளம் தெரியவில்லை. கம்பளி மூட்டைகளாக மக்கள் முண்டியடித்துக் கொண்டிருக்க, அரைக்கை சட்டை, பேன்ட்டில் நான் மட்டும் அசல் அசடாக இருந்தேன். குளிர் எலும்பை உடைக்க, நல்ல வேளை ராஜகோபால் கூடுதலாக ஒரு ஜெர்க்கின் கொண்டு வந்திருந்தான். கொசுறாக, "தெரியும். இப்படி நிர்வாணமா வந்து நிற்பாய் என்று எதிர்பார்த்தேன்!" என்ற கமென்ட் வேறு.

கொஞ்சம் சிரித்து விட்டு, "எப்படி இருக்கே?" என்றேன்.

"நீ பார்க்கிறபடிதான். குளிர் காலத்தில் இழுத்துப் போர்த்திண்டு, வெயில் அடிச்சா, அவிழ்த்துப் போட்டுட்டு, மழை பெய்தால் கதவைச் சாத்திட்டு... எட்டாயிரம் சம்பளம் தரான். எருமை மேய்க்கச் சொன்னால் கூடத் தயார். டெல்லி எருமை!"

ராஜகோபால் புன்னகை மன்னன். நடந்த வாக்கில் ஒயிலாகத் திரும்பி ஒரு ஸ்மைல். என் பெட்டிகளில் ஒன்றை வாங்கியபடிக்கு, "வாட் அபவுட் யூ?" என்றொரு கேள்வி.

"அதே போலத்தானா? 'உங்கள் மேனி எழிலின் ரகசியம் என்ன, மாண்புமிகு மனிஷா தேவி அவர்களே' வா?"

"சேச்சே. இப்போ வெகு நல்ல முன்னேற்றம். அரசியல் நிருபராகி விட்டேன் தெரியுமா?"

"சுத்தம். இதற்கு அதுவே பெட்டர். நல்லது, என்ன விஷயமா திடீர் தில்லி விஸிட்?"

"ஒரு கருத்துக் கணிப்பு."

"என்னது?"

"சங்கராந்திக்கு எங்க பாட்டி தராப்பலே, ஜெயின் சாப் ஒருத்தர் பாக்கி வைக்காமல் எல்லா அமைச்சருங்களுக்கும் சேவிக்க வெச்சி, பணம் குடுத்திருக்கார். 'இன்னிக்கு நான்; நாளைக்கு நீ'ன்னு குல்லாக்காரன் ஒவ்வொருத்தனா கால் கடுதாசி எழுதிக் குடுத்திட்டிருக்கான். எலக்ஷன் வருது இல்லையா? இந்த நிமிஷம் தலைநகரில் நரசிம்மராவுக்கு என்ன செல்வாக்குன்னு ஒரு சர்வே. சின்ன லெவல்தான். இருபது ஏரியா. ஏரியாவுக்கு ஐம்பது பேர்."

'இந்தி வருமா உனக்கு? ஒரு பயல் இங்கிலீஷ் பேசமாட்டான், தெரிஞ்சால் கூட!'

நான் பெட்டியைக் கீழே வைத்து விட்டு, இரண்டு கைகளையும் ஹரிதாஸ் கிரி போல் உயரத்தூக்கி, 'ஸாரே ஜஹான் ஸே அச்சா; இந்துஸ்தான் ஹமாரா!' என்றேன்.

"எதேஷ்டம்!" என்றான் ராஜகோபால்.

ஸ்டேஷனை விட்டு வெளியே வந்ததும் கைதட்டி ஆட்டோ கூப்பிட்டு, 'கல்காஜி எக்ஸ்டென்ஷன் சலே' என்று ஏறிக் கொண்டோம். பனியில் மூழ்கி, ஆட்டோ நகரத் தொடங்கியதும், "இன்விடேஷன் வந்தது. சிங், லீவ் தர மாட்டேனுட்டான். அதான், உன் கல்யாணத்துக்கு வர முடியலை. எழுதி இருந்தேனே? சொல்லு. எப்படி இருக்கு, உன் புருஷ வாழ்க்கை?" என்றான்.

அவனுக்கு, என்னை - என் கனவுகளுடன் முழுசாகத் தெரியும். ஒரு சாதாரணனின் கனவுகள். லஸ் கார்னர் செலக்ட் ஓட்டலில் பலான



# டேன் தோழி...

வாசனைகளைச் சகித்துக் கொண்டு, வெறும் டீயாகக் குடித்தபடிக்கு ஆசைகளைச் சொல்லி இருக்கிறேன்.

பெண். இந்த இரண்டு எழுத்துக்கு நான் வைத்திருந்த டெஃபனிஷனை வார்த்தைகளில் கோக்க முடியாது. வெகு அழகு வேணுமென்று அவசியமில்லை. ஒரு ஈர்ப்பு இருக்க வேண்டும். எதிர்ப்படுகிறபோதெல்லாம் யாரும் இசைக்காத ஒரு சங்கீதம், நினைவில் சுழன்று எழ வேண்டும். சின்னதான குரல். எண்ணி எண்ணி உதிர்க்கிற சொற்கள். சீண்டல் அவசியமில்லை. சிணுங்கல் முக்கியம். செல்லச் சிணுங்கல். நிற்கிற, நடக்கிற, பார்க்கிற, சிரிக்கிற பாவனையில் ஒரு லயம் வேண்டும். சமையல் தெரிந்தால் சந்தோஷம். இலக்கியம் தெரிந்தால் விசேஷம். நாலாயிரம் சம்பளம். வாரம் ஒரு சினிமா. வழியில் கொக்ககோலா. வீட்டுக்குப் போய் ரசம் சோறு. விசிறிக்குக் கீழே, விடி விளக்கு வெளிச்சத்தில் மெத்தென்று ஒரு முத்தம்.



ரேணுகாவைப் பார்த்துவிட்டு, ஸ்ரீரங்கத்திலிருந்து அப்பா உருகி லெட்டர் எழுதி இருந்தார். அவருக்குப் பிடித்திருக்கிறது. வீடு பெங்களூரில் என்பது தவிர வேறு நெருடல் இல்லை. ஆனால் தூரம் முக்யமில்லை. மனுஷர்கள் முக்யம். பெங்களூர் போன்ற ஒரு நாகரிக நகரில், இத்தனை ஆசாரக் குடும்பம் இருப்பது அவருக்கு ஆச்சர்யமாக இருக்கிறது. அவள் கோலம் ரொம்ப அழகாகப் போடுகிறாள். சின்ன வயதில், ரங்கோலி வகுப்புகளில் ஆர்வம் காட்டி இருக்கிறாள். லக்ஷ்மி அஷ்டோத்திரம் தெரிந்திருக்கிறது. ரஸகுல்லா செய்யத் தெரிந்திருக்கிறது. கால்காசு ஆனாலும் கவர்மென்ட் காசு என்பது போன்ற மௌடீகங்கள் அவர்களிடம் இல்லை. ஒரு பத்திரிகையாளனை மாப்பிள்ளையாக அடைவதில் அவர்களுக்குப் பெருமைதான். இந்தக் கல்யாணம் நடந்தால் அவருக்குச் சந்தோஷம். என் போட்டோவை அவர்கள் பார்த்தாகி விட்டது. ரேணுகாவின் போட்டோ, கடிதத்துடன் இணைத்திருக்கிறது. உடன் பதில் போட்டால் அப்பாவுக்குச் சந்தோஷம்.

கல்யாண வயதில், காணக் கிடைக்கிற போட்டோ முகங்கள் அத்தனையும் அழகாகத் தானே தெரிகின்றன? 'உங்களுக்குப் பிடித்திருந்தால் சரி; எனக்கும் அவ்வண்ணமே' என்று அப்பாவுக்கு பதில் எழுதினேன்.

ஒரு வாரம் கழித்து, ஒரு ஞாயிறு காலை பிருந்தாவன் பிடித்து, பெங்களூர் போய், சிவாஜி நகரில் சரோஜா தேவி வீட்டை அடுத்த அவர்கள் வீட்டை அடைந்து அறிமுகப்படுத்திக் கொண்டு காப்பி சாப்பிட்டேன். ரேணுகாதான் கொண்டு வந்தாள்.

இயல்பில் நான் கொஞ்சம் கூச்சமானவன். கனவுகளோடே அதிகம் புழங்குபவன். பாடல் காட்சிகளின் அழகிய பொய்மையை திருட்டு ஆர்வத்துடன் ரசிப்பவன். பெண்களைப் பற்றி ஒருவித பிரமிப்பு கொண்டவன். என்னவென்று தெரியாத பிரமிப்பு. பிரமிப்பு மிகும்போதெல்லாம் தலை கவிழ்ந்து கொள்பவன். 'இத்தனை வெட்கம் இந்தத் தொழிலுக்கு ஆகாது' என்று ஒரு தரம் என் எடிட்டர் சொல்லி இருக்கிறார்.

**பா. ராகவன்**

அப்போதும் தலை கவிழ்ந்துதான் இருந்தேன்.

தைரியமாகக் கேள். கொஞ்சம் அவளுடன் தனியாகப் பேச வேண்டும் என்று சொல்லு. தப்பு இல்லை. அடிப்படையான கருத்துக்களில் ஒத்துப் போகிறாளா என்று தெரிந்து கொள்ள வேண்டியது வெகு முக்யம். கடித்தா சாப்பிட்டு விடப் போகிறார்கள்? போல்டாகப் பேசு என்று ஊரிலிருந்து என் தம்பி அஞ்சு நிமிடம் எஸ்.டி.டி.யில் உபதேசம் செய்திருந்தான். சின்னவர்களுக்கு நிறையவே தெரிந்திருக்கிறது. அப்போது, இத்தனை ஏன் எனக்குத் தெரிந்திருக்கவில்லை? 'கார்ப்பரேஷன் ஸ்கூலில் படிச்சிருந்தால் தெரிஞ்சிருக்கும். உன்னை எவன் சர்வோதயாவில் சேரச் சொன்னான்?' என்று என் தம்பி கேட்டான்.

ரேணுகாவோடு அன்று நான் கடைசி வரை ஏதும் பேசவில்லை. இயல்பான அசைவுகளால் மனத்தில் நிறைந்து, பிடித்துப் போனாள்.

அவர்களிடம் என் சம்மதத்தைச் சொல்லிவிட்டு, ரயிலேறி திருச்சி போய், பஸ் பிடித்து ஸ்ரீரங்கத்தில் இறங்கி, அப்பா, அம்மாவிடம் விஷயம் சொல்லி, சந்தோஷத்துடன் சர்க்கரையைச் சேர்த்துக் கொட்டி அம்மா கிளறிய கேஸரியை அள்ளி அடைத்துக் கொண்டு, அடுத்த பஸ்ஸில் சென்னை வந்து, ஆபீஸ்.

அடுத்த மாதம் திருமணம். ஸ்ரீரங்கத்திலிருந்து சுற்றமும் சென்னையிலிருந்து நட்புமாக இரண்டு நாள் பெங்களூரில் முகாம். தாலி கட்டி, ரேணுகாவைக் கூட்டிக் கொண்டு, உடன் சென்னை வந்தேன்.

முதலிரவில் கூட அதிகம் அவளுடன் பேசவில்லை. அறைக்கு வெளியே, தொண்டை வரண்ட சொந்தக்காரர்களின் சங்கீத இம்சை. புதிய அனுபவத்தில், எப்படித் தொடங்குவது என்று தெரியாமல், "ராமகிருஷ்ண ஹெக்டேவுக்கு உங்கள் ஸ்டேட்டில் இப்போ பப்ளிக் சப்போர்ட் எப்படி?" என்று அபத்தமாகத் தொடங்கினேன்.

அவள் பதில் சொல்லவில்லை. தலை நிமிர்த்தி, என்னை ஒரு பார்வை. மறுபடி தலை கவிழ, கட்டிலோரத் துணி திருகல். 'அ, வெட்கம்!' என்று நினைத்துக் கொண்டேன்.

"ஃபர்ஸ்ட் நைட்டில் பாலிடிக்ஸ் பேசக் கூடாதுன்னு சட்டம் ஒண்ணும் இல்லை. ஆனால், அவுட்-டேட்டட் பாலிடீஷியன் பற்றி ஆரம்பிச்சதா சொன்னாய் பார். உன்னை என்ன பண்றதுன்னு தெரியலைடா!" என்றான் ராஜகோபால்.

குளிரில் ஏகதேசம் என் விரல்கள் பனிக்கட்டிகளாகி இருக்க, சோழவரம் ரேஸ் மாதிரி ஆட்டோக்காரன் வளைந்து வளைந்து போய்க் கொண்டே இருந்தான்.

"ராஜகோபால், எனக்குக் குளிர் தாங்கலை. உன் வீடு எவ்வளோ தூரம்? நீ தில்லியில்தான் இருக்கியா? அல்லது பாகிஸ்தானா?"

"சேச்சே! வந்தாச்சு. உன்னை நிஜாமுதீனிலேயே இறங்கச் சொல்லி இருக்கணும். அங்கே இருந்து கல்காஜி பக்கம். நியூடெல்லி ஸ்டேஷனில் இருந்துன்னா, கொஞ்சம் தூரம்தான்."

நேரு பிளேஸ் தாண்டி, கோவிந்த்புரி மெயின் ரோடைக் கடந்ததும் "ஆகே லெஃப்ட் சலே பாய்ஸாப்" என்றான் ராஜகோபால்.

"பார், உனக்கு உபஹார் தியேட்டர் அருகில் ரூம் போட்டிருக்கேன். இருநூற்று எழுபது ரூபா வாடகை, ஒரு நாளைக்கு. தாங்குமில்லையா, உன் பத்திரிகை? இன்று மட்டும் காலை என் வீட்டில் சாப்பிடு. நானும் அவளும் எட்டரைக்குக் கிளம்பிப் போனால் ஆபீஸ் முடித்து வர இரவாகி விடும். உனக்காக, இன்று அரை நாள் லீவ் எடுத்திருக்கிறோம்" என்றான்.

ராஜகோபால் போன்ற ஒரு நண்பன் கிடைத்தது எத்தனை அதிர்ஷ்டம்!

கொத்துக் கொத்தாக முளைத்திருந்த கான்கிரீட் உயரங்களில் ஏறி, ஒரு கதவைத் தட்டி, "ஹமே ஆகயா" என்றான் ராஜகோபால்.

"முழு இந்திக்காரனாகவே ஆயிட்டியா?" என்றேன்.

"பூவாவுக்கு வேற வழி?"

ராஜகோபாலின் மனைவி கதவைத் திறந்து, என்னைப் பார்த்து "வாங்க" என்று முகம் நிறையக் கூப்பிட்டாள். மூன்று வருடங்களுக்கு முன் அவன் கல்யாணத்தன்று பார்த்ததுதான்.

சாதாரணமாகக் கல்யாண தினங்களில் பெண்களின் நிஜ உருவம் காணமுடிகிறதில்லை. கல்யாணத்துக்கென்று தனி உருவம். தனித் தோற்றம். தனிச் சிரிப்பு. தனி வெட்கம்.

"உக்காருங்க. இதோ வரேன்"என்று உள்ளே போனாள்.

சின்ன ஃபிளாட்தான். பெட்ரூம் அளவுக்கு ஒரு ஹால். பாத்ரூம் அளவுக்கு ஒரு பெட்ரூம். ஸிட்-அவுட் அளவுக்கு கிச்சன். மாடிப்படி பொந்து போல் பாத்ரூம். கட்டில், டீ.வி. மேலெல்லாம் துணிகள் குவிந்திருக்க, தரை ஈரத்துக்குக் கோணி போட்டிருந்தது.

வெளிச்சம் இல்லாமல் விளக்கைப் போட்டுக் கொண்டு, ராஜகோபால் இந்துவைப் பிரித்தான். காப்பியைக் கொண்டு வந்தபடிக்கு அவன் மனைவி, "ஹவ் இஸ் யுவர் மாரீட் லைஃப்?" என்றாள் என்னைப் பார்த்து. சில சந்தர்ப்பங்களைத் தவிர்க்கவே முடியாது. ஆனால் ஏன் என்னால் சட்டென்று ஒரு பதில் சொல்ல முடியாமல் போகிறது? நான் மையமாகச் சிரித்துவிட்டு, தலை கவிழ்ந்து கொண்டேன்.

"இத்தனை வெட்கமா? உருப்படமாட்டாய்!" என்றான் ராஜகோபால்.

கல்யாணம் முடிந்து, சென்னை வந்த மறு நாளே நான் ஆபீஸ் போக வேண்டி இருந்தது. கடற்கரையில் பி.ஜே.பி. பொதுக் கூட்டம். அத்வானி வருகிறார். அடல் பிஹாரி வாஜ்பாய் வருகிறார். கோவிந்தாச்சார்யா வருகிறார்.

"கூட்டத்துல பேசறதெல்லாம் நியூஸ் பேப்பர்ல போட்டு விடுவான். அது ஒண்ணும் வீக்லிக்குத் தாங்காது. பேட்டி தனியா கிடைக்குமா பார்" என்றார் எடிட்டர்.

ரேணுகாவிடம் மன்னிப்பு கோரும் பாவனையில் சொல்லிவிட்டு, விடிந்ததும் எழுந்து ஓடினேன்.

நாள் முழுக்க பார்ட்டி ஆபீஸ், ஹோட்டல், கடற்கரை சீரணி அரங்கம் என்று அலைந்து விட்டு, இருட்டி, விடிகிற நேரம் வீடு வந்து கதவைத் தட்டினேன். தூக்கக் கண்களுடன் ரேணுகா எழுந்து வந்து கதவைத் திறந்தாள்.

"ஸாரி."

"எதுக்கு?"

"எல்லாத்துக்கும்தான்."



"பெண்ணுக்குப் பாட வரும்... ஆட வரும்... மாப்பிள்ளைக்கு?"
"நல்லா ஓட வரும்!"
— அம்பை தேவா

அவள் பதில் பேசவில்லை. போய் விட்டாள்.

நேரம், காலம் கணக்கின்றிச் சுற்றுகிற உத்தியோகம். யோசிக்காமல் என்னை மணந்து கொண்டு விட்டது பிசகு என்று நினைக்கிறாளா? நான் ரேணுகாவிடம் கேட்டேன். அவள் பதில் சொல்லவில்லை. படுக்கையில் உட்கார்ந்தபடிக்குக் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள். அப்பா சிலாகித்திருந்த ரங்கோலிக் கோலம். கன்னத்தில் கையூன்றி நான் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

"பரவாயில்லைடா. யூ ஆர் லக்கி." என்றான் ராஜகோபால். நான் சிரித்துக் கொண்டேன்.

"குளிச்சிட்டு வர்றீங்களா? சாப்பிட்டுடலாம்?" என்றாள் அவன் மனைவி.

நான் எழுந்து கொண்டேன்.

"சாப்பிட்டு, ரெஸ்ட் எடு. நான் ஆபீஸ் கிளம்பும் போது உன்னை, உன் லக்கேஜை ஹோட்டலில் விட்டு விடுகிறேன். இரவு வந்து பார்க்கிறேன்" என்றான் ராஜகோபால்.

"உங்களை இங்கயே தங்கச் சொல்ல ஆசை தான். ஆனால், ஃபார்மாலிட்டிக்காகக் கூடச் சொல்ல முடியாதபடிக்குச் சின்ன ஃபிளாட். ஹாலில் படுத்துக்கலாம்தான். ஆனா இது போல் குளிர் காலத்தில் வெகு கஷ்டம். ஹீட்டர், ரஜாய் இல்லாமல் ஜன்னி வந்துடும்."

ராஜகோபாலின் மனைவி இயல்பாகத்தான் சொன்னாள். வெளிப்படையாக அப்படிப் பேசியது எனக்குப் பிடித்திருந்தது. ரேணுகா கூட இப்படித்தான். வெகு வெளிப்படை.

அன்று ஆபீஸில் வேலை குறைவு. வெளி வேலை ஏதும் இல்லாததால் மூன்று மணிக்குக் கிளம்பி, சல்லென்று பத்து நிமிஷத்தில் வீடு. முன்னதாக ஆபீஸ் பையனிடம் சொல்லி, உதயத்தில் மாலைக் காட்சிக்கு இரண்டு டிக்கெட். ரேணுகாவுடன் முதல் முதலாகப் போகப் போகிற சினிமா.

வீட்டு வாசலில் புதுச் செருப்பு இருந்தது. யாரோ வந்திருக்கிறார்கள். கடவுளே, என் திட்டங்கள் எல்லாமே ஏன் செயல்வடிவம் பெறாமல் போய்விடுகின்றன?

இல்லை. சினிமாவுக்கு நிறைய நேரம் இருக்கிறது. அரவிந்த் இன்னும் கால் மணியில் கிளம்பி விடுவான் என்று ரேணுகா சொன்னாள்.

"அரவிந்தைத் தெரியுமில்லையா? கல்யாணத்துக்கு வந்திருந்தான்."

கல்யாணத்தில் பார்த்த முகங்களில் எனக்கு எதுவும் ஞாபகம் இல்லை. அவள் அப்பா, அம்மா முகங்களைத் தவிர. ஆயினும் வழி இல்லை. வலிந்து புன்னகைத்து, 'ஹலோ' என்றேன்.

ரேணுகா எழுந்து சமையல் அறைக்குப் போனாள். ஆக, நான் அவனை எங்கேஜ் பண்ண வேண்டியது கட்டாயம்.

"சொல்லுங்கள். நீங்கள் என்ன செய்கிறீர்கள்?"

"பெங்களூரில் ரேணுகாவுடன்தான் காலேஜில் படித்தேன். அப்புறம் கேட்டரிங் டெக்னாலஜிக்கு மாறி, தற்சமயம் நொய்டாவில் ஒரு ஃபாஸ்ட் ஃபுட் கடை வைத்திருக்கிறேன்."

நொய்டா. பெயர் அழகாக இருக்கிறது. ஊர் எங்கே இருக்கிறது? கேட்க ஆசைதான். ஆனால் கேட்கவில்லை.

"மெட்ராஸில் ஏதும் வேலையாக வந்திருக்கிறீர்களா?"

காப்பிக் கோப்பைகளுடன் வந்த ரேணுகா, இருவரிடமும் நீட்டிவிட்டு என் அருகில் உட்கார்ந்தாள். நேராக என் கண்களைப் பார்த்து, "தெரியுமா? அரவிந்தை நான் ஆறு வருஷங்கள் காதலித்திருக்கிறேன்!" என்றாள்.

(தொடரும்)



# வீடு கட்டும் லட்சியம் நிறைவேறும் தருணம்.

வீடு கட்ட வேண்டும் என்பது விசுவத்தின் நீண்ட நாள் லட்சியம். இந்த லட்சியப் பூர்த்திக்கு எல்லா முயற்சிகளையும் மேற்கொண்டார். பலவாறாகப் பாடுபட்டு வீட்டைக் கட்டி முடிக்கும் தருணம். பூச்சு வேலைக்குப் பணமில்லாமல் போயிற்று. பணம் புரட்டும் எல்லா வழிகளையுமே ஏற்கெனவே பயன்படுத்தியாகிவிட்டது. இப்போது இந்தச் செலவுக்குப் பணம் திரட்டுவது எப்படி? யோசித்தபோது ஒரு பாதை இன்னும் திறந்திருப்பது தெரிந்தது. தாம் சேர்ந்திருந்த ஸ்ரீராம் சீட்டை இந்தத் தேவைக்குப் பயன்படுத்திக் கொண்டார்.

வெளி ஆதரவையோ, உதவியையோ நாடவேண்டிய அவசியமின்றித் தங்கள் பணத்தைக் கொண்டே தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும் கௌரவமான பாதை ஸ்ரீராம் சீட்டு.

உடனடியாகத் தேவைப்படும் நிதியைப் பெற்று அதனைச் சுலபமான மாதத் தவணைகளில் திருப்பிச் செலுத்துவதற்கு ஸ்ரீராம் இணையற்ற சாதனம். இன்றைய தேவைகளைப் பூர்த்தி செய்ய, நாளைய சேமிப்பு இரண்டுக்கும்.

ஸ்ரீராமின்
சித்திரை
கோலாகலம்
ஏப்ரல் 4-13, 1996



* மார்க் வாக்

நிலைமை கட்டுக்குள்ளேயே இருந்தது. ஓரிரு குடிமகன்கள் ஓவராகிப் போய் மைதானத் துக்குள் பாட்டில், காகித ராக் கெட் என்று வீசியபோது பிற ரால் 'தடுத்தாட்கொள்ளப்பட்ட னர்'! இவர்களும் 'ஒரு நாள் ஆட்டக்காரர்கள்' தானா அல்லது 'டெஸ்ட் மாட்ச்'காரர் களா என்பது தெரியவில்லை!

காவல் துறையின் பணியைச் சிறப்பாகக் குறிப்பிடலாம். வெயில் வேளையென்றும் பாரா மல் பொறுமையாக வழி காட்டி, போக்குவரத்தை நெறிப்படுத் தியதோடு, ஸ்டேடியம் உள்ளே யும் கசமுசாக்களை முளையி லேயே மத்தியஸ்தம் செய்து அசத்திவிட்டனர்! மிரட்டல் களுக்கும் சுறுசுறுப்பான மாமூல் வசூலுக்கும் மட்டுமே பழகிய நமக்கு மாறுபட்ட அனுபவம்!

**ப**க்கத்து இருக்கையின் ஏழு வயதுச் சிறுவனிடம் "நீ வெங்கட் விளையாடிப் பார்த் திருக்கியா...?" என்று கேட்டார் ஒரு பெரியவர்.

"அவர் அம்பயராச்சே..."

என்று இலேசாகக் குழம்பிய பொடியனிடம் வெங்கட் ராகவனின் வாழ்க்கை வரலாற்றையே 'படித்து விட்டார்' அவர்.

இதொன்றும் அறியாமல், ஸ்குவேர் லெக்கில் வெங்கட், வேணுகோபால கண்ணன்போல் கால்கள் பின்ன நின்று கடமையாற்றிக் கொண்டிருந்தார். பசுமை யான நினைவுகளில் மூழ்க அவருக்கு ஏது நேரம்!

**வி**ளக்குகளை நாலரை மணிக்கே 'ஆன்' செய்து விட்டார்கள். பொழுது சாயச் சாய, சுற்றி லும் இருட்டு சூழ்ந்து, மைதானத்தில் மட்டுமே வெள்ளை வெளிச்சம் தெரிந்தது. ஏதோ சயன்ஸ் ஃபிக்ஷன் சினிமா போன்ற effect-ஐ ஏற்படுத் தியது. ஒரு சில வௌவால்களும் காக்கைகளும், மட்டும் குழம்பிப் போய் திசை புரியாது பறப் பதைப் பார்க்க கொஞ்சம் பரிதாபமாகவே இருந்தது.

'ஃப்ரன்ட் லைன்' இதழின் விளம்பர பலூனை ஐந்து மணி சுமாருக்கு இறக்கி விட்டார்கள். பிறகு என்ன நினைத்துக் கொண்டார்களோ... மீண்டும் உயர்த்திக் காட்டினார்கள். பிலிப்ஸ் தயவில் வேறு பல பலூன்களுக்கும் நல்ல வெளிச்சம் கிடைத்தது.

'ஒரு நாள் பந்தயத்துக்கே இலக்கணம் இது' என்று சொல் லும் அளவுக்கு உயிரைக் கொடுத்த நியூஜிலாந்தின் ஆட்டமும், மூச்சைப் பிடித்து அதை விஞ்சிய ஆஸ்திரேலியாவின் முயற்சியும் சென்னை ரசிகர்களுக்குச் சரியான விருந்துதான்.

இருந்தாலும் அவரவரும் தங்களுக்குள்ளேயே சிறிய புதிய விளையாட்டுகளை உருவாக்கி அவ்வப் போது ஆடிக் கொண்டிருந்ததையும் காண முடிந்தது. உதாரணம்: மேல் பகுதி காலரியிலிருந்து முறுக்குகளைக் கயிற்றில் கட்டித் தொங்கவிட்டு அசைக்க, அதைக் கீழ்ப் பகுதி ரசிகர்கள் தட்டிப் பறித்துத் தின்னும் ஆட்டம்!

இந்தியா ஆடியிருந்தால் இதற் கெல்லாம் நிச்சயமாக நேரம் இருந் திருக்காது... விட்ட குறை தொட்ட குறையாக அவ்வப் போது "பாகிஸ்தான்... டவுன் டவுன்!" என்று கோஷம் எழுப்பி, பலர் மலிவான மகிழ்ச்சி தேடிக் கொண்டது தான் உறுத்தல்! தலையில் காவித் துணி கட்டிய இளைஞர்கள் நிறையப் பேர் கூட்டத்தில் இருந்ததே இதற்குக் காரணமா...? இந்திய அணியின்மேல் கொண்ட கோபத்தால் ஸ்ரீலங்காவை முழு சாக ஆடவிடாமல் செய்த கல்கத்தா ரசிகர் களை விட நம்மவர்கள் தேவலாம் என்கிறீர் களா? இதோடு, அதுவும் வெட்கக் கேட்டின் உச்சம்தான்!



* வெங்கட் ராகவன்

- மலர்

படங்கள் : சாரி

ரேணுகாவுக்குத் தயக்கமோ, வெட்கமோ, பயமோ, மிரட்சியோ இருக்கவில்லை. 'ஆறு வருஷங்கள் நான் அரவிந்தைக் காதலித்திருக்கிறேன் தெரியுமா?' மிக இயல்பாகத்தான் சொன்னாள்.

நியாயமாக நான் அதிர்ந்து போய், இன்னது செய்வதென்று புரியாமல் தவித்து, திணறி, கோபத்தில் கரைந்து, காணாமல் போயிருக்க வேண்டும்.



ஆனால் அமைதியாக எழுந்து வெளியே போய் விட்டேன். உள்ளுக்குள் பிரஷர் ஏறிக் கொண்டிருந்தது. என் விரல்கள் நடுங்கத் தொடங்கின. உடல் முழுக்கப் பற்றவைத்தாற் போல் திகுதிகுவென எரிந்து கொண்டே கால் இழுத்த திசையில் நடந்து, துவண்டு போய் மறுபடி வீடு வருகையில் இரவு ஒன்பதாகி விட்டிருந்தது.

அரவிந்த் போய்விட்டிருந்தான். ரேணுகா வாசலில் காத்து இருந்தாள். என்னைப் பார்த்ததும் பதறி வந்து, "எங்கே போயிட்டீங்க?" என்றாள்.

எனக்கு மிகவும் பசித்தது.

"ஏதாவது சாப்பிட வெச்சிருக்கியா?" என்று கேட்டேன். தட்டைக் கொண்டு வந்து என் முன் வைத்து, சாதம் போட்டாள். சாப்பிட்டு ஆனதும் ஒரு பாக்கெட்டைப் பிரித்து, ஸ்வீட்டை எடுத்து நீட்டினாள். "அரவிந்த் வாங்கி வந்திருந்தான்."

நான் ஒரு கணம் அவளை நிமிர்ந்து பார்த்துவிட்டு, சட்டென்று குனிந்து கொண்டேன்.

"ஸாரி. நான் அப்படி நடந்துண்டிருக்கக் கூடாதுதான். பேசிட்டே இருக்கும் போது நடுவுல எழுந்து போய்.... சே!"

சாப்பிட்டு முடித்துவிட்டு எழுந்து போய் படுத்தேன். பாத்திரங்களை ஒழித்துப்போட்டுவிட்டு, எச்சில் துடைத்து, முகம் கழுவி, ஹால் விளக்கை அணைத்துவிட்டு, என் அருகில் வந்தாள்.

**பா. ராகவன்**

"காதலிச்சது தப்பா? இல்லை, காதலிச்சேன்னு வெளிப் படையாகச் சொன்னது தப்பா?"

இரண்டுமே தப்பில்லைதான் என்று அப்போது எனக்குத் தோன்றியது.

ரேணுகா எழுந்து போய் ஜன்னலோரம் நின்று, வெளியே பார்த்தாள். அவள் கண்கள் கலங்கி இருந்தன. விசும்பல் சப்தம் லேசாகக் கேட்டது.

சில விஷயங்கள், நாம் விரும்பியோ விரும்பாமலோ அதன் பாட்டுக்கு நடந்து விடுகின்றன. பின்னால் நேரப் போகிறவைகளை முன் கூட்டித் தெரிந்து கொண்டா வாழ்க்கையை நகர்த்திக் கொண்டிருக்கிறோம்? அரவிந்தை அவள் காதலிக்கத் தொடங்கியது மிக தற்செயலாகத்தான். அணுகு முறையில் ஒரு மென்மை. புன்னகையில் ஒரு நளினம். தோற்றத்தில் ஒரு கம்பீரம். இசை தெரியும். சமையல் தெரியும். கூடுதல் தகுதியாகக் கொஞ்சம் பெண்சாயல். தெரியுமா? பெண் சாயல் கொண்ட ஆண்களைப் பெண்களுக்கு ரொம்பப் பிடிக்கும் என்று ரேணுகா சொன்னாள்.

"வீட்டில் சொல்ல எத்தனை பயந்தேன் தெரியுமா? ஒவ்வொரு முறையும் சொல்ல வாயெடுத்து, விழுங்கி விடுவேன். வாழ்க்கை ஏன் சினிமா போல் சுலபமாக இருக்கக் கூடாது என்று எத்தனை நாள் ஏங்கி இருக்கிறேன்!"

"சேர்ந்தாற்போல நாலைந்து வாக்கியம் பேசவே மாட்டியா?" என்று நான் அவளைச் சில தருணங்களில் கேட்டிருக்கிறேன். அன்று சேர்த்து வைத்துக் கொட்டித் தீர்த்தாள். அவன் கடை வைக்க நொய்டா போனது. அப்பா அவளுக்கு என்னைப் பேசி முடித்தது. பேசத் தயங்கி, மனசுக்குள் செத்தது. அவனுக்கு அலறி அடித்துக் கடிதம் போட்டது. வாழ்த்துக்களுடன் அவன் திருமணத்துக்கு வந்து சேர்ந்தது.

எனக்கு அழலாம் போலிருந்தது. இயல்பில் நான் எத்தனை மென்மையானவன் என்று லேசில் சொல்லிவிட முடியாது.



# கனாக் கண்டேன் தோழி

சிக்கல்கள் அற்ற ஒரு சராசரி வாழ்க்கைக்காக யோக்கியமாக உழைக்கிறவன் நான். புரட்சிக் காரன் அல்ல. புதுமை விரும்பி அல்ல. தியாகி அல்ல. சாதா ரணன். ரொம்ப சாதாரணன். இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?

கல்லூரி நாட்களிலிருந்து ஆசைகளைப் பட்டியல் போட்டு, அதற்கேற்ப என் னைத் தயார் செய்து கொண்டு வந்தேன். அந்த ரங்கமாகப் பழக ஒரு பெண். கிடைத்தால் அது எப்பேர்ப்பட்ட கொடுப் பினை? பிரத்தியேகமான சந்தோஷங்கள். பரஸ்பர நட்பு, கொஞ்சம் கேலி. கொஞ்சம் ஜோலி. இங்கே சீண்டல். அங்கே தீண்டல். கைகோத்து நடக்கிற கம்பீரம் தரும் சந்தோஷம். எட்டிப் பார்க்கும் அண்டை வீட்டுக்காரர்களின் பொறாமை. சொந்தக்காரனின் பெருமை. சில வருஷங்களுக்குப் பின் ஒரு குழந்தை. ஒன்று போதும். ரேஷன் கார்டில் குடும்பத்தலைவன் என்ற பதவி. முடிந்தால் ஒரு சொந்த வீடு. என் கனவுகள் ரொம்ப யோக்கியமானவை. அவற்றை நனவாக்கச் செய்யும் முயற்சியில் நான் எடுத்து, அடுக்கி வைக்கிற ஒவ்வொரு செங்கல்லுக்கும் நியாயமான விலை உண்டு.

ரேணுகா திடமாகத்தான் இருந்தாள். 'யாரோ சொல்லி, என்றோ தெரியப் போவதற்குப் பதில், நானே சொல்லி, இன்றே தெரிந்து விட்டதல்லவா? இனி உங்கள் பாடு' என்ற பாவனையில்.

நான் அவளை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தேன். இருளி லும் சுடர் விடும் ரேணுகா. அழகிய ராட்சஸி. ஆறு வருஷம் காதலித்து, சொல்ல பயந்தேன் என்று ச. சாதாரணமாகச் சொல் கிறாள். ஆனால், சினிமா போல் அல்லாமல், நிஜத்தில் அது கஷ்டம் தானோ என்று தோன்றியது.

காதல் எனக்கு அறிமுகமில்லாத விஷயம். கல்லூரி நாட்களில் ஆசை இருந்தது. யாரையாவது காதலிக்க வேண்டும் என்று. 'ஆசீர் வதிக்கப்பட்டவர்களுக்கும் சபிக்கப்பட்டவர்களுக்கும்தான் அது சாத்தியம்' என்று அப்போது ராஜகோபால் சொன்னான்.

ரேணுகா ஆசீர்வதிக்கப்பட்டவளா? சபிக்கப்பட்டவளா?

**ஊ**ரெல்லாம் சுற்றிவிட்டு, ஓட்டலுக்குத் திரும்பியபோது, ராஜகோபால் காத்து இருந்தான்.

"சரிதான். இடம் தெரியாமல் எங்கேயாவது பேய் முழி முழிச் சிட்டு நின்னுட்டிருக்கி யோன்னு கவலைப்பட் டேன்."

"வந்து ரொம்ப நேரம் ஆச்சா?"

"உம்! ஒரு தரம் வந்து அரைமணி வெயிட் பண் ணிட்டு, திரும்பி வீட்டுக்குப் போயி பெண்டாட்டிக் கிட்ட சொல்லிட்டில்ல வரேன்!"

"என்ன சொல்லிட்டு?"

"நைட்டு வர லேட் ஆகும். சினிமாவுக்குப் போற பிளான் அப்படின்னு."

"சே, பாவம்டா உன் ஒய்ஃப். அவங்களையும் கூப் பிட்டு வர வேண்டியது தானே?"

"சரிதான். சீன் ரொம்ப எமோஷனலா இருந்தா அழ ஆரம்பிச்சுடுவா. வல்கரா இருந்தா, எழுந்து போயிட லாம்னுவா. போர் அடிச்சா என்னைத் திட்டுவா."

"அ, நல்ல கேரக்டர்!"

"உனக்கெப்படி வசதி? போகலாமில்லை?"

சாப்பிட்டு விட்டு, அறை யைப் பூட்டிக் கொண்டு கிளம்பினோம். உபஹார் தியேட்டரில் Fools die fast.

காதலனுக்காக, முத லாளியைக் கொலை செய்ய வும் துணியும் பெண்ணைப் பற்றிய பழைய படம். கட வுளே! ஏன் எங்கு போனா லும் காதல், காதலாகவே இருக்கிறது? வாழ்க்கையில் ரசனைக்குரிய விஷயம் வேறு கிடையாதா?

பட்டாணி தின்பது. பட்டாம்பூச்சி பிடிப்பது. பஜன் கேட்பது, இஸ்திரி போடுவது. அலவன்ஸ் வாங்கிடுவது. அப்பளம் பொரிப்பது. கோலம் போடுவது....

அன்று மறுநாள் காலை ரேணுகா கோலம் போட்டுக் கொண்டிருந்த போதுதான் போய்க் கேட்டேன்.

"ஆறு வருஷம் அவனைக் காதலிச்சுட்டு, எப்படி என்னைக் கல்யாணம் பண்ணிட்டு, இப்படி இலக்கண சுத்தமான மனைவியாக இருக்கிறாய்?"

இடுப்பில் இழுத்துச் செருகியிருந்த புடைவையைத் தழைய விட்டுவிட்டு, நெற்றியைத் துடைத்தபடி உள்ளே வந்தாள்.

"அவனைக் கல்யாணம் பண்ணிக்கத்தான் நினைச்சேன். உங்களைத்தான் பண்ணிக் கணும்னு எனக்கு இருந்தால் என்ன பண்ண முடியும்?"

இது ஸ்ட்ரோக். காவஸ்கரின் ஸ்கொயர் லெக் ஷாட். க்ளீன் ஷாட். வெகு சுலபத்தில் என்னை மூன்றாம் மனிதனாக்கி விட்டாள். ஆனால் அவள் நேரிடையாகத்தான் சொல்கிறாள். உள் அர்த்தம் ஏதுமின்றி. பட்டாசு வெடிப்பது போல. அவள் இயல்பே அதுதான். அவள் தனித்துவமே அதுதான்.

ஆபீஸுக்குக் கிளம்பும் போது, "மத்தியானம் சாப்பிட வருவீங்களா?" என்றாள்.

யோசித்தேன். "இல்லை. இன்னிக்கு வர முடியாதுன்னு நினைக்கறேன். வெளியில் பார்த்துக்கறேன்" என்றேன்.

என் நடவடிக்கைகள் எனக்கே புதிதாக இருந்தன. அரவிந்த் சென்னையில்தான் இருக்கிறான். இன்றும் அவன் ரேணுகாவைப் பார்க்க வரக் கூடும். என்னைப் பற்றி விசாரிப்பான். நேற்று இரவு நடந்தவைகளை ரேணுகா விவரிப்பாளாயிருக்கும். என்னால் எப்படி இதையெல்லாம் வெகு சாதாரணமாக எண்ணிப் பார்த்துக் கொண்டிருக்க முடிகிறது? என் இனிய சுபாவத்தின் மென்மையே! இன்னும் என்னென்ன நடக்கச் செய்து வேடிக்கை பார்க்கப் போகிறாய்?

அலுவலகம் அலறிக் கொண்டிருந்தது. நாட்டில் மிக முக்கிய சம்பவம் ஒன்று நடந்திருக்கிறது. டெல்லியில், பம்பாயில், சவுக்கார் பேட்டையில் எல்லாம் பிள்ளையார் பால் குடித்திருக்கிறார். ஆவின் பால், எருமைப்பால் என்ற பேதம் இல்லாமல் கொடுப்பதைக் குடிப்பதாக ஃபேக்ஸ் தகவல்கள் சொல்கின்றன.

எனக்குச் சிரிப்பு வந்தது. போய் அட்டண்டென்ஸில் கையெழுத்துப் போட்டுவிட்டு, அஸைன்மென்ட்டைக் கேட்டுக் கொண்டு புறப்பட்டேன்.

புழுங்கி வடிந்த மனத்துடன் நாளெல்லாம் அலைந்து விட்டு இருட்டியதும் வீட்டுக்குப் போனேன்.

"இன்னிக்கு நம்ம வீட்டுப் பிள்ளையாரும் பால் குடிச்சார் தெரியுமா?"

ஓடி வந்து, விழி விரித்து விவரம் சொன்ன ரேணுகாவைப் புரிந்து கொள்வது மிகவும் சிரமம் என்று தோன்றியது. குழந்தை தானா? குழந்தை போல் இருக்க முயல்கிறாளா? ஆனால் குழந்தை ஆறு வருஷம் ஒருவனைக் காதலிக்குமா? பின், புருஷனிடம் அதை வெளிப்படையாகச் சொல்லுமா? அவன் உணர்வுகள் அதற்குப் புரியுமா? அல்லது, 'எனக்குப் புரியலை' என்று சொல்லாமல் சொல்வதா? ஏதாவது கேட்டால் பெங்களூரில் இதெல்லாம் சகஜம் என்று ஊர்ப் பெருமை சொல்வாளா? நிஜமாகவே இதெல்லாம் சகஜம்தானா? நான்தான் சரியில்லையா?

எனக்கு எதுவும் புரியவில்லை.

"மத்தியானம் அரவிந்த் வந்திருந்தான்."

பல்லைக் கடித்துக் கொண்டு, பேசாமல் இருந்தேன்.

"ரொம்ப வருத்தப்பட்டான் தெரியுமா? 'நான் வந்தது தப்பு ரேணுகா. பேசாமல் எங்கேயாவது காணாமல் போயிருக்கணும்'னு ஒரே புலம்பல். நான் உங்க கிட்ட அப்படி வெளிப்படையாகச் சொன்னது தப்பாம். 'சொல்லாமல் இருந்தாத்தான் தப்பு'ன்னு நான் சொன்னேன்."

"கல்யாணத்துக்கு முன்பே சொல்லாதது தான் தப்பு."

அவள் என்னை உற்றுப் பார்த்தாள். "இதையெல்லாம் பேச நம் சமூகம் நமக்கு இடம் கொடுத்திருக்குன்னு நினைக்கறீங்களா? மனசுக்குள் ஒரு நாளைக்கு நான் நூறு தரம் செத்துப் போறேன் தெரியுமா?"

---

***இ**ரயில் நிலையங்களைச் சுத்தமாகப் பராமரிக்கும் திட்டத்தின் அடிப்படையில் சென்னை சென்ட்ரல் ஸ்டேஷன் பளிங்கு போல் காட்சியளிக்கிறது என்று பெருமைப் படுகிறது நிர்வாகம். இடித்துத் தள்ளப்பட்ட பழைய கட்டடப் பகுதிகளைப் பக்கத்திலுள்ள பக்கிங்ஹாம் கால்வாயில் கொட்டியதால் அங்கு நீர் தேங்கி நிற்பதுடன், டிக்கெட் முன் பதிவு அலுவலகத்தில் கழிக்கப்படும் காகித, கார்பன் பேப்பர் குப்பைகளைத் தொடர்ந்து அதில் கொட்டுவதால் அங்கு பெரிய பரப்பளவில் ஒரு கொசுப் பண்ணையே செழித்து வளர்கிறது என்கிறது மாநகராட்சி சுகாதார இலாகா!*

**— அ. ஷண்முகசுந்தரம்**

நான் அவளை நெருங்கி, தலையைக் கோதினேன். "படுத்துத் தூங்கு" என்றேன்.

மூக்கை உறிஞ்சியபடி, சுருண்டு படுத்துக் கொண்டாள்.

"இதுக்கு மேல் தாங்காது. போலாமா?" என்றான் ராஜகோபால்.

படம் முடிய இன்னும் பத்து நிமிஷங்கள் இருந்தன. நான் ஏற்கெனவே பார்த்த படம்.

"சரி" என்று எழுந்தேன். தியேட்டருக்கு வெளியே ஜகஜ்ஜோதியாக உலகம் ஓடிக் கொண்டிருந்தது. இரவு நேரப் பால் வியாபாரம். சாலையோர தாபாக்களில் ரொட்டியும் சப்ஜியும். உரக்கக் கூவி பூடான் லாட்டரி. கார்களின் பிளிறல். எல்லா ஸ்கூட்டர்களின் பின்னாலும் பெண்கள். முன் இருக்கை நபரை இழுத்துக் கட்டிக் கொண்டு, அல்லது இடுப்பைக் கிள்ளிக் கொண்டு. நினைத்துக் கொண்டாற் போல் பச்சக் பச்சக் என்று முத்தப் பூ ஒற்றல்.

"என்னடா இங்க கேர்ல்ஸ் எல்லாம் இப்படி இருக்காங்க?"

"எப்படியும் இருப்பார்கள். நாளைக்கு சாயங்காலம் கோவிந்த்புரி ஹனுமான் மந்திர் போய்ப்பார். இதே பெண்களின் இன்னொரு தோற்றம் பார்க்கலாம்!"

"சரிதான்!"

"ஆனா ஒன்று. பெண்கள்தான் இப்படி. அப்பாக்கள் வேறு ஜாதி. காதல் சங்கதி ஏதும் தெரிய வந்தால் துப்பாக்கி தூக்கிக் கொண்டு வந்து விடுவார்கள். குறிப்பா சிங் அப்பாக்கள்."

ரேணுகாவை என்னால் கடிந்து கொள்ளவோ, அடிக்கவோ, குறைந்த பட்சம் பேசாமல் இருக்கவோ கூட ஏன் முடியாமல் போயிற்று என்று புரியவில்லை.

நான் அதிர்ச்சிகளுக்குப் பழக்கப்படாதவன். வன்முறைக்கு அந்நியன். ஒரு வன்முறையை விலகி நின்று ரிப்போர்ட் செய்ய மட்டுமே தெரிந்தவன். ஒரு பூவை விட மென்மையாக இருந்து பழகிப் போய் விட்டது. என் வளர்ப்பு அப்படி.

ஆனால் பிரச்னைகள் எனக்கு மட்டும் ஏன் விதவிதமான பூத உருவில் வந்து கண்ணாமூச்சி காட்டுகின்றன?

மனத்தில் சப்தமுடன் வட்டமிடத் தொடங்கி விட்ட குழப்பக் குளவி ஓய்வதாக இல்லை.

இரவு முழுவதும் தூக்கம் வராமல் புரண்டு தவித்தேன். பாதிப்புகள் ஏதும் இல்லாதது போல் ரேணுகா குழல் பறக்கத் தூங்கிக் கொண்டிருந்தாள். புதிர் மூட்டையாக ஒரு பெண். கடவுளே! நான் என்ன செய்யப் போகிறேன்?

விடிந்தது தெரியாமல் தூங்கிக் கொண்டிருந்தேன். கையில் காப்பியுடன் ரேணுகாதான் என்னை எழுப்பினாள்.




**" 'நாங்கள் ஆட்சிக்கு வந்தால் ஊழலை சுடுகாட்டுக்கு அனுப்புவோம்'னு தேர்தல் சமயத்துல வாக்குறுதி கொடுத்தாங்களே, அதுக்கு இப்பத்தாங்க அர்த்தம் புரியுது!"**

**— ஆலத்தம்பாடி ராஜகோபால்**

"ராத்திரி தூங்கவே இல்லையா நீங்க?"

நான் பதில் சொல்லவில்லை. காப்பியை வாங்கிக் கவிழ்த்துக் கொண்டு, பேப்பரை எடுத்துக் கொண்டு ஹாலுக்கு வந்தேன். ரேணுகா பின்னால் வந்து நின்றாள்.

சட்டென்று அவளைத் திரும்பிப் பார்த்து, "உன்கிட்ட கொஞ்சம் பேசணும்!" என்றேன்.

"ரேணுகா, நான் ரொம்ப சாதாரணமானவன். கனவுகள் நிறைய வெச்சிருந்தேன்! சின்னச் சின்னதா... அழகழகா! கல்யாணத்துக்கு அப்புறம்தான் ஒரு முழு மனுஷனா ஆனா மாதிரி உணர்வே வந்தது. சட்டுனு நீ என்னவோ சொல்லி, என்னை உடைச்சுட்டா மாதிரி இருக்கு. இது தப்பு, சரி, நியாயம், அநியாயம்னு எல்லாம் நான் சொல்லவரலை. அப்படிப் பிரித்து யோசிக்கவும் முடியலை என்னால். ஆனால், இந்த நிமிஷம் உன்னோட இருக்கக் கஷ்டமா இருக்கு. ஒரு வேளை நான் தப்பா இருக்கலாம். ஆனால் இந்த நிமிஷம் என் உணர்வுகள் நிஜம். மூடி வைப்பது வெகு நாள் சாத்தியமில்லைன்னு நினைக்கறேன். ஸாரி."

அவள் பதில் சொல்லவில்லை. "குளிச்சிட்டு, சாப்பிட வாங்க" என்றாள்.

சாப்பிட்டு ஆகிறவரை நான் எதுவும் பேசவில்லை. கிளம்புகையில், "மத்தியானம் வருவீங்களா?" என்றாள் வழக்கம் போல்.

"வரேன்."

மத்தியானம் நான் வந்த போது வீடு பூட்டி இருந்தது. பக்கத்து வீட்டில் சாவி இருந்தது. வாங்கி, திறந்து உள்ளே போனதும் டேபிளில் சாதம், குழம்பு, ரஸம் எல்லாம் அழகாக மூடி வைத்திருந்தது. கூடவே ஒரு கடிதமும் -

"எல்லாவற்றுக்குமாக மன்னிக்கவும் - ரேணுகா.'

ரேணுகா போய்விட்டிருந்தாள்.

(தொடரும்)

புதிய பாதையில் திரும்பும் தமிழகம்!

வட்ட மேஜை

"ஐடியா சிறப்பிதழ்" தர வேண்டும் என்று உங்களுக்கு உதித்த 'ஐடியா' அருமை! அதனை உபயோகமானதொரு உன்னத இதழாக உருவாக்கி வழங்கிய விதம் அதைவிட அருமை!
காட்டூர், எஸ். அருள்மொழி.

'ஹை! ஐடியா!' - அலுவலகத்தில் வேலை பார்ப்பவர்களுக்குக் கூறப்பட்ட ஐடியா ஆயினும், ஐடியாவை எப்படிச் சொல்வது என்ற அறிவுரை குடும்பத் தலைவர்களுக்கும் பயனுள்ளதாக இருக்கும் என்பது உறுதி.
திருச்சி – 17, உஷா முத்துராமன்.

டைரக்டர் ஆர்.வி. உதயகுமாருக்கு "ஐடியா கொடுப்பதே முதல் வேலை"யாகக் கொண்டுள்ளவர் அவருடைய மனைவி சுஜாதாதான் என்பதை அறிந்து, ஒவ்வொரு ஆணுக்குப் பின்னாலும் ஒரு பெண் இருப்பது நிச்சயம் என்பதை உறுதிப்படுத்திக் கொண்டேன். 'எஜமான்' திரைக்கதையும், 'சின்ன மாப்ளே!' படத்தின் பிரபல பாடலான "காதோரம் லோலாக்கு.... கதை சொல்லுதடி...." ஆகிய இரண்டும் திருமதி சுஜாதாவின் 'ஐடியா'வால் உருவானவை என்ற செய்தி வேறு எந்தப் பத்திரிகையிலும் வெளிவராத புதிய செய்தி.
கொடுமுடி, எஸ். சரஸ்வதி சேதுராமன்.

"துணை தேட சில யோசனைகள்" கட்டுரையில் பாட்டு, பஜ்ஜி, சொஜ்ஜி, விழுந்து வணங்கும் பாரம்பரிய முறைகளிலிருந்து வேறுபட்டு ஆண், பெண் இருவரும் ஒருவரையொருவர் புரிந்து கொண்டு கல்யாணம் செய்து கொண்டால் இனிமையான வாழ்வுகிட்டும் என்பது உண்மையிலும் உண்மை. இந்தப் புதிய முறை பெண் பார்க்கும் படலம், படித்தவர்கள் அனைவரிடத்திலும் ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தும்.
பழவந்தாங்கல், நெல்லை மணிபாரதி.

கிட்டத்தட்ட எல்லாப் பத்திரிகைகளுமே ஆகா, ஓகோ என்று பாராட்டிய 'மீண்டும் சாவித்திரி' படத்தை கல்கி நடுநிலையோடு விமர்சனம் செய்திருந்தது அதன் தனித்தன்மையைக் காட்டியிருக்கிறது.
திருநெல்வேலி - 11, ஆர். சுவர்ணசுபா.

"மனசெல்லாம் முள்" மிகச் சிறந்த சிறுகதை. பாராட்டுக்கள். இத்தனை மோசமான வாழ்வை, இத்தனை சுத்தபத்தமாக்கிச் சித்திரிக்க யாரால் முடியும்! ரொம்ப லாகவமான சித்திரம். அஞ்சுவின் 'மனசெல்லாம் முள்' மட்டுமல்ல; நம் மனசெல்லாம் கூட முள்ளைப் பாய்ச்சி விட்ட கதாசிரியரின் திறமை கல்கியின் மூலம் பிரகாசிக்கிறது.
தஞ்சாவூர் - 1, தஞ்சை ப்ரகாஷ்.

'ஹவாலா வேட்பாளர்கள், நாட்டை திவாலாக்கி விடுவார்கள்' என்பதைக் கருத்தில் கொண்டு, வருகின்ற தேர்தலில் மக்கள் விழிப்புணர்வுடன் செயல்பட்டு வாக்களிக்க வேண்டும் என்பதைத் தெளிவாகத் தலையங்கத்தில் எடுத்துக் கூறி புரியவைத்து, தெளிவடையச் செய்து விட்டீர்கள்.
சென்னை – 78, சி. பூங்கோதை.

'சூப்பர் ஸ்டாரு'க்குத் தாங்கள் தந்த அட்வைஸ் சூப்பர்! ரஜினிக்குக் கல்கி உரைத்த வாழ்த்து அவரைச் சரியான பாதையில் நடக்க உறுதுணைபுரியுமென்பது உறுதி!
கு.கழுகாசலபுரம், ச.ஆ. கேசவன்.

டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தியின் பேட்டி மிக நன்றாக இருந்தது. தன்னம்பிக்கையும், சிந்தனையும், நேர்மையும், பண்பாடும் மிக்க டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி போன்றவர்கள் அரசியல் களத்தில் குதிப்பதால், தமிழகம் ஒரு புதிய பாதையில் திரும்ப ஆரம் பித்து விட்டது என்றே நினைக்கத் தோன்றுகிறது. மக்கள் சக்தி இயக்கம் 25 அசெம்பிளி தொகுதிகளில் மட்டும் வேட்பாளரை நிறுத்தவிருப்பது சற்று ஏமாற்ற மளிக்கிறது. குறைந்தபட்சம் 150 தொகுதிகளிலாவது இவ்வியக்கம் வேட்பாளரை நிறுத்திட வேண்டுமென்பது என் போன்ற பொது நலன் விரும்பிகளின் ஆசை!
கோட்டையூர், 'தஞ்சை' கலைவாணர்தாசன்.

ரா. குருராஜனின், "உறுத்தல்" சிறுகதை யதார்த்தத்தைப் பிரதிபலித்தது.
விசலூர் – 1, ஜி. ஜி. கிருஷ்ணன்.

கார்டூனிஸ்டின் கரங்களுக்குத் தங்கக் காப்புச் செய்து போட்டாலும் தகும் என்று கூறுமளவிற்கு இவ்வார கார்டூன்கள் மூன்றிலும் புகுந்து விளையாடியிருந்தார் அரஸ்.
தோட்டக்குறிச்சி, இரா. வளையாபதி.

## ரூ.20 பரிசு பெறும் கடிதம்

சுஜாதா பக்கம் படித்தேன். உலக வங்கி மற்றும் சர்வதேச நிதி நிறுவனம் ஆகியவற்றின் நிர்ப்பந்தம் மற்றும் வழிகாட்டுதலின் அடிப்படையில் நமது நிதியமைச்சர் டாக்டர் மன்மோகன் சிங் அவர்களால் தயாரிக்கப்பட்டு, பிரதமர் பி.வி. நரசிம்மராவ் ஆட்சியால் அமல் நடத்தப்பட்டு வரும் புதிய பொருளாதார, தொழிற் கொள்கைகளின் விளைவுகள் குறித்து நோவம் சாம்ஸ்கி என்ற பொருளாதார வல்லுநர் தெரிவித்திருந்த கருத்துக்களைப் படித்தபோது எனக்கொன்றும் ஆச்சரியம் ஏற்படவில்லை. ஏனெனில், புதிய பொருளாதார மற்றும் தொழிற் கொள்கைகள் அறிவிக்கப்பட்டபோதே எச்சரிக்கை தெரிவித்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வெளியிட்டிருந்த கருத்துக்கள் தாம் இவை.
சிறுமுகை, ஜி. கதிரேசன்.

**3**

தில்லியில் கிட்டத்தட்ட என் பணி முடிந்து விட்டிருந்தது. சப்பாத்திக்கு மாவு பிசைந்து கொண்டிருந்த குடும்பத்தலைவிகள், கார்ப்பரேஷன் குப்பை லாரிக்காரர்கள், கடை கண்ணி வைத்துப் பிழைப்பு நடத்துகிற சர்தார்ஜிக்கள், அடுக்கு மாடிக் கட்டட அலுவலகங்களின் அழகிய டைப்பிஸ்டுகள் என்பதாக ரகம் பிரித்துப் பேசிப் பார்த்ததில், நாட்டு நடப்பைத் தவிரவும் யோசித்துக் கவலைப்பட மக்களுக்குப் பல சங்கதிகள் எப்போதும் இருப்பதாகப் பட்டது. அஜ்மல்கான் ரோடில் ஒரு பிளாட்பாரக் கிழவன் என் கருத்துக் கணிப்பைப் பிடித்துக் கிழித்து நார் நாராக்கினான்.

“யார் ஐயா ஊழல் செய்யவில்லை? யார், யாருக்கு லஞ்சம் தரவில்லை? இங்கே என் கைக்காசைப் போட்டு ஜட்டிக்கடை நடத்துவதற்கு மாதம் ஒரு தரம் தொப்பிக்காரனுக்கு நான் அழுகிற ரூபா முந்நூறுக்கு என்ன பெயர்? சாலா, சேட்டு என்னவோ எழுதி வைத்திருந்தான் என்று சொல்லி ஊரைக் கலக்குகிறார்கள். நான் கூடத்தான் எழுதி வைத்திருக்கிறேன், எவனுக்கு எத்தனை அழுதேன் என்று. கணக்கைக் கொண்டு யாரிடம் காட்ட? வேறு வேலை இருந்தால் பார்க்கப்போ. ஜட்டி வேணுமானால் வாங்கிப் போ. சைஸ் என்ன... முப்பதா, முப்பத்தொன்றா...”

நான் நகர்ந்து, அடுத்த ஆள் தேட, பின்னாலிருந்து “அகர் பேப்பர் மே ஆயே தோ, ஏக் காப்பி பேஜோ” என்று குரல் கேட்டது. அவசியம். அதைவிட எனக்கென்ன வேலை?

“ராஜகோபால், நாளைக்கு நைட்டு நான் கிளம்பறேன்.”

“சோலி முடிஞ்சுடுச்சா? என்ன சொல்றாங்க மக்கள்?”

“அதை விடு. இங்கே இருந்து ஆக்ரா எவ்வளவு தூரம்?”

“பார்! தாஜ்மஹால் எல்லாம் தனியாகப் போய்ப் பார்க்கிற விஷயம் இல்லை. அடுத்த முறை உன் பெண்டாட்டியோடு வா.”

தருணங்கள். என்ன அழகாக நினைவைக் கீறிப் பிளந்து, உயிரை உரசிப் பார்க்கின்றன?

கைப்பிடித்து, காலெடுத்து வைத்து வரப் போகிற புத்தம்புது மனைவிக்காக ஜமீன் பல்லாவரத்தில் வாடகைக்கு ஒரு வசந்த மாளிகை பார்க்கப் போயிருந்தேன். முன்னதாக நான் அடைந்து இருந்த திருவல்லிக்கேணி அறை, மனிதர்களுக்கானது அல்ல. சாக்கடை வீச்சமும் சாராயக் குமட்டலும் எருமைச் சாணம் இறைந்து கிடக்கிற பாதையும் சப்த நாராசங்களுமாக அது ஒரு அழுக்கு பொந்து. ரேணுகா போன்ற பூச்செடிகளுக்கான தொட்டி அல்ல. ஆகவே ஜமீன் பல்லாவரம்.

சூட்கேஸ் போலச் சின்னதான தனி வீடு. செம்மண் தரையில் செழிக்கும் செடிகள். அங்கே ஒரு தென்னை. இங்கே ஒரு திண்ணை. ஜன்னலுக்கு வெளியே சிறகடிக்கும் உலகம்.

வாடகை கொடுத்துத் தாங்குமா என்று என் அலுவலக நண்பன் கேட்டான். தினம் ஒரு சினிமா, வாரம் ஒரு ரெஸ்டாரன்ட், மாதம் ஒரு பேன்ட்-ஷர்ட் அநாவசியங்களை நிறுத்தினால் சரிப்படும் என்று தோன்றியது. சொர்க்கத்தின் விலை, சின்னச் சின்ன தியாகங்கள். பாதகமில்லை.

முப்பத்தி மூன்று நாட்கள். பக்கத்து வீட்டு மலையாளப் பெண்மணி காப்பித் தூள் இரவல் கேட்பதற்குள்ளாக எல்லாம் உதிர்ந்து விட்டது. ரேணுகா போய்விட்ட மறுவாரம் நான் பழைய திருவல்லிக்கேணி அறைக்குப் போய்விட்டேன். தினம் ஒரு சினிமா பார்க்கத்தான் பிடிக்காமல் ஆகிவிட்டது.

# கனாக் கண்டேன் தோழி

உத்தமன் ராஜகோபால், பணிக்கர் டிராவல்ஸில் பேசி, எனக்கொரு சீட் பிடித்து, அதிகாலை ஆக்ராவுக்கு பஸ் ஏற்றி விட்டான். தில்லி பார்டர் தாண்டியதும் வழியெங்கும் புடைவை விரித்தாற்போல் வயல் மெத்தை. குளிர்காற்று. புயல் வேகம். பயணக் களிப்பின் பரவசச் சிறகடிப்பு.

நாலு மணி நேரத்தில் ஆக்ரா. சரித்திரம் சொல்லும் சிறிய நகரம். அடைசல் தெருக்களில் தோல் பொருட்களின் வியாபாரம். கிளிஞ்சல் பொம்மைகள் தொங்கும் கடை, கடை, கடைகள். பளிங்குக் கல்லில் குங்குமச் சிமிழ். கேமராவும் கையுமாக உள்ளூர் தொழிலாளர்கள். பத்து நிமிஷத்தில் உங்கள் புகைப்படம். ஷாஜஹான் கட்டிய சலவைக் கல்லறை



முன்.

முகலாய மன்னர்கள்.

தாடியைத் தடவி விட்டுக் கொண்டபடிக்கு வாள் எடுத்து, சொந்தச் சகோதரர்களை சீவித் தள்ளிய நேரம் போக எஞ்சிய சமயத்தில் எழுப்பிய கோட்டை. கலையைப் பாருங்கள். கல்லிலே கலை வண்ணம். அது மாடம். இது கூடம். அங்கே ஊஞ்சல். இங்கே உறக்கம். வெட்டவெளியில் திராட்சைத் தோட்டம். மன்னர்களுக்கான மதுக் கோப்பைகள். மகாராணிகளுக்கான மஞ்சங்கள். தொண்டை வரண்ட வழிகாட்டி வியர்க்க வியர்க்கக் கத்திக் கொண்டிருந்தான்.

ரேணுகா போய்விட்ட விஷயம் தெரிந்து அப்பா இப்படித்தான் அடித் தொண்டையில் அலறினார். கடவுளே, இந்தக் குடும்பத்துக்கு இதெல்லாம் மிகப் புதிய விஷயம். ஊர் வாயை விட்டுத்தள்ளு. உனக்கு நாண்டு கொண்டு சாகலாம் போல் இல்லை? ஏன் போனாள்? விசாரித்தாயா? என்ன பிணக்கு? காலணா பெறாத குட்டிச் சண்டையா? அதற்குள்? மனைவியை வருத்துவது அல்ல; அணைப்பதே ஆண்மை. ஆட்சி புரிவதைக் காட்டிலும் அடி பணிவதில் சுகம் அதிகம்.

எனக்கு வியப்பான வியப்பு. அப்பா என்னவெல்லாம் பேசுகிறார்! எப்படியெல்லாம் பேசுகிறார்! அப்பா, நீ ஏன் கதை எழுதக் கூடாது? சாசுவத நிதி நிறுவனத்தில் கணக்கு எழுதி என்னத்தை சாதித்தாய்?

நான் யாருக்கும் எதையும் சொல்லவில்லை. நிஜமான எதையும். சில விஷயங்களை விண்டு, கடை விரிக்காமல் இருப்பதுதான் நல்லது. நரம்புகள் இல்லாத நாக்குத் துடுப்புகளில் ரேணுகா புரட்டிப் போடப்படுவதில் எனக்கு உடன்பாடு இல்லை. அவள் கொலைபாதகம் ஏதும் செய்துவிட்டதாக எனக்குத் தோன்றவில்லை. ஆனால் மனவெளியில் குண்டூசிக் குத்தல்களுடன் எப்படி என்னால் மலர்ந்து இருக்க முடியும்?

அவமானம். அது எப்படி இருக்கும்? ரேணுகா போன மூன்று நான்கு மாதங்களில் அதை வெகு நெருக்கமாக நான் கண்டு கொண்டேன். அது ஒரு பூதம். எக்காளச் சிரிப்பும் இளக்காரப் பார்வையும் புறங்கையால் விரட்டி அடிக்கும் சொற்களும் முதுக்குக்குப்

பா. ராகவன்

பின்னால் விரல் நீட்டிய பரிகசிப்புமாக.

நடு வாசலில் நின்று ரேணுகாவின் பெற்றோர் உரக்கக் கூவி அழைத்து, சாபமிட்டுப் போனார்கள். நான் நாசமாகப் போவேன். பெண்டாட்டியைப் பூப்போல் வைத்துக் காக்கத் துப்பில்லாத வெட்கம் கெட்ட ராஸ்கல் நான். ஒரு போலீஸ் கம்ப்ளெயிண்டில் என்னை உள்ளே தள்ளிக் களி தின்ன வைக்க முடியும் அவர்களால். தவிர, அவர் பெண் ஒரு பூ; நான் ஒரு குரங்கு என்பது போன்ற வழக்கமான சொலவடைகள்.

என் மூளை நரம்புகள் துடித்துக் கொண்டிருந்தன. எந்த நிமிஷமும் நான் வெடித்துச் சிதறிவிடக் கூடும். நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு சாந்தி, சாந்தி என்று சொல்லிக் கொண்டேன். ஒரு சொல் போதும். அத்தனை பேரையும் துரத்தி அடிக்க. ஆனால், என்னால் ஏன் ரேணுகாவைக் குற்றம் சாட்டி விரல் உயர்த்த இயலாமல் போகிறது? மனசுக்குள் அவள் முகம், மின்னல் போல் பளிச் பளிச் சென்று சுடர்விட்டு மறைந்தது. இத்தனை நீதிபதிகளின் விசாரணைக்கு அவள் தாங்கமாட்டாள். அவள் ஒரு துளிர். அவள் ஒரு ஐஸ் க்யூப். அவள் ஒரு பூனைக்குட்டி.

இது ஆக்ரா கோட்டையின் உப்பரிகை. சிற்பம் இழைத்த கைப்பிடிச்சுவர் அருகே நின்று பார்த்தால் வெளியே விரியும் யமுனை நதி. கால்வாய் போல் ஓடும் தண்ணீரில் மிதக்கும் கல்லறையின் நிழல். நட்டு வைத்த தாஜ் மஹாலைத் தொட்டுப் போகும் மேகக் கூட்டம். டூரிஸ்ட் பஸ்கள். வெள்ளைக்கார சீமாட்டிகள். வெள்ளரிக்காய் விற்கும் பையன்கள். விழுந்து கும்பிடும் காதல் ஜோடிகள்.

சுல்தான் ஷாஜஹானின் குண விசேஷங்களைப் படம் பிடித்துக் கண் முன் நிறுத்தும் முயற்சியில் வழிகாட்டி. ஷாஜஹானின் காதல். காதல் சோகம். உதவாக்கரை பையன்கள். தாஜ் மஹால் கனவு.

"அதுதான் சார் காதல்! தாஜ்மஹால் கட்டி ஆனதும் இருபதாயிரம் கொத்தனார்களின் விரல்களையும் வெட்டி விட்டார் சுல்தான். இந்த விரல்கள் இதற்குப் பின்னும் வேறு கட்டடம் செய்வதா...?"

எனக்கு அந்தப் பிரதேசப் புற்களெல்லாம் விரல்களாகத் தெரிந்தன.

கல்யாணத்துக்குப் பின், 'நான் உன்னைக் காதலிக்கிறேன்' என்று ரேணுகாவிடம் ஒருதரமாவது சொல்ல ரொம்ப ஆசைப்பட்டேன். ஆனால் கூச்சமாக இருந்தது. அவள் அதை எப்படி எதிர் கொள்வாள்? சொல்வதற்கு லைசென்ஸ் இருக்கிறது. ஆனால் என் ஒட்டு மொத்த உணர்வுகளின் சாறு எடுத்து அவள் மேல் தெளிக்க அந்த ஒரு சொல் போதுமா? லேசாகத் திரும்பிப் பார்த்து, களுக்கென்று சிரித்து விட்டால் என்னால் தாங்க முடியுமா, தெரியவில்லை. எனக்கு reciprocation முக்கியம். வருடலாக ஒரு பார்வை. சிலீரென்று ஒரு வெட்கம். சிவந்து போகிற காது மடல்கள். மெத்தென்று கையைப் பற்றி இறுக்கிக் கொள்கிற புனிதம்.

'நீயெல்லாம் யதார்த்த வாழ்க்கைக்கு லாயக்கே இல்லை' என்று ராஜகோபால் முன்பு ஒருதரம் என்னிடம் சொல்லி இருக்கிறான். புடலங்காய் யதார்த்தம். வாழ்க்கையின் சுவாரஸ்யம், அதை அனுபவிப்பதில் இருக்கிறது.

ஆனால், என் ரசனைகள் பெரும்பாலும் அடுத்தவர்களுக்கு கேலிக்குரியதாகவே இருக்கின்றன.

திடீரென்று ஒருநாள், ரேணுகாவை மடித்துக்கட்டிய ரெட்டைப் பின்னலும் தாவணியுமாகப் பார்க்க வேணும் போல் தோன்றியது. மொட்டு மாதிரி மனத்தில் உதித்து, பூதாகரமாகப் பெருகி விட்ட ஆசை. அலுவலகத்தில் வேலை ஓடவில்லை. அந்தக் கணம் எழுந்து, அசுர வேகத்தில் வெளியேறி, பஸ் பிடித்து பாண்டிபஜாரில் இறங்கி, கருநீலக் கலரில் தாவணியும் தோராயமான அளவில் ரெடிமேட் பிளவுஸூம் வாங்கிக் கொண்டு, பிளாட்பாரக் கடையில் இரண்டு ரிப்பன்கள் பொறுக்கிக் கொண்டு, அடுத்த அரை மணியில் வீடு.

"என்ன இன்னைக்கு இத்தனை சீக்கிரம்?"

நான் பரபரப்பாகக் கதவைச் சாத்தி விட்டு, "இதைக் கட்டிப்பியா? எனக்காக?" என்றேன்.

சிலீர் என்றொரு சிரிப்பு.

"ஐயே, ஆசையைப் பார்!"

"ப்ளீஸ் கட்டிக்கோ. அப்படியே தலைவாரி ரெட்டைப் பின்னல் போட்டுக்கோ. பட்டாம்பூச்சி ஷேப்பில் ரிப்பன் கட்டத் தெரியுமோ உனக்கு?"

"நான் அப்போதுதான் கவனித்தேன். முதுகு வரை தவழ்ந்த கூந்தலை, தோள் வரை கத்திரித்து, புஸூபுஸூவென போனிடெயில் போட்டிருந்தாள் ரேணுகா.

"உங்களுக்கு என்னவெல்லாம் ஆசை வருகிறது? இன்னிக்குக் காலையில்தான் பியூட்டி பார்லர் போய் கட் பண்ணிட்டு வந்தேன்."

பிறகு நான் அந்த ரிப்பன்களை புஸ்தக பண்டில் கட்டவும் தாவணியை ஸ்கிரீனாகவும் உபயோகப்படுத்திக் கொண்டேன்.

பொழுது சாய்கிற நேரம் பணிக்கரின் ஆம்னி பஸ் என்னை புது தில்லியில் கொண்டு இறக்கி விட்டுப் போனது.

ஹோட்டலுக்குப் போய், ராஜகோபால்

ஆபீஸுக்கு போன் செய்தேன்.

"வந்துட்டியா? குட். நேரே வீட்டுக்கு வந்துடு. என் ஒய்ஃப் வந்திருப்பா. பத்து நிமிஷத்தில் நானும் வந்து விடுவேன்."

அன்று இரவு எனக்கு மறுபடி ராஜகோபால் மனைவி கையால் சாப்பாடு. இந்த முறை குழம்பு, ரஸம் இல்லை. சப்பாத்தி, போளி, தவிர சில இனிப்பும் புளிப்புமான பஞ்சாபி ஸ்வீட்கள்.

''ஷாஜஹான், மும்தாஜ் எல்லாம் சௌக்கியமா இருக்காங்களா?'' என்று ராஜகோபால் கேட்டான். நான் பதில் சொல்லவில்லை. ஒரு வாரமாகச் சப்பாத்தியைக் கடித்துக் கடித்து, பல் வலிக்கத் தொடங்கி இருந்தது.

"ஆக்ராவுல தண்ணி, வாயில் வைக்க முடியாதபடிக்கு உப்பா இருக்குமே?"

இதற்கும் நான் பதில் சொல்லவில்லை.

"கோட்டை எல்லாம் பார்த்தியா? மகனுங்க மாசம் ஒரு கல்யாணம் கட்டிக்கிட்டு ஆட்டம் போட்டிருக்காங்க."

நான் வெறுமனே சிரித்தேன்.

"என்னடா பேசமாட்டேங்கறே? பேய் அடிச்சாப் போல இருக்கே? என்ன பார்த்தாய் ஆக்ராவில்?"

"இரண்டு லட்சம் விரல்கள்." என்றேன் நான்.

**சா**ப்பிட்டு ஆனதும் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுக் கிளம்பினேன். நாளை பகலில் நேரு பிளேஸ் ஒர்க்கிங் காம்ப்ளக்ஸ் வளாகங்கள், ராமகிருஷ்ணாபுரம், செங்கோட்டை பக்கம் கொஞ்சம் சுற்றி விட்டு இரவு மூட்டை கட்ட வேண்டியதுதான்.

ராஜகோபாலிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பினேன். இருட்டுச் சாலைகளில் கல்காஜியை நடந்து கடந்து கோவிந்த்புரி மெயின் ரோடை அடைந்தேன்.

சாலையை அடைத்துக் கொண்டு பிளாட்பாரச் சந்தை. நூற்றுக் கணக்கான அறுபது வாட்ஸ் பல்புகள் அந்தரத்தில் தொங்க, ஜகஜ் ஜோதியாக மீன் வியாபாரம். மிளகாய் வியாபாரம், பழந்துணிக் குவியல்கள். பழரசப் பிழியல்கள்.

கிரீன் லைன் பஸ் வருமா என்று காத்து இருந்தபோது அந்தக் கோவில் கண்ணில் பட்டது. ராஜகோபால் குறிப்பிட்ட ஹனுமான் மந்திர்.

ஆவல் உந்த, சட்டென்று உள்ளே நுழைந்தேன். ராஜகோபால் சொன்னது சரிதான். நேற்றுப் பார்த்த ஸ்கூட்டர் பெண்களின் முற்றிலும் மாறுபட்ட தோற்றம். நெற்றி நிறையக் குங்குமமும் பதவிசாகக் கட்டிய புடைவையும் கைகளில் கோலாட்டக் கட்டைகளையும் வைத்துக் கொண்டு, புஸ்தகத்தைப் பார்த்துப் பார்த்து ராமபஜன். ஸ்வெட்டர் போட்ட பண்டிட்ஜி, ஹனுமான் மேனியிலிருந்து வெண்ணெய்க் காப்பை கொஞ்சம் எடுத்து, தட்டில் ரூ. ஐந்தும் அதற்கு மேலும் போடுகிறவர்களுக்கு வாழை இலையில் மடித்துக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

ஒருமித்த குரலில் அத்தனை பெண்களும் ராமரின் தோள், தாள் அழகைப் பாடிக் கொண்டிருக்க, என் பார்வை, தூண் ஓரம் முணுமுணுக்காத வாயுடன் விழிமூடி லயித்திருக்கும் பெண்ணின் மேல் பட்டு, ஆணி அடித்தாற் போல் நின்றது. படபடப்புடன் கூட்டத்தை விலக்கிக் கொண்டு, கிட்டே போய், தயங்கியபடி அவள் தோளைத் தொட்டேன்.

மெல்லக் கண் விழித்தவள், என்னைப் பார்த்ததும் சட்டென்று எழுந்து, "நீங்களா?" என்றாள்.

"நல்லா இருக்கியா ரேணுகா?" என்றேன் நான்.

(தொடரும்)

## பிப்ரவரி மாத சிறப்புப் பரிசுகள்!



* திவ்யா

**பிப்ரவரி மாத கல்கி இதழ்களில் வெளியான சிறுகதைகளில், சிறந்த சிறுகதை என்று பெரும்பாலான வாசகர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது : பறக்கும் ஆசைகள். எழுதியவர் : திவ்யா (என். ராஜலட்சுமி, அக்கவுண்ட்ஸ் ஆபீசர், BHEL, பி.எச். 467/468, பெல் டவுன்ஷிப், திருச்சி - 620 014.)**

**இவருக்கான சிறப்புப் பரிசாக ரூ. 500 வழங்கப்படுகிறது.**

**'கனவுகளைத் துறந்து, யதார்த்தத்தை ஏற்கும் பக்குவம் இன்றைய இளைய தலைமுறைக்கு உண்டு என்பதை இக்கதை உணர்த்துகிறது' என்று இந்தக் கதையைத் தாம் தேர்ந்தெடுத்ததற்கான காரணத்தை கச்சிதமாகவும் சுருக்கமாகவும் எழுதி ரூ. 100 பரிசு பெறும் வாசகர் : எஸ். வரதராஜன், 5/18, அபிராமபுரம் முதல் தெரு, சென்னை - 18.**

**— ஆர்.**




## பழக்கம்

நான் சிறுவனாயிருக்கும்போது, ஒரு பானைக்குள் இருந்த ஒரு வெள்ளரிக்காயை என் தந்தை எனக்குக் காட்டினார். பானையின் வாய் குறுகலாயிருந்தது. காய் பெரியதாயிருந்தது. ''காய் எப்படி உள்ளே போயிற்று?'' என்று தந்தையிடம் கேட்டேன்.

அவர் என்னைத் தோட்டத்துக்கு அழைத்துச் சென்றார். வேறொரு பானையை கொடி மீதிருந்த ஒரு சிறு வெள்ளரிக்காய் மீது அவர் கவிழ்த்தார். தந்தை முன்னே காட்டிய பெரிய காய், பானைக்குள்ளேயே வளர்ந்து பருத்துப் போயிருக்கிறது என்று நான் கண்டு கொண்டேன்.

தந்தை என்னைப் பார்த்தார். ''மகனே, பல மனிதர்களின் கெட்ட பழக்கங்களும் இப்படித்தான்! காயைச் சூழ்ந்த பானை போல, சிறு வயதிலேயே கெட்ட பழக்கங்கள் அவர்களைக் கவிந்து கொள்கின்றன. அவர்கள் பெரியவர்களாய் வளர்ந்த பிறகு, அந்தப் பழக்கங்களிலிருந்து வெளிவர முடியாமல் தவிக்கின்றார்கள். நீ அத்தகைய கெட்ட பழக்கங்களிடம் ஜாக்கிரதையாயிரு'' என்று எச்சரித்தார்.

— வானதி திருநாவுக்கரசு தொகுத்த 'சான்றோர் சிந்தனைகள்' நூலிலிருந்து.

மெலிதான வாசம் அடித்தது.
விஸ்வநாதன் நிமிர்ந்தான்.
சுபத்ரா.
புதிதாகப் பூத்த ஒரு பூப் போல இருந்தாள்.
சடக்கென பார்வையைத் தாழ்த்திக் கொண்டான்.
"விஸ்வநாதன்...!"
அவள் குரல் குழைந்தது.
நிமிர்ந்தான்.
மஞ்சள் புடைவை உடுத்தியிருந்தாள்.
அற்புதமான நிறம்.
அவள் உடம்புக்கு மிகவும் பாந்தமாயிருந்தது.
விஸ்வநாதன் தலையைக் குலுக்கிக் கொண்டான்.
சே... என்ன ஆயிற்று?
அவன் தவிப்பை ரசித்தாள்.
"விஸ்வநாதன்...!"
"எஸ்....!"
"உட்காரலாமா...?"
தலையசைத்தான்.
உட்கார்ந்தாள்.
சின்னப் பெட்டி எடுத்து உறை அகற்றி நீட்டினாள்.
சாக்லேட் துண்டங்கள்.
"என்ன?"
"என் பிறந்த நாள்...!"
எடுத்துக் கொண்டான்.
"நன்றி...!"
அவன் உதடுகள் முணுமுணுத்தன.
அவள் இவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.
அந்தப் பார்வையில் ஒரு செய்தி இருந்தது.
இதுதான் வேதனை.
புரிந்து கொண்டதைப் புரியாதது போல பாவனை செய்வது.
"எதாவது பேசுங்க விஸ்வநாதன்?"
அவள் புன்னகையுடன் சொன்னாள்.
யோசித்தான்.
வேண்டாம்.
"எனக்கு நிறைய வேலை இருக்கு...!"
அவள் முகம் மாறியது.
முகத்தில் வேதனை பாய்ந்தது.
அவள் முகமாறுதல் பார்த்து மனசுள் தவித்தான்.
விஸ்வநாதா... வேண்டாம்.
இளகி விடாதே.



ஃபைலை புரட்ட ஆரம்பித்தான்.

அவள் சரக்கென எழுந்து கொண்டாள்.

இண்டர்காம் சிணுங்கியது.

விஸ்வநாதன் எடுத்தான்.

எஸ்தர்.

"விசு...!"

"ஆமாம்... என்ன விஷயம்?"

"உன்கிட்டே கொஞ்சம் பேசணுமே...!"

"ஓ.கே. பேசுங்களேன்...!"

"இப்ப இல்ல.... லஞ்ச் டயத்தில்...!"

"சரி...!"

"அடை கொண்டு வந்துருக்கேன்... வா... ஷேர் பண்ணிக்கலாம்...!"

"சரி...!"

விஸ்வநாதன் யோசிக்க ஆரம்பித்தான்.

விக்கலெடுத்தது.

தண்ணீர் பாட்டில் நீட்டினாள்.

குடித்தான்.

"சரி. சொல்லுங்க...!"

எஸ்தர் நிதானமாக அவன் முகம் பார்த்தாள்.

"விசு... நீ ஏன் சுபத்ராகிட்ட அப்படிச் சொன்னே...?"

சட்டென தென்பட்டது.

"எப்படி...?"

"எனக்கு வேலை இருக்குதுன்னு...!"

"வேலை இருந்தது... அதனால சொன்னேன்!"

"நீ சுலபமாச் சொல்லிட்டே... அவ எவ்வளவு நேரம் அழுதா தெரியுமா...?"

மௌனமாக இருந்தான்.

"உனக்குப் புரியலையா... அல்லது புரியாத மாதிரி நடிக்கிறியா...?"

"புரியுது... ஆனா வேண்டாம் எஸ்தர்...!"

எஸ்தர் சிறிது நேரம் இவனையே பார்த்தாள்.

"த பார் விசு... பொம்பளை மனசு உனக்குப் புரியாது... காதல் விஷயத்தில் பொம்பளை சுலபமா முடிவு எடுக்க மாட்டா... அவ ஒரு சந்தேகப் பிராணி... நாலு திசையிலும் பார்த்துட்டுத்தான் தீர்மானம் பண்ணுவாள்... அவ தன்னை மிகவும் நுட்பமாத்தான் ஆணிடம் வெளிப்படுத்துவாள். சுபத்ரா எல்லா எல்லைகளையும் மீறி உன்னிடம் தன்னைக் காட்டிக் கொள்கிறாள்...!"

சிறிது இடைவெளி கொடுத்தாள்.

"ஏன்...! உன் மீது அவளுக்கு ஏற்பட்ட அளவுக்கு அதிகமான பிரியம்... போன வாரம் முழுக்க உனக்கு மஞ்சள் நிறம் பிடிக்குமென





''நாடும் அரசியலும் எவ்வளவு தூரத்துக்கு முன்னேறிடிச்சு பாருங்க?''

''எதைச் சொல்றீங்க?''

''அந்த கட்சித் தலைவர், 'தேர்தல் டிக்கெட் கேட்கிறவங்க, விண்ணப்பத்தோடு அவர்கள் செய்திருக்கிற கிரிமினல் குற்றத்துக்கான ஆதாரங்களையும் இணைச்சு அனுப்பினாத்தான் பரிசீலிக்கப்படும்'னு அறிக்கையே விட்டுட்டாரே!''

– சீர்காழி வி. ரேவதி

---

நகரத்திலுள்ள எல்லா ஜவுளிக் கடையும் நானும் அவரும் ஏறி இறங்கினோம்... அந்த மஞ்சள் புடைவையை எடுக்க...!''

விஸ்வநாதன் ஆச்சர்யமாகப் பார்த்தான்.

"ஆனா... நீ... இன்னைக்கு அவளை அவமானப்படுத்திருக்கே...!"

"இல்லை எஸ்தர்... நான் ஒதுங்கிக் கொள்கிறேன்... அவ்வளவுதான்!"

"அதான்... ஏன்?"

விஸ்வநாதனின் முகம் மாறியது.

"சுபத்ரா அன்பானவள்... அறிவானவள்.. அழகானவள்...!"

எஸ்தர் நிமிர்ந்தாள்.

"நான் ஒரு ஆண் மகனாய் மட்டும் இருந்தால் இது போதும்... ஆனால் நான் மூன்று தங்கைகளுக்குத் தாய், தகப்பன், சகோதரன்...!"

"தெரியும் விசு...!"

"எனக்கு நிறைய கடமைகள் இருக்கு... இந்த நேரத்தில் எனக்கு ஆடம்பரங்களுக்கு இடமில்லை...!"

"என்ன சொல்றே?"

"என்னைப் பொறுத்தவரை காதல் ஆடம்பரமான விஷயம்...!"

"விசு...?"

"மன்னிச்சிடு எஸ்தர்... சுபத்ராகிட்டயும் சொல்லிடு.. கனவுகள் வேண்டாம் என்று சொல்லிடு....!"

விஸ்வநாதன் எழுந்தான்.

ரங்கராஜன் வீட்டிலிருந்தார்.

"வா... விசு...?"

உள்ளே போனான்.

"ஜாதகம் கொண்டு வந்திருக்கியா?"

ஜோல்னாப் பையிலிருந்து எடுத்துக் கொடுத்தான்.

"ஜாதகம் பொருந்தியிருந்தா முடிச்சுடலாம் விசு...!"

தலையசைத்தான்.

"ரொம்ப எதிர்பார்ப்பாங்களா சார்?"

"இல்ல நான் சொல்லியிருக்கேன்... நாராயணன் நல்ல மனுஷன்...!"

விஸ்வநாதன் அவரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

எழுந்து அருகில் வந்தார்.

அவன் தோளில் தட்டினார்.

"கவலைப்படாதே விசு... சுமதி என் பொண்ணு மாதிரி... நான் இந்தக் கல்யாணத்தை நடத்தி வைக்கிறேன்...!"

விஸ்வநாதனின் கண் நிறைந்தது.

விஸ்வநாதன் சைக்கிளை நிறுத்தினான்.

நந்தினி எட்டிப் பார்த்தாள்.

"அண்ணா...!"

கூவினாள்.

அந்தக் கூவலில் வித்தியாசம் தெரிந்தது.

பதறினான்.

"என்ன நந்து...?"

"சரஸ்வதி.... சரஸ்வதி...!"

திணறினாள்.

"என்ன சரசுக்கு...?"

சொன்னாள்.

சரஸ்வதி பெரிய மனுஷி ஆகிவிட்டாள். இவனது மூன்றாவது தங்கை. விஸ்வநாதன் ஸ்தம்பித்தான்.

"இப்ப எங்கே...?"

பின்பக்கம் கைநீட்டினாள்.

தடக்கென நகர்ந்தான்.

நந்தினி முன்னால் போய் மறித்தாள்.

அவசரப்பட்டதுக்கு சின்னதாய் வெட்கப்பட்டான்.

அம்மாவின் ஞாபகம் வந்தது.

அம்மா நீ இருந்து கவனிக்க வேண்டிய விஷயம்.

சரஸ்வதியின் தலைமயிர் நீவி, கன்னம் வழித்து இதம் சொல்ல வேண்டிய நேரம்.

ஆண்பிள்ளை நான் என்ன செய்யப் போகிறேன்?

"சுமதி இருக்காளா...?"

நந்தினி தலையசைத்தாள்.

"அவங்க சாயங்காலம் வந்தாங்க... அவங்க தான் எல்லாம் செஞ்சாங்க...!"

"யார்...?"

"உங்க ஆபீஸ் சுபத்ரா...!"

அதிர்ந்தான்.

பின்பக்கமிருந்து சுபத்ரா வந்தாள்.

"வாங்க... ஏன் லேட்டு...!"

அவள் கண்களையே பார்த்தான்.

ஒரு லிஸ்ட் நீட்டினாள்..

## சிறுகதைத் தேர்வுக் கூப்பன்

கடந்த 3.3.96 கல்கி இதழ் முதல் இந்த (31.3.96) இதழ் முடிய வெளி வந்துள்ள சிறுகதைகளில் நீங்கள் சிறந்ததாகக் கருதுவது எந்தச் சிறுகதையை?

கீழுள்ள கூப்பனில், சிறுகதையின் தலைப்பு, ஆசிரியர் பெயர் மற்றும் நீங்கள் அதைத் தேர்ந்தெடுத்ததற்கான காரணத்தையும் இரண்டே வரிகளில் சுருக்கமாக எழுதியனுப்புங்கள்.

ஒவ்வொரு மாதமும் நீங்கள் இப்படித் தேர்ந்தெடுக்கும் சிறுகதையை எழுதிய ஆசிரியருக்கு ரூ.500 சிறப்புப் பரிசு. காரணத்தை இரண்டே வரிகளில் எழுதினாலும் கச்சிதமாக எழுதும் ஒரு வாசகருக்கும் சிறப்புப் பரிசாக ரூ.100 வழங்கப்படும்!

இம்மாதக் கூப்பன் அனுப்பக் கடைசித் தேதி : 10.4.96.

### மார்ச் மாத சிறுகதைத் தேர்வுக் கூப்பன்

**சிறந்த சிறுகதை :** ..............................

..............................

**கதாசிரியர் பெயர் :** ..............................

**தேர்ந்தெடுக்கக் காரணம் :** ..............................

..............................

..............................

..............................

**என் பெயர் :** ..............................

**முகவரி :** ..............................

..............................

..............................

"நான் கடைக்குப் போகணும்னு நினைச்சேன்... வந்துட்டீங்க... வாங்கிட்டு வந்துடுங்க...!"

தலையசைத்தான்.

"புதுசு கட்டணும்... ஒரு புடைவை எடுத்துட்டு வந்துடுங்க...!"

அதற்கும் தலையசைத்தான்.

பை எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

புதுப் புடைவையில் சரஸ்வதி வந்து நின்றது.

தடக்கென முழு மனுஷியாய் மாறியது போல பட்டது.

காலையில் பார்த்த அந்தக் குழந்தை எங்கே?

விஸ்வநாதன் உள்ளுக்குள் உடைந்து போனான்.

கண்ணீர் திமிறியது.

சுபத்ரா இவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

விஸ்வநாதன் சமாளித்துக் கொண்டான்.

அப்போதுதான் ஞாபகம் வந்தது.

மணி பார்த்தான்.

ஒன்பது.

"சுபத்ரா... நேரமாயிடுச்சே...!"

"ஆமாம்...!"

"ரொம்ப நன்றி...!"

மிருதுவாய்ச் சிரித்தாள்.

"அப்ப நான் கிளம்பறேன்...!"

தலையசைத்தான்.

சரஸ்வதி அருகே போனாள்.

அவள் கன்னம் தொட்டாள்.

"வரட்டுமா...?"

சரஸ்வதி பூவாய்ச் சிரித்தது.

"தெருமுனையில் ஆட்டோ கிடைக்கும்... அதுவரை நான் வர்றேன் சுபத்ரா...!"

நடந்தார்கள்.

சுபத்ராவே பேசினாள்.

"எஸ்தர் சொன்னாங்க விசு... காதலங்கிறது ஆடம்பரம்னு நீங்க சொன்னதா...!"

தலையசைத்தான்.

"தப்பாப் புரிஞ்சுக்கிட்டீங்க... காதல் என்பது விரல்கள் உரச சினிமா பார்ப்பது, கால்கள் புதைய கடற்கரை மணலில் நடப்பது. சிலீரென ஐஸ்க்ரீம் சாப்பிடுவது மட்டுமல்ல விசு... என்னைப் பொறுத்தவரை காதல் என்பது காத்திருத்தல்..."

விஸ்வநாதன் உறைந்து போனான்.

மெல்லத் தொட்டான்.

ஆட்டோ நின்று கொண்டிருந்தது.

அமர்ந்தாள்.

கை அசைத்தாள்.

ஆட்டோ புறப்பட்டது.

விஸ்வநாதன் வெகு நேரம் அங்கேயே நின்று கொண்டிருந்தான்.

# 4

# கனாக் கண்டேன்

பா. ராகவன்

புதுதில்லி ரயில்வே ஸ்டேஷன். அதே குளிர். அதே கும்பல். அதே நெரிசல் அதே உரசல். பார்த்தால் நாய் துரத்தும் படியாக மப்ளரால் முகத்தைச் சுற்றிக் கொண்டு, என்னை வழியனுப்ப ராஜ கோபால் வந்திருந்தான். கூடவே அவன் மனைவியும். இழுத்து இழுத்துப் போர்த் திக் கொண்டு, லொக் லொக் என்று இருமிக் கொண்டிருந்தாள். விடிந்ததி லிருந்து லேசாக உடம்பு சரியில்லை என்று சொன்னாள்.

இல்லை. பிற்பகல் மூன்று மணி சுமாருக்கு நல்ல ஜுரம் இருந்தது. தெர்மா மீட்டரில் நூறுக்கு மேல் தெரிந்ததாக ராஜ கோபால் சொன்னான்.

''ஐயோ, நீங்க எதுக்காக இந்தக் குளிரில் வரணும்? என்னால் சிரமம்.''

"அது பரவால்லை. உங்கள் வேலை எல்லாம் ஒழுங்கா முடிஞ்சுதா? ஈவினிங் வீட்டுக்கு வருவீங்கன்னு நினைச்சேன். இல்லை; நீங்க் நேரா ஸ்டேஷனுக்கு வந் துடுவீங்கன்னு இவர் சொன்னார். கிளம்பற வரைக்குமா வேலை வெச்சுக் கறது?''

மனிதர்கள். அன்பை எப்படி எல்லாம் பொத்தி வைத்துப் பூச்சொரிகிறார்கள்? ராஜகோபால் வெகு அதிர்ஷ்டக்காரன் என்று நினைத்துக் கொண்டேன்.

''வழியில் எதுவும் வாங்கி சாப்பிடாதீங்க. குறிப்பா ரயிலில் கிடைக்கும் போண்டா, காப்பி'' என்றபடி என் கையில் ஒரு பையைத் திணித் தாள்.

"இதென்ன?''

"சும்மா கொறிக்க.''

"எதுக்கு சிரமம்?''

"சரிதான். ரெண்டு நாள் பொழுது போகணுமில்லையா உங்களுக்கு?''

பேச்சில் மிகப் பரிவு. ஆனால் குரலில் ஏன் இத்தனை பிசிர்? தவிர, கால்களில் லேசான தள்ளாட்டம். அடிக்கடி கைகளைச் சேர்த்துப் பிணைத்துக் கொண் டதில் தெரிந்த ஓர் இனம் புரியாத தவிப்பு. கடவுளே! எதற்காக இவள் இத்தனை காய்ச்சலுடன் என்னை வழியனுப்ப வர வேண்டும்?

"ராஜகோபால், நீ பண்ணுவது சரி யில்லை. ரயில் கிளம்ப நேரம் இருக்கு. நீ கிளம்பு. முதலில் அழைத்துக் கொண்டு ஹாஸ்பிடல் போ. இங்கே ஒரு ஃபேமஸ் மருத்துவமனை உண்டே? அ, ராம் மனோஹர் லோகியா.''

"சரிதான். அதெல்லாம் சூட்கேஸில் பணம் வைத்திருப்பவர்களுக்கு. நாம் எல்லாம் பர்ஸ் கேஸ்.''

"போகட்டும். தயவுசெய்து கிளம்பு. நான் போயிக்கறேன். அவங்களைப் பார்க்கக் கஷ்டமா இருக்கு.''

''பரவால்லை. இன்னும் கொஞ்ச நேரம்தானே?'' என்றாள் அவள்.

நான் விடாப்பிடியாக அவர்களை ஓவர் பிரிட்ஜ் வரை கொண்டு விட்டு வந்தேன். தலைக்கு மேலே, ராட்சஸன் மாதிரி ஒரு மெகா மூட்டையைத் தூக்கி வந்து கொண்டு இருந்த ஒரு சர்தார்ஜியின் முழங்கையால் இடி வாங்கிக் கொண்ட படிக்கு மேல் படியில் நின்று கொண்டு உரக்க "அடுத்தவாட்டி ஒய்ஃபைக் கூட் டிட்டு வாடா'' என்றான் ராஜகோபால்.

அன்பால் ஏன் இப்படி ஆளை அடித்துப் போடுகிறார்கள்? அதுவும் என்னை? நான் அவளை வலுக்கட்டாய மாகத் திருப்பி அனுப்பியதற்கு அவள் உடல்நிலை மட்டும் இல்லை காரணம். ஸ்டேஷனுக்கு ரேணுகா வரேன் என்று சொல்லி இருந்தாள். ஐந்து மாதங் களுக்குப் பின் ஹனுமான் மந்திரில் சந்திக்க நேர்ந்து விட்ட ரேணுகா.

வாழ்க்கையில் மறுபடி நான் ரேணுகாவைச் சந்திக்கக்கூடும் என்பது பற்றி எண்ணிப் பார்க்கவே இல்லை. அவள் இனி என்னைக் குறுக்கிட மாட்டாள் என்று தோன்றி விட்டது. சில நுணுக்கமான உணர்வுகளைப் புரிந்து கொள்வது வெகு கஷ்டம். எங்களுக்குப் புரிந்து விட்டது. எனக்கு அவளுடைய தும்; அவளுக்கு என்னுடையதும்.

ஆனால் தனிமனிதர்களின் பிரத்தி யேக உணர்வு ரணங்களைக் கீறிக் கிளறிப் பார்ப்பதில் என்ன ஒரு எக்காளம், கொண்டாட்டம், எல்லாருக்கும்!

ஐந்து மாதங்களில், என்னைப் போலவே நிறைய சொல் கேட்டு விட்டதாக ரேணுகா சொன்னாள்.



வேறென்ன? நாலு பைசா பெறாத வம்பு அம்புகள்.

"ஆனால், உங்களைத் தப்பு சொல்ல மாட்டேன் தெரியுமா? எனக்கு இதெல்லாம் பார்க்கணும்னு இருந்தால் பார்த்துத்தானே ஆகணும்? உங்கள் முடிவிலும் தப்பில்லை. நானும் பெரிய குற்றம் செய்துட்டதாகத் தோணலை. ஏதோ ஒரு பாதை. ஏதோ ஒரு ஜங்ஷன். நாம் மீட் பண்ணியே ஆகணும்னு இருந்து இருக்கு."

நான் எதிர்பார்க்கவில்லை. ரேணுகா எப்படியெல்லாம் பேசுகிறாள்? நிச்சயம் அவள் ஒரு சராசரிப் பெண் அல்ல என்று எனக்குத் தோன்றியது. ஆனால், நான் ஒரு சராசரி ஆணாக இருந்து விட்டதால்தான் இதெல்லாம்.

**அ**ன்று இரவு, நிஜாமுதீன் சாரங்கா மார்கில் அவள் ஃபிளாட்டுக்கு என்னைக் கூட்டிப் போனாள். வாசலில் மரங்கள். வழியில் ஸ்கூட்டி. நடையில் நாய். கடிக்காது, பயப்படாமல் வாங்க. படி ஏறி, கதவைத் திறந்ததும் இருட்டு வாசனை. விளக்கைப் போட்டதும் எதிரில் டீவி. அருகில் சோபா. மேரி ஸஹேலி போன்ற சில பத்திரிகைகள். அட, சுவரில் ஆணி அடித்து, எங்கள் கல்யாண போட்டோ! ஜமீன் பல்லாவரத்திலிருந்து மறுபடி நான் திருவல்லிக் கேணிக்குக் குடிமாறிய போது, காணோமே என்று தேடிக் கொண்டு இருந்தேன்.

"உங்களைக் கேட்காமல் எடுத்து வந்துட்டேன். ஸாரி. என்ன இருந்தாலும் அது ஒரு ஞாபகம் இல்லையா?"

"அது பரவால்லை. நீ எப்போ டெல்லி வந்தாய்?"

"நாலு மாசம் ஆச்சு. மெட்ராஸிலிருந்து நேராக பெங்களூர்தான் போனேன். கேட்பாங்க இல்லையா? என்ன பதில் சொல்றது? சண்டைன்னா? பிரச்னைன்னா? அல்லது இத்தனைக்கு அப்புறம் மறுபடி பிள்ளையார் சுழி போட்டு, அரவிந்த் லேருந்து ஆரம்பிக்கறதா?"

"கஷ்டம்தான்."

"உங்களுக்கு ஒண்ணு தெரியுமா? உலகத்துல, இந்த அப்பா அம்மாக்களே தனி ஜாதி. தன் பிள்ளைதான் மனிதருள் மாணிக்கம்னு அவங்களுக்கு ஒரு தீர்மானம். நான் என்ன சொல்ல முடியும் அவங்ககிட்டே? நான் ஒருத்தனைக் காதலிச்சேன்னு சொன்னால் அவங்களைப் பொறுத்தவரைக்கும் விபசாரம் பண்ணி

## 'சுருக் - நறுக்' -22 முடிவுகள்

• கீழ்க்கண்ட சொல்லோவியங்கள் ரூ. 50 பரிசு பெறுகின்றன.

### நாடகம் என்பது...

● கலைஞர்களால் சிறிய மேடையில் தொடங்கப்பட்டு, இன்று அரசியல்வாதிகளால் உலக மேடையில் நடத்தப்படுவது.
– கே. மகேஸ்வரி, திருச்சி – 8.

● திரைப்படத்தை மேலேற்றி விட்டதால், கீழ் நிலைக்குத் தள்ளப்பட்ட ஏணி.
– எம். தட்சிணாமூர்த்தி, சென்னை – 12.

● தொலைக்காட்சி அகராதியில் ரம்பம்; அரசியல்வாதிகளின் அகராதியில் நெஞ்சு வலி.
–வி. சுவர்ணலட்சுமி, சென்னை - 17.

● உணர்ச்சிகளின் நேரடி ஒளிபரப்பு
–டி.அசோகன், கீழ்விஷாரம்.

● ஒரு ஆத்மாவை மகாத்மா ஆக்கிய மகத்துவம் கொண்ட அற்புதக் கலை.
– அ. சுந்தரமூர்த்தி, பெருந்தலையூர்.

● சினிமா, டீ.வி. போன்ற கிருமிகளால் பாதிக்கப்பட்டு, அவசர ஆக்ஸிஜன் தேவைப்படும் நோயாளி.
– எல். லட்சுமிகாந்தன், சேலம் – 4.

னேன்னு சொன்ன மாதிரிதான். தெரியுமில்லையா? வெகு ஆர்த்தடாக்ஸ்."

கடவுளே, என்னவெல்லாம் சிக்கல் வருகிறது பெண்களுக்கு? எனக்கு நேர்ந்த அவமானமெல்லாம் ரொம்பக் குறைச்சல் என்று தோன்றியது.

எது பற்றியும் வாய் திறக்கவில்லை என்று ரேணுகா சொன்னாள். இனி சேர்ந்து வாழ்தல் சாத்தியமில்லை என்று வெகு தீர்மானமாகச் சொல்லி விட்டபின்தான் அவள் பெற்றோர் என்னைச் சபிக்க பெங்களூர் மெயில் ஏறி வந்திருக்கிறார்கள்.

"தெரியுமா? அரவிந்த்தான் இங்கே வேலை வாங்கிக் கொடுத்தான். டி.வி.எஸ். எலக்டிரானிக்ஸில் டைப்பிஸ்ட். வித் ரெஃபரன்ஸ் டு யுவர் லெட்டர் டேட்டட்..." என்று சொல்லிச் சிரித்தாள்.

"இந்த வேலை இல்லாட்டாலும் நான் தொடர்ந்து பெங்களூரில் இருக்கறதா இல்லை. அப்பா, அம்மாதான்னாலும், பழகின முகங்களை உடனே, உடனே இனி தவிர்த்துடணும்னு ஒரு வேகம். அரவிந்தைக் கூட தவிர்த்துடணும்னு நினைச்சேன். அதான், உட்கார வெச்சி, சாம்பிராணி போட்டு, அவங்க வீட்டுல பார்த்த பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்க வெச்சுட்டேன்."

"கடவுளே!"

"என்ன கடவுளே? தெய்வீகக் காதல் அப்படீன்னு எல்லாம் குழப்பிக்க வேண்டாம். நான் வேறென்ன பண்ண முடியும்? அவனாவது நல்லா இருக்கணும் இல்லையா?"

"இருக்க முடியும்னு நினைக்கறியா?"

"இருக்கணும்னு விரும்பறேன்."

ரேணுகா, மறுபடியும் மறுபடியும் நிரூபித்துக் கொண்டிருந்தாள். அவளைப் புரிந்து கொள்வது கஷ்டம். அவள் துளிர் அல்ல. ஐஸ்க்யூப் அல்ல. பூனைக்குட்டி அல்ல. அவள், காற்று. அவள் ஒரு விசை. அவள் ஒரு சக்தி.

"**ஸா**ரி. பேசிட்டே இருந்ததுல மறந்துட்டேன். அஞ்சு நிமிஷம் வெயிட் பண்ணீங்களா? சமையல் முடிச்சுடறேன்."

நான் காத்து இருந்தேன். ரேணுகா எழுந்து போனாள். புடைவையை இழுத்துச் செருகிக் கொண்டு, அரிசியைக் களைந்து குக்கரில் போட்டு, அடுப்பை மூட்டினாள்.

அரைமணி. எனக்குப் பிடித்த வெங்காய சாம்பார். எனக்குப் பிடித்த எண்ணெய் கத்தரிக்காய். எனக்குப் பிடித்த தக்காளி ரசம். எனக்குப் பிடித்த வெள்ளரிப் பச்சடி.

முன்னதாக ராஜகோபால் வீட்டில் சாப்பிட்டு இருந்த ரொட்டிகள் பாதி வயிற்றை அடைத்து இருந்தன. இருந்தாலும் ரேணுகாவை மறுக்கத் தோன்றவில்லை. என் கூட உட்கார்ந்து அவளும் சாப்பிட்டாள்.

**சா**ப்பிட்டு ஆனதும் ஹாலுக்கு வந்து கொஞ்ச நேரம் பேப்பர் பார்த்துக் கொண்டு இருந்தேன். உள்ளே ஒழித்து விட்டு, முகத்தைத் துடைத்தபடி ரேணுகா வந்து என் எதிரே உட்கார்ந்தாள்.

"இப்படியே இருக்கறதுன்னு முடிவு பண்ணிட்டியா?"

"தென்? மேலே படிக்கலாம்னு இருக்கேன். வேறு ஞாபகங்கள் எதுவும் வராதபடிக்கு கனமா ஏதாவது. ஸே, எம்.ஃபில்... எங்கயாவது ஃபாரின் போய் செட்டில் ஆயிடலாமான்னு கூட ஐடியா. சொல்லுவீங்களே, கனவு! நல்ல வேளை, எனக்கு அப்படி எதுவும் இல்லை."

நாக்கு துடித்தது. சட்டென்று கேட்டு விட்டேன்.

"அரவிந்த் கூடப் பழகின போது கூடவா?"

"உம்! நல்ல பையன். பிடிச்சிருந்தது. ஸோ

வாட்? உங்களைக் கூடத்தான் பிடிச்சுது. ரொம்ப ஸாஃப்டா இருந்தீங்க. என்கிட்ட எத்தனை ஆசை வெச்சு இருந்தீங்க? ஆனால் ஒண்ணு. நேசம் என்பது எல்லை இல்லாத விஷயம். நம்முடைய சில இலக்கண எல்லைகள், வரைமுறைகள்தான் எதையும் தீர்மானிக்கறதுன்ற போது யார், என்ன பண்ண முடியும்?''

நான் பேசவில்லை. பேச என்ன இருக்கிறது? அவளுக்கு அவள் உலகம். எனக்கு என் உலகம். ஆனால் என் போன்ற சாதாரணர்களின் உலகில் ரேணுகாவுக்குத் தோதான கணவன் கிடைப்பது கஷ்டம் என்று தோன்றியது.

புறப்பட்டேன். வாசல் வரை வந்து, ஆட்டோ பிடித்துக் கொடுத்து வழி அனுப்பினாள்.

"எப்ப கிளம்பறீங்க, மெட்ராஸுக்கு?''

"நாளைக்கு நைட். தமிழ்நாடு எக்ஸ்பிரஸ்.''

"ஸ்டேஷனுக்கு நான் வரலாம் இல்லையா?''

நான் அவளை உற்றுப் பார்த்தேன்.

"காத்திருக்கேன்!''

**கா**த்திருந்தேன். ரயில் புறப்பட ஐந்து நிமிடங்கள் இருந்தன. கண்ணை மறைக்கும் முகங்களில் எதுவும் ரேணுகாவுடையது இல்லை. வருவாளா? வந்து? இப்படியான சூழ்நிலையில் முன்னதாக நான் பார்த்திருந்த சினிமாக்கள் ஞாபகம் வந்தன. மருந்துக்குக் கூட பொய் தவிர வேறெதுவும் காட்டாத சினிமாக்கள்.

சட்டென்று முதுகுக்குப் பின் ரேணுகாவின் குரல்.

"ஸாரி. கொஞ்சம் லேட் ஆயிடுச்சி.''

சுடிதாரும் ஸ்வெட்டரும் சால்வையும் தலைக்கு ஒரு ஸ்கார்ஃபுமாக வினோதமாக இருந்தாள்.

"அசப்பில் நீ ஒரு பஞ்சாபிப் பெண் போல் இருக்கே, தெரியுமா?''

"பஞ்சாபிகள் இன்னும் கொஞ்சம் குண்டு. இன்னும் கொஞ்சம் உயரம்.''

நான் ஒரு விநாடி இடைவெளி விட்டு, "உன் அப்பா அம்மாவுக்கு நீ இங்கே இருக்கறது தெரியுமா?'' என்றேன்.

"ஐயோ! தெரிந்தால் செத்தேன். வாரம் ஒரு லெட்டர் மட்டும் போடுவேன், நல்லா இருக்கேன்; தேடிட்டு திரியாதீங்கன்னு.''

"அப்படியும் தேடாமலா இருப்பாங்க?''

"ஷ்யூர். கண்டுபிடிச்சி வரதுக்குள்ள வெளிநாடு எதுக்காவது போயிடணும்னு ஒரு இது. யார்கிட்டே இருந்து, எதுக்காகத் தப்பிக்க விரும்பறேன்னு தெரியலை. ஆனால் தப்பிச்சுடணும்னு ஒரு வெறி. நான் இந்த சமூகத்துக்கு ஆனவளே இல்லைன்னு ஒரு தீர்மானம். ஸர்வைவல் பிரச்னை இல்லை. ஆனால் சந்தோஷம் முக்கியம் இல்லையா? சுதந்தரம் முக்கியம் இல்லையா?''

சிக்னல் போட்டு விட்டார்கள்.

"ரேணுகா, நான் கிளம்பறேன்.''

அவள் புன்னகைத்தாள்.

"கடைசியா ஒண்ணு சொல்லட்டுமா?''

"உம்!''

"என்னை விடுங்க. தெரிஞ்சோ, தெரியாமலோ, உங்கள் லைஃப் என்னால் சிக்கலாகி விட்டது. இனி நான் வரதா இல்லை. ப்ளீஸ். வேறு பெண் பார்த்து, கல்யாணம் பண்ணிப்பீங்களா? எனக்காக?''

அவள் கண்கள் கலங்கி இருந்தன. கிட்டே இழுத்து, ஆதரவாகப் பற்றத் துடித்த கரங்களை அடக்கிக் கொண்டேன்.

எப்படி முடியும்? சொன்னேன் இல்லையா? என் கனவுகள் யோக்கியமானவை. மனசு முழுக்க இவள் விதைத்துப் போன நினைவுச் செடிகளுக்கு நீர் வார்த்துக் கொண்டு இருக்கிற போது, இன்னொருத்தி?

"சாதாரணமானவர்களுக்குப் பிரத்தியேகமான உடைமைகள் ரொம்ப முக்கியம் ரேணுகா! உன்கிட்ட நான் எதிர்பார்த்தது அதைத்தான். எனக்கு அது இல்லைன்னு ஆகணும் போல் இருந்து இருக்கு. இன்னொரு பெண்ணை நான் கல்யாணம் பண்ணிட்டா, அவளுக்கும் அது இல்லாமல் ஆயிடும் இல்லையா?''

"புரியறது. ஸாரி.''

"ஸாரி எதுக்கு? சில விஷயங்களுக்கு நம்மை சாட்சியாக மட்டும் வெச்சி, வேறு யாரோ விளையாடறாங்களோன்னு பல சமயம் எனக்குத் தோணும். வாழ்க்கையோட சுவாரஸ்யமே அதுதானோ என்னமோ?''

அவள் புன்னகைத்தாள். என்னை ஏறிக் கொள்ளச் சொல்லி, கையசைத்தாள்.

ரயில் வேகமெடுத்து, பிளாட்பாரம் தாண்டும் வரை நான் அவளையே பார்த்துக் கொண்டு நின்றிருந்தேன்.

(முற்றும்)

---



''சௌசௌ என்ன விலை?''

''ரெண்டு ரூபாய்''

''ஒரு ரூபாய்ன்னு தரப்படாதா?''

''ஒரு ரூபாய்ன்னா 'சௌ'தான் வரும்.''

– மு.ப.கௌதம்பாரதி

## தேர்தல் ரவுண்ட்-அப் :

**முதல்வர் மறுபடி பர்கூரில் நிற்பது உறுதியாகி விட்டது. வேட்பாளர்கள், வாக்காளர்களுக்கு சோப்பு போடத் தொடங்கி இருக்கிற வேளையில் தமிழகத் தொகுதிகளின் 'சூப்பர் ஸ்டார்' ஆன பர்கூரில் இந்த நிமிஷம் மக்கள் என்ன மன நிலையில் இருக்கிறார்கள்? ஏராள ஊழல் குற்றச்சாட்டுக்களை ஓவர் கோட்டாகத் தைத்துப் போட்டிருக்கும் ஜெயலலிதாவின் 'இமேஜ்', மக்கள் மத்தியில் மங்கி இருக்கிறதா? அப்படியே தான் இருக்கிறதா? அல்லது கூடி இருக்கிறதா? அறிந்துவர பர்கூர் சென்றபோது அடுக்கடுக்கான அதிர்ச்சிகள்.**

*'சொல்லுக்கடங்காவே பராசக்தி சூரத்தனங்களெல்லாம்...'*

- பாரதியார் எதை மனத்தில் வைத்துக் கொண்டு சொன்னாரோ... பர்கூர் தொகுதி மக்களைக் கேட்டால் தயங்காமல் 'ஜெயலலிதாவைத்தான்' என்பார்கள்.

ஒரு முதலமைச்சராக, மாநிலத்தின் பல சீரழிவுகளுக்கு மூல காரண கர்த்தராக இருந்த போதிலும், ஒரு எம்.எல்.ஏவாக, பர்கூர் தொகுதிக்கு ஜெயலலிதா செய்திருப்பவை அநேகம். சுமாராக ஏழெட்டு தொகுதிகளுக்கான நலத்திட்டங்களை ஒட்டு மொத்தமாக பர்கூரில் கொண்டு இறக்கி இருக்கிறார்.

தாராளமான குடிநீர் வசதி என்ன, வேலை வாய்ப்புத் திட்டங்களென்ன, பெண்களுக்கான தொழில் பயிற்சிக் கூடங்களென்ன, கிரானைட் தொழிற்பேட்டை என்ன, இண்டு இடுக்குகளுக்கெல்லாம் சாலை-பஸ் வசதி என்ன, மின்சாரம் என்றால் ஷாக் அடிக்கிற வஸ்து என்பதைத் தவிர வேறெதுவும் அறிந்திராத மிகவும் ஒதுக்குப்புறமான மலைவாழ் மக்கள் வசிக்கிற பகுதிகளிலெல்லாம் மின்சார வசதி என்ன, சுலபக் கடன் வசதிகள் என்ன....

இத்தனைக்கும் பர்கூர் ஒரு வத்திப்பெட்டி சைஸ் தொகுதிதான். மூன்று, நான்கு தெருக்களைச் சேர்த்து ஒரு கிராமம். அப்படியாக, திசைக்கு ஐம்பதென்று சுமார் இருநூறு கிராமங்கள். 'பர்கூர்' என்பதே மெயின் ரோடில் சுமார் நூறு அடி ஏரியா. அவ்வளவுதான்.

ஊரின் பிரதான தொழில்கள் மூன்று. விவசாயம், ஜவுளி, ஃபைனான்ஸ். தவிர, தென்னை மரங்கள் நிறைய இருக்கிற இடம் என்பதால் நார் பொருள் உற்பத்திக் கூடங்கள் சில.

வெகு பக்கத்தில் ஆந்திர எல்லை. கொஞ்ச தூரத்தில் கர்நாடக எல்லை. ஆகவே மும்மொழி பேசும் மக்கள். பேசத் தொடங்கினாலே, ஜெயலலிதா பற்றிப் புகழ்மாரி பொழியத் தொடங்கி விடுகிறார்கள். அவரை ஒரு மனிதப் பிறவியாக, மாநில முதல்வராகப் பார்க்கிற மன நிலையெல்லாம் தாண்டி, கிட்டத்தட்ட தேவதூதராகவே



* சென்னம்மாள்

* எம்.ஜி.ஆர். நகர் ம

* எம்.ஜி.ஆர். நகர் : வானளாவிய முன்னேற்றம்




காண்கிறார்கள்.

'ஜெ'வுக்கு ஏகப்பட்ட செக்யூரிட்டி, கிட்டே நெருங்க இயலாமை, அதிகம் பேசாத பாவனை எல்லாம் தலைநகரில்தான். தொகுதியில் கதையே வேறு.

இரண்டு மாதங்கள் முன்பு ஜெயலலிதா பர்கூர் சென்றிருந்த போது நடந்தவற்றை, தொகுதியைச் சேர்ந்த மல்லப்பாடி கிராமத்துப் பெண்மணி பாஞ்சாலி (35) வர்ணிப்பதைப் பாருங்கள் :

"பகல் பன்னெண்டு, ஒரு மணி இருக்கும். அம்மா வராங்க, அம்மா வராங்கன்னு ஆள் ஆளுக்கு சொல்லிட்டு இருந்தாங்க. வயக்காட்டுல பொம்பளைங்களெல்லாம் வேலை செஞ்சிட்டு இருந்தாங்க. திடீர்னு அவங்களே வயல் பக்கம் வந்துட்டாங்க. காரை விட்டு இறங்கி 'நடந்தே' வந்தாங்க. கிட்டக்க வந்து கையைப் புடிச்சி ஒவ்வொருத்தரையா விசாரிச்சாங்க. 'குறை இருந்தா சொல்லுங்க'ன்னு கேட்டு, கவனமா குறிச்சிக்கிட்டாங்க. எந்த நாட்டுல, எந்த முதலமைச்சர் இப்படிக் கிடைப்பாங்க?"

தொகுதியில் எல்லா பெண்களும் கிட்டத்தட்ட இதே உணர்வில்தான் இருக்கிறார்கள்.

"நன்றி வேணுங்க. நம்ம சனங்

# "மக்களின் அறியாமையே முதல்வரின் மூலதனம்!"



களுக்கு எத்தனை செஞ்சாலும் பத்தாது. திருப்தி வராது. குறை சொல்லிட்டே இருக்கணும். அந்தம்மா தன்னால் முடிஞ்சதெல்லாம் செய்ய றாங்க. ஏழைங்களுக்கு சேலை குடுத்தாங்க. அதுல யும் குறை சொல்றாங்க. காஸ்மீர் பட்டா தர முடியும்? சாதா புடைவைதான் தர முடியும். அது சரியில்லை, இது சரியில்லைன்னு புலம்பினா எப்படி?'' என்று கேட்டார் அதே கிராமத்தைச் சேர்ந்த ராஜம்மாள் (65).

"போகட்டும். அவங்கமேல இருக்கற ஊழல் குற்றச்சாட்டுகள் பற்றி உங்களுக்குத் தெரியுமா? டான்ஸி ஊழல், நிலக்கரி ஊழல், சுடுகாட்டு ஊழல், வேட்டி-சேலை ஊழல்...."

"ஊழல் செய்யாதவன்னு ஒருத்தனைக் காட்டு பார்க்கலாம்? ஆனா இந்தம்மா செஞ்சதா நான் நம்பமாட்டேன். அந்த முகத்தைப் பாருங்க. தப்பு செய்யறவங்களா அவங்க? சுத்தி இருக்கறவங்க சரியில்லைன்னா அவங்க என்ன செய்வாங்க?"

ஆனால், "கிராமத்து மக்களால் தங்கள் உணர்வின் அடித்தளத்தை சரியாக விளக்க முடியாது. ஜெயலலிதாவை, எம்.ஜி.ஆரின் வாரிசாகப் பார்க்கிறபடியால்தான் அப்படிப் பேசுகிறார்கள். இவர்களின் வோட்டு, எம்.ஜி.ஆரின் நினைவுக்குத் தானே தவிர, ஜெயலலிதா தலைமையிலான அதிமுகவுக்கு அல்ல!'' என்றார் சிகரலபள்ளியைச் சேர்ந்த பி.வி. நாராயணன். திவாரி காங்கிரஸின் உள்ளூர் துணைத் தலைவர்.

"விழுகிற வோட்டை வைத்து செல்வாக்கை எடை போடக் கூடாது. தொகுதியில் ஐம்பது சதவீத மக்களின் ஆதரவு கூட இப்போது அவருக்குக் கிடையாது. சென்ற '91ம் வருடத் தேர்தலில் கூட அவர் இங்கே வெற்றி பெற்றது எப்படித் தெரியுமா? இந்தச் சிறிய தொகுதிக்கு மட்டும் ரூபா ஐந்து கோடிக்கு மேல் செலவு செய்திருக்கிறார். வோட்டு தானாக விழுவது என்பது வேறு; இப்படிப் பணம் செலவழித்து விழவைப்பது வேறு இல்லையா?'' என்று கேட்டார் நாராயணன்.

ஓர் எதிர்க்கட்சி நபரின் வழக்கமான குற்றச்சாட்டாகக் கருதி, ஒதுக்கி விட முடியவில்லை, இதனை. காரணம் உண்டு.

மலைகள் சூழ்ந்த பர்கூர் தொகுதியில், மலை அடிவாரங்களில் ஆதிவாசியினர் - பழங்குடியினர் குடியிருப்புப் பகுதிக்குச் சென்றோம். எம்.ஜி.ஆர் நகர் என்று புதிதாகப் பெயர் சூட்டி இருக்கிறார்கள். ஏழெட்டு வருடங்கள் முன்பு வரை யாராலும் கவனிக்கப் படாமல், இப்படி ஓர் இனத்தவரே (இருளர்கள்) இங்கு வசிப்பது வெளியே தெரியாமல் இருந்த பகுதி அது.

தற்சமயம் நல்ல கல்வீடுகளும் டிஷ் ஆண்டெனாவும், கடை கண்ணிகள் நிறைய வந்து கலகலப்பாகவும் இருந்தது.

எப்படி சாத்தியமாயிற்று, இந்த முன்னேற்றம்? ஜெ. ஆட்சியின் அபார நலத்திட்டங்களின் விளைவா?

"இல்லை. அவர் ஆட்சிக்கு வந்த பின் செய்ததை விட, தேர்தல் சமயத்தில் ('91) வோட்டு கேட்க வந்த போது செய்தவை அநேகம்'' என்றார் ஆட்டோ டிரைவர் செல்வராஜ்.

"தலைக்கு பத்தாயிரம் கொடுத்தாங்க சார்! கொடுத்து, வோட்டுப் போடக் கேட்டுக்கிட்டாங்க. நாங்க நூறு ரூபா நோட்டையே தொட்டுப் பார்த்ததில்லை. பத்தாயிரம் தந்தாங்க. அவங்களுக்கு வோட்டு போடாம வேற யாருக்குப் போடறதாம்?'' என்றார் சென்னம்மாள் என்கிற பெண்மணி.

தவிர, ஒவ்வொரு வீட்டுக்கும் ஒரு உழவுமாடு, வண்டிமாடு, வண்டி என்று அள்ளிக் கொடுத்திருப்பதை எம்.ஜி.ஆர் நகரின் நாகன், வரலட்சுமி, ராஜா, மாணிக்கம் எனப் பலரும் ஒப்புக் கொள்கிறார்கள்.

இப்படி தேர்தல் சமயத்தில் லஞ்சம் கொடுப்பதும் பெறுவதும் சட்ட விரோதம் என்பது தெரியாதா?

"சட்டம் கிடக்குதுங்க. தேடி வந்து பணம் தந்துட்டுப் போறவங்களை வேணான்னா சொல்வாங்க? இப்படி ஏதாவது கிடைச்சாத்தான் எங்களுக்கு உண்டு. போன எலக்‌ஷன் அப்ப இங்க டி. ராஜேந்தர் நின்னாரே, அவர் கூட 'கொழா' எல்லாம் போட்டுத் தந்தாரு. ஆனா, பாவம் தோத்துட்டாரு'' என்றார் ராணி என்கிற பெண்.

ஜெயலலிதாவுக்கு அடுத்தபடியாக, டி. ராஜேந்தருக்கு உள்ளூர் மக்களிடையே செல்வாக்கு இருப்பதை வேறு சில கிராமங்களிலும் காண முடிந்தது.

சென்ற தேர்தலில் ஜெ.வுக்கு எதிராக டி.ஆர். நின்றபோது, தொகுதியில் ஒரு வீடு விடாமல் தேடித் தேடிப் போய் வோட்டு கேட்டிருக்கிறார்.

"அந்தப் பையன் சிம்பு, 'அக்கா, எங்கப்பாவுக்கு வோட்டு போடுங்கக்கா. உங்களுக்கு ஒரு குறை வராம பார்த்துக்குவார் அக்கா'ன்னு ஒவ்வொரு பொம்பளையையும் கையைப் புடிச்சி கேட்டிச்சி. நிச்சயமா அவருக்குத்தான் போடணும்னு ஊர்ல பேசி முடிவு செஞ்சோம். நடுவுல

● பெரிய வேலைகளை நிறைவேற்ற வேண்டியவர்கள் அதிகாலையில் எழுந்திருக்க வேண்டும். தூக்கத்தில் பற்று வைக்க வேண்டாம். வைத்தால் வறுமை வந்து விடும்.

தகவல்: ஆர். பார்த்திபன்

ராஜீவ் காந்தி செத்துட்டாரா? ஒரே குழப்பமாயிடுச்சி. ராஜேந்தரை தி.மு.க. ஆதரிச்சிது. தி.மு.க தான் ராஜீவ் காந்தி கொலைக்குக் காரணம்னு சொன்னாங்க. தோதா, அந்தம்மா (ஜெ) காங்கிரஸோட கூட்டு வெச்சாங்களா? அத்தினி வோட்டும் அவங்களுக்கு விழுந்திருச்சி" என்றார் மல்லப்பாடி பாஞ்சாலி.

வருகிற தேர்தலில் தி.மு.க. சார்பில் டி. ராஜேந்தர் பர்கூர் தொகுதியில் நின்றால் ஜெயலலிதா வெல்வது சந்தேகம் என்றார் பர்கூர் வெங்கடேசன்.

பர்கூர் தி.மு.க. இளைஞர் அணித் தலைவரும் '91 தேர்தலில் ஜெயலலிதாவை எதிர்த்து நின்று, கடைசி நேரத்தில் டி.ஆருக்காக வாபஸ் வாங்கிக் கொண்டவருமான சுகவனத்தை அவரது எமக்களநத்தம் கிராமத்தில் சந்தித்தோம்.

"சென்ற தேர்தலில் ராஜேந்தர் மிகச் சுலபமாக ஜெயலலிதாவை இங்கே வென்றிருக்கலாம். அப்போதைய அரசியல் சூழ்நிலைகளின் நிர்பந்தத்தால், தி.மு.க. அவருக்காக வாபஸ் வாங்கிக் கொண்ட போதும் கழகத் தொண்டர்களின் ஒத்துழைப்பை முழுமையாக அவர் பிரசாரத்தின் போது பயன்படுத்திக் கொள்ளத் தயங்கினார். அதனால்தான் முடிவு வேறாகி விட்டது" என்றார் சுகவனம்.

"இந்த முறை நீங்கள்தான் தி.மு.க. சார்பில் நிற்பீர்களா? அல்லது...."

"நான் சொல்ல என்ன இருக்கிறது. தலைவர் உத்தரவு எப்படியோ, அப்படி."

"இங்கே மக்கள், ஜெயலலிதாவின் ஊழல் முகங்கள் பற்றி ஏதும் அறியாதவர்களாகவே இருக்கிறார்கள். தொகுதிக்கு அவர் நிறைய செய்திருப்பதை மட்டுமே குறிப்பிடுகிறார்கள்...."

"தொகுதிக்கு அவர் செய்திருப்பதை நானும் மறுக்கவில்லை. ஆனால், அவற்றால் பலனடைவோர் மிக சொற்பம். தொகுதி முழுக்கக் குடிநீர் வசதி வந்து விட்டதாகச் சொல்கிறார்கள். ஆனால் இன்னும் தண்ணீருக்காகக் கஷ்டப்படும் கிராமங்களை இங்கே என்னால் காட்ட முடியும்.

"இந்தத் தொகுதி, கிரானைட் சுரங்கம். எத்தனையோ கோடிகள் வருமானத்துக்கு வழி இருக்கிறது. ஆனால் என்ன நடக்கிறது? முதல்வரின் ஆசியுடன் உயர் அதிகாரிகள் மிகச்சில லட்சங்களுக்கு கான்ட்ராக்டைக் கொடுத்து, ஊழலில் திளைக்கிறார்கள். சில அமைச்சர்களின் பினாமிகளாலேயே கிரானைட் தொழிற்சாலைகள் நடத்தப்படுவதும் ஊரறிந்த விஷயம்."

"ஊரில் யாரும் இதையெல்லாம் அறிந்ததாகத் தெரியவில்லையே?"

"காரணம் இருக்கிறது. ரோடு போடுகிறார்கள். வீடு கட்டித் தருகிறார்கள். வேறு என்னென்னவோ செய்கிறார்களே தவிர தொகுதியில் ஒரு கல்லூரி உண்டா? இங்கே இருப்பவர்கள் மேலே படிக்க வேணுமென்றால் திருப்பத்தூருக்கோ, வாணியம்பாடிக்கோதான் போக வேண்டும். இத்தனை செய்பவரால் ஒரு கல்லூரி நிறுவ முடியாதா? ஆனால் செய்ய மாட்டார்கள். ஏனென்றால், படித்து விட்டால் மக்கள் யோசிக்க, கேள்வி கேட்கத் தொடங்கி விடுவார்களே! ஒன்று சொல்கிறேன். ஜெயலலிதாவின் மூலதனமே இந்த கிராமத்து மக்களின் அறியாமைதான்!"

சுகவனம் சொன்னதை வேறு சிலரும் ஒப்புக் கொண்டார்கள். தொகுதியில் படித்தவர்கள் மிக மிகக் குறைவு.

"இந்த ஊரிலேயே என் தங்கை மட்டும்தான் கல்லூரிப் படிப்பை முடித்திருக்கிறாள். மெட்ராஸுக்கு அனுப்பி, படிக்க வைத்தேன்" என்றார் சுகவனம்.

பொதுவாக, தொகுதி மக்களுக்கு நாட்டு நடப்பு பற்றிய விழிப்புணர்வோ, நீட்கிற ஊழல்கள் பற்றியோ ஏதும் தெரிந்திருக்கவில்லை. சுப்ரமணியசாமி, ஜெயலலிதா மேல் தொடுத்த வழக்கு பற்றிக் கேட்டால், "யார் சுப்ரமணியசாமி?" என்று திருப்பிக் கேட்கிறார்கள்.

நியாய, அநியாய முறைகள் பற்றிக் கவலைப் படாமல், தங்கள் தேவைகள் பூர்த்தியானால் சரி என்கிற மனோபாவம் மேலோங்கி இருக்கிறது. காரக்குப்பத்தில் ஒரு ஆட்டோ டிரைவர், "நாய்க்குப் பொறை போட்டுப் பழக்குவது போல், பணத்தால் அடித்து அடிமைகளாக்கி விட்டார்கள்" என்றார்.

ரஜினி அரசியலிலிருந்து ஒதுங்கி விட்டதில் மிகுந்த வருத்தமுற்று இருக்கும் காரக்குப்பம் இளைஞர்கள், "அ.தி.மு.க. தனித்து நின்றால் ஒரு வேளை ஜெயிக்கலாம். மறுபடி காங்கிரஸுடன் கூட்டு என்றால் ஒருபயலும் மதிக்க மாட்டான்; தொகுதியில் டெபாஸிட் கூடக் கிடைக்காது; அத்தனை வோட்டும் தி.மு.க.வுக்குப் போய்விடும்" என்றார்கள்.

இது எத்தனை தூரம் உண்மை என்று தெரியவில்லை. நாம் சந்தித்த கிராம மக்கள் அத்தனை பேரும் கண்ணை மூடிக் கொண்டு ஜெ.வுக்கு ஜே போடுகிறார்கள். வேறு யார், எதைப் பற்றியும் அவர்களுக்குக் கவலை இருப்பதாகத் தெரியவில்லை.

'உன்னைக் கொண்டு என்னில் வைத்தேன்; என்னையும் உன்னில் இட்டேன்' என்பது பெரியாழ்வார் வாக்கு. ஜெயலலிதாவைப் பொறுத்தவரை, பர்கூர் தொகுதி மக்களின் மனநிலையும் இதுதான்.

**— ஔரங்கசீப்**

படங்கள் : **யோகா**

சிறுகதை



# 'ஸ்லிப்'

"உள்ள வரலாமா ஸார்..."

கதவை நாசூக்காய் தட்டிவிட்டு எம்.டி.யின் தலையசைப்பை ஏற்றுக் கொண்டு முகத்தில் அடித்த குளிர்ந்த காற்றை ரசித்தான் ராகவன். காலையின் மன உளைச்சல் குறைந்தாற் போலிருந்தது.

"ராகவன், உங்ககிட்ட முக்கியமா ஒரு வேலையை ஒப்படைக்கணும்னு கூப்ட்டேன். இன்னிக்கு நைட் தங்கறா மாதிரி இருக்கலாம்..."

"ட்ரை பண்றேன் ஸார்..."

"நீங்க முடிச்சிருவீங்க..."

சீட்டுக்கு வந்து அமர்ந்ததும் ஆயாசமாக இருந்தது. என்மேல் எவ்வளவு நம்பிக்கை இருந்தால் எம்.டி. இப்படிப் பேசியிருப்பார்...! அந்த நம்பிக்கையும் இசைவும் மனைவிக்கு இல்லையே...

எல்லாவற்றிற்கும் இந்த காசுதான் காரணம் என்று தோன்றியது. இரண்டு நாட்களாய் புகைச்சல் வீட்டில். காலையில் கிளம்பும் போது 'குப்' என பற்றிக் கொண்டது.

"நான் யாரைக் கேட்டு எங்கப்பாக்கு பணம் கொடுக்கணும்? நீங்க என்னைக் கேட்டா லோன் போட்டு உங்க தம்பிக்கு டெபாஸிட் கட்டினீங்க?"

"இங்க பாரு, நீ என்னை நம்பி வந்துட்ட. உன் இஷ்டத்துக்கு ஒரு போக்குல போக முடியாது!"

"நிறுத்தலாம். இனி ஒரு வார்த்தை மேல பேச வேண்டாம். எங்கப்பா என்னை சோத்துக்கு வக்கில்லாம உங்க முன்ன நிறுத்தல. நானும் படிச்சவ."

"அப்படின்னா இப்பவே உங்கப்பா வீட்டுக்குப் போயேன்?"

"போறேன்.. நீங்க வரப்ப, இருக்க மாட்டேன்.."

தடித்துவிட்ட வார்த்தைகள்.

"அப்பா என்னை ஸ்கூலுக்கு யார் கொண்டு விடுவாங்க?" குழந்தை கேட்டது.

"உன் தாத்தா..."

அவ்வளவுதான். படபடத்து மனைவி மேல் உள்ள கோபத்தில் ஒரே உதையில் கிளம்பிய ஸ்கூட்டர் அலுவலக வாசலில்தான் நின்றது.

"சார்..."

ப்யூன் கொண்டு வைத்த காப்பி சூடாய் இறங்க, தெம்பு வந்தாற்போலிருந்தது.

காலையில் காயப்போட்ட வயிறு, மாவு மிஷினாய் இரைந்தது.

சுயபச்சாதாபம் பற்றிக் கொண்டது. அழலாம் என்றால் கூட உரிமையில்லாமல் போய்விட்டது போலிருந்தது.

'அகம்பாவம், சம்பாதிக்கறோம்கற திமிரு... வீட்டுக்குள்ள இனி நுழையவே கூடாது' திடமாய் முடிவெடுத்தான் ராகவன்.

ப்யூனைக் கூப்பிட்டான்.

"தலைவலி ஜாஸ்தியா இருக்கு... இன்னொரு காப்பி வேணும்."

"சார், உங்களுக்கு அஸிடிடி. ஏன் காப்பி குடிக்கறீங்க" என்ற ஆறுமுகத்திற்கு பதில் சொல்ல விருப்பமில்லை.

யார் யாருக்கோ தன்மேல் அக்கறை. ஆனால் மனைவியைப் பொறுத்தவரை தான் எப்படிப் போனால் என்ன என்ற எண்ணம்.

அவள் வீட்டில் இருப்பாளா? ஃபோன் செய்து இன்று வர மாட்டேன் என்று சொன்னால் என்ன என்று குழந்தைத்தனமாய் தோன்றிய எண்ணத்தை விலக்கிக் கொண்டான்.

படபடப்பில் வியர்த்தது. சட்டைப் பாக்கட்டில் கையைவிட்டு கர்சீப்பை எடுத்தபோது ஒரு பேப்பர் விழுந்தது. ப்ரிஸ்க்ருப்ஷன்.

மாத்திரை எடுத்துவர மறந்து போயிருந்தது.

'ஆமாம் மாத்திரை சாப்பிட்டு ஆகப்போவது என்ன?' என்று முணுமுணுத்த ராகவனை "என்ன ஸார் கூப்டிங்களா?" என்றான் ப்யூன்.

'செவுத்துக்குக்கூட காது.'

எரிச்சல் மண்டியது மனசுக்குள்.

நேரம் நகர்ந்தது. பசி வயிற்றைக் கிள்ளியது. மாத்திரை சாப்பிடாமல் சாப்பாடு சாப்பிட முடியாது. தலைவேதனை பிடித்த வியாதி இந்த அஸிடிடி.

"சார்... உங்க கேரியர் இன்னிக்கு சீக்கிரமே வந்துடுச்சு." ப்யூன் காரியரை ராகவன் முன்வைத்தான்.

கேரியரைத் திறந்தான் ராகவன்.

முதல் தட்டில் ஒரு சின்ன 'ஸ்லிப்' இருந்தது.

'சாப்பாட்டிற்கு ஒரு மணி நேரம் முன்னே இந்த மாத்திரையைச் சாப்பிடவும்.' மனைவியின் குண்டு குண்டான கையெழுத்தில்.

திருமாமகள்

# பாலம்



• 'தமிழ் நாட்டுச் சிற்பங்கள்'- எழுதியவர் இராஜேஸ்வரி. ஒரு பிரதி விலைக்கு அல்லது நகல் எடுத்துக் கொள்ள தேவை.

*எஸ்.வி.நாதன்,*
*172, A, பாஸ்கர் காலனி*
*விருகம்பாக்கம், சென்னை - 92.*

• வீட்டில் தேனீ வளர்க்க விருப்பம். கூடு தயார். அனுபவம் உண்டு. ராணி ஈயுடன் ஒரு காலனி யாராவது கொடுத்து உதவ முடியுமா?

*கே. சுப்பிரமணியன்,*
*12, நியூ விநாயகர் தெரு,*
*ஏ.ஜி.எஸ். காலனி, 'B' பிளாக்,*
*நங்கநல்லூர், சென்னை - 61.*

• 'லாரன்ஸ் பீட்டர்' எழுதிய "பீட்டர் பிரின்ஸிபிள்" புத்தகம் தேவை. புத்தகத்தின் நிலை, விலை குறித்து எழுதவும்.

*ந. தர்மேசுவரன்,*
*332/2 C.F. எஸ்டேட்,*
*அரவங்காடு - 643 202.*
*நீலகிரி (மாவட்டம்)*

• ஆன்மிக சொற்பொழிவுகள் எங்கு வேண்டுமானாலும் இலவசமாக நிகழ்த்தத் தயாராக இருக்கிறேன். தொடர்பு கொள்ள முகவரி:

*B. சுப்பிரமணியன்,*
*106, P.V. கோவில் வீதி,*
*உடுமலைப்பட்டை*
*- 642 126.*

• டெக்ஸ்டைல் டிப்ளமாவுக்கான பாடங்களுக்கு விரிவான "நோட்ஸ்" இருக்கின்றன. தேவைப்படுவோர் தொடர்பு கொள்ளவும்.

*B.S.கிருஷ்ணமூர்த்தி,*
*47, DGI லே அவுட்,*
*கொட்டிவாக்கம், சென்னை - 600 041.*

• "சிதம்பரனார் மாவட்ட சிந்தனைச் சிற்பிகள்" என்ற நூல் வெளியிட உத்தேசம். சிதம்பரனார் மாவட்ட இலக்கியவாதிகள் தொடர்பு கொள்ளவும்.

*வேடப்பட்டி கற்குவேல்*
*2/71A, காமராஜர் தெரு,*
*வி. வேடப்பட்டி (அ)*
*விளாத்திக்குளம் - 628 907.*

• ரிக் வேதத்துக்கு "வில்சன்" அல்லது "கிரிஃபித்" எழுதிய ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்கள் வைத்திருப்போர் விலைக்கோ அல்லது இலவசமாகவோ கொடுத்து உதவவும்.

*ராஜகோபாலன்,*
*13, அலமேலுமங்காபுரம்,*
*மயிலாப்பூர்,*
*சென்னை - 4.*

• பல்வேறு அளவுகளில் தபால் உறைகள், காரியாலயங்களுக்காகத் தயாரிக்க, அதற்குரிய இயந்திரங்கள் தேவைப்படுகின்றன. இயந்திரத் தயாரிப்பாளர் முகவரிகள் தேவை.

*எம். ஏ. பிரபாகர்,*
*8/13, துபாஷ் தெரு,*
*மயிலாடுதுறை - 609 001.*

• General Studies-Solved Papers (85-95) தில்லான் குரூப் வெளியீடு நூல் தேவை. நூலின் விலையும் தபால் செலவும் ஏற்கிறேன்.

*டி.வி. எஸ். பாலு*
*சித்தமல்லி (அ)*
*மன்னார்குடி (வ) 614 705.*

• பூச்சி கொல்லி இராசயனப் பொருள்கள் சேர்க்காமல், மூலிகைப் பொருட்களைக் கொண்டே கொசு விரட்டி வத்திகள் தயாரிக்கலாம். இதற்கான தொழில் நுட்பம் வேண்டுவோர் அணுகவும்.

*சி.ஆர். லட்சுமிநரசிம்மன்,*
*பேராசிரியர், மண்ணியல்துறை, வேளாண்மைக் கல்லூரி,*
*மதுரை - 625 104.*

• தினமணி முன்னாள் ஆசிரியர் ஏ.என்.சிவராமன் எழுதிய 'விகிதாசார வாக்குரிமை', ஆனைமுத்து எழுதிய 'பெரியார் சிந்தனைகள்' ஆகிய நூல்கள் இருந்தால் தொடர்பு கொள்ளவும்.

*கே.எஸ். இராதாகிருஷ்ணன்,*
*14, சுங்குராம தெரு,*
*சென்னை - 600 001.*

• எனது பிறந்த பதிவு எடுக்க வேண்டும். பூனாவில் உள்ள யாரேனும் உதவ முடியுமானால் தொடர்பு கொள்ளவும். ஹவேலி தாலுக்காவில் ஒரு கிராம பஞ்சாயத்துத் தலைவரை அணுக வேண்டியிருக்கும்.

*எஸ். ரமேஷ்,*
*20, பெருமாள் முதலி தெரு,*
*அண்ணாசாலை, சென்னை - 2.*

• காளான் வளர்ப்பு பற்றி இலவசமாக நோட்ஸ் அனுப்பி உதவுகிறேன். சுயதொழில் செய்ய விரும்புவோர் எழுதவும்.

*B. முரளி,*
*2, நாலாவது தெரு, (மேற்கு)*
*வித்யாநகர், சேலம் - 636 003.*

**(பாலம் பகுதி மூலம் தொடர்பு கொள்ளும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது. —ஆர்)**

# மாலை மயங்குகின்ற நேரம்

1

திருமண மண்டபம் களைகட்டி யிருந்தது. எங்கு பார்த்தாலும் வண்ண ஒளி விளக்குகளும் இடையே நேர்த்தியாகப் பின்னிப் பிணைந்த மலர் அலங்காரமும் மாவிலையும் தோரணமும்...

சித்தி யசோதாவின் கைவண்ணம்தான். இது போல அலங்கார விஷயங்களில் சித்தி கெட்டிக்காரி என்பது உதயரேகா ஏற்கெனவே அறிந்த விஷயம்தான். தனக்குத் திருப்தியாகும் வரை, 'இப்படிச் செய்; மாற்று; அப்படிச் செய்' என்று வேலையாட்களை விட மாட்டாள். இப்போது இன்னமும் அதிக சிரத்தை தெரிந்தது... பாவம்தான்.

சித்தியிடம் சொல்லாமலே விட்டிருந்திருக்கலாமா என்று தோன்றியது. நாலு ஆண்டுகளாக உள்ளே பூட்டி வைத்திருந்ததுதானே? கடைசி வரை அப்படியே இருந்து விட்டிருக்கலாம். ஆனால் இனி இந்த மாதிரி நினைப்பது முட்டாள்தனம். 'எண்ணித் துணிக கருமம்; துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கு' என்று அன்றைக்கே வள்ளுவர் சொல்லி விட்டார். சொல்வதற்கு முன் யோசித்திருக்க வேண்டும். சொன்ன பிறகு இப்படி நினைத்துப் பார்ப்பது வீண்.

வெளியே வெடிச் சத்தம் கேட்டது. ஒரு புறத்து வாயில் வழியே ஒளிச் சிதறல்களாக வாண வேடிக்கை வானத்தைப் பிரகாசப்படுத்திக் கொண்டு இருப்பது தெரிந்தது. மாப்பிள்ளை ஊர்வலம் மண்டபத்தை நெருங்கி விட்டது. இனி இங்கே நின்று, வருகிறவர்கள் கண்ணில் பட்டுக் கொண்டிருக்கக் கூடாது. திருமணப் பெண்ணாய், லட்சணமாய் இருக்க வேண்டும். சித்தியின் உத்தரவு.

திருமண ஹாலின் அலங்காரங்களைக் கண்டு ரசித்துக் கொண்டு இருந்த உதயரேகாவுக்கு, அங்கிருந்து மடமடவென்று கல்யாணப் பெண்ணின் அறைக்குள் சென்று அங்கே அவளுக்கென்று போடப்பட்டிருந்த நாற்காலியில் பதவிசாய் அமர்ந்த போது உள்ளூரச் சிரிப்பு துள்ளாட்டம் போட்டது. அடக்கிக் கொண்டு, வருங்கால உறவினர்களை எதிர்நோக்கிக் காத்திருந்தாள்.

அவர்களில், இந்தப் 'பட்டுக் கட்டு'கிற விழா முக்கியமானது. பல்வகைச் சீர்ப் பொருட்களுடன், விலை உயர்ந்த ஜரி கைச் சேலை ஒன்றை மாப்பிள்ளை வீட்டார் கொண்டு வருவார்கள். அதை நாத்தனார் கையால் பெண்ணிடம் கொடுத்து உடுத்திக் கொள்ளச் சொல்வார்கள். அந்தப் பட்டுச் சேலை அணிந்ததும் அவளுக்கு நலுங்கு சுற்றுவார்கள். நெருங்கிய உறவினர் மட்டுமே கலந்து கொள்ளும் இந்த வைபவம் கிட்டத்தட்ட பாதித் திருமணம் போலக் கருதப்படும்.

நலுங்கு சுற்றி, விருந்து முடிந்து, அவரவர் இடங்களில் எல்லாரும் முடங்கியபின் யசோதா, மகளிடம் வந்தாள்.

சற்று நேரம் கேள்வியாய் அவளை நோக்கிவிட்டு, "ஏண்டி? ஏன்? ஏன் இந்தப் பிடிவாதம்? மாப்பிள்ளை நன்றாக இல்லை என்று சொல்லவில்லை. நல்ல உயரமும், செதுக்கினாற்போல அவயவங்களுமாக பார்வைக்குப் பிரமாதம்தான். ஆனால் குணம்? இல்லாத தப்பே இல்லை போலத் தெரிகிறதே! இவரைத்தான் மணப்பது என்று என்ன பிடிவாதம்? உன் பேர் கெட்டு விட்டது, அது இது என்று ஏதானும் சொல்லாதே. மற்றவர்கள் ஒன்று சொல்வார்கள் என்று அதற்காக எதையும் செய்கிறவள் நீ இல்லை என்பது எனக்கு நன்றாகவே தெரியும். பின் ஏன்?" என்று கேட்டாள்.

லேசாகத் தலையைச் சரித்து, சிற்றன்னையை நோக்கினாள் உதயரேகா. "உங்களுக்குச் சரியான பதிலே போல ஒரு கதை படித்தேன், சித்தி. சொல்லட்டுமா? ஒரு பெண் – சுமாராக அழகான, உற்சாகமான, நாகரீகமான, இளமையான... கிட்டத்தட்ட என்னைப் போலப் பெண் என்று வையுங்களேன். அவள் ஒரு துப்பறியும் நிபுணரிடம் வந்தாளாம். ஓர் இளவயதுப் பையன் படத்தை அவரிடம் கொடுத்தாளாம். 'பாருங்கள் சார், இவரோடு எனக்குத் திருமணம் நிச்சயமாகி இருக்கிறது. இவரைப் பற்றிய முழு விவரங்களும் எனக்கு வேண்டும்' என்றாளாம். நிபுணர் கொஞ்சம் வயதானவர். இவள் வயதில் அவருக்கு ஒரு பெண்



உண்டாம். 'கெட்டிக்காரி; இந்த மாதிரி
முன்னெச்சரிக்கை எத்தனை பெண்களுக்கு
இருக்கிறது' என்று உள்ளூர சிலாகித்து விட்டு,
அலையோ அலை என்று அலைந்து திரிந்து
பிள்ளையாண்டானைப் பற்றிய விவரங்கள்
அத்தனையும் சேகரித்தாராம். கடைசியில் மனி
தருக்கு மனசே சரியில்லாமல் போயிற்றாம்.
காரணம், பையனுக்கு இல்லாத கெட்ட பழக்
கங்களே உலகத்தில் – இப்போது சொன்னீர்
களே – அது போல, இல்லாத தப்பே இல்லை
யாம். சிகரெட், குடி, அப்புறம்... அந்த இன்
னொன்று'' என்று கண்சிமிட்டி
விட்டு மேலே தொடர்ந்து
சொன்னாள் : ''சொன்ன
நாளில் பெண் வந்தாளாம்.
இவருக்கு வருத்தம் தாங்க
வில்லை! எனக்குப் பணம்
எதுவும் வேண்டாம்மா.
உனக்கு ஒரு நல்ல சேதி
கூட என்னால் தர முடிய
வில்லை என்று எல்லாம்
விலாவாரியாக எடுத்துச்
சொன்னாராம். சொல்லி
விட்டு, 'ரொம்ப சாரிம்மா'
என்றாராம். ஆனால்,
அவளானால் முப்பத்தி
யிரண்டு பல்லையும் காட்
டிப் பளிச்சென்று சிரித்தா
ளாம். 'வருத்தமா? எதற்கு?



எனக்கு இப்போதுதான் சார் உண்மை
யிலேயே மகிழ்ச்சி. எங்கே, ஒன்றும் தெரியாத
ஒரு மக்கு, மண்ணாந்தைக்குப் போய் என்
னைக் கட்டி வைத்து விடுவார்களோ என்று
பயந்து கொண்டிருந்தேன். அப்பாடி! இப்
போதுதான் மனம் நிம்மதியாயிற்று' என்று,
இரு மடங்குப் பணத்தை எடுத்து வைத்து விட்
டுத் துள்ளிக் கொண்டு கிளம்பினாளாம். ம்ம்...
ஏதேனும் புரிகிறதா?''

''புரிகிறது புரிகிறது. ஏதோ நன்றாகத்தான்
வளர்த்திருக்கிறோம் என்று இதுவரை நினைத்
திருந்தேன். ஆனால், உள்ளே மறை ஒன்று
கழன்று கிடப்பது இப்போதுதான் தெரிகிறது''
என்றாள் யசோதா, ஏளனமும் வருத்தமுமாக.

கலகலவென்று உதயாவின் சிரிப்புதான்
அவளுக்குப் பதிலாகக் கிடைத்தது.

பெருமூச்சுடன் யசோதா கிளம்புகையில்,
''அண்ணீ'' என்று மாப்பிள்ளை கிருஷ்ணசந்திர
னுடைய தங்கை வசுமதி தலையை நீட்டினாள்.
''இந்த அண்ணனைப் பாருங்கள். ராத்திரி என்
றாலும் இந்தக் கடிதத்தை அண்ணியிடம்
கொடுத்து விட்டுத்தான் தூங்க வேண்டும்
என்று விரட்டி விட்டார்!'' என்று யசோதா
விடம் கிறங்கிய வண்ணம், ஒரு காகித
உறையை உதயரேகாவிடம் நீட்டினாள்.

கடிதத்தைப் பிரித்துப் படிப்பதில் உதய
ரேகா ஆர்வம் காட்டவில்லை. அதை விடுத்து,



வருங்கால நாத்தனாரிடம், "உனக்குச் சேலை அழகாக இருந்தது, வசு. அந்த மயில்கழுத்து நிறம் பிரமாதம்" என்று சற்றுமுன் அவள் கட்டியிருந்த பட்டுச் சேலை பற்றிப் பேசலானாள்.

வசுமதிக்கு உச்சிகுளிர்ந்து விட்டது. "நல்...ல கலர், இல்லை? உங்களுக்கும் அது போல நிறம் வாங்கலாம் என்று பார்த்தால் அம்மா கூடாது என்று விட்டார்கள். கல்யாணம் சம்பந்தப்பட்ட எதிலும் நீலம், கறுப்பு இரண்டும் இருக்கவே கூடாதாமே! ஆனால் அந்த 'மஜந்தா' கலரில் ஜொலித்தீர்கள் அண்ணி! என்னால் கண்ணைத் தட்டி விழிக்கக் கூட முடியவில்லை. அவ்வளவு அழகாக இருந்தீர்கள்!" என்று பதிலுக்குப் பாராட்டி விட்டு, உதயரேகாவின் கையைப் பற்றி, "நீங்கள் என் அண்ணியாக வருவது எனக்கு எவ்வளவு சந்தோஷம் என்று தெரியுமில்லையா, உதயா?" என்று ஆர்வத்தோடு கூறிப் பற்றியிருந்த கையில் முத்தமிட்டாள்.

இந்த மகிழ்ச்சி விரைவில் இன்னமும் பல மடங்கு அதிகமாகப் போவது இவளுக்கு இப்போது தெரியாது என்று எண்ணுகையில் மீண்டும் உதயாவுக்குள் குதூகலம் குமிழியிட்டது. சொல்லப் போனால், பெருமளவு அதற்காகத்தானே இந்தத் திருமணமே!

எண்ணியதைச் சொல்லாமல், "இவ்வளவு நல்ல நாத்தனார் கிடைத்ததற்கு நான்தான் அதிகமாய் சந்தோஷப்பட வேண்டும். தெரியுமா?" என்று வசுமதியின் கன்னத்தை வருடி முறுவலித்தாள் அவள்.

"மச்சானும் மச்சானும் ஒருவருக்கொருவர் மாலை போட்டுக் கொள்வது போல என்று ஒரு வாசகம் சொல்வார்கள். அது போல, இப்படி ஒருவரை ஒருவர் பாராட்டிக் கொண்டே இரவு முழுவதும் இருந்து விடாதீர்கள். தூக்கம் கெட்டுப் போனால், இந்த ஜொலிப்பு, அழகெல்லாம் நாளைக்குக் காணாமல் போய் விடும். நீ போய்த் தூங்கம்மா. உதி, நீயும் படு" என்றாள் யசோதா.

"கரெக்ட்... அ.. அத்தைதானே? எங்கள் அம்மாவும் அப்படித்தான் சொல்லி அனுப்பினார்கள். அரட்டை அடித்து அண்ணி தூக்கத்தைக் கெடுக்காதே என்றார்கள்..." என்று துள்ளி எழுந்த வசுமதி, "வரட்டுமா, அத்தை? பைபை அண்ணி!" என்று குதித்தோடிப் போனாள்.

அவள் கண் மறையும் வரை பார்த்திருந்து விட்டு, "நல்ல பெண், இல்லையா சித்தி?" என்றாள் உதயரேகா.

"ம். ஆனால் உன்னைப் போல இல்லாமல் தாயார் சொல்லைக் கேட்கிறவளாக இருக்கிறாள்.." என்றவள் உதயா சிரிக்கவும், "ஆமாம், சிரித்துக் கொள்! இப்போது கடிதத்தைப் படிக்கப் போகிறாயா இல்லையா?" என்று வினவி




Insync Comm./127/95



"அதோ போறாரே... அவரும் 69 பர்சன்ட் இடஒதுக்கீட்டுக் கொள்கையால ரொம்பவும் பாதிக்கப்பட்டவருங்க!"

"ஏன் அவருக்குக் காலேஜில இடம் கிடைக்கல்லியா?"

"அப்படி இல்லீங்க... வக்கீலை அடிச்ச கேஸில சி.பி.ஐ. இவரையும் தேடிக்கிட்டிருக்காம்!"

– எல். வித்யா

---

னாள். "எதற்கும் சீக்கிரம் பிரித்துப் படி."

"ஏன் சித்தி, என்ன அவசரம்?"

"அவசரமா?" ஒரு பெருமூச்சு விட்டு, "ஏதாவது முக்கியமான சமாசாரமாய் இருக்கப் போகிறதோ என்றுதான்... உதிம்மா, உன்னிடம் ஒன்று சொல்லியாக வேண்டும். மாப்பிள்ளை முகத்தில் சிரிப்பே இல்லை, என்ன கோபமோ என்று அப்பா சொல்லிக் கொண்டிருந்தார். ஆலம் சுற்றுகிற போது அவர் 'உர்'ரென்று இருந்ததைப் பார்த்து பானுக்குட்டி கூடப் பயந்துட்டாளாம். ஆனால் பாரேன், ஆரத்தித் தட்டில் அவர் ஒரு பவுன் காசை வைக்கவும் கழுதைக்கு ஒரே கொண்டாட்டம் ஆகி விட்டது! அந்த ஒரு சவரனுக்கு இதை வாங்கப் போகிறேன், அதை வாங்கப் போகிறேன் என்று ஏதோ காணாததைக் கண்ட மாதிரி அந்தக் குதி குதிக்கிறாள்!" என்று சின்ன மகளைச் செல்லமாக வைதவள், தொடர்பு அறுந்து விடாமல் மீண்டும் பழைய விஷயத்துக்கு வந்தாள். "காலை வரை பொறுக்காமல் இவ்வளவு அவசரமாக அனுப்பி இருக்கிறாரே, ஒரு வேளை... ஒருவேளை..."

"ஒருவேளை, திருமணத்தை நிறுத்தி விடும்படி எழுதியிருக்கிறாரோ என்று ஆ..சையாக எதிர்பார்க்கிறீர்களா, சித்தி? வாய்ப்பே கிடையாது!" என்று நகைத்தாள் உதயரேகா.

முகம் சுருங்க, "ஆமாம்... உன் வாயில் நல்ல வார்த்தை வந்துதான் ஒரு மாதம் ஆகிறதே! என்னவோ, உன் வாழ்வு, உன் விருப்பம்" என்று எரிச்சலாய் மொழிந்து விட்டு வெளியே சென்றாள் யசோதா.

அங்கலாய்ப்புடன் செல்லும் யசோதையை அழைத்துச் சமாதானப்படுத்தலாமா என்ற எண்ணம் உதயரேகாவுக்குத் தோன்றி உடனே மறைந்தது.

ஆதியோடந்தம் அத்தனையும் சொல்லாமல் சித்திக்கு – சித்திக்கு மட்டும் என்ன, யாருக்குமே புரியாது. எல்லாம் விலாவாரியாக விளக்கிக் கொண்டிருக்க இப்போது நேரம் இல்லை என்பதோடு, விளக்கினாலும் சித்தி அதை ஒத்துக் கொள்வாளா என்பதும் சந்தேகமே. ஒத்துக் கொள்ளாவிட்டால் விவாதங்கள் வேறு நடத்தியாக நேரும். இப்போதானால் அடுத்தடுத்து வேலைகளில் ஈடுபடும் போது அவளுக்கு இந்த எரிச்சல் தானாக மறந்து, மறைந்து விடக்கூடும்.

உதயாவின் ஊகம் சரியே போல, மணவறையை அலங்கரித்துக் கொண்டு இருந்தவர்களிடம் சென்று, தொங்க விடப்பட்டுக் கொண்டிருந்த மலர்ச்சரங்களைக் காட்டி யசோதா ஏதோ கூறுவது தெரிந்தது. நிம்மதியற்றவளாக உதயா கடிதத்தைப் பிரித்துப் பார்த்தாள்.

கிட்டத்தட்ட அவள் எதிர்பார்த்த சமாசாரம்தான். 'இன்னமும் காலம் கடந்து விடவில்லை. தயவுசெய்து பிழைத்துக் கொள்ள முயற்சி செய்.'

வெகு சுருக்கம்! வலப்புறமாய் லேசான சாய்வுடன் கூடிய தெளிவான எழுத்துக்கள்.

அப்படி என்ன அச்சம் அவனுக்கு, சுதந்தரம் பறிபோய் விடும் என்று பயப்படுகிறானா? இஷ்டம் போல ஆடிக் கொண்டு இருக்கிறானே! இனி, இதற்கெல்லாம் இடம் இராமல், கல்யாணம் அவன் காலைக் கட்டி விடுமோ என்ற கலக்கம்! படட்டும். அதற்காகத் தானே அவளும் இந்தப் பாடுபட்டிருக்கிறாள்! உரிமையோடு தட்டிக் கேட்கப் போகிறாளே!

இந்தப் பயமே ஓர் ஆரோக்கியமான விஷயமாய்த் தோன்றவும், இளம் புன்னகையோடு, கடித்தை சிறு துணுக்குகளாகக் கிழித்துக் குப்பைக் கூடைக்குள் போட்டாள்.

மறுநாள், பட்டாடையும் நகைகளுமாகத் தகதகத்தபடி, மணமேடையை வலம் வந்து, கிருஷ்ணசந்திரனின் அருகில் எழிலே வடிவாய் அமர்ந்த போதும் அவள் முகத்தில் அதே முறுவல்தான்.

ஆனால் கிருஷ்ணசந்திரனின் முகம் கடுத்திருப்பதை, மேடையைச் சுற்றிக் கொண்டு வந்தபோதே, கீழ்க் கண் பார்வையில் கண்டு கொண்டவள், அவன் அருகே அமர்ந்ததும், நெற்றிச் சுட்டியைச் சரிசெய்யும் பாவனையில் லேசாக முகம் மறைத்து, "கொஞ்சம் முகத்தைச் சிரித்தாற்போல வைத்துக் கொள்ளுங்களேன். இல்லாவிட்டால் அப்புறமாய் வீடியோ, ஃபோட்டோ பார்க்கும் போது சகிக்காது!" என்று அவன் காதுக்கு மட்டும் கேட்கும் படியான மெல்லிய குரலில், தெளிவாக உச்சரித்து முணுமுணுத்தாள்.

கிருஷ்ணசந்திரனும் ஏதோ சொல்லத் துடித்துக் கொண்டுதான் இருந்தவன் போல,

கைக்குட்டையால் வேர்வை துடைப்பவன் போல நடித்து, மற்றவர் அறியாமல், "பைத்தியமா உனக்கு? இப்போது – இந்த வினாடி கூட இந்த விலங்கிலிருந்து நீ தப்பிக்க முடியும். என் மேல், நீ எந்தப் பழி சுமத்தினாலும் மறுக்காமல் ஏற்றுக் கொள்கிறேன். கடைசி வாய்ப்பையும் வீணாக்கி விடாதே" என்று தணிவான குரலில் வேகமாக உரைத்தான்.

மகளின் முன்புறக் கொசுவத்தை அழகுறப் படிய வைத்தபடி, "மூன்று கோணங்களில் வீடியோ எடுக்கிறார்கள், உதி. ஒன்றில்லா விட்டால் ஒன்றில் விழுந்து விடும். உங்கள் பேச்சைப் பிறகு வைத்துக் கொள்ளக் கூடாதா?" என்று மென்குரலில் யசோதா எச்சரிக்கவும், அதற்கு மேல் மணமக்கள் இருவருக்கும் இடையே அமைதி நிலவியது.

கெட்டிமேளம் முழங்க, கிருஷ்ணசந்திரன் உதயரேகாவின் கழுத்தில் தாலியை அணிவித்த போது, இந்தத் திருமணத்தின் காரணமான தன் கோரிக்கை நிறைவேறுவதோடு, தங்கள் வாழ்க்கையும் நல்லவிதமாக அமைய வேண்டும் என்று உதயா இறைவனிடம் வேண்டிக் கொண்டாள்.

**மா**லை வரவேற்பிற்கான அலங்காரங்களைக் களைந்து, கூந்தலைத் தளரப் பின்னி, மென்மையான மைசூர்ப் பட்டணிந்து, கணவன் இருந்த தனியறைக்குள் சென்ற போது, அவன் மற்றதை எல்லாம் மறந்து, ஓடிவந்து அவளை அணைத்துக் கொள்வான் என்று உதயா எதிர்பார்க்கவும் இல்லை.

ஏனவே, மார்பின் குறுக்காகக் கைகளைக் கட்டிக் கொண்டு, ஒரு சிலை போல அசையாமல் நின்று, கிருஷ்ணசந்திரன் அவளை வெறித்து நோக்கிய போது, அவள் கலங்கி விடவில்லை. மாறாக, அவன் என்னென்ன கேட்கக்கூடும், அதற்கு எப்படி எப்படிப் பதில் சொல்வது என்று மனத்தினுள் ஒத்திகை நடத்தியபடி, அவளும் அசையாமலே அவனை எதிர்நோக்கி நின்றாள்.

ஆனால், வாதப் பிரதிவாதங்களுக்கு இடம் கொடாமலே கிருஷ்ணசந்திரன் தீர்ப்பு வழங்கத் தொடங்கி விட்டான். "இதோ பாரம்மா, நான் சொல்வதைக் கவனித்து அதன்படி..." என்று அவன் தொடங்கிய தோரணை பிடிக்காமல், "என் பெயர் உதயரேகா" என்று குறுக்கிட்டாள் உதயா.

சலனமற்று, "நல்லது, உதயரேகா, கவனி. இந்தத் திருமணம் ஒரு பெரும் பிழை. எப்படி, என்ன என்று அதை நான் விளக்கப் போவது இல்லை. ஆனால், இதற்காக உன் வாழ்நாள் முழுவதும் வருத்தப்படப் போகிறாய் என்பதும் எனக்கு மிக நன்றாகவே தெரியும். நீ எப்படி எண்ணியிருந்தாலும் சரி. என்னைப் பொறுத்தவரையிலும் இது திருமணம் அல்ல. நீ என் மனைவியும் அல்ல. இந்த அடிப்படை உண்மையை மனதில் வைத்து, மேற்கொண்டு நீ நடந்து கொள்ள வேண்டும். இப்போது சொல். எப்படித் தூங்குவது உனக்கு வசதி?" என்று தெளிவும் திருத்தமுமாகப் பேசி முடித்தான்.

'உன் அணைப்பில்' என்று பதில் சொன்னால் என்ன பண்ணுவான் என்று எண்ணியபடி, கட்டிலில் இருந்து ஒரு தலையணையை எடுத்துத் தரையில் கட்டிலுக்குச் சற்றுத் தூரத்திலேயே போட்டாள் உதயா. ஒரு போர்வையும் அத்தோடு இணைந்தது.

கட்டிலில் படுத்துக் கொள்ள ஆயத்தம் செய்த கணவனை ஓரக்கண்ணால் பார்த்தபடி போர்வையைத் தரையில் விரித்த போது, படுகவர்ச்சியாக ஒரு 'போஸ்' கொடுத்துப் படுத்தால் என்ன என்று உதயாவுக்கு யோசனை தோன்றியது.

கிருஷ்ணசந்திரன் ஒன்றும் முற்றும் துறந்த முனிவன் அல்ல. அவளையே முன்பு ஆர்வத்துடன் நோக்கியவனும் கூட...

ஆனாலும் அது அவளுக்குப் பிடிக்கவில்லை. முதலில் கிருஷ்ணசந்திரன் அவளை மனதில் ஏற்க வேண்டும். வெறும் உணர்ச்சிகளைத் தூண்டி விட்டுப் பெறுகிற வெற்றி கீழ்த்தரமானது. அது அவளுக்குத் தேவையில்லை.

கட்டியிருந்த சேலையை இழுத்து, கழுத்துக்குக் கீழே எந்த பாகமும் தெரியாதபடி, இழுத்து மூடிக் கொண்டு, சுருண்டு படுத்தாள் உதயரேகா.

(தொடரும்)



"நீங்க எழுதின நாவலைப் புத்தகமாப் போடலாமான்னு கேட்கிறதுக்கு பப்ளிஷர்கிட்டே போயிருந்தீங்களே, என்ன ஆச்சு...?"

"ராயல்டி எவ்வளவு கொடுப்பீங்கன்னு கேட்கிறார்...!"

– பெ. கலாசாமி

# கே.ஜி. ஸ்ரீதுரை

எதிர்பாராத தருணத்தில், எதிர்பாராத ஓர் இடத்தில் அந்தக் கடிதம் என் பார்வையில் பட்டது.

படிக்கப் படிக்க என் உடம்பில் திகிலின் டிகிரி கூடியது!

"ஏம்ப்பா சுப்ரமணி! இந்த அப்ளிகேஷன் எப்படி உன் மேஜைக்கு வந்தது?" என்றேன் பரபரப்பு குறையாமல்.

எழுந்து போய்ப் புகையிலையை ஜன்னலுக்கு வெளியே துப்பிவிட்டுச் சாவகாசமாகத் திரும்பி வந்து உட்கார்ந்த சுப்ரமணி, "போன மாசமே லெட்டர்ஸ் செக்ஷனில் இருந்து வந்தது. யாரோ நாகவள்ளீங்கற பெண்ணுக்கு டிரான்ஸ்ஃபர் வேண்டாமாம். அதே ஊரிலேயே இருக்கணுமாம். நடவடிக்கை ஃபைலிலே போட்டுட்டேன். என் செக்ஷன் சம்பந்தப்படாத விஷயம். என்ன நடவடிக்கை எடுக்கிறதுன்னு தெரியலே. அப்பிடியே விட்டுட்டேன்... ஹ்ற.... ஹ்ற..." என்று சொல்லிக் காவிக் கறைப் பற்களைப் பரப்பி எக்காளமாய்ச் சிரித்தவனின் வாயை அறைந்து சாத்த வேண்டும் போல் தோன்றியது.

# இரக்கமுள்ள பந்தங்கள்

பிரச்னையின் தீவிரத்தைப் பற்றி இவனுக்கென்ன தெரியும்? எண்ணற்ற சர்க்கார் ஆபீஸ் நாற்காலிகளில் ஒன்றைத் தேய்மானப்படுத்தி, புகையிலையும் சீட்டாட்டமுமே தன் வாழ்க்கைப் பயணமாய் வாழும் பதர்.

பாவம் அந்த நாகவள்ளி!

இடமாறுதல் விவகாரங்களை கவனிக்கும் என் செக்ஷனில் இருந்து இன்று காலையில் தான் மாற்றல் உத்தரவு தயாரிக்கப்பட்டு, இயக்குனரின் மேஜையில் குட்டித்தவம் இருக்கிறது – அவரது பச்சைநிறக் கையெழுத்திற்காக.

ஏறத்தாழ நாற்பது பேரின் தலைவிதிகள் நிர்ணயிக்கப்பட்டிருந்த அந்த இடமாற்றல் உத்தரவில் நாகவள்ளியின் பெயரும் உண்டு. விருதுநகரிலிருந்து கோயம்புத்தூர் செல்ல வேண்டும் அவள் – அந்த உத்தரவின்படி.

இப்போதுதான் – மிகத் தாமதமாகத் தெரிகிறது, அவளுக்கு இடமாற்றம் வேண்டாம் என்று.

தீவிர யோசனையில் மூழ்கினேன். இப்போது என்ன செய்யலாம்? அந்தப் பெண்ணுக்கு எப்படியாவது உதவ வேண்டும். ஆபீசரின் கையெழுத்து விழுவதற்குள், அந்த ஆணையில் ஏதேனும் செய்ய வேண்டும்...

நேராக என் நாற்காலிக்குச் செல்லாமல், காண்டீனை நோக்கி நடந்தேன், அந்த நாகவள்ளியின் நினைவுகள் துணைக்கு வர.

பத்துப் பனிரெண்டு வருஷங்களுக்கு முன், திருச்சியில் நான் சீனியர் கிளார்க்காக இருந்த பொழுது, அப்போதுதான் புதிதாய் சர்வீஸில் சேர்ந்திருந்தாள் அந்தப் பெண்.

நாகவள்ளி என்ற பெயர் சற்று நாட்டுப்புறமாய் ஒலித்தாலும், நன்கு படித்த, விவரமான பெண்.

எப்போதும் சுறுசுறுப்பும் கலகலப்பும் சேரச் சுழன்று, தான் வளையவரும் வட்டாரத்தையே பளபளப்பாக்கும் சுபாவம்.

நான்தான் அவளுக்கு ஆபீஸ் நெளிவு சுளிவுகளை எல்லாம் சொல்லிக் கொடுத்தது.

வேலை பார்க்கும் பெண்கள் விடுதி ஒன்றில் தங்கியிருந்த நாகவள்ளி, மாதம் ஒரு முறையேனும் என் வீட்டுக்கு வருவதுண்டு. என் மனைவியை "அண்ணி! அண்ணி!" என்று அழைத்தபடியே, என் குழந்தைகளையும் கொஞ்சிக் குஷிப்படுத்தி விட்டு –

"வர்றேன் சார்! அண்ணி வரேன்! ஹேய் குட்டிப் பிசாசுகளா! அத்தைக்கு முத்தம் கொடுங்கப்பா!" என்று என் குழந்தைகளை அள்ளிக் கொஞ்சி விட்டுக் கிளம்பிய பின்

ன்றும் கூட அவளது வரவின் வாசனை – அவளது அடுத்த வருகை வரைக்கும் என் குடும்பத்தில் அனைவரையும் கிறங்கடித்துக் கொண்டிருக்கும்.

திருச்சி வாசத்திற்குப் பிறகு நான் விழுப்புரம், திருவண்ணாமலை, காஞ்சீபுரம் என்று தமிழக 'மேப்'பில் இருக்கும் ஊர்கள் எல்லாம் அதனதன் இடத்தில் ஒழுங்காக இருக்கிறதா என்று ஊர்ஜிதம் செய்து கொண்டு, இதோ சென்னையில், எங்கள் தலைமையகத்தில் ஒரு நாற்காலியில் மூட்டைப் பூச்சிகளுடன் சக வாழ்வு



நடத்திக் கொண்டிருக்கிறேன்.

திருச்சியிலிருந்து நான் கிளம்புகையில், நாகவள்ளியிடம் "மறக்காமல் உன் கல்யாணத்துக்கு என்னையும் கூப்பிடும்மா!" என்று சொன்னதற்கு அதிகமாய் நாணமோ, வேறு எதுவுமோ படாமல், "நீங்கள் இல்லாமல் என் கல்யாணம் நடக்காது சார்! நீங்க வருவதற்குக் கொஞ்சம் லேட்டானாலும் 'கொஞ்சம் பொறுத்துக்குங்க மாப்பிள்ளை சார்! முக்கியமாக ஒருத்தர் வரணும். அப்புறம்தான் நீங்க தாலி கட்டணும். அவர் வரும் வரைக்கு நாம் ஜாலியாக ஒரு டூயட் பாடலாம்'னு சொல்லிடுவேன்!" என்று பளீரெனச் சொல்லிச் சிரித்தாள்.

நமக்கே நட்பு – உறவுப் பராமரிப்பில் சுவாரசியம் நீடிப்பதில்லை. அதிலும் ஆசாமி எதிரில் இருந்தால் ஒரு மாதிரி. கொஞ்சம் தள்ளியிருந்தால் வேறு மாதிரி.

சில அறிமுகங்களை ரயில் சினேகம் என்று சொல்வது கூட ஜாஸ்தியோ என்று தோன்றும் எனக்கு.

திருப்பதியின் ஜரகண்டி நெரிசலில் யதேச்சையாகச் சிரிக்கும் மொட்டைத் தலையருக்கோ, சினிமா டிக்கெட் கியூவில் காலை மிதித்து விட்டு "சாரி!" என்று இளிக்கும் ஜீன்ஸுக்கோ வருடா வருடம் வாழ்த்துச் செய்தியா அனுப்புகிறோம்?

இப்படித்தான் பல அறிமுகங்

## போட்டிக் கதை - 6

களும், நட்புகளும், ஏன் சில உறவுகளே கூட மறக்(கடிக்)கப்படுகின்றன – காலத்தின் வேகத்தில்...

நாகவள்ளியும் கொஞ்சங் கொஞ்சமாக என் நினைவுகளின் ஓரங்களுக்குள் ஒதுங்கினாள்.

நான் போகாமல்தான் அவள் கல்யாணம் நடந்தது.

திருமண அழைப்பிதழ் வந்ததும் போக வேண்டும் என்றுதான் நினைத்தேன். கடைசியில் (மாதக் கடைசி நேரம் வேறு) கல்யாணத்துக்குப் போகாமல் இருக்க எனக்கு ஒரு காரணமும் கிடைத்து – குழந்தைக்கு ஜுரமோ, அல்லது என் சுண்டு விரலில் சுளுக்கோ.

குழந்தைகள் (இப்போது வளர்ந்தவர்கள்) எப்போதாவது "நாகு ஆண்ட்டி ஏம்பா இப்பல்லாம் வருவதேயில்லை?" என்று கேட்கும் அபூர்வ வேளைகளில் ஏதோ சொல்லிச் சமாளிப்பேன்.

"அவள் கல்யாணத்துக்குப் போகாமல் விட்டது அநியாயம்!" என்று மனசின் ஓர் நிழல் மூலையில் எப்போதாவது குரல் எழும்.

அந்த நாகு என்கிற நாகவள்ளியின் விண்ணப்பத்தைத்தான் இன்று நான் பார்த்



**"வாஸ்தவம்! உங்களுக்குப் பத்தரை ராசியான நம்பர். ஆனா, அந்த நம்பர் உள்ள கார் கேட்டா, எப்படிங்க?"**

**— ஆர். வசந்த குமார்**

தேன் - அக்கவுண்ட் செக்ஷன், சுப்பிர மணியன் டேபிளில்.

மதிப்பிற்குரிய ஐயா என்று ஆரம்பித்து, "என் கணவர் விருதுநகரிலேயே ஒரு தனியார் நிறுவனத்தில் பணிபுரிவதாலும், என் குழந்தை கள் இருவரும் இங்கேயே ஒரு பள்ளியில் படித் துக் கொண்டிருப்பதாலும், என்னை இட மாற்றம் செய்யாமல், இங்கேயே நான் தொடர்ந்து பணியாற்ற அனுமதிக்க வேண்டு கிறேன்" என்று முடிந்தது, டிரான்ஸ்ஃபர் உத் தரவு எல்லாம் போட்ட பிறகு வந்த இந்தக் கடிதம்.

"என்ன சார்! காப்பி ஆறிடுச்சே! சூடாக இன்னொரு கப் கொண்டாரவா?" என்று அக் கறையுடன் கேட்ட காண்டீன் பையனின் குரலில் நிலை திரும்பினேன்.

"பரவாயில்லைப்பா! இதுவே போதும்" - சர்சர்ரெனக் காப்பியை உறிஞ்சி விட்டு, காண்ட்டீனை விட்டு வெளியே வந்தேன்.

நேராக ஆபீசரின் அறையை உத்தேசித்து நடந்து சென்றேன்.

ஆபீஸர், போன மாதம்தான் பதவி உயர்ந்து சென்னை வந்தவர். பழையவர் மாதிரி அத்தனை சுமுகம் இல்லை. "குட்மார் னிங்" என்று சொன்னால் கூடத் தலையசைத் துப் புன்னகைக்காமல் செல்லும் மேல்தட்டு ரகம்.

அனுமதி யாசித்துப் பெற்று உள்ளே நுழைந் தேன்.

"சொல்லுங்க!"

"இன்னிக்கு காலையில் டிரான்ஸ்ஃபர் ஆர்டர் ஒண்ணு தயாரிச்சு அனுப்பிச்சேன்..."

"யெஸ்...!" என்றது எதிர் உருவம், தன் மூக்கைத் திருகியபடியே.

"அதிலே ஒரு சின்னத் திருத்தம். இந்தப் பெண்ணுடைய கேஸ்..." என்று நாகவள்ளியின் விண்ணப்பத்தை நீட்டினேன்.

கண்களைக் கடிதத்தின் மேலோட்டி விட்டு - "இதை ஏன் முதலிலேயே பார்க்கலை?" என்று சினம்பொங்கக் கேட்டார்.

"ஸார்! இது தவறுதலாக வேறு ஒரு செக் ஷனில் போய் மாட்டிக் கொண்டு விட்டது. யதேச்சையா நான்..."

"லுக்!" என்று நிறுத்தினார் மேலாண்மை. மௌனித்தேன்.

"இதை என்னால் நம்ப முடியாது. யாரோ உங்களுக்கு வேண்டியவங்களுக்கு ஃபேவர் பண்ணுவதற்காக நீங்க ஏதோ லஞ்சம் வாங்கிக்கிட்டு இப்படிச் செய்யறீங்கன்னு நான் சொல்றேன்!"

நேரடித் தாக்குதல் இது. முகமழிந்ததாய் உணர்ந்தேன். தன்மானம் பாதிக்கப்பட்ட உறுத் தலில் -

நானும் குரல் உயர்த்திப் பேசினேன்.

"சார்! உங்கள் வார்த்தையை அளந்து பேசுங்கள். கண்ட இடத்தில் கைநீட்டுவதும், ஊழல் டெண்டர்கள் விடுவதுமாக இருக்கும் உங்களுக்கு, மத்தவங்களையும் ஊழல்காரனா கத்தான் தெரியும். ஒரு நேர்மையான ஊழி யனை..."

மேலாண்மை எகிறியது.

"ஐ ஸே, கெட்டவுட்! சாயந்திரம் உங்க ளுக்கு மெமோ வரும். உங்கள் நடத்தைக்காக நான் உங்களை சஸ்பெண்ட் பண்ணிடுவேன் - ஜாக்கிரதை!" என்று சொல்லி விட்டு எழுந்து பாத்ரூம் சென்று விட்டார்.

ரணப்பட்ட நெஞ்சுடன் வெளியே வந் தேன்.

உள்ளே என்ன நடந்தது என்ற ஆவல் மிக்க குரல்களைப் புறக்கணித்தபடியே வந்து, சோர் வுடன் என் ஸீட்டில் அமர்ந்தேன்.

தன்னிரக்கத்தில் நெஞ்சு கனத்தது. தலை வலி கிளம்பியது.

கொண்டு வந்த டிபன் கேரியரைத் தொடா மலேயே கழிந்தது லஞ்ச் டைம். சக ஊழியர் களின் பரிதாபப் பார்வைகள் தொடர்ந்தன.

மதியம், "மேலதிகாரியின் மரியாதையைக் குறைக்கும் வகையில் பேசி, அலுவலக நெறி முறைகளை மீறியிருக்கிறீர்கள். உங்களை ஏன் பணியிடை நீக்கம் செய்யக் கூடாது என்று ஒரு வாரத்துக்குள் விளக்கம் அளிக்க வேண்டும்" என்று மெமோ வந்தது.

'என்ன செய்யலாம் இதற்கு? மரியாதை யாக அந்த ஆபீஸர் சாந்தமாக இருக்கும் நேரம் பார்த்து அவரிடம் மன்னிப்புக் கேட்டு விட லாமா? இல்லை யூனியனிடத்தில் கேஸை ஒப் படைக்கலாமா?' என்றெல்லாம் எண்ணம் கூட....

# மாலை மயங்குகின்ற நேரம் 8

**ரமணிசந்திரன்**

**ப**ண்ணை வீட்டு உரையாடலை ஆராய்ந்து பார்த்ததில், உதயரேகாவுக்கு நல்லதும் கெட்டதுமாய் இரண்டு விஷயங்கள் தெளிவாயின.

முதல் வகையானதாய், கிருஷ்ணசந்திரனுக்கு மனைவியிடம் அக்கறை இருப்பது நிச்சயமாயிற்று. மற்றபடி, உன் வாழ்வு என்னாகும் என்று யோசித்தாயா என்ற தவிப்பும், சிக்கலில் இருந்து அவள் தப்பிப் பிழைக்க வழி ஒன்று தேடிச் செல்வதும் அவசியமில்லை. ஒருவரிடம் அன்பு இருக்கும் போதுதான், அவர் தானாகத் துன்பத்தை இழுத்துக் கொள்கிறாரே என்ற ஆத்திரமும், அந்தத் துன்பம் தீர்க்கும் வேகமும் தோன்றும். ஆக, அவன் அன்பு நிச்சயமாய் இருக்கிறது என்பதால் நிம்மதியும், அந்த அன்பை வளர்த்து விடலாம் என்பதில் நம்பிக்கையும் உண்டாயிற்று.

ஆனால், கெடுதலாக, அவனது 'திருந்த மாட்டேன்' என்ற பிடிவாதம்தான் அவளைக் குழப்பியடித்தது.

அறியாமல் தவறு செய்கிறவர்களுக்கு எடுத்துச் சொல்லிப் புரிய வைக்கலாம். திருத்தலாம். ஆனால், இது தப்பு என்று தெரிந்து கொண்டே, அந்தத் தப்பைச் செய்தே தீருவேன் என்று பிடிவாதம் பிடிக்கிறவனை என்ன செய்வது?

ஒருவேளை, கிருஷ்ணசந்திரன் தானாகவே திருந்த முயற்சி செய்து தோற்றிருப்பானோ என்ற சந்தேகம் வந்தது. மதுவுக்கு பழக்கப் பட்டுவிட்ட உடம்பு அதைத் திடுமென அடியோடு நிறுத்தும் போது படாதபாடு படுமாமே. அந்தத் துன்பம் ஒருதரம் அனுபவித்ததால்தான் மீண்டும் அந்த முயற்சி செய்ய மறுக்கிறானோ? இருக்கலாம்....

ஆனால், எத்தனை விதமாக யோசித்தாலும் ஒன்று உதைத்தது. இந்தக் கெடுதல்களின் அடிப்படை!

ஒருவன் காரணம் இல்லாமல் திடுமெனக் கெட்டுப் போய் விடுவது இல்லை. கிருஷ்ணசந்திரன் ஒன்றும் அறியாப் பருவத்தில் அடுத்தவரோடு சேர்ந்து கெட்டுப் போகவில்லை. படித்து முடிக்கும் வரை, நன்மை தீமை பகுத்துணர்ந்து ஒழுங்காகவே நடந்து கொண்டிருக்கிறான். தந்தையிடம் பயிற்சி ஏற்றபின், ஒரு தொழிலை மூன்று ஆண்டுகளாகத் தனியே தலைமை தாங்கி நடத்தி வருகிறவன்; அலுவலகத்தில் பத்துப் பேரும், தொழிற்சாலையில் முப்பது ஆட்களுமாக நாற்பது பேருக்குச் சம்பளம் கொடுத்து வேலை வாங்குகிறவன் அவன். தட்டிக் கொடுத்து நல்லதனமாகவே வேலை செய்ய வைப்பவன் என்று கேள்வி.

சொல்லப் போனால், கிருஷ்ணசந்திரன் தொழில் செய்யும் முறையை அறிந்த பிறகு தானே உதயரேகாவுடைய தந்தை அவர்கள் திருமணத்துக்கு முழு சம்மதம் தந்ததே.

இப்படிப்பட்டவன், மதுவின் தீமை தெரியாமல் குடிக்கத் தொடங்குவதோ, அவனே அறியுமுன் குடிப்பழக்கத்துக்கு அடிமையாகி விடுவதோ, சாத்தியம் அல்ல.

பின்னே?

ஏதேனும் வேதனையை மறக்கவென்று தொடங்கியிருப்பானோ? 'தேவதாஸ்' தொடங்கி எத்தனை படங்களில் கவலையை மறக்கக் குடிப்பது பற்றி வந்துவிட்டது!

ஆனால் கிருஷ்ண சந்திரனுக்கு அப்படி என்ன மனவேதனை இருக்க முடியும்! அன்பான பெற்றோர், பிரியமான தங்கை, வளமான வாழ்க்கை! குறைப்பட என்ன இருக்கிறது?

ஒருவேளை 'தேவதாஸ்' மாதிரியே....

'சுரீல்' என்று எழுந்த வலியில் உதயாவுக்கு வியர்த்துக் கொட்டி விட்டது.

கிருஷ்ணசந்திரனின் வயது இருபத்தி ஆறு. குறைந்தது ஆறு ஆண்டுகளாகக் காதல் கடலில் தொபுகடீர் என்று விழுந்து விடக்கூடிய பருவம்தான். அப்படிக் காதலித்து, அந்தக் காதல் நிறைவேறாத சோகத்தில் மது, மாது என்று ஆகிவிட்டானா? காந்திமதியும் செல்வரங்கமும்தான் அவனது காதலைத் தடை செய்துவிட்டார்களோ? அதனால்தான் அவர்களை நோகடிப்பதிலேயே குறியாக இருக்கிறானோ?

இப்படித்தான் நடந்திருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்த உதயரேகா மிகவும் சோர்ந்து போனாள்.

இன்னொருத்தியின் நினைவில் வாழ்கிறவ
னால் எப்படி அவளிடம் நேசம் கொள்ள
முடியும்? இந்த ஒரு விளக்கத்தைச் சற்றும் சிந்தி
யாமல் அவசரப்பட்டு விட்டாளே! போயிற்று!
எல்லாமே கெட்டுவிட்டது! இனி வாழ்
நாளெல்லாம் கணவனின் உதாசீனத்தில்....

மீண்டும் எங்கோ இடித்தது.

கிருஷ்ணசந்திரன் மனைவியை உதாசீனம்
செய்யவில்லையே! வெறுமனே, அக்கறை
யற்று, 'யாருக்கு வந்த விருந்தோ' என்று கூட
இருக்கவில்லை.

அன்றையப் பார்வை... அதைக்கூட விட்டு
விடலாம். சில ஆண்கள் பத்துக்குமேல் நாற்ப
துக்குள் உள்ள எந்தப் பெண்ணையும் அப்
படித்தான் பார்க்கிறார்கள். ஆனால், இவன்
வேறு யாரையும் அப்படி நோக்கவில்லை
என்பது ஒருபுறம் இருக்க, அவளது இதம்
நாடும் விதமும் இருக்கிறதே! இன்னொருத்
தியை நேசித்தவனால் இது எப்படி முடியும்?

சுற்றிச் சுற்றி, வட்டம் தொடங்கிய இடத்தி
லேயே மீண்டும் வந்து நின்றது.

ஏன் குடிக்கத் தொடங்கினான் என்று
கிருஷ்ணசந்திரனிடமே கேட்டு விடலாமா
என்று கூட உதயா ஒருதரம் யோசித்தாள்.

கேட்கலாம்தான். ஆனால்
பதில்தான் கிடைக்காது. இன்
றைய அளவில், இந்த
மாதிரிக் கேள்வி பதில்
களுக்கு அவர்களிடையே
இடம் இருப்பதாக அவ
ளுக்குப் படவில்லை.

தனி வீடு, வீட்டார் - கணவனும் மனைவி
யும் இருப்பது மாடியில். உண்பது நீங்கலாக,
மற்ற எல்லாமே உறங்குவது, குளிப்பது, டீ.வி.
பார்ப்பது, படிப்பது என்று எல்லாமே மாடியி
லேயே நடந்தது. ஹாலைத் தவிரவும் மூன்று
அறைகள் இருக்கவே, இருவரும் தனித்தனி
அறைகளில் இருந்து கொள்ள முடிந்தது.

கீழ்த் தளத்தில், முன் பகுதியைக் கார்
நிறுத்தப் பயன்படுத்தினார்கள். உள்ளே
உணவு அறை, அடுத்து சமையல் அறை,
சாமான் அறையோடு, வேலையாட்கள்
தங்கும் பகுதி இருந்தது.

சுத்தம் செய்வதோ, காப்பி, பத்திரிகை
போன்ற எதையேனும் கொண்டு வருவதோ,



எதுவானாலும் அழைத்தால்தான் வேலையாட்கள் மாடிக்கு வருவார்கள்.

உதயரேகாவுக்கு அதிகாலையில் எழுந்து பழக்கம் இல்லை.

ஆறிலிருந்து ஆறரைக்குள்ளாக அவள் எழுந்து வந்தால், பெரும்பாலும் 'சிட்அவுட்'டில் அமர்ந்து காப்பி அருந்தியபடியே கிருஷ்ணசந்திரன் பத்திரிகை படித்துக் கொண்டு இருப்பான்.

'ஜக்'கிலிருந்து தனக்கு ஒரு காப்பியை ஊற்றிக் கலந்து கொண்டு உதயா எதிரே அமர்வதைக் கவனித்த மாதிரியே காட்டிக் கொள்ள மாட்டான் அவன்.

அவளாகப் பேச்சைக் கொடுத்தால், கடனே என்று கஷ்டப்பட்டுக் கொண்டு அரைகுறையாகப் பதில் வரும். அவ்வளவே.

கூட இரண்டு வார்த்தை அவள் பேசினால், பத்திரிகையைப் போட்டுவிட்டு, குளிக்கப் போவதாக முணுமுணுத்துவிட்டுப் போய்விடுவான். அன்று பார்த்து அவனுக்குச் சீக்கிரம் கிளம்ப வேண்டியதாகிவிடும்.

ஒருநாள் அவனிடம், பத்திரிகையின் 'ஸ்போர்ட்ஸ்' பகுதியைப் படிப்பதற்காக உதயரேகா கேட்டாள். மறுக்காமல் கொடுத்தான்.

மறுநாளில் இருந்து, டீபாயில் அந்த தினசரிப் பத்திரிகை இரண்டு இருந்தது. வீண் விரயம் என்று உதயா நினைத்தாள். அவன் மற்ற செய்திகளைப் படித்து முடிக்குமுன் அவள் அந்த விளையாட்டுப் பகுதியைப் படித்து முடித்துவிடப் போகிறாள். இதற்குப் போய் இன்னும் ஒரு பத்திரிகையா?

இந்த மாதிரிப் பணத்தை வீணாக்குவதெல்லாம் அவளுடைய சித்திக்குப் பிடிக்காது.... என்று எண்ணியவளுக்கு வீட்டு ஞாபகம் வந்தது. அவர்களைப் பற்றி அதிகம் நினையாதது ஆச்சரியமாக இருந்தது. அவளது பிரிவை அவர்கள் எப்படி உணர்கிறார்களோ! குறைந்தபட்சம் சித்திக்கு மிகவும் போரடிக்கும் என்று, பம்பாயில் ஒரு 'கான்பரன்'சுக்குச் சென்ற அப்பா எல்லோரையும் உடன் அழைத்துச் சென்றிருந்தார். அங்கே தாதர் மார்க்கெட்டைச் சித்தியும் பானுவுமாக புரட்டி எடுத்துக் கொண்டு இருப்பார்கள்! சித்தியோடு கடைக்குப் போவது நன்றாக இருக்கும். இனிமேல்....

சித்தியிடமிருந்து உதயாவின் மனம், உடனேயே நடப்புக்குத் திரும்பிவிட்டது.

ஞாயிறன்று 'மாகசீன்' பகுதியை ஊன்றிப் படித்தாள். மறுநாளில் இருந்து சில வாராந்திர, மாதாந்திர சஞ்சிகைகளும் சேர்ந்து டீபாய் மேல் வீற்றிருந்தன.

மதிய உணவுக்குக் கிருஷ்ணசந்திரன் வீட்டுக்கு வருவது இல்லை.

காலைச் சிற்றுண்டியும், இரவு உணவும் வீட்டில் இருவருக்கும் சேர்ந்தே நடக்கும். இரவு உணவின் பின் தட்டில் கொஞ்சம் நேந்திரங்காய் வறுவலை வைத்துக் கொண்டு கொறிப்பது உதயரேகாவின் வழக்கம். பிள்ளைகள் மூவருமாய் இப்படிக் கொறித்துக் கொண்டே சேர்ந்து அமர்ந்து டீ.வி பார்ப்பார்கள். பிறந்த வீட்டு நினைவில் 'சிப்ஸ்' கேட்டுவிட்டுக் கணவனிடம் விவரம் கூறினாள் ஒருநாள்.



அப்போதைக்கு, 'அப்படியா?' என்று கூடக் கேளாவிட்டாலும், மறுநாளையிலிருந்து உணவு மேஜையில் எப்போதும் நேந்திரங்காய் வறுவல் இருந்தது.

இப்படி வெகு சில சம்பவங்கள் தவிர, மனைவி என்று ஒருத்தி அந்த வீட்டில் இருப்பதாகவே கிருஷ்ணசந்திரன் கண்டு கொள்வதில்லை. வெளியே செல்லும் போது, 'சென்று வருகிறேன்' என்று அவளிடம் விடைபெற்றதும் இல்லை; இரவில் வீடு திரும்புகிறவன் அவளை விழியால் கூடத் தேடியதும் இல்லை. வெகு கவனமாக ஒதுங்கி ஒதுங்கிச் சென்று கொண்டு இருந்தான்.

இவனிடம் போய், 'அகோ, வாரும் பிள்ளாய், ஆருயிர்க் கணவரே, நிவீர் இப்படிக் குடியே மதி என்று இருக்கும் காரணத்தைக் கூறுமைய்யா!' என்று கேட்பது கொஞ்சமும் பிரயோஜனப்படாது. பின்னே

மீண்டும் ஒருதரம் நன்றாக யோசித்துவிட்டு, உதயரேகா, தன் மாமியாரை நாடிச் சென்றாள்.

"வா, வா, வா" என்ற அமோக வரவேற்பு, அவன் வரவில்லையா?" என்ற வாடல், "சரி, நீயாவது வந்தாயே!' என்ற தேறுதல் எல்லாம் முடிந்து பேசிக் கொண்டு இருக்கும் போது, "அவர் யாரையாவது காதலித்து, நீங்களும் மாமாவும் அதைத் தடை செய்தீர்களா, அத்தை?" என்று மிகவும் சாதாரணம் போலக் காட்டிக் கேட்டாள் உதயா.

ஆனால் வெகுவாகப் பதறிப் போனார் காந்திமதி. "ஏனம்மா? அவன் உன்னிடம் சரியாக நடந்து கொள்ளவில்லையா? உன்னிடமும் தன் கோணல் புத்தியைத்தான் காட்டுகிறானா? ஐயோ! இதற்காகத்தானே நான் அந்தப் பயம் பயந்தேன்! குருத்துப் போல உன்னை...."

"அப்படி ஒன்றும் இல்லை அத்தை" என்ற மருமகளின் வார்த்தையை அவர் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை.

நம்பாத தன்மை அவர் முகத்தில் தெரியவும், "மெய் அத்தை. உங்களுக்குச் சான்று ஒன்று தரட்டுமா? நம் ஊருக்குப் போன போது

"அவர் பெரிய காந்தியவாதி யாமே?"

"ஆமா சார், காந்தி படம் போட்ட ஐந்நூறு ரூபா நோட்டுக்குக் குறைச்சு சம்திங் வாங்க மாட்டார்!"

- சீர்காழி வி. ரேவதி

உங்கள் மகன் என்னை ஊர்வலமாக அழைத்துச் சென்றார்'' என்று கண்சிமிட்டியவள், தானே தொடர்ந்து, "புரியவில்லையா? கல்யாண ஊர்வலம் என்ன வேகத்தில் செல்லும்? அந்த மாதிரி வேகம். ஆமை கூட வென்று விடும். அவ்வளவு மெதுவாகக் காரை ஓட்டினார். ஏன் தெரியுமா? வேகமாகப் போனால் நம் ஊர்ச்சாலையின் மேடு பள்ளங்களில் கார் தூக்கிப் போடுவது எனக்குக் கஷ்டமாக இருக்குமாம்!" என்று கூறிச் சிரித்தாள்.

"அப்புறம்?"

மகனுக்காகப் பசித்த மனம், மேலும் தீனி கேட்டது.

புரிந்து, "கோயிலில் என்னமாகக் கண்மூடி வேண்டினார் தெரியுமா?" அவருக்கு அவ்வளவு பக்தி இருக்கும் என்று நான் நினைத்ததே இல்லை. அப்புறம் கற்பகத் தருவிடம் கூட வேண்டுதல்!" என்று விளையாட்டுக் குரலில் பொய்யும் புகலாமல் முழு உண்மையும் உரைக்காமல் சமாளித்தவள், காந்திமதியின் முகம் சற்றுத் தெளிவுறவும், ''ஆமாம், அத்தை எனக்கு ஒரு பெரிய சந்தேகம். நமது கடந்த காலம் அதாவது நாம் முற்பிறவியில் செய்த வினைகள்தான் - நமது நிகழ்காலத்தை நிர்ணயிப்பதும்; நிகழ்காலத்தில் செய்வதுதான் எதிர்காலத்தை அதாவது அடுத்த பிறவியில் அனுபவிக்கப் போவதைத் தீர்மானிப்பதும் என்கிறார்களே, அப்படி இருக்க இந்த வேண்டுதல்கள் எல்லாம் என்ன பயன்?'' என்று பேச்சை மாற்றினாள்.

''முன்வினைப் பயனால் ஒருவனுக்குக் கால் போவதாக விதி இருந்தாலும், இறையன்பு, அந்தக் காலில் முள் தைப்பதோடு அந்த வினைப் பயனைத் தீர்த்துவிடும் என்று அன்னை சாரதாமணி சொன்னதாகப் படித்திருக்கிறேன்."

"ஆனால் கடவுளிடம் லௌகீக விஷயங்கள் - பணம், சுகம் வேண்டும் என்றெல்லாம் கேட்பது தப்பில்லையா, அத்தை? எனக்கு அவ்வப்போது இது ஓர் உறுத்தல்."

''பிள்ளைகளுக்கு ஒன்று வேண்டும் என்றால் யாரிடம் கேட்பார்கள்? தாய் தந்தையிடம் தானே? நம்மை இந்த உலகில் படைத்து வளர்த்து, நமக்கு எல்லாமும் ஆகி நிற்கும் கடவுளிடம் கேளாமல் வேறு யாரிடம் கேட்பது, உதி? ராமகிருஷ்ணர் கூட அப்படித்தான் சொன்னாராம். 'ஊரெல்லாம் கேட்டேன்; கிடைக்கவில்லை என்கிறாயே, உன்னைப் படைத்த ஜகன் மாதா இதோ இருக்கிறாளே, இவளிடம் கேட்டாயா? இவள் தன் கையால் தராவிட்டாலும், தருவதற்கு ஆளைத் தயார் பண்ணுவாளே' என்று சொல்வாராம். அது போல மூச்சு முட்டிப் போகிற போது வேறு யாரம்மா கதி? காப்பாற்றும் சக்தி கடவுளைத் தவிர யாருக்கு உண்டு?''

"தானாகக் கையால் தராவிட்டாலும் தருவதற்கு ஆளைத் தயார் பண்ணுகிற வகையில் கடவுள் இப்போது என்னைத் தயார் செய்திருக்கிறார் என்று தோன்றுகிறது. பாருங்கள், இன்னும் கொஞ்ச நாளில் எல்லாம் சரியாகி விடும்'' என்று நம்பிக்கையூட்டிய மருமகளைக் கூர்ந்து நோக்கி விட்டு, "நிஜத்தைச் சொல் உதி. சந்திரனுக்குப் பழைய காதல் உண்டா என்று ஏன் கேட்டாய்?'' என்று முன் பேச்சை விட்டு விடாமல் காந்திமதி விசாரித்தார்.

"புதிதாக ஒன்றும் இல்லை, அத்தை. இவ்வளவு நல்லவராக இருப்பவர், உங்களிடம் - உங்கள் மூவரிடம் மட்டும் வெறுப்பை உமிழ்வானேன் என்று யோசித்தேன். அதற்காகத்தான் கேட்டேன்'' என்று பதிலளித்தாள் மருமகள்.

"அப்படி எதுவும் கிடையவே கிடையாதம்மா. சொல்லப் போனால், அவனுக்குத் திருமணம் செய்து பார்க்கும் ஆசையில், அவனுக்கு இருபத்தைந்து தொடங்கியதில் இருந்து உனக்காக யாரையும் பிடித்திருந்தால் சொல்லு; அவளையே திருமணம் செய்து வைக்கிறோம் என்று பலமுறை கேட்டிருக்கிறோமே. உன் மாமாவிடம், 'சும்மா தொண தொணக்காதீர்கள். உங்களுக்கு அம்மா கிடைத்த மாதிரி எனக்கும் கிடைத்தால்தான் கல்யாணம் பண்ணுவேன்!' என்பான். உன் மாமா கூட, 'அம்மா மாதிரிப் பெண்ணா? இனி அரசமரத்தடி தோறும், பிள்ளையார் பக்கத்தில் இவனுக்கும் இடம் ஒதுக்க வேண்டியதுதான் என்று சிரிப்பார்... ஆனால் அது ஒரு காலம்!'' என்று பெருமூச்சு விட்டார் காந்திமதி

மகன் எப்போது, இப்படி அடியோடு மாறினான் என்று காந்திமதியால் வரையறுக்க முடியவில்லை. சுமார் ஆறுமாதம் முன்பு கொஞ்சம் 'டல்'லாக இருப்பது போலத் தோன்றியதாம். கேட்டால் 'ஒன்றுமில்லை' என்றானாம் முதலில் சாதாரணமாக. பிறகு கோபமாக, அதன் பின் வலிக்கச் செய்யும் விதமாக....

உருப்படியான தகவல் ஏதும் கிடைக்காவிட்டாலும், கணவனின் மாறுதலின் அடிப்படை வேறு பெண் அல்ல என்ற அளவில் உதயரேகா நிம்மதியுற்றாள்.

மேலும் சற்று நேரம் பேசி மாமியாரையும் உற்சாகப்படுத்தி விட்டு அங்கிருந்து கிளம்பி, கொஞ்ச நேரம் கடை கண்ணிகளில் சுற்றிப் பார்த்துவிட்டு, மெல்ல வீட்டை அடைந்தால், அங்கே கிருஷ்ணசந்திரன் கோபாவேசத்துடன் அவளை எதிர்கொண்டான்.

(தொடரும்)

# சந்திரலேகா



பன்னெடுங்காலமாய் ஜீவிக்கும் காதல். கூடவே அதற்கு சத்ருக்களும் தேவையில்லையா? ஆகவே, காதல், மோதல்... இறுதியில் காதலி உயிரார்ப்பணம் பண்ண, நெஞ்சு கனக்க நாம் வெளியே போக வேண்டுமாம். என்ன ஓர் ஆசை!

விஜய்க்கு ஜோடி வனிதா விஜயகுமார். தேமே என்று ஸ்கூலுக்குப் போய்க் கொண்டிருந்த சிசுவைக் காதல் பண்ணு, அழு, டான்ஸ் ஆடு என்றால் என்ன பண்ணும்? பாவம்!

சமீபமாய் தமிழ் சினிமாக்காரர்கள் வடக்கிலிருந்து கதாநாயகிகளை இறக்குமதி செய்வதோடு, உப தொழில் போலக் கொஞ்சம் கதையையும் காப்பியடிக்கிறார்கள். ஊருக்குள் காதலுக்கு எதிர்ப்பென்றால், உடனே காட்டுக்குள் காதலர்கள் ஓடிவிடுவார்களாம். இதிலும் அது உண்டு. உடனே அங்கே ஒரு பெரிய மீசைக்கார கடத்தல்காரன். அவன் என்னவோ செய்வானாங்காட்டியும் என்று நினைத்தால், அவன் வேறொரு காடு மாறிவிடுகிறானாம்!

போதாததற்கு வடிவேலு காமெடி. இதில்லாமல் பொன்னம்பலம், ஜெய்சங்கர், சரத்பாபு என்று நிறைய கொசுறு சீன்காரர்களும் உண்டு.

டைரக்டருக்கு ஒரு பெரிய விஷயத்தை எடுத்துக் கொண்டிருப்பதாக நினைப்பு. கஜ்தை, மதம் கடந்த காதல் பற்றியது.... இந்த ஒரு விஷயத்திலேயே மனுஷன் புளகாங்கிதம் அடைந்து விட்ட தால்தானோ என்னவோ, மற்ற விஷயங்களையெல்லாம் கோட்டை, கொத்தளம், அகழி என எல்லாவற்றையும் சேர்த்து விட்டு விட்டார்!

— துளசி


பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன். ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு
அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; மானேஜிங்
டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# 9

திரும்பி வீடு வந்து சேர்ந்த போது வீட்டினுள் கிருஷ்ணசந்திரனின் கார் நிற்பதைக் கண்டதும் உதயரேகா வியப் படைந்தாள்.

பொதுவாகக் காலையில் கிளம்பும் கிருஷ்ணசந்திரன், வீடு திரும்ப இரவாகி விடும். சில நாட்கள் ஒன்பது மணிக்கு மேல் கூட ஆகி விடுவதுண்டு. அந்த நாட்களில் அவனது நடையில் சிறு தள்ளாட்டம் இருப்பதைக் கண்டு, உதயா உள்ளூர வருத்தமும் கோபமும் பட்டிருக்கிறாள். ஆனால் ஏதும் பேச இடம் கொடாமல் உடனே அவனது அறைக்குள் புகுந்து கதவைத் தாளிட்டுக் கொள்கிறவன், மறுநாள் காலையில் தான் மீண்டும் வெளியே வருவான்.

உதயாவும், அவசரப்பட்டுக் கணவனிடம் ஏதாவது கேட்க விரும்பவில்லை. முதலில் அவனது மாறுதலின் அடிப்படைக் காரணத்தை அறிய வேண்டும். பிறகு அவனை அணுகும் வழி தேட வேண்டும். அதன் பிறகே இனி இது பற்றிப் பேச வேண்டும் என்று அந்த முதல் நாள் பேச்சை அடுத்து ஏற் கெனவே முடிவு செய்திருந்தாள்.

ஆனால், அப்படித் தாமதமாக வரும் நாட்களில், வீட்டுக்கு டெலிஃபோன் செய்து, "வர நேரமாகும்", "எனக்குச் சாப்பாடு வேண்டாம்" என்று ஏதோ ஒரு தகவல் கொடுத்து விடுவான்.

சாதாரணமாகவும் கூட, எவ்வளவு சீக்கிரமாக அவன் வீடு வந்தாலும் குறைந்தது ஆறு மணியாவது ஆகிவிடும். இன்றானால் ஐந்து மணிக்கே வந்து நிற்கிறானே!

ஆனாலும், பரபரத்து உள்ளே ஓடத் தோன்றவில்லை அவளுக்கு. அப்படி அவசரமாக ஓடி, அவனிடம் சென்று என்ன ஆகப் போகிறது? காப்பியா, சிற்றுண்டியா, வேண்டியதை வேலையாட்கள் மூலமாய் நிறைவேற்றிக் கொள்கிறவனுக்கு இவள் வீட்டில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஒன்றுதான்.

அனேகமாக காப்பிக் கடை முடிந்து, அவனது அறைக்குள் புகுந்தும் இருப்பான். அங்கே தனியாக என்னதான் செய்வானோ? அவ்வப் போது அறைக்குள் சென்று உள்ளே தாளிட்



# மாலை மயங்குகின்ற நேரம்...

டுக் கொண்டு, ஒரு மணி நேரம், ஒன்றரை மணி நேரம் என்று அடைத்துக் கொண்டு உட்கார்ந்து இருப்பதும், அது போரடித்துப் போய், முகம் வெளுத்து சோர்ந்து வெளிவருவதையும் அவள் பார்த்துக் கொண்டுதானே இருக்கிறாள்.

பின் என்ன? பொழுது போக்குவதற்கு அவன் அறைக்குள் ஒரு டீ.வி. கூடக் கிடையாது. போரடிக்காமல் என்ன செய்யும்?

அவளுடன் பேச்சைத் தவிர்ப்பதற்காக - அவள் என்னென்ன கேட்டு விடுவாளோ என்று பயந்து உள்ளே போய் ஒளிந்து கொள்கிறவன் இந்த போரடிப்பையும் படவேண்டியது தான்.

இந்த போர் தாங்காமலாவது மனைவியாகிய அவளுடன் நன்றாகப் பேசிப் பழகட்டுமே!

சிறு சோர்வுடன் நடந்து, வீட்டுக்குள் அடியெடுத்து வைத்ததுமே, வேலைக்காரச் சிறுவன் ஓடோடி வந்தான். "அம்மாம்மா, நீங்கள் வந்ததும் அய்யா உங்களை உடனே மாடிக்கு வரச் சொன்னாங்க" என்றான்.

தலையாட்டி விட்டு மாடிப்படி ஏறிச் சென்றாள் உதயா.

கண்ணை மறைத்த கூந்தல் சுருளை, விரலால் ஒதுக்கியபடி, 'என்ன' என்பது போல ஏறிட்டவளை ஆத்திரமாக முறைத்தான் கிருஷ்ணசந்திரன்.

"இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தாய்?" என்று கோபத்துடன் சீறினான்.

முதல் நாள், பெற்றவளிடம் அவன் கோபமாகப் பேசியது உதயரேகாவுக்கு நினைவு வந்தது. அன்றளவு இன்று அவன் முகம் சுளித்துப் பேசவில்லை. ஆனால் சினம் மட்டும் அன்றை விட அதிகம் இருப்பதாகவே தோன்றியது.

"உங்கள் அம்மா வீட்டுக்கு... அப்புறம்..." என்றவளுக்கு உள்ளூர மனம் முரண்டியது. இந்தக் குரலில் அவளிடம் ஒருவர் பேசுவதா? அது கணவனே என்றாலும்?

"போவதை யாரிடமாவது சொல்லித் தொலைத்து விட்டுப் போவதுதானே?" என்றான் அவன் சினம் தணியாமலே.

ஏற்கெனவே, கணவனது பாணியில் உதயா ஓரளவு எரிச்சலுற்றிருந்தாள். வெயிலில் சுற்றிய அலுப்பு வேறு. திடுமெனத் தாக்கப்பட்ட அதிர்ச்சியில் முதலில் தடுமாறிப் பதில் சொன்னவளுக்கு அவன் மீண்டும் அதே மாதிரிப் பேசவும் சுள்ளென்று சூடு ஏறி விட்டது.

"சொல்லி விட்டுத்தான் போக வேண்டும் என்று சட்டமா?" என்று மிடுக்காகக் கேட்டாள்.

"இல்லாவிட்டால் நீ எங்கே, எப்படி இருக்கிறாய் என்று எனக்கு எப்படித் தெரியும்?" என்றான் அவன் பதிலுக்கு.

"அது தெரிந்து என்ன ஆகப் போகிறது? அன்றித் தெரியாமல் இருப்பதால்தான் என்ன கெட்டு விடப் போகிறது?" என்றாள் உதயரேகா அலட்சியமாக.

"ஆவதும், கெடுவதும் பற்றிய பேச்சு இப்போது அனாவசியம். ஆனால், எனக்குச் சற்றும் விருப்பம் இல்லாமல் திணிக்கப்பட்டது ஒன்று என்றாலும், உன் நன்மை தீமை பற்றிய பொறுப்பு எனக்கு இருக்கிறது. உனக்கு ஓர் ஆபத்து என்றால்..."

"ஓகோ! ஏதேனும் விபத்தில் சிக்கிச் செத்து வைத்தேன் என்றால் உங்களுக்கு அது பற்றித் தெரிவது எப்படி என்கிறீர்கள்; அதுதானே? கவலைப்படாதீர்கள். உங்கள் 'விசிட்டிங் கார்டு' ஒன்று என் கைப்பையில் இருக்கிறது."

"பேசுவதைப் பார்! உன் கைப்பை எங்கேனும் திருடு போய் விட்டால்?"

"இனிமேல் நெற்றியில் எழுதி ஒட்டிக் கொள்ளட்டுமா?"

"என்ன பேச்சு இது? செல்லும் இடம் பற்றி வீட்டில் சொல்லி விட்டுப் போ என்றால் இத்தனை விதண்டாவாதமா?"

"நான் மட்டும் சொல்லி விட்டுப் போக வேண்டும் என்றால் அதுதான் விதண்டாவாதம்!"

"ஓ!" என்று உடனே கண்டு, "நான் எப்போதும் அலுவல

ரமணி சந்திரன்



**" 'ரங்கநாயகி லிலாராம்'கிற உங்க பேரை நீங்க எப்படி வேணும்னாலும் சுருக்கி வைச்சுக் கலாம். ஆனால் சபா கச்சேரி நோட்டீஸ்லே ரங்கீலா - பாட்டுன்னு விளம்பரம் செய்யச் சொல்றது விபரீதமாயில்லே இருக்கு....!"**

**- அகில்**

கம் அல்லது தொழிற்சாலையில்தான் இருப் பேன்" என்றான் கிருஷ்ணசந்திரன்.

'மாட்டினீர்கள்' என்று உள்ளூர எண்ணிய படி, "அலுவலகம், தொழிற்சாலை நேரம் முடிந்த பிறகு? அதாவது ஐந்தரை மணிக்கு மேலாக? ஒருவேளை அதெல்லாம் சொல்லப் படக் கூடாத - சொல்ல நாகூசுகிற இடங் களோ?" என்றாள் அவள் எகத்தாளமாக.

அவளது முதல் கேள்வியில் விறைப்புற்று நிமிர்ந்த கிருஷ்ணசந்திரன், அவளது அடுத்த கேள்வியில் மிகுந்த ஆத்திரமுற்றது நன்றாகவே தெரிந்தது. ஏதோ சொல்ல வாயெடுத்தவன் உடனே நிறுத்தி, சுட்டெரிப்பவன் போல அவளை நோக்கி விட்டுச் சட்டெனத் திரும்பி நடந்து, மடமடவென்று மாடிப்படி இறங்கிச் சென்றான்.

அவன் காரை எடுத்துக் கொண்டு வெளியே செல்வதைக் கண்ட உதயரேகாவுக் கும் கோபத்தில் முகம் சிவந்து போயிற்று.

'வரட்டும்' என்று உள்ளூரக் கறுவியபடி காத்திருந்தவள், சுமார் ஒரு மணி நேரம் கழித்து, கணவன் திரும்பி வந்ததும், நேரே அவன் முன் சென்று நின்றாள்.

"பாருங்கள், இந்த மாதிரிப் பாதிப் பேச்சில் வெளியே போகிற பழக்கம் இன்றோடு நிற்க வேண்டும். பெரும்பான்மைப் பெண்களைப் போல இந்த மாதிரி அவமதிப்புகளை நான் பொறுத்துப் போக மாட்டேன். இன்னொரு தரம் இப்படிச் செய்தால், அடுத்து நானும் நேரம், காலம் பாராமல் இதே போலக் கிளம்பி விடுவேன். சும்மா அல்ல. பத்து பவுனில் நீங் கள் என் கழுத்தில் மாட்டியிருக்கும் இந்தச் சங்கிலி, கைகளில், காதுகளில் மாட்டியிருப்ப தோடு. இந்தத் தெருக்களில் ஆள் நடமாட்டம் அதிகம் கிடையாது என்பதும் நினைவிருக் கட்டும்" என்றாள் மிரட்டலாக.

"சற்று முன் தனியாகத்தானே வந்தாய்?"

"வீட்டு வாசலில் ஆட்டோவில் வந்து இறங்குவதற்கும் தனியே, இரவு பகல் என்று இல்லாமல் நடந்து போவதற்கும் வேறுபாடு இல்லையா? இன்னமும் இங்கே ராமராஜ்யம் வந்து விடவில்லை, தெரியுமா?"

சிறு அமைதியின் பின், "சாரி" என்றான் கிருஷ்ணசந்திரன். "இனி இப்படிச் செய்ய மாட்டேன். உன் நகை பற்றின மிரட்டலுக்குப் பயந்து அல்ல. ஆண் பிள்ளை என்பதால் அரைகுறைப் பேச்சில், செருப்பை மாட்டிக் கொண்டு கிளம்பி விடுவது, கட்டிப் போட்டு அடிப்பதை விடக் கேவலம் என்பதற்காகத் தான்."

"போச்சுடா!" என்ற உதயா, கணவன் திகைத்து நோக்கவும், "நீங்கள் பாட்டில் எளி தாய் வருத்தம் தெரிவித்து விட்டீர்கள்; இனி நானும் என் கோபத்தை விட்டாக வேண் டுமே!" என்று முறுவலிக்க, அவனும் தன்னை மீறிப் புன்னகை செய்தான்.

"அப்புறம்?" என்றாள் அவள் தொடர்ந்து.

கேள்வியாக நோக்கியபடி அவள் அசையா மல் நிற்கவும், "நான்... மாலை நேரங்களில் அனேகமாக மணிவாசகத்தோடு.. அவனைக் கேட்டால் நான் இருக்கும் இடம்தெரிந்து விடும்" என்று மனமற்றுக் கூறினான் அவன்.

ஆனால், உதயரேகாவுக்கு இந்தச் சேதி அதிர்ச்சியாய் இருந்தது. "மணிவாசகமா? அவரா? அவர் நல்லவர் என்று நினைத்தேனே! உங்கள் அம்மா கூட அப்படித்தானே நினைத் துக் கொண்டு இருக்கிறார்கள். இந்தக் குடிப் பழக்கத்துக்கு அவரா காரணம்? சே! இவ் வளவு மோசமானவரா அவர்? சாது போல இருந்து கொண்டு..." என்று அவள் படபடக்க வும் அவன் குறுக்கிட்டு, "அவன் நல்லவன் தான். ஆனால் என் நண்பர்கள் விஷயம் என் விஷயம். அதைப் பற்றி நீ பேசக் கூடாது" என்றான் அவன் கட்டுப்படுத்திய, ஆனால் கண்டிப்பான குரலில்.

"அதெப்படி உங்கள் விஷயம் மட்டுமாக ஆகும்?" என்று திருப்பிக் கேட்டாள் அவள்.

"நான் உங்களைத் திருமணம் செய்து கொண்டவள். என் நன்மை தீமை உங்கள் பொறுப்பு என்பது போல, உங்கள் நலனும் என் பொறுப்புதானே? அதிகம் குடித்தால் கல்லீரல் கெட்டு விடும் என்பதோ, கல்லீரல் கெட்டால் என்ன ஆகும் என்பதோ தெரியாத முட்டாள் நான் அல்ல. நீங்கள் நல்லபடியாக, நெடுங்காலம் உயிரோடு இருக்க வேண்டும் என்கிற அக்கறை இ...ருப்ப...தால்.."

வினாடியில் கிருஷ்ணசந்திரனிடம் தோன் றிய மாறுதல் உதயரேகாவின் பேச்சை இடை யில் நிறுத்தியது.

செவசெவவென்று கண், நாசி, முகம் எல் லாம் சிவந்து, தககதவென்று தீ எரிவது போல அவனது தோற்றத்தில் ஏற்பட்ட மாறுதலைக்

கண்டு உதயரேகா திகைத்து விழித்தாள்.

தலையை அசைத்து இமை கொட்டிக் கண்களை நன்றாகத் திறந்து பார்த்தால், சற்று முன் பார்த்தது பிரமையோ என்பது போல அவன் சாதாரணமாக - ரொம்பவும் சாதாரணமாக அல்ல; கொஞ்சம் கோபத்துடன்தான் நின்று கொண்டிருந்தான்.

"நான் யார் யாருடன், எப்படி எப்படிப் பழகுகிறேன் என்பது என் விருப்பம். இதில் யாரும் தலையிட்டால் - அதுவும் மணியைப் பற்றிக் குறைவாக ஒரு வார்த்தை சொன்னால், எனக்குக் கெட்ட கோபம் வரும். ஜாக்கிரதை!" என்று எச்சரித்து விட்டு, வெளியே செல்ல இரண்டு எட்டு எடுத்து வைத்தவன், நின்று, திரும்பி அவளை முறைத்து விட்டு, அவனது அறைப் பக்கமாகச் செல்லவும் உதயாவுக்குச் சிரிப்பு வந்து விட்டது.

அவன் சொன்ன சொல் காப்பாற்றுகிறான் என்பதை விட, ஒரு சிறு போரில் தான் வென்று விட்டாற்போல ஓர் உற்சாகம் உண்டாயிற்று.

இப்படியே ஒவ்வொன்றிலும் இவரைப் பிடித்துக் கட்டி விடுகிறேன் என்று புன்னகையோடு தனக்குள் கூறிக் கொண்டவள், கிருஷ்ணசந்திரன், அவனது அறைக் கதவைத் திறக்கத் தொடங்கவும், "சாரி!" என்றாள்.

லேசாகத் திரும்பி, "எதற்கு?" என்றான் அவன்.

"உங்கள் நண்பரைப் பற்றி அப்படிப் பேசியதற்கு. இனிமேல் அவரைப் பற்றி நியாயமில்லாமல் எதுவும் சொல்ல மாட்டேன்" என்றாள் அவள்.

''நியாயமில்லாமல் என்று அதில் ஒரு 'பொடி'யா? நியாயம், நியாயம் இல்லாதது பற்றி உனக்கு எப்படித் தெரியும்? உன் பார்வையில் அநியாயமாய்ப்படுவது உண்மையில் நியாயமாகவும் இருக்கலாமே!"

மணிவாசகத்தைப் பற்றித் தாழ்வாக ஒரு சொல் இவன் சகிக்க மாட்டான் என்பதை உதயா உணர்ந்தாள். அவள் இதுவரை பார்த்த அளவில் மணிவாசகம் நண்பனைக் கெடுக்கிற வர்க்கம் என்று ஒரேயடியாய் முடிவு பண்ண உதயாவாலும் முடியவில்லை. எனவே, "நீங்கள் சொல்வது சரிதான்'' என்று கணவனிடம் ஒத்துக் கொண்டாள். "சந்தேகத்தின் பலனைக் குற்றம்சாட்டப்பட்டவருக்குக் கொடுப்பது போல இப்போதைக்கு மணிவாசகம் நல்லவர் என்றே வைத்துக் கொள்ளுவோம்'' என்றாள்.

"சந்தேகத்தின் பலனாக அல்ல. மெய்யாகவே அவன் மிகவும் நல்லவன்தான்'' என்றான் கிருஷ்ணசந்திரன் உறுதியான குரலில்.

தோல்வியை ஒத்துக் கொள்கிற பாணியில் கைவிரித்தாள் உதயா.

"ஓ.கே. ஓ.கே. உங்கள் வார்த்தையை ஒத்துக்



''சபா செகரட்டரிதான்! டிசம்பர் மாசம் நெருங்கினா இப்படி ஆயிடுவாரு!''
— நாகலை இளவல்

கொள்கிறேன். மெய்யாகவே அவரைப் பற்றி அப்படிப் பேசியதற்காக வருந்துகிறேன். சாரி!'' என்றாள் புன்னகையோடு.

லேசாகத் தலையசைத்து, "இப்போது என் முறையா? நீ வருத்தம் தெரிவித்து விட்டதால் நானும் தொடர்ந்து கோபப்பட முடியாது இல்லையா?" என்று லேசான முறுவலோடு திரும்பி வந்தான் அவன்.

வழக்கம் போலவே அவனது முறுவலை உள்ளூர ரசித்தபடி, "உங்களிடம் ஒன்று கேட்கலாமா?'' என்றாள் உதயரேகா.

"கேள் என்றதும், 'ஒன்று' என்று சொல்லி அறுக்க மாட்டாய் என்றால் கேட்கலாம். ஒரு சிறு நிபந்தனை மட்டும் உண்டு. கேட்பது என்னைப் பற்றியதாக இருக்கக் கூடாது. உனக்கு ஏதாவது வேண்டும் என்றால் தாராளமாகக் கேட்கலாம்.''

"தா...ரா...ளமாகக் கேட்கலாமா? எனக்கு ஒரு நல்ல 'ஃபாரின்' பென்ஸ் கார் - தங்க முலாம் பூசியது, வாங்கித் தருகிறீர்களா? விலை, எழுபத்தைந்தே லட்சம் ரூபாய்தானாம்" என்று சாது போல விழிகளை விரித்தாள் உதயரேகா.

தன்னை மீறிச் சிரித்து விட்டு, "உன்னை என்னதான் செய்வது, சொல்லு'' என்று உரைத்து, மீண்டும் நகைத்தான் கிருஷ்ண சந்திரன்.

'புதுமணம் புரிந்த நாயகன், தன் புத்தம் புது மனைவியை என்னென்னவோ செய்யலாம். இடையோடு அணைக்கலாம்; கன்னத்தைக் கிள்ளலாம்; இதழில் முத்தமிடலாம்.

இதில் எதுவானாலும் எனக்குச் சம்மதமே. ஆனால் நீ என்ன செய்யப் போகிறாய்?' என்பது போலக் கண்களில் செல்லக் கேள்வியும் இதழோரம் புன்னகையுமாகக் கடைக்கண்ணால் கணவனை ஏறிட்டாள் உதயரேகா.

தன்னிச்சையாய்க் கரங்கள் எழும்ப, மனைவியை நோக்கி ஓர் எட்டு எடுத்து வைத்தான் கிருஷ்ணசந்திரன்.

(தொடரும்)

“இந்தியப் படைகளுக்கு ஏகப்பட்ட இழப்பாம். நியூஸ்ல சொன்னான்... எல்லா ஃப்ரன்ட்லயும் அடியாம். சீனப் படைகள் முன்னேறி வந்துட்டே இருக்காம்!” என்றான் அண்ணா, இரவு சாப்பிட உட்கார்ந்தபோது.

“நம்ம ஜவான்கள் என்ன, பயிற்சி இல்லாதவர்களா?” என்று கேட்டாள் மன்னி.

“பயிற்சின்னு பார்த்தா, அந்த மாதிரி உயரமான மலைப் பகுதியிலே, பனி ஜாஸ்தியா இருக்கிற இடத்தில, நம்ம சோல்ஜர்கள் இதுவரை சண்டை போட்டதில்லே. அதுனால அநுபவம் போதாது...” என்றான் அண்ணா.

அன்று மாலை ஆபீசிலிருந்து வரும்போதே அண்ணா கொஞ்சம் கவலையாக இருந்த மாதிரி தெரிந்தது. வழியில் டிரைவரிடம் கூட எதுவும் பேசவில்லையாம்.

“இது ரொம்ப எதிர்பாராத யுத்தம். யுத்தத்துக்கு நிறையச் செலவாகிறதாம். எல்லாரும் அவங்களால முடிஞ்ச அளவுக்கு ரூபாய், தங்க நகை - நட்டு எல்லாம் நாட்டுக்குக் கொடுக்கணும்னு பிரதமர் கேட்டுண்டிருக்கார். நீ என்ன கொடுக்கப் போறே?'' என்றான் அண்ணா, மன்னியை நிமிர்ந்து பார்த்து.

“நீங்க என்ன எல்லாம் கொடுக்கணும்னு சொல்றேளோ, அதை எல்லாம்!” என்றாள் மன்னி. “ஆனா இப்போ எதுக்கு இந்தச் சண்டைன்னுதான் புரியவே இல்லியே!”

அண்ணாவுக்கு அரசியல் மட்டுமல்ல, இந்தச் சரித்திர சமாசாரம் எல்லாம் ரொம்ப அத்துபடி. நிறையப் படிப்பான். நியூஸ் பேப்பர்கள் மட்டுமல்ல, அரசியல் தலைவர்கள் எழுதிய புத்தகங்கள், உலகப் போர் பற்றிய தடித்தடி நூல்கள் எல்லாம் அவன் அலமாரி ஷெல்ஃபில் குறுக்கும் நெடுக்குமாக அடுக்கி இருக்கும். எல்லாவற்றிலும் தேசியக் கொடியின் படம் சின்னதாக ஒட்டி, அதன் கீழேதான் அவன் பெயரை எழுதியிருப்பான். முத்து முத்தாக இருக்கும் கையெழுத்து...

“எப்போது தலாய்லாமாவும் பஞ்சென்லாமாவும் 1956ல புத்த ஜெயந்தி கொண்டாட்டத்தில் கலந்து கொள்ள இந்தியாவுக்கு வந்தார்களோ, அப்பவே சீனாவுக்கு இந்தியா மேல ஆத்திரமும், வெறுப்பும் வந்துட்டுது. அதுனாலேயே நேருஜி ஐம்பத்தெட்டுல திபெத்துக்கு விஜயம் செய்யணும்னு பிளான் பண்ணின போது அதை ஏதோ சாக்குச் சொல்லி தடுத்துட்டது சீனா!” என்றான் அண்ணா.

“அதுக்கு இப்போ இந்தியா மீது படை எடுப்பானேன்?” என்றேன் அப்பாவி மாதிரி.

“காரணம் இருக்கு. அப்புறம் ஆறேழு மாசத்தில, திபெத்துல நிலைமை மோசமாப் போய், தலாய்லாமா இந்தியாவில அடைக்கலம் தேடி வந்தார். மார்ச் 59ன்னு நெனைக்கறேன். அதுக்கப்புறமாவே இந்தியா-சீனா பிரச்னை பெரிசாயிட்டுது. திபேத்துல இருந்து வந்தவங்களுக்கு இந்தியா அடைக்கலம் கொடுத்ததுனால, இந்தியாவுக்கு எல்லை கடந்த பேராசை இருக்குன்னு சூ என்லாய் நேருவுக்குக் காரசாரமா ஒரு லெட்டர் எழுதினதா நான் கேள்விப்பட்டிருக்கேன்!” என்றான் அண்ணா.

திபெத்து எல்லையில் நிறையப் படைகளைக் குவித்து விட்டு, இந்தியப் பாதுகாப்பு எல்லைப் படை வீரர்கள் மீது அவ்வப்போது தாக்குதல் நடத்தி, அவர்களை அந்த இடத்திலிருந்து விரட்டுவதுதான் சீனப்படை வீரர்களின் முதல் வேலையாக ஆரம்பித்தது. ஆனாலும் சூ என்லாய் ஏப்ரல் 60-ல் இங்கே வந்தார். பேச்சு வார்த்தை நடத்துகிற மாதிரி ஒரு நாடகம் நடந்தது. பர்மாவுடன் ஜனவரியில் ஒரு பார்டர் அக்ரிமென்ட். மார்ச்சில் நேபாளத்துடன் ஓர் எல்லைப்புற ஒப்பந்தம். பாகிஸ்தானுடன் வெளிப்படையாக நட்பு...

எனக்கு இதெல்லாம் படித்துத்தான் தெரியும். அண்ணாவைக் கேட்டால் இன்னும் நிறையச் சொல்லுவான்.

“முதல்ல வந்த போது இந்தி - சீனி பாய் பாய்னு கோஷம் போட்டது எல்லாம் அவ்வ

ளவுதானா?" என்றாள் மன்னி.

தினசரிகளில் எல்லாம் முதல் பக்கம் இந்திய - சீன போர்ச் செய்திகள் கொட்டை எழுத்துக்களில் தலைப்புச் செய்திகளாய் இடம்பிடித்துக் கொண்டன.

'நமக்குள்ளே என்ன பிரச்னை இருந்தாலும் பேசியே தீர்த்துக் கொள்ளலாமே என்று அன்றைக்கு சூஎன்லாய் சொன்னாரே! தில்லி விமான நிலையத்தில் நேரு அவரை வரவேற்ற போது கூட, 'நாம் முன்னாலேயே ஒப்புக் கொண்ட பஞ்சசீலக் கொள்கைப்படி, பரஸ்பர நம்பிக்கை நமக்கு இருந்தால், இந்தப் பகுதி நிச்சயம் அமைதிப் பூங்காவாக இருக்கும்' என்றாரே!

நியூஸ் பேப்பர்கள் எல்லாவற்றையும் படித்து விட்டுத்தான் ஆபீஸ் புறப்படுவான் அண்ணா. ஐந்து மணிக்கு பேப்பர் வந்தால் ஆறு - ஆறரை மணி வரை அதில் மூழ்கி விடுவான்...

ஆபீசில் அண்ணாவுக்குப் பெரிய வேலை. தனி கேபின். தனி செக்ரடரி. அவனுக்குக் கீழே நிறைய ஊழியர்கள். காலையில் எட்டு மணிக்கு, அவசர அவசரமாக, சுடச்சுடச் சாப்பிட்டு விட்டுக் காரில் கிளம்புவான். மத்தி





**"நீங்க நடிகையானதுக்காக வருத்தப்பட றீங்களா, சந்தோஷப்படறீங்களா?"**

**"நான் எதுக்கு வருத்தப்படணும்? அதுக்குத் தான் ரசிகர்கள் இருக்காங்களே...?"**

**- செங்குன்றம் கே. ஆர்.**

---

யானம் லஞ்சுக்கு மவுண்ட்ரோடில் உள்ள பிரபல ஓட்டல் ஒன்றில் பாதாம் அல்வாவும், உருளைக்கிழங்கு போண்டாவும் அவசியம் வேண்டும். அல்வா இல்லாவிட்டால், வேறு ஏதாவது ஒரு ஸ்வீட் கட்டாயம் வேண்டும்...

'சூளன்லாய் வந்த ஆறாம் நாளே, 'நமக் குள்ளே இப்பப் பேசித் தீர்த்துக் கொள்கிற மாதிரி இல்லை. சரியான நிலைமை என்ன என்று மேலும் தீவிரமாக ஆராய வேண்டும் என்று எப்போது அறிக்கை விட்டாரோ, அப்போதே சந்தேகம்தான். சண்டைக்குத்தான் வழி பார்க்கிறார் இந்த மனிதர்...'

அண்ணா மத்தியான லஞ்சுக்கு, இப்போ தெல்லாம் ஸ்வீட் சாப்பிடுகிற 'மூடி'ல் இருக் கிறானோ என்னவோ? தெரியவில்லை.

'இப்போது எதற்கு இந்தப் போர்? சுதந்திரம் கிடைத்த புதிதில் காஷ்மீர் காரணமாக பாகிஸ்தானோடு சண்டை போட்டதில் எத்தனை இளம் இந்தியர்கள் மடிந்தார்கள்! எதற்கு, எதற்கு' என்று மனசு குடைந்தது.

பொழுது விடிந்து பால்காரர் வந்ததும் அவசர அவசரமாகக் காப்பி குடித்து விட்டு அண்ணா தயாராக இருந்தான். பேப்பர் வந்ததோ இல்லையோ, ஒரு சேரை இழுத்துப் போட்டு உட்கார்ந்து கொண்டு மளமள வென்று படித்தான். நேருஜியின் முதுகில் சீனப் பிரதமர் கத்தியால் குத்தி விட்டார் என்று யாரோ பேச்சுவாக்கில் சொன்ன போது கூட அண்ணாவுக்குத் தொண்டை அடைத்துக் கொண்டு, வார்த்தைகள் வராமல் துடித்தது நினைவுக்கு வந்தது.

"என்ன ரெடியா?" என்றான் அண்ணா, மன்னியிடம், "திருமலைப்பிள்ளை ரோடுக்குப் போகணும். கழுத்தில என்ன செயின் போட் டிருக்கே நீ?"

"தாலி கோத்திருக்கிற செயின் ஒண்ணு. ரெட்டை வடம் ஒண்ணு. காப்பிக் கொட்டை செயின் ஒண்ணு. ஏன்?"

"ரெட்டை வடத்தை நான் கூட்டிண்டு போற இடத்துல ஒரு தலைவர் இருப்பார் - அவரண்டை நீ கழற்றிக் கொடுத்துடணும்."

"ஆகா, தாராளமாக் கொடுத்துடறேன்!" என்றாள் மன்னி.

"உனக்கு வருத்தமே வேண்டாம். அப்புறமா நானே வேற ஒண்ணு பண்ணிப் போட்டுட றேன்!" என்று அண்ணா உறுதி அளிப்பது மாதிரி சொன்னான்.

"லாக்கர்லே வேற இருக்கு. அலமாரில ஒண்ணு நகைக் கடைப் பெட்டியோட தூங்க றது. எனக்கு ஒண்ணும் வருத்தமே இல்லை!" என்றாள் மன்னி.

"எல்லாருமே அவர்களால முடிஞ்சதைக் கொடுக்கிறா. சினிமாக்காரா எல்லாம் ஊர்வல மாப் போய் நிறைய கலெக்ட் பண்ணிக் கொடுத்திருக்கா" என்றேன் மன்னியிடம்.

"நடந்தே போயிடலாம். கார் வேண்டாம்!" என்றான் அண்ணா.

தலைவர் வீட்டு வாசலில் அதிகக் கூட்டம் இருக்கவில்லை.

"இதோ வந்துடுவாருங்க..." என்றார் அவ ரது உதவியாளர்.

தலைவர் வெராந்தாவுக்கு வந்து உட்கார்ந் தார்.

கம்பீரமான உருவம். கதரில் முழங்கை தாண்டிய அரைக்கைச் சட்டை. கதர் வேஷ்டி. எல்லர்ரையும் பார்த்து வணக்கம் சொன்னார் தலைவர்.

"எதுவும் கொண்டு வந்திருக்கீங்களா, இல்லே என்னை வெறுமனே பார்க்க வந்தீங்க ளான்னேன்?" என்றார், புன்சிரிப்புடன்.

முன்னால் நின்று கொண்டிருந்த பெண் மணி, கை வளையல்களைக் கழற்றி, தலைவர் முன் வைத்து வணங்கினாள்.

அண்ணா எதுவும் பேசாமல் மன்னியைப் பார்த்தான்.

ஒரு பெரியவர் காரில் வந்து இறங்கி, நேராகத் தலைவரிடம் வந்தார். ஒரு காகிதப் பொட்டலத்தைப் பிரித்து அவர் முன் வைத் தார்.

"நான் கழுத்துல போடற செயின் இது. இது தங்கக் கடிகாரம் - சங்கிலியோட. இது என்னோட வலது கை மோதிரம். இது இடது கை மோதிரம்" என்று மளமளவென்று பெரு மையாகச் சொன்னார்.

"சந்தோஷம். நாட்டுக்காக எது கொடுத்தா லும் அது உங்களுக்கும் சந்தோஷமா இருக்க ணும்னேன்!" என்றார் தலைவர்.

ஒரு கிழவி முன்னால் வந்து, மோதிரம் ஒன்றை அவர் கையில் வைத்தாள்.

"இது எத்தனை பவுன் இருக்கும் தாயி?"

தலைவர் அவளிடம் பேசியதிலேயே கிழ விக்கு உச்சி குளிர்ந்து போயிருக்க வேண்டும்.

"அரைப் பவுன் இருக்கும் ராசா!"

"என்ன வெலை தெரியுமா? தெரிஞ்சுதான் கொடுக்கறியான்னேன்?"

"என்ன வெலையா இருந்தாத்தான் என்ன அய்யா? நாட்டுக்குக் கொடுக்கணும்னு அய்யா சொல்லிட்ட பொறவு அது எங்கிட்ட எதுக்கு இருக்கணும்?"










- து. பூவராகன்

சென்று விட்டார்.

"நா ரோ பண்றேன்பா..." வெங்கி.

இடது துடுப்பை மட்டும் துழாவி, படகைத் திருப்பி, பின்பு இரண்டு துடுப்பையும் போட்டு ஏரியின் நடுவில் இருந்த தீவை நோக்கி படகைச் செலுத்தினான்.

"இட ஒதுக்கீட்டைப்பத்தி என்ன நினைக்கிற?" சுடலைராஜன்.

பதில் கூறாமல் துடுப்பை துழாவிக் கொண்டிருந்தான். 'சலக்...சலக்...'

"அதான்பா... ரிசர்வேஷன் பத்தி..."

'சலக்...சலக்...'

"எதுக்காக அது கொண்டு வரப்பட்டது தெரியுமா?"

'சலக்...சலக்...!'

"கீழ்ச்சாதின்னு சொல்லிக்க கேவலம்...'' வார்த்தைகள் சட்டென்று வந்து விழுந்து விட்டன.

சுடலைராஜன் சிரித்துக் கொண்டார்.

''உங்க தாத்தா பேரு மாடசாமி... எம் பேரு எம். சுடலைராஜன். பேரு ஒரு மாதிரியா இருக்கே. எம்.எஸ்.ராஜன்னு சுருக்கிக் கோயேன்னு எத்தனையோ நண்பர்கள் சொன்னாங்க. நான் மாத்திக்கலை. இந்தப் பேரை கேட்டாலே நான் எங்கிருந்து வந்தவன்னு ஈஸியா சொல்லிடலாம். நான் வந்த இடத்தையோ என் மக்களையோ கேவலமா என்னிக்குமே நினைச்சதில்லை."

"அப்போ எம்பேரு மட்டும் ஏன் வெங்கட் ரமணன்னு..."

"நான் படிப்பை விடாம இருந்ததற்கும், என் முன்னேற்றத்திற்கும் காரணமா இருந்தவர் என் கணக்கு வாத்தியார் வெங்கிடரமணய்யர்தான். அவருடைய முழுப்பெயரை உனக்கு வைக்க முடியலைன்னாலும் பரவாயில்லைன்னுட்டு முக்கால் பெயரை வைத்தேன்'' என்று சிரித்தார்.

'சலக்...சலக்...!'

"தீவுக்குப் போகாதே.. இருட்ட ஆரம்பிச்சுடுச்சு. ஒரே பூச்சியா இருக்கும். போட்டை திருப்பிக்கோ" என்றார்.

படகு திரும்பத் துவங்கியது. வெங்கியின் மனசும்...

"நமக்கு கொடுக்கப்படும் சலுகையை ஏன் வேணாம்னு சொல்லணும்?" வெங்கி.

கையைப் பின்புறம் ஊன்றி, வானத்தை அண்ணாந்து பார்த்தார் சுடலைராஜன். "உனக்கொண்ணு புரியுதா? நாம தாழ்த்தப்பட்டவர்கள்தான், தாழ்ந்தவர்கள் இல்லை..." என்று கூறி மீண்டும் வெங்கியைப் பார்த்து–

''தினமும் மூணுவேளை சாப்பிட்டு புஷ்டியா இருக்கறவனையும் சாப்பிடுவதற்கு மூணு நாள் காத்திருக்கறவனையும் ஓட்டப் பந்தயத்தில் ஓட விட்டா என்ன ஆகும்?"



''பெண்மையின் சிறப்பை விளக்கி, தாய்க்குலத்தினிடம் பேச வந்த தலைவரு கடைசில சொதப்பிட்டாரு...''

''என்ன சொன்னாரு?''

''குழந்தைக்குப் பேர் வைக்கச் சொல்லி ஒரு பொம்பளை கேட்டுச்சு. 'தேர்தல் நிதிக்குப் பணம் தந்தாத்தான் பெயர் சூட்ட முடியும்; ஆண் குழந்தைன்னா நூறு ரூபா தரணும்; பொட்டச்சின்னா ஐம்பது ரூபா தந்தாப் போதும்'னு சொல்லிட்டாரு!''

– ஆர். ரகோத்தமன்

---

வெங்கி உடனே "அக்கிரமம்" என்றான்.

"அதனாலதான் தனித்தனியாக ஓடவிட்டாங்க. நான் படிச்ச காலத்துல படிப்பெல்லாம் பள்ளிக் கூடத்துலதான். வீட்டுக்கு வந்தவுடன் ஐயாவோட வேலை செய்யணும். பரீட்சைக்கு முன்னாடி நாள் மட்டும்தான் விடுவாரு. அன்னைக்கு மட்டும் ராத்திரியெல்லாம் ரமணய்யர் வீட்டுல படிப்பேன். நம்ம வீட்டுல 'லைட்' கிடையாது. ஐயா வேற சுதியில இருப்பாரு. ரொம்ப நேரம் சிம்னி விளக்குல படிச்சா வைவாரு. 'படுல. படிச்சு பட்டணத்தை வாங்கறவனாட்டம்'பாரு!

'சலக்...சலக்...!'

"எந்த சப்ஜெக்டை எப்படி படிக்கணும். எதுல அதிக கவனம் செலுத்தணும் விடை தெரிஞ்சாலும் எப்படி எதை சிறப்பா தேர்வுல எழுதறது– இப்படி எதுவுமே தெரியாமல் முட்டி மோதிக்கிட்டு வந்தேன். அப்போ எனக்கு இட ஒதுக்கீடுங்கற ஊன்றுகோல் தேவைப்பட்டது. உனக்கு நான் எந்தக் குறையும் வைக்கல. செயின்ட் ஜான்ஸ்ல சேர்த்தேன். கோச்சிங் கிளாஸ், சம்மர் கோச்சிங்னு எதுலயும் எந்தக் குறையும் வைக்கல.

"உனக்கு மூணு வேளைச் சோறும் கிடைச்சு புஷ்டியான பிறகும் அந்த நைந்துபோன கூட்டத்தோடு ஓடி ஜெயிக்கணும்னு ஏன் பேராசைப்படற?" என்று வெங்கியைக் கூர்ந்து பார்த்தார்.

தலையைக் குனிந்தபடி, "நீங்க ஒருத்தர் மாறிடறதால இந்த சமூகம் மாறிடும்னு நெனைக்கிறீங்களா? மேல் ஜாதிக்காரங்க ஜாதிப்பேரை மாத்திக்கொடுத்து சலுகையை அனுபவிக்கிற காலம் இது!"

"மாட்டுச் சாணம்! இதே வழக்கமா போயிடுச்சு! லஞ்சம் கொடுக்க முடிஞ்சா கொடுத்து வேலையை சாதிச்சுக்கறது... முடியலைன்னா லஞ்சத்தை எதிர்த்துப் புலம்பறது! நம்ம நாட்டுலதான் எல்லா அநியாயங்களும் நியாயப்படுத்தப்பட்டாச்சு. எப்படி இருந்தாலும் இந்த இட ஒதுக்கீடு ரொம்ப நாளைக்கு நீட்டிக்க முடியாது; கூடாது. அரசியல்வாதிங்க இதை ஒரு ஓட்டு வங்கியாத்தான் பயன்படுத்துறாங்க. நாமதான் மாறணும். மேல் ஜாதிக்காரங்க கீழ் ஜாதிக்காரங்களை எதிரியாகவோ, போட்டியாகவோ நினைக்காம முன்னேறும் இனமா மதிக்கணும். நாமும் முன்னேறியபின் மத்த தாழ்த்தப்பட்டவர்களுக்கு வழி விடணும். அப்போதான் உண்மையான சமநிலை சீக்கிரம் வரும்..." உணர்ச்சி வசப்பட்டுப் போனார் சுடலைராஜன். தொடர்ந்தது–

"இதை நான் சந்திக்கும், பழகும் நண்பர்கள் எல்லோரிடமும் சொல்லிக்கிட்டு வரேன். நெறயபேரு மாறிட்டுத்தான் வராங்க. அவங்க அதை மத்தவங்களுக்குச் சொல்வாங்க. தூறலா ஆரம்பிச்சுத்தான் பெருமழை பெய்யும்."

சுடலைராஜனின் முகத்தில் பெருமிதம் தெரிந்தது.

"இதையெல்லாம் என்கிட்ட முன்னமே ஏன் சொல்லலை?" என்று வெங்கி ஏக்கமாய் கேட்க,

"நீ பெரியவனா ஆனவுடன் சொல்லலாம்னு இருந்தேன். ஆபீஸ், உத்யோகம்னு நீ பெரியவனா ஆனதே எனக்கு தெரியாமா போச்சு. அது என்னோட தப்புதான். ஸாரி!"

"இல்லப்பா! நீங்கதான் என்ன மன்னிக்கணும். எதையும் புரிஞ்சுக்காம கன்னாபின்னான்னு பேசிட்டேன்."

"இப்பவாவது தெளிவா இருக்கயா! இல்ல... வீட்டுக்குப் போனவுடன் உன் அம்மாகிட்ட என்னை அக்கறையில்லா அப்பான்னு சொல்லுவியா...!" என்று சிரித்தபடி சட்டென்று கோட் பாக்கெட்டை தடவி ஒரு கவரை எடுத்தார்.

''டோஃபல் (Test of English as a foreign Language) அப்ளிகேஷன்! ஜிமேட். உம் எழுது. நல்ல யூனிவர்சிடி. கெடச்சா நான் உன்னை அனுப்பி படிக்க வைக்கிறேன். திரும்பவும் 'CAT'ம் எழுது! இங்க படிச்சாலும், அமெரிக்கா போய் படிச்சாலும் உன்னுடைய சர்வீஸ் இந்தியாவுக்குத்தான்... என்ன!" என்றார்.

கரை நெருங்கியது.

முதலில் சுடலைராஜன் கரை ஏறினார். வெங்கி ஏறும்போது படகு சற்று தள்ளாட, "பார்த்துப்பா..." என்று பதறி நீட்டிய அப்பாவின் கரங்களை பற்றிக் கொண்டான் வெங்கி.

பற்றிய கரங்களை இறுக்கி, கரையேற்றி விட்டார் சுடலைராஜன்.

பிரமித்துப் போய் நின்றிருந்த மன்னியைப் பார்த்து அண்ணா, "நீயும் கொடுத்துடு!" என்றான்.

மன்னி முதலில் இரட்டை வடம் சங்கிலியைக் கழற்றி அண்ணாவிடம் கொடுத்தாள். பிறகு திருமாங்கல்யம் கோத்திருந்த செயினைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு, காப்பிக் கொட்டைச் சங்கிலியைக் கழற்றிக் கொடுத்தாள்.

அண்ணாவுக்குப் பிரமிப்பாய் இருந்தது.

பிறகு வலது கையால், இடதுகை வளையல்கள் நான்கையும் ஒரே வீச்சில் உருவி எடுத்து வைத்தாள். அப்புறம் வலக்கை வளையல்கள் நான்கு. கைவிரலிலிருந்து நெளி மோதிரத்தைக் கழற்றினாள்.

மன்னி வைரத் தோட்டையும் கழற்றிய போது அண்ணாவுக்கு ஆச்சரியமாய் இருந்தது. ஜோடியாகக் கழற்றி அண்ணாவின் கையில் வைத்தாள். எத்தனை ஆசைப்பட்டு வாங்கிக் கொண்டாள்...

கையோடு கொண்டு வந்திருந்த தோல்பையிலிருந்து நாலு ரப்பர் வளையல்களை உடனே எடுத்து, கைக்கு இரண்டாக மாட்டிக் கொண்டாள்.

"எல்லாத்தையும் அவர்ட்ட கொடுத்துடுங்கோ!" என்றாள் மன்னி.

அண்ணாவால் நம்பவே முடியவில்லை என்பது அவன் அவளைப் பார்த்த பார்வையிலேயே தெரிந்தது.

தலைவர் மன்னியைப் பார்த்து, "மூக்குக் குத்திக்கலியா நீங்க? குத்திக்கிட்டிருந்தா, கூட ஒரு மூக்குத்தியும் நாட்டுக்குக் கிடைச்சிருக்குமேன்னேன்!" என்றார் சிரித்தபடி.

அண்ணா எல்லாவற்றையும் தன் பெரிய வெள்ளைக் கைக்குட்டையில் வைத்து அப்படியே தலைவரிடம் நீட்டினான்.

"இப்படிக் கொடுக்கறதுக்கு மனசு வரணும்னேன்!" என்றார் தலைவர்.

உதவியாளர் எல்லாவற்றையும் குறித்துக் கொண்டு, விலாசமும் கேட்டுக் கொண்டார்.

"நீங்க பெரிய வேலையிலே இருக்கீங்களா?" என்று கேட்டார் தலைவர். அண்ணா சொன்னான்.

''படிப்பு முடிச்ச உடனே சுதந்திரப் போராட்டத்துல கலந்துக்கிட்டு அந்நியத் துணி எல்லாம் கொளுத்தி ஜெயில்ல நாலு மாசம் இருந்திருக்கேன்!" என்றான் அண்ணா. அதைச் சொல்லும் போது அண்ணாவின் குரலில் கொஞ்சம் பெருமிதம் தெரிந்தது.

"நாட்டோட பாதுகாப்பும், கௌரவமும், நன்மையுந்தான் எந்த நாளும் எந்த நேரமும் நினைவுல இருக்கணும். நாட்டோட கௌரவம், நாட்டோட நன்மை எல்லாம் பாதுகாப்புக்கு அப்புறந்தான். இதுக்கப்புறந்தான் உங்க கீழ இருக்கிற சோல்ஜர்களோட சௌகரியம் நினைவுக்கு வரணும். அப்புறம் எந்த நாளும், எந்த நேரமும், கடைசியாத்தான் உங்க பாதுகாப்பு, உங்க சௌகரியம் எல்லாம்னு, மிலிடரி



**திருச்சியில் ஆட்டோ ஒன்றில் எழுதப்பட்டிருந்த வாசகம் :**

**''கடவுள் மனிதனாகப் பிறக்க வேண்டும்; அவன் ஆட்டோ ஓட்டி வேதனையில் வாட வேண்டும்.''**

**- ஒட்டநத்தம் சங்கர்**

---

காலேஜ்ல படிக்கறப்ப சொல்லிக் கொடுப்பாங்க. நம்ம ஜவான்கள் குளிர்லயும், பனியிலயும் நாட்டைப் பாதுகாக்க எல்லையில கஷ்டப்படறாங்க. அது ஜனங்களுக்கெல்லாம் தெரியணும்னேன்..."

டேராடூன் மிலிடரி அகடமியில் ஷெர்வுட் ஹால் சுவரில் எழுதியிருக்கும் இந்த வாசகங்களை இந்த மனிதர் எப்போது பார்த்தார்? எப்படி இந்த அளவுக்கு நினைவு வைத்துக் கொண்டிருக்கிறார் என்று எனக்கு வியப்பாய் இருந்தது.

வீடு திரும்பும் போது மன்னி ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

"ஒரே ஒரு ரெட்டை வடம் சங்கிலியைத்தானே கொடுக்கச் சொன்னேன்? எப்படி எல்லாத்தையும் கழற்றிக் கொடுக்க உனக்கு மனசு வந்தது?" என்றான் அண்ணா.

"ஒண்ணுமே இல்லாத கிழவி, தன்னோட அரைப் பவுன் மோதிரத்தை எடுத்துண்டு ஓடி வந்திருக்காளே, அதைப் பார்த்தப்போ எல்லாத்தையும் கழற்றிக் கொடுத்தாலும் நீங்க ஒண்ணும் சொல்ல மாட்டேள்னு தோணித்து. மளமளன்னு கழட்டிக் கொடுத்துட்டேன். ஒண்ணுமே யோசிக்கத் தோணலே! எல்லாத்தையும் கழட்டிக் கொடுத்ததுல உங்களுக்குச் சந்தோஷம் இல்லையா?"

"எனக்கு ரொம்ப சந்தோஷம்தான். ஆனா பெண்களே சாதாரணமா நகையை எல்லாம் அப்படி ஒண்ணும் லேசுல கழட்டிக் கொடுக்க மாட்டா இல்லையா, அதுக்குத்தான் கேட்டேன்!" என்றான் அண்ணா.

''நகை ஒண்ணும் இல்லாட்டாலும் நீ இப்பத்தான் ரொம்ப அழகாய் இருக்கே!'' என்று அண்ணா மிக அந்நியோன்னியமாய், சாலை என்றும் பாராமல் மன்னியின் கையைப் பிடித்துக் கொண்டு நெகிழ்ச்சியாய்ச் சொன்னது எனக்கு நன்றாகக் கேட்டது.

இதற்கு முன்னால் பாகிஸ்தான் போரில், காஷ்மீர் எல்லையில், மன்னியின் தம்பி நாட்டுக்காகப் போராடி உயிரிழந்ததும் ஒரு காரணமாய் இருக்கலாம் என்று அண்ணாவுக்கு அப்போது ஏனோ நினைவுக்கு வரவில்லை.

# 10

# மாலை மயங்குகின்ற நேரம்

மனைவியின் கடைக்கண் விடுத்த கேள்விக்கு, உரிய பதில் சொல்லி விடத் துடிப்பவன் போல, உதயரேகாவை நோக்கி விரைந்த கிருஷ்ணசந்திரன், கனவு கலைந்தாற்போல அடுத்த எட்டிலேயே நின்று விட்டான். பார்வையை அவளிடமிருந்து அவசரமாக விலக்கி, "எனக்கு நிறைய வேலை இருக்கிறது" என்று முணுமுணுத்தபடியே திரும்பி வேகமாக அவன் அறைக்குள் சென்று கதவையும் சாத்திக் கொண்டான்.

கன்னங்களில் செம்மையுறக் காத்திருந்தவளுக்கு ஏமாற்றம்தான். ஆனால், அதைவிட, ஏன் இப்படி என்ற கேள்வி மனதை மிகவும் குடைந்தது.

சாதாரண மனிதர்களுக்கு உரிய ஆசாபாசங்கள் அத்தனையும் உடையவனாகத்தானே தோன்றுகிறான்? கூடவே, அவளிடமும் ஆசை இருப்பதாகவும்தான் காண்கிறது.

பிறகு அவனை எது தடுத்தது? ஏன் இப்படி ஓட வேண்டும்? ஆனால், அந்த வினாடியில் அவனுக்கு நினைவு வந்த தடை எதுவாக இருந்தபோதும், கணவனை நெருங்கி விட முடியும் என்ற நம்பிக்கையும் முன்னெப் போதையும் விட உதயரேகாவுக்கு அதிகம் ஆயிற்று.

மிகவும் சாதாரணமான கேலிப் பேச்சினாலேயே கணவனைக் கவர முடிவதை உணர்ந்து, அடிக்கடி அவனைப் பேச்சுக்கு இழுத்தாள் உதயா.

ஆனால், அன்றையச் சறுக்கலின் பின் கிருஷ்ணசந்திரன் மிகவும் விழிப்புடன் இருக்கவே, அவளது முயற்சிகள் அனைத்தும், சாண் ஏறி முழம் சறுக்குவதைப் போல ஆயின.

அன்றையப் பேச்சு தந்த சகஜ பாவத்தைத் தொடர்வது போல, "உங்களை என்ன சொல்லி அழைப்பது?" என்று கணவனைக் கேட்டாள் உதயரேகா. "எனக்கு இந்த 'என்னாங்க', 'இந்தாங்க' என்பதெல்லாம் பிடிக்கவில்லை. உங்களுக்கு என்ன தோன்றுகிறது?"

காலை உணவு முடிந்து, காப்பி அருந்திக் கொண்டிருந்த கிருஷ்ணசந்திரன் அக்கறையற்றவனாகத் தோளைக் குலுக்கினான்.

கவனியாதவள் போலத் தனக்கும் ஒரு கப் காப்பியை ஊற்றியபடி, "மற்றவர்கள் உங்களை எப்படி அழைக்கிறார்கள்?" என்று விடாமல் விசாரித்தாள் மனைவி.

உணர்ச்சியற்ற குரலில், "புதியவர்கள் மிஸ்டர் கிருஷ்ணசந்திரன் என்பார்கள். கொஞ்சம் தெரிந்தவர்கள் கிருஷ்ணன் என்பார்கள். அம்மாவுக்கு நான் க. கண்ணப்பன். சில சமயம் சந்திரன். வசு அண்ணா என்பாள்" என்று இயந்திரம் போல ஒப்பித்தான் கணவன்.

"ஊகூம்" என்று எழிலாக உதட்டைப் பிதுக்கினாள் உதயரேகா. "இதெல்லாம் சொல்லி நான் அழைக்க முடியாது!"

அவன் பேசாமல் காப்பியில் கவனமாயிருக்கவும், "அன்று உங்கள் நண்பர் உங்களைக் 'கேசி' என்றார்... ஆனால் அப்படிக் கூப்பிடுவதும் சரியாகத் தோன்றவில்லை..." என்றாள் அவள் யோசனையோடு.

"கரெக்ட்!" என்றான் கிருஷ்ணசந்திரன். "ஏனெனில் நீ என் சினேகிதி அல்ல" என்ற போது அவன் குரல் அவளை மட்டம் தட்ட முயன்றது.

அவனை வெறித்து நோக்கி விட்டு, "ஆமாம். மனைவி வெறும் சினேகிதியாக இருக்க முடியாதுதான். ரொம்பவும் சரியாகவே சொன்னீர்கள் மிஸ்டர் அனாமதேயன்!" என்றாள் உதயரேகா.

கணவன் சற்றுத் திடுக்குற்று நிமிரவும், "இது தேவலாமா? அல்லது நல்ல தமிழில், பெயரில்லாப் பூச்சி பரவாயில்லையா?" என்றவள், அவன் பேசாமல் அலுவலகம் செல்வதற்குத் தயாராகக் கைப் பெட்டியை எடுக்கவும் கூடவே நடந்தபடி, "இது போல இன்னும் கூட ஒன்றிரண்டு பொருத்தமான பெயர்கள் – உம்மணா மூஞ்சி, பேசாமடந்தை என்று இருக்கின்றன. எது மேல் என்று யோசித்து, சாயங்காலம் வரும் போது சொல்கிறீர்களா? இப்போது போய் வாருங்கள்" என்று உதடுகளைக் காது வரை இழுத்துப் புன்னகை செய்தாள்.

சற்று நின்று, "என் பெற்றோர் என்னைக் கேட்டு எனக்குப் பெயர் சூட்டவில்லை. நீயும் உன் விருப்பம் போல எந்தப் பெயரிட்டு என்னை



அழைப்பதானாலும் எனக்குச் சம மதமே'' என்று கூறி விட்டு மடமட வென்று படியிறங்கிச் சென்று காரில் ஏறினான் கிருஷ்ணசந்திரன்.

'கல்லுளிமங்கன்'தான் ரொம்பவும் பொருத்தம்' என்று ஆத்திரத்துடன் முணுமுணுத்தாள் உதயரேகா.

மாலையில் வந்தவனிடம் அதையே சொல்லிப் பார்த்தாள்.

அப்போதும், தோளைக் குலுக்கி விட்டுப் பேச்சின்றி விலகிப் போனானே தவிர, அவன் கோபமாக ஒரு பார்வை கூட அவளைப் பார்த் தானில்லை. வாய்ப் பேச்சில் அவளை மடக்க முயற்சியும் செய்தானில்லை.

அவளது தந்திரத்தை ஊகித்து, அவன் விலகிப் போவதை உதயாவும் புரிந்து கொண்டாள். ஆயினும் அத்தோடு விட்டுவிட மனமின்றி, இது போல மேலும் ஓரிரண்டு முயற் சிகள் செய்து தோற்றபின், கிருஷ்ண சந்திரனைச் சீண்டி விட்டு அவனது கவனத்தைத் தன்னிடம் ஈர்ப்பது இயலாத காரியம் என்ற முடி வுக்கு, வேறு வழியின்றி, உதயா வர நேர்ந்தது.

ஆனால், அதற்காக உடனே மனம் ஒடிந்து போய் விடாமல், அடுத்த முயற்சி பற்றி யோசித்தாள்.

'ஓர் ஆணின் இதயத்தை அவனது வயிற்றின் மூலம் தான் எட்டிப் பிடிக்க வேண்டும்' என்று எதிலோ படித்த ஞாபகம் வந்தது.

உடனே கிருஷ்ணசந்திரனிடம் சென்று, சாப்பாட்டில் அவனுக்கு என்னென்ன அயிட்டங்கள் பிடிக்கும் என்று விசாரித்தாள்.

ஒரே பார்வையில் அவள் மனதைப் படித்து, "எனக்காக யாரும் மெனக்கெட வேண்டாம். நம் சமையல்காரன் செய்வதே எனக்குத் திருப்திதான்'' என்று முடித்தான் அவன்.

இவனிடம் வந்து கேட்டேனே என்று தன்னையே கடிந்து கொண்டு, கணவன் அலுவலகம் சென்றபின்,

**ரமணி சந்திரன்**

காந்திமதிக்கு டெலிஃபோன் செய்து விவரம் கேட்டாள்.

"ஏன்? ஓகோ, உன் புருஷனுக்கு நீயே சமையல் பண்ணிப் போடப் போகிறாயாக்கும்?" என்று சிரித்து விட்டு, "கவனமாய்ச் செய்யம்மா. கையைச் சுட்டுக் கொண்டு விடாதே" என்ற கவனப்படுத்தலோடு, மகனுக்குப் பிடித்த உணவு வகைகளை விவரித்தார் மாமியார்.

உதயரேகா சமையலில் ஆனா, ஆவன்னா கூடத் தெரியாத கைநாட்டு அல்ல. சித்தி யசோதாவின் நளபாகத்தில் மயங்கித் தானும் சில வகைகள் கற்றிருந்தாள். யசோதாவும் எதையும் மறைக்காமல் நன்றாகவே கற்றுக் கொடுத்திருந்தாள்.

எனவே, காந்திமதி சொன்ன பதார்த்தங்களைச் செய்வது உதயாவுக்கு எளிதாகவே பட்டது.

ஆயினும் கண்ணும் கருத்துமாக வெகு கவனத்துடன், காந்திமதி சொன்னவாறு சோம்புத் தூள் கலந்த எண்ணெய்க் கத்தரிக்காயைத் தயார் செய்து மதிய உணவுடன் கிருஷ்ணசந்திரனுக்கு அனுப்பி வைத்தாள்.

திரும்பி வந்த 'ஹாட் பேக்' கிட்டத்தட்ட காலியாக இருக்கவும் உதயரேகாவுக்கு ஒரே உற்சாகம். தினம் ஒன்றாகத் தன் கைத் திறமையைக் காட்டலானாள். ஒருநாள் பச்சை மிளகாயும் வெங்காயமும் வதக்கி, தேங்காய்ப் பால் ஊற்றி இறக்கிய தக்காளிக் குழம்பு, ஒருநாள் நவரத்தினக் குருமா, ஒருநாள் புதினா சாதம் என்று தினம் ஒரு புதிய பதார்த்தம் அலுவலகம் சென்றது.

"எப்போதையும் விட அய்யா கொஞ்சம் அதிகம் சாப்பிடுகிறார், அம்மா. வழக்கமாக, அனுப்புவதில் பாதி மீதி வரும். இப்போது முக்கால் பாகம் காலியாகி விடுகிறதே!" என்று சமையல்காரன் பாராட்டவும் உதயாவுக்குத் தரையில் கால் பரவவில்லை.

அன்று மாலை வந்த கணவனிடம், "இன்றையச் சாப்பாடு எப்படி இருந்தது?" என்று ஆவலுடன் விசாரித்தாள்.

வழக்கம் போலத் தோளைக் குலுக்கி, "யாருக்குத் தெரியும்?" என்றான் கணவன்.

திகைத்துப் போய், "கொ..கொஞ்ச நாட்களாக நீங்கள் நன்றாகச் சாப்பிடுவதாக சமையல்கார நாகராஜ் சொன்னான்... அதனால்தான்... வந்து... சமையல் பிடித்ததா... என்று..." என்று தடுமாறினாள் மனைவி.

"கொஞ்ச நாட்களாக நான் வீட்டுச் சாப்பாடு சாப்பிடவே இல்லையே. வெளி மாநிலத்திலிருந்து சில கஸ்டமர்ஸ் சென்னைக்கு வந்திருக்கிறார்கள். நான் அவர்களோடல்லவா சுற்றிக் கொண்டு இருக்கிறேன்!"

"பி...பின்னே உங்கள் சாப்பாடு?"

"அந்த வங்காளிகளோடு ஓட்டலில்."



*டீக் கடைக்காரர்கள் காலரைத் தூக்கி விட்டுக் கொள்ளவும். உங்க தொழிலுக்கு கிளாமர் சேர்க்க ஆக்ஷன் கிங் அர்ஜுன் முன்வந்து, 'சர் சர்' என்று டீ அடிக்கிறார். அதனாலேயே ரோஜா உங்களைத் தேடி வந்து ஜோரா அசடுவழிவார் என்று நினைக்க வேண்டாம்! உயர் போலீஸ் அதிகாரி நாகேஷ் உதவியுடன் கொள்ளை அடித்து, தமிழ்நாட்டின் அத்தனை ஒயின் ஷாப்புகளையும் வளைத்துப் போட்டு கோடீசுவரனாகி விடலாமென்று எதிர்பார்ப்பையும் வளர விட வேண்டாம்! அதெல்லாம் உளுவாகட்டிக்கு - சினிமாவுல மட்டுமே நடக்கிறவை.*

*ஒரு படத்தில் அதிகபட்ச அடி, உதை, குத்து என்று கணக்கெடுத்தால் அர்ஜுனுக்கு நிச்சயம் கின்னஸ்ஸில் இடம் உண்டு. 'இம்மாதிரி வன்முறைக் காட்சிகள் குழந்தைகள் உள்ளங்களைக் கெடுக்கும்' என்று சத்தியம் பண்ணும் அசடுகளின் வாயை அடக்க, இந்தப் படத்தில் பேபி நிகிதா ஒரு வசனம் பேசுகிறாள் : "நீங்க ஃபைட் பண்ணுங்க அங்கிள்; நாங்க கைதட்றோம்." குழந்தையே அங்கீகாரம் அளித்த பிறகு, சென்சார் எதற்கு 'ஏ' சர்டிஃபிகேட் தரப் போகிறார்கள்? கிளைமாக்ஸ் காட்சியில் ஒரு குழந்தையையே வில்லன் உயிரோடு எரிக்க முயன்றால்தான்*



(காப்பிரைட் உரிமை : "கல்கி")
என்றாலும் அலட்டலில்லாத அந்த ரோலில், திலகன், வில்லன் திலகமாகிறார்.

காமெடி டிராக் தனியே இல்லாமல் ஹீரோவின் உடன்பிறவா சகோதரர் கவுண்டமணி கவனித்துக் கொள்கிறார். கலகலா.

நாகேஷ் நடிப்பு டாப். ஆனால் கதாபாத்திரம் – கேரக்டர் – பாட்டம்!

பாவாடை மடித்துப் பாண்டி ஆடும்

# ஆயுத பூஜை

என்ன? குழந்தைக் குலம் கண்டு களிப்பதாக! மேலும் கடைசி கடைசியாக, "ஆயுதங்களால் மனிதனை வெல்லலாம்; அன்பினால்தான் உள்ளங்களை வெல்ல முடியும்" என்று உபதேசத்தை எழுதிக் காட்டுறாங்களே; அதனால் அத்தனை வன்முறைக் காட்சிகளும் அப்படியே மறந்து போய், அன்பு நம் உள்ளங்களில் பொங்கத்தானே வேண்டும்!

முதல் மார்க் நிகிதாவுக்குத்தான். கன்னத்தைக் கிள்ளி முத்தமிடுவதா அல்லது தடவி திருஷ்டி சொடக்குவதா என்று நமக்கு ஒரு தவிப்பு.

ஆக்ஷன் கிங் மட்டுமல்ல, ஆக்டிங் கிங் கூடத்தான் என்று அர்ஜுனின் முகபாவங்கள் நிரூபிக்கின்றன. குறிப்பாக நிகிதாவின் கலருடன் அர்ஜுனின் B & W பாவங்களை அடுத்தடுத்துக் காட்டும் போது, நம்மீது பன்னீர் தெளிக்கிறார் காமிராமேன். அது சரி, ஸ்லோமோஷன் டூமச்சாக தோன்றவில்லையா, மிஸ்டர் பன்னீர் செல்வம்? கிராமக் காட்சிகள் இதம்.

வில்லன், கையிழந்த நவீன நாகநந்தி



ரோஜாவும் சரி; ஆடு வெட்டியதும் மயங்கி விழும் (நமக்கே மயக்கம் வருதே!) குடும்பப்பாங்கான ஊர்வசியும் சரி, கன கச்சிதம் – மத்தாப்பூவும் குத்துவிளக்கும் மாதிரி.

இசையும் நடனமும் இரட்டைத் தலைவலி தருவதே இன்றைய ஃபாஷன்.

ஃபாரின் பிக்சர் போல குண்டுவெடிப்பில் கார்கள் தூக்கி எறியப்படுகின்றன. ஒரே வித்தியாசம் : இங்கே காயலான் கடை கார்கள்!

சொதப்பலில்லாத ஃபிளாஷ்பேக், சறுக்கலில்லாத டெம்போ இவற்றுக்கு அறிமுக டைரக்டர் – கதை வசனகர்த்தா சிவகுமார்– பாராட்டை எடிட்டருடன் கொஞ்சம் பகிர்ந்து கொள்ளவும். ஆயுத பூஜை என்ற புனிதச் சொல்லைக் கொச்சைப்படுத்தியதற்காக குட்டுப் பெறவும்.

படம் பார்த்து விட்டு வருவோர் உள்ளத்தில் மில்லியன் டாலர் கேள்வி : ஏழாவது எட்டாவது மச்சங்கள் எங்கே? தூக்கம் வராமல் தவிக்கிறாங்களாம்!

"ச்சு. அதைக் கேட்கவில்லை. வீட்டிலிருந்து தினம் அனுப்புகிற சாப்பாட்டை என்ன செய் கிறீர்கள் என்று கேட்டேன்" என்று உள்ளூர ஆத்திரத்துடன் கேட்டாள் உதயரேகா.

ரொம்பவும் ஸ்டைலாகத் தோளைக் குலுக் கினான் அவன். "யார் கண்டது? ஆபீஸ் பையன் சாப்பிடுகிறான் என்று நினைக்கிறேன். அல்லது... அலுவலகத்தில் யாராவது உணவு கொண்டு வரவில்லை என்றால், அந்தச் சமயம் நான் வெளியே சென்று விட நேர்ந்தால், என் சாப்பாட்டை அவர்களுக்குக் கொடுத்து விடும் படி ஏற்கெனவே சொல்லி வைத்திருக்கிறேன். அப்படி யாராவது உண்டிருக்கலாம்" என்றான் அசட்டையாக.

உதயரேகாவுக்குக் குமுறிக் கொண்டு வந்தது. அதென்ன, வெறும் மசாலாவும் காய்கறி, பருப்புமா? அவள், அவளுடைய கண வனுக்காகப் பார்த்துப் பார்த்து, ஆசையும் பாச மும் கூடக் கலந்து செய்தனவாயிற்றே. அதை எல்லாம் யார் யாரோ சப்புக் கொட்டிச் சாப் பிடுவதா?

"அப்படி மதிய உணவுக்கு வெளியே செல் வது என்றால் வீட்டிற்குத் தகவல் சொல்லி விட்டுப் போயிருக்கலாமே!" என்றாள் அவள் எரிச்சலோடு.

அவன் கேள்வியாய் நோக்கவும், "உங் களுக்கென்று சமைத்து எடுத்து வைத்து அனுப்பி வீணாக்குவானேன்?" என்றாள்.

"வீணாவானேன்? அதை என்ன, குப்பை யிலா கொட்டி விட்டார்கள்? ஏதோ ஒரு பசித்த வயிற்றுக்குத்தானே போகிறது?" என் றான் அவன் சற்றுக் கடினமான குரலில், கண் டிப்பது போல.

தலையைச் சிலுப்பி, "உங்களுக்காகவே என்று சமைத்ததை நீங்கள் சாப்பிடவில்லை என்றால் அது வீண்தான்" என்றாள் அவளும் குரலில் அழுத்தத்துடன்.

"எனக்காகவே என்று சமைத்ததா? பின்னே வீட்டில் மற்றவர்கள் எல்லோரும் என்ன சாப் பிடுகிறீர்கள்? உங்களுக்காக நாகராஜ் எதையும் சமைப்பது இல்லையா? அதென்ன அப்படி ஒரு திமிர்? கூப்பிடு அவனை... பையா..."

அதட்டியவாறு கிருஷ்ணசந்திரன் எழவும் அவன் மனைவி அவசரமாகக் குறுக்கிட்டாள். "ப்ளீஸ், நான் சொல்வதை முதலில் கேட்டு விடுங்கள். நாகராஜ் எல்லோருக்கும் சேர்த்துத் தான் சமையல் செய்கிறான். அவன் மேல் ஒரு தப்பும் இல்லை."

"பின்னே?"

"என்ன பின்னே? உங்களுக்கு என்று தனியே செய்தது நான்தான். உங்களுக்குப் பிடித்தது என்னென்ன என்று அத்தையிடம் கேட்டுத் தயாரித்து அனுப்பினேன். அவ் வளவுதான் விஷயம்" என்று எரிச்சலோடு போட்டு உடைத்தாள்.

அவள் கற்பனை செய்து வைத்திருந்த காட்சியே வேறு.

'கொஞ்ச நாட்களாகச் சாப்பாடு வெகு ருசியாக இருக்கிறது' என்று கிருஷ்ணசந்திரன், சமையல்காரனைப் பாராட்டுவான்; அசடு வழிய, 'அம்மாதாங்க செய்தாங்க' என்று நாக ராஜன் உண்மை கூறுவான்; உடனே கிருஷ்ண சந்திரன், நமக்காக நம் மனைவி இவ்வளவு செய்கிறாளே என்று ஆசையும் அன்புமாக – ஆசையாக இல்லாவிட்டாலும், பெருமையாக வேனும் நோக்குவான் என்று நினைத்திருந்தாள். ஆனால் அவள் முயன்று செய்ததெல்லாம் கணவன் ஒரு சொட்டு சுவை கூடப் பார்க்க வில்லையே! எல்லாம் வீண்!

ஆனால் இன்னும் கூட முயன்று பார்க் கலாமோ?

ஓரக் கண்ணால் கணவனைப் பார்த்தாள் அவள்.

அவன் தன் வழக்கமான, உணர்ச்சி துடைத்த முகத்துடன் அமர்ந்திருந்தான்.

"வந்து... நாளைக்கு மதியம் வீட்டுச் சாப் பாடு சாப்பிடுகிறீர்களா? அல்லது இரவுக்கு..." என்று அவள் தொடங்கவும் "வேண்டாம், உதய ரேகா. விட்டு விடு" என்றான் அவன் மெது வாக.



"இதயத்தைக் கைப்பற்ற இப்படி ஒரு வழி இருப்பதாக என் அம்மாவோ, உன் சித்தியோ உனக்குக் கூறியிருப்பார்கள் என்று நினைக்கிறேன். ஆனால் என் விஷயத்தில் இது சற்றும் பயனற்றது உதயரேகா. எனவே அனாவசியமாய், இந்த எண்ணெய்க் கத்தரிக்காய், தக்காளிக் குழம்பு, நவரத்தினக் குருமா, புதினா சாதம் என்று ஏதாவது செய்து அனுப்புவதை இத்தோடு நிறுத்தி விடு'' என்று அவன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே உதயாவின் கண்கள் அகன்றன.

வியப்பும் மகிழ்ச்சியும் விழிகளில் பரவ, "அதை எல்லாம் நீங்கள்... நீங்கள்தான் சாப்பிட்டிருக்கிறீர்கள்! அப்படித்தானே?'' என்று உற்சாகத்துடன் வினவியவள், உடனேயே, "நன்றாக இருந்ததா? உங்களுக்குப் பிடித்ததா?'' என்று ஆவலாகக் கேட்டாள்.

சிறு அமைதியின் பின், "எல்லாமே சுவையாகத்தான் இருந்தன, உதயரேகா. ஆனால் நான் சொல்லுவதைச் சற்றுக் கவனி. என்னைப் பொறுத்த வரையில் என் இதயத்துக்கும் வயிற்றுக்கும் பாலம் எதுவும் கிடையாது. இந்த மாதிரி... ஏன், எந்த வழியிலுமே நீ என்னை அணுக முடியாது. எனவே இதுபோன்ற வீண் முயற்சிகளில் இறங்கி அனாவசியமாக உடம்பை வருத்திக் கொள்ள வேண்டாம்'' என்று நிதானமாக, ஒரு புரியாத குழந்தைக்கு விளக்குவது போல அமர்ந்த குரலில் உரைத்தான் கிருஷ்ணசந்திரன்.

மெய்யாகவே அவளுக்குப் புரியவில்லைதான். ஆனால், இப்போது இது பற்றிய பேச்சைத் தொடர்ந்து அவனது பிடிவாதத்தை உறுதிப்படுத்த வேண்டாம் என்று தீர்மானித்து, "இப்போது, இரவு உணவு எடுத்து வைக்கச் சொல்லட்டுமா?'' என்று கேட்டாள்.

அவள் கேட்டுக் கொண்டு இருக்கும்போதே, கிருஷ்ணசந்திரன் சட்டென எழுந்தான். ''எனக்கு வேண்டாம்'' என்று தெளிவற்ற குரலில் உரைத்து விட்டு, அவனது அறையை நோக்கி வேகமாகச் சென்று உள்ளே போய்க் கதவைத் தாளிட்டுக் கொண்டான்.

இதன் காரணம் தெரியாமல் விழித்தவளுக்கு, அவனது நடையின் தடுமாற்றம் மேலும் திகைப்பூட்டியது.

சற்றுமுன் சும்மாதானே பேசிக் கொண்டு இருந்தான்? இப்போது ஏன் குடிகாரன் போலத் தள்ளாடுகிறான்?

என்னவோ அவளை உறுத்தியது.

ஏதோ தெரிந்த விஷயம்; தெரிந்திருக்க வேண்டிய ஒன்று என்கிற அளவில் உணர முடிந்தது.

ஆனால், எவ்வளவுதான் யோசித்தும், அது என்னவென்பது அவளுக்கு அன்று சற்றும் நினைவு வரவே இல்லை.

(தொடரும்)




# ஒளிவீசும் கதைகள்!

"ஆஹா! எவ்வளவு அனுபவிச்சுப் பாடறார்...." என்று கச்சேரிகள் பற்றி கமெண்ட் செய்யக் கேட்டிருக்கிறோம்.

இன்றைய இசைக் கலைஞரே இவ்வளவு அனுபவித்து ஒரு பாட்டைப் பாட வேண்டுமானால், அதை முதன் முதலாக இயற்றிப் பாடிய மேதை எவ்வளவு ஆழமான அனுபவங்களில் திளைத்திருப்பார்....!

அத்தகைய அனுபவங்களின் தொகுப்புத்தான் ஸ்வாமிநாத ஆத்ரேயன் எழுதியிருக்கும் புத்தகம்.

- தியாகராஜ சுவாமிகள் பாடிய பன்னிரண்டு கீர்த்தனைகளின் பின்னணிக் கதையினூடே, அவை ஒவ்வொன்றையும் இயற்றும் அனுபவத்தினால் அவர் எப்படி புடம்போடப்பட்டுப் பிரகாசித்தார் என்று சொல்லும் உண்மைக் கதைகள்.

இசையுணர்வும் பக்தியும் உள்ளவர்கள் மட்டுமே படித்து ரசிக்க முடியும் என்றில்லாமல், மிகைப்படுத்தப்படாத மனித நேயப் பண்பு ஒளிவீசும் தரமான இலக்கியப் படைப்புகளாக ஒளிர்கின்றன இந்தக் கதைகள்.

*ஸ்ரீ தியாகராஜ அநுபவங்கள் - வெளியீடு : வானதி பதிப்பகம், சென்னை - 17, விலை ரூ. 15.*

— மலர்



(படம் - நன்றி : சண்டே)

பரிசுத் தொகை 2,50,000 டாலர். கொத்து கொத்தாக நகைகள், மேக்-அப் சாதனங்கள், ஏராள உடைகள், உல்லாசங்கள், விழாக்கள் இவற்றுடன் மிஸ் யூனிவர்ஸ் பட்டத்தரசியான சுஷ்மிதா சென் தம் ஓராண்டு 'பட்டப் பொறுப்பை'க் கழித்துவிட்டார். அடுத்த மிஸ் யூனிவர்ஸ் பக்கம் மக்களின் கவனம் திரும்ப, ஹாலிவுட்டில் நடிக்கலாமா, மாடலிங் போதுமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறார் சுஷ்மிதா சென்.

சமீபத்தில் அவர் பேசியது இது :

"நான் ஒரு முடிவு செய்துவிட்டேன். பேசாமல் அமெரிக்கா போய் செட்டில் ஆகிவிடப்போகிறேன். இந்தியா எனக்குச் சரிப்பட்டு வர



# "நள்ளிரவு, போலீஸ் வந்தது மாட்டிக் கொண்டேன்!"

**— சுஷ்மிதா சென்**

வில்லை. ரொம்ப அசௌகரியமாக இருக்கிறது. பத்திரிகைகளும் டீ.விக்களும் பொது மக்களும் எப்போதும் என்னையே கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். என்னைப் பற்றியே பேச்சு! என்னைப் பற்றிய வருணனைகளே எப்போதும்! என் ஒவ்வொரு அசைவையும் விமர்ச்சிக்கிறார்கள். தாங்க முடியவில்லை என்னால்.

"பம்பாயில், நண்பர்களுடன் ஒருநாள் 'டிஸ்கொத்தே' நிகழ்ச்சிக்குச் சென்றிருந்தேன். (நைட் கிளப் டான்ஸ்.) நள்ளிரவில் திடீரென்று 'போலீஸ் வருகிறது' என்று தகவல் வந்தது.

"என் நண்பர்கள், 'நீ உலக அழகி. உன்னைப் போலீஸ் ஒன்றும் செய்யாது. நாங்கள்தான் பிடிபடுவோம்' என்றார்கள்.

"எனக்குக் கோபம் வந்து விட்டது. எது நடந்தாலும் நண்பர்களுடனேயே அதைச் சந்திப்பது என்று முடிவு செய்து கொண்டேன். அவர்களிடமும் கூறினேன்...

"அன்று இரவு எங்கள் எல்லோரையும் கைது செய்தார்கள். மறுநாள் நியூஸ் பேப்பர் திறந்தால் 'மிஸ் யூனிவர்ஸ் - ஜெயிலில்' என்பதுதான் தலைப்புச் செய்தி! ஏன்தான் இப்படி இருக்கிறார்களோ!"

— **கலா** (ASIDE லிருந்து)

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன். ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

போட்டிக் கதை - 16



# மனம் ஒரு மாயா லோகம்

மங்களம் அலுப்புடன் சமையல் அறையி லிருந்து வெளி வந்தாள். மாமியார் கண்ணிலே டி.வி., கையிலே ஜபமாலை.

ஹிந்து க்ராஸ்வேர்ட் பஸ்ஸிலில் மூழ்கிப் போய் கணவர் ராஜகோபால்; செஸ் போர்டில் தங்களையே விஸ்வநாத்தாக நினைத்துக் கொண்டு பிள்ளைகள்!

"ஒருத்தராவது இந்த டெலிபோனை எடுக்கக் கூடாதா? எத்தனை நேரமாக அடிக்கின்றது."

அவள் வந்ததையோ, சொன்னதையோ காதிலே வாங்கிக் கொள்ளாத அவர்கள், அவள் போனில் பேச ஆரம்பித்தவுடனேயே ஒருவித சுவாரஸ்யத்துடன் கவனித்தனர்.

"என்னது, நிஜமாகவா, சந்தோஷமா... பத்து நிமிஷம்தான் ஆச்சா? கங்க்ராட்ஸ்..." போனைக் கீழே வைத்து விட்டு கொஞ்ச நேரம் மௌன மாக நின்றிருந்த மங்களம், யாரும் எதிர்பாராத விதமாக, பக்கத்திலிருந்த சோபாவில் உட் கார்ந்து, முகத்தைக் கரங்களால் மூடிக் கொண்டு விம்மி விம்மி அழ ஆரம்பித்தாள்.

"என்னடீ இது. இப்பத்தான் போனில் சந்தோஷமாகப் பேசினே. இப்போ அழ ஆரம் பிச்சுட்டே, என்னது மாய்மாலம்?"

"மங்களம், ரிலாக்ஸ். வாட் இஸ் த



*"பண்டிகைப் பருவமானால் பட்டுப் பாவாடை நகை போட்டு, பூ வைத்துக் கொலுசு போட்டு, வளை கிலுங்கக் கிலுங்க ஒரு பெண் குழந்தை விளையாடக் கொடுத்து வைக்காம போயிட்டோம் பாத்தியா?"*

மேட்டர்?' எழுந்திருக்காமலே ராஜகோபாலன் கேட்டார்.

"மம்ஸ். வாட் இஸ் ராங்க்?" சுரேந்தரும் நரேந்தரும் எழுந்து ஓடி வந்து அம்மாவை ஆதுரத்துடன் தடவிக் கொடுத்தனர்

ஐந்து நிமிடங்கள் அழுது சமாதான பின்பே மங்களத்தால் பேச முடிந்தது.

"சபரீஷ்தான் ஃபோன் செய்தான். குழந்தை பிறந்து விட்டதாம். பத்து நிமிடம் ஆயிற்றாம். 'ஆஸ்பத்திரியிலிருந்து அவசரமா பேசறேன், பிறகு விவரமாகப் பேசறேன்'என்று சொன்னான்.

'என்னப்பா, தாயுமான ஸ்வாமி'என்று அரற்றிய பாட்டி, திடுமென நினைவு வந்தவளாக, "மீன்காரிக்குக் குழந்தை பிறந்து இருக்கு, கொண்டாட வேண்டியதுதான்,"என்று முனகினாள்.

ராஜகோபாலனுக்கும் சந்தோஷமாகத்தான் இருந்தது. ஆனாலும் சந்தோஷத்தை வெளிப்படுத்தத் தன்மானம் தடுத்தது. சுயகௌரவம் என்று ஒன்று இருக்கிறதே! சபரீஷ், குடும்பத்தின் மூத்த பிள்ளை. அமெரிக்காவில் எம்.எஸ். முடித்துவிட்டு வேலை பார்த்துக் கொண்டிருந்தான். ஆசாரமான பாட்டி இங்கே வரன் பார்க்கும் பொழுது, தெரிந்த வங்காளிப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு விட்டதாக இடி போலச் செய்தி வந்தது. "ஸ்டூடண்ட் விஸாவில் இருக்காப்பா. அது முடியப் போறது, அதனால் அவசரமாகப் பண்ணிக் கொள்ளும்படியாக ஆயிற்று"என்று சபரீஷ் எவ்வளவு பணிவோடு கெஞ்சியும் பாட்டியும் மகனும் மன்னிக்கத் தயாராக இல்லை. "மீன் சாப்பிடும் வங்காளப் பெண் சாத்தூர் சால்வா

சிம்ப்ளூக் சின்னது



''சே! வரவர இந்தப் பத்திரிகைக்காரங்க பண்ணுற லொள்ளு தாங்க முடியல!''

''என்ன ஆச்சு?''

''ஹெலிகாப்டரில் வெள்ளச் சேதப் பகுதியைப் பார்வையிடப் போனாக் கூட 'மாநிலத்தில் இன்னும் வளைத்துப் போட எவ்வளவு இடம் பாக்கி என்றறிய மந்திரி ஹெலிகாப்டரில் சர்வே'ன்னு நியூஸ் போட ஆரம்பிச்சுட்டானுங்க.''

–நாகலை இளவல்.

---

டீஸ்வரய்யர் குடும்பத்திற்குள் வருவதா?" இது பாட்டியின் வாதம். "தோ பாரு ராஜகோபாலா அவ இந்த வீட்டிற்கு வந்தா நா வெளியே போயிடறேன்," என்று பயமுறுத்தினாள். ராஜ கோபாலனுக்கு அதற்கு மேல் கோபம். "தலை முழுகி விட்டேன்"என்று சூளுரைத்து விட்டார். பாவம் மங்களம் வாயில்லாப் பூச்சி. இளைய பிள்ளைகள் சுரேந்தர், நரேந்தர் மூலமாக சபரீஷுடன் தொடர்பு கொண்டு திண்டாடிக் கொண்டிருக்கிறாள்.

"என்ன குழந்தை அம்மா?" ஆவலோடு கிசு கிசுத்தான் சுரேந்தர்.

அம்மாவின் முகம் பளிச்சிட்டதைப் பார்த்த சுரேந்தர் புரிந்து கொண்டு, "மம்மி டோன்ட் டெல். பேசாம இரு. நானும் நரேந்த ரும் வில் சீ டு இட். நீ எப்படியாவது குழந் தையைப் பார்க்கப் போகும்படியா பண்ண றோம். இப்பப் பேசாமல் இரு"என்று மெல்லிய குரலில் சொன்னான்.

ராஜகோபாலனுக்குக் கோபம் கோபமாக வந்தது. 'இந்த மங்களம் கல்லூரி மங்கன் மாதிரி உட்கார்ந்திருப்பதைப் பாரேன். என்ன குழந்தை என்று சொன்னால் என்ன. நானாக எப்படி கேட்பது?' தர்ம சங்கடமாகத் தொண் டையைக் கனைத்துக் கொண்டு தாயின் முகத் தையும் மனைவியின் முகத்தையும் மாறிமாறிப் பார்த்து நெளிந்து கொண்டிருந்தார்.

பாட்டிக்கும் கோபம் கோபமாக வந்தது. 'இந்த மங்களத்திற்கு என்ன அழுத்தம். என்ன குழந்தை என்று சொன்னால் என்ன? சுகப் பிரசவமா. எப்படி இருக்காம் குழந்தை, இதை யெல்லாம் சொன்னால் குறைந்தா போய் விடு வாள். இந்த ராஜகோபாலன் சரியான மாங்கா மடையன், கேட்டால் என்ன?'

மங்களம் யோசனையில் இருந்தாள். அமெரிக்காவில் இருக்கும் சகோதரிகள் மூல மாக வளைகாப்பு, சீமந்தம் என்று நடத்தி முடித்தாயிற்று. குழந்தைக்கு புண்யாவசனமும் செய்து விடுவார்கள். ஆனால் குழந்தையை பார்க்க வேண்டும் போல இருக்கிறதே. மாமிய ரும் கணவரும் விடுவார்களா? சுரேந்தரு நரேந்தரும் ஏதோ ப்ளான் பண்ணிக் கொண் டிருக்கிறார்கள். பார்க்கலாம். ட்ரம்ப் சீட்டு கையில் இருக்கிறது.

கடைசியில் ஆசை வெட்கமறியாது கேட்ட வள் பாட்டிதான். "ஏண்டி மங்களம்? வாயி லேர்ந்து கொழுக்கட்டையை எடுத்து விட்டுச் சொல்லு. என்ன குழந்தை பெத்திருக்கா உன் அருமை மாட்டுப் பெண்?"என்று ஆவலை மறைத்துக் கொண்டு நக்கலாகக் கேட்டாள்.

"பெண்."

"பெண்ணா? பாட்டியும் ராஜகோபாலனும் ஒரே சமயத்தில் கத்தினார்கள். காரணமிருந்தது. ஏழு தலைமுறையாக அந்தக் குடும்பத்திலே பெண் வாரிசே இருந்ததில்லை.

"காமாக்ஷீ, மீனாக்ஷீ, விசாலாக்ஷீ கண் திறக்க மாட்டேளா அம்பிகே, நீ வந்து விளையாட எங்க வீடு கொள்ளாது என்று வர மாட்டேங் கறயா?"என்று பாட்டியின் மாமியார் அரற்றிக் கொண்டே இருப்பாள். "பண்டிகைப் பருவ மானால் பட்டுப் பாவாடை நகை போட்டு, பூ வைத்துக் கொலுசு போட்டு, வளை கிலுங்கக் கிலுங்க ஒரு பெண் குழந்தை விளையாடக் கொடுத்து வைக்காம போயிட்டோம் பாத் தியா?"

சிருங்கேரியில் மீனைப் பிடித்துப் பிடித்து மூக்குக் குத்திப் போட்டார்கள். கோமதி அம் மனுக்கு தங்கப் பாவாடை தைத்துப் போட் டார்கள். எந்தப் பெண் இட்ட சாபமோ என்னவோ என்று சுமங்கலி பூஜை செய்தார் கள். ஹூஹும். இன்று வேண்டாத மருமகள் வந்து பரிசு கொடுத்திருக்கிறாள்!

ராஜகோபாலனுக்கு சந்தோஷத்தில் உடம் பெல்லாம் பரபரத்தது. தன்னுடைய சகோத ரர்கள் யாருக்குமே பேத்தி இல்லை என்று நினைக்கும் பொழுது கர்வமாக இருந்தது. 'மஹாலக்ஷ்மி வந்திருக்கா, மன்னித்து விடு வோம்',என்று அம்மா சொல்லுவாளோ என்று ஆவலுடன் இருந்தார். அதே வார்த்தையை மகன் சொல்ல மாட்டானா என்று பாட்டி மகனின் முகத்தைப் பார்த்தாள்.

"நரேன் அந்த ஷீட் காலண்டரை எடுடா, என்ன நக்ஷத்திரம் என்று பார்ப்போம்."

காலண்டரைப் பார்த்த பாட்டி துள்ளி னாள்.

''ராஜகோபாலா, குழந்தை கேட்டை நக்ஷத்திரமடா. நானும் நீயும் பிறந்த நக்ஷத்திரத் திலேயே பிறந்திருக்கு பாருடா. நம்ம திருநெல் வேலி ஜில்லாவிலே, கேட்டை கோட்டை ஆளும் என்று சொல்லுவா." பரவசம்தான்.

"ஹியர் வி என்டர். அவர் டைம் பிகின்ஸ் நௌ"என்று சித்தார்த்த பாஸுவின் குரலில்




உங்கள் அனைத்து கேள்விகளுக்கும் ஒரே விடை :— எஸ்டி அசோசியேடட் பில்டர்ஸ். சென்னை நகரில் டீலக்ஸ் ஃப்ளாட்டுகள் மற்றும் தனி வீடுகள் வாங்க முன்னணி நிறுவனங்கள் மூலம் கடன் வசதி பெற, சுலபத் தவணைகளில் வீடு வாங்க, மேலும் விவரங்கள் அறிய தொடர்பு கொள்ளுங்கள்.

CREATORS NOT JUST BUILDERS

**YESDE ASSOCIATED BUILDERS LIMITED**

2nd Floor, 26,
Ranganathan St.,
T.Nagar,
Madras - 600 017.
INDIA
Ph: Off: 4340224/
4340210.
Res.: 2345244
Fax: (044) 2344333




''என்னது, இந்த ஓட்டல் வாசல்ல 'அரிசி, உளுந்து ரெடி'ன்னு போர்டு வச்சிருக்காங்க?''

''அது காசில்லாம சாப்பிடவர்றவங்களுக்கு எச்சரிக்கையாம்!''

– பெ. பொன்ராஜபாண்டி

---

சொல்லியபடி நரேன், ''பாட்டி, அது சரி இல்லை. குழந்தை இன்றைக்குக் காலையிலே பிறந்திருக்கு. முந்தின நக்ஷத்திரமா இருக்கும்'' என்றான்.

"அனுஷமா இருக்கும்"என்றாள் மங்களம்.

"என்னடா அசத்து உளர்றே?"

ராஜகோபாலன் வருத்தத்தோடு சொன்னார். ''ஆமாம் அம்மா. அங்கே இப்போ ஞாயிறு கலை ஆறரை மணிதான்."

"நன்னாயிருக்குடா. நம்மூர்க் குழந்தைகள். நம்ம கணக்கைத் தான் வச்சிக்கணும்."

ராஜகோபாலனுக்கும், பேத்தி தம்முடைய நக்ஷத்திரமாகவே இருக்க வேண்டுமென்று ஆசையாக இருந்தது.

"அனுஷம் கூட மகா பெரியவா நக்ஷத்திரம் தான்..."

"அம்மா, நீ இதிலே வராதே." சன்னமான குரலில் அம்மாவை எச்சரித்த சுரேந்தர், ''அப்பா நான் வேதராம சாஸ்திரிகளுக்கு ஃபோன் பண்ணறேன், அவர் இதைத் தெளிவாகச் சொல்லுவார்",என்றபடி மாடியை நோக்கிச் சென்றான்.

"ஏண்டா, இங்கிருந்தே பேசேன். மாடியிலே போய்த்தான் பேசணுமா."

"லூ போய் விட்டு, அப்படியே பேசிட்டு வரேம்பா."

சற்று நேரத்தில் கீழிறங்கி வந்தான். "வேதராம சாஸ்திரிகள் வீட்டிலேயே டாக்டர் ராமநாதனும் இருந்தார். அவருக்கும் ரொம்ப சந்தோஷம். அவர் காரிலேயே இரண்டு பேரும் வரேன் என்று சொன்னார்கள்."

"ராமநாதன் பெரிய சயின்டிஸ்ட். இந்த டைம் டிபரன்ஸ் எல்லாம் அவருக்கு நன்னாத் தெரிஞ்சிருக்கும்"என்றார் தன் தாயிடம்.

மூன்று தலைமுறையாகப் புரோகிதம் இந்தக் குடும்பத்திற்கு. சாதுர்யமான வாசாலகர் வேதராமன். நரேந்தர் சுரேந்தரைப் பார்த்துக் கண் சிமிட்டியபடியே, "நான் கவனிச்சுக்கறேன் கவலைப் படாதேயுங்கோ"என்று அடிக் குரலில் சொல்லியபடி அமர்க்களமாக உள்ளே நுழைந்தார்.

"மாமீ, கடைசியில் அம்பாள் கண்ணைத் தொறந்து ஆத்திலே விளையாட வந்துட்டா போலிருக்கே."

"ச்சூ மீன்காரி பெத்த பொண்ணை அம்பாள்னு சொல்லாதே வேதராமா அபசாரம்."

''மீன்காரியா?'' ஒரு நிமிடம் அயர்ந்து போன வேதராமன் கடகடவென்று சிரித்தார். "மாமி, வங்காளிகள் மீன் சாப்பிடறவா என்பதால் அப்படிச் சொல்கிறீர்களா? சத்தமா சொல்லிடாதேயுங்கோ. அவா மத்சய பிராமணா. நாமெல்லாம் மட்டம். பகவான் மத்ஸ்யாவதாரம் எடுத்ததன் வாரிசுகள். நமக்கு மஞ்சள் எப்படியோ அப்படி அவாளுக்கு மீன். கணவனின் ஆயுசுக்காகச் சாப்பிடறது."

பாட்டி விழித்தாள்.

"உங்க மாட்டுப் பெண்கள் யாரிடமாவது, குங்குமப் பொட்டை வையுங்கோ ஸ்டிக்கர் பொட்டை எடுத்து விட்டு என்று சொல்லுங்கோ. உதைக்க வருவா. சீமந்தரேகாவில் குங்குமம் தீட்டாத வங்காளப் பெண்ணைப் பார்த்திருப்பேளா? சங்கு வளையலும், கையிலே அல்தா(மருதாணி) என்று சுகாசினிகள் நமஸ்காரம் பண்ணலாம் போலிருக்கும்."

''மிஸஸ் மணி ரத்தினத்தைப் பற்றிச் சொல்லுறாராடா இவர்?" சுரேந்தர் கிசுகிசுத்தான்.

''நீங்க நாளைக்குப் போங்கோ. உங்க கையிலே சாவிக் கொத்தைக் கொடுத்திடுவா. வீட்டிலே பெரியவா தான் கழுத்தைச் சுற்றிப் போட்டுக் கொள்ளணும் அதை."

''ஆமாம் அபசகுணம் மாதிரி சங்கை ஊதிண்டு."

"என்ன அஞ்ஞானம், என்ன அஞ்ஞானம். அவா விஷ்ணு அம்சம். பகவான் பாஞ்சசைன்யம் சங்கை ஊதினாரே வெற்றியைக் குறிக்க, அதைத்தான் இவர்கள் செய்கிறார்கள்."

காப்பி கொண்டு வந்து தந்தாள் மங்களம்.

"பேர் சொல்லப் பேத்தி பிறந்துட்டாளா?''

"வேதராமா என்ன சொல்றே?" பாட்டி உறுமினாள். "நான் கல்லுகுண்டாட்டமா இருக்கேனே. எனக்குப் பேத்தி பிறந்து பேர் வச்சிருந்தா அவ பேர் வைக்கலாம் இப்போது. ஆனால் அந்த மீன்காரி சம்மதிக்கணுமே என் பெயர் வைக்க,"என்றாள் பாட்டி நிஷ்டூரமாக.

"ஆஹா. சாரதா மாமி இந்த அதிசயத்தை என்ன சொல்லறது. அவாளுடைய குலதெய்வமே சாரதா மணி தேவியார் தானே. சாட்சாத் ராமகிருஷ்ண பரமஹம்சரின் தெய்வமல்லவா அவள். அங்கே அந்த சாரதா, சாத்தூர் சால்

வாடீஸ்வரன் பரம்பரை சாரதா இங்கே... அடடா... ச்சுச்சுச்சு..."

"டேய், ஜனகராஜ் ஸ்டைல்லே அடிக்கிறார் டேய். சரியான ஆளைத் தான் செட் அப் செஞ்சிருக்கே" நரேந்தர் கிசுகிசுத்தான்.

எல்லோரும் தன்னை ஹீரோ போலப் பார்க்க வேத ராமனுக்கு உற்சாகம் பொங்கிப் பொங்கி வந்தது.

"மிலேச்ச தேசத்திலேன்னா பிறந்திருக்கு."

"அடடா. மாமீ, நீங்களா, நீங்களா இந்த வார்த்தை சொல்லுகிறீர்கள். வர்றப்ப எல்லாம் மாமி டீ.வி. முன்னாலே உட்கார்ந்திருக் காளேன்னு நினைச்சேன். சரியாப் போச்சு. பரமாச்சாரியாளோட 'தெய்வத்தின் குரல்' கொடுத்தேனே. படிக்கலையோ."

"அதுக்கென்ன இப்போ?"

"சகரன்னு ஒரு ராஜா இருந்தான். ஆயிரம் குமாரர்கள். அஸ்வமேதயாகக் குதிரையைக் கொண்டுபோய்க் கட்டினா. ஹார்ஸ் ஐலண்ட், குதிரைத் தீவு என்று அது இப்போது கலி போர்னியாவிலே இருக்கு. விஸ்வாமித்திரர் கோபம் கொண்டு எரிச்சுட்டார். சாம்பல் தீவு-Ash Island ன்னு அதுவும் அங்கே தான் இருக்கு. ஆகக் கூடி பகீரதன் தவம் பண்ணிக் கொண்டு வந்த கங்கையும் அங்கே ஓடுகிற கங்கையாகத் தான் இருக்க வேண்டும்."

"திஸ் இஸ் டூ மச்!" நரேந்தர் முணுமுணுத் தான். ராஜகோபாலனும், ராமநாதனும் கண்கள் விரியப் பார்த்தனர்.

"உண்மைதான் ஸ்வாமி. புதுப் பெரியவர் ஜெயேந்திரர் கூட இதை அடிக்கடி சொல்லு வார்."

"கங்கை இங்கேன்னா இருக்கு."

"நன்னா இருக்கு மாமி. மாங்காட்டிலே காமாக்ஷி இருக்காளே, காஞ்சியிலே எப்படி இருக்க முடியும் என்று கேட்கிற மாதிரின்னா இருக்கு. நம்ம ஸ்ரீ மடத்துக்கு வரவா அங்கிருந்து என்ன அற்புதமான வலம்புரிச் சங்கு கொண்டு வருவா தெரியுமோ. கங்கா ஜலம் பாயாம கடல்லே அவ்வளவு அற்புதமான சங்கு உற்பத் தியாக முடியுமா என்ன?"

வேதராமன். பரவசமான முகத்துடன் கண்களை மூடிக் கொண்டு தலையைச் சிலுப் பிக் கொண்டார். "கங்கா தீரத்திலே பிறந்து கங்கை ஜலத்தைக் குடித்த மத்ஸ்ய பிராம்மணப் பெண். அவ வயிற்றிலே பகீரத பூமியிலே பெண் பிறந்திருக்கு. சாத்தூர் சால்வாடீஸ்வரன் குடும்பத்தைத் தவிர வேறு எங்கே இது நடக்கும்?"

"கொன்னுட்டார்டா."

"கேட்டையா அனுஷமா சொல்லும்."

"அங்கே போய் புண்யாவசனம் செய்வீர். மேரோஹோ தக்ஷிணே பார்ச்வே, உத்தரா யணே என்று. அங்கே மேரு மலையே கிடை யாது. அப்புறம் தானே மேருவிற்குத் தெற்கே என்று பேச்சு வரும். சூரியனுடைய சஞ்சாரமே கடக மகர ரேகைகளுக்குள்தான். அமெரிக் காவோ கடக ரேகைக்கு மேலே தான் இருக்கு. அப்புறம் உத்திராயணம் ஏது தக்ஷிணாயணம் ஏது? நம்முடைய நேரப்படி கேட்டைதான்."

ராமநாதன் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். இந்த சாஸ்திரிகளே முழு லைம் லைட்டையும் எடுத்துக் கொண்டால் எப்படி?

"இந்த டைம் பாக்டர் இருக்கே, இது யாருக் கும் புரியாதது. முதன் முதலில் இதன் முக்கியத் துவத்தைச் சொன்னவர் ஐன்ஸ்டீன் தான். நாம நினைச்சுக்கற டைம் நம்முடைய கற்பனை. மனஸ் கல்பித மாயா லோகம்."

வேதராமன் தலையை ஆட்டினார்.

"என்ன சொல்ல வரார் இவர்?"

"பாருங்கோ பாட்டி க்ரீன்விச் என்கிற இடத்தை மையமா வச்சிண்டு நேரத்தைக்



''பஸ்சுல எவனோ ஒருத்தன் என் பர்ஸை அடிச்சுட்டான் சார்!''

''இந்த பர்சானு பாரு. இப்பதான் ஒருத்தன் மாமூல இதுல வச்சு குடுத்துட்டுப் போறான்!''

–அம்பை தேவா

கணக்குப் பண்ணுகிறோம். அதன்படி ஜப் பானை சூரியன் உதிக்கும் நாடு "The land of rising sun" என்று சொல்லுகிறோம். ஆனால் திடுமென அமெரிக்காக்காரன் தாங்கதான் சூரியன் உதிக்கும் நாடு என்று சொல்லி விட் டால் என்னவாகும்?"

"சொதப்பிட்டார்டா."

"அசத்து ஏதோ உளர்றது"என்று பாட்டி முணுமுணுத்துக் கொண்டாள்.

பாவம் காரிலே லிப்ட் கொடுத்திருக்கார். அவருக்கு இப்போது உதவா விட்டால் எப்படி என்று வேதராமன், ''என்னவாகும்?''என்று கேட்டார்.

"குழந்தை 18ம் தேதி காலை பிறந்திருக் கோன்னோ. அது நமக்கு 17ம் தேதி சாயங் காலம் ஆறரை மணியாக இருந்திருக்கும்'' என்றார் ராமநாதன் வெற்றிப் பெருமிதத் தோடு.

"விசாக நக்ஷத்திரமாக இருக்கும் என்று

சொல்ல வரீறா?" எரித்து விடுபவள் போலப் பார்த்தாள் பாட்டி. "அது எங்க மாமியார் நக்ஷத்திரம்"என்று பல்லைக் கடித்துக் கொண்டு சொன்னாள்.

ராமநாதன் பரிதாபமாக சுரேந்தர் நரேந்திரரைப் பார்க்க, அவர்கள் மிகவும் கவனமுடன் தங்கள் நகங்களை ஆராய்ந்து கொண்டிருந்தனர்.

"ராஜகோபாலா, நான் குழந்தைக் காப்புக்கு வரப் போறேன்."

"நீங்களா?"

"பின்னே. எங்கம்மா முழுப் பவுன் காசு மாலை கொடுத்த உடனே எந்தப் பெண்ணிற்குப் போடப் போறே என்று கேலி செய்தாள் என் மாமியார். இன்றைக்குப் பேத்தி பிறந்திருக்கா. போடப்போறேன். அவள் தான் பெண் வாரிசைப் பார்க்காமலே போனாள்."

"வேதராமா டீ.வி எப்போப் பார்த்தாலும் பார்க்கறேன்னு சொல்றியே. இந்த பம்பாய் படம் தான் பார்க்கறேன். எங்க ஆத்துக் காரரைப் பார்த்திருக்கையோன்னோ. இந்த அரவிந்தசாமி எங்காத்து மாமா மாதிரியே இல்லை. (என்ன சித்தக் கறுப்பா இருப்பார்!) நான் ஐந்து முறை கர்ப்பமா இருக்கும் போதும், 'சாரதா, பொண்ணு பெத்துக் குடுடீ'என்பார். இப்போ அவர் இருந்து பார்க்கக் கொடுப்பினை இல்லை."

கட்டுக் குடுமியும் கடுக்கனுமாக அரவிந்த சாமியைக் கற்பனை செய்து வேதராமனுக்குப் புரை ஏறிக் கொண்டது. ராமநாதன் கர்சீபால் முகத்தைத் துடைத்துக் கொண்டார்.

"உடனே எல்லோருக்கும் விசா கிடைச்சிடுமா?"

"முன்பே மல்டிபிள் என்ட்ரி விசாவே வாங்கி இருக்கோம். எப்போவேணாப் போகலாம்."

"போய்விட்டு வரோம் பாட்டி, சந்தோஷமாகப் போய் வாருங்கள். சுரேன், நரேன் சாரதான்னு பழைய பெயர் என்று கவலைப் படாதேயுங்கோ. ஷாரூ என்று கூப்பிடுங்கோ, ஷாரூக்கான் ஞாபகம் வரும்."

"கில்லாடிடா இவர்."

"மங்களம் குழந்தைக்குப் காப்பு எல்லாம் வாங்கப் போகும் பொழுது, எனக்கு ஒரு ஹேர் டை வாங்கி வந்து விடு." ராஜகோபாலன் விசில் அடித்தார். 'பொண்ணு பெத்துக் கொடு.'

"அப்படியே பேங்க் லாக்கர்லேந்து என் காசுமாலை கொண்டுவா, குழந்தைக்குப் போடணும்."

"அது தான் முடியாது,"என்றாள் மங்களம் நிதானமாக.

"ஏண்டி."

"ஒரு காசுமாலையை எப்படி இரண்டு குழந்தைகளுக்குப் போடுவது. இரட்டைப் பெண்கள் அல்லவா பிறந்திருக்கு."

"ஹா"என்றனர் எல்லோரும்.

11

# ரமணி சந்திரன்

கிருஷ்ணசந்திரனின் தடுமாற்றத்துடன் கூடிய நடை, தொடர்ந்து சில தினங்கள் உதய ரேகாவின் மனதைக் குழப்பிக் கொண்டே இருந்தது.

மதுவின் போதையினால் தள்ளாட்டம் ஏற்படுவதன் காரணம், அருந்துகிறவரது உறுப்புகளின் மீது மூளைக்குக் கட்டுப்பாடு இல்லாது போவதே என்று அவள் படித்திருக்கிறாள்.

ஆனால், கிருஷ்ணசந்திரன் தடுமாறி நடந்த போதும், அவனது கால்கள் நிதானம் இழந்து, தன் போக்கில் செல்லவில்லை. அவனது உறுப்புகளின் மேல் அவனுக்குக் கட்டுப்பாடு இருந்தது நன்றாகவே தெரிந்தது. ஆனால்... அவன் நடந்த விதம்... ஏதோ சுமக்க முடியாத பாரத்தைத் தலையில் ஏற்றிக் கொண்டு, தலைப்பாரம் இங்கும் அங்கும் இருக்க, சமாளித்து இலக்கை நோக்கிச் செல்கிறவனது நடை.

ஆனால் கிருஷ்ணசந்திரன் தலையில் எந்த வித சுமையும் இல்லையென்பதால் இது குடியின் தள்ளாட்டமாகத்தான் இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தாள் உதயரேகா.

ஆனால், அதிலும் ஒரு சிக்கல். மதுவை மேலே மேலே, அருந்த அருந்தத்தானே போதையும் அதன் விளைவான தள்ளாட்டமும் ஏற்படக்கூடும். சாதாரணமாகப் பேசிக் கொண்டிருந்தவனுக்கு எப்படி இப்படி? அல்லது அவ்வப்போது இப்படியும் இருக்குமா?

கணவன் எந்த நிலையில் – முற்றிய, இனி எதுவும் செய்வதற்கில்லை என்கிற நிலையிலா? (அப்படி ஒரு தோல்வியை அவள் ஒரு நாளும் ஒப்புக் கொள்ளப் போவதில்லை என்பது வேறு விஷயம்.) தொடக்க நிலையா? அல்லது இரண்டுக்கும் நடுப்பட்ட நிலையிலா? இதில் எந்த நிலையில் இருக்கிறான் என்பதைத் தெரிந்து கொண்டால், அவனை எப்படி அணுகுவது என்பதைத் திட்டமிட வசதியாக இருக்கும் என்று உதயரேகாவுக்குத் தோன்றியது.

எப்போதோ அறிந்து கொண்டிருக்க வேண்டிய விவரம். போகட்டும்; 'பெட்டர் லேட் தென் நெவர்' என்று எண்ணியபடி மேற்கொண்டு என்ன செய்வது என்று யோசித்தாள்.

குடியைக் குணப்படுத்துகிற மறுவாழ்வு மையம் ஒன்றிற்கு டெலிஃபோன் செய்து கேட்டாள். 'நீங்கள் பாதிக்கப்பட்டவரை அழைத்து வாருங்கள்; பார்க்கலாம்' என்றார்கள்.

இந்தக் 'கொம்பேறி மூக்கனை'யா?

அது இப்போது நடக்கிற காரியம் அல்லவே என்று யோசித்தவளுக்கு இன்னோர் எண்ணம் உண்டாயிற்று.

அவளுடைய தந்தை வீட்டில் பாத்திரம் துலக்கி வீடு பெருக்கித் துடைக்கிறவளுடைய கணவன் ஒரு குடிகாரன் என்பது நினைவு வந்தது. அவ்வப்போது குடிவெறியில் அவன் அடித்தது பற்றிப் புலம்பிக் கொண்டிருப்பாள் கற்பகம்!

ஐடியா தோன்றியதுமே உதயா கிளம்பி விட்டாள்.

வேலையாளை அனுப்பி, 'பட்டன் பால்' வாங்கி வரச் செய்து, தம்பிக்கும் தங்கைக்கும் பிடித்தமான 'ரசமலாய்' செய்து எடுத்துக் கொண்டு பிறந்த வீட்டுக்குச் சென்றாள்.

செல்வதில் சிரமமும் இல்லை.

அன்றைய ஒருநாள் சச்சரவின்பின், அலுவலகம் சென்றதும், டிரைவரோடு காரைக் கிருஷ்ணசந்திரன் வீட்டுக்கு அனுப்பி விடுவான். அவளும் எங்கே செல்வதானாலும் ஒரு துண்டு சீட்டு எழுதி மாடியில் டீவி மேல் பூக்கிண்ணத்துக்கு அடியில் வைத்து விட்டுச் செல்வாள்.

அதன்படி இன்றும் எழுதி வைத்து விட்டுச் சென்றவளுக்குப் பிறந்த வீட்டில் பெரும் வரவேற்பு.

கையோடு வாங்கிச் சென்றிருந்த 'சாக்லேட் பாரை'த் தம்பி தங்கை கையில் கொடுத்து விட்டு, 'ரசமலாயை' ஃபிரிஜ்ஜில் வைத்தாள், "கொஞ்ச நேரம் கழித்துச் சாப்பிடலாமடா" என்று.

மாதர் மன்றத்து நிகழ்ச்சிகள் பற்றிச் சித்தியிடமும், கல்லூரி விஷயம் பற்றி உடன் பிறந்தோரிடமும் அரட்டை அடித்தாள்.

"அப்பா வருகிற நேரம். காரத்துக்கு ஏதாவது செய்கிறேன். இனிப்புக்குத் தான் நீ ரசமலாய் கொண்டு வந்திருக்கிறாயே!" என்று யசோதா செல்ல, சிநேகிதன் வீட்டில் படிக்கப் போவதாகச்

## மாலை மயங்குகின்ற நேரம்...



"இம்..." என்று முறுவலித்து விட்டுக் கற்பகத்திடம் தன் பங்குக்குக் குசலம் விசாரித்தாள் உதய ரேகா. அப்புறம் அவ ளுடைய கணவ னைப் பற்றிக் கேட் டாள்.

"அது கெடக்கு விடும்மா. பொழுது விடிஞ்சா போது போனா குடியும் அடியுமா... அத்த விடு. நீ எப்பிடிக் கீறே? ஏதாச்சும் 'விசேஷம்' உண்டா?" என்று ஆர்வமாய்க் கேட்டாள் வேலைக் காரி.

லேசாகச் சிவந்து, "ஏய் என்ன நீ? எங்களுக்குத் திரு மணம் ஆகி இன் னும் முழுதாக ஒரு மாதம் ஆகவில்லை. அதற்குள் இதென்ன கேள்வி? அதிருக்கட் டும் கற்பகம், உன் கணவன் குடித்தால் அடிப்பான் என் பாயே. சும்மா இருக் கும் போது எப்படி இருப்பான்?" என்று மேலும் துருவினாள்.

"எம் புருசன் சொம் மாவே இருக்காதும்மா. முட்ட முட்டக் குடிச்சிட்டு வந்து பொணம் மாதிரியாத் தூங்கும். காலைல பாத்தாக்க 'பே'ன்னு உக்காந்திருக்கும். மண்டை யிடிக்குது; காலு கை கொடையுது; நூறு மில்லி போட்டாத்தான் சரியாவுமின்னு நேராச் சாராயக் கடைதான். இது பூட்ட கேசுன்னு நான் வுட்டுட்டேம்மா" என்று அடுத்த பானையை எடுத்துத் துலக்கத் தொடங்கினாள் கற்பகம்.

சிறு இறுக்கத்துடன், "அப்படிப் போகும் போது, நடையில் தடுமாற்றம் இருக்குமா, கற்பகம்?" என்று வினவினாள் உதயரேகா.

கேள்வியின் உள்நோக்கம் புரியாமல், தன் போக்கில் புலம்பினாள் வேலைக்காரி. "அப்ப தான்னு என்னம்மா? சதா தள்ளாட்டம்தான். அன்னைக்குக் குடிச்சிட்டு முள்ளுச் செடி

சொல்லி விட்டுக் கிரிக்கெட் மட்டையோடு, சகோதரிகளிடம் கண்சிமிட்டி விட்டு 'சூர்யா' கிளம்பினான்.

"காப்பிக் கப்பைக் கழுவப் போட்டு விட்டு வருகிறேன்" என்று தங்கையிடம் சொல்லி விட்டு, உதயரேகா நைசாக நழுவிப் பின்பக்கம் சென்றாள்.

பின்புறத் தளத்தில் பாத்திரங்களைக் கழு விக் கொண்டு இருந்தாள் கற்பகம். உதயா வைப் பார்த்ததும், வாயெல்லாம் பல்லாக, "வா தாயி!" என்று வரவேற்றாள். "நல்லா கீறி யாம்மா?"

மேல வுளுந்து கெடந்திருக்கு. மேலல்லாம் முள்ளு கிளிச்சு... தள்ளு தெண்டத்த. உங் கூட்டிலே அல்லாரும் உன்னை நல்லா வச்சுக் கிறாங்களா?''

தலையாட்டி விட்டு, "பிள்ளைக்கு ஏதா னும் வாங்கிக் கொடு'' என்று ஒரு பத்து ரூபாயை அவள் கையில் கொடுத்து விட்டுக் கிளம்பினாள் உதயா.

எப்போதும் தள்ளாட்டமா? கிருஷ்ணசந் திரன் அப்படி இல்லையா? அப்படியானால் அவனுக்குத் தொடக்க நிலையாகத்தான் இருக்க வேண்டும். அவனே... என்று எண்ண மிட்டபடியே வந்தவள் உள்ளே அவளையே பார்த்தவாறு நின்று கொண்டிருந்த யசோதா வைக் காணவும் சற்றுத் திகைத்து நின்றாள்.

உடனே சமாளித்து, "இந்தக் கற்பகம் அதற் குள் என்ன கேள்வி கேட்கிறாள், பாருங்கள் சித்தி...." என்று சிறு சிணுங்கலோடு உரைத்தாள்.

"கல்யாணமான பெண்ணைப் பார்த்தால் எல்லோரும் அப்படித்தான் கேட்பார்கள். உன் பேச்சைப் பார்த்தால் அப்படி ஒன்றும் இல்லை என்று தெரிகிறது. உள்ளே வா'' என்று அழைத்துச் சென்றவள், வேலைக்காரியின் காது எட்டாத தூரம் சென்றதும், "என்ன விஷ யம்? கற்பகத்திடம் அப்படி என்ன பேச்சு? 'கம்பேரிங் நோட்'சா? ஏன், உன் சகல கலா வல்லவனைச் சமாளிக்க முடியவில்லையா?'' என்று கொஞ்சம் குத்தலாகவே கேட்டாள்.

இவளிடம் என்ன சொல்லலாம் என்று உதயரேகா யோசிக்கையிலேயே, "ஏண்டீ உனக்கு இந்தத் தலைவிதி?'' என்றாள் ஆற்றா மையுடன்.

"என்ன தலைவிதி?'' என்றாள் உதயரேகா ரோஷமாகத் தலையை நிமிர்த்தி. "அவர் இப் போது குடிப்பதை வெகுவாகக் குறைத்து விட் டார் தெரியுமா? எப்போதாவது ஒருநாள்தான். அது கூட விரைவிலே நின்று எல்லாம் நன்றாகி விடும்'' என்றாள் நம்பிக்கையோடு.

"அதுதான் வேலைக்காரியிடம் இவ்வளவு விலாவாரியாக விளக்கம் கேட்டாயாக்கும்! நன்றாயிருக்கிறது, எவ்வளவு என்பதுதான் உன் கண்ணிலேயே தெரிகிறதே. முன்பிருந்த பிரகா சம் கொஞ்சம் கூடக் காணோம்!''

"ஆமாமாம். முன்பெல்லாம் என் கண் களில் நூறு வாட் பல்பு போட்டிருந்தது; பளிச் சென்று பிரகாசம் கண் கூச வைத்தது. இப் போது நாங்கள் சிக்கனமாய் 'சீரோ' வாட் பல்ப் போட்டு அழுது வடிகிறோமாக்கும். போங்கள் சித்தி. இல்லாததையும் பொல்லாத தையும் கற்பனை செய்து கொண்டு...''

"இந்தப் பேச்சுக்கு ஒன்றும் குறைச்சல் இல்லை. நிஜத்தைச் சொல்லு. எப்படி இருக் கிறீர்கள்?'' என்று மகளை நேராக நோக்கிக் கேட்டாள் யசோதை.

> **"என்னப்பா போஸ்டர்! ஒண்ணுமே புரியலியே? 'அண்ணனின் அரசியல் வாரிசே! பூவுலகிற்கு வருக! புத்தொளி தருக!'ன்னு அடிச்சு ஒட்டியிருக் கியே?''**
>
> **"தலைவர், அண்ணியை பிரசவத்துக்கு நர்சிங் ஹோமிலே சேர்த்திருக்காரே! பிறக்கப் போகும் குழந்தையை வரவேற்றுத்தான் போஸ்டர்!''**
>
> **– ஆர். திலகவதி**

உதயரேகாவின் எதிர்காலம் பற்றிய நம் பிக்கை, சற்றும் குறையாத நிலையிலேயே இருந்ததால், "நன்...றாய்! பிரமா..தமாய்!'' என்று உற்சாகத்துடனேயே உரைத்தாள்.

ஆறுதலும் சந்தேகமும் கலந்த பாவனை யுடன், ஒரு சிறு பெருமூச்சு விட்டு, "சரி வா. உனக்கு பம்பாயில் வாங்கிய சேலையும் சுரி தாரும் எடுத்துத் தருகிறேன்'' என்று மகளை உள்ளே அழைத்துச் சென்றாள் யசோதை.

தந்தை வரும்போதே, "உடனே கிளம்ப வேண்டும்; மந்திரியோடு டின்னர் இருக்கிறது'' என்று அவசரத்திலேயே வந்தார்.

"சித்தியை விட்டு விட்டுத் தனியாகவா அப்பா, போகிறீர்கள்? 'தாஜா', 'அடையார் பார்க்'கா? விடாதீர்கள் சித்தி. உங்களை விட்டு விட்டு அப்பா மட்டும் ஃபைவ் ஸ்டார் ஒட்ட லில் போய் மொக்குவதா?'' என்று சிரித்த படியே சிறிய தாயை உசுப்பி விட்டாள் உதய ரேகா.

"மொக்குவதா? அதற்கெல்லாம் கொடுத்து வைத்த புண்ணியவான், மந்திரிதான். அவர் சாப்பிட்டுக் கொண்டே பேசப் பேச, நான் பாதி மறைந்து நின்று குறிப்புகள் கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டுமாக்கும்'' என்றார் உலகநாதன்.

"பாதியா? அந்த மந்திரி 'சைசு'க்கு உன் அப்பா காணாமலே போய் விடுவார்'' என்று யசோதா கூற மூவரும் நகைத்தனர்.

"இந்தாருங்கள் உதயா கொணர்ந்தது'' என்று மனைவி எடுத்து வைத்த ரசமலாயைச் சுவைத்தபடி, "எனக்கு டில்லிக்கு மாற்றல் வரும் போல இருக்கிறது, உதி'' என்றார் உலக நாதன்.

"டெல்லிக்கா? மாட்டிக் கொள்ளாதீர்கள், அப்பா. அப்புறம் சித்தியை மறந்தே போவீர் கள்'' என்றாள் மகள்.

"நன்றாய்ச் சொல்லு. நல்ல காலமாய்ப் பிள் ளைகள் வளர்ந்து விட்டார்கள். அல்லது ஞாயிற்றுக் கிழமைகளில் வந்து போகிற 'அங் கிள்' யாரம்மா? என்று கேட்கிற கதையாகி விடும்'' என்றாள் யசோதா.

"எதற்கும் அம்மாவும் பெண்ணும் சேர்ந்து கொள்வீர்களே! மந்திரியிடம் முடியாது என் றால் கண்ட இடத்துக்கும் பந்தாடி விடுவார்



கள். நினைவிருக்கட்டும்” என்றார் உலகநாதன்.

இன்னோரன்ன பேச்சுக்களில் நேரம் கழிந்து விட, கூடக் கொஞ்சம் உற்சாகமான மன நிலையிலேயே உதயரேகா வீடு திரும்பினாள்.

**க**ற்பகத்துடைய கணவன் போலக் கிருஷ்ண சந்திரன் ரொம்பவும் கெட்டு விடவில்லை என்பது பெரும் ஆறுதலாக இருந்தது.

பிறந்த வீடு டெல்லிக்குக் குடிபெயர்வது கூட, ஓரளவு நிம்மதியையே தந்தது. இன்று போல, நினைத்தால் போய்ப் பார்க்க முடியாது என்றாலும், அதுவும் இன்றைய நிலையில் நல்லதென்றே தோன்றியது.

அனாவசியமான நடிப்பு, சமாளிப்புகள் தேவையிராது!

அப்படியே ரொம்பவும் பார்க்க வேண்டும் போலத் தோன்றினால், காலையில் விமானம் ஏறினால், மிஞ்சி மிஞ்சி இரண்டரை மணி நேரம்தானே?

மனதில் புதிய உற்சாகத்துடன் உதயரேகா தன் பிரச்னையில் முழுமையாக மனதைச் செலுத்தினாள். கணவனின் கவனத்தை ஈர்க்கப் பல்வேறு வழிகளை ஆராய்ந்து செயல் படுத்தினாள்.

என்னதான் வயிற்றுக்கும் மனதுக்கும் பாலம் கிடையாது என்று கூறியபோதும், கிருஷ்ணசந்திரன் ரசித்து உண்கிறான் என்று அறிந்ததால் மேலும் மேலும் சமையலில் தன் கைவண்ணத்தைத் தொடர்ந்து காட்டினாள்.

இரண்டு மூன்று தரம் ‘அனாவசியமாக அலட்டிக் கொள்ள வேண்டாம்’ என்று சாதாரணமாகச் சொன்னவளுக்கு, ஒருநாள், அவள் கையைச் சுட்டுக் கொள்ளவும் மிகவும் கோபம் வந்து விட்டது. “உதயரேகா, நீ சமைத்ததைத் தொட்டுப் பாராமல் நான் திருப்பி அனுப்பினால் நாகு முன்னிலையில் உனக்கு அவமானம். அந்த அவமானம் உனக்கு நேராமல் இருக்க வேண்டுமானால் இந்த முயற்சியை இத்தோடு நிறுத்தி விடு” என்றான் உறுதியான குரலில். “நீ உலகமகா தியாக சிகரம் என்பதைத் தான் ஏற்கெனவே நிரூபித்தாயிற்றே” என்றான் போகிற போக்கில்.

கையைச் சுட்டுக் கொண்டாளே என்ற கரிசனம்தான் இந்தக் கோபத்தின் காரணம் என்று பிடிவாதமாக நினைத்துத் தன்னைக் குளிர்வித்துக் கொண்டாள் மனைவி.

நிமிர்ந்தே நோக்காதவன் கண்களில் நிச்சயமாகப் படும்விதமாக, மாடிப்படி வளைவுகளில் தன் பெரிய வண்ணப் படங்களை மாட்டி வைத்தாள்.

பளிச்சென்ற ஆடையணிகள், பல்வேறு அழகிய வண்ணங்களில், விதங்களில் அணிந்தாள்.

பார்த்தவர்கள் எல்லோரும் பாராட்டிய போதும், முக்கியமான ஒருவன் மட்டும் எதையும் கண்டுகொள்வதாகவே இல்லை.

ஆனால் அவளும் விடுவதாக இல்லை.

பிடிவாதமாகக் கணவனிடம் சென்று, “இந்த உடை எனக்கு நன்றாக இருக்கிறதா” என்று விசாரித்தாள்.

“நீயும் கண்ணாடியில் பார்த்திருப்பாய் தானே. அனாவசியமாய் என்னைக் கேட்பானேன்?” என்றான் ஆருயிர்க் கணவன்.

‘விசுக்’கென்று போய் விடலாம் என்று தோன்றியதை அடக்கிக் கொண்டு, “பார்த்தேன். ஆனால், அதில் நாம் பார்க்கும் போது நல்லது மட்டும்தானே தெரிகிறது. அதனால் தான் உங்களுக்கு என்ன தோன்றுகிறது என்று கேட்க வந்தேன்” என்றாள் மனைவி.

“கண்ணாடி பொய் சொல்லுவது இல்லை” என்று அடியோடு உணர்ச்சி துடைத்த குரலில் கூறிவிட்டு, மாடிப்படி ஏறத் தொடங்கினான் அவன்.

பின்னோடு சென்று, “உங்களிடம் கொஞ்சம் பேச வேண்டும்” என்றாள் உதயா.

“பேசுவதற்கு என்ன இருக்கிறது?”

“ஏதோ இருப்பதால்தானே பேச வேண்டும் என்கிறேன்” என்றாள் அவள் பிடிவாதமாக.

அவன் திரும்ப நின்று அவளை நேராக நோக்கவும், “பாருங்கள், எந்தவித மோசமான நிலைமையையும் சீர்ப்படுத்தி வாழ்வதுதானே சிறப்பு? நாமும் நல்லபடியாக வாழ முயற்சிக்கலாமே?” என்று இதமான குரலில் வினவினாள்.

“முடியாது, விட்டு விடு” என்றான் அவன் சுருக்கமாக.

“அப்படி விடக்கூடிய பந்தம் இல்லையே இது. மாற்ற முடியாத உறவு ஆயிற்றே!”

“எந்த யுகத்தில் இருக்கிறாய்?” என்றான் அவன் ஏளனமாக. “இந்த யுகத்தில் மாற்ற முடியாதவர்கள் பெற்றோர் மட்டும்தான். மஞ்சள் கயிற்று மகிமை, தாலி வேலி என்பதெல்லாம் ஐம்பதாண்டு அதிகப் பழசாகிப் போன சமாசாரம். எப்போது வேண்டுமானாலும் சொல்லு, விவாகரத்து தருகிறேன். இந்தப் பந்தத்தை அறுப்பதோ, மாற்றி அமைப்பதோ உன் விருப்பம். எனக்கு அணுவளவும் அதில் ஆட்சேபணை இல்லை” என்று அறிவித்தான் கிருஷ்ணசந்திரன் சற்றும் பிசிரற்ற குரலில், தெளிவாக.

(தொடரும்)




ரசிக மகா ஜனங்கள் எதிர்பார்க்கும் அத்தனை 'கிக்'கான சமாசாரங்களையும் உள்ளடக்கிய காக்டெயில்! எம்.ஜி.ஆர். ஸ்டைலில் சத்யராஜ் ரேக்ளா வண்டியில் வரும் ஆரம்பக் காட்சியிலேயே தியேட்டர் அதிர்கிறது. குதிரைப் பாய்ச்சலில் ஓடினாலும் திரைக்கதையென்னவோ அரதப் பழசு!

'சொந்தம் விட்டுப் போகக் கூடாது' என்று தம் மகளுக்கு அக்காள் மகனைக் கட்டி வைக்க நினைக்கும் hen-pecked husband; அதற்காக மாப்பிள்ளை சத்யராஜ் மற்றும் எக்ஸ்ட்ரா ஃபிட்டிங் கவுண்டமணியுடன் இணைந்து அவர் செய்யும் சதி; 'குட்டு' உடைபட சத்யராஜின் மாமியாரும் (ஜெயசித்ரா) மனைவியும் (மீனா) சேர்ந்து அவரைத் தலைமுழுக எடுக்கும் முயற்சிகள்; வில்லி ஜெயசித்ராவையே 'ஐயோ பாவம்!' என்றாக்கும் அளவுக்கு வந்து சேரும் வில்லாதி வில்லனான அவர் தம்பி (ஒண்ணு விட்ட தம்பிதாங்க!).... எல்லோரையும் காப்பாற்ற சத்யராஜ் போடும் சண்டை....!

கொடுத்த காசுக்கு சூப்பர் சுப்பராயனைப் பிழியப் பிழிய வேலை வாங்கியிருக்கிறார்கள்! அடுத்த மார்க் சத்யராஜுக்கு. அனாயாசமாக காமெடி கைவருகிறது. ஆனால் அசடு வழிய வைத்து கௌரவம் குறைத்து விட்டார்கள். ஜெயசித்ராவுக்கு பாஸ் மார்க். மீனா...? ஹும்...! இன்னும் எத்தனை காலம் கதாநாயகிகளை இப்படி...!

படத்தில் நம்பகத்தன்மையும் நேர்மையும் நிறைந்த ஒரே காட்சி - சத்யராஜ் தாம் செய்தது தவறு என்று உணர்ந்து ஒப்புக்கொள்ளும் கட்டம். மற்றதெல்லாம் சும்மா 'டுபாக்கூர்'!

சட்டம் பற்றி முழுமையாகத் தெரிந்து கொண்டு திரைக்கதை அமைத்திருக்கலாம்.

ஆனால் நம் ரசிகர்கள் அதையெல்லாம் நோண்டப் போவதில்லை... ஃபைட், ஸாங், ஸெண்டிமெண்ட் லாஹிரியில் திளைத்து 'அசத்யராஜுக்'கு அமோக ஆதரவு தரப் போகிறார்கள்!

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.


வீட்டுக்குத் திரும்பிப் போக பஸ் சார்ஜ்!
- வெ. ராஜாராமன்
அநியாயமா இருக்கு... டெலிபோன் பில் பத்தாயிரம் ரூபாய் வந்திருக்கு.
அதிகமா பேசியிருப்பீங்க.
நீங்க வேற, எங்க வீட்ல டெலிபோனே இல்லை!
- பா. ஜெயக்குமார்
நேற்று அரசவைக்கு வந்த ஜோசியர், நம் மன்னருக்கு பத்து தான் ராசியான எண் என்று சொன்னாராம்.
அந்தப் இரண்டு வரப்போகி என்று சொல்!
- வி. ரெங்கநாதன்
நடிகை நளினாஸ்ரீக்கு தன்னடக்கம் ரொம்ப ஜாஸ்தி; எம்.ஏ. படிச்சிட்டு +2 படிச்சதா சொல்லிக்கறாங்க.
எம். ஏ. படிச்சதா சொல்லிட்டு பதினாலு வயசுதான் ஆகுதுன்னு சொன்னா யாரும் நம்ப மாட் டாங்களே!
- சீர்காழி வி. ரேவதி

12

# ரமணி சந்திரன்

கிருஷ்ணசந்திரன் சொன்ன 'விவாகரத்து' என்ற வார்த்தை உதயரேகாவை மெய்யாகவே அதிரச் செய்து விட்டது.

அன்று வரையிலும், ஏதோ கோபம், ஏதோ அசட்டுப் பிடிவாதம், எப்படியோ பழகி விட்ட தீமைகளை விட மனம் இல்லாமை, இதை மாற்ற முயற்சிப்பதால் அவளிடம் ஒதுக்கம். ஆனால், ஒருநாள் இதெல்லாம் மாறி, இன்ப வாழ்வு நிச்சயம் என்ற நம்பிக்கை அவளுக்கு எப்போதுமே இருந்தது. இதற்கெல்லாம் அடித்தளமாக, அவளிடம் அவனுக்கு அன்பு இருக்கிறது என்பதிலும் அவளுக்கு உறுதி இருந்தது.

அதனாலேயே, ஒன்று மாற்றி ஒன்று என்று பல வழிகளிலும் முயற்சிக்கும் உற்சாகமும் இருந்தது.

ஆனால் அவன் அவளை அடியோடு பிரியத் தயாரா என்றால் அந்த அடித்தளமான அன்பு அவனுக்கு இல்லை என்றல்லவா அர்த்தமாகிறது. அஸ்திவாரமே இல்லை என்றால் அதன் மேல் என்ன கட்டடம் எப்படிக் கட்டுவது?

ஒன்றுமே புரியாமல் தலைசுற்றி விட, "எ...என்ன.. நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?" என்று தடுமாறினாள் அவள்.

அவளுக்குச் சமாளிக்க அவகாசம் கொடுப்பவன் போலச் சில வினாடிகள் பேசாதிருந்து விட்டு, "இது ஒன்றும் உலகத்தில் இதுவரை நடவாதது இல்லை, உதயரேகா. இனி, நடக்கக் கூடாததும் இல்லை. ஒரு திருமணம் தவறு என்று உறுதியாகத் தெரிந்த பிறகும் அதை விடாமல் கட்டிக் கொண்டு ஆடுவது முட்டாள்தனம். இருவருக்குமே அது நரகமாகி விடும். அதைவிட, இருவரும் மனம் ஒத்துப் பேசிப் பிரிந்து விடுவது மேல்" என்றான் அவன். ஏதோ மனப்பாடம் செய்து வைத்ததை ஒப்புவிப்பவன் போலத் தங்குதடையற்று.

அவளுக்கு, என்ன பேசுகிறான், என்ன இப்படிப் பேசுகிறான் என்ற தவிப்பும் ஆத்திரமும். "ஏன்? பிரிவதற்காக மட்டும்தான் மனம் ஒத்துப் பேச வேண்டுமா? ஒன்றாய் வாழ்வதற்காக மனம் ஒத்துப் பேசக் கூடாதா?" என்று அவன் வார்த்தைகளையே திருப்பிப் படித்து அவனை மடக்க முயன்றாள்.

"அது சாத்தியம் அல்ல என்று ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன்" என்றான் அவன் அசையாமல். "அதனால் நாம் பிரிந்து விடுவதுதான் மேல்."

ஒரு வேகமூச்சு எடுத்து விட்டு, "அக்னி சாட்சியாக நீங்கள் என் கழுத்தில் கட்டியது இந்த மாங்கல்யம். இதை நான், உயிர் உள்ளவரை பிரிவதாக இல்லை" என்று அறிவித்தாள் உதயரேகா.

"யார் உயிர் உள்ள வரையில்?" என்றான் அவன் ஒரு மாதிரியான குரலில்.

"என் உயிர்" என்று தொடங்கியவள், அவனது குரலின் வேறுபாடு மனதில் உறைக்க, "என்ன பேச்சு இது?" என்று கோபம் காட்டினாள்.

"உண்மை!" என்றான் கிருஷ்ண சந்திரன். ஆத்திரத்துடன் முறைத்தவளுக்குப் பதிலாக, "நம் நாட்டு மக்களின் வாழ்நாள் கணக்கு என்ன தெரியுமா? சராசரி ஐம்பத்தேழு வயது. ஆணுக்கும் அப்படித்தான். பெண்ணுக்கும் அப்படித்தான். எப்படியும் மனைவி சில ஆண்டுகளேனும் சிறியவளாகவே இருப்பதால், முன்பு பெரியார் உரைத்தது போல, எப்படியும் அறுபடப் போகிற தாலி தானே. இதற்குப் போய் இவ்வளவு முக்கியத்துவம்

## மாலை

கொடுப்பானேன்?" என்றான் விட்டேற்றியாக.

"உங்கள் சராசரிப்படி எல்லோருமே ஐம்பத்தேழு வயதில் இறந்துதான் ஆக வேண்டும் என்று கட்டாயம் இல்லை, தெரியுமா? எங்கள் சித்தியுடைய அத்தை ஒருவர் – அவரும் சித்தி மாதிரி இரண்டாம் மனைவிதான். அவர்களை விட இருபது வயது மூத்தவரை மணந்து, எழுபது வயதில் சுமங்கலியாக இரண்டு ஆண்டுகளுக்கு முன்புதான் – வெள்ளி விழா, பவள விழா தாண்டி பொன் விழாவும் கொண்டாடினார்கள். என்னை விட நீங்கள் நாலு வயதுதானே மூப்பு? வைர விழாவே கொண்டாட நம்மால் முடி...யும்..." சொல்லிக் கொண்டே வந்தவள், கணவனின் முகமும் தோற்றமும் மாறிய விதத்தில் திகைத்தாள்.

கண்ணும் முகமும் சிவந்து, தகதக வென்று...

இதே போல முன்பும் ஒருதரம் அவன் தோற்றமளித்தது உதயாவுக்கு உடனே நினைவு வந்தது.

அப்போதும் இப்படித்தான். ஏதோ நெடுங்காலம் அவனோடு வாழ்வது பற்றிய பேச்சின் போது தான் இப்படிச் சிவந்தான்.

ஏன்? நீண்ட நாள் அவளோடு வாழ்வது என்றால் வெறுப்பாக இருக்கிறதா? மாட்டிக் கொண்டோமே என்று கோபம் வருகிறதா? அதனால்தான் மணவிலக்குத் தர முன்வந்தானா?

# மயங்குகின்ற நேரம்

யோசிக்க யோசிக்க, உதயரேகா வின் மனம் மிகவும் சோர்ந்து போயிற்று. அவன் நினைத்தது எல் லாம் தப்பு. அவனுக்கு அவளிடம் நேசம் இருப்பதாக நினைத்தது முழு தவறு. அவனைத் திருத்தி அவ னோடு உன்னதமாய் வாழ எண்ணி யது இமாலயப் பிழை.

"நீ சொல்வது மிக அபூர்வமாய் அமைந்த விதிவிலக்கு. பொது நியதி அது அல்ல. அதனால்..."

''அதனால் என்ன? இதைக் கழற்றி உங்கள் கையில் கொடுத்து விட்டு, இங்கிருந்து வெளியேறச் சொல்லுகிறீர்களா? என் உயிருள்ள வரை, அது நடக்காத காரியம். நான் உங்களுக்கு விவாகரத்து தரப் போவ தும் இல்லை. நானாக மணவிலக்கு கோரப் போவதும் இல்லை. உங்கள் மனம் மாறினால் சரி. இல்லாவிட் டால், என் வாழ்நாள் முழுவதும் இப்படியே இருக்கத் தயார்'' என்றவள், சட்டெனத் திரும்பி நடந்து வெளியே மொட்டை மாடிக்குச் சென்று நின்றாள்.

முதல் தடவையாக, கணவனோடு பேசும் போது அவ ளாக இடையில் விலகிச் சென்றிருக்கிறாள். அசட்டுத் தனமாக வாழ்க்கையை அழித்துக் கொண்டு விட்டேனோ என்கிற சந்தேகமும் முதல் தடவையாக அப்போதுதான் அவளுக்குத் தோன்றியிருக்கிறது.

சந்தேகம் என்று ஒன்று தோன்றியதுமே அது சரிதான் என்பதற்கான காரணங்களும் மளமளவென்று தோன்றத் தொடங்கி விடுகின்றன.

முதலாவதாக அவள் பெரும் நம்பிக்கை வைத்தது, பண்ணை வீட்டில் இரவில் அவனது பார்வையிலும் சிலிர்ப்பிலும்தான். ஒருவேளை அன்று அந்த இரவு நேரத் தில் அவன் பாலுணர்வைத் தூண்டக்கூடிய புத்தகம் எதையேனும் படித்துக் கொண்டு இருந் திருக்கலாம். அந்த வேகத்தில் உணர்ச்சிகளைப் பிரதிபலித் திருக்கலாம். ஏனெனில், அவனே, உட னேயே அவளை விலக்கி நிறுத்தவில்லையா? யார் யாரோ பெண் களுடன் அவனுக்குப் பழக்கம் என்றார் கள். அப்படிப் பட்டவன், அன்று அவளை ஒதுக்கியதிலிருந்தே, அவளிடம் அவனுக்குக் காதல், காமம் என்று எந்த மண்ணாங்கட் டியும் இல்லை என்பதைப் பறைசாற்றவில்லையா?

எத்தனை தரம் திரு மணத்தை நிறுத்தச் சொல்லிக் கோரினான்?

அப்போதெல்லாம் அவ ளுக்கு ஏன் புரியவில்லை?

மனைவியிடம் கொண்ட அன்பினால் கிருஷ்ணசந்திரன் செய்ததாக உதயரேகா முன்பு எண்ணியன எல்லாம், அசட் டுத்தனமாக வாழ்வைப் பாழ டித்துக் கொண்ட ஒரு முட் டாள் பெண்ணின் மேல் கொண்ட பரிதாபத்தினால் இட்ட பிச்சைகளாகவே இப்



போது நிச்சயம் ஆயின.

இப்படி வெறுப்பவனின் கவனத் தைக் கவருவதற்காகச் செய்த வேலை களையும் அலங்காரங்களையும் எண் ணிப் பார்க்கையில் உதயரேகாவுக்கு மிகவும் அவமானமாக இருந்தது.

எப்படி அருவருத்திருப்பான்! வேண் டாம்! வேண்டாம் என்றதன் காரண மெல்லாம் இப்போதல்லவா புரிகிறது. ஆனால், கண் கெட்ட பிறகு செய்கிற சூரியநமஸ்காரமாய், இப்போது புரி பட்டு என்ன லாபம்? அடுத்தவர்களுக் காக – அவர்கள் மிகவும் பிரியத்துக்கு உகந்தவர்களே என்ற போதும், அவர் களுக்கு நன்மை செய்வதாக எண்ணி உதயரேகா தன் வாழ்வை நாசமாக்கிக் கொண்டது மட்டுமே மிச்சம்!

இனி இந்தச் சிக்கலை விடுவிக்க என்ன செய்யக்கூடும்?

உதயாவின் இந்த இருபத்தியிரண்டு வயது வாழ்வில், இனி என்ன செய்வது என்று அவள் மருண்டதே கிடையாது.

ஏமாற்றங்கள், வருத்தங்கள், இழப்பு கள் இதற்கு முன்னும் அவள் வாழ்வில் நேர்ந்தது உண்டுதான். ஆனால், அடுத்து என்ன என்று யோசித்து, எதையாவது செய்யத் தொடங்கி விடு வாள். ஆனால், இன்றோ யோசிக்க யோசிக்க, ஒன்றுமே புரியாத மலைப் புத்தான் பூதாகாரமாய் வளர்ந்தது.

இப்படி நினைக்கவில்லையே! நினையாமல் போனேனே என்று அதே நினைவாய், வேதனை ஒரு புழுவாய் உள்ளே குடைந்தது. வெளியே சாதார ணமாக இருப்பது போலக் காட்டிக் கொண்டாலும் உதயாவின் பேச்சும் சிரிப்பும் தானாகக் குறைந்து போயிற்று.

**பொ**துவாக வீட்டில் கிருஷ்ண சந்திரன் தானாகப் பேச்சைத் தொடங்கி வார்த்தையாடுவது கிடையாது. கலகல வென்று இருப்பது உதயா தான். அவள் நத்தையாய் ஒடுங்கவே, வீட்டில் பெரும்பாலும் நிசப்தமே நிலவியது.

மனைவியின் மாற்றத்தைக் கிருஷ்ண சந்திரன் கவனிக்கவே இல்லையா, அன்றிக் கவனித்தும் வழக்கம் போலத் தோளைக் குலுக்கி விட்டு அக்கறை யற்றுச் சென்றானோ உதயா அறியாள். இரண்டாவதாகத்தான் இருக்க வேண் டும் என்பது அவளது வருத்தமான ஊகம்!

பொதுவாக, அடுத்தவர் முன்னி லையில், முகபாவனையில் உதயரேகா கவனமாகவே இருந்தாள்.

அவளது கவனத்தையும் மீறி, அவளது இடைவிடாத மறுகலை அவள் முகத்தில் உணர்ந்து, யசோதா மகளிடம் கேட்டு விட் டாள், "என்னடி முகம் வாடித் தெரிகிறதே!" என்று.

உதயரேகா பதில் கூறுமுன், "ஏன், உங்களுக் குள் என்ன? என்ன தகராறு? என்னம்மா?" என்று பரபரத்தாள்.

இவளிடம் சொல்லி, மடியில் முகம் புதைத்து, சற்று நேரம் அழுது தீர்த்தால் கொஞ்சமேனும் ஆறுதல் கிட்டக்கூடுமோ என்று ஒருகணம் உதயாவுக்குத் தோன்றியது.

ஆனால் பெறாவிட்டாலும் யசோதாவுக் குத் தாய் மனம். மகளின் வேதனை தெரிந்தால் அவளும் வருந்துவாளே! ஏற்கெனவே அறியாத் தனமாக அவளை நோகடித்தது போதாதா?

மனதை மறைத்து, முத்துப் பற்களைக் காட் டிப் பளீரென ஒரு புன்னகை செய்தாள். "இல் லாததையும் பொல்லாததையும் கற்பனை செய் வதில் உங்களுக்கு நிகர் நீங்கள்தான் சித்தி!" என்றவள், யசோதா ஐயமாய் நோக்கவும், "வீட் டின் அலங்காரம் உன் விருப்பம் போல மாற் றிக் கொள் என்று உங்கள் மாப்பிள்ளை எனக்கு அனுமதி கொடுத்திருக்கிறார். அவர் மெச்சும் வண்ணம் எப்படிச் செய்வது என்று அதே யோசனையாய் இருக்கிறேனா? உங் களுக்கு என் கண்ணில் 'லைட்' எரியாதது போலத் தெரிகிறது!" என்று மீண்டும் நகைத்து, சிற்றன்னையைச் சமாளித்து அனுப்பி வைத் தாள்.

யசோதா சென்ற பிறகு சற்று நேரம் தீவிர மாகச் சிந்தனை செய்தாள்.

அடுத்து காந்திமதியா? சித்தியைப் போலவே மாமியாரும் உற்றுநோக்குகிறவர் தான். தாய்மாருக்கே உரிய நோக்கு.

இப்படி ஒவ்வொருவராக துக்கம் விசா ரிக்க, அவளது முகம் அழுது வடிவதல்லவா காரணம்? அப்படி அழுது வடிய இப்போது என்ன பெரிய இழப்பு நேர்ந்து விட்டது?

கணவனிடம் காதலை எதிர்பார்க்க முடி யாது. அவ்வளவுதானே? இந்தக் காதல் இல்லா மல் உலகத்தில் எவ்வளவோ பேர் சந்தோஷ மாக இருக்கவில்லையா?

டீ.வி.முன் உட்கார்ந்தால் இருபத்து நாலு மணி நேரத்துக்கும் பொழுதுபோக்கு இருக் கிறது.

அது வேண்டாம் என்றால் உருப்படியாகச் சமூக சேவை செய்யலாம். நலிந்தோருக்கு உழைப்பதற்காகத் திருமணமே செய்து கொள் ளாமல் எத்தனை பேர் வாழ்வையே அர்ப் பணித்திருக்கிறார்கள்!

மக்கள் சேவை என்ன, கலைச் சேவைக் காகக் கூடத்தான் எத்தனையோ பேர் என்

● கட்டுப்பாடற்ற தனி அதிகாரம், அகங்காரத்தையும் அழிவையுமே நாடும்.
ஆக்டன் பிரபு. தொகுப்பு : கோபி. நாகராஜன்

னென்னவோ தியாகம் செய்திருக்கிறார்கள்.

ஆயகலைகள் அறுபத்து நான்கில் அவளும் தான் எத்தனையோ கற்றிருக்கிறாளே! முக்கிய மான கலை – மன்மதக் கலையை மட்டும் கொஞ் சமும் பயிலவில்லை; பயிலத் தோன்றவில்லை. சொல்லித் தெரிவது இல்லை மன்மதக் கலை என்று கேள்விப்பட்டிருந்தது ஒரு காரணம். அந்தக் கலையைக் கணவனிடம் கற்பதே முறை என்று தோன்றியது அடுத்தது. ஆனால்...

மீண்டும், ஏக்கத்துடன் கணவனிடம் ஓடிய மனதைக் கட்டுப்படுத்தி நடப்புக்குக் கொணர்ந் தாள்.

சற்று யோசித்து விட்டு, பிறந்த வீடு சென்று வீணையை எடுத்து வந்து வாசித்தாள்; பாடி னாள்; டேப்பைப் போட்டுக் கொண்டு ஆடி னாள்.

எதிலும் மனம் முழுமையாக லயிக்காதபடி யால் திருப்தியற்று, அன்றையப் பத்திரிகையை சிரத்தையற்றுப் புரட்டிய போது ஒரு விளம் பரம் அவளது கவனத்தைக் கவர்ந்தது.

அது ஓர் ஓவியப் போட்டிக்கான விளம் பரம். இன்னமும் இரு வாரங்களில் போட்டிக் குரிய படத்தை முடித்துக் கொடுக்க வேண்டும். மனித உணர்வுகளைப் பிரதிபலிக்க வேண்டு மாம்.

அன்றே சென்று, கான்வாஸ், வண்ணங் கள், பிரேம், ஸ்டாண்டு, தூரிகை என்று தேவை யானவற்றை வாங்கி வந்து அவளது அறையில் சற்று நேரம் யோசித்து, அவ்வப்போது, தோன் றிய சில கருத்துக்களுக்கு வரி வடிவம் கொடுத்து, பென்சிலால் வெறும் கறுப்புக் கோடு களாகச் சிறிய அளவில் வரைந்தாள்.

வரைந்தவை அனைத்தையும் தரையில் பரப்பி வைத்துப் பார்த்து விட்டு அவற்றுள் ஒன்றைத் தேர்ந்தெடுத்து, அதைக் 'கான்வாசில்' வரையத் தொடங்கினாள்.

ஒரு வாரம் – பெயருக்கு உண்பது உறங்கு வது தவிர முழு நேரத்தையும் சித்திரத்துக் காகவே செலவிட்டு ஒருவழியாய் ஓவியத்தை முடித்து விட்டுப் பார்க்கையில், பார்த்துப் பார்த்து வரைகையில் மனப்பாடமாகி விட்ட படத்தைப் போட்டிக்கு அனுப்புமுன் கடைசி யாக ஒருதரம் சரிபார்த்த போது உதயரேகா வின் விழிகளில் நீர் மல்கியது.

**அ**ன்றிலிருந்து பதினைந்தாம் நாள் மதியம் தாண்டி, கிருஷ்ணசந்திரனின் அலு வலக மேஜையில் இருந்த அவனது நேரடி ஃபோன் ஒலித்தது.

ரிசீவரை எடுத்துக் காதில் வைத்தால் அவ னுடைய தங்கையின் குரல் பயந்து பயந்து, "அ...அண்ணா...." என்று அழைத்தது.

யார் என்று அறிந்ததுமே ரிசீவரை வைத்து விடப் போனவனைத் தங்கையின் குரல் தடுக்க, "என்ன விஷயம்?" என்று அதட்டி னான்.

(தொடரும்)

## 'சுருக்-நறுக்' போட்டி –9; முடிவுகள்.....

# அதிர்ஷ்டம் என்பது.....

**(பிரசுரமாகியுள்ள ஒவ்வொன்றும் ரூ. 50 பரிசு பெறுகிறது)**

● தனது தோல்விக்கும், அடுத்தவர் வெற்றிக்கும் மனிதர் கண்டுபிடித்துள்ள காரணம்.

– லெக்ஷ்மிபிரபா, திண்டுக்கல்.

● துவண்டு விடாத தொடர் முயற்சி யில் எதிர்பாராமல் கிடைக்கும் வெற்றிக்கு மற்றொரு பெயர்தான் அதிர்ஷ்டம்.

– க. தமிழ் ரோஜா, கீரனூர்.

● முயற்சி எனும் தாய்க்கும் வாய்ப்பு எனும் தந்தைக்கும் பிறக்கும் குழந்தை.

– இரா. சந்திரசேகரன், விருதுநகர்.

● கடலைப் பொட்டலத்தில் கடைசி கடலையும் நல்லதாக இருந்து விடுவது.

– ஆர். நந்தகுமார், சேலம் – 9.

● நம்பியவனை நடுச்சந்தியிலும் நம்பா தவனை உச்சிக்கும் கொண்டு செல்லும் சோம்பல் தேவதை!

– எம். பாக்கியநாதன், மாட்டுக்காரனூர்.

● மனித முயற்சிக்கு இறைவன் அளிக் கும் சம்மதம்.

– பி. ராஜேந்திரன், மேலக்காவேரி.

● ஒருவரை அதிர்ஷ்டசாலி ஆக்குகிறது. ஒன்பது பேரை பொறாமைக்காரர் ஆக்கு கிறது.

– வெ. ஆசைத்தம்பி, தஞ்சாவூர் – 1.

● முயற்சி உள்ளவனுக்குக் கிடைக்கும் துருப்புச் சீட்டு.

– நா. கோகுல், தூத்துக்குடி–8.

# Kalki Shopping Page

## DISCOUNT SALE UPTO PONGAL

FOR

## பர்வததாஸ் சாரீஸ்

மதுரை சுங்குடி புடவைகள்
1, வடக்கு மாடவீதி,
மைலாப்பூர்,
சென்னை - 4.

**RANEE SAREES**
**DEVENDRA SAREES**

9X5 / 10X6 } கைத்தறி வேஷ்டிகள் கிடைக்கும்

## RAMACHANDRA SAREES

*Quality & Quality*

தரம் தரம் தரம்தவிர வேறில்லை

**RAMACHANDRA SAREES,**
**ராமசந்திரா சாரீஸ்**



(மதுரை சுங்குடி புடவைகளின் உலகம்)

37-B, Arya Gowder Road,
Postal Colony Bus Stop 3rd Corner
West Mambalam, Madras - 33.

**Ramachandra Sungudi Sarees No.1** தரம் எங்களின் விலாசத்தில் மட்டுமே கிடைக்கும்.

இன்னும் பிற: தரமான Venkatakiri, Devendra, Bengal & கோரா Cottons புடவைகளும் கிடைக்கும்.

*New Year Special Discount Sale*

## SOWBAGYA

THE GRINDER PEOPLE

162, Virapillai Street,
Bangalore - 560 001.
Ph : 5587587

314, Perundurai Road,
ERODE - 11.
Ph : 77945, 72965

32-A, North Usman Road,
T. Nagar, Madras - 600 017.
Ph : 8253547 / 8252908.

SIBI ADS

# பொங்கல் – உங்கள் வாழ்வை வளமுறச் செய்யும் அறுவடைத் திருநாள் – இது ஆனந்தப் பெருநாள்

CRISIL FA+

**21 st Century's**

# "Family-Deposit"

வாழையிலை தோரணங்கள், வண்ண வண்ணப் பூச்சரங்கள், வீதியெங்கும் கோலங்கள், ஊரெங்கும் கோலாகலங்கள். தித்திக்கும் செங்கரும்பு, செழுமிக்க மஞ்சள்கொத்து, தேங்காய் பழங்களுடன் வீடுகள்தோறும் கொண்டாட்டங்கள். ஆம், இது மங்கலம் பெருகும் பொங்கல் திருநாள் – பூமியின் பலனை கைமீது கண்டுகளிக்கும் பொன்னாள். பால்பொங்க, நெஞ்சமெல்லாம் மகிழ்ச்சியில் பொங்க, சொந்தங்கள் கூடிக்கொண்டாடும் இந்த நன்னாளில் உங்களை வாழ்த்துவதே எங்களுக்கு மகிழ்ச்சி.

உங்கள் நலன் கருதியே எங்கள் முதலீட்டு நிறுவனம் சேவை புரிந்து வருகிறது. **ஃபேமிலி டெபாஸிட்** – இத்திட்டம் உங்கள் பணத்தின் பாதுகாப்பிற்கும் எதிர்கால நல்வாழ்விற்கும் உறுதியளிக்கிறது. இது உங்கள் குடும்பத்தினருக்கு ஒரு செல்வக் களஞ்சியம்.

வளம்கொழிக்கும் இந்த அறுவடைத் திருநாளில், கூடுதலாகப் பெறும் வருமானத்தை மேலும் பன்மடங்காய் பெருக்க திட்டமிடுங்கள். காலத்தின் தேவை அறிந்து சேவை புரியும் எங்கள் நிறுவனத்தில் முதலீடு செய்யுங்கள். அது உங்கள் எதிர்காலத்தை பாதுகாக்கும். புன்னகை ஒளிவீசும் இந்த பொங்கல் பெருநாளில் வாழ்வில் இனிமைகள் நிறையட்டும்.

**ட்வெண்டி ஃபர்ஸ்ட் செஞ்சுரி மானேஜ்மென்ட் சர்வீசஸ் லிமிடெட்**

***நிர்வாக அலுவலகம் :***

"ஸ்ரீவித்யா" 32, டி.டி.கே. சாலை, சென்னை – 600 018.
போன் : 4995155, 4994821. ஃபேக்ஸ் : 044–4994826

***கிளைகள் :***

பம்பாய், கோயம்புத்தூர், ஐதராபாத்

**Now 15% interest**

உங்கள் ஃபேமிலி டெபாஸிட் பற்றி மேலும் கூறுங்கள்.

பெயர் : ..........................

விலாசம் : ..........................

..........................

போன் : ..........................

ட்வெண்டி ஃபர்ஸ்ட் செஞ்சுரி மானேஜ்மென்ட் சர்வீசஸ் லிமிடெட், "ஸ்ரீவித்யா", 32, டி.டி.கே. சாலை, சென்னை – 600 018.

Sens - TCMS/950904

விமானத்தைக் கடத்திச் செல்ல முயற்சி நடந்திருக்கிறது. மந்திரியின் பாதுகாவலர்கள் அவர்களை முறியடிக்க முயன்றிருக்கிறார்கள். 'காக்பிட்டி'ல் வைத்துத் தகராறு நடக்க, கை கலப்பில் வெடித்த குண்டு ரேடியோவைச் சேதப்படுத்திவிட்டது. சீர் செய்ய முடியாத சேதம். விமானத்தை ஓட்டிய பைலட் கெட்டிக்காரர். இந்த நிலையில் முழுக்க முழுக்கக் கடல் மீது பறப்பது சரியல்ல என்று முடிவு செய்து, இந்தியாவுக்கே திரும்பிவிட்டார். தகவல் கொடுக்கவோ, உத்தரவு பெறவோ முடியாத நிலைமையில், எந்த விமான நிலையத்தை அணுகுவதும் ஆபத்து என்று விமானப் போக்குவரத்து அதிகம் உள்ள இடங்களைத் தவிர்த்து விமானத்தை பரந்த வெறும் பரப்பில் இறக்கி விட்டார். இறங்கிய இடம், ஒரிசாவை ஒட்டிய ஆந்திர எல்லை. ஆனால், இன்னுமோர் இன்னலாக, சில நாட்களுக்கு முன் வீசிய புயலால் அங்கும் டெலிஃபோன் தொடர்புகள் பெரும்பாலும் பாதிக்கப்பட்டிருந்தன. அலைந்து திரிந்து ஒருவாறு புவனேஷ்வர் விமான நிலையத்தோடு பேசவே. இவ்வளவு நேரமாகி விட்டது!

நண்பர் கூறிய விவரத்தைக் கிருஷ்ண சந்திரன் மனைவியிடம் கூறிமுடிக்கையிலேயே, மீண்டும் டெலிஃபோன் அழைக்க, இப்போது உலகநாதனே பேசினார்.

அவர் குரல் கேட்டதுமே, "உதியிடம் பேசுங்கள்" என்று மனைவியிடம் ரிசீவரைக் கொடுத்து விட்டான் கிருஷ்ணசந்திரன்.

"அப்பா, அப்பா!" என்று விசும்பிவிட்டு, "முதலில் எனக்குச் சித்தியுடன் பேச வேண்டும்ப்பா" என்று தந்தையிடம் கேட்டு, யசோதாவிடம் சற்று நேரம் அழுகையும் சிரிப்புமாகச் செல்லம் கொண்டாடினாள் பெண்.

"உங்களை இனிமேல் பார்க்கவே மாட்டேனா என்று பயந்தே போனேன் சித்தி!" என்று உதயரேகா குரல் தழுதழுக்க, அந்தத் தாயும் அதையே எதிரொலித்தாள்.

"கொஞ்சுவதற்கு இப்போது நேரமில்லை, கொடு" என்று உலகநாதன் மீண்டும் டெலிஃபோனை வாங்கி, "உதி, எங்களுக்கு ஒன்றுமில்லை என்று தாத்தா வீட்டுக்குத் தகவல் கொடுத்துவிடும்மா. அவர்களாக இந்த விவரம் தெரிந்து கொள்ள வாய்ப்பில்லை என்றாலும், சின்ன மாமா வீட்டிலிருந்து மெனக்கெட்டுக் கிளம்பிப் போய்க் 'காபரா' படுத்திவிடுவார்கள். இங்கே எல்லோரும் அவரவர் வீட்டோடு பேசக் காத்திருக்கும்போது நான் இன்னொரு 'கால்' போடுவது சரியல்ல. அத்தோடு அவர்களுக்குப் 'போஸ்டாபீ'சில் சொல்லி, அழைத்து வரும் வரை காத்திருக்க வேண்டும். அதனால் நீயே கூப்பிட்டுச் சொல்லிவிடு. இப்போது மாப்பிள்ளையிடம் கொடு" என்று கூறித் தன்



மருமகனிடமும் இரண்டு வார்த்தை பேசி விட்டு வைத்தார்.

விழிகளில் ஆனந்தக் கண்ணீரும், இதழ்களில் சிரிப்புமாகத், "தாங்க்யூ" என்று கணவன் தாடையில் லேசாக இதழ் ஒற்றினாள் உதயரேகா.

சிலவினாடிநேரம் அசைவற்றிருந்து அதை ஏற்றவன், அவளையும் எழுப்பித் தானும் எழுந்தபடி, "அங்கே ஏதாவது பிரச்னை கிளம்புமுன், அப்பா சொன்னபடி உன் தாத்தாவுக்கு முதலில் தகவல் கொடு. அங்கே உள்ள போஸ்டாஃபீஸ் நம்பர் என்ன?" என்று மனைவிக்கு அவளுடைய தந்தையால் இடப்பட்டிருந்த பணியை நினைவூட்டினான்.

"ஆமாம். சீக்கிரமாய் அதைச் செய்ய வேண்டும். ஏனென்றால் அந்தச் சின்ன மாமா கொஞ்சம் ஒரு மாதிரி" என்றுரைத்தபடி அறைக்குள் ஓடிப்போய், டயரியை எடுத்து வந்தாள் அவள்.

"நீயே சொல்லிக் கொள்வாயில்லையா? இரவு தூங்காதது இப்போது தூக்கம் வருகிறது... நீ கூட டெலிஃபோன் செய்து முடித்தபின் பேசாமல் பகல் முழுவதும் தூங்கிவிடு, உதயா" என்றபடி அவனது அறைக்குள் சென்று மறைந்தான் கிருஷ்ணசந்திரன்.

அதற்குள், 'உதி', 'உதயா'வாகிவிட்டதா?!

ஆயினும் உதயரேகாவுக்குச் சிரிப்புத்தான் வந்தது.

யசோதாவுடைய தந்தையிடம் விஷயத்தைச் சொல்லி, உண்மையாகவே ஒன்றுமில்லை என்று ஒருவாறு நம்பச் செய்து முடித்தபோது அவளுக்கும் அயர்வாகவே இருந்தது.

நாகராஜனை அழைத்து, அய்யாவுக்கு மட்டும் சாப்பிட எடுத்து வைத்து விட்டு எல்லோருக்கும் சாப்பாடு போடும்படிச் சொல்லி விட்டு படுத்தாள்.

பெற்றோர் நலமாக இருக்கவே, கடந்த சில மணி நேரங்களில் அனுபவித்த துன்பம் அடியோடு மறந்து போய்விட, கணவனின் தாடையில் முத்தமிட்டதே நினைவு வந்தது. 'ஷேவ்' பண்ணாத சருமத்தின் சொர சொரப்பு மீண்டும் அவளது உதடுகளில் குறுகுறுக்க, முறுவலித்தபடியே உதயரேகா உறங்கிப்போனாள்.

அன்று மதிய நேரம் உதயரேகா விழித்தெழுந்தபோது, கிருஷ்ணசந்திரன் வெளியே சென்று விட்டிருந்தான்.

"வீடுவரத் தாமதமாகும். இரவு உணவு வேண்டாம்" என்று அவன் தகவல் கொடுத்த போதும் அவளது உற்சாகம் மட்டுப்படவில்லை.

இரவிலும் அவன் வீடு திரும்பியபோது வெகு நேரம் ஆகிவிட்டிருந்தது. அப்போதும் புன்னகையோடு எதிர் கொண்ட மனைவியிடம், "எனக்கு மிகவும் களைப்பாக இருக்கிறது. நீ என்ன சொல்ல வேண்டியிருந்தாலும், அதைக் காலையில் பார்க்கலாம்" என்று நில்லாமலே சொல்லியபடி சென்று அவனது அறைக்குள் புகுந்து கொண்டான்.

"இல்லை இல்லை" என்று மறுத்தது, இல்லை என்றாகி விட்டதே என்று வெட்கமா? வெண்ணெய் திருடிய கண்ணன் வெட்கப்பட்டான் என்றால், அவன் கையில் இருந்தது திருட்டுப் பொருள்! இவனுக்கென்ன வந்தது? உதயாவுக்கு வேடிக்கையாகத்தான் இருந்தது!

வழக்க விரோதமாக உதயரேகாவுக்கு அன்று அதிகாலையிலேயே விழிப்புத் தட்டி விட்டது. பல்துலக்கி முகம் கழுவிக் கொண்டு மொட்டை மாடியில் வந்து நின்று பார்த்தாள்.

காந்திமதி திட்டமிட்ட தோட்டம்; அழகும் மணமுமாகக் கண்களுக்கும் நாசிக்கும் விருந்தளிக்கச் சற்று நேரம் நின்று, அதை ரசித்து விட்டு மீண்டும் படியேறி மாடிக்குப் போனாள்.

கிருஷ்ணசந்திரன் வழக்கமான இடத்தில், பத்திரிகையோடு அமர்ந்திருந்தான்.

மென்னடையாக வந்தவளுக்குப் பத்திரிகைக்கு வெளியே அவனது தாடை தென்பட்டது– முந்தைய நாளின், அதே ஒரு நாள் தாடி வளர்ச்சியோடு.

அணுகிச் சென்று, குனிந்து, கணவனின் தாடையில் முத்தமிட்டாள், எந்த விதத் தயக்கமும் இல்லாமல் 'குட்மார்னிங்!' என்றாள் குதூகலமாக.

பத்திரிகையிலிருந்து பார்வையை அகற்றாமலே, சற்று விலகி, "நேற்று உன் நிலைக்கு இரங்கியதைத் தவறாகப் புரிந்து கொண்டு விட்டாய் என்று தோன்றுகிறது. அந்த நிலையில் யார் இருந்திருந்தாலும், நான் அதேபோல ஆறுதல் அளித்துத்தான் இருந்திருப்பேன்" என்றான் கிருஷ்ணசந்திரன் நிதானமாக.

"எப்படி எப்படி? அதேபோல ஆறுதலா? அப்படி மார்போடு அணைத்தா?" கலகலவென்று நகைத்து, "கொஞ்சம் வேறு மாதிரிக் கதை யோசியுங்களேன்! ப்ளீஸ்!" என்றாள் அவள் கொஞ்சலும் கேலியுமாய்.

தலையசைத்து, "இல்லாததை இருப்பதாக எண்ணி ஏமாற வேண்டாம், உதயரேகா" என்றான் அவன்.

"உதயரேகா...வா! மீட்டர் அளவுக்கு நீ...ளமாய் அழைப்பதுதான் பிடிக்கிறது என்றால், உங்கள் இஷ்டம். ஆனால் நான் உங்களுக்கு ஒரு குட்டிப் பெயர் வைத்து விட்டேனாக்கும். என்ன தெரியுமா? 'கிருஷ்' கிறுகிறு கிருஷ். கொஞ்....சம் கிறுக்கு கிருஷ்" என்று முத்துப் பல் வரிசை தெரிய மோகனமாய் முறுவலித்தாள் மனைவி.

"சொன்னால் புரிந்து கொள்ள மாட்டாயா?" என்றான் அவன் அலுப்புடன்.

# KALKI SHOPPING PAGE

## மணமக்கள் தேவை
## கம்யூட்டர் ஜாதகம்

அனைத்து சமூகத்திலும், ஆயிரக் கணக்கான வரன்கள் பெற உடன் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

கம்யூட்டர் ஜாதகங்கள் நொடிப் பொழுதில் ஆங்கிலம், தமிழ் ரூ. 40/-
எதிர்கால கணிப்புடன் ரூ. 120/-
ஆண்டு பலன் : ரூ. 50/-
கல்யாண பொருத்தம் : ரூ. 40/-

**ASTROLOGY SOFTWARE FOR SALE.**

**ஸ்வயம்வரமாலா**

(GOVT. REGD.)

18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33. போன் : 425822,

7-ஏ, சாந்தி வஹார் காம்ப்ளக்ஸ், லஸ், சென்னை - 4. போன் : 846278,

88, 1, 16th Cross, 6th Main, Malleswaram, Bangalore - 560 055. Ph. : 3340146

ADYAR

## STUDENTS XEROX

*Quality that is close to perfection*

**XEROX**
**LASER PRINTING**
**WORD PROCESSING**
**DTP**
**ELECTRONIC & MANUAL TYPING**
**BINDING & LAMINATION**

## நெல்லை பெனிபிட் பண்ட் லிமிடெட்

NELLAI BENEFIT FUND LIMITED MADRAS

26, ரங்கநாதன் தெரு, முதல் மாடி, தி.நகர், சென்னை-17.
4345178

*பரிசு! பரிசு! பரிசு!*
*14 கிராம் தங்க செயின்*

1. பிக்சட் டெபாசிட் 21% + 3% போனஸ்
2. பென்ஷனர் டெபாசிட் 22% + 3% போனஸ்
3. கல்வி உதவி டெபாசிட் 24% + 3% போனஸ்

4. சுரேகா டெபாசிட் :

| செலுத்தும் தொகை ஒரு தரம் மட்டும் | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 1000 | 23 வருடம் | ரூ. 1,00,000 |

5. பிறந்த நாள் டெபாசிட் :

| செலுத்தும் தொகை ஒரு முறை மட்டும் | வருடம் தோறும் பிறந்த நாள் அன்று | திருமணத்தின் போது கிடைக்கும் தொகை |
|---|---|---|
| ரூ. 4250 | ரூ. 1000 | ரூ. 5000 |



6. வாரிசுதாரர் டெபாசிட் :

| ஒருமுறை செலுத்தும் டெபாசிட் | காலம் | மாதாமாதம் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 10,000 | 180 மாதம் | ரூ. 7,500 |
| | 300 மாதம் | ரூ. 15,000 |

*வீடு நிலம் தங்க நகைபேரில் கடன் வழங்கப்படும்*



**"உனக்குத்தான் நிலம் இல்லையே, நீ எதுக்கு கர்நாடக அரசே, தண்ணீர் கொடுன்னு கோஷம் போடறே?"**

**"விவசாயம் செய்யாட்ட என்ன? நான் தான் பால் வியாபாரம் செய்யறேனே!"**

**— சீர்காழி வி. ரேவதி**

அவனை ஏறிட்டு, "மனைவியிடம் அன்பு கொள்வது இயற்கைதானே, கிருஷ்? அதை ஏன் மறுதலிக்க முயற்சிக்கிறீர்கள்?" என்று வினவினாள் உதயரேகா.

வேண்டுமென்றே அவள் பேச்சைப் புரிந்து கொள்ள மறுத்து, "எல்லாமே இயற்கை வழியிலா நடக்கிறது? ரத்த சம்பந்தம் உடைய தந்தையைவிட நீயே 'சித்தசித்தி' என்றுதானே உருகுகிறாய்?" என்றான் அவன்.

"இதில் இயற்கைக்கு மாறாக என்ன இருக்கிறது? தாய்க்குப் பிறகு தானே தந்தை? சித்தி என் தாய். அதிலும், அப்பா வேலை வேலை என்று போய் விடுவதால் எங்கள் மூவருக்குமே எல்லாமே சித்திதான்" என்றாள் அவள்.

"எப்படியும் உன்னைப் பொறுத்தவரையில் ரத்தத் தொடர்பு உடையவர் தந்தைதானே?

"ஆனால்...." என்று விடையறுக்கத் தொடங்கியவள், அவன் முகத்தில் ஒரு கூர் பார்வை செலுத்தி, பேச்சை மாற்ற முயற்சிக்கிறீர்கள்?" என்றாள்.

"புரிந்து கொண்டால் சரி" என்று ஒரு மாதிரிக் குரலில் கூறிவிட்டு எழுந்தான் அவன்.

இறைவனாகப் பார்த்துக் கொடுத்தது என்று அவள் முடிவு கட்டியதால் இந்த வாய்ப்பை வீணாக விட்டுவிட்டுச் சும்மா இருக்க உதயரேகா சற்றும் தயாராக இல்லை.

எனவே மீண்டும் மீண்டும் கணவனை நெருங்கிக் கேட்டாள்.

கவர்ச்சிகரமான போஸ்களும், காதல் சேஷ்டைகளுமாக முயல அவளது தன்மானம் இடம் கொடாத போதும், அவனைக் கைபற்றி, தோள் தொட்டு நிறுத்திப் பேசுவதில் இப்போது அவளுக்குத் தயக்கமோ, கூச்சமோ இருக்க வில்லை.

விடாப்பிடியாக அவள் தொடர்ந்ததன் பயனாகக் கிருஷ்ணசந்திரன் வீட்டில் இருக்கும் நேரம் வெகுவாகக் குறைந்து போயிற்று. அதிகாலையில் கிளம்பிச் சென்றானானால், ஊர் அடங்கும் நேரத்திற்குமுன் திரும்புவது இல்லை.

ஆனால், அந்த நேரத்திலும், அவனைப் பின்பற்றிச் சென்று, அவன் தோளைப் பற்றித் தன்புறம் திருப்பி, "நீங்கள் என்ன ஓட்டம் ஓடினாலும் நான் விடப் போவதாக இல்லை, கிருஷ். உங்கள் மனதில் என்மேல் அன்பே இல்லை என்றால் அது வேறு விஷயம். ஆனால் நெஞ்சு நிறைய அன்பை வைத்துக் கொண்டு, மறைப்பது ஏன்? சொல்லுங்கள்" என்று விடாமல் கேட்டாள் உதயரேகா.

பொறுமை இழந்தாற்போல், "என்ன அன்பு? என்ன மறைப்பு? எல்லாம் இதுதான் என்றால் பெற்றுக் கொள்" என்று உரைத்தவன், சட்டென அவளைப் பற்றி, அழுந்த முத்தமிட்டான்.

உதயரேகா திகைப்பு மாறி, நெகிழத் தொடங்குகையிலேயே அவளைத் தள்ளி விடாத குறையாக, விலக்கி நிறுத்தி விட்டுத் தள்ளாடியவாறு அவன் அறையை நோக்கி நடந்தான் அவன்.

தள்ளாட்டம்! என்ன அநியாயம். அவளுடைய கணவனிடமிருந்து கிடைத்த முதல் இதழணைப்பு இப்படியா இருக்க வேண்டும். ஆனால்...

மீண்டும் ஒரு முரண்பாடு உதயரேகாவை உறுத்தியது. குடிமயக்கத்தில் தள்ளாடுகிறவன் வாயில் மதுவாடை இல்லையே! ஒரு வேளை வாயில் நெடி அடிக்காதோ!

குடிபோதையை நிர்ணயிக்க, வாயால் ஊத சொல்வது நினைவு வரலே அவள் மீண்டும் குழம்பினாள்... ஒருவேளை. குடித்து வெகு நேரம் ஆகிவிட்டதா? ஆனால் தள்ளாடுகிறானே! ஒருவேளை முத்தம் வேறு, மூச்சுக் காற்று வேறா?

உதயரேகாவின் இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. கணவன் குடிகாரனா அல்லது...? இதை எப்படித் தெரிந்து கொள்வது?

ஆனால், ஒரு குடிகாரனின் முத்தத்தில் மது வாடை அடிக்குமா, இல்லையா என்று எந்த மறுவாழ்வு மையத்தில் போய் விசாரிக்க முடியும்?

உதயரேகா குழம்பித் தவிக்க, அடுத்து இரு தினங்கள் கிருஷ்ணசந்திரன் வீட்டிற்கே வரவில்லை. வேலையிருப்பதாகத் தகவல் மட்டுமே வந்தது. அதிலும், வேறு வகையாய் ஒரு குழப்பமே மிந்தது.

மூன்றாம் நாள் இரவில், அவன் வீடு திரும்பியபோது, அவனோடு ஒட்டிக் கொண்டு ஓர் இளம் பெண்ணும் வந்தாள்.

தோளில் மாட்டிய பெரிய பையும், அதில் சில பத்திரிகைகளுமாக வந்த அந்தப் பெண்ணைத் தோளோடு தழுவியவாறே, அழைத்துச் சென்ற கிருஷ்ணசந்திரன், அவனது அறைக்குள் சென்று கதவைச் சாத்திக் கொண்டான்.

(தொடரும்)

# காதல் என்பது...

செளம்யாவைச் சந்தித்து இன்றோடு மூன்று மாதங்கள் ஆகி விட்டிருந்தது. இந்த நாட்கள் 'ரணகளமாய்க்' கழிந்தது ஞாபகம் வந்தது. ஆனால் மூலகாரணம் நான்தானே தவிர, செளம்யா அல்ல.

அன்றைய தினம் மனதில் இன்னமும் பதிந்திருக்கிறது.

''கிரி, நம்ம காதலோட முழுப் பரிமாணம் என்னன்னு புரியணும். அதுக்கு இதான் சரியான பாதை. இன்னும் மூணு மாசம், நமக்குள்ளே எந்தவிதச் சந்திப்பும் கிடையாது. லெட்டர்லயோ, போன்லயோ கூடத் தொடர்பு கூடாது.''

"என்ன உளர்றே செளம்யா? பஸ்ஸில, ரோட்டில யதேச்சையா சந்திச்சாக் கூட மூஞ்சியைத் திருப்பி வைச்சுக்கணும்ன்றியா?"

"அவசியமிருக்காது. ஏன்னா; நான்



கோயமுத்தூர் போறேன், டெபுடேஷன்ல. அங்க ஒரு ஆபரேட்டர் மூணு மாசம் லீவு. அதுக்குப் பதில் நான் போறேன். போக லைன்னா ஒண்ணும் சொல்ல மாட்டாங்க. ஆனா, நான் விரும்பிக் கேட்டுப் போறேன்."

"கோயமுத்தூர் என்ன உலகத்தோட அந்தக் கோடியிலயா இருக்கு. இதோ திருச்சில ராத்திரி ஏறினா, விடியக்காலம் வந்து நின்னுரலாம்."

"எனக்கும் தெரியும், ஆனா, உங்க மேல நம்பிக்கை இருக்கு. நான் சொன்னதையும் மீறி நீங்க வர மாட்டீங்கன்னு நினைக்கிறேன். நேற்றைய சம்பவத்தை 'விதிவிலக்கா' வச்சுக்கலாம்."

அதனை செளம்யா இயல்பாகத்தான் சொன்னாள். எனினும் எனக்கு எங்கேயோ வலித்தது.

நேற்று நான் கொஞ்சம் நிதானமாய் இருந்திருக்க வேண்டும். அவசரப்பட்டு விட்டேன். இனிமையான 'ஞாயிறு' தினம். வீட்டில் யாரும் இல்லை. அப்பா, அம்மா எல்லோரும் ஊருக்குப் போயிருந்த சமயம். 'சும்மா வீட்டைப் பார்க்க வாயேன்' என்றுதான் செளம்யாவை அழைத்து இருந்தேன்.

ஆனால், இயல்பாய்ப் பேசிச் சிரித்த அந்த நெருக்கமும், யாருமற்ற தனிமையும், அன்றைக்கென்று சற்று பிரயத்தனம் செய்து, செய்து கொண்ட அவளது அலங்காரமும் என்னை வலுவாய்த் தாக்கி விட்டதென்னவோ வாஸ்தவம்தான். ஆனால், நான் அவள் கையைப் பிடிக்க முயன்றபோதே செளம்யா முன் எச்சரிக்கையாய், விலகி விட்டாள். 'கிணத்துத் தண்ணியை ஆத்து வெள்ளமா கொண்டு போயிரும்' என்று பழமொழி சொன்னாள்.

ஆனால்,

அடுத்த நாளே இப்படி ஒரு இடியை என் தலையில் இறக்குவாள் என்று நினைத்திருக்கவில்லை நான். 'காதல் என்பது வெறும் உடம்பா, மனசில்லையா' என்றாள். 'விலகலே காதலை உறுதிப்படுத்தும்' என்றாள்.

ஒன்றும் பேச முடியவில்லை; நான் பேச முயலவும் இல்லை.

ஆயிற்று. எப்படியோ, மூன்று மாதமும் கழிந்து விட்டது. இதோ, இன்னும் சில மணித் துளிகளில் நான் செளம்யாவைச் சந்திக்கப் போகிறேன்.

அறைக் கதவு திறந்தது.

செளம்யாதான்.

"என்னாச்சு குணா?" என்றவளுக்குக் கண்ணில் நீர்ப்படலம் தோன்றியிருந்தது.

"இவ்ளோ நாள் கழிச்சுச் சந்திக்கிறோம். எதுக்கு துக்கப்படுறே? நான் என்ன நிரந்தரமாவா இந்த ஆஸ்பத்திரில தங்கிட்டப் போறேன். இன்னும் மூணு நாள்ல டிஸ்சார்ஜ் ஆயி வந்துருவேன். 'அப்பெண்டிக்ஸ்' ஆபரேஷன் தானே செளம்யா."

ஆனாலும் செளம்யா சமாதானமாக வில்லை என்று புரிந்தது. அருகில் அமர்ந்து ஏறிட்டவளைப் பார்த்து நான் சொன்னேன்.

"காதலங்கிறது உடம்பா, இல்லியே... மனசுதானே. நீ காதலிச்ச என்னோட மனசு அப்படியேதானே இருக்கு. உடம்புக்கு நேருகிற அவஸ்தைக்குக் கலங்கலாமா?"

செளம்யா தலைகுனிந்து கொண்டாள்.

"சாரி செளம்யா. உன்னைக் காயப்படுத்தணும்ன்ற நோக்கத்தில நான் சொல்லலை."

பதிலே பேசவில்லை அவள்.

நாதாங்கி போடாததாலோ என்னவோ, காற்றில் அங்குமிங்கும் ஆடிக் கொண்டிருந்தது ஜன்னல் கதவு, என் மாதிரி.

செள்ம்யா எழுந்து போய் முழுதுமாய் ஜன்னலைத் திறந்து வைத்து, நாதாங்கி போட்டு விட்டு, மறுபடி என்னருகில் அமர்ந்து என் விரல்களுடன் கைகோத்துக் கொண்ட போது, ஜன்னல் வழியே சூரிய வெளிச்சம் அறைக்குள் வந்து விழுந்தது அழகாக.



## பாம்புக்கும் காட்டிய பரிவு!

பிரபல காந்தீயவாதியும் சமூக ஊழியருமான பாபா ஆம்தே சமீபத்தில் நர்மதா அணைத் திட்டத்தால் பாதிக்கப்பட்டு இடம்பெயர்ந்த சில ஏழைகளுடன் ஒரு கூடாரத்தில் தங்கியிருந்தார். அவருடைய படுக்கைக் கம்பளியின் அடியில் ஒரு விஷப் பாம்பு ஒளிந்திருந்தது கண்டு பதறி, மற்றவர்கள் அடிக்க முற்பட்டார்கள். ஆனால் ஆம்தே, "நாமெல்லாம் அணைவெள்ளத்தால் வீடு வாசலை இழந்து இடம் தேடி அலைவதைப் போல்தான் அதுவும் புகலிடம் தேடி வந்திருக்கிறது. அதை விட்டு விடுங்கள். அதுவாவது பிழைத்துப் போகட்டும்" என்றார்.

— அ. ஷண்முகசுந்தரம்.

# இழப்பு

மும்தாஜ் யாசீன்

இத்தனை வருடங்களாகியும் இன்னும் நினைவில் இருந்தாள் காதர்பீ. சொந்த சோகங்களை அசை போடுகிற தருணத்தில் அவளை நினைக்காமல் இருக்க முடிவதில்லை. இன்றைக்கும் அப்படித்தான்.

ஜமீலா ஊருக்குப் போய் வந்த 'கதையை'ச் சொல்லச் சொல்ல காதர்பீயின் ஞாபகம் வந்து விட்டது.

பிறந்த வீடு முன்பு போல சுகம் தருவதாக இல்லை. அண்ணன் தம்பிகள் தனித்தனி ஆளாகி இருந்தார்கள். அவனவனுக்கு தன் குடும்பம், குழந்தை குட்டிகள் என்கிற எண்ணம் மேலோங்கி விட்டது. தகப்பனார் இருந்த பழைய நினைப்புடன் காசு பணம் கேட்டு எதிரில் நிற்பதெல்லாம் இனிமேல் மரியாதை இல்லை. "சொத்தையாவது பாகம் பிரிக்கணும். அதுவும் இல்லேன்னா இந்த ஆம்பளைகிட்ட என்னால காலம் தள்ள முடியாது..." என்றாள் ஜமீலா.

அக்கம் பக்கத்தில் பங்கஜம் மாமி, சதீஷ் அம்மா, காயத்ரி அம்மா எல்லோரும் நல்ல பழக்கம்தான். ஆனாலும் ஆயிஷாவிடம்தான் இதெல்லாம் சொல்லிக் கொள்ள முடியும் அவளுக்கு. காரணம் இருவரும் ஒரே ஊர்க்காரிகள். சேர்ந்து படித்தவர்கள். சிறு வயதுத் தோழிகள் அசலூரில் இப்படி எதிரெதிர் வீட்டில் வாழ்க்கைப்படுவது அபூர்வம்.

ஆழ்ந்த கவனிப்புடன், "ம்...ம்..." என கேட்டுக் கொண்டிருந்தாள் ஆயிஷா. தனக்குள்ளும் கிலி படருவதை உணர முடிந்தது. உலகமே இப்படித்தான். எல்லா உறவுகளும் ஏதாவது ஒரு தருணத்தில் அர்த்தமிழந்து விடுகின்றன. அவளுக்கு மட்டுமல்ல. தனது 'பெத்துப் பிறப்புக்களும்' ஒருநாள் மாறத்தான் போகிறார்கள். சரிவே கிடையாது என நினைக்கும் பலரது வாழ்வு சரிவதும், பிரிவே வராது என நம்பும் உறவுகள் பிரிந்து விடுவதும்...

"என் கோவம் வருத்தமெல்லாம் அவனுக பேர்ல இல்லை. எம்மைப் பெத்தவுக மேலதான். படிக்க விடாம முடக்கிப் போட்டாகளே... மக்க..."

"வாஸ்தவமான பேச்சு..." ஆயிஷா விரக்தியாகப் பார்த்தாள். இழப்பின் வேதனை அழுந்த காதர்பீயின் ஞாபகம் மீண்டும் வந்தது. நேராகப் போய்க் கொண்டிருந்த பாதையில் திடீரென முளைத்த தடைக்கல் அல்லவா அவள்.

"படிக்கணும்னு எம்புட்டு ஆசைப்பட்டோம்.... எம்புட்டு நல்லாப் படிச்சோம்.... கேட்டாகளா... எவளோ ஒருத்தி கெட்டுப் போனதை சாக்கா வச்சு நம்ம வாழ்க்கையை நாசப்படுத்திப் போட்டாகளே நம்மைப் பெத்த சனங்க..." ஜமீலா மேலும் புலம்பினாள்.

"விடுறீ...." எனச் சொல்ல நினைத்தாலும் நாக்கு எழும்பவில்லை ஆயிஷாவுக்கு. எதிர் வீட்டிலிருந்து, "ஜமீலா...."என்று குரல் கேட்டது.

"அந்தண்ணன் கூப்பிடுது...." என்றாள் ஆயிஷா.

"ம்.... தண்ணிக்கு வந்தவ பேச உக்கார்ந்தாச்சு. போனா கத்துவாரு. தூக்கத்துல எழுப்பிப் பேசணுமான்னு. அதான் விடிஞ்சு போச்சேன்னு வந்தேன். நல்லவேளை நீயும் முழிச்சுக்கிட்டிருந்தே.... புள்ளைகளையும் அவரையும் அனுப்பிட்டு அப்புறமா வர்றேன்..." ஜமீலா போய் விட்டாள்.

"பாவி.... பாவி...." என சபித்தபடி காதர்பீயின் முகம் மீண்டும் நினைவுக்கு வந்தது. கருநாகக் குட்டி போல படம் எடுத்தாடும் முகம். "'த்தூ....''வென்று ஒதுக்க முடியாமல் இனி திரும்பத் திரும்ப தோன்றிக் கொண்டே இருக்கும். அவஸ்தைதான் இது.

"அல்லாவே... நாகூர் அவுலியாவே..." முக்காட்டை இழுத்து விட்டுக் கொண்டாள். தளர்ந்து போன மாதிரி இருந்தது. குழந்தைகள் மாற்றி மாற்றி காலைத் தூக்கிப் போட்டதில் ராத்திரி சரியான தூக்கமில்லை. அதுதான் காரணமா?

அது மட்டும்தானா?

உள்ளே திரும்பியதும், "என்ன.... பேசி முடிச்சாச்சா?" என்று கேட்டான் மஜீது. படுக்கையில் சப்பணமிட்டு அமர்ந்திருந்தான்.

ஆயிஷா பதில் சொல்லவில்லை.

"என்னவாம்.... ஊர்ல எல்லாரும் சொகந்தானே?"

"ம்...ம்... வெள்ளனமா எங்கியோ போகணும்னீக... கௌம்பலையா?" என்றாள் ஆயிஷா. தன் குடும்பத்தைப் பற்றி இந்த ஆம்பளைக்கு என்ன என்றிருந்தது மனசுக்குள்.

"கௌம்பியாச்சு... " மஜீது அகலமாகக் கொட்டாவி விட்டான். தலையணைக்கு அடியில் தேடி பீடி பற்ற வைத்தான். இத்தனை



''எங்கப்பாவிற்கு ஞாபக மறதி ரொம்ப அதிகம்.''

''எப்படிச் சொல்றே?''

''பேனாவைச் சீவி பென்சிலுக்கு இங்க் போட்டு விட்டாரே!''

— அருண் அபிலக்ஷ்மி

---

வருடங்கள் பழகியும் பீடிப் புகையை இன்னும் சகித்துக் கொள்ள முடிவதில்லை. முகத்தின் மீது கையால் விசிறிக் கொண்டு, "நாஸ்தாவுக்கு வந்துருவீகளா... லேட்டாகுமா?" என்றாள்.

மஜீது உதட்டைப் பிதுக்கினான். நிஜமாகவே அவனுக்கும் தெரியவில்லை. அசன் முகம்மது மாமுவிடம்தான் போக வேண்டியிருந்தது. அவர் வாய் ஜாமீன் கொடுத்தால், காய்கறி மண்டியில் எத்தனை வேண்டுமானாலும் சரக்கு எடுக்கலாம். மனிதர் பிடி கொடுத்தால்தானே!

"என்னதான் சொல்றாரு... சரக்கு வாங்கித் தருவாரா... மாட்டாரா?"

''அதான் தெரியலை. ஓரோர் சமயம் ஓரோர் மாதிரி சொல்றாரு'' என்றான்.

"உண்டு, இல்லைன்னு முடிவா கேட்டுருங்க... நம்ம சக்திக்கு ஏத்தபடி தொழில் செஞ்சாப் போதும். தெனத்துக்கும் கடன்காரன் மாதிரிப் போயி வாசல்ல நிக்க வேணாம்... சொந்தக்காரங்க தயவு என்னைக்கும் உருப்படாது."

மஜீது அவளை லட்சியம் செய்யவில்லை. "எனக்கே புத்தி சொல்றியா?" என்கிற மாதிரி பார்த்தான். அவளால் சகிக்க முடியாதது இது. கஷ்ட நஷ்டங்களை தலையில் சுமத்தலாம். நியாயம் என்று தெரிந்த 'நல்ல வார்த்தை' எதுவும் சொல்லக் கூடாது.

மஜீது பின் கட்டுக்குப் போனான்.

வாசல் கதவை யாரோ தட்டினார்கள். "யாரது?"

"நாந்தான் ஆயிஷா..." மரகதம் டீச்சர் நின்றிருந்தாள்.

"என்னங்க டீச்சர்?"

"ஒண்ணுமில்லை... பேப்பர் திருத்த வெளியூர் போறேன். கேஸ் வர்ற நாளு. பணமும், சாவியும் தர்றேன்... கொஞ்சம் வாங்கி வைக்கிறியளா?"

"அதுக்கென்ன... குடுங்க..." ஆயிஷா வாங்கிக் கொண்டாள்.

"தேங்க்ஸ்..."

சின்ன விஷயத்திற்கும் இங்கிலீஷில் நன்றி சொல்கிறவள், இந்த காம்பவுண்டில் மரகதம் டீச்சர் மட்டும்தான். நடை, பேச்சு, தோரணை எல்லாவற்றிலும் கொஞ்சம் கொஞ்சம் முத்துலெட்சுமி டீச்சரின் சாயல்.

முத்துலெட்சுமி டீச்சர் அழகானவர்கள். கொஞ்சம் போல மாறு கண். வகுப்பறையிலும் பச்சை கூலிங்கிளாஸ் போட்டுக் கொண்டுதான் பாடம் நடத்துவார்கள். படிய வாரிய தலையில் எப்போதும் ஒற்றை ரோஜா சொருகி இருக்கும். "லுக் ஹியர்..." என அதட்டியபடி, கிறீச் கிறீச்சென்று கரும்பலகையில் எழுதுகிற கம்பீரம் இன்னும் மனதில் இருக்கிறது. படிப்பதிலாகட்டும், டீச்சரிடம் நல்ல பெயர் வாங்குவதிலாகட்டும் ஜமீலாவுக்கும், ஆயிஷாவுக்கும்தான் போட்டி. பின்னாளில் தாங்களும் முத்துலெட்சுமி டீச்சர் மாதிரியே மிஸ் ஆகி விட வேண்டும் என்பதுதான் இருவருக்குமே கனவாக இருந்தது.

அந்த நாளில் வயசுக்கு வந்த பெண்களை பாடசாலை உள்பட வெளியில் எங்கும் அனுப்புவது ஆசாரமன குடும்பங்களில் வழக்கமில்லை. எட்டாங்கிளாஸ் அரைப் பரீட்சை லீவில் ஆயிஷா 'உட்கார்ந்த'போது, இது பிரச்னையாயிற்று. ஆயிஷா பிடிவாதம் பிடித்தாள். "யோசிக்கலாம் பொறும்மா..." என்று சொல்லிக் கொண்டிருந்தாரே தவிர, ஒரு மாதம் வரைக்கும் அத்தா ஒரு யோசனைக்கும் வரவில்லை. விஷயத்தைக் கேள்விப்பட்டு முத்துலெட்சுமி டீச்சரே வீட்டுக்கு வந்தார்கள். "நல்லா படிக்கிற புள்ளை. நிறுத்த வேணாம். நான் கேரண்டி..." என அவரே சொன்ன பிறகுதான் அத்தாவின் மனம் இளகிற்று. நிபந்தனைகளுடன் ஒப்புக் கொண்டார். விளையாட்டிற்கெல்லாம் அனுப்பக் கூடாது. ஸ்பெஷல் கிளாஸுக்கெல்லாம் வர மாட்டாள். குதிரை வண்டியில் முன்னும் பின்னும் திரை போட்டுத் தான் ஸ்கூலுக்கு வருவாள். திருப்பி அனுப்பி வைப்பது டீச்சரின் பொறுப்பு.

அத்தாவின் செய்கையில் கொஞ்சம் போல எதிர்ப்பு இருந்தாலும் நாளடைவில் அமுங்கி விட்டது. அடுத்த இரண்டாம் மாதமே ஜமீலாவும் குதிரை வண்டித் திரைக்குள் வர ஆரம்பித்தாள். ஒன்பதாம் வகுப்பு கால் பரீட்சைக்கு குர்ஷித், யாஸ்மின் என்கிற இரண்டு பிள்ளைகளும் அவர்களுடன் சேர்ந்து கொண்டார்கள்.

இந்த நிலையில்தான் ஊரில் புயல் போல வந்து சேர்ந்தாள் காதர்பீ. உள்ளூர் இஸ்மாயில் ராவுத்தரின் மகன் சர்புதீன் பம்பாயில் வேலை பார்த்த போது பிறந்த மகள் இந்த காதர்பீ. தன் தாயாரின் ஞாபகமாக கொஞ்சம் கர்

னாடகமான பெயர் வைத்திருந்தாலும், மற்ற எல்லாவற்றிலும் நவீனமாகவே வளர்த்திருந் தார். பைஜாமா, குர்தாதான் அணிவாள். ரோஸ் கலர் பவுடர் பூச்சும், உதட்டுச் சாயமும் உள்ளூ ரில் யாருமே அறியாதது. திரை போட்ட வண் டியில் போய் வருவதை அவளால் நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை. “அல்லாவே... நம்ம உடம்பு தாங்காது” எனச் சொல்லி சிரிப் பாள்.

கிணிகிணியென மணியடித்துக் கொண்டு சைக்கிளில்தான் வருவாள்.

தாடி வைத்த ஹஜ்ரத்மார்களும், முத்தவல்லி யும், “அக்கிரமமா இருக்கேப்பா...” என தங் களுக்குள் பேசிக் கொண்டாலும், சர்புதீனிடம் நேரடியாகக் கேட்கத் துணிய வில்லை. “நான் உங்க ஜமா அத் இல்லை. உங்க சட்டதிட்டங் கள் என்னைக் கட்டுப் படுத்தாது...” என்று சொல்லி விடுவானோ என்ற பயம்.

பிரியம் கொண்டவள் மாதிரி காதர்பீ எல்லோரிடத்திலும் பழகவே விரும்பினாள். ஆண், பெண் பேதமெல்லாம் கிடையாது. ஆயிஷாவும், ஜமீலாவும் அவளைக் கண்டதும் முகத்தைத் திருப்பிக் கொள்வார்கள்– காபீர் சிறுக்கியோடு நமக்கு என்ன உறவு என்பதைப் போல. சில சமயம் ஸ்கூல் பக்கமிருந்த கரண்ட் ஆபீஸ் ஆள் ஒருத்தன் அவளுக்கு இணையாக சைக்கிள் மதித்தபடி பேசிக் கொண்டு வரு வதை அவர்கள் கண்டது உண்டு.

அம்மாவுக்கு எப்படித்தான் தெரியுமோ. “பாரு... இந்தப் பொண்ணு ஒருநாளைக்கு தீராத பழியைத் தூக்கிப் போடப் போறா...” என ஒரு தடவை ஆயிஷாவுக்கு இரட்டைப் பின்னல் போட்டுக் கொண்டே சொன்னாள்.

தற்செயலாக அம்மா சொன்னது, பலித்து விட்டது. அன்றைக்கு வெள்ளிக்கிழமை. முன் நடையில் அத்தாவும், சர்புதீனும் குசுகுசு வென்று பேசிக் கொண்டிருந்தார்கள். திரையை விலக்கிக் கொண்டு அத்தா மட்டும் உள்ளே வந்து “ஏன் கண்ணு..... காதர்பீ புள்ள நேத்திக்கு ஸ்கூலுக்கு வந்திச்சா....” என்று கேட்டார்.



பார்த்ததாக ஞாபகம் இல்லை என்று சொன்னாள் ஆயிஷா.

"நல்லா யோசிச்சுச் சொல்லும்மா..."

"ம்... ம்ஹூம்... வரலைத்தா.... ஏன்..."

"ஒண்ணுமில்லை. நீ படி..." அத்தா போய் விட்டார்.

அப்போதைக்கு ஆயிஷாவுக்கு அதன் அர்த்தம் புரியவில்லை. இரண்டு நாள் லீவு முடிந்து திங்கட்கிழமை புறப்படும் போது புரிந் தது. குதிரை வண்டி வரவில்லை. "தம்பியை அனுப்பி கூட்டி வரச் சொல்லலாமா?" என்று கேட்டதற்கு, "இனிமே வண்டி வராது..." என பதில் சொன்னாள் அம்மா.

"ஏன்..."

"உன்னை ஸ்கூலை விட்டு நிப்பாட்டி யாச்சுடி புள்ள..."

அம்மா விளக்கமாக எல்லாவற்றையும் சொன்னாள். காதர்பீயை மூன்று நாட்களாகக் காணவில்லை. கரண்ட் ஆபீஸ்காரனையும் காணவில்லையாம். காரிலும், பஸ்ஸிலும் நாலா பக்கமும் தேடிக் கொண்டு ஆட்கள் போய் இருந்தார்கள். தெருவே பரபரத்துக் கிடந்தது. இந்த நிலைமையில் பொட்டப் புள்ளைகளை யாராவது வெளியே அனுப்பினால் அவ்வளவு தான். ஊரில் குடி இருக்க முடியாமல் போய் விடும்.

வீட்டிற்கு பால் ஊற்றுகிற வெள்ளைச் சேலைக்காரம்மாள், பூக்காரி ரத்தினம் இவர் களிடம் இரகசியமாக விசாரித்ததில், அம்மா சொன்னது நிஜம் என்றே தெரியவந்தது. ஊர் 'ஜமா அத்' பேசி முடிவு எடுத்த விஷயத்தில் ஒரு எளிய பெண் என்ன செய்துவிட முடியும்? ஆறுதல் அளித்த ஒரே விஷயம் தனக்கு மட்டு மல்ல. தன் சினேகிதிகள் எல்லோருக்கும் இதே கதி என்பதுதான்.

காதர்பீ இருக்கிற இடம் தெரியாத நிலையி லேயே அவளது குடும்பம் ஊரை விட்டுப் போய் விட்டது. கொஞ்ச நாளில் எல்லாமே மறந்து போகிற நிலைமையும் ஏற்பட்டிருந்தது. ஆனால் ஏற்படுத்தியிருந்த பாதிப்பு மட்டும் மாறாமலிருந்தது. அடுத்த நாலைந்து வரு ஷங்களுக்கு அவர்களது தெருவிலிருந்து எந்தப் பெண்ணும் எட்டாங்கிளாசிற்கு மேல் படிக் கவே இல்லை.

கனவை ஒதுக்கிவிட்டு ஜமீலாவும், ஆயி ஷாவும்கூட வீட்டில் பார்த்து வைத்த மாப்பிள்ளைகளைக் கல்யாணம் பண்ணிக் கொண்டார்கள்.

ஜமீலா எப்போது வருவாள் என்று தெரியவில்லை. அவள் வருவதற்குள் வேலைகளை முடித்தால்தான் 'ராஹத்தாக' உட்கார்ந்து பேச முடியும். தன் குடும்ப விஷ யம். அம்மாவின் சௌக்கியம். ஊர் சங்கதி என்று எவ்வளவு இருக்கிறது.

மளமளவென்று வேலைகளைப் பார்க்க ஆரம்பித்தாள். என்னதான் வேகமாகச் செய்தா லும், வழக்கத்தைவிட முன்னதாக எதையும் முடித்து விட முடியவில்லை.

ஒற்றை ஆளாக அடுப்பு வேலைகளையும் கவனித்து மூன்று பிள்ளைகளையும் சமாளித்து அனுப்புவது லேசுப்பட்ட காரியமா?

ஒவ்வொன்றையும் தட்டி எழுப்பி, காபி போட்டு, படிக்கச் சொல்லி, குளிக்க வைத்து, உடுப்பு மாற்றி "அம்மா...டாட்டா...' என விடை தரும் கையசைப்புடன் ஒரு கட்டம் முடிகிறது. இன்னும் பத்துப் பாத்திரங்கள் கிடந்தன. அவிழ்த்துப் போட்ட துணிமணிகள் இருந்தன. வீடும் அலங்கோலமாகக் கிடந்தது. குழந்தைகள் உள்ள வீட்டில் எதுவும் ஒழுங்காக இருப்ப தில்லை. குழந்தைகள் தான் குழந்தைகளாக இருக்கிறதென்றால் ஆம்பளையும் அப்படித் தான். குடித்துப் போட்ட துண்டு பீடியையும், எரிந்த தீக்குச்சியையும் விட்டெறிய இந்த இடம் என்று கிடையாது.

கூட்டி நிமிர்வதற்குள் இடுப்பு வலித்தது. இந்த வலி சமீபத்திய உபத்திரவம். "ஒரு நாளைக்கு டாக்டர்கிட்டப் போயி காட்ட ணும்..." என வழக்கம் போல நினைத்துக் கொண்டாள்.

"இந்த ஆம்பளையை இன்னும் காணமே..." என்று தோன்றியது. இருப்பதைப் போட்டு பாத்திரங்களையும் கழுவி வைத்தால் காலைப் பொழுது ஒழியும். மத்தியானம் இத்தனை பரபரப்பில்லை. யாரும் சாப்பிட வரமாட்டார் கள். காய்கறிக்காரி வந்த பிறகு அடுப்பைப் பற்ற வைத்தால் போதும்.



"வர தேர்தல்ல நம்ம தி.சு.க.வே. கட்சித் தலைவருக்கே ஓட்டுப் போடுங்கம்மா..."

"ஏம்பா, ரொப்பிச்சை...?"

"அவருக்குத் தேர்தல் நிதி பத்து லட்சம் கடன் தந்திருக்கேன். அதைத் திருப்பி வாங்கணுமே!"

– எஸ்.எஸ். பூங்கதிர்

அவள் எத்தனை மணிக்கு வருவாள் என்பதுதான் திட்டமில்லாமல் இருந்தது. ரொக்கம் கொடுத்து வாங்குவது என்ன கெட்டுப் போயிற்று என நினைக்கிறாளோ என்னமோ. எல்லோருக்குமே கொஞ்சம் இளப்பமாகிவிட்ட மாதிரித்தான் இருந்தது. இரண்டு வீடு தள்ளி நின்றுதான் பால்காரன் மணியடிக்கிறான். இரண்டு மூன்று தடவை கூப்பிட்ட பிறகுதான் மளிகைக்கடை சிப்பந்திகள், "என்ன வேணும் பாயம்மா.." என்று கேட்கிறார்கள். சில்லறைக் கடன்களுக்குக் கூட சந்திக்க நேரும் அவமானங்கள்..."

"ம்ஹும்... என்னிக்குத்தான் நல்ல காலத்தை தருவானோ இந்த ஆண்டவன்..."

ஜமீலா இன்னும் வரவில்லை. அந்தண்ணன் வீட்டில் இருந்தார். லீவு போலும். சின்னதானாலும் அரசாங்க உத்தியோகம். நெருக்கடிகள் கிடையாது. அடிக்கடி லீவு போட்டுவிட்டு, காலாட்டியபடி நாற்காலியில் சாய்ந்து கிடப்பதைக் காண முடியும்.

முன்பெல்லாம் அம்மாவுக்கு அவளைக் காணாமல் இருக்க முடியாது. மூன்று மாதங்களுக்கு ஒருமுறையாவது தேடி வந்து விடும். அத்தாவின் மவுத்திற்குப் பிறகு அம்மாவிடத்தில் பழைய கம்பீரத்தையும், தானே எதையும் தீர்மானித்துச் செய்கிற சுதந்திரத்தையும் காண முடியவில்லை. காலில்நீர் சுரந்து அதிகமாக நடக்க முடிகிறதில்லை என்று சொன்னாள் ஜமீலா. அண்ணன்கள் டாக்டரிடம் கூட்டிப் போனார்களா என்று தெரியவில்லை. தானும் பார்த்து எவ்வளவு நாளாகிறது...

மனித உறவுகளை நினைக்கும்போது வினோதமாகத்தான் இருந்தது. மூன்று குழந்தைகளுக்குத் தானே அம்மாவாகி விட்ட பிறகும், தன் அம்மாவுக்காக ஏங்குவதும்- சம்பந்தமில்லாத ஒருத்தியின் குறுக்கீட்டில் வாழ்வே திசை மாறிப் போய் விட்டதும்- யாரோ அன்னியனுக்குப் புருஷன் என்கிற உறவைத் தந்து, சுக துக்கங்களை பங்கிட்டுக் கொள்வதும்...

படிப்பை நிறுத்திய அத்தாதான் கழுத்திலும், காதிலும் ஆசையாகப் பண்ணிப் போட்டார். வியாபார நஷ்டத்தில் மஜீது ஒவ்வொன்றாக அழித்த போதும், தன் வாயால் மருமகனை மோசமான ஆள் என்று சொன்னதில்லை அவர்.

தொடத் தொட நினைவுகள் தொடர்ந்து கொண்டேதான் போகின்றன. "த்தூ... சைத்தானே..." என தானே கலைத்தால்தான் உண்டு.

மணி ஒன்பது அடித்தது.

"இனியும் உக்கார்ந்துக்கிட்டு இருந்தா அம்புட்டுத்தான்..." என நினைத்தபடி ஆயிஷா எழுந்தாள். மஜீது வருவது இனி சந்தேகம்தான். காலை உணவு இல்லாமல் தொழிலுக்குப்



"பாப்பா, ஏம்மா பார்க்குல தனியா நின்னுக்கிட்டு இருக்கே?"

"எங்க அப்பாவும் அம்மாவும் குட்டி ரயில்லே ரவுண்ட் போயிருக்காங்க. அவங்களுக்காக 'வெயிட்' பண்றேன்!"

- வடவள்ளி ராமசுப்ரமணியன்

போய் விடும்படியாகவே அனேக நாட்களில் ஆகி விடுகிறது. பாவம்.

அடுப்பு மேட்டில் குழந்தைகள் மிச்சம் வைத்த தோசை மூடி வைத்திருந்தது. நின்றபடியே வழித்து வாயில் போட்டுக் கொண்டாள். பசி தணியவில்லை. என்றாலும், தன் ஒருத்திக்காக மீண்டும் அடுப்பைப் பற்ற வைக்க வேண்டாம்.

எதிர்வீட்டில் உரத்த குரலில் பேசிக் கொள்வது கேட்டது. சண்டையா?

அவசரமாக வாசலுக்கு வந்தாள். ஜமீலா கழுத்து நரம்பு புடைக்கப் புருஷனுடன் வாதம் பண்ணிக் கொண்டிருந்தாள். அந்தண்ணனும் பாய்கிற மாதிரி எதிரில் நின்றிருந்தார்.

ஏதோ விபரீதம்தான் என்று புரிந்தது ஆயிஷாவுக்கு.

"என்ன...என்ன..." என கேட்டுக் கொண்டே அவர்களது வீட்டிற்குள் நுழைந்தாள். சத்தம் கேட்டதும் அந்தண்ணன் சட்டென்று விலகி உள்ளே போய் விட்டார்.

ஜமீலாவுக்கு சினேகிதியைக் கண்டதும், கண்கள் கலங்கிக் கொண்டு வந்தது.

"என்ன..... ஜமீலா?" ஆயிஷா திகிலுடன் கேட்க-

"பாரு.... அடிக்க வர்றதை.... ஆம்பளையாம்... ஆம்பளை..." குரல் தழுதழுக்கச் சொன்னாள் ஜமீலா. "குடுத்தாத்தானே வாங்கிட்டு வரமுடியும்? பொறந்த வீட்டிலும் பணம் குவிச்சு வச்சா கெடக்குது? இல்ல... மரத்துல காய்ச்சுத் தொங்குதா? ஏண்டி.... சும்மா வந்தேன்னு கேட்டா நான் என்ன பண்றது.... நீயே சொல்லு..."

என்ன நடந்திருக்கும் என்பது ஆயிஷாவுக்குப் புரியவில்லை. புரியாமலும் இல்லை. ஒன்று மட்டும் நிச்சயமாகத் தெரிந்தது. இன்றைக்கு மறுபடியும் காதர்பீயைப் பற்றி பேச வேண்டியிருக்கும் என்பதுதான் அது.

தன் வீட்டிற்கு சினேகிதியை அழைத்துச் செல்ல முற்பட்டாள் ஆயிஷா.

இரு தினங்களாக, இரண்டு பகல், ஈரிரவுகளாகக் கிருஷ்ணசந்திரன் வீட்டுப் பக்கம் எட்டிக் கூடப் பார்க்கவில்லை.

அன்று அவளை அலுப்பும் சலிப்புமாக முத்தமிட்டு விட்டு அறைக்குள் சென்றான். மறுநாள் காலையில் அலுவலகம் செல்வதற்கான உடையுடன்தான் அறையை விட்டே வெளியே வந்தான்.

கணவன் அவ்வளவு சீக்கிரம் கிளம்பக் கூடும் என்று எதிர்பார்த்திராத உதயரேகா, அவசரமாகச் சமையல் அறைப்பக்கம் செல்லவும், ''எனக்கு இப்போது எதுவும் வேண்டாம்'' என்று பொதுப்படையாக உரைத்த படியே மடமடவென்று வெளியேறிச் சென்று விட்டான்.

அன்றிரவு அவன் வீடு திரும்பவில்லை.

எட்டு மணி அளவில், "இன்று எனக்காகக் காத்திராமல் 'கேட்' பூட்டி விடச் சொல். நான் வருவதற்கில்லை'' என்று மொட்டையாக ஒரு டெலிஃபோன் தகவலுடன் முடித்து விட்டான்.

ஏன் வரவில்லை? வெளியூர் போகிறானா? தொழிற்சாலையில் முன்பே ஒப்புக் கொண்ட வேலை எதுவும் முடிக்க வேண்டியதாகி அங்கே இருக்கிறானா? என்ன, ஏது என்று அவளுள் ஆயிரம் கேள்விகள்.

ஆனால் யாரிடம் கேட்பது?

மறுநாள் காலையிலும் கணவன் வராது போகவும், அலுவலகத்தோடு தொடர்பு கொண்டு விசாரித்தாள்.

விசாரிப்பதில் கூட ஒரு குழப்பம். வந்தாரோ, வரவில்லையோ, எப்போது வந்தார் என்று வேவு பார்ப்பது போலத் தோன்றி விடக் கூடாது.



17

எனவே, டெலிஃபோனை எடுத்த செகரட்டரியிடம், "அவரிடம் ஒன்று சொல்ல வேண்டியிருக்கிறதே!" என்று ஆழம் பார்த்தாள்.

வந்திருக்கிறானா, இல்லையென்றால் தொழிற்சாலை, மீட்டிங் என்று எங்கிருந்தாலும்

தெரிந்து விடும். அவனே பேசினால், இரவு ஏன் வரவில்லையென்று ஏதோ பேசிக் கொள்ள லாம்...

ஆனால், "முக்கியமான வேலை; எந்தவித இடையூறும் கூடாது என்று சொல்லி யிருக் கிறாரே, மேடம்" அந்தப் பெண்மணி மரியாதையுடனேயே மறுத்தாள். "ஆனால் மேடம், அவருக்கு நீங்கள் அழைத்ததாகக் குறிப்பு அனுப்பி வைக்கிறேன். அவரே தொடர்பு கொள்வார்" என்றாள் தொடர்ந்து.

செகரட்டரி சொன்னதைச் செய்திருப்பாள் என்பதில் உதயரேகாவுக்கு ஐயமில்லை. ஆனால் கிருஷ்ணசந்திரன் அவளை நாடிப் பசவே இல்லை.

மறுநாளும் இதுவே தொடரவும் உதயரேகா புதிர்ந்தாள். அவளைப் பார்க்க, பேச, எதுவுமே டிக்காமல் என்ன இது? அவன் இவ்வளவு வெறுப்படைய அப்படிப் பெரிதாக என்ன நடந்து விட்டது?

ஒரே ஓர் இதழணைப்பு.

அதையும் அவள் ஒன்றும் கீழ்த்தரமாக நடந்து, பாலுணர்வைத் தூண்டி விட்டுப் பெற வில்லையே!

அல்லது, வாழ்க்கையைச் சீரமைக்க அவள் இடைவிடாது முயன்றதை, இதற்காகத்தான் றக்கிறாள் என்று எண்ணி விட்டானா?

கணவன் என்ன நினைக்கிறான்? என்ன சய்கிறான் என்று அவளால் கண்டுகொள்ள டிந்தது? அவனைப் பற்றிய ஆயிரத்தெட்டு ழப்பங்களில் இதுவும் ஒன்று

# ாலை மயங்குகின்ற நேரம்

என்று பெருமூச்சுடன் ஒதுக்க முயன்றாள் தயரேகா.

எப்படியோ, அவன் உள்ளூரில்தான் ருக்கிறான் என்பது தெளிவுபட்டது. பகலில் வன் இருக்கும் இடமும் தெரிந்து போயிற்று. னால் இரவில்?

அதிலும், இரண்டாம் நாள் இரவு 'வரு தற்கில்லை' என்று கிருஷ்ணசந்திரன் டெலி போன் செய்த போது (அதிலெல்லாம் அவன் ராம்பவும் ஒழுங்குதானே!) அருகில் ஒரு பண்ணின் சிரிப்பொலி கேட்கவும் உதய காவுக்குக் குழப்பத்தோடு கோபமும் கூட ண்டாயிற்று.

அவ்வளவு அருகில் அவனை ஒட்டிக் காண்டு நிற்கிறாளா, அவள்? ஆனால், அது வறு யாராவதாகவும் இருக்கலாம்....

## ரமணி சந்திரன்

தன்னைத்தானே சமாதானப்படுத்திக் கொண்டு, எங்கே இருக்கிறான், எப்போது வருவான் என்று அவள் விசாரிக்கத் தொடங் குமுன், எதிர்முனையில் அவன் டெலி ஃபோனை வைத்து விட்டிருந்தான்.

அவளுக்குப் பேசுவதற்கு வாய்ப்பளிக்கும் நாகரிகம் கூட இல்லாமல் வைத்து விட்டானே!

சுர்ரென்று பொங்கிய சினத்துக்கு வடிகால் கிடைக்காமல் குறுக்கும் நெடுக்குமாகக் கால் ஓயுமட்டும் நடந்தாள் அவள்.

கிருஷ்ணசந்திரன் எங்கிருக்கிறான்? என்ன செய்கிறான்?

தலையைப் பிய்த்துக் கொள்ளலாம் போல குமைந்தபோதும், இது பற்றி யாரிடமும் அவள் மூச்சுக் கூட விடவில்லை. அவனைப் பெற்ற தாய் அவளிடமும் ஒரு தாயின் பிரியத்தோடு பழகுகிறவளான காந்திமதியிடம் விசாரிக்கக் கூட அவளது தன்மானம் இடம் தரவில்லை.

மணமாகி மூன்றே மாதங்களுக்குள், உள்ளூ ரில், அதுவும் இரவில் கணவன் தங்கியிருக்கும் இடம் எது என்று அவனுடைய இளம் மனைவிக்குத் தெரியவில்லை என்றால் அதன் பொருள் என்னவாக இருக்க முடியும்?

கணவனின் இருப்பிடம் பற்றி மற்றவர்களிடம் விசாரிப்பதை விட, அவளது திருமண வாழ்வு தோல்வியுற்று விட்டதாக தமுக்கடித்துச் சொல்லி விடலாம்!

இன்னமும், தோல்வியுற்று விட்டதாக அவளால் ஒத்துக் கொள்ளவும் முடியவில்லை; அவள் தோற்று விட்டதாகப் பிறர் எண்ணு வதைச் சகிக்கவும் இயலவில்லை.

புகையும் எரிமலையாய்த் தனக்குள்ளேயே குமுறிக் கொண்டு இருந்தவளிடம், சமையல் காரன் நாகராஜன் வந்து நின்றான். தன் மாதாந்திர விடுமுறையை, ஒரு வாரம் முன்ன தாக அன்று எடுத்துக் கொள்ளும்படி அய்யா இரண்டு நாள் முந்தியே அனுமதி கொடுத்து விட்டுப் போனதாகச் சொல்லி, அன்று 'கிளம் பட்டுமா' என்று அவன் கேட்ட போது அவளுக்குக் கொஞ்சம் ஆறுதலாகவே இருந்தது.

இவன் செய்து வைத்து விட்டானே; வேண் டாமென்றால் வருத்தப்படுவானே என்று கஷ்டப்பட்டு உணவை விழுங்க வேண்டாம்!

சமையல்காரனின் சம்பளப் பணத்தையும் அவனுடைய பெற்றோரிடம் வளரும் தாயற்ற சிறுமியான மகளுக்கென்று அவள் ஏற்கெனவே வாங்கி வைத்திருந்த பாவாடை சட்டையையும் கொடுத்து, உதயரேகா அவனை அனுப்பி வைத்தாள்.

வீடு பெருக்கித் துடைத்து, துணி துவைக்கிறவளும், தோட்டக்காரனும் வேலை முடிந்ததும் அவரவர் வீட்டுக்குப் போய் விடுகிறவர்கள்.

எடுபிடிப் பையன் மட்டும்.

வேளைக்கு வெளியே போய்ச் சாப்பிட்டு விட்டு வருமாறு அவனிடம் பணம் கொடுத்து அனுப்பி விட்டு, அமைதியற்று வீட்டினுள் அலைந்து கொண்டிருந்த போது அவளுக்கு ஒன்று உறைத்தது.

இரண்டு நாட்களாக வீடு வராத கணவனின் பாராமுகத்தை விடவும் அவனது பிரிவே உதயாவை மிகவும் அதிகமாகப் பாதித்திருக்கிறது. அவனைப் பார்ப்பதும், அவன் குரலைக் கேட்பதும் மூச்சுக் காற்று போல அவளுக்கு இன்றியமையாததாகி விட, கணவனைக் கண்ணால் பார்த்தாலே போதும் போல ஓர் ஏக்கம் பெரும் சுமை போல அவள் மனதை அழுத்தியது.

நாயை அவிழ்த்து விட்டு விட்டு, வெளியே போய் இரவுச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு எடுபிடிப் பையனை அனுப்பி விட்டு இலக்கற்று அவள் வீட்டினுள் திரிந்து கொண்டு இருந்த போதுதான், கேட் திறந்து அவனது கார் உள்ளே வரும் சப்தம் கேட்டது.

அவன்தான்!

ஆவலோடு, மாடியிலிருந்து வேகமாக இறங்கி ஓடி வந்தவளின் கண்ணெதிரே இன்னொரு பெண்ணைப் பாதி அணைத்தாற்போல அழைத்து வந்து கொண்டிருந்தான் அவளுடைய அருமைக் கணவன்!

தன் கண், கண்ட காட்சியை நம்ப மாட்டாதவளாக, மனைவி, திக்பிரமித்து நிற்பதை லட்சியமே செய்யாமல், அந்த இன்னொருத்திக்குக் கைலாகு கொடுத்து மாடிக்குக் கூட்டிச் சென்றான் கிருஷ்ணசந்திரன்.

இவனது தாங்கல் இல்லாவிட்டால் படிகளில் உருண்டு விழுந்து அவள் செத்து விடுவாளா என்று உள்ளம் கொதித்தது உதயரேகாவுக்கு.

கிட்டத்தட்ட இருபத்து மூன்று வயதை எட்டிக் கொண்டிருந்த உதயரேகா, தனது இத்தனை ஆண்டு வாழ்நாளில், இப்படி ஒரு நிலைமைக்குத் தன்னைச் சித்தப்படுத்திக் கொள்ளவே இல்லை.

கணவன் உத்தமன் என்று நம்பி அவனுக்கு அவள் கழுத்தை நீட்டவில்லை; உண்மையே!

குடிகாரன்; தரமற்ற பெண்களோடு தகாத உறவு கொண்டிருந்தான் என்பதையும் அறிந்தேதான் அவனை மணந்து கொண்டாள்.

அவனைத் திருத்தி நல்ல வாழ்வு வாழ வைக்க வேண்டும்; அவனுடைய பெற்றோரின் வாடி விட்ட முகங்களிலே புன்னகையை மீண்டும் மலரச் செய்ய வேண்டும் என்ற உன்னத நோக்கங்களுக்காக, மனதில் உறுதியோடு அவனுக்கு மாலையிட்டாள்.

பிழைதிருத்தும் முயற்சியில் சிறு வெற்றி பெற்று விட்டதாகக்கூட எண்ணியிருந்தாள்.

ஏனெனில், அவ்வப்போது – அதுவும் கூட எப்போதாவது ஒருநாள்தான்– அவன் தள்ளாடிய போதும் இந்தப் பிழை வழி அவன் செல்லவே இல்லையே!

ஆக, இரண்டு நாட்கள் கிருஷ்ணசந்திரன் தங்கியிருந்தது இவள் வீட்டில்தானா?

அவன் டெலிஃபோன் செய்த போது கேட்ட அந்தச் சிரிப்பொலி! டெலிஃபோன் செய்ததே இவள் வீட்டிலிருந்துதா[illegible]

என்ன அநியாயம்?!

அவளை இங்கேயே அழைத்து வர இவனுக்கு என்ன துணிச்சல்? அவனோடு கூட வர அவளுக்கும்தான் என்ன தைரியம்!

அந்தக் காலத்தில், ஆண் ஆதிக்கம் மிகுதியாக இருந்த அந்த நாளில் கூடக் கண்ணகி இருந்த வீட்டுக்குக் கோவலன் மாதவியைக் கூட்டி வரத் துணியவில்லை! வருவதற்கு மாதவிக்கும் தைரியம் இல்லை.

இன்றைக்கு, இந்த இருவருக்கும் இவ்வளவு திமிரா!

கண்ணை இருட்டிக் கொண்டு கோபம் வந்ததே தவிர, அந்த நிமிடத்தில் என்ன செய்ய வேண்டும் என்று உதயரேகாவுக்கு ஒன்றும் புரியவில்லை.

அந்தப் பெண்ணைத் தலைமுடியைப்



டித்து இழுத்துச் சென்று கழுத்தைப் பிடித்து வளியே தள்ளுவதா? உள்ளுணர்வு அப்படித் ான் உந்தியது.

தள்ளத்தான் வேண்டும்.

ஏனெனில் இது நாசூக்குப் பார்க்கிற நேரம் ல்ல. முதலில் அந்தத் தெரு நாயை வீட்டை ிட்டுத் துரத்த வேண்டும்; துரத்தியே ஆக வண்டும்!

இன்னமும், இப்படியும் செய்வானா என்ற கைப்பு மறையவில்லை. கூடவே, இப்படிச் சய்வதா என்ற ஆத்திரமும், இந்த வீட்டில், ர் அசிங்கம் நடக்க விடக் கூடாது என்ற டிவாதமுமாகப் படியேறிச் சென்று, கண னின் அறைக் கதவை உதயரேகா ஓங்கித் ட்டினாள்.

இந்த இடையீட்டை எதிர்பார்த்தவனைப் பால, அவள் இரண்டாம் தடவை தட்டு முன் ாக, சுளித்த புருவங்களும் கோப முகமுமாக, வனை அவள் கண்ட முதல் நாளை ஞாபகப் டுத்தியபடி, கிருஷ்ணசந்திரன்தான் கதவைத் றந்தான்.

"இந்...த நேரம் கதவைத் தட்டுகிறாயே, ாகரிகம் இருக்கிறதா?" என்ற கேள்வி வேறு.

கொதித்து, "நாகரிகம் பற்றி நீங்கள் பேசு றீர்களா? மனைவி இருக்கிற இடத்திற்கு ப்படி ஒருத்தியை அழைத்து வந்திருக்கிறீர் ளே; உங்களுக்கு நாகரிகம் என்றால் என்ன வன்று ஏதாவது தெரியுமா? அல்லது, ங்களோடு ஒட்டிக் கொண்டு, திறந்த வீட்டில் தோ ஒன்று மாதிரி உள்ளே வந்து உட்கார்ந் ருக்கிறாளே, இவளுக்கும்தான் அப்படி ஒரு ார்த்தை இருப்பதேனும் தெரியுமா?" என்று, ள்ளே அவனது நாற்காலியில் உட்கார்ந்திருந்த ந்தப் பெண்ணை நோக்கிக் கண்களில் தீயெழ றுத்தாள்.

அவள், தன் கையில் இருந்த பத்திரிகையை ழ்ந்த கவனத்துடன் படித்துக் கொண்டிருந் ாள் போலும். கணவன் மனைவி சச்சரவில் ந்தக் கவனம் கலைந்து விட, தன்னைக் கநீட்டிக் காட்டி, உறுத்து நோக்கிய உதய ரகாவைச் சிறு திகைப்புடன் விழியகல ாக்கினாள்.

'ஒன்றும் தெரியாத பாப்பா; உள்ளே பாய்ப் போட்டுக் கொள்வாளாம் தாழ்ப்பாள்' ன்றால் அது இவளுக்குத்தான் முழுக்கப் பாருந்தும் என்று ஆத்திரத்துடன் நினைக் ம்போதே, இவளை எங்கோ பார்த்திருக் றோம் என்ற எண்ணமும் உதயாவிற்கு உண் ாயிற்று.

அது பற்றி மேலே யோசிக்கு முன்பே, ருஷ்ணசந்திரன் புருவம் நெரிய முன்னிலும் னம் மிகப் பேசினான். "ஆமாம். தெரியாது ான். நாகரிகம் என்றால் அதை எழுத்துக் ட்டிப் படிக்கக் கூட எங்கள் இருவருக்கும் தரியாதுதான். அதற்காக உன்னால் என்ன சய்ய முடியும்? உன் மாமியார், மாமனாரிடம் முறையிடுவதானால்... வெல், அவர்களது டெலிஃபோன் நம்பர் உனக்குத் தெரியும். அன்றி, வீட்டை விட்டு வெளியேறுவதானால் கார் வெளியே நிற்கிறது; எடுத்துக் கொண்டு தாராளமாகப் போகலாம். இல்லை, அடியோடு முழுக்குப் போட்டு விட்டு, நீ ஒரேயடியாக விலகி விடுவதானாலும் அதற்கும் முன்பே என் சம்மதம் தந்தாயிற்று... விவாகரத்துக்கு இதையே நீ காரணமாகப் பயன்படுத்திக் கொள்வ தானால் அதுவும் எனக்கு ஒப்புதலே. போதுமா? தயவுசெய்து இப்போது என்னைத் தொல்லை செய்து என் நேரத்தை வீணடிக்காதே. நான் கொஞ்சம் சந்தோஷமாக இருக்கப் போகிறேன். இன்னொன்றும் நினைவில் வை. இன்றைய இரவில் நீ எத்தனை தரம் தட்டினாலும் இனி நான் இந்தக் கதவைத் திறக்கப் போவது இல்லை. குட்பை" என்று கூறிக் கதவை ஓங்கிய றைந்து சாத்தித் தாளிட்டான்.

முகத்திலேயே அறைந்து சாத்தி விட்டாற் போல அவளுக்கு நெஞ்சை அடைத்துக் கொண்டு ஹோவென்று வந்தது.

அவளைத் தொட்டுத் தாலி கட்டிய கணவன் - தாலி கட்டிய நாளிலிருந்து அவன் தீண்டாமை விரதம் காத்தான் என்பது வேறு விஷயம் - அவளது கவுரவம் காக்கக் கடமைப் பட்ட அவனே இன்னொரு பெண் முன் அவளை அவமானப்படுத்தி விட்டானே!

அவனுடைய மனைவி - ஒரு குடும்ப விளக்கு பிரகாசிக்கும் இடம் என்ற கூச்சமே இல்லாமல், அவளும்தான் எவ்வளவு ஸ்டை லாகக் கால் மேல் கால் போட்டு அமர்ந்து பத்திரிகை படித்துக் கொண்டிருந்தாள்.

பத்திரிகை!

அந்த வினாடியில் அவள் அனுபவித்த வேதனை தவிப்பு அத்தனையையும் மீறிக் கொண்டு அந்த முரண்பாடு உதயரேகாவை உறுத்தியது.

(தொடரும்)



"எங்க எதிர் வீட்டுக்காரம்மா ரொம்ப மோசம்... நான் அவங்ககிட்டே கடனா வாங்கினதையெல்லாம் ஞாபகமா திருப்பி வாங்கிப்பாங்க..."

— கார்த்திக்

## மணமக்கள் தேவை
## கம்யூட்டர் ஜாதகம்

அனைத்து சமூகத்திலும், ஆயிரக் கணக்கான வரன்கள் பெற உடன் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

கம்யூட்டர் ஜாதகங்கள் நொடிப் பொழுதில் ஆங்கிலம், தமிழ் ரூ. 40/-

எதிர்கால கணிப்புடன் ரூ. 120/-

ஆண்டு பலன் : ரூ. 50/-

கல்யாண பொருத்தம் : ரூ. 40/-

**ASTROLOGY SOFTWARE FOR SALE.**

## ஸ்வயம்வராலயா

**(GOVT. REGD.)**

**18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33. போன் : 425822,**

**7-ஏ, சாந்தி வஹார் காம்ப்ளக்ஸ், லஸ், சென்னை - 4. போன் : 846278,**

**88, 1, 16th Cross, 6th Main, Malleswaram, Bangalore - 560 055. Ph. : 3340146**

## For the latest releases in Music rush to

## New Music India

We deal with Indian classical, Hindi films & Tamil films Cassettes.

We also deal with compact discs and for further more details Contact :

## New Music India

☐ Audio, ☐ Video, ☐ CD

7/4 L.B. Road,
(Near Adyar Signal)
Adyar, Madras - 600 020.
Phone : 491 8672



## ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி பர்மனென்ட் பண்டு லிமிடெட்

பதிவு எண் : 18-23759/92

H.O. No. 288, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை - 7 Ph : 6421801/6415549

B.O. No. 23, வடக்கு மாட வீதி, மயிலாப்பூர், சென்னை - 4. Ph : 4934009

**டெபாசிட்டுகள் ரூ 5 கோடியை தாண்டியுள்ளதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.**

**பிக்சட் டிபாசிட்டுகளுக்கு கவர்ச்சிகரமான வட்டிகள் வழங்கப்படும்**
**வட்டிக்கான காசோலைகள் முன்கூட்டியே வழங்கப்படும்**
**மேலும் பயனுள்ள திட்டங்களுக்கு நேரில் அணுகவும்**

சென்னை மாநகர சொத்துக்கள் மீது கடன் கிடைக்கும்





நகைக்கடன் கிராம் 1க்கு ரூ. 300 மாதவட்டி ரூ. 1.95 மட்டும் வேறு கட்டணம் இல்லை

**H.O. வெள்ளி விடுமுறை**

**B.O. செவ்வாய் விடுமுறை**

உச்சவரம்பு கிடையாது
உறுப்பினராகி பயன் பெறுவீர்

வேலை நேரம் : காலை : **8.30 - 12.30** மாலை : **2.00 - 6.00**



சேர்மன் : **P.** பாலசுப்பிரமணியம், B.Sc.,
முதன்மை அறங்காவலர்,
கந்தக்கோட்டம், சென்னை - 600 003.

PB குரூப் கம்பெனி

அருளுக்கு ஸ்ரீ முத்துக்குமரன்! பொருளுக்கு PB குரூப் நிறுவனம்!

வார்!

● புளியரை கணேசன், சென்னை-30.

*? திருச்சி தி.மு.க. மாநாடு குறித்து?*

! காவிரியில் வெள்ளம் காணாத திருச்சி வாசிகளுக்கு மக்கள் வெள்ளத்தைக் காட்டியிருக்கிறார்கள்!



* செய்யாத காரியம்?....

* 'தப்பு தப்பு...!'





* ஊழல் உரிமைகள்!

● ஜி. மாஜினி, சென்னை-52.

***? படித்து பட்டம் பெற்று, வேலை கிடைக்காத விரக்தியில் கொள்ளை அடிக்கிறவர்களுக்கும் படித்து பட்டம் பெற்று, வேலை கிடைத்து அதிகாரி ஆனவுடன் (ஐ.ஏ.எஸ்.) கொள்ளை அடிப்போருக்கும் என்ன பெரிய வித்தியாசம் இருக்கு?***

! முன்னது அனுதாபம் பெறக்கூடியது. பின்னது ஆத்திரத்தைத் தூண்டுவது- 'சுட்டுத் தள்ளினால் என்ன!' என்னுமளவுக்கு...

● ஆர். சங்கரநாராயணன், குணசீலம்.□

***? காதில் பூ சுற்றும் போட்டி வைத்தால் ஜெயிக்கக் கூடியவர்கள் சினிமாக்காரர்களா? அரசியல்வாதிகளா?***

! தியேட்டருக்குப் போய் டிக்கெட் வாங்கினால் தான் சினிமா; டீ.வி.யில் பார்க்க வேண்டாம் என்று தோன்றினாலோ அணைத்துவிடலாம். ஆனால் அரசியல்வாதியை யாராலும் தவிர்த்து விட முடியாது. நாம் அவரை நெருங்கா விட்டாலும் நமது வாழ்வை நிர்ணயிப்பவர் அவரே அல்லவா! ஆக, பூ சுற்றும் போட்டியில் ஜெயிப்பது அரசியல் வாதிதான்!

● கி. இரமேசு பாபு, சேலம்.

***? எங்கள் வீட்டில் 14 வோட்டு உள்ளது. சொந்தமாக ஒரு டீ.வி. இல்லை. எந்த கட்சி டீ.வி. வாங்கித் தரும்....?***

! இப்படியொரு கேள்வியைக் கேட்டுவிட்டு 'தேர்தல் அன்பளிப்புகளுக்கு வரையறை வகுக்கப்படுமா?' என்றும் கேட்டிருக்கிறீர்களே...! நாடு உருப்படுமா!

● எம். முத்து, உடுமலை.

*? 'ஆஹா இதுவன்றோ பாரதம்' என்று சமீபத்திய மகிழ்ச்சி? 'இதுவா பாரதம்!' என்ற துக்கமான நிகழ்ச்சி?*

! மகிழ்ச்சி: ஜனதா தள தலைவர் பொம்மை பேரில் ஊழல் குற்றச்சாட்டு இருப்பதால் அவர் பதவி விலக வேண்டும் என வலியுறுத்தி விலகச் செய்தது. துக்கம்: அவரிடத்துக்குப் புதிய தலைவரை ஜனநாயக முறைப்படி தேர்ந்தெடுக்காமல் லல்லுபிரசாத் யாதவை நியமித்தது.

* 'அப்பாவி' அமைச்சர்!



● ஆர். திலகவதி, சென்னை - 38.

***? இந்திய கிரிக்கெட் அணி கேப்டன் அசாருதீன் புகைப்படக்காரரைத் தாக்கியதாகச் செய்தி வந்துள்ளதே?***

! 'தப்புதான்' என்று தலைவர் ஒப்புக்கொண்டு மன்னிப்பு கேட்டு விட்டாரே... செத்த பாம்மை அடிக்காமல் விட்டுவிடுவோம்.

● க. கிருஷ்ணமூர்த்தி, பெரிய கிருஷ்ணாபுரம்.

***? ரஜினி என்ற புயல் சற்று ஓய்ந்து விட்டதை கவனித்தீர்களா?***

! காங்கிரஸ் தனது தேர்தல் கூட்டு திட்டத்தைத் தெளிவாக்கும் வரை தாம் எதுவும் செய்ய முடியாது என்று ரஜினி கூறியிருப்பது நியாயமானதே. புயல் அடங்கியிருப்பதில் ஆச்சரியமில்லை.

● கே.ஏ. காளிமுத்து, ராணிப்பேட்டை.

***? ஹவாலா ஊழல் குற்றச்சாட்டு அரசியல் நோக்கம் கொண்டது. தேர்தலை முன்னிட்டு நடத்தப்படும் நாடகம்' என்று வழக்கறிஞர் நானி பால்கிவாலா கூறியிருக்கிறாரே?***

! பால்கிவாலாவிடம் மதிப்பு உண்டு என்றாலும் இந்த விஷயத்தில் மாறுபட வேண்டியிருக்கிறது. ஹவாலா தொடர்பான விசாரணைகள் உச்ச நீதி மன்றத்தின் உத்தரவின் பேரில் நடக்கின்றன. 'எந்தத் தரப்பைச் சேர்ந்தவரும் எத்தகைய உயர் மட்டத்தவரும், விதிவிலக்கின்றி விசாரிக்கப்பட வேண்டும்' என்ற உச்சநீதி மன்றத்தின் சமீபத்திய ஆணை, இது அரசியலுக்கு அப்பாற்பட்ட நடவடிக்கை என்பதை மேலும் வலியுறுத்துகிறது.

**□ ரூ. 25 பரிசு பெறுபவர் :**
**ஆர். சங்கரநாராயணன்**
**சன்னதி தெரு,**
**குணசீலம்**
**திருச்சி - 621 204.**

## ரமணிசந்திரன்

# மாலை மயங்குகின்ற நேரம்... 18

முகத்திற்கு நேரே மூடப்பட்டு விட்ட கதவின் முன் பிச்சைக்காரி போல நிற்க அருவருப்புற்று அகன்ற உதயரேகாவுக்குக் கையில் பத்திரிகையோடு இருந்த அந்தப் பெண்ணின் தோற்றம் மனத்தில் திரும்பத் திரும்பத் தோன்றி உறுத்தியது.

இந்த மாதிரி இரவைக் கழிக்க வருகிறவள் இப்படியா பத்திரிகை படித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பாள்?

கிருஷ்ணசந்திரன் வேறு அவள் கதவைத் தட்டுவதற்காகவே காத்திருந்தவன் போல, அதுவும் கதவின் அருகிலேயே காத்துக் கொண்டு நின்றிருந்தவன் போல அடுத்த தட்டு தட்டுமுன் கதவைத் திறந்தான்!

விட்டுப் பிரிய மாட்டாமல் வீடு வரை அழைத்து வந்து விட்டு, அந்த இருவரின் நடவடிக்கையுமே அவளுக்கு இயல்புக்கு முரணாகத்தான் தோன்றியது.

ஆனால் கிருஷ்ணசந்திரனிடம் முதலிலிருந்தே அவள் கேட்டது, கண்டதெல்லாம் முரண்பாடுகள்தாமே!

படித்து முடித்து, தொழிலில் ஈடுபட்ட சில காலம் வரை மாடல் மகனாக வாழ்ந்தவன் திடுமெனக் குடியும் கூத்தியுமாக ஆனது ஒரு முரண்பாடு.

முதல் சந்திப்பில் அவனது பேச்சு மாறிய விதமும் முரண்பாடுதான்.

நல்லபடியாக இயல்பான வாழ்வு வாழ மாட்டேன் என்றதும் இயற்கைக்கு மாறானதுதான்.

அவளுக்காக அக்கறையுடன் பார்த்துப் பார்த்துச் செய்து உருகுகிறவன், அவளை மனைவியாக ஏற்க மறுப்பதோடு, மணவிலக்கு அளிக்க முன் வருவது கொஞ்சம் கூட ஒத்துக் கொள்ள முடியாத முரண்பாடுதான்.

அவைகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது அந்தப் பெண் அறைக்குள் சஞ்சிகை படித்துக் கொண்டு இருப்பது ரொம்பவும் சாதாரணமானதுதான். ஆனாலும்...

சட்டென அவளது அறைக்குள் சென்று ஜன்னல் வழியே, அடுத்த அறையிலிருந்து வந்து தோட்டத்தில் விழுந்த வெளிச்சத்தையும், நிழல்களையும் ஊன்றிக் கவனித்தாள்.

மேஜை விளக்கைப் போட்டுக் கொண்டு அந்தப் பெண் அப்போதும் அந்தப் பத்திரிகையில்தான் கவனமாக இருந்தாள்.

அப்படித்தான் தோட்டத்தில் விழுந்த நிழல் உரைத்தது.

கிருஷ்ணசந்திரன் இருக்கும் இடமே தெரியவில்லை.

படுத்து விட்டான் போலும்! ஆனால் இவள்? 'விழுந்து விழுந்து அப்படி என்ன தேர்வுக்குப் படிக்கிறாள்?'

அவளைப் பற்றி வெகு தீவிரமாகச் சிந்தித்துப் பார்த்தாள்.

எங்கேயோ பார்த்த முகம் என்றதற்கு மேலாக அவளை அடையாளம் காண உதயரேகாவால் முடியவில்லை.

கையிலேயே பத்திரிகை கொணர்ந்தாளே! அவளது கைப்பையிலிருந்து கூட சில வார, மாத சஞ்சிகைகள்தான் தலைநீட்டின. பையில் அடங்காத பெரியதைக் கையில்... அது பிலிமாலயா!

வெளியே ஓடிச்



சென்று, டீபாயின் கீழ்த்தட்டில் அடுக்கி வைத்திருந்த பத்திரிகைகளில் இருந்து பிலிமாலயாவை மட்டும் எடுத்துப் புரட்டினாள்.

அந்தப் பெண்ணைப் பற்றிய கட்டுரை ஒன்று, அவளது சில புகைப்படங்களுடன் பத்திரிகையில் பிரசுரமாகி இருந்தது.

ஆக, இதைத்தான் இப்படிக் கிடந்து படிக்கிறாளா?!

அவள் முகம் பழக்கப்பட்டதாகத் தோன்றிய காரணமும் புரிந்தது.

ஆனால் அவளது படத்தின் கீழ் 'வளரத் துடிக்கும் புதுமுகம்' என்ற வர்ணனையுடன், 'நடிகை நளினா' என்ற பெயரைப் பார்த்ததும் உதயாவின் மனம் மீண்டும் வெகுவாகச் சோர்ந்து போயிற்று.

இவள் வீட்டுப் 'பார்ட்டி'க்கு போக நேரமாகி விட்டது என்றுதானே கிருஷ்ணசந்திரன் முதலில் அன்னையைக் கடிந்து கொண்டு 'யோகா' வகுப்பில் விட்டுச் சென்றான்! இவளோடுதான் அவன் பெயர் சேர்த்துப் பேசப் பட்டதும்...

இனி எண்ணுவதற்கு என்ன இருக்கிறது






- 'பரணி' மனோ

என்று சலித்த மனதைப் பிடிவாதமாகத் தளர விடாமல் இழுத்துப் பிடித்து நிமிர்த்தினாள்.

மீண்டும் ஒருதரம் தோட்டத்து நிழலைப் பார்த்துத் தென்புற்றாள்.

படித்து முடித்து விட்டாள் போல, இப்போது பத்திரிகையைத் தூக்கிப் பல கோணத்தில் பிடித்துத் தன் படங்களைப் பார்த்து இன்புறுவது போலத் தோன்றியது.

இன்னும் சிலதும் யோசித்து, இனிச் செய்ய வேண்டியதையும் முடிவு செய்து விட்டு உதயரேகா உறங்கிப் போனாள்.

மறுநாள் காலையில், அவள் எதிர்பார்த்திருந்தது போலவே அந்தப் பெண் நளினா போய் விட்டிருந்தாள்.

வழக்கமான பத்திரிகை படிக்கும் பாவனையுடன், கணவன் தன்னைக் கவனிப்பதைக் கண்டும் காணாதவள் போலத் தன் மொட்டை மாடிச் செடிகளுக்கு நீர் ஊற்றத் தொடங்கினாள் அவள்.

கிருஷ்ணசந்திரன் அலுவலுக்குக் கிளம்பிய பிறகு, பொழுதைப் பிடித்துத் தள்ளியபடி அமர்ந்திருந்தவள், மணி பத்தரை ஆனதும் டெலிஃபோனை எடுத்தாள்.

அவளுடைய தந்தைக்கு அடுத்த அதிகாரியான திரு. தாமஸ் தன் மூத்த அதிகாரியுடைய மகளை ஆர்வத்துடனேயே வரவேற்றார். என்ன ஏது என்று குசலம் விசாரித்து விட்டு, அவளது படம் பரிசு பெற்றது குறித்துப் பாராட்டினார்.

ஆனால், உதயரேகாவின் கோரிக்கையைக் கேட்டதும் முகம் மாற, "அங்கெல்லாம் நீ போவது சரியில்லையம்மா. அப்பாவுக்குப் பிடிக்காது" என்று மறுத்தார்.

"அதனால்தானே அவர் இங்கே இல்லாத நேரம் பார்த்து உங்களிடம் வந்திருக்கிறேன். தற்காலப் பெண்களைப் பற்றி நான் எழுதப் போகும் புத்தகத்திற்கு இந்த மாதிரிப் பெண்களையும் கூடப் பேட்டி காண வேண்டி இருக்கிறது. ப்ளீஸ், அங்கிள். நீங்கள்தான் எனக்கு இதை எப்படியாவது ஏற்பாடு செய்து தர வேண்டும்!" என்றாள் உதயரேகா கெஞ்சுதலாக.

சன்னமாய்ப் புன்னகைத்து, "அப்படியானால் இந்தப் பெண்ணைத்தான் என்று இல்லையல்லவா? யாருடனாவது பேட்டி ஏற்பாடு செய்கி..." என்று டெலிஃபோனை எடுக்கவும் உதயரேகா பதறிப் போனாள்.

"அ... அதில்லை, அங்கிள். இந்த... இந்தப் பெண் நளினா என்றால் ஏற்கெனவே தெரிந்தவள். வந்து... தெரிந்தவள் என்பதால் கொ... கொஞ்சம் இலகுவாக... ஒளிவுமறைவின்றிப் பேசுவாள் இல்லையா? அதனால்தான்... ப்ளீஸ், அங்கிள்.. இவளையே.. பா... பாருங்கள். அங்கிள்" என்று தடுமாறினாள் அவள்.

'அவளை உனக்கு எப்படித் தெரியும்' என்று கேட்க, தாமசிற்கு ஆசைதான். ...க நாதன் கிருஷ்ணசந்திரனைப் பற்றி விசாரித்தது இவருக்கும் தெரியும். வருமானவரி இலாகா என்பதால், கிருஷ்ணசந்திரனின் பொருளாதார நிலை உள்ளங்கை நெல்லிக்கனியாகி விட, குடும்பப் பெருமை, படிப்பு, தொழில் நடத்தும் விதம் எல்லா விவரங்களையும் சேகரித்துச் சீர் தூக்கிப் பார்த்து, "எல்லாமே சிறப்பாக இருக்கும்போது இந்த ஒரு தவறுக்காக ஒதுக்க முடியாது. அத்தோடு இதை உதி இலகுவாகச் சமாளித்து விடுவாள்" என்று நம்பிக்கையோடு பெண்ணைக் கொடுத்தார்.

இப்போது, மூன்று மாதம் கழித்து மகள் விசாரிக்க வந்திருக்கிறாள் என்றால்...?

ஆனாலும், உதயரேகாவின் கெட்டிக்காரத்தனத்தில் தாமசுக்கு நம்பிக்கை உண்டு. எனவே, அந்த நளினாவைச் சந்தித்துப் பேசும் வாய்ப்பை உதயரேகாவுக்கு ஏற்படுத்திக் கொடுத்தார்.

அவர் வருமானவரி இலாகாவில் பணிபுரிந்தது இதற்கு மிகவும் வசதியாக இருந்தது. வருமான வரி இலாகா என்றாலே அது எந்தப் பூட்டுக்கும் திறவுகோல் அல்லவா? அந்தத் துணை நடிகைக்குத் தவறாமல் தன் படங்களில்

வாய்ப்பளித்துக் கொண்டிருந்த பட முதலாளி யையே பிடித்து, அவர் மூலமாய் உதயரேகா வின் விருப்பத்தை நிறைவேற்ற தாமஸ் ஆவன செய்தார்.

நளினாவைச் சந்திக்கக் கிளம்புமுன், உதய ரேகாவுக்குக் கடைசியாக ஒன்று பாக்கி இருந் தது. சற்று யோசித்துத் தாமசிடம், "அங்கிள், என் புத்தகம் வெளிவரும் வரை இதுபற்றி வேறு யாரிடமும் நீங்கள் மூச்சு கூட விடக் கூடாது! சரிதானா? முக்கியமாக அப்பாவிடம். அங்கெல்லாம் ஏன் போனாய் என்று ஏதாவது சொல்வார்கள். என்ன அங்கிள், ப்ளீஸ்?" என்று நயத்துடன் வேண்ட, மீண்டும் ஒரு புன்னகையு டன் அவர் சம்மதித்தார்.

நளினாவுடனான சந்திப்பு பற்றி உதய ரேகா ஏற்கெனவே யோசித்து வைத்திருந்தாள்.

அதன்படி, சிகையலங்காரத்தை மாற்றிக் கொண்டாள். அகலமான கறுப்பு பிரேமிட்ட வெற்றுக் கண்ணாடியும், வெற்றுக் காதுகளும் முகத் தோற்றத்தை வேறுபடுத்திக் காட்ட, அன்று அணிந்திருந்த சேலைக்கு மாறாகப் பளிச்சென்று கண்ணைப் பறிக்கும்விதமாய் ஒரு சுரிதாரை மாட்டிக் கொண்டு சென்றாள்.

பட முதலாளியின் சிபாரிசு காரண மாகவோ என்னவோ, உதயரேகாவுக்கு நளினா வீட்டில் வரவேற்பு பிரமாதமாக இருந்தது.

பெயரையோ, புகைப்படத்தையோ வெளியி டப் போவது இல்லை என்று முதலிலேயே உதயரேகா கூறி விட்டதால், அம்மா, அப்பா, மாமா என்று யாருடைய குறுக்கீடும் இல்லாமல் அவளால் அவளோடு பேச முடிந்தது.

பொதுவான வாழ்க்கை முறை, தொழில் முறை, வருமானம் பற்றிக் கேட்ட பிறகு, உதய ரேகா தன் பிரச்னைக்கு வந்தாள்.

பிற ஆண்களோடு பழகுவது பற்றி உதய ரேகா குறிப்பிட்ட போது, சுற்றுமுற்றும் பார்த்து விட்டு, "என்னம்மா செய்வது? என்ன சம்பா தித்துக் கொண்டு வந்து கொடுத்தாலும் வேண் டியவர்களுக்குக் கூட ஆசை வெறி அடங்கு வதில்லை. கடைசியாக, இப்படியும்தான் சம் பாதிக்கும்படி ஆகிறது" என்றாள் அவள் கசப் புடன்.

நம்பாத குரலில், "அவ்வளவு தூரம் 'விதியே' என்று தொழில் செய்கிறவர்கள், அதற்கென்றே அலைகிறவர்களோடு நிறுத்திக் கொள்ளலாம் இல்லையா? நல்ல குடும்பத்துப் பிள்ளைகளை யேனும் விட்டு ஒதுங்கி விடலாம் இல்லையா?" என்று கேட்டாள் உதயரேகா.

"நான் குடும்பங்களைக் குலைப்பவள் அல்ல" என்ற பதிலில் வெகுண்டு, "மிஸ்டர் கிருஷ்ணசந்திரன்? அவரோடு, அவரது வீடு வரை செல்லவில்லை? கணவன் இன்னொரு பெண்ணோடு அறைக்குள் சென்று கதவைப் பூட்டிக் கொண்டால், கட்டினவளுக்கு ரொம் பவும் சந்தோஷமாக இருக்கும் என்றா எண்ணி னீர்கள்?" என்று குத்தலாக வினவினாள்.

"அது... அவர்... அது வேறே விஷயம் அம்மா. வெளியே சொல்லப்படாது என்று சத் தியம் வாங்கியிருக்கிறாரம்மா. அதனாலே அந்த ஆள் பேச்சு வேண்டாம்" என்று உரைத்து அந்தப் பேச்சை முடித்து விட முயன் றாள் நளினா.

ஆக, உதயரேகாவின் ஊகம்தான் சரியாக இருந்திருக்கிறது!

கிருஷ்ணசந்திரனின் குடி, கூத்தி, எல்லாமே நாடகம்தான்!

ஒருநாள் வீடு திரும்பியவன், அவள் இருக்கு மிடம் தெரியாமல் ஆத்திரப்பட்டானே, அது மட்டுமே உண்மையான கோபம். முதல் நாள் யோகா வகுப்பில் காந்திமதியிடம் தொடங்கி, முன்தினம் இரவு வரையில் புருவம் நெரித்துக் காட்டிய சினமெல்லாம் வெறும் வேஷம்!

குடித்தது போல அவனது தள்ளாட்டங்கள் கூட நடிப்பாகவே இருக்கக்கூடும்... 'இருக்கக் கூடும்' என்ன? அது நடிப்பேதான். அன்று அவன் முத்தமிட்ட போது 'மதுவாடை' இல் லையே என்று குழம்பினாளே; குடித்திருந்தால் அல்லவா வாடை வரும்?

ஒரு புதிர், பெருமளவு உதயரேகா எதிர் பார்த்தது போலவே விடுபட்டது.

ஆனால், இன்னொன்றோ, முன்னிலும் பெரிதாக வளர்ந்து, அடி முனை தெரியாமல் அவளைக் குழப்பியது.

இது, ஏன் இந்த நாடகம்?

ஒருவேளை, அவன் போதை மருந்துதான் உட்கொள்கிறானோ என்ற சந்தேகம் மீண்டும் அவளை உலுக்கியது.

எப்படியும், இதற்கு மேலும் கணவனை விட்டுப் பிடிப்பது, சிக்கல் தானாக அவிழும் என்று பொறுமையோடு காத்திருப்பது என் றெல்லாம் காலம் கடத்துவது அவளுக்குச் சற் றும் சரியென்று படவில்லை.

'பொறுத்தார் பூமி ஆள்வார்' என்பதிலும் அவளுக்கு உடன்பாடு கிடையாது. அப்படிப் பொறுமை காப்போர் ஆளக்கூடிய பூமி இறந்த பின் அவர்களுக்குக் கிடைக்கிற ஆறடி நிலம் தான் என்பது அவளது கருத்து.

அந்த மாதிரி நிலைமை தனக்கு வந்து விடக் கூடாது என்ற உறுதியோடு, மேலே என்ன செய்வது என்று தீவிரமாக யோசித் தாள்.

அப்படி யோசித்து, ஆழச் சிந்தித்து, துணிந்து அவள் எடுத்த நடவடிக்கைக்கு அவள் சற்றும் எதிர்பாராத, விசித்திரமான பயன் ஒன்று கிட்டியது.

(தொடரும்)

சுடச்சுட வந்த கடிதங்கள்!

## வட்ட மேஜை

♦ "எங்களுடன் என்.டி.ஆர்"– நிருபர்களின் நினைவலைகள் மாறுபட்ட, அதேசமயம் உள்ளம் தொட்ட இனிய அஞ்சலி.
கீழ்நத்தம், தி.சு.பாலசுப்பிரமணியன்.

♦ 'ஊழல் கூட்டணி' தலையங்கம் படித்தேன். எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ என்று பயப்படுவதுண்டு. அது போல 'எந்தத் திட்டத்தில் எவ்வளவு ஊழல் இருக்குமோ?' என்று இந்தியத் திருநாட்டைச் சேர்ந்தவர்கள் இன்று பயந்து கொண்டிருக்கின்றார்கள். அரசியல்வாதிகள் யாரையுமே நம்பக் கூடாது என்பதற்குச் சமீபத்திய ஹவாலா மோசடி நலலதொரு எடுத்துக் காட்டு. இந்த ஊழலின் உச்சக்கட்டம் எதில் கொண்டு போய் விடும் என்று தெரியவில்லை. இந்திய மக்கள் சிந்திக்க வேண்டிய தருணம் வந்தே விட்டது!
திருச்சுழி-29, சுந்தர்–அழகேசன்.

♦ திருமணமாகிவிட்டது; குழந்தையும் பெற்றாகி விட்டது; வயதும் ஏறிக் கொண்டே போகிறது என்பதைப் பற்றியெல்லாம் இம்மியளவும் கவலைப் படாமல் தன்னம்பிக்கையுடன் பயிற்சி எடுத்துக் கொண்டு எஸ்.ஏ.எஃப் போட்டியில் தங்கம் வென்ற(அம்மா) ஷைனியின் பேட்டி சிறப்பாக இருந்தது.
செம்பட்டி - 7, வி.எஸ். ராமு

♦ உலகப் படவிழாவில் 'ஜொள்ளர்'களின் கூட்டம் பலமாக ஏமாந்த கதையை 'கிச்சா' கலகலப்பாகவே சொல்லி விட்டார். பொதுவாகவே ஃபிலிம் ஃபெஸ்டிவலில், சென்சார் செய்யப்படாத திரைப்படங்கள் தான் காட்டப்படும் என்ற அபிப்ராயம் இருப்பது தான் மேற்கண்ட (THE ADULTS' GAMEடைப்) படங்களுக்குக் கூட்டம் கட்டுக்கடங்காமலிருப்பதற்குக் காரணம்!
சென்னை - 1, ஏழுகிணறு எஸ். பாலாஜி

♦ சுஜாதா பக்கம் படித்தேன். 'மெல்லிசை என்று சொல்கிறார்களே அவர்களை ஒரு சேர, நீக்க வேண்டும்; ரேடியோதானே என்ற அலட்சியம் அவர்களுக்கு' என்று குறிப்பிட்டுள்ளார். பல ஆண்டுகளாக ரேடியோவில் வழங்கப்படும் மெல்லிசைப் பாடல்களைக் கேட்பவன் நான். மெல்லிசையில் தரமான– கருத்து நிறைந்த பாடல்கள் வந்தன– வந்து கொண்டிருக்கின்றன. அருமையான இசையமைப்பும் உண்டு. மெல்லிசை நீக்கப்படவேண்டியது என்ற கருத்தை ஏற்க முடியாது.
சென்னை - 91, வி.எஸ். ஸ்ரீதரன்.

♦ தொழில் துறையில் சாதனைகள் பல படைத்தும், இருக்கும் இடம் தெரியாமல் இருக்கிற சுரேஷ் கிருஷ்ணா தம்பதியினரை மேடையேற்றி வெளிச்சம் போட்டுக் காட்டிப் பெருமைப் படுத்தியது பாராட்டத் தக்கது.
ஈரோடு -9, சி. நாச்சிமுத்து.

♦ 'ஆளுக்கொரு விருது' என்ற தலைப்பிலான கட்டுரையில் திருமதி சுரேஷ் கிருஷ்ணா, சுந்தரம் ஃபாஸனர்ஸ் நிறுவன எம்.டி. என்று தவறுதலாகப் பிரசுரமாகி இருக்கிறது. திருமதி உஷாகிருஷ்ணா, உபாசனா ஃபைனான்ஸ், மற்றும் உபாசனா இஞ்சினீயரிங் நிறுவனங்களின் எம்.டி. இந்த நிறுவனங்களின் சேர்மன் திரு சுரேஷ் கிருஷ்ணா.
சென்னை-18, சாருகேசி.

♦ ஆனந்தின் 'உட்-பீ' பற்றிய அறிமுகம் அமர்க்களம். அவர் செஸ் ஆடாவிட்டால் என்ன? சர்வ தேசப் புகழ் பெற்ற ஆனந்தையே இனி அவர் தானே ஆட்டி வைக்கப்போகிறார்?
திருச்சி - 4, ஆர். பிரகாஷ்.

♦ தி.மு.க. மாநாடு குறித்த செய்தியில் தன்னலம் கருதாது வெறும் டீ குடித்து வேலை செய்த தொண்டர்கள் இப்போது மிஸ்ஸிங், எல்லாமே 'காண்ட்ராக்ட்'தான் என்ற வரிகளை தயவு செய்து வாபஸ் வாங்கிக் கொள்ளுங்கள். இன்றும் இரவு, பகல் பாராது, வெயில், மழை கருதாது கட்சிப்பணிக்காகத் தம் உடல் உழைப்பை நல்கும் உண்மைத் தொண்டர்கள் நிறைந்திருக்கும் ஒரே கட்சி தி.மு.க.தான்.
நாகை - 1, சந்திரா.

♦ சோம. வள்ளியப்பன் எழுதிய 'என் சின்னப் பேரழகியே, ராட்சசியே..' சிறுகதை அருமையாக இருந்தது. வாசகர் கடிதம் மூலம் தன் காதல் சம்மதத்தைச் சொன்ன கதாநாயகியின் ஸ்டைல் பிடித்திருந்தது. ஆனால் இது எத்தனை பேருக்கு வாய்க்கும்!
மொரட்டுப்பாளையம், க.நா.இராஜேஸ்வரன்

### ரூ. 20/- பரிசு பெறும் கடிதம்

♦ அதிக பால் உற்பத்திக்காக அபராதம் விதிக்கப்பட்ட துணுக்குச் செய்தி படித்து, திடுக்கிட்டேன். அதிகப்படி உற்பத்தியான பாலை, எதியோப்பியா, சோமாலியா போன்ற அருகிலுள்ள மிக ஏழை நாடுகளுக்கு வழங்கியிருக்கலாமே! வளர்ந்த நாடுகள் இதுபோன்ற பிரச்னைகளில் நல்ல தீர்வை எடுக்க வேண்டும்.
அரக்கோணம், எல். கோபாலகிருஷ்ணன்.

## மெய்சிலிர்த்த அனுபவங்கள்

# பகையைக் கரைத்த



# பனிமேகம்!

அப்போது நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த சமயம். உதகையில் பத்து நாட்கள் என்.எஸ்.எஸ். காம்ப். தமிழ்நாட்டின் பல கல்லூரிகளிலிருந்தும் குழுக்கள் வந்திருந் தன. உதகை ஏரியிலுள்ள வெங்காயத் தாமரை களை அகற்றும் பணி எங்களுக்கு. இரண்டு பேர் படகில் சென்று, தாவரத்தைத் தள்ளி வர, மற்றவர்கள் கரையிலிருந்து எடுத்துப் போய் அப்புறப்படுத்த வேண்டும். நடுவே, இரண்டு 'குரூப்' மாணவர்களுக்கிடையே ஒரு சின்ன கசமுசா வந்து, சண்டையாகி விட்டது.

இந்த நிலையில்தான், வேலைகளுக் கிடையே எங்களை தொட்டபெட்டா சிகரத்துக்கு அழைத்துப் போனார்கள். ஒரு பாறையின் விளிம்பில் நானும் ஒரு நண்பனும் அமர்ந்திருக்க, எதிரே வேறு இருவர். இதில் வேடிக்கை என்ன வெனில், முரண்பட்ட இரு அணியைச் சேர்ந்தவர்கள் நாங்களும் அவர்களும்! எனவே பேசிக் கொள்ளவில்லை.

மிக அமைதியான, உயரமான பாறை. சிறிது கவனம் தவறினாலும், விழுந்தால் எலும்பு தேறாது!

திடீரென ஒரு பெரிய மேகக் கூட்டம் வந்து சூழ்ந்து கொண்டது. பயம் வந்து எழப் போகையில், "எழாதீர்கள். ஒன்றும் தெரியாது. அப்படியே இருங்கள்" என்று யாரோ எச்சரிக்கை குரல்கொடுத்தார் கள்.

மேகக் கூட்டம் கடந்து போக நாற் பத்தைந்து நிமிடம் பிடித்தது! எதிரில் இருப்பவர் முகம் தெரியாத அளவுக்கு அடர் மேகம்!

அது கலைந்தபின் இரு 'அணி'யி னரும் ஒருத்தரை ஒருத்தர் சந்திக்க, ஏதோ இனம்புரியாத அன்பு கலந்த சிரிப்பும் மகிழ்வும் வந்தது.

கைகோத்தபடி இறங்கினோம். மேகம் வந்து பகையைக் கரைத்து விட்ட அந்தத் தருணம் இப்போது நினைத்தாலும் சிலிர்ப்பு தருகிறது!

*– க. அன்பழகன், தஞ்சை – 2.*

பதினேழு வருடங்கள் முன்பு ஒருதரம் மந்திராலயம் போயிருந்தேன், குடும்பத்துடன்.

அதிகாலை போய் இறங்கியதும் நல்ல குளிர். வியாழக் கிழமை. போகிப் பண்டிகை எல்லாம் சேர்ந்து நல்ல கூட்டம். இன்றைக்குப் போல் அப்போது ஓட்டல் வசதிகள் அத்தனை இல்லை.

இருந்த லாட்ஜ்களில் அறை காலி இல்லை என்று சொல்லி விட, குடும்பத்துடன், மூட்டை முடிச்சுக்களை வைத்துக் கொண்டு என்ன செய்வது, எங்கே தங்குவது என்று புரியாமல் திணறிப் போனேன்.

நேரம் ஆகிக் கொண்டே இருக்க, பல் தேய்க்க, குளிக்கக் கூட இடமில்லாமல் நடுத் தெருவில் நின்றபடி, என்ன செய்வது என்று புரியாமல் மந்திராலய மகானையே மனமுருகிப் பிரார்த்தித்தேன்.

திடீரென எங்கிருந்தோ வந்த ஒரு பெரிய வர், நாங்கள் நடுத்தெருவில் நின்று, விழித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து, என்ன விஷயம் என்று விசாரித்தார். சொன்னேன்.

"அவ்வளவுதானே? என்னோடு வாருங்கள். என் வீட்டில் எல்லோரும் ஊருக்குப் போயிருக்கிறார்கள். நீங்கள் தாராளமாக அங்கே வந்து குளித்து, பெட்டிகளை வைத்து விட்டு, தரிசனம் செய்து வரலாம்" என்று கூட்டிப் போய் விட்டார்!

அதோடு மட்டுமல்ல... நாங்கள் அங்கு தங்குவதாக இருந்த மூன்று நாட்களிலும் அவர் வீட்டிலேயே தங்கிக் கொள்ளலாம் என்று சொன்னதோடு மட்டுமின்றி, முகம் தெரியாத எங்களிடம், எங்கள் வசதிக்காக அவர் வீட்டுச் சாவி ஒன்றையும் கொடுத்தார்!

சிலிர்த்து விட்டது எனக்கு! முன்பின் தெரியாத மூன்றாவது நபரிடம் இத்தனை பரிவா! ராகவேந்திரர் அருள்தான், அந்தச் சம்பவம்!

*- எஸ். கிருஷ்ணமூர்த்தி, களிஞ்சூர்.*

# சுஜாதா பக்கம்



ஜெர்மெய்ன் க்ரியர் (GERMAINE GREER) என்கிற அமெரிக்க எழுத்தாளர், பெண்ணுரிமைகளைப் பற்றி மிகுந்த கோபத்துடனும் திறமையுடனும் எழுதக் கூடியவர். அவருடைய THE STEREO TYPE என்னும் கட்டுரையின் முதல் பாராக்களின் மொழி மாற்றம்:-

"அவள் ஒரு நிரந்தரப் பெண். ஆண்களும் பெண்களும் விரும்பித்தேடும் பாலியல் குறிக்கோள். அவளுக்கென்று தனி அடையாளம் கிடையாது. அவளுடைய மதிப்பு அவள் பிறரிடம் ஏற்படுத்தும் தேவைகளே. அவள் உலகத்திற்குக் கொடுக்க வேண்டியது அழகாக உயிர் வாழ்வது மட்டுமே. அவள் எதுவுமே சாதிக்க வேண்டியதில்லை. அவளை அடைவதே ஒரு சாதனை. அவள் மேல் உரிமையில்லாதவன் அவள் பின் அலைந்தால் அது அவள் குற்றமில்லை.

**அவள் தன்னை அறியாமல் ஆண்களைப் பைத்தியமடிக்கிறாள்; யுத்தத்துக்கு அனுப்புகிறாள். அவளால் பிரச்னை அதிகரிக்க, அவள் முக்கியத்துவமும் அதிகரிக்கும்.**

ஒழுக்கத்தில் அவள் நடுநிலை. எல்லாருமே அவளைச் சுற்றிய மனிதர்களிடையே போட்டிதான். அவள் தன்னை அறியாமல் ஆண்களைப் பைத்தியமடிக்கிறாள்; யுத்தத்துக்கு அனுப்புகிறாள். அவளால் பிரச்னை அதிகரிக்க, அவள் முக்கியத்துவமும் அதிகரிக்கும். அவளை அடைவதில் உள்ள பரபரப்பும் அதிகரிக்கும். அவள் அழகு எல்லோருக்கும் தெரிவதைத்தான் ஆண்கள் விரும்புவார்கள். எவ்வித அழகு என்பதில் அவர்கள் வேறுபடலாம். கால் விரும்பிகள் மினி ஸ்கர்ட்டை துரத்துவார்கள். மார் விரும்பிகள் ஊடே தெரியும் சட்டைகளையும் சரியும் ரவிக்கை வெட்டையும் துரத்துவார்கள். குண்டுப் பெண்களைச் சிலர் விரும்புவார்கள். ஆனால் இந்த மாறுதல்களெல்லாம் ஆதாரமான அவளுடைய பெண் அடையாளத்தைக் கலைக்கக் கூடாது. அவள் லெதர் ஜாக்கெட் அணியலாம்- ஆனால் மோட்டார் சைக்கிள் ஓட்டக்கூடாது. பின்னால் ஒட்டிக் கொண்டுதான் செல்ல வேண்டும். குதிரை சவாரி செய்தால் நளினமாக நிமிர்ந்துதான் செல்லலாம். முன்பக்கம் குனிந்து பின்பாகம் தூக்கி அல்ல. அவள்தான் பணச் செலவின் காரணம். பணம் செலவழிப்பவளும் அவளே. உலகில் உள்ள அத்தனை சர்வேக்களும், அவளை வைத்து விளம்பரம் செய்தால் வியாபாரம் கொழிக்கும் என்கிறது. புதிய காரின் மட்கார்டில் அவள் உட்காரலாம்; அல்லது ஜொலிக்கும் நகை அணிந்து அதன் கதவைத் திறந்து காலடி வைக்கலாம். அவள் ஆணின் காலடியில் உட்கார்ந்து ஸ்டாக்கிங்குகளைத் தடவிக் கொடுக்கலாம் அல்லது பெட்ரோல் பம்பைக் கையில் பிடித்துக் கொண்டு, சவாலாக 'போஸ்' கொடுக்கலாம். அல்லது ஸ்லோ மோஷனில் குளிர்ந்த காடுகளினூடே புதிய ஷாம்புவில் கூந்தல் அலை பாய அலையலாம்.

"நம் கலாசாரத்தின் பெண்ணுபாசனை* அதன் முகத்திலும் விளம்பரப் பலகைகளிலும் திரைப்படம், டி.வி., செய்தித்தாள், பத்திரிகைகள், பாக்கெட்டுகள், அட்டைப்பெட்டிகள் அனைத்திலும் எழுதப் பட்டு ஆட்சியிலிருக்கும் பெண் தெய்வத்திற்குப் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் அவள் அரசு, பெண்ணரசு அல்ல. காரணம் அவள் பெண்ணல்ல; கண்ணாடி உதடுகளும் மேனி பளபளப்பும் எதையும் பார்க்காத கண்களும் குற்றமில்லாத விரல்களும் அபாரக் கூந்தலும் அவள்! ஒப்பனைப் பொருள்களின் அமானுஷ்ய வெற்றி அவள்."

ஆண்களை நடுங்க வைத்து குற்ற உணர்ச்சிக்குத் துரத்தும் கட்டுரை. அமெரிக்காவிலேயே பெண்களின் நிலை இவ்வாறு! இந்தியாவில் இவையெல்லாமே உண்டு. இவைகளுடன் உபரி அடையாளங்களும் உள்ளன. யோசித்துப் பாருங்கள்....

* GYNOLATRY என்கிற புதிய வார்த்தையை பயன்படுத்துகிறார் க்ரியர்.



**ரொ**ம்ப அசதியாய் இருந்தது. பியூனை அழைத்து டீ கொண்டு வரச் சொல்லலாமா என்று எண்ணிய போது– என் எதிரே நான் அழைக் காமலே பியூன் வந்து நின்றான்.

''உங்களப் பார்க்க ஒரு பொண்ணு வந்து இருக்கு... பேரு ஷோபனாவாம்... ரிசப்ஷன்ல வெயிட் பண்றாங்க... உங்களை அவசியம் பார்க்கணுமாம்!''

ஷோபனாவா?... இங்கே ஏன் வந்தாள்? இவளால் எத் தனை பிரச்னை... ஒன்றுமேல் ஒன்றாய் பிரச்னை வந்து கொண்டே இருக்கிறது.

''வர்றேன்னு சொல்லு'' என்று சுப்பையாவை அனுப்பினேன். ஒரு லெட்டரைத் திருத்தி, டைப்பிஸ்ட்டுக்கு அனுப்ப வேண்டும். அதை முடித்து விட்டு ஷோபனாவைப் பார்க்கலாம் என்று எண்ணினேன்.

**ஷோ**பனா முதல் முதலாய் என் வீட்டுக்குள் காலடி எடுத்து வைத்த போது அவளுக்கு வயது பத்து... என் சித்தப்பா மகளின் மகள். அதாவது என் தங்கையின் மகள்...

இன்னும் ஞாபகம் இருக்கிறது– அந்த நாள்... ஒரு நாள்

## யோகி

காலை... "அண்ணா..."என்று குரல் கேட்டு, எழுந்து வாசலுக்குப் போனபோது பத்து வயது ஷோபனாவைப் பிடித்தபடி என் தங்கை நின்று இருந்தாள்.

சரியாய் ஒரு மாசம் முன் தான் தன் கணவனை விபத்தில் பறி கொடுத்து இருந்தாள். ஓரளவு சொத்து பத்து இருந்தது. பிறகேன் இவள் என்னைத் தேடி வர வேண்டும்?

உள்ளே வந்தது தான் தாமதம்– அழ ஆரம் பித்தாள்.

"அண்ணா... நா மோசம் போயிட்டேன். அவரும் என்னை விட்டுப் போயிட்டார். கூடப் பொறந்தவங்க என்னைப் பார்த்துப்பாங்கன்னு நெனைச்சேன். அவங் களும் என்னைக் கழட்டி விட்டுட்டாங்க... எனக்குச் சேர வேண்டியதையும் தரலை... நான் உங்களை நம்பித்தான் வந்து இருக்கேன்!''

என் மனைவி கமலாவும் வந்து விட்டாள்.

"நா என்ன பண்றது விஜி?''

"உங்க வீட்டுல ஒரு வேலைக்காரிக்குக் கொடுக் கிற சோத்தை எனக்கும், என் பொண்ணுக்கும் கொடுங்க... அடுப்படியில் படுத்துக்கறோம். நாயா உழைக்கிறோம்.. எனக்கு உங்கள விட்டா யாரு இருக்கா... இவ இல்லேன்னா அவரோடவே என் வாழக்கையை முடிச்சு இருப் பேன். இவ பொட்டையா வந்து வாய்ச்சிட்டா. அதான் உசிரக்

கையில் பிடிச்சிட்டு இருக்கேன்!"

"புருஷன் செத்துட்டா பொண்டாட்டியோட வாழ்க்கை அஸ்தமிச்சிருமா என்ன? ஏதோ கடவுள் புண்ணியத்துல நாங்க ஓரளவு வசதியா இருக்கோம். நாங்க சாப்பிடுறதை உனக்கும் போடுறோம். மனசைத் தளரவிடாதே" என்றாள் என் மனைவி.

ஷோபனா புத்திசாலியான குழந்தை. என் மகளுக்கும், அவளுக்கும் ஒரே வயது. இருவரும் ஒன்றாகப் பள்ளிக்கு சென்றனர். ஷோபனா நன்றாகப் படித்தாள். எங்கள் குடும்பத்தோடு ஒன்றாக ஒட்டிக் கொண்டு, எங்கள் குடும்பத்தில் ஒருத்தியாய் ஆனாள்.

ஷோபனா வயதுக்கு வந்த போது விஜி சொன்னாள். "அண்ணா.... உன் பையனுக்கு என் பொண்ணைக் கட்டி வைச்சிடணும்" என்று.

"அபத்தமாப் பேசாதே... சின்னக் குழந்தைகளுக்கு முன் இப்படிப் பேசினா அவர்கள் மனத்தில் வீணான எண்ணங்கள் எல்லாம் தோன்றி படிப்பில் கவனம் சிதறும். இனி இப்படிப் பேசாதே. உன் மனத்தில் அப்படியான எண்ணம் இருந்தால் காலம் வரும் போது அதைப் பேசுவோம். இப்போ வேண்டாம்!" என்றேன்.

அப்போது என் பையன் ப்ளஸ் டூவும், ஷோபனா நைன்த்தும் படித்துக் கொண்டு இருந்தார்கள். பாஸ்கர் அனேகமாய் மனசில் கற்பனைகளை வளர்க்கத் தொடங்கியது அப்போது தான் போலும். ஷோபனா வெகு அழகான பெண்...

# வைகளின் பாதை



எவரையும் ஈர்த்து வரும் அழகைப் பெற்று இருந்தாள்... விஜி பெரிய தவறு செய்து விட்டாள். ஏதோ தன் நன்றியை, விசுவாசத்தைக் காட்டுகிறேன் என்று ஏதோ சொல்லப்போக, பாஸ்கர் ஷோபனாவை விரும்பவே ஆரம்பித்து விட்டான்!

ஆனால் ஷோபனா, எதையும் சட்டை செய்யாது படிப்பில் வெகு கவனமாய் இருப்பாள். ப்ளஸ்டூவில் ஸ்கூல் பஸ்ட் வந்தாள். "பி.பி.ஏ. படிக்கிறேன்" என்றாள். படித்து முடித்தாள். பஸ்ட்கிளாஸில் தேர்வானாள். "எம்.பி.ஏ. படிக்கிறேன்" என்றபோது கமலா தடுத்தாள்.

"ஏன்" என்று கேட்ட போது அவள் சொன்ன பதில் அதிர்ச்சியடையச் செய்தது. "நம்ம பாஸ்கர் வெறும் பி.காம்.... டைப்பிஸ்டா இருக்கான். இவ ரொம்பப் படிச்சா திமிர் பிடிச்சவளாயிடுவா..." என்றாள்.

"என்ன இப்படி பேசுறே... உம் பையன் பி.காம். முடிக்கவே திணறிட்டான். எப்படியோ அதிர்ஷ்டம் அவன் பக்கம் இருக்க- 'எஸ்.எஸ்.சி. எக்ஸாம்

எழுதி- டைப்பிஸ்டா உட்கார்ந்துட்டான். இவன படிக்க வேணாம்னு யாரும் தடுத்தார் களா? நல்லா படிக்கிற பெண்ணைப் படிக்கக் கூடாதுன்னு சொல்லக் கூடாது!" என்றேன்.

ஷோபனா என்னதான் பஸ்ட்கிளாஸில் பாஸ் பண்ணி இருந்தாலும் சிபாரிசில் தான் சீட் வாங்க முடிந்தது. அதுவும் இருபதாயிரம் செலவு பண்ணி... கமலா சண்டைக்கு வந்தாள்.

"நாளைக்கு இவ நம்ம பாஸ்கரைக் கல் யாணம் பண்ணிப்பாள்ன்னு நினைக்கிறீங் களா" கேட்டாள் கமலா. ஷோபனாவின் அழகு, அவளை தங்கள் சொத்தாக்கிக் கொள் ளவே பயன் பட்டது.

"என்னை மட்டும் பண்ணிக்க மாட் டேன்னு சொல்லட்டும், நடக்கறதே வேற..." என்றான் பாஸ்கர்.

பாஸ்கர் நிறைய மாறி இருந்தான். முரட்டுத் தனம் நிறைய... ஷோபனா இவனை விரும்பவும் இல்லை... வெறுக்கவும் இல்லை. பழக வேண் டிய நேரம் பழகினாள். தவிர்க்க வேண்டிய நேரம் தவிர்த்தாள். அதுதான் பெண்மைக்கான லட்சணம். பாஸ்கரும் கூட, "எம்.பி.ஏ. எல்லாம் எதுக்கு படிக்கணும்?" என்று கேட்டான். எல் லோரையும் அடக்கி வைத்தேன். ஷோபனா எம்.பி.ஏ. சேர்ந்தாள். என்னை நன்றியுடன் பார்த்தாள். அது போதும் எனக்கு.

**எம்.**பி.ஏ. முடித்ததும் ஷோபனாவுக்கு நல்லதொரு வேலை கிடைத்தது. கமலா சொன்னாள், "ரெண்டு பேரும் வேலைக்குப் போறீங்க.. கல்யாணத்தை சட்டுன்னு முடிச்சிட வேண்டியதுதானே..." என்று. ஷோபனா பி.பி.ஏ. படிக்கும் போது ஷோபனாவின் அம்மா இறந்து விட்டாள்.

ஷோபனா கல்யாணத்தைப் பற்றி எதுவும் பேசாமல் இருந்தாள். "நீ என்னம்மா சொல்றே..." என்று கேட்டேன். "கொஞ்ச நாள் போகட்டும் மாமா... இப்பத்தானே வேலைக்கு போறேன்" என்றாள்.



"ஏப்ரல்ல பெய்யற மழையை விட அக்டோபர்ல பெய்யற மழை அழகா இருக்கா? அது எப்படி?"

"அது கோடை மழை; இது 'பருவ' மழையாச்சே!"

— இரா. முத்துவேல்

"கொஞ்ச நாள்னா எவ்வளவு.... நீ அந்த கணேஷை கல்யாணம் பண்ணிக்கிற வரையா?" என்று கேட்டான் பாஸ்கர்.

"யார் அந்த கணேஷ்?" கமலா கேட்டாள்.

"அவளோட காதலன். சுயமா சம்பாதிக்க ஆரம்பிச்சதும் தன் வழிய பார்க்க ஆரம்பிச் சிட்டா... நம்மை தூசியா நினைக்கிறா..."

"இல்ல... நா அப்படி நினைக்கில" தடு மாறினாள் ஷோபனா.

"உண்மையா ஷோபி?" கேட்டேன்.

"மாமா... என்னை மன்னிச்சிடுங்க... கணேஷ் கம்ப்யூட்டர் சென்டர்ல அறிமுக மானார். அவரைப் பார்க்கும் முந்தின வினாடி வரை- பாஸ்கரைத்தான் நா கல்யாணம் பண் ணிக்க நினைச்சேன். எனக்கு இவர் மீது விருப் பம் இல்லாட்டியும் கூட, விசுவாசத்தினால்... ஆனா கணேஷ் என் மனதில் மாறுதலை உண்டு பண்ணிட்டார். நா அவரை நேசிக் கிறேன். நா அவரை கல்யாணம் பண்ணிக்க..." என்று முடிக்க வில்லை - பாஸ்கர் அவளை அறைந்தான். அதிர்ந்தேன்.

"இதுக்குதான் நா தலைல அடிச்சிகிட் டேன். இவள ரொம்பப் படிக்க வைக்காதிங்க என்று.... நம்மை மீறிப் போயிட்டா... நம்மள இளிச்சவாயனாக்கிட்டா..."

"அம்மா... இவ என்னைத் தவிர்த்து வேறு எவனையும் கல்யாணம் பண்ணிப்பாளான்னு பார்த்துடுவோம்" என்று தோள் தட்டினான் பாஸ்கர்.

எனக்குக் கோபம் வந்தது. எல்லோரையும் அடக்கி வைத்து விட்டு ஷோபனாவிடம் சொன்னேன். "ஷோபி... உன் பாதை சரியோ, தவறோ என்று சொல்ல எனக்கு உரிமை இல்ல... என்ன சொல்றதுன்னும் எனக்கு தெரி யலை... இனி இங்க இருந்தா உனக்குத்தான் ஆபத்து. உன் சினேகிதி வீட்டில் தங்கிக்கோ... உன்னை விரட்டுறேன்னு நினைக்காதே... உன் நம்மைக்குத்தான்."

அன்று போன ஷோபனா, இன்று திரும்ப என்னைச் சந்திக்க...

**ரி**சப்ஷனில் இருந்த நீண்ட சோபாவில் ஷோபனா உட்கார்ந்து இருந்தாள். ஒரு மாசம் இருக்குமோ- ஷோபனா போய்... இருக்காது.. இருபது நாள் இருக்கும். இருபது நாளாய் ஷோபனாவோடு போனில் கூடப் பேசாமல் இருந்து விட்டேனே. எனக்கே என் மீது கோபம் வந்தது. ஷோபனா சுவரில் இருந்த வால் பேப்பரைப் பார்த்து கொண்டு இருந்தாள்.

என்னைப் பார்த்ததும் அவள் கண்களில் ஒரு பிரகாசம்... "மாமா..." என்று எழுந்தாள். "என்னம்மா" என்று உட்கார்ந்தேன். என் பக் கத்தில் ஷோபனா உட்கார்ந்தாள்.

"சௌக்கியமா ஷோபி... இத்தனை நாள் உன்கிட்டே போனில் கூட நான் பேசாம இருந்

ட்டேன். உன் மேல் எனக்கும் வெறுப்பு ஏற்படுதான்னு தெரியல."

"மாமா.. உங்களுக்கு யாரையுமே வெறுக்கத் தோணாதே.. எல்லோரையும் நேசி... பகைவனா இருந்தாலும் அன்பு செலுத்தத் தயங்காதேன்னு சொல்லுறவர்..." என்றவள் என்னைப் பார்த்தாள்.

"உண்மைதான் ஷோபி... ஆனா எல்லா நேரத்திலயும் மனிதன் அப்படி இருக்கறது இல்லையே... சில சமயம் வெறுக்கவும் தானே நினைக்கிறோம்."

"என் மேல உங்களுக்கு கோபம் கிடையாதே... எத்தனை சுலபமா இவள் நம்மை ஏமாத்திட்டாளேன்னு?" குனிந்து கொண்டாள். நான் சிரித்தேன்..

"ஷோபி... நீ போனது ஏமாத்தம் தான். ஆனா கோபம் கிடையாது. எனக்கு உள்ள ஆசாபாசங்கள் போல் உனக்கும் இருக்குமே... நான் நினைப்பது மாதிரியே நீயும்; நீ நினைப்பது மாதிரியே நானும் இருக்கணும்னு கட்டாயமா... சாத்தியமா... எங்கள் விருப்பங்கள் உனக்குப் பிடிக்கல... விலகிப் போயிட்டே... இதுல உன் மீது கோபப்பட நாங்க யாரு? பிறர் படலாம்! ஆனா நா என்றுமே என் மருமகளை நேசிக்கிறேன்...!"

"மாமா... பாஸ்கரை நா கல்யாணம் பண்ணிக்கிட்டு இருந்தா என்னால் ஒத்துப் போக முடியாது. அவர் முரடர்... கோபக்காரர். காலம் முழுக்க பயந்து பயந்து தான் வாழணும்.. அவர்கிட்ட இருந்து தப்பிக்க நா காதலிக்கவில்லை... காதல் தானாக ஏற்பட்டது."

"சமாதானம் வேண்டாம் ஷோபி... நீ அந்தப் பையனை மணப்பதில் எனக்குப் பூரண சம்மதம்..."

"அவர் நல்லவர் மாமா..."

"........"

"மாமா... நா என் சினேகிதி வீட்டில் தங்கி இருக்கேன். அவ சொல்றா– "நா துரோகியாம்! நா பாஸ்கரை மணப்பது தான் சரி என்று சொல்றா..."

நான் சிரித்தேன்.. "நீ என்னம்மா சொல்றே.."

"எனக்கு குழப்பமா இருக்கு... காலம் முழுக்க, பிறர் வயிற்றெரிச்சலில் நா சந்தோஷமா இருக்க முடியுமா?"

"பிறர் என்பது யார்? உன் அத்தையும் பாஸ்கரும் தானே... அவங்க யார் நல்லா இருந்தாலும் வயிற்றெரிச்சல் படுவாங்க. நீ அதை ஏன் பெரிசு படுத்தறே..."

ஷோபனா மௌனமானாள். ஆனால் எதையோ பேச எண்ணித் தவிர்ப்பது போலும், சொல்ல முடியாமல் தவிப்பது போலவும் பட்டது.

"மாமா..." திரும்பத் தடுமாறினாள்.

"என்னம்மா.. கல்யாணத்துக்கு என்னை எல்லாம் கூப்பிடுவியா... இல்ல மறந்துடுவியா."

ஷோபனா வெட்கத்துடன் சிரித்தாள்...



"அந்த பத்திரிகை ஆசிரியர் சுயநலவாதின்னு எப்படி சொல்றே?"

"நான் அனுப்பற ஜோக்கையெல்லாம் அவர் மட்டும் படிச்சு மகிழ்ந்துட்டுக் குப்பைத் தொட்டியில போட்டுடறார். பத்திரிகையில் பிரசுரிச்சு வாசகர்களை ரசிக்க வைக்கலையே!"

— பாஸு

"நீங்கதான் பஸ்ட்."

"காண்டீன்ல ஏதாவது சாப்பிடலாம்மா.."

"இல்ல மாமா... டைம் ஆயிடுச்சு... உங்கள பார்க்கணும் போல் இருந்தது. அதான் வந்தேன்..." என்று எழுந்தாள்.

"கிளம்பிட்டியா..." என்று எழுந்தேன்.

"ஆமா... மாமா..." என்று இன்னும் எதற்கோ தயங்கினாள். "தயங்காம கேளும்மா."

"மாமா... நா சொல்றதை தப்பா எடுத்துக்கக் கூடாது.."

"சொல்லும்மா..."

"மாமா... என் சம்பளத்தில் ஒரு தொகையை மாசாமாசம் உங்க பேருல டெபாசிட் பண்றேன்... உங்க எதிர்காலத்துக்காக... மறுக்காமல் ஏத்துக்கணும்."

"செஞ்சதை திரும்ப தர்றியா?"

"தரணும்னு நினைச்சாலும் முடியுமா மாமா... இந்த அஞ்சடி உயரத்தோற்றம், என் எம்.பி.ஏ. படிப்பு– இதெல்லாம் தர முடியுமா" என்று என் தோளைத் தொட்டு அழுதாள்.

"உங்களுக்கு ஏதாவது செய்யணும்னு தோணுது.."

"எந்த எதிர்பார்ப்பும் இல்லாம தான் உன்னையும் ஒரு பொண்ணா, என் பொண்ணா நினைச்சுதான் வளர்த்தேன். காலம் நம்மைப் பிரிச்சது."

"அப்போ, பொண்ணு தந்தா வாங்கிக்க மாட்டிங்களா?"

"சரி. தேவைப்பட்டா கேட்கறேன். இப்ப ஏன் அந்தப் பேச்சு?"

"அப்போ நா வர்றேன் மாமா."

"ம்... என்னை மறந்துடாதே.. கல்யாணத்துக்குக் கூப்பிட!"

ஷோபனா திரும்ப சிரித்தாள். எனக்கும் சந்தோஷமாய் இருந்தது. ஆனால் என்ன... எதையோ இழந்த மாதிரியும் இருந்தது. வீட்டிலும் சரி... மனசிலும் சரி... அதுதான் சங்கடமாய் இருந்தது.

# 19

**வெ**றுமனே கணவனிடம் சென்று "உங்கள் ரகசியம் வெளிப்பட்டு விட்டது. என்ன விஷயம்?" என்று சாதாரணமாகக் கேட்க உதயரேகாவுக்கு மனமில்லை.

திட்டமிட்டு, இந்த மாதிரி ஒரு நாடகம் நடத்தியவன், குட்டு உடைபட்டுப் போனால் என்ன செய்வது என்று யோசித்து, அதற்கும் ஏதேனும் ஒரு பதில் வைத்திருக்கக் கூடும். 'உன் தந்தை வருமானவரி இலாகா அதிகாரி என்பதால் பயந்து நல்லவிதமாய்க் காட்ட ஏதோ கதை விட்டிருக்கிறாள் நளினி' என்று கூட சமாளிக்கக்கூடும். அதனால், கிருஷ்ணசந்திரனைச் சற்று அதிர வைத்தால்தான் உண்மை வெளிவரும் என்று எண்ணினாள்.

அத்தோடு, இத்தனை நாட்கள் தன் மிக நெருங்கிய உறவினரை அவன் எவ்வளவு கலங்க வைத்திருக்கிறான்? பதிலுக்கு அவனும் கொஞ்சமாவது பட வேண்டாமா?

தொடர்ந்து சில நாட்களாக, கிருஷ்ணசந்திரன் வீடு திரும்பும் வேளையில் உதயரேகா வீட்டில் இருப்பதில்லை. 'வர நேரமாகும்' என்ற குறிப்பு மட்டும் டீபாய் மேல் இருக்க, மெய்யாகவே வெகுநேரம் கழித்தே வீட்டுக்கு வந்தாள். ஒன்பதரை, பத்து, பத்தரை என்று அவள் திரும்பி வரும் நேரம் மேலும் மேலும் தாமதமாகிக் கொண்டே போயிற்று. அப்படித் திரும்பி வரும் போதும், ஹாலில் டீ.வி. பார்ப்பவன் போல அமர்ந்து காத்துக் கிடந்தவனைக் கண்டு கொள்ளாமலே ஹாலைத் தாண்டி, அவளது அறைக்குள் சென்று கதவடைத்தாள்.

தான் நடந்து கொண்ட முறையால், மனைவியிடம் எதையும் கேட்க முடியாமல் கிருஷ்ணசந்திரன் திணறுவதை நன்றாகவே புரிந்து கொண்ட உதயரேகா, மேலும் மேலும் அதிநாகரீக ஆடைகளும், அதிகத் தாமதமுமாகக் கணவனின் பொறுமையை சோதித்தாள்.





**நா**லு நாட்களுக்கு மேலாகக் கிருஷ்ணசந்திரனால் தாங்கமுடியவில்லை போலும்.

ஐந்தாம் நாள், அவளது அறையை நோக்கிச் சென்ற மனைவியை நிறுத்தி, "ரொம்பவும் தாமதமாகி விட்டிருக்கிறது, உதயரேகா" குரலில் லேசான கண்டனத்துடன்.

மணிக்கட்டைத் திருப்பிப் பார்த்துவிட்டு, "ஆமாம். கொஞ்சம் நேரமாகி விட்டது போலத்தான் தெரிகிறது" என்று சாதாரணமாக உரைத்தபடி நடையைத் தொடர்ந்தாள் உதயரேகா.

"ஏன் இவ்வளவு நேரம் ஆயிற்று?" என்று முயன்று, உணர்ச்சி நீக்கிய குரலில் வினவினான் கணவன்.

அவள் பேசாமலே செல்லவும், "நான் கேட்டுக் கொண்டு இருக்கிறேன்" என்றான் அழுத்தத்துடன்.

நின்று, திரும்பி, அவனை ஏறிட்டுப் பார்த்தாள் உதயரேகா. "செய்ய முனைந்திருக்கும் வேலை மிகவும் முக்கியமானது. நாசூக்கானதும் கூட. அதனால் நேரத்தைப் பெரிதாக நினைக்க முடியவில்லை" என்றாள் நிதானமாக.

முன்போல ஏதேனும் போட்டியில் கலந்து கொண்டிருக்கிறாளோ என்று தோன்றவும், இறுக்கம் தளர, "அப்படி என்ன வேலை?" என்று கேட்டபடி அவளருகே வந்தான் கிருஷ்ணசந்திரன்.

"உங்கள் வேலைதான்!"

"என் வேலையா?" என்று வியந்தான் அவன். "என்ன அது?"

தோளைக் குலுக்கி, முகத்தில் வருத்தம் காட்டி, உச்சுக் கொட்டினாள் உதயரேகா. "நீங்களானால் விவாகரத்து, விவாகரத்து என்கிறீர்கள். காரணமாக இதை வைத்துக் கொள், அதை வைத்துக் கொள் என்று வேறு விரட்டுகிறீர்கள்... நான் உங்களை ஏன் மணந்து கொண்டேன், நினைவிருக்கிறதா? அத்



தையை மகிழ வைப்பதற்காக. இப்போது, இப்படி ஒரு காரணத்தைச் சொல்லி மணவிலக்கு கேட்டால், அவர்களுக்கு எப்படி இருக்கும்? அத்தோடு..."

"அத்தோடு?"

"எவ்வளவோ செலவு செய்து சிறப்பாக எனக்கு என் பெற்றோர் திருமணம் செய்து வைத்தார்கள். நாலு மாதம் முடியுமுன் சுவரில் அடிபட்ட பந்து மாதிரி வேறே கதியில்லை என்று மீண்டும் அவர்களுக்குச் சுமையாகப் போய் நிற்க எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை..."

"அதற்காக?"

விழிகளை விரித்து அப்பாவியாய் அவனை நோக்கியபடி உதயரேகா மேலே பேசினாள். "யோசித்துப் பாருங்கள்; இதற்கெல்லாம் ஒரே தீர்வு, நான் வேறு திருமணம் செய்து கொள்வதுதான். இல்லையா?" என்று அவளுடைய கணவனிடமே கேட்டாள்.

ஒருகணம் அவனது பார்வை விலகி மீண்டது. "அதற்கும் தாமதமாக வீடு திரும்புவதற்கும் என்ன சம்பந்தம்?"

"இருக்கிறது" என்றாள் மனைவி. "பாருங்கள், ஒரு தரம் நான் தேர்ந்தெடுத்த மாப்பிள்ளை சரியில்லை; அதனால் இனி நீங்களே எனக்கு ஒரு கணவனைத் தேடுங்கள் என்று என் தந்தை முன் தலைகுனிந்து நிற்க என்னால் முடியாது. நான் ரோஷக்காரி. தெரியுமில்லையா?"



பேசாமல் அவளைப் பார்த்துக் கொண்டு கிருஷ்ணசந்திரன் நிற்க, உதயரேகா தொடர்ந்தாள். "அதனால், எனக்குப் பொருத்தமாய் - எல்லாவிதத்திலும் பொருத்தமாய் ஒருவரைத் தேடிக் கொண்டு இருக்கிறேன். முன்போல, ஏதேதோ நல்லவிதமாய் எண்ணி ஏமாந்து விடக்கூடாது இல்லையா? சல்லடை போட்டுச் சலிக்கிறேனாக்கும்! முதலில் தோற்றப் பொருத்தம் வேண்டும். என்னோடு கூடச் சேர்ந்து பேசத் தெரிய வேண்டும். அப்பாவின் அந்தஸ்து, வசதிக்காக வாயைப் பிளப்பவனாக இருக்கக் கூடாது. சுயமாகவே பணம் உள்ளவனாக இருக்க வேண்டும். ஏனென்றால், என்னாலெல்லாம் குண்டு சட்டியில் குதிரை ஓட்ட முடியாதுப்பா!"

ரமணி சந்திரன்

அவன் தொடர்ந்து மவுனம் காக்க, அவள் நிறுத்தவே இல்லை. "பஸ் நிறுத்தம், கடற்கரை இதுமாதிரி இடங்களில் வரன் தேட எனக்கு விருப்பம் இல்லை. அங்கே பார்த்து, ஆட்களை ரகம் பிரிக்கவும் எனக்குத் தெரியாது. அதனால், கொஞ்சம் பசை உள்ளவர்கள் வந்து போகும் இடமாகப் பார்த்து நைட் கிளப், நைட் கிளப்பாக, எனக்குச் சரியாக ஒருவனைத் தேடுகி... அதாவது, நேற்று வரை தேடினேன். இன்று தான்..."

ஓசையற்று ஒரு பெரிய மூச்சை உள்ளிழுத்துக் கொண்டு மீண்டும் தொடங்கினாள்.

கைப் பையின் மணி வேலைப் பாட்டை வருடிப் பார்த்தபடி, "சில பேர் மாதிரி கணவனாகும் தகுதியே இல்லையோ என்று சந்தேகப்படுகிற மாதிரி இல்லாமல், சேர்ந்து ஆடும்போதே வினோத் என்னவெல் லாம் செய்கிறார் தெரியுமா... ஆ..?!'' என்று முடித்தாள்.

தீப்பட்டாற்போலக் கன்னம் எரிய உதய ரேகா அதிர்ந்துதான் போனாள்.

அவளது கடைசி வாக்கியத்தை அவளே, உள்ளூர அருவருத்துக் கொண்டேதான் சொன் னாள்.

சண்டிமாட்டைக் கிளப்பத் தார்க் கோலால் குத்துவது போல, கிருஷ்ணசந்திரனை உசுப்பி விடவும் ஏதாவது அவனைக் கூட அதிரச் செய்யும்விதமாக செய்தே ஆக வேண்டியிருந் தது. நாசூக்கு, நாகரீகம், நாணம் என்ற எல்லா வற்றையும் ஒதுக்கி விட்டுப் பேச நேர்ந்தது.

அப்போதும், இந்தக் குத்தலின் வலி தாளா மல் சீற்றம் கொண்டு, தன்னை மீறி, 'என் னையா இந்த வார்த்தை சொன்னாய்? நிலைமை தெரியுமா?' என்று தன் காரணத்தை வெளிப்படுத்தி விடுவான் என்று எதிர்பார்த் தாளே தவிர, கணவன் கைநீட்டும் அளவு பொங்கி விடக்கூடும் என்று உதயரேகா சற்றும் எண்ணிப் பார்க்கவில்லை.

நினைவு தெரிந்த நாளில் இருந்து அவளை இந்த மாதிரி அடி, உதை என்று யாருமே நடத்தி உதயரேகா அறியாள். தாய் வழித் தாத்தா, பாட்டி, தந்தை, சிற்றன்னை என்று எல்லோருமே அவளை ஓர் அரசியாக நடத் தித்தான் அவளுக்குப் பழக்கம்.

அனுபவித்தறியாத இந்த அவமதிப்பு அவளைத்தான் தன்னை மறக்கச் செய்து விட்டது.

முகம் சிவக்க, "என்னையா அடித்தீர்கள்? ஆகா! ஒருவழியாக என் புருஷன் உரிமையோடு என்னைத் தொட்டு விட்டான் என்று அக மகிழ்ந்து போவேன் என்று நினைத்தீர்களா? இந்த ஒரு தடவை, போனால் போகிறது என்று விடுகிறேன். இன்னொரு தரம் இப்படிக் கையை நீட்டினீர்கள் என்றால், இரண்டு பங்கு திருப்பிக் கொடுத்து விடுவேன், ஜாக்கிரதை!" என்று சீண்டப்பட்ட புலிக்குட்டியாய்ச் சீறினாள்.

வியந்து நோக்கி, "நீ... என்னை..?!" என்றவன், தன்னை மீறிய முகத்தில் முறுவல் படரத் தலையசைத்தான். "இல்லை. இனி இதுபோல் நடவாது. இப்போது நடந்தது.. ஸாரி. விட்டு விடு. ஆனால் இப்போது, குடும்ப கவுரவம், மான ஈனம் பற்றிக் கொஞ்சம் பேசலாமா?" என்று கேட்டான்.

இன்னமும் அவளது சினம் முழுமையாகத் தணியவில்லை. "தாராளமாகப் பேசலாம். ஆனால் ஒருவர் பேசும் போது, மற்றவருக்குப் பேச வாய் இருக்கும் போது, வாய்ப் பேச்சோடு மட்டும் நிற்க வேண்டும் என்று மட்டும்தான் சொல்கிறேன். பேசுவதற்குக் கையால் ஆகாமல், கையால் பேசக் கூடாது அவ்வளவுதான்'' என்றாள் மிடுக்காக.

"அதற்குத்தான் 'ஸாரி' சொல்லி விட் டேனே. அதை விட்டு மேலே பேசலாமா?" என்றான் அவன் மெதுவாக.

"பேசலாம் பேசலாம். குடும்ப கவுரவம் பற்றித்தானே பேச வேண்டும் என்கிறீர்கள்? அது பற்றி இப்போது பெரிதாக என்ன பிரச்னை வந்து விட்டது?'' என்றாள் அவள் எடுப்பாகவே.

"அது உனக்கே தெரியும்."

"எது...? ஓ, நான் இரவில் வெளியே சுற்று வதா? அப்படிப் பார்த்தால் உங்களால் அழி யாத மானமா என்னால் அழிந்து விடப் போகிறது? ஆண் என்றால் விருப்பம் போல ஆடலாம்; பெண்தான் குடும்ப கவுரவத்தைக் கட்டிக் காக்க வேண்டியவள் என்றெல்லாம் கூற வேண்டாம். கற்பு, மானம் எல்லாவற் றையும் இரு கட்சிக்கும் பொதுவில் வைத்து வெகுகாலம் ஆகிவிட்டது. பெருமை காப்பவள் பெண்தான் என்று என்னை மட்டும் பொறுப் பாளியாக்க முடியாது, கூடாது. நீங்களும் சேர்ந்து கவுரவம் காப்பதானால் நானும் ஒத்துழைப்பேன். மற்றபடி என்னைக் கேட்கும் அதிகாரம் யாருக்கும் கிடையாது – நீங்கள் உட்பட" என்றாள் உதயரேகா கறாராக.

தோல்வியை ஒத்துக் கொள்கிறவன் போலக் கிருஷ்ணசந்திரன் கைகளை உயர்த்தவும், "நல்லது" என்றாள் அவள் திருப்தியோடு.

தொடர்ந்து, "இனிக் கஷ்டப்பட்டு ஆள் பிடித்து, சமையல்காரனுக்கு லீவு கொடுத்து அனுப்பி, வேலையாள் வெளியே போகிற நேரம் பார்த்து உள்ளே கூட்டி வருவது, கண் மறைந்ததும் உடன் பிறந்தோன் ஆவது, ஒரு

---

**"நம்ம தலைவர் நேற்றிலிருந்து ஏன் வானத்தையே பார்த்துக்கிட்டு இருக்கார்?"**

**"யாருக்கும் தெரியாம பிளாட் போட்டு விற்கத்தான்!"**

**— வி. கௌரி**



வரும் அறியாமல் வெளியேற்றி ஒதுக்குப் புறமாய்க் காசைக் கொடுத்து இறக்கி விடுவது எல்லாம் தேவைப்படாது!" என்றாள் வெகு சாதாரணமாக.

திகைப்புற்று நிமிர்ந்தவன், மீண்டும் தன்னை மீறி முறுவலித்தான். லேசாகத் தலையசைத்து, "இவ்வளவு புத்திசாலியாக நீ இல்லாமல் இருந்திருக்கலாம் உதி" எனறான் சற்று வருத்த மான குரலில்.

பளீரென அவள் முகம் பிரகாசமுறவும், அவளை இரக்கத்துடன் நோக்கி, "இதனால், எல்லாம் சரியாகி விட்டது என்றோ, நாம் இருவரும் இனி இணைந்து வாழ்வோம் என்றோ நினைக்க வேண்டாம். அது ஒரு நாளும் நடக்க முடியாதது. தயவுசெய்து அனா வசியமாய் வீண் கற்பனைகளில் இறங்க வேண் டாம் உதயா" என்றான் அவன் பழைய குரலிலேயே தொடர்ந்து.

கணவனுக்கும் இதில் வருத்தம் இருப்பதை உணர்ந்து வியப்படைந்து, "ஏன் என்று தெரிந்து கொள்ளலாமா?" என்று மெதுவாகக் கேட்டாள் மனைவி.

மறுதலிப்பாய்த் தலையசைத்து விட்டு, "ஆனால், இந்த முடிவு தவிர்க்க முடியாத தோடு மாற்ற முடியாததும் கூட என்பதை மட் டும் நிச்சயமாகத் தெரிந்து கொள்" என்றான் கிருஷ்ணசந்திரன் தீர்மானமாக.

வருத்தத்துடன் விரும்பி ஏற்பது என்றால் இது எதற்காக ஏற்ற தியாகம்? ஒருவேளை...

சிறு மவுனத்தின் பின், "மேலே உன் முடிவு என்ன?" என்று கேட்டான் கிருஷ்ணசந்திரன்.

சற்றே திடுக்கிட்டு, "எதைப் பற்றி?" என்று கேட்டாள் அவள்.

"நம் பிரிவு பற்றி" என்றான் அவன் சுருக்க மாக.

"கணவன் மனைவி என்றால் பாலுறவு மட்டும்தானா வாழ்க்கை? சொல்லுங்கள், நான் இந்த வீட்டில் இருப்பது உங்களுக்கு வெறுப் பாய் இருக்கிறதா?"

"என்ன கேள்வி இது?" என்று அவன் சிறு சினம் காட்டவும், "பின்னே, பிரிவு, பிரிவு என்று அதைப் பற்றியே பேசுவானேன்? ஒரு வருக்கொருவர் நல்ல நண்பர்களாக, நாம் இரு வரும் இதே வீட்டில் வசிக்க முடியாதா?" என்று அவனை நேராக நோக்கி வினவினாள் அவள்.

கணவன் முகத்தில் இறுக்கம் குறைந்தாற் போல ஓர் எண்ணம் அவளுக்கு.

ஆனால், "ஓ.கே. உன் இஷ்டம்" என்று அவள் முடிவில் தனக்கு ஒன்றுமில்லாதது போலக் காட்டிக் கொண்டான் அவன்.

"ஆனால் ஒரே ஒரு நிபந்தனை. என்னு டைய சில விஷயங்களில் நீ தலையிடக் கூடாது. அதற்குச் சம்மதம் என்றால் பிரிவு பற்றி நான் பேசத் தேவையே இராது."

ஒப்புதலாய்த் தலையசைத்து விட்டு அவனையே பார்த்திருந்தவள், சில வினாடிகள் சென்றதும், "அவ்வளவுதானா?" என்று கேள்வி யாய்ப் புருவங்களை உயர்த்தினாள்.

சற்றே முகம் சிவந்து, "நீ இங்கேயே இருப் பதில் எனக்கும் சந்தோஷமே. நன்றி" என்றான் கணவன்.

மகிழ்ச்சியோடு முறுவலித்து விட்டு அறைப் பக்கம் திரும்பியவள், ஒன்று தோன்றவும் சட்டெனத் திரும்பி, "பாவம் அத்தை, மாமா, வசு எல்லாரும். உங்களை நினைத்து ஏகப்பட்ட கவலை அவர்களுக்கு. அந்தக் கெட்ட பழக் கங்கள் ஒன்று கூட உங்களுக்குக் கிடையாது என்று அவர்களிடம் சொல்லி விடலாமா?" என்று ஆவலோடு வினவினாள்.

அவளை ஒரு மாதிரிப் பார்த்து விட்டு, "இடத்தைக் கொடுத்தால் மடத்தைப் பிடுங் குவீர்களே! இதற்காகத்தான் கொஞ்சம் கூட இடம்கொடுக்கக் கூடாது என்பது. கவனி, உதயா. சில விஷயங்களில் நீ தலையிடக் கூடாது என்றேனே; என் தந்தை, தாய், தங்கை அதிலே அடக்கம். நன்றாக நினைவில் வை" என்றான் அவன் கடினமான குரலில்.

வியந்து நோக்கிய போதும் வாதாடாமல் ஒத்துக் கொண்டாள் உதயரேகா. "ஓகே, பாஸ்!" என்று கைகளால் வாய் பொத்தி அவள் கண் ணால் சிரிக்கவும், அவன் முகத்திலும் குறுநகை மலர்ந்தது.

அன்றிலிருந்து அவர்கள் வாழ்வில் ஒரு புதிய சகாப்தம் மலர்ந்தது. அப்போதுதான் அவர்களது வாழ்வின் முக்கியமான திருப்ப மும் நிகழ்ந்தது.

(தொடரும்)

---

**"அந்த டாக்டர் போலின்னு நினைக் கிறேன்!"**

**"எப்படி?"**

**"முதலில் கடுமையான ஜுரம்னு சொன்னேன், உடனே வாயில் தெர்மா மீட்டரை சொருகி டெம்பரேச்சர் பார்த்தார்!"**

**"சரிதானே?"**

**"அப்புறம் இதயம் வேகமா அடிச்சுக்குதுன் னேன். உடனே மார்பில் ஸ்பீடாமீட்டரை வெச்சு பார்த்தாரே!"**

**— பாஸு**





# ஒண்டுக் குடித்தனம்

'ஒண்டுக்குடித்தனம்' என்பது சிற்சில சுவாரஸ்யங்களுடன், சங்கடங்கள் நிறைந்த விஷயம் என்று அசோகனுக்குத் தோன்றிற்று.

அவன் வீட்டில் இருவர்தான். மனைவியும் அவனும். ஓரளவு பிரச்னை இல்லை என்று தான் தோன்றும், மற்ற குடித்தனக்காரர்களு டன் ஒப்பிடுகையில்.

ஆனாலும் சில குறைப்பாடுகள் இருக்கத் தான் செய்கிறது.

அதிகப்படியான விருந்தினர் எவரேனும் வந்தால் வீடு தாங்க இயலாது போகிறது. வராந் தாவில் தான் ஆண்கள் படுத்துறங்க வேண்டிய தாகிறது.

தவிரவும்,

நண்பர்கள் எவரையும் 'பெருமையாய்' வீட் டுக்கு அழைத்து வருதல் இயலாத விஷயமா யிற்று.

இது போதாதென்று, மனைவி இன்று காலையில்தான் அதைச் சொன்னாள்.

"ஊர்லேர்ந்து லெட்டர் வந்திருக்குங்க."

"எதுவும் விசேஷம் உண்டா?"

"தம்பி வர்றேன்னு எழுதியிருக்கான்."

"என்ன இப்ப லீவா அவனுக்கு?"

"இல்லீங்க. அவனுக்கு இங்க மெட்ராஸ் லயே இன்ஜினியரிங் காலேஜ்ல இடம் கிடைச் சிருக்கு."

"அடடே, சந்தோஷமான விஷயந்தான்."

"இங்கதான் தங்கிப் படிக்கணும். ஹாஸ் டல், அது இதுன்னா செலவு என்னாகுங்க? பேசாம நம்ம கூடயே இருக்கச் சொல்லலா மேன்னு..."

"சொல்லலாம்தான். எனக்கும் ஆசைதான். என்ன பண்றது? இந்த 'துக்கிளியூண்டு' எடத் துல சரிப்பட்டு வருமா?"

அவன் சொல்லிய பிறகும் அவள் விட வில்லை. விதண்டாவாதம் புரிந்தாள். ஆத்திரம் பொங்கிற்று அவனுக்கு. 'உள்ளதைச் சொன் னால் ஏன் இவளுக்குப் புரிய மாட்டேன் என்கிறது' என்று தோன்றிற்று.

வாக்குவாதம் முற்றி சச்சரவாக மாற வேண்டிய நிலையில் அவன் வெளிநடப்புச் செய்தான். இன்னும் கொஞ்ச நேரம் இருந் தால், சண்டை வரும். பிறகு, வேடிக்கை பார்க் கக் கூட்டம் வரும். பலர் இதற்காகவே ஜன் னல் பக்கம் காத்திருக்க வேண்டி வரும்.

அதனாலேயே, இம்மாதிரி சந்தர்ப்பங் களைத் தவிர்த்து விடுவது அவன் வழக்கம்.

வெளியில் போய் ஒரு டீயைக் குடித்து விட்டு, எங்கெங்கோ உலாத்தி விட்டு மறுபடி வீடு திரும்பிய போது, மனைவி வாந்தி எடுத் துக் கொண்டிருந்தாள்.

என்னாயிற்று?

அசோகனுக்குப் பதறிற்று.

"என்னாச்சும்மா?"

தலையை ஆதரவாகப் பிடித்த போது, அவள் முகத்தில் வெட்கம் கலந்த புன்னகை யைப் பார்க்க முடிந்தது. தலைகுனிந்தபடி, சுவ ரில் தொங்கிய காலண்டர் 'குழந்தையைக்' கைகாட்ட, மனசு சந்தோஷத்தில் கூத்தாடிற்று. "இனிமே பாரு, ஒரு வேலை நீ செய்யக் கூடாது. எல்லாம் என் பொறுப்பு" என்று குதூ கலிக்க வைத்தது.

இந்த சின்னஞ்சிறிய வயிறு இனி ஒரு குழந் தையைச் சுமக்கப் போகிறது. ஒரு குட்டிக் கண் ணனையோ, மீராவையோ உருவாக்கப் போகி றது.

"அட ஒண்டுக் குடித்தனத்தில் மற்றுமொரு ஒண்டுக்குடித்தனம்" என்று கவிதை மாதிரி மனசில் ஏதேதோ தோன்றிய போது, எதுவோ உறைத்தது.

உறைத்தது, எதையோ உணர வைத்தது.

"உன் தம்பி எங்கேயும் போக வேணாம், இங்கேயே நம்ம கூடவே தங்கிப் படிக்கட்டும்." புன்னகையுடன் அசோகன் சொன்ன போது, ஆச்சரியத்துடன் நிமிர்ந்து பார்த்துச் சிரித் தாள் அவன் மனைவி.

— தி. சிவசுப்பிரமணியன்

அடுத்து வந்த சில வாரங்கள் உதய ரேகாவுக்கு மிகவும் மகிழ்ச்சியூட்டுவனவாக அமைந்தன.

காலையில் எழுந்தால், மனைவியுடன் கலந்து உலக விவகாரம் ஆராய்ந்தபடியே, கிருஷ்ணசந்திரன் பத்திரிகை படித்தான். மதியம், உதயாவின் கைப்பாகங்கள் செல்ல, ரசித்து உண்டதாக உடனே டெலிஃபோனில் பாராட்டி, மேலும் ஐந்து பத்து நிமிடங்கள் அரட்டை அடித்தான். மாலையிலும், நண்பன் மணிவாசகத்தை அடியோடு மறந்து, அலுவல் முடிந்ததும் நேராக வீடு வந்தான். அன்றாட நிகழ்ச்சிகளை இருவருமாகப் பரிமாறிக் கொண்டனர். சில் வண்டின் ரீங்காரமும், இடையிடையே மைனாக்களின் தீங்குரலோசையும் போல, அது இது என்று பேசிக் கொண்டே இருக்கவும், இடையிடையே சிரிக்கவும் அவர்களுக்கு இப்போது ஏராளமான விஷயங்கள் இருந்தன. கேலி, கிண்டல்களுக்கும் குறைவில்லை.

இரவு வரை இது தொடர, கடைசியாக உறங்கச் செல்லு முன் உதயரேகா புன்னகையோடு 'குட்நைட்' சொல்ல, அவளது நெற்றியில் புரளும் கூந்தல் சுருளைப் பரிவாய் ஒதுக்கி விட்டு பதில் 'குட்நைட்'டுடன் படுக்கச் செல்வான் கிருஷ்ணசந்திரன்.

சின்ன வயது, நட்பு, சுற்றம், பார்த்தவை, படித்தவை என்று ஒருவரைப் பற்றி ஒருவர் அறியவும், அறிந்ததை அசைபோடவும் இருவருக்குமே ஆர்வம் இருந்ததால் நாட்கள் இறக்கை கட்டிப் பறக்கலாயின.



# மாலை மயங்குகின்ற

ஆயினும், இப்போதும், அவ்வப்போது அறைக்குள் சென்று பூட்டிக் கொண்டு, வெகு நேரம் கழித்து வெளி வருவதைக் கிருஷ்ணசந்திரன் விடவே இல்லை. காரணமாக ஒன்றே ஒன்றை மட்டுமே கண்ட அவன் மனைவியால் இதைச் சும்மா விட்டு விட்டு வாளாவிருக்கவும் முடியவில்லை.

ஒருநாள் இது பற்றி அவள் குறிப்பிடத் தொடங்கும்போதே, ஒரு மாதிரிப் பார்வையுடன் அவன் தலையசைத்து விடவும் மேலே தொடர மாட்டாமல் அவள் பேச்சு நின்றது.

ஆனால் இதை அடியோடு பேசாமல் விடவும் அவளுக்கு மனமில்லை. எனவே வேடிக்கை போல, "ஓகோ, இது தலையிடப் படக் கூடாத விஷயமா? ஓகே! ஓகே!" என்று இலகு போல நகைத்து, "ஆனால், இந்த ஒன்று மட்டும் சொன்னால் கோபித்துக் கொள்ள மாட்டீர்களே? அதை... அதுதான், போதை மருந்து. அதைத் தினமும் எடுக்கிறீர்களா? உடம்பு கெடும், உள்ளுறுப்பு கெடும் என்கிறார்களே; அதற்காகத்தான்... அந்தக் கவலைதான் எனக்கு!" என்றாள் மெதுவாக.

சற்று நேரம் அவளையே பார்த்திருந்தவனின் கண்கள் கனிந்தன. மனைவியின் கையை எடுத்துத் தன் கையில் வைத்து, "என் உடல் நலத்தைக் கெடுக்கும் எதையும் நான்



# நேரம் - 20

உட்கொள்ள மாட்டேன். இது சத்தியம். போதுமா?'' என்று கிருஷ்ணசந்திரன் குரலில் மென்மையுடன் கூறவும் ஒருவாறு உதயரேகாவின் உள்ளம் அமைதியுற்றது.

முன்பு, போதை மருந்து எதையும் பயன்படுத்தவில்லை என்று அவன் சொன்னது மெய்யோ, பொய்யோ? ஆனால், இந்தச் சத்தியத்தின் பின்னர் அதைத் தொட மாட்டான் என்ற உறுதி அவளுக்கு இருந்தது. எனவே நிம்மதியும் உண்டாயிற்று.

**ரமணி சந்திரன்**

மறுநாளில் இருந்து, தன்னோடு கூட வந்து தொழிலைக் கற்றுக் கொள்ளும்படி கிருஷ்ண சந்திரன் மனைவியை அழைத்தான்.

பெண்களைத் தொழிலில் புகுத்தும் வழக்கம் அந்த வீட்டில் இல்லை என்று கண்டிருந்ததால் உதயரேகாவுக்கு இந்த அழைப்பு ஆச்சரியத்தை அளித்தது.

வியப்பும் கேள்வியுமாக நோக்கியவளிடம், ''சும்மா இருப்பவரின் மனம் சைத்தானின் உலைக்களம் என்பார்கள். வீட்டில் போரடித்துக் கிடப்பதால்தானே, போதை, குடி என்று துப்பறியத் தோன்றுகிறது? அப்படி, உருப்படாத விஷயங்களில் வீணாக்குகிற புத்தி, சக்தியை நல்லபடியாக எதிலாவது செலவழிக்கலாமே என்றுதான்!'' என்று சின்னதாக ஒரு குட்டு வைத்தான் அவன்.

அசடுவழியச் சிரித்து விட்டு, வழக்கமான உற்சாகத்துடன், கணவனுடன் சென்றாள் அவள்.

கூடவே இருந்து, மனைவிக்கு அன்றாட வேலைகளைக் கிருஷ்ணசந்திரன் கற்றுக் கொடுத்தான். கொஞ்சம் பழகவும், அவன் வேலைகளில் பெரும் பகுதியை அவ்ளையே செய்யச் சொன்னான். கடைசியாகப் பிரச்னைகளில் முடிவெடுப்பது போன்ற சிக்கலான, நுணுக்கமான விஷயங்களையும் போதித்து, இனி எல்லாவற்றையுமே அவள் பொறுப்பில் விடப் போவதாகவும் கூறினான்.

சற்றுத் திகைத்து, இதுவும் கேலி என்று ஊகித்து, ''அப்படியா சார்? ரொம்ப சரி! ஆனால் உங்கள் வேலையை என்னிடம் தந்து விட்டு நீங்கள் என்ன செய்வதாய் உத்தேசமாம்?'' என்று கிண்டலாக வினவினாள் அவள்.

எழுந்து சென்று ஜன்னல் வழியே வெளியை வெறித்தான் கிருஷ்ணசந்திரன். திரும்பாமலே, ''ஒரு புதிய துறையில் இறங்கப் போகிறேன், உதி. முன்பின் அறியாத களம்'' என்று கூறிய போது, அவன் குரலில் இருந்த தீவிரம் அவளை மேலும் பிரமிக்க வைத்தது.

''அப்படி என்ன புதிய முயற்சி?'' என்று ஆச்சரியத்துடன் வினவிய மனைவிக்கு அவன் பதிலே சொல்லவில்லை.

''மாமாவுக்குத் தெரியுமா? சொல்லி விட்டீர்கள் இல்லையா?'' என்று மேலே அவள் அடுக்கவும் அவன் மெல்லத் திரும்பி, உதட்டின் மேல் விரலை வைத்துக் காட்டி நேராக நோக்கவே, உதயரேகா வாயை மூடிக் கொண்டாள்.

இதுவும் தலையிடக் கூடாததாக்கும்! இவ்வளவு நல்லவன், பெற்றோர் என்றால் மட்டும் ஆளே மாறி விடுகிறானே!

காரணத்தைத் தேடி அவள் மனம் தீவிரமாக வேலை செய்தது.

இடையே அவளுடைய பிறந்த வீட்டார் புது டில்லிக்குக் குடிபெயர்ந்து சென்றனர். அவ்வப்போது டெலிஃபோனில் உதயரேகா

வுடன் அளவளாவினர்.

ஆனால், பிறந்த வீட்டாரின் பிரிவை அதிக மாக உணரத் தோன்றாத அளவுக்குக் கிருஷ்ண சந்திரனைப் பற்றிய எண்ணங்கள் அவள்து இதயத்தை நிரப்பி விட்டிருந்தன. கணவன் மனம் விட்டு பழகத் தொட்ங்கியதிலேயே திருப்தியுற்றிருந்தவள் மேலும் உற்சாகம் கொள் ளும்விதமாக வீட்டில் சிலபல நிகழ்ச்சிகள் நடக்கலாயின.

தங்கைக்கென்று அவள் தைத்து பூவேலை செய்து கொடுத்திருந்த சுரிதார் ஒன்றைப் பார்த்து வசுமதி ஆசைப்பட்டாள் என்று உதய ரேகா நாத்தனாருக்கும் ஒன்றைத் தைத்துக் கொண்டிருந்தாள். வண்ணமணிகளைக் கொண்டு செய்த பூவேலை அது.

புதுமாதிரிப் பலகாரம் ஒன்றை மாலைச் சிற்றுண்டிக்காகச் செய்து வைத்து விட்டு கண வனின் வருகைக்காகக் காத்திருந்த நேரத்தில், வாயிலில் ஒரு கண்ணும் தையலில் ஒரு கண்ணுமாக கீழ் ஹாலில் அமர்ந்து தைத்துக் கொண்டிருந்தவளின் கை எப்படியோ தட்டி விட, மணிக் கிண்ணம் கீழே விழுந்து மணிகள் அங்குமிங்கும் சிதறின. அங்கங்கே கிடந்தவை களைப் பொறுக்கி எடுத்து விட்டு, நீள சோபா விற்குப் பின்புறம் உருண்டு ஓடியவற்றை சோபாவின் பின் சென்று மண்டியிட்டுச் சேகரித்துக் கொண்டிருந்தாள்.

வாயிலில் கார் வந்து நின்று, கிருஷ்ணசந்தி ரன் வேகமாக இறங்கி வருவது கேட்கவும், அவசரமாக எழப் போனவளுக்கு ஒன்று தோன்ற, சோபாவின் பின் மறைந்தாற்போலவே இருந்து விட்டாள்.

கொஞ்ச நேரம் அவளைக் காணாமல் தேடட்டும். அதன் பிறகு வேடிக்கையாகக் கண்டுபிடிக்கச் செய்ய வேண்டும்...

வந்த வேகத்திலேயே படியேறிச் சென்ற வனின் காலடி ஓசை நின்று விடவும், 'அடடா, இப்போதே கண்டு விட்டானா' என்று மெல் லத் தலையை மட்டும் நீட்டிப் பார்த்தவளுக்கு ஓர் அதிசயம் காத்திருந்தது.

மாடிப்படி வளைவில் மாட்டியிருந்த உதய ரேகாவின் படத்தின் முன்நின்று, படத்தில் அவளது கன்னத்தை மென்மையாக வருடிக் கொண்டிருந்தான் அவன்.

உயிருக்கு உயிராய் நேசிப்பவனின் வருடல்! ஒரு நாளும் பிரிய மனம் விரும்பாதவனின் வரு டல் அது!

ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டு இருந்தவளுக்கு உற்சாகத்தோடு உல்லாசமும் பொங்கிப் பெருகலாயிற்று.

இவனால் இன்னும் எத்தனை நாட்கள் இப்படிப் பிரிந்து வாழ முடியும்?!

கடைசியாக ஒரு நெடுமூச்சுடன் அவன் சென்றது கூட அவளுக்கு நகைப்பாய்த்தான் இருந்தது.

இன்னொரு நாள் உதயரேகா, தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தபோது - யோசனை கிருஷ்ணசந்திரனைப் பற்றியதுதான். சிங்கப் பூரிலிருந்து மருமகனுக்கென்று உலகநாதன் வாங்கி வந்திருந்த துணிகளை எந்த மாதிரியில் தைக்கக் கொடுப்பது என்பதுதான் அந்தத் தீவிரமான யோசனை. கண்களை மூடி, ஒவ் வொரு துணியையும் பாக்கெட், பட்டன், அமைப்புகளோடு அவன் உடம்பில் மனதால் அவள் பொருத்திப் பார்த்துக் கொண்டிருந்த போது, திடுமென அருகில் அவன் அவளை உரக்க அழைக்கவும் தூக்கிவாரிப் போட்டுக் கொண்டு திகைப்புற்ற விழிகளை மலர விழித்து அவனைப் பார்த்தாள்.

கனிவுடன் நோக்கி, "சாப்பிடக் கூப்பிட, பதிலே இல்லையே என்று சற்று உரக்க அழைத்து விட்டேன். ஸாரிம்மா. பயந்து விட் டாயா?" என்று கரிசனத்துடன் வினவினான் கிருஷ்ணசந்திரன்.

"சேச்சே. நானாவது பயப்படுவதாவது? சும்மா இந்தக் கால் பாட்டுக்கு ஒரு மூன்று அடி உயரம் துள்ளிக் குதித்து விட்டது. கூடவே இந்தத் தலைமுடியும் சிலிர்த்துக் கொண்டு சிங்கத்தின் பிடரி மயிர் மாதிரி குச்சி குச்சியாய் நிற்கிறது. அதுவும் அதிகம் இல்லை. வெறுமனே ஒரு மூன்றே மூன்று அங்குலத்துக்குத்தான்" என்று அவள் பெரிதாக விவரிக்கவும் அவனுக் குச் சிரிப்பு வந்து விட்டது.

அவளது கூந்தலைத் தொட்டுப் பார்த்து, "இதையா சிங்கத்தின் பிடரி போலக் குச்சி குச்சியாய் என்பது? ரொம்பவும் அநியாயம்!" என்று வருடியவன், கையை எடுக்க மாட்டா தவன் போல மனைவியின் தலைமுடியில் விரல்களை விட்டு அளைந்தான். "என்ன மிருதுவாய், பட்டுப் போல இருக்கிறது, தெரியுமா?"

"எலுமிச்சை, மருதாணி, செம்பருத்தி, இன்னோரன்ன மூலிகைகளால் செய்த கண்டி ஷனர் அடங்கிய ஷாம்பூ... டட்டடாய்ங்...!" என்று விளம்பரம் போல அறிவித்தபடி உதய ரேகா கண்சிமிட்ட, அவளுடன் சேர்ந்து நகைத்



''நுரை இல்லாத காப்பியா கொடுப்பா.''

''ரொம்ப கொஞ்சமா இருக்கேன்னு சண்டைக்கு வரமாட்டீங்களே சார்...?''

– சீர்காழி வி. ரேவதி

டியே தன் கையைப் பிரித்தெடுத்துக் காண்டு, வந்த காரியம் பற்றிக் கூறிவிட்டு கன்றான் கணவன்.

என்னவோ உறுத்தியது உதயரேகாவுக்கு.

அவன் முகத்தில் அது என்ன பார்வை? திலோ தோல்வி நிச்சயப்பட்டு விட்ட ாதிரி... ஓகோ! அய்யாவின் விரதம் உடை ட்ப் போகிறது என்று அவருக்குமே புரிந்து ட்டதா?

உள்ளூரக் குதூகலம் சிறகடித்துப் பறந்தது வளுக்கு.

கிருஷ்ணசந்திரனின் பிரம்மச்சரிய விரதம் ற்றி உதயரேகா இப்போது வேறொரு முடி க்கு வந்திருந்தாள்.

கிருஷ்ணசந்திரனுக்கு இளவயதுக் காதல் ன்று. அவனுடைய பெற்றோர் சம்மதிக்காத ால் அவள் மனம் உடைந்து தற்கொலை சய்து கொண்டாள். இறக்குமுன் தன்னை ன்றி வேறு பெண்ணைத் தொடக் கூடாது ன்று சத்தியம் பெற்றுக் கொண்டு சாகிறாள். றைந்த காதலிக்குக் கொடுத்த சத்தியத்துக்கும், திய மனைவியின் நேசத்துக்குமிடையே ருஷ்ணசந்திரன் ஊசலாடுகிறான்.

கண்முன்னே நிற்கும் மனைவியின் நேசத் ன் முன், என்றோ மறைந்து விட்ட காதலி ின் நினைவு மங்கி மறைந்து கொண்டு இருந் து. அது அடியோடு மறையும் நாள் அதிக ரத்தில் இல்லை!

கணவனின் சிறு வயதுக் காதலைப் பற்றி தயா பெரிதாக ஒன்றும் பொருட்படுத்த ில்லை. தப்பு வழி செல்கிறானென்று அறிந்த ிறகும், அவனைத் திருத்த நல்வாழ்வு வாழத் ானே அவள் ஆசைப்பட்டாள்?

ஆனால் இங்கேயும் ஒன்று இடித்தது.

காந்திமதி அவளிடம் பொய்யுரைக்க ாய்ப்பில்லை. பின்னே கிருஷ்ணசந்திரன் வனுடைய பெற்றோரிடம் கோபம் கொள் க் காரணம் என்ன?

ஒருவேளை அவன் லேசாகச் சொல்லி, வர்கள் அதை சீரியசாக எடுத்துக் கொள்ளு ன் ஏதோ தப்பாய் எண்ணி அவள் மடிந்து ிட, இவனுக்குத் தாய் தந்தையிடம் வெறுப் ாகி விட்டதோ?

தன் வாழ்வு முழுமையாகச் சீரடைந்ததும், தைப் பற்றிக் கூடக் கணவன் தன்னிடம் கூறு ான் என்று நம்பிக்கையோடு உதயரேகா ாத்திருந்தாள்.

இந்தச் சமயத்தில், ஒருநாள் காலையில் வெகு தாமதமாக எழுந்து அறையை விட்டு வெளிவந்தான் கிருஷ்ணசந்திரன். தூக்கமின் க் களைத்திருந்த முகத்தைப் பார்த்ததும்,

''இரவில் ஏதாவது புத்தகம் படித்துக் கொண்டிருந்து விட்டுத் தாமதமாகத் தூங்கினீர் ளா?'' என்று வினவிய மனைவியிடம், இல்லை'' என்று தலையசைத்து விட்டு, ''வசு ின் திருமணம் பற்றி ஒரு முடிவு செய்தேன்.



"நான் எத்தனையோ வாத்தியார்கிட்ட படிச்சிருந் தாலும் என்னோட எட்டாங்கிளாஸ் வாத்தியார்தான் என் னோட உண்மையானகுரு'ன்னு ஏன் தலைவரே அடிக்கடி சொல்றீங்க..?"

"அவர்தானே எனக்கு 'Something is better than nothing'ங்கறதை சொல்லிக் கொடுத்தவர்...!"

- ஆர்.கே.

---

அவளுக்கு விரைவிலேயே திருமணம் செய்து வைத்து விடப் போகிறேன்'' என்று கூறி அவளை வியக்க வைத்தான் அவன்.

அவளது வியப்புக்குக் காரணம் இருந்தது. வசுமதிக்கு இருபது வயது கூட ஆக வில்லை என்ற போதும், செல்வரங்கத்தின் வளமும், பெருமையும், கூடவே பெண்ணின் அழகு, குணமும் காரணமாக ஏற்கெனவே பல பெரிய இடங்களில் இருந்து வந்து பெண் கேட்டிருந்தனர். ஆனால், மகளுக்கு இன்ன மும் குழந்தைத்தனம் மாறவில்லை. குடும்பப் பொறுப்பைத் தாங்க சிரமப்படுவாள்; அதனால் இன்னமும் இரண்டு ஆண்டுகள் கழித்து கல்யாணம் செய்தால் போதும் என்பது வீட்டில் பொதுவாக எடுக்கப்பட்டிருந்த முடிவு. "ஆமாமாம். 'இம்'மென்றால் குடம் குடமாய் வடித்துக் கொண்டு... எல்லாம் பிறகு பார்க்க லாம்'' என்று. அதன் காரணமே பெருமளவுக் குக் கிருஷ்ணசந்திரன்தான் என்று காந்திமதி ஏற்கெனவே மருமகளிடம் கூறியிருந்தார். அவனே அதை இப்போது மாற்றுவானேன்?

காரணத்தை அவள் கேட்ட போது, தங் கைக்கு ஏற்ற கணவன் அவளைப் பொறுப் பாய்ப் பாதுகாத்து, அரவணைத்துச் செல்கிற வன் கிடைத்திருக்கும் போது அதைத் தவற விடுவது தவறு என்றான் கணவன்.

ஆனால், அப்படிப்பட்ட மகானுபாவன் யார் என்று அறிந்த போது உதயரேகா இன்ன மும் ஏகமாய் அதிர்ந்தாள்.

கிருஷ்ணசந்திரனுக்குக் கெட்ட பழக்கங் களே கிடையாது. ஏதோ உப்புப் பெறாத ஒரு சிறு காரணமாய்ப் பெற்றோர், தங்கையிடம் கோபம் கொண்டிருக்கிறான்; அவ்வளவே என்று தான் எண்ணியது தவறோ என்ற சந்தே கம் உதயரேகாவுக்கு இப்போது உண்டாயிற்று.

ஒன்று, தன் வீட்டாரிடம் கொண்டிருந்த கடும் கோபத்தில் அவர்களைப் பழிவாங்க இவன் இப்படி முடிவு செய்திருக்க வேண்டும்; அல்லது, அந்த மணிவாசகத்திடம் ஏதோ ஒரு வகையில் இவன் சிக்கிக் கொண்டிருக்க வேண்டும்!'

(தொடரும்)

# ஒன்றுக்குப் பத்தாய்த் தரும் இறைவன்!



இஸ்லாமிய ஆண்டுமுறையில் முதல் மாதம் தொடங்குவது முகரம் பிறை தோன்று கிற போது. சந்திரனை அடிப்படையாகக் கொண்ட கணித முறையில் ஒவ்வொரு முதல் பிறையிலும் ஒரு மாதம் தொடங்கும். அப்படி ஒன்பதாவது மாதம் தொடங்குவது ரம்தான் பிறை தோன்றிய பிறகு. 'ஹிலால்' என்பார்கள் இந்த முதல் பிறையை! (உர்தூ மொழி வழக்கில் ரம்ஜான்... அரபி மொழி வழக்கில் ரம்தான்.)

இந்த மாதம் முதல் பிறை தோன்றிய போது தொடங்கும் ரம்தான் நோன்பு அடுத்த முதல் பிறை தொடங்கும் போது நிறைவு செய்யப்படு கிறது. 'ஹிலால்' தோன்றி இருபத்தேழு நாட் கள் எல்லா மசூதிகளிலும் சிறப்புத் தொழுகை கள் நிகழும். 27ம் நாள் இரவு - இறைவனால் நபிபெருமானாருக்குத் திருமறை ஓதப்பட்ட புனிதமான நேரம் என்பதால் இந்த மாதம் சிறப்புப் பெறுகிறது.

வெறுமனே பட்டினி கிடப்பது மட்டும் ரம் தான் நோன்பு ஆகிவிடாது. இறைவனுக்காக எல்லாவிதமான புலன் நுகர்வுகளையும் ஒதுக் கித் தியாக உணர்வோடு செய்யப்படுவது இது. பசி, தாகம் எல்லாவற்றையும் அல்லாவுக்காக என்று துறப்பது போலவே, தீயவற்றைப் பேசா மல், தீயவற்றைக் காணாமல், கேட்காமல், மன சில் நினைக்காமலும் கூட இருப்பதே இந்த நோன்பின் கட்டுப்பாடு. தன்னடக்கத்தை ஒரு யோகமாக உணர வைக்கும் நோன்பு இது.

தினமும் இளங்காலை 4-45க்கு முன் உணவு கொண்டு விட்டால், மாலை கதிரவன் மறை யும் வரை உமிழ்நீரைக் கூட விழுங்கலாகாது. மருத்துவத் தேவைகளுக்காக ஊசி மருந்து, மாத்திரை என்று எல்லாவற்றையும் இந்த நோன்பு வேளையில் துறந்து விட வேண்டும். கதிரவன் மறைந்த பிறகு பொதுவாகக் கஞ்சியோ, அல்லது பேரீச்சை போன்ற கனிகளோ உண்டு அன்றைய விரதம் முடிப் பார்கள். அதிகாலை உணவுக்கு 'ஸஹார்' என் றும், நோன்பு முடிக்கும் உணவுக்கு 'இஃப்தார்' என்றும் சொல்வார்கள்.

'ரம்தானில் ஒரு நல்ல காரியம் பண்ணி னால் நான் அவர்களுக்குப் பத்து மடங்கு புண் ணியம் சேர்ப்பேன்' என்பது அல்லாவின் வாக்கு. ஆகவேதான் இஸ்லாமிய நெறிகளின் படி ஆற்ற வேண்டிய தானதருமத்தை இந்தக் காலத்திலேயே நிறைவேற்றுகிறார்கள். ஒருவ னின் மொத்தச் செல்வத்தை, அது தங்கமானா லும் - பண மதிப்புப் போட்டு, ஓர் ஆண்டில் இரண்டரை சதவிகிதம் தருமம் கொடுத்தாக வேண்டும் என்பது விதி. சமூகநீதியின் வெளிப் பாடாக இது வலியுறுத்தப்பட்டுள்ளது.

நோன்பு முடித்து மறுநாள் நமாஸுக்குப் போகும் முன் ஏழைகளுக்கு தருமம் செய்ய வேண்டும். இதற்கு அளவு கூட உண்டு. பிறந்த குழந்தை உட்பட, குடும்பத்தினர் அனைவரும் தலைக்கு இரண்டரைக் கிலோ கோதுமை அல் லது அதற்குச் சமமான பணம் கொடுக்க வேண்டும். இது 'ஃபித்ரா' எனப்படுகிறது.

இந்த நோன்பின் பயனாய் முக்கியமாக உடல் நலம் நன்கு சீரடைகிறது, வசதியுள்ளவர் கள் வசதியற்ற ஏழை எளியவர்கள் படும் பசி போன்ற கொடுமைகளைத் தாமும் அனுப வித்து உணர்ந்து, உதவி செய்ய வேண்டும் என் கிற பக்குவத்தை ஏற்படுத்துகிறது.

– டாக்டர் எஸ்.கே. காத்ரி சொல்லத்

தொகுத்தவர் : **'கலசைக் கிழார்'**

(மெக்கா வண்ணப்படம் நன்றி : 'பிலிப்ஸ் சவுண்ட் + இமேஜ் 53'.)


பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன். ஆசிரியர் : சீதா ரவி.

முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.

ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.

ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# நிலாகீஸ்!




"கட்சில இவ்வளவு கோஷ்டிப் பூசல் இருக்கக் கூடாது!"

"என்ன சொல்றீங்க?"

"ரெய்டு நடத்த வரும் அதிகாரிகளே வருக வருக"ன்னு எதிர்கோஷ்டி தலைவர் வீட்டு வாசல்ல வரவேற்பு வளைவு வச்சிருக்கு!"

- அம்பை தேவா

"நேற்று பீச்சில் என் காதலர் வரம்பு மீறி நடந்து கொண்டார்!"

"அடடா, என்ன செய்தார்?"

"வழக்கமாகச் சுண்டல் வாங்கித் தருவார். நேற்று ஐஸ்கிரீம் வாங்கித் தந்தார்."

- எஸ். மோகன்

"அதோ போறாரே. அவர் பெரிய ஜோக் எழுத்தாளர்."

"அப்படியா?"

"ஆமாம். அவர் அரைப் பக்கத்துக்குக் கம்மியா ஒரு ஜோக்கையும் எழுதினதில்லைன்னா பாரேன்!"

- வி. ரெங்கநாதன்

"இதுக்குத்தான் சகட்டுமேனிக்கு நிலத்தை வளைச்சுப் போடக் கூடாதுங்கறது!"

"ஏன், என்னாச்சு?"

"தலைவர் நேத்து ஒரு நிலத்தைப் பார்த்துட்டு, 'இதை எப்படியாவது வளைச்சுப் போட்டுடணும்'னு சொல்றாரு."

"இதிலே என்ன தப்பு?"

"அந்த நிலம் இரண்டு வருஷத்துக்கு முன்னாலே அவரே வளைச்சுப் போட்டதுதான். அவருக்கே ஞாபகமில்லே!"

- டி. என். பாலகிருஷ்ணன்

"அந்த எறும்போடு. பிரண்டு எறும்பும் அந்த யானை மேலே ஏறிப் பார்க்க ஆசைப்பட்டுச்சு. உடனே பிரண்டுகிட்ட சொல்லிச்சாம். 'நீ தும்பிக்கை வழியா ஏறு. நான் வால்வழியா ஏறுறேன்னு.'"

"ஏன் அப்படி சொல்லிச்சு?"

"தும்பிக்கை வழியா மட்டும் ஏறினா யானை பேலன்ஸ் தவறி விழுந்துடுமே அதனாலதான்!"

- கொடியாலம் கிரி

"என்ன சார் இது, பிச்சைக்காரன் ஏதோ பாட்டுப் பாடி டான்ஸ் ஆடிக்கிட்டே வரான்?"

"அவன் 'Rap' பிச்சைக்காரங்க!"

"?!...?!...?!"

- வெ. ராஜாராமன்

"தலைவர் மீன் பிடிக்கும்போது அவரோட கட்சிக்காரர்களே குட்டையைப் போட்டுக் குழப்பறாங்களே?"

"குழம்பிய குட்டையில்தான் அவருக்கு மீன் பிடிக்கத் தெரியுமாம்!"

- சீர்காழி வி. ரேவதி

*"எனக்கு டயரி எழுதும் வழக்கமே கிடையாது என்று நான் உறுதியாகச் சொன்ன பிறகும் உங்களுக்கு என்ன தயக்கம், தலைவரே? நான் கொடுக்கும் இந்தப் பத்து லட்சத்தை வாங்கி உள்ளே வையுங்க."*

*- என். நாராயணன்*

## 21

அப்போதுதான் மொட்டவிழ்ந்து அலர்ந்து கொண்டிருந்த புதுமலர் வசுமதி. ஆய்ந்து, ஓய்ந்து, எல்லாம் அனுபவித்து முடித்து விட்டவன் போலத் தன் முப்பத்தியொரு பிராயத்துக்கும் நாலைந்து ஆண்டு அதிகம் போன்ற தோற்றம் மணிவாசகத்துக்கு. வெகு சுமாரான தோற்றம். எப்படிப் பொருந்தும்?

தோற்றத்தை ஒதுக்கினாலும், பத்தொன்பதும் முப்பத்தொண்ணுமா? என்ன பைத்தியக்காரத்தனம்?

இதில் பைத்தியக்காரத்தனத்துக்கு என்ன இருக்கிறது என்று கேட்டான் கிருஷ்ணசந்திரன். "என்னமோ உன் சித்தியின் உறவில் ஒரு பெண், இருபது வயது மூத்தவரை மணந்து, தொங்கத் தொங்கத் தாலியோடு எழுபது வயது வரை வாழ்ந்ததாக நீதானே அன்று அளந்தாய்?" என்று அவள் பேச்சைக் கொண்டே அவளை மடக்கினான்.

"அதுவும் இதுவும் ஒன்றா? அவர்கள் வீட்டில் மிகவும் வறுமை. ஏதோ, எப்படியாவது மகள் வசதியோடு வாழட்டுமே என்று கொடுத்தார்கள். அந்தப் பாட்டியின் அதிருஷ்டம், நெடுங்கால சௌபாக்கியம்! இங்கே அப்படி என்ன அவசியமாம்?"

"அது... உதயா, மறந்து விட்டாயா? என் பெற்றோர், தங்கை விஷயம் நீ தலையிடக் கூடாது என்று சொல்லியிருக்கிறேன் அல்லவா? இந்தப் பேச்சை இத்தோடு விட்டு விடு."

கணவனை ஏறிட்டுப் பார்த்தாள் உதயரேகா.

சில நிபந்தனைகளுக்கு உட்பட்டதுதான் அவர்களின் இன்றைய உறவு. ஆனால் அதற்கும் அளவென்று ஒன்று இருக்கிறது அல்லவா? சொல்லப் போனால், யார் யார் மனநிம்மதி பெற வேண்டும் என்று இவனை மணக்க முடிவு செய்தாளோ, அவர்களே எக்கேடும் கெடட்டும் என்று விட்டு விட முடியுமா?

"நீங்கள் சொல்வது மெய்யே. ஆனால் நிபந்தனை நிபந்தனை என்று ஒரு வாழ்க்கையையே அழிய விட்டு விட முடியுமா?" என்று உதயரேகா வாதாடினாள்.

"அழிவானேன்? மணி மிகவும் நல்லவன்."

"நீங்கள் சொல்வது ஒருவேளை நிஜமாகவே இருந்தாலும், வாழுகிற காலம் முழுவதும் இருவரும் சேர்ந்து வாழ வேண்டாமா?"

"உண்மை" என்று சுருக்கமாக இயம்பியவனின் குரலைக் கவனியாமல் உதயரேகா மேலே மேலே பேசிக் கொண்டே போனாள். "நீங்களே அன்றைக்கு என்ன சொன்னீர்கள்? நாலு வயது வேறுபாட்டிற்கே 'அறுகிற' அப்படி இப்படி என்று கண்றாவியாகப் பேசினீர்களே; இவர்கள் இருவருக்கும் வயது வித்தியாசம் பன்னிரண்டு ஆண்டுகள்! அதை யோசித்தீர்களா? அப்பிடி இரண்டாம்தாரமாகவாவது வசுவைக் கொடுத்தாக வேண்டும் என்று என்ன கட்டாயம்?"

"இரண்டாம்தாரம் ஒன்றும் இல்லை. மணிக்குத் திருமணமே ஆகவில்லை; உனக்கும் தெரியும்."

"தாலி கட்டினால்தான் திருமணமா? சிறு வயதில் ஏற்பட்ட காதல் தோல்வியால் அவர் பிரம்மச்சரிய விரதம் பூண்டு விட்டதாக நீங்களே சொல்லியிருக்கிறீர்களே! அப்படி இன்னொருத்தியை மனத்தில் வைத்தவர் என்றால் என்ன அர்த்தம்?"

"உன் சித்தியும் ஓர் இரண்டாம் மனைவிதான், அதை மறந்து பேசாதே."

"அவர்கள் கதையே வேறு. சித்தி குடும்பம் எல்லாம் கொஞ்சம் சிரம தசையில் இருந்தவர்கள்தான். அப்பா ஏதேதோ வழிகாட்டித்தான் மாமாக்கள், தாத்தா எல்லோரும் இப்போது

**ரமணிசந்திரன்**

பரவாயில்லாமல் இருப்பதே. நம் வசுவுக்குத்தான் அந்தக் கஷ்டம் இல்லையே. நான், நீ என்று அவள் கைக்காகப் போட்டியல்லவா போடுகிறார்கள்! ஓகோகோ, உங்கள் நண்பருக்கும் அதே நப்பாசைதானா?" என உதயரேகா எகத்தாளமாக வினவினாள்.

"சும்மா வாய்க்கு வந்ததை உளறாதே, மணிக்கு இதில் விருப்பமே கிடையாது."

"கரும்பு தின்னக் கசக்கிறதாக்கும்! என்ன வேஷமடா அப்பா!" என்று தன் நம்பாமையை வெளிப்படையாகக் காட்டினாள் உதயரேகா.

"அதெல்லாம் ஒன்றும் இல்லை..."

"எது இல்லை என்கிறீர்கள்? உங்கள் தங்கை கரும்பு இல்லை என்கிறீர்களா? அல்லது அவள் குணம் கசப்பு என்கிறீர்களா?" என்று மீண்டும் அவனை நன்றாக மடக்கினாள் மனைவி.

"இதற்குப் பெயர்தான் விதண்டாவாதம் என்பது."

"நீங்கள் செய்வது என்னவாம்? பன்னிரண்டு வயது அதிகம்; பார்வைக்கு வெகு சுமார்; வருமானமும்... வக்கீல் தொழிலில் ஓரளவு வசதி அவ்வளவே! இப்படிப்பட்ட ஓர் ஆளுக்கு உடன் பிறந்த தங்கையை மணமுடிக்க விரும்புகிறீர்கள் என்றால் அதற்கு ஒரே ஒரு காரணம்தான் இருக்க முடியும்" என்று அறிவித்தாள் உதயரேகா.

"என்ன காரணம்? தங்கை நல்லபடியாக வாழ வேண்டும் என்பதுதான், வேறென்ன?" என்று புருவம் சுருக்கி சிறு வியப்புடன் மனைவியை நோக்கினான் கிருஷ்ணசந்திரன்.

"சற்றும் பொருந்தாத திருமணத்தில் சந்தோஷம் எங்கிருந்து வரும்?"

எல்லா வகைப் பொருத்தங்களும் கூடி அமைந்திருந்த அவர்களது திருமணத்தில் மட்டும் குதூகலம் கொப்பளித்துக் கொண்டா இருந்தது என்ற எண்ணம் தானாக எழுந்து அவளிடம் பெருமூச்சை வரவழைத்தது.

அவனுக்கும் அதுவே தோன்றியதோ? ஏதோ சொல்ல வாயெடுத்தவன், தலையசைத்து அதை மாற்றி, "பொருத்தம் பற்றி நம் இருவர் கருத்தும் ஒத்துப்போகப் போவது இல்லை. ஆனால், மணிவாசகத்தை மாப்பிள்ளையாகத் தேர்ந்தெடுக்க ஒரே ஒரு காரணம்தான் இருக்க முடியும் என்றாயே, என்ன அது?" என்று வினவினான்.

"முதலிலேயே சொல்லி விடுகிறேன், உங்கள் மணிவாசகத்தைக் குற்றம் கூறுவதாக என் மேல் கோபப்படக் கூடாது; என்ன?" என்ற பீடிகையோடு உதயரேகா சொன்னாள்.

"ஏதோ ஒரு வகையில் உங்கள் நண்பரிடம்






**ச**ந்தை கூடும் இடத்தில் ஓர் உயர்ந்த இடத்தில் நின்ற முல்லா அங்கிருந்த மக்களைப் பார்த்து, "நீங்கள் கஷ்டமில்லாமல் சிறந்த அறிவுபெற ஆசைப் படுகிறீர்களா? முயற்சி சிறிதும் இல்லாமல் முன்னேற ஆசைப்படுகிறீர்களா?" என்று கேட்டார்.

அங்குள்ள எல்லோரும் கைகளைத் தூக்கி, "ஆமாம்... ஆமாம், அதற்கு என்ன வழி?" ...று மிகுந்த ஆவலுடன் கேட்டனர்.

"உங்களில் சோம்பேறிகள் எத்தனை பேர் என்பதை ...ிந்து கொள்வதற்காகத்தான் அவ்வாறு கேட்டேன்" ...று அமைதியாகப் பதில் சொன்னார்.

ஆதாரம் : "முல்லாவின் வேடிக்கைக் கதைகள்"

தகவல் : என். ஜெயராமச்சந்திரன்

...்கள் சிக்கிக் கொண்டு இருக்கிறீர்கள். அதை ...வத்து அவர் உங்களை பிளாக்மெயில் செய் ...தால் வேறு வழியின்றி வசுவை அவருக்கு ...ணமுடிக்க ஒத்துக் கொண்டு வந்து விட்டு, ...ல்லோரும் அதை ஏற்றுக் கொள்ள வேண்டும் ...ன்பதற்காக அது உங்கள் திட்டம் போலக் ...ாட்டுகிறீர்கள் என்பது என் ஊகம்" என்று ...டித்தாள்.

"மைகாட்!" என்று கையை விரித்தான் ...ருஷ்ணசந்திரன். "உனக்கு இவ்வளவு கற் ...னை வளம் உண்டு என்று எனக்குத் தெரி ...வே தெரியாதே!" என்று வியந்தவன், ...தொடர்ந்து, "ஒன்று சொல், உதயா. அப்படி ...ன் குடுமி மணியிடம் மாட்டிக் கொண்டு ...இருப்பதாகவே வை. அந்த நிலையில் என் ...னைக் காப்பதற்காக நீயும் என் முடிவைத் ...ானே ஆதரிக்க வேண்டும்? அதை விட்டு ...திர்க்கிறாயே?" என்று விளக்கம் கேட்டான்.

"நீங்கள் மெய்யாகவே ஆபத்தில் சிக்கியிருந் ...ால் உங்களைக் காப்பாற்ற என் உயிரைத் ...ரவும் நான் தயங்க மாட்டேன். ஆனால் வசு ...வின் வாழ்வு என்பது வேறு விஷயம். எந்தக் ...ாரணத்துக்காகவும் அதைப் பலியிட நான் ...ஒத்துக் கொள்ளவே மாட்டேன்." கணவன் ...பேசியவிதத்தால், பிரச்னை பெரிதல்ல என்று ...ணர்ந்தபோதும், உறுதியுடனேயே உதயரேகா ...பதிலுரைத்தாள்.

...பார்வை கனிய, "நீ என் வீட்டாருக்காகவே ...என்னை மணந்தாய் என்பதை முழு மனத் ...தோடு ஒத்துக் கொள்கிறேன், உதி. அத்தோடு, ...இப்படி ஒரு பாசமிகுந்த அண்ணி இருக்கும் ...போது வசுமதியின் எதிர்காலம் பற்றிக் கவ ...லைப்படத் தேவையில்லை என்றும் அறி ...கிறேன். எனவே என் தங்கை - மணிவாசகத் ...தின் திருமணப் பேச்சை இத்தோடு விட்டு ...விடுகிறேன். போதுமா?" என்று புன்னகை ...யோடு அவன் கேட்கவும் உதயரேகாவும் முகம் ...மலர்ந்தாள்.

சில வினாடி கால இதமான அமைதியின் பின், "மணியைப் பற்றி நீ மிகவும் தவறான அபிப்பிராயம் கொண்டிருக்கிறாய், உதி. எந்த ஒரு நிலையிலும், சற்றும் தயக்கமின்றி உதவி கோரிச் செல்லக்கூடிய ஒரே ஆள், அவன்தான் உதி. இதை எப்போதும் நினைவில் கொள். என்ன, ஏது என்று கேட்கக் கூட இல்லாமல் உதவுகிற உத்தமன் அவன்.. உத்தமன் என்கிற ஒரு தகுதி பலவற்றை அழகு, பணம், அந்தஸ்து என்ற எல்லாவற்றையும் ஈடுகட்டி விடக் கூடியது என்று நினைத்தேன்..." என்று யோசனையாக இழுத்தான்.

"இன்னுமொன்று, வயதை விட்டு விட்டீர்கள். அத்தோடு, மிஸ்டர் மணிவாசகம் மிகவும் உத்தமர் என்று உங்களுக்குத் தோன்றுகிறது. அதே போல, அத்தை, மாமா, முக்கியமாக வசுவும், எண்ண வேண்டுமில்லையா?" என்று மென்குரலிலேயே வாதித்தாள் உதயரேகா.

"நான்தான் அந்த எண்ணத்தை அடியோடு விட்டு விட்டேன் என்றேனே?" என்று அவனும் அதே குரலிலேயே இயம்ப, அந்த அலை அத்தோடு ஓய்ந்தது.

**உ**தயரேகாவின் பராமரிப்பில் மாடிச் செடிகள் செழிப்பாய் வளர்ந்து விட, அவைகளில் வண்ண மலர்கள் பல எட்டிப் பார்த்துக் கண்ணைக் கவர்ந்தன.

கணவன் - மனைவி இருவருமாய் அந்த செடிகளிடையே நின்றும், நடந்தும், பாதி மொட்டை மாடியை மறைத்து அமைத்த பச்சை வண்ண, ஒளி ஊடுருவும் ஓட்டுக் கூரையின் கீழ் அமர்ந்தும் தோட்டத்தைப் பார்த்து ரசித்தபடியே பேசிக் கொண்டு இருப்பது வழமை ஆயிற்று. அதிலும் இளவேனில் முடிந்து கோடை தொடங்கவும், இருவரின் பெரும் பகுதி நேரம் இந்தத் தோட்டத்திலேயே கழிந்தது.

அன்று காலையிலிருந்தே ஒரே புழுக்கமாய் இருந்து, மாலை வேளையில் இடி மின்னல், காற்றுடன் பெருமழை பொழியத் தொடங்கி விட்டது.

கூரை ஓடுகளின் மேல் படிந்திருந்த தூசியை மழை நீர் அடித்துச் செல்லும் வரை காத்திருந்த உதயரேகா, பிறந்த வீட்டுப் பழக்கத்தில், கொட்டும் மழையில் நின்று ஆனந்தமாய் நனையலானாள்.

அலுவல் முடிந்து திரும்பி வந்த கிருஷ்ண சந்திரன், சிறு பிள்ளை போல மழையில் நின்று கொண்டிருந்த மனைவியைப் பார்த்துத் திகைத்துப் போனான்.

"இது என்ன மடத்தனம், உதயரேகா? மழையை விட்டு உள்ளே வா. வந்து முதலில் உடம்பை நன்றாகத் துடை" என்று அதட்டினான்.

தொங்கட்டான்கள் ஆட, "ஊகூம்" என்று உதயரேகா தலையாட்டியதோடு சரி.

## ஜனவரி மாத சிறப்புப் பரிசுகள்!

ஜனவரி மாதக் கல்கி இதழ்களில் வெளியான சிறுகதைகளில் சிறந்த சிறுகதையாகப் பெரும்பான்மை வாசகர்கள் தேர்ந்தெடுத்திருப்பது ''தாய்மை'' சிறுகதை. எழுதியவர் : சுப்புராஜ். (24-ஏ, கீழப்புது தெரு, ஸ்ரீவில்லிபுத்தூர் - 625 125.)

இவருக்கான சிறப்புப் பரிசாக ரூ. 500 வழங்கப்படுகிறது.

* சுப்புராஜ்



'குடும்பத்தில் பொறுப்பும், அயலாரிடம் பரிவும், ஊனக் குழந்தையிடம் தாயன்பும் என ஒரு பண்பட்ட பெண்மையின் இனிய படப்பிடிப்பு!' என்று தாம் தேர்ந்தெடுத்ததற்கான காரணத்தைக் கச்சிதமாக எழுதி ரூ. 100 பரிசு பெறும் வாசகர் : கி.தாண்டேஸ்வரன் (138 -H, டி.பி. ரோடு, திருச்செந்தூர்.) — ஆர்.

"சளிப் பிடித்துக் கொள்ளும். இருமல், காய்ச்சல் என்று நீதான் கஷ்டப்படுவாய். சொன்னால் கேள், உதயா" என்று கிருஷ்ணசந்திரன் அதட்டவும், "எங்கள் சித்தி மாதிரி கவலைப்படுகிறீர்களே! ஆனால் நாங்கள் யாரும் சித்தி சொல்வதை இந்த ஒன்றில் மட்டும் கேட்கவே மாட்... டோ...ம்..." என்று அவள் முடிக்கையில் ஓர் ஊதல் காற்று அடிக்க, அதன் சிலுசிலுப்பில் உடல் நடுங்கிச் சிரித்தாள் உதயரேகா.

பொறுமையிழந்து, "சொன்னால் கேட்பது என்பது, உன் அகராதியிலேயே கிடையாதா? உன்னை..." என்று கையை நீட்டி மனைவியைப் பிடித்து இழுத்தான் கிருஷ்ணசந்திரன்.

அவள் திமிறிக் கொண்டு விடுபட்டுச் செல்ல முயல, ஈரத்தரை வழுக்க, இருவருமே தரையில் சரிந்தனர்.

''ஆகா! இப்போது நீங்களும் சேர்ந்து நனைந்து விட்டீர்கள், பாருங்கள்!'' என்று வெற்றியோடு சிரித்தவளை வெறித்து நோக்கினான் கிருஷ்ணசந்திரன்.

பெரிய மழைத் துளி ஒன்று உதயரேகாவின் செவ்விதழின் மீது பட்டுச் சிதறியது.

தன் வசமிழந்து, மனைவியைப் பற்றி அணைத்த கிருஷ்ணசந்திரன், வெற்றிச் சிரிப்பு சிரித்த அவளது வாயில் அழுந்த முத்தமிட்டான்.

அதற்கு மேல், இருவருக்கும் சுயஉணர்வு வந்த போது மழை சுத்தமாய் நின்று விட்டிருந்தது.

சுற்று முற்றும் ஒரு திகைப்புடன் சுழன்ற கிருஷ்ணசந்திரனின் பார்வை மீண்டும் மையலுடன் நோக்கிய மனைவியிடம் வந்து நின்றது.

"ராட்சசி!" என்றவன், சட்டெனக் குனிந்து மீண்டும் அவளை முத்தமிட்டான்.

அவளை எழுப்பி, "உள்ளே வா. முதலில் நல்ல வெந்நீரில் இந்தச் சில்லிப்புப் போகக் குளி" என்று கைப்பிடியாக அறைக்குள் அழைத்துச் சென்றான்.

'ஹீட்'டரைப் போட்டு விட்டு 'ஷவர்' அடியில் மனைவியை நிறுத்தியவனுக்கு, அங்கேயும் அவளை விட்டு விலக முடியாது போயிற்று. அப்போது மட்டுமல்ல; இரவெல்லாம் பகலானது போல, அன்றிரவு முழுவதுமே கிருஷ்ணசந்திரன் வினாடி நேரம் கூடக் கண்மூடி உறங்கவில்லை; அவளையும் உறங்க விடவில்லை. வாழ்நாள் முழுமைக்குமான இன்பங்கள் அத்தனையையும் அன்றே அனுபவித்துத் தீர்த்து விடுகிறவனைப் போல மீண்டும் மீண்டும் மனைவியை நாடினான்.

கீழ்வானத்தில் உதயம் வரப் போவதன் முன்னோடியாக கங்குல் கரைவதைக் கடைசியாகக் கண்ட ஞாபகம் உதயரேகாவுக்கு. அதன் பிறகு அவள் எப்போதோ உறங்கியிருக்க வேண்டும்.

மீண்டும் அவள் விழித்த போது கிட்டத்தட்ட உச்சிவேளையாகி விட்டிருந்தது.

பகல் வெளிச்சம் வராமல், இழுத்து மூடப்பட்டிருந்த ஜன்னல் திரைகள் கணவனின் கரிசனத்தைக் காட்ட, பெருமிதமாய் முறுவலித்தபடியே திரும்பிப் பார்த்தால் அங்கே கிருஷ்ணசந்திரனைக் காணவில்லை. மேஜை மேல் அவனது சிறு கைப்பெட்டியையும் காணாது போகவே, 'இன்னுமா அலுவலகம்? களைப்பாய் இராதா?' என்று எண்ணியவாறே சோம்பல் முறித்தவண்ணம் எழுந்த போது, அவள் கண்ணை அந்தக் கடிதம் உறுத்தியது.

பெரிய வெள்ளைக் காகிதத்தை நாலாக மடித்து, கட்டிலுக்கருகிருந்த மேஜை விளக்கருகே, ஒரு பேப்பர் வெயிட்டின் கீழ் இருந்தது.

எடுத்துப் படித்துப் பார்த்தவளுக்குத் திகைப்பும் அதிர்ச்சியுமாக ஒன்றுமே புரியவில்லை.

ஏனெனில், "இப்போது உன்னைப் பிரிந்து போகிறேன். விதி நல்லதாக இருந்தால், ஒரு வேளை, நாம் மீண்டும் சந்திக்கலாம். ஆனால் எந்தக் காரணம் கொண்டும் என்னை நீ தேட வேண்டாம் - தேடக் கூடாது" என்று கிருஷ்ணசந்திரன் அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தான்.

(தொடரும்)

## நீங்கள் கேட்டவை - தராசு

● இரா. பிரபாகரன், நெய்தவாசல்.

*? ஒரு நாளைக்கு இருபது மணி நேரம் உழைக்கிறேன் என்கிறாரே 'ஜெ'?*

! இருபது மணி நேர உழைப்பிலேயே இத்தனை ஊழல் என்றால்... நல்லவேளை இருபத்து நாலு மணி நேரமும் அவர் நாட்டுக்காக உழைக்கவில்லை!

● பி. பிரகதீஸ்வரன், செங்கல்பட்டு.

*? 'நர்சரி பள்ளிகளில் நன்கொடை வாங்கப்படுவதாகப் பொது மக்களிடமிருந்து அரசுக்குப் புகார் எதுவும் வரவில்லை' என்று அமைச்சர் பொன்னுசாமி கூறியுள்ளது குறித்து...?*

! புகார் இல்லாததால் குறைபாடு இல்லை என்று ஆகிவிடாது! மக்கள் தங்கள் குறைகள் ஒவ்வொன்றையும் புகாராக எழுத ஆரம்பித்தால் கோப்புகளுக்குக் கோட்டையில் இடம் காணாது - கிடங்குதான் கட்ட வேண்டியிருக்கும்!



* இருபது மணி நேரம்...

## 'ஜெ'க்குச் சிலை வைக்கப் போகிறார்களாமே?

● புளியரை கணேசன், சென்னை - 30.

*? காவிரிப் பிரச்னையில் அரசியலை மறப்போம்; சுமுகமாகப் பேச்சு வார்த்தை நடத்துவோம் என்று தேவகௌடா நேசக்கரம் நீட்டியிருக்கிறாரே...?*

! நேசக்கரமில்லை அது... வேஷக்கரம்!

● தி. பொ. சண்முகசுந்தரம், திட்டக்குடி. ❑

*? மௌனமாக இருப்பதில் வல்லவர் பிரதமரா? சூப்பர் ஸ்டாரா...?*

! ராவ் அபூர்வமாக வாய் திறந்தாலும் புதிதாக ஏதாவது சொல்வார். ஆனால் ரஜினி பேசினாலும் எழுதினாலும் புதிய கருத்து மிக மிக அபூர்வமாகவே வருகிறது. ஆக, இப்போதைக்கு வெற்றி பெற்று வருபவர் ரஜினிதான்!

● ஜோ. பன்னீர்செல்வம், சென்னை - 84.

*? சி.ஏ.ஜி. அறிக்கையில், தமிழக அரசின் சொத்து 17 சதவிகிதம் அதிகரித்தும் கடன் 89 சதவிகிதம் அதிகரித்து இருப்பதாகக் கூறப்பட்டுள்ளதே... இதற்குக் காரணம் என்ன?*

! அந்த அளவுக்கு மோசமான நிதி நிர்வாகம் என்று அர்த்தம்! 'திவாலா அரசு' என்று குமரி அனந்தன் வர்ணித்தது சரியே. 'சி.ஏ.ஜி. அறிக்கை ஒரு மாயத் தோற்றம்' என்ற முதல்வரின் மழுப்பல் முழுப்பூசணியைச் சோற்றில் மறைக்கும் முயற்சி!

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

*? 'ரஜினிக்கும் எனக்கும் உள்ள தொடர்பு பூர்வ ஜென்மத் தொடர்பு... அதுதான் தற்போது என்னையும் அவரையும் இணைத்திருக்கிறது. இந்த இயற்கையின் கட்டளையை நாம் மீற முடியாது' என்று ஆர்.எம். வீரப்பன் பேசியிருப்பது பற்றி...?*

! முன்பு காலத்தின் கட்டாயம்; இப்போது இயற்கையின் கட்டளை - வித்தியாசம் அவ்வளவுதான்!

● ஆர். இருதயராஜ், கும்பகோணம்.

*? 'கொடைக்கானல் ஓட்டலுக்கு அனுமதி வழங்கியதில் மோசடி எதுவும் நடைபெறவில்லை; அனுமதி வழங்க சட்ட விதிகளைத் திருத்தியதைத்தான் தவறு என்று நீதிமன்றம் கூறியுள்ளது' என செல்வகணபதி புது விளக்கம் கொடுத்துள்ளாரே?*

! அப்பன் குதிருக்குள் இல்லை என்பது போன்ற விளக்கம்...! சட்டவிதிகள் திருத்தப்பட்டது எதனால்....? நீதிமன்றம் திருக்குறளை மேற்கோள் காட்டி முதல்வரைக் கண்டனம் செய்ததை அமைச்சர் மறந்தாலும் நாம் மறக்கவில்லை.

● சீதா மகன், மதுரை - 16.

*? தமிழகம் அமைதிப் பூங்காவாமே...?! - கவர்னர் பொய் பேசலாமா...?*

! கவர்னர் எங்கே பேசினார்? அம்மாவின் சொற்படி, எழுதிக் கொடுக்கப்பட்டதற்குச் சும்மா வாயசைத்தார். ஆளுனர் உரை என்பது ஆளுங்கட்சியின் கொள்கை விளக்க அறிக்கை, அவ்வளவுதான்! ஆளுனருக்கு அதில் ஒப்புதல் இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை.

● என். சண்முகம், திருவண்ணாமலை.

*? ஸ்ரீரங்கத்தில் முதல்வர் ஜெயலலிதாவுக்*



தேடவும், வேறு வழிகளில் மனதைச் செலுத்தவும் முடிந்தது.

ஆனால், இப்போது அது ஒன்றும் முடியவில்லை. கடிதத்தைப் படித்ததும் அப்படியே அவளுக்கு வயிறு கலங்கி விட்டது.

முன் தினம் மாலையிலிருந்து கிருஷ்ண சந்திரன் அவளைக் கொஞ்சியதென்ன? குலவியதென்ன? பொட்டுக் கண்மூடா மல் கட்டி அணைத்ததுதான் என்ன....?

அப்படி ஒட்டி உறவாடி விட்டு, எல் லாம்.... எல்...லாமே நன்றாகி விட்டதாக அவள் உள்ளம் குளிர்ந்து உவகை எய்திய உடனேயே, இடி, மின்னல், மழை எல்லா வற்றையும் மொத்தமாகக் கொண்டு வந்து அவள் தலையிலேயே போடுவது போல இது என்ன?

கைநழுவி விழுந்த கடிதத்திலேயே விடையையும் காண்பாள் போல அதை எடுத்து மீண்டும் படித்துப் பார்த்தாள்.

விளக்கம் எதுவும் கிட்டாத போதும், பின் குறிப்பு என்று அடியில் ஏதோ இருப் பது கண்ணோட்டு கருத்திலும் பட, அவசரமாக அதன் மீது விழிகளை ஓட்டினாள்.

கிருஷ்ணசந்திரன், அவ னுடைய தந்தைக்கும் இரண்டு நாட்கள் கழித்துக் கிடைக்கும்படியாக ஒரு

# மாலை மயங்குகின்ற நேரம்...

கடிதம் எழுதியிருப்பதாகவும், அதன் நகல் அவனது அலுவல் மேஜையின் முதல் இழுப்பறையில் மேலாக இருப்பதாகவும், அதில் உள்ளது உதயரேகாவுக்குப் பொருந் தும் என்பதால், எடுத்துப் படித்துவிட்டு அதன்படியே நடந்து கொள்ளுமாறும் அந்தப் பின் குறிப்பு தெரிவித்தது.

கூடவே இன்னு மொரு கொசுறாக, இனி சந்திப்பே நேராது போனால், முன்தினத் தவறுக் காக அவனை மன்னிக்குமாறும் வேண்டியிருந் தான்.

கிருஷ்ணசந்திரனை அறிய நேர்ந்ததிலிருந்து இவ்வளவு காலத் தில், உதயரேகா பலமுறை மனம் குழம்பியிருக்கிறாள்; கலங்கியிருக் கிறாள்; திகைத்திருக்கிறாள்; அதிர்ந்தும் இருக்கிறாள். ஆனால், அன்றைய அதிர்ச்சி, முன்னேர்ந்தவை அனைத்தையும் ஒன்றுமே இல்லை என்றாக்கி விட்டது.

முன்பு நடந்தவைகளுக்கெல்லாம் அவனது 'விருப்பமற்ற திருமணம்' என்ற காரணம் இருந் தது. அவன் என்னதான் சொன்னாலும், செய் தாலும், 'அவன்தான் அன்றே மறுத்தானே' என்று ஒரு பெருமூச்சுடன் அதைச் சகிக்கவும், என்ன காரணம் என்று சற்று நிதானத்துடன்



# ரமணி சந்திரன்

சந்திப்பே நேராது போவதா? என்ன பைத்தியக்காரத்தனம்? அவளைக் கலங்க அடித்தே கொன்றுவிடுவதாக எண்ணமா?

ஓடோடிச் சென்று கணவனின் இன்னொரு கடிதத்தை எடுத்துப் பார்த்தாள்.

தந்தைக்குப் பிடிக்காத ஒருவகை நண்பர்களுடன், கால வரையறை அற்ற சுற்றுலா செல்வதாகவும், மகனைக் காணவில்லை, அது இது என்று கலாட்டா செய்தால் திரும்பி வராமலே போய்விடப் போவதாகவும், அதனால் அவனைத் தேடி விரல் அசைப்பது கூடக் கூடாது என்று தனது தந்தையை கிருஷ்ணசந்திரன் அந்தக் கடித்தின் மூலமாய் மிரட்டியிருந்தான்.

பெற்றவரை மட்டுமல்ல; அவளையும் தான்!

அங்கேயும் ஒரு பின்குறிப்பாய், அவன் பார்த்து வந்த தொழிலை, அவனை விடவும், பிரமாதமாக அவனுடைய மனைவி நடத்திச் செல்வாள் என்றும், ஆகையால், அதில் அவர் தலையிடத் தேவையிராது என்றும் குட்டித் தகவல் தந்திருந்தான்.

இதுவும் அவளுக்கான சேதியே. தொழிலை அவளே நடத்த வேண்டும் என்று மறைமுகமாய் ஒரு கட்டளை. அப்படியானால், இதையெல்லாம் முன்னரே திட்டமிட்டுத்தான் அவளுக்குத் தொழிலைப் பயிற்றுவித்தானா?

அப்படியானால் முன்தினம் எதில் சேர்த்தி? அதுவும் முன்பே கணித்ததா? அல்லது அவனையும் மீறித் தன்வசமிழந்ததால் நேர்ந்ததா?

தவறு என்கிறானே, ஏன்? கணவனும் மனைவியும் உறவு கொள்வது தவறாகுமா?

ஆனால், எதற்காகவும் அவன் ஏன் அவளைப் பிரிந்து போக வேண்டும்? பிரிந்து எங்கே போனான்? தந்தைக்கு அவன் எழுதிய 'சுற்றுலா' வில் அவளுக்கு நம்பிக்கை இல்லை.



பின், அவன் எங்கே சென்றிருக்கக் கூடும்?

இந்தக் கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லக் கூடியவன் இருக்கும் இடம் தெரியாததோடு, அங்கே இங்கே என்று விசாரித்து அறியவும் வழியின்றி, தேடக்கூடாது என்ற உத்தரவு வேறு! பெரிய உத்தரவு!

தந்தையின் கைக்கு இரண்டு நாட்கள் பின்னதாக அவனது கடிதம் சென்றடையுமாறு கிருஷ்ணசந்திரன் ஏற்பாடு செய்திருந்தான். ஏன்? இந்த இரண்டு நாட்கள் அவகாசம் எதற்காக?

செல்வரங்கம் விழுந்தடித்துக் கொண்டு இங்கு வந்து, மாமனும் மருமகளுமாகக் கலந்து பேசி, ஏதாவது ஒரு வகையில் அவனைக் கண்டுபிடித்து விடக்கூடும் என்று அஞ்சிவிட்டானா?

கிருஷ்ணசந்திரன், அவ்வப்போது அவள் மனத்தை வருத்தியதை எல்லாம் மிகவும் உற்ற உறவினருக்குக் கூடச் சொல்லாமல் அவனுடைய பெற்றோருடனும் கூடப் பகிர்ந்து கொள்ளாமல் மூடி மறைத்தது தவறோ என்ற சந்தேகம் உதயரேகாவுக்கு இப்போது தோன்றியது.

இப்போதும் அப்படி வாளாவிருந்தால் விபரீதம் ஆகிவிடக்கூடும் என்று எண்ணி, டெலிபோன் அருகே சென்ற உதயரேகாவுக்கு, அதற்குமேல், ரிசீவரை எடுத்து மாமனாரை அழைக்கும் திடம் வரவில்லை.

மீண்டும் சந்திப்பு நேராது போனால்... என்று ஒருவரி எழுதியிருந்தானே! இவளிடம் சற்று இதமான வார்த்தைகளால் எழுதியவன், மாமனாரிடம் வேறு விதமாய்த் தொனியை மாற்றி 'வராமலே போய் விடுவேன்' என்று கூறியிருக்கிறானே?

அப்படிச் சந்திப்பு நேராது போகுமோ என்று எண்ணம் ஓடும்போதே சிலீரென்று உள்ளே குளிரெடுத்தது அவளுக்கு.

சட்டென எழுந்து நின்றாள் உதயரேகா. இப்படிக் கிடந்து அலைபாய்வது மடத்தனம். முதலில், கணவன் மெய்யாகவே பிரிந்து சென்றிருக்கிறானா என்று தெளிவுபடுத்திக் கொண்டு இந்தக் கவலையும் வேதனையும் படலாம்.

கிருஷ்ணசந்திரனின் அறைக்குச் சென்று அலமாரிகளைத் திறந்து பார்த்துவிட்டு ஒன்றும் புரியாமல் மீண்டும் மூடினாள்.

ஓடிச் சென்று குளியல் அறையிலும், அவனது 'டிரஸ்ஸிங் டேபி'ளிலும் தேடினாள்.

அவனது கடிதம் நிஜம் என்பதன் முதல் அறிகுறியாக எங்குமே அவனது 'ஷேவிங் செட்'டைக் காணவில்லை. பேஸ்ட்.. பிரஷ்.. அடுத்து சீப்பு... லோஷன்...

நெஞ்சு கனக்க ஒவ்வொன்றாகத் தேடி முடித்தவள் மீண்டும் ஓடிப் போய், அலுவலகத்தில் அவனது தனி நம்பரைத் தட்டினாள்.

மறுமுனையில் இருப்பது யார் என்று அறிந்ததும் குரலே மாறிவிட, "நீங்களா மேடம்? நீங்கள் நாளையிலிருந்துதான் வருவீர்கள்; இன்றைக்கு மட்டும் மானேஜர்தான் எல்லாம் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று சார் சொல்லிவிட்டுப் போனாரே! இன்றே வருகிறீர்களா மேடம்?" என்று குழைந்தாள் கிருஷ்ணசந்திரனின் செகரடரி சுலோசனா.

இங்கே பிரிவை உறுதிப்படுத்திவிட்டானே! கடவுளே!

ஆமோதிப்போ மறுப்போ இல்லாமல், வெறும் ஒரு "ம்"முடன் ரிசீவரை வைத்து விட்டுக் கனவில் நடப்பவள் போல மெல்லக் கீழிறங்கிச் சென்றாள்.

அவளைக் கண்டதும், அவசரமாக வந்து நின்று, "அம்மாவை எழுப்பித் தொந்தரவு பண்ண வேண்டாமின்னு அய்யா சொன்னாங்கம்மா. அதான் காப்பி அனுப்பலை. இப்ப நேரமாயிட்டுதேம்மா, காப்பியா? நேரே சாப்பிட்டு விடுறீங்களா?" என்று அக்கறையுடன் விசாரித்தாள் சமையல்கார அம்மாள்.

சிரமத்துடன் குரலைச் சாதாரணமாக்கி, "அய்யா... அய்யா ஏதாச்சும் சாப்பிட்டார்களா?" என்று உதயரேகா வினவினாள்.

"எங்கம்மா? காப்பி கூட வேண்டாமின்னிட்டாங்க. காலைல ஏழுமணி. பலகாரம் ரெடியாகலை. உடனே தோசை சுட்டுத்தாரேன்னு சொன்னேம்மா. பசியே இல்லைன்னாங்க. பெட்டியோட போனாங்களே; வெளியூருக்காம்மா? கார் உங்களுக்கு வேணும் என்பதால டாக்சி வரவழைச்சுப் போனாங்கம்மா...."

'ஓ' வென்று பெருகுரலெடுத்து அழ வேண்டும் போல வந்ததைப் பெருமுயற்சி செய்து அடக்கி, மேலே யோசித்தாள்.

என்ன என்னவென்று நாள் முழுவதுமாய் மூளையைக் கசக்கியதில், கிருஷ்ணசந்திரன், இப்படி ஒரு பிரிவை எதிர்பார்த்து, அதற்காகவே பல்வேறு காரியங்கள் செய்து வந்திருப்பதாக அவளுக்குத் தோன்றியது.

## குறைந்த விலையில் நிறைந்த சத்து!

விலை அதிகமாகக் கொடுத்து வாங்கும் பழவகைகளில் தான் சத்து அதிகமாக இருக்கிறது என்று நினைக்க வேண்டாம். மலிவான பழங்களிலும் அதிக சத்து உண்டு. உதாரணமாக ஐம்பது பைசாவுக்கு வாங்கும் கொய்யாப்பழத்தில் ஐந்து ரூபாய்க்கு வாங்கும் ஆப்பிளைவிட அதிக சத்து உண்டு. ஒரு ரூபாய்க்கு வாங்கும் வேர்க்கடலையில், இருபது ரூபாய்க்கு வாங்கும் பாதாம்பருப்பைவிட அதிக சத்து உண்டு.

- பெ. பொன்ராஜபாண்டி



தொழிலில் அவளைப் பழக்கியது; தங்கைக்குத் திருமணம் முடிக்க முயன்றது... மணிவாசகம்!

'எந்த ஒரு நிலையிலும் சற்றும் தயக்கமின்றி உதவி கோரிச் செல்லக் கூடிய ஒரே ஆள் அவன். நினைவில் வை.' என்றானே! இந்த மணிவாசகத்துக்கு ஏதேனும் தெரியுமா என்று கேட்டுப் பார்க்கலாமா?

இருள் பரவும் நேரத்தில் மீண்டும் யோசனை சுழல ஆரம்பித்தது. எப்பேர்ப்பட்ட நண்பன் மணிவாசகம்! கிருஷ்ணசந்திரனுக்கு மட்டுமில்லாமல், அவனுடைய குடும்பத்துக்கே உதவி செய்கிறவன்!

உதயரேகா விறுக்கென்று நிமிர்ந்தாள்.

வெடித்தே விடும் போல வேகமாகத்துடித்த இதயத்தை அழுத்திக் கொண்டு வேகமாக யோசித்தாள்.

இந்தப் பிழைகள் எல்லாம் மெய்யில்லையே! குடி, கெட்ட பெண்கள் சகவாசம் எல்லாம் கிருஷ்ணசந்திரன் நடித்த நாடகங்கள் தான்!

இல்லாத ஒன்றைக் கதை பரப்பக் கிருஷ்ணசந்திரன் முயன்றான் என்றால் அந்த பொய்க் கதைகளைப் பரப்பியது மணிவாசகம்.

தான் பரப்பிய கதைகள் பொய் என்பது நிச்சயமாக அவனும் அறிந்த விஷயம்தான்.

அப்படியானால் இந்த ஏமாற்று வேலை இருவரும் கூட்டாகச் செய்ததா? அல்லது கிருஷ்ணசந்திரன் ஏவியதை இவன் செய்தானா?

வசு திருமணப் பேச்சை உதயரேகாவின் வார்த்தைக் கிணங்கி கிருஷ்ணசந்திரன் விட்டு விட்டதால், 'ஆட்டுவிப்பன் கிருஷ்ணசந்திரனே' என்பதும் தெளிவாயிற்று.

அவளது வாழ்வே அந்தரத்தில் வெறும் நூலிழையில் தொங்குகிற உணர்வு. 'முதலில் விடியட்டும்! அவன் வாயாலேயே விஷயத்தைக் கக்க வைக்கிறேன்' என்று கறுவினாள்.

ஆறு மணியானதும் இறங்கி வந்து, காரை எடுத்துக் கொண்டு கிளம்பினாள். பெட்ரோல் பங்கிலும் பெட்டிக் கடையிலுமாகத் தனக்கு வேண்டியதை வாங்கிக் கொண்டாள். மேலே, நேராக மணிவாசகத்தின் வீட்டை அடைந்து கதவைத் தட்டினாள்.

உதயரேகாவைக் கண்டதும் ஒரு கணம் திகைத்த போதும், உடனேயே மணிவாசகத்தின் முகம் வழக்கம் போல் ஆகிவிட்டது. சாதாரணமாக வரவேற்று, உள்ளே அழைத்துச் சென்றான்.

உணர்ச்சியற்று நோக்கியவனிடம், "ஒருவன் நல்ல நண்பனாக இருப்பது என்றால், அந்த நண்பர் சொல்வதை எல்லாம் அப்படியே செய்வது அல்ல. தோழனுக்கு எது நல்லது, எது கெட்டது என்று யோசித்து அதற்குத் தக



**"புது மானேஜர் எல்லார்கிட்டேயும் நல்ல பேர் எடுக்கணும்னு ஆசைப்படறார், அதை ஏன் குறை சொல்றே?"**

**"பின்னே, பாட்டி செத்துட்டதா லீவ் போட்டா உடனே துக்கம் விசாரிக்க மாலையோட வீட்டுக்கு வந்து சேரணுமா?"**

**- ஆலத்தம்பாடி ராஜகோபால்**

செயல்படுவதுதான். சொல்லுங்கள் மிஸ்டர் மணிவாசகம், என் கணவர் எங்கே?" என்று அதிகாரமான குரலில் விசாரித்தாள் உதயரேகா.

அவன் மறுப்பாய்த் தலையசைக்கவும், அருகில் வைத்திருந்த டின்னைக் குனிந்து எடுத்தாள்.

"பாருங்கள், இது பெட்ரோல். இது தீப்பெட்டி. நீங்கள் எனக்குச் சரியான பதில் சொல்லாவிட்டால் இங்கேயே கொளுத்திக் கொள்வேன். உங்கள் வீட்டு ஹாலில் ஒருத்தி தற்கொலை செய்தாள் என்றால், அப்புறம் உங்களை உண்டு இல்லை என்று ஆக்கி விடமாட்டார்களா? யோசித்து பதில் சொல்லுங்கள். ஆனால் ஒன்று. அப்படி ஒன்றும் நான் செத்துவிட மாட்டேன் என்று மட்டும் நினையாதீர்கள். உங்கள் நண்பரைப் பிரிந்து வாழ்வதைவிடச் சாவு எனக்கு சுகமே."

மணிவாசகத்தின் சீரியசான முகத்தில் ஒரு சிறு புன்னகை லேசாகத் தோன்றியது. சம்மதமாய்த் தலையசைத்து, "எனக்குப் பிரச்னையாகிவிடும் என்ற பயத்தால் அல்ல சகோதரி. வெகு நாட்களாகவே - அதுவும் நேற்று முன் தினத்துக்குப் பிறகு உங்களிடம் எதையும் மறைப்பது எனக்கும் சரியாகப் படவில்லை. அவனிடம் சொன்னேன். ஆனால்... உட்காருங்கள். உங்களுக்கென்று என்னிடம் ஒரு கடிதம் தந்திருக்கிறான். சற்றுப் பொறுத்துத் தரச் சொன்னான்...." என்றவன் ஒரு பெருமூச்சு விட்டு, "அதைப் படித்துப் பாருங்கள். எல்லாம் தெரிந்துவிடும்" என்று உள்ளே சென்று ஒரு கவரை எடுத்து வந்து உதயரேகாவிடம் கொடுத்தான்.

கனமான உறை. பல பக்கங்கள்! இத்தனை பக்கங்களில் கிருஷ்ணசந்திரன் என்ன எழுதியிருக்கிறான்?

அவசரமாகப் பிரித்து இரண்டு வரி படிக்கு முன் அவளுக்கு முகம் வியர்த்து மூச்சடைத்துப் போயிற்று.

(தொடரும்)



# கலர்க் கலராய் ஆசை

## மேலாண்மை பொன்னுச்சாமி

ஆறாங் கிளாஸில் இருக்கிற ஆறுமுகத்துக்கு, 'காய்ச்சல் வரவில்லையே' என்று வருத்தம் என்றால்.... வருத்தம், அப்படி வருத்தம்.

'ஐயோ பாவம்' என்று நாலுபேர் பரிதாபப்படுகிற மாதிரி... ஏதாச்சும் நோய் வந்தால் நல்லது. நோயைத் தீர்க்க ஊசி மருந்து இருக்கிற மாதிரி, நோயை வரவழைக்க ஏதாச்சும் வழி வகை இருக்கிற மாதிரி தெரியவில்லை, ஆறுமுகத்துக்கு. தெரிந்தால்.... செய்து கொள்வான்.

மதியம் ரெண்டு மணிக்கு இங்கிலீஷ் வாத்தியார் வந்து விடுவார். நேற்றே கண்டிப்பாகச் சொல்லி விட்டார்.

"நாளைக்கு 'ஃபார் வாண்ட ஆப் ஏ நெயில்' போயமை மனப்பாடமா ஒப்பிக்கணும். படிச்சுட்டு வாங்க. எவனாச்சும் ஒப்பிக்கலே...? இந்தா இருக்கு பிரம்பு. முதுகுத் தோலு பிய்ஞ்சு போகும்."

அவர் பிய்க்கிறவர்தான். அடித்தார் என்றால் நாயடி பேயடிதான். வகுப்பில் ரொம்பக் கண்டிப்பானவர்.

ஆறுமுகமும் நேற்று பூராவும் இங்கிலீஷ் புத்தகத்துடன் மல்லுக்கட்டிப் பார்த்தான். ராத்திரி பத்து மணி வரைக்கும் உருப்போட்டுப் பார்த்தான். ஊஹுூம்!

"பார் வாண்ட் ஆப் தி ஹார்ஸ்" பிடிபட்டால், "தி ரைடர் வாஸ் லாஸ்ட்" நழுவிக் கொள்கிறது. ஒரே வார்த்தை ரெண்டு வாக்கியங்களில் மாறி மாறி வரும். அது, ஆறுமுகத்தைக் குழப்பிவிடும். ஞாபகத்தில் பிடிபட்டிருந்த வாக்கியக் குருவியை பறக்கவிட்டு விடும்.

வாத்தியார் வந்து கேட்பார். என்ன சொல்ல? எப்படிச் சொல்ல? அதுதான்... குதிரை ரெக்கை விரித்துப் போய் விட்டதே... ஆணியுமில்லாமல், சாம்ராஜ்யமுமில்லாமல், சூன்யமாய்....

நிச்சயமாய் மப்பைக் கழட்டி விடுவார். பிரம்பு, தீச்சாட்டையாய் 'பளீர்', பளீ'ரென்னும். அதை நினைத்தால், இப்பவே வயிற்றில் 'பகீர்' பகீ'ரென்கிறது.

என்ன செய்ய? காய்ச்சல் கீய்ச்சல் வந்து விட்டால், தொல்லை கழிந்து விடும். வீட்டுக்குப் போய்விடலாம். இந்த நெயில் என்கிற இங்கிலீஷ் லாட ஆணி முகரையில் முழிக்காமல் தப்பித்து விடலாம்.

காய்ச்சலும் வரல்லியே... ஆறுமுகத்துக்கு தர்ம சங்கடமாக இருந்தது. மணி பன்னிரண்டை நெருங்குகிறது. தமிழய்யா இலக்கணத்தில் 'எழுவாய் பயனிலை' விளக்குகிறார்.

ஆறாம் வகுப்பு மட்டும் வெட்ட வெளியில். இடமில்லை. பள்ளி வளாகத்தில், வேப்ப மரத்தடியில். மரத்தைச் சுற்றி வட்டமாய் சிமெண்டுத் திண்ணை. அதில் ஆசிரியரும் கரும்பலகையும். பிள்ளைகள் மணலில்.

இங்கிருந்து பார்த்தால்... கடை நன்றாகத் தெரியும். வெள்ளையும் சொள்ளையுமாக ஏழெட்டுப் பேர். அவர்களை வரவேற்கிற பரபரப்பில் உள்ளூர்க்காரர். கடையிலிருந்து கலர்களை வாங்கி உடைத்துக் கொடுக்கிற விறுவிறுப்பு.

கலர் உடைக்கிற சத்தம். கலர் மூடிகள் விழுகிற 'கலீர், கலீர்' சத்தம். ஆறுமுகம் மனசுக்குள் கலர்ப்பானத்தின் வாசம். உடைத்தவுடன், பாட்டிலுக்குள்ளிருந்து திமிறிப் பீறிடுகிற நுரை. எழுகிற புகை இழைகள்.

இவனுக்குள் கலர்ச் சபலம். நாக்கில் எச்சில் ஊறுகிறது. கலர் குடித்தவுன் ஒரு ஏப்பம் வருமே... நெஞ்சின் முட்டலைப் பிளந்து கொண்டு வருகிற ஏப்பவாசம்.

ஆறுமுகம் வீட்டுக்கு விருந்தாளி ஒருத்தர் வந்திருந்த சமயத்தில், அம்மா சொன்னாள்.

"ஏலேய் ஆறுமுகம், கடையிலே போய் ஒரு கலரு வாங்கிட்டு வாடா.

ஓடுறா."

"கோலிக்குண்டு கலரா.... டப்பாமூடிக் கலரா?"

"நல்ல கலரா பாத்து கேட்டு வாங்கிட்டுவா."

"எம்மா...."

"என்னடா? போடா, வெருசா."

"எம்மா, எனக்கும் ஒன்னு."

"சரி சரி.... வாங்கிக்கோ."

அம்மாவுக்கு விருந்தாளியை உபசரிக்கிற பரபரப்பு. அவசரத்தில் இவனுக்கும் அனுமதி கிடைத்துவிட்டது. அன்றைக்குக் குடித்த கலர்.

மடக்கு மடக்காக அனுபவித்து ரசனையோடு குடித்தான். கருந்திராட்சை நிறத்திரவம். ...பந்த ஏப்பத்தில் திராட்சை மணம்.

நாக்கை நீட்டி நீட்டி கண்ணாடியில் பார்த்தான். அந்தத் திரவ நிறம் நாக்கில் படிந்திருந்தது. பார்த்துப் பார்த்து ரசித்தான். ரசிக்க ரசிக்க மனசுக்கு ரெக்கை முளைத்தது. பறந்தான்.

ஆறுமுகத்துக்கு இன்னைக்கும் கலர் குடிக்...ணும் போலிருந்தது. நினைக்க நினைக்க நாக்...ில் ஊறுகிற எச்சில். விதையாக விழுந்த கணத்...ில், விருட்சமாகி விடுகிற வினோத உணர்வு. ...பூசைச் சலனம், விருட்டென்று பேரலையா...றது. பிரளயமாகவே ஆகிவிட்டது.

எழுந்து நின்றான், ஆறுமுகம். நேராக ...மிர்ந்து நிறகாமல் குன்னிப் போயிருந்தான். ...மிழய்யா அவனைப் பார்த்தார்.

"என்னலே?"

"சார்... வவுத்தை ...லிக்குது" அடி...யிற்றை அழுந்தப் ...ற்றினான்.

"எப்ப இருந்து?"

"அப்பவே வலிச்...து சார். இப்ப ...ராம்ப வலிக்குது ...ார்... தாங்கமுடியலே ...ார்."

"சரி... என்ன செய்...ப் போறே? வீட்டுக்...ப் போறீயா?"

"ஆமா... சார்."

"ரைட். ஹெட் ...ாஸ்டர் கிட்டே ...சால்லிட்டுப் போ."

...ைபக்கட்டை ...க்கிக் கொண்டு ...ஹட் மாஸ்டர் ...றைக்கு வந்தான். ...ங்கேயும் அதே ...ப்புதான். வேதனை ...ளாத முகச்சுளிப்பு. ...டி வயிற்றைத்

**நாக்கை நீட்டி நீட்டி கண்ணாடியில் பார்த்தான். அந்தத் திரவ நிறம் நாக்கில் படிந்திருந்தது. பார்த்துப் பார்த்து ரசித்தான். ரசிக்க ரசிக்க மனசுக்கு ரெக்கை முளைத்தது. பறந்தான்.**

தாங்கிப் பிடித்து கோணி நின்ற பாவனை.

"சரி... போய்த் தொலை."

இங்கிலீஷ் வாத்தியாரைச் சந்திக்காமல் தவிர்த்தாகி விட்டது. போயம் தெரியாமல், பேய் முழி முழிக்க வேண்டியதில்லை. பிரம்படியின் சுளீரடிகள் பட வேண்டியதில்லை. தப்பித்தாகி விட்டது.

இதே வயிற்று வலியைச் சொல்லி... அழுது புலம்பி அம்மாவைக் கரைத்து... கலர் குடித்து விடவும் செய்யலாம். ஒரே கல் ரெண்டு காரியம். அடி சக்கை!

அம்மா வீட்டில்தான் இருப்பாள். கூலி வேலைக்கும் நாலு நாளாய் கூப்பிடுவாரில்லை. காலையில் கூட அங்கலாய்த்துக் கொண்டிருந்





பிரிட்டனில் சாலை வசதியற்ற இடத்தில் கட்டப்பட்ட இந்தக் கலங்கரை விளக்கத்துக்கு வந்து போக வசதியாக அதன் கூறை ஹெலிகாப்டர் தளமாக அமைந்துள்ளது. ஹெலி காப்டரை எதிர்பார்த்துக் காத்திருக்கின்றனர் இருவர். முற்றிலும் சூரிய சக்தியை மின்சாரமாக மாற்றி ஒளிபரப்பும் லைட் ஹவுஸ் இது.

— நன்றி : கார்டியன் வீக்லி

தாள்.

"கூத்துவன் பண்ணுற கொடுமை. மழை தண்ணியில்லாம அத்துப் போச்சு. காடுகரை கள்லே வெள்ளாமையில்லே. மனுச மக்களுக்கு வேலை ஜோலியில்லே. கூலி சனம் என்னத்தை வைச்சு... வவுறு நனைக்க?"

கடைக்காரர் கடன் கொடுக்க மலைத்தா ராம். 'பாக்கி ரொம்ப இருக்கு. எப்படிக் கொடுக்க?' என்று குதர்க்கமாய் விசாரித்தாராம். அம்மா அதைச் சொல்லிச் சொல்லிப் புலம்பிக் கொண்டிருந்தாள்.

'ஏவாரி வரட்டும். இருக்குற நாலு கோழி களையும், ஒரு சேவலையும் எடை போட்டு வித்துட்டு... கடைக்காரர் பாக்கியை அடைக்கணும்' என்று ரோஷம் ரோஷமாய் முணங்கினாள். இந்நிலையில்....

"எம்மா... கலரு வேணும்" என்று கேட்டால்... ஆங்காரம் தாங்காமல், அடிக்கவே வருவாள். செத்துப் போன அய்யாவைப் படைத்த சாமியை, வாய்த்த வாழ்க்கையை எல்லாத்தை யும் கூட்டிப் பிடித்து திட்டித் தீர்ப்பாள்.

"தாய் தவுட்டுக்கு அலைஞ்சாளாம். புள்ளை இஞ்சிப் பச்சடி கேட்டு அழு தானாம். அப்படியில்லே இருக்கு உங்கதை" என்று சொலவடை சொல்லி வைவாள்.

ஆனாலும்... இன்னைக்கு எப்படி யாச்சும் கலர் குடிச்சேயாகணும்.

ஆறுமுகத்துக்குள் பதுங்கிப் பதுங்கி நகர்கிற யோசனைகள். குறி மீது பாய்ச் சலுக்கு பம்மிப் பம்மி நகர்கிற பூனை நினைவுகள்.

**வீ**ட்டுக் கதவு திறந்து கிடந்தது. வாசலில் தலை வைத்து அம்மா படுத்திருந்தாள். அம்மாவின் மெல்லி சான குறட்டை.

இவனது பிஞ்சுக் காலடி அரவம். மண்ணில் செவ்வந்திப் பூவிழுகிற சத்தம். ஆனாலும் மகன். ரத்தப் பிறப்பு. அந்த மெல்லிய அதிர்விலேயே விழித் துக் கொண்டாள்.

பைக் கட்டோடு ஆறுமுகம். அவள் பதற வில்லை. பதைக்கவில்லை. என்னமோ ஏதோ என்று துடிக்கவு மில்லை. பிள்ளை குணம் அறியாத பெத்தவளா?

எதிர் வீட்டு நிழலைப் பார்த்து, நேரத்தை உணர்ந்து கொண்டாள். மகனைப் பார்த்து கேலிச்சிரிப்பாய் வரவேற்றாள்.

"போன மச்சான் திரும்பி வந்தான்.... பூமணத்தோடங்குற கதையா வந்து நிக்கீயே... என்னலே?"

"வாத்தியாரு போகச் சொல்லிட்டாரு."

"எதுக்கு?"

"வவுத்தவலி."

"வாத்தியாருக்கு வவுத்தவலின்னா... ஒன்னை எதுக்குப் போகச் சொல்லுதாரு? கோயமுத்தூர்லே இடி இடிச்சா... குத்தாலத்துல மழையா பெய்யும்?"

பைக் கட்டை வீட்டுக்குள் போட்டான். அம்மா காலடியில் குத்துக்கால் வைத்து உட்

கார்ந்து சுவரில் சாய்ந்தான். அம்மாவின் கிண் டலில் புண்பட்டவனைப் போல, முகத்தில் ஒரு சிடுசிடுப்பு.

"வாத்தியாருக்கில்லே... எனக்குத்தான்."

"ஒனக்கா? வவுத்தவலியா?"

"ஆமா. அடிவவுத்துலே 'சுருக், சுருக்'குன்னு குத்துது."

"கோழிக்கறியும் சோறுமா தின்னுட்டுப் போனே? கொடல்லே குறுக்கே வுழுந்து வவுத்தை வலிக்க? பழைய கஞ்சிதானே குடிச் சிட்டுப் போனே?"

"ஆமா...."

"பெறகெதுக்கு வவுத்தவலி?"

"என்னத்துக்கோ!"

ஆறுமுகத்துக்குள் ஒரு புழு ஊர்ந்து செல் கிற மாதிரியான ஓர் உணர்வு. அம்மாவின் நக்க லும் நையாண்டியுமான குரல். இவனை நம்ப வில்லை. இவன் ஏமாற்றில் ஏமாறாமலிருக்கிற அம்மா.

கலர் கிடைக்காமப் போயிருமோ... கதை கந்தலாகிப் போகுமோ... கடை வாசலில் வெள்ளை வேட்டிகள் குடித்த திரவம். அண் ணிக்கிக் குடித்த கலர். விட்ட ஏப்பம். மனசுக் குள் சோடா மூடிகள் விழுந்த 'கலீர், கலீர்' சத்தம்.

"அப்ப... வவுத்தவலிக்கு? ஊம்?"

"ஆமா. தாங்க முடியலே."

"இன்னிக்கு 'வெளியே' போனீயா?"

"ம்."

"போனதா?"

"அதெல்லாம் போச்சு."

"அப்படியா....?" அம்மா யோசிக்கிறாள். சில கணங்கள் இவனுக்குள் 'படக், படக்.'

"அஞ்சறைப் பெட்டியிலே ஒரு சுக்குத் துண்டு கெடக்கு. அம்மியிலே வைச்சு உணுக் கித்தாரேன். சக்கரைக் கட்டியை கடிச்சுக்கிட்டு தின்னுரு. வவுத்தவலி, மாயமாய்ப் போயிரும். ம்?"

"சுக்கா? அதெல்லாம் வேண்டாம்."

"ஏண்டா?"

"அது ஒறைக்கும். அந்த ஒறைப்பை எவன் தாங்க?"

"வலிவுடணும்னா... ஒறைப்பை தாங்கித் தான் ஆகணும். ஒழுந்த பொதியை, சொமந்து தான் தீக்கணும் கழுதை."

மகன் முகத்தையே பார்க்கிற அம்மா. விசனப்பட்ட சின்ன முகம். வயிற்றையே நசுக்கி அமுக்கி விடுகிற கை. கோபமும், வேத னையுமான முகம். 'நிஜத்திலேயே... வவுத்த வலி தானோ....'

பெருமூச்சோடு எழுந்தாள். புளித் தண் ணீர்ப் பானையில் ஒரு கிளாஸ் முகர்ந்து கொடுத்தாள்.



# பகல் கொள்ளை!

அந்நிய பகிஷ்கரிப்பு
சுதேசி இயக்கம் -
மகாத்மா
சொன்னதாய்
ஞாபகம்
கொகொ கோலா
குடிக்கும் போது.

நவகாளி யாத்திரை
நடத்திய பூமியில்
இடிந்தது மசூதி.

கொடியங்குளம்
பள்ளி பாடத்திலும்
பாரதி பாட்டு -
"ஜாதிகள்
இல்லையடி
பாப்பா!"

ஜெயின் டைரி
படித்து வெறுத்து
அரசு சின்னமான
ஸ்தூபி
சிங்கங்களுக்கு
ஆத்திரமான
முகங்கள்.

வந்தார்கள்
சோமநாதபுரத்தில்
வென்றார்கள் - சரி.
கும்பகோணம்,
மன்னார்குடியிலும்
யார் எடுத்தார்கள்!

"நள்ளிரவில்
வாங்கினோம்
விடியவே இல்லை" -
பொய்
நள்ளரவில்
பெற்றோம்;
பட்டப்பகலில்
பறிகொடுத்தோம் -
மெய்!

— அண்ணா
அன்பழகன்

---

"குடிடா... சூட்டு வவுத்த வலின்னா... வுட்டுரும்."

"வேண்டாம்... போ."

"சுண்ணாம்பை கால் வெரல் நகங்கள்லே தடவட்டுமா? உள்ளங்கால்லேயும் தடவுனா... சூடு தணிஞ்சிடும்."

"சுண்ணாம்பா? பொத்துப் புண்ணாப் போயிரும்."

"வெத்தலையிலே சோத்துக்குப் போடுற உப்புக் கல்லை சுத்தித்தாரேன். மென்னு முழுங் குறீயா?"

"நீதான் முழுங்கு... அதை."

சகிக்க முடியாத வெறுப்பில் எரிந்து விழு கிற ஆறுமுகம். அவனது சின்னக் கண்ணில் கோபத்தகிப்பு. நிராசையின் அரூபச் சுமையை முன்னுணர்ந்து விட்ட வலியின் துடிப்பு. அம்மாவுக்கும் மெல்லிசான கோபம்.

"என்னதான்.... செய்யணும்கே? வவுத்த வலின்னு வந்து நின்னு, உசுரைப் புடுங்குறே?"

"சோடா குடிச்சா சரியாப் போவும்!"

"சோடாவா... கலரா....?"

ரெண்டு பேர் பார்வைகளும் திடுமென்று

மோதிக் கொண்டன. கண்ணாமூச்சி காட்டிக் கொண்டிருந்த மைய உண்மையை நெருங்கி விட்ட மாதிரியோர் உணர்வு.

அந்தரங்கம் பிடிபட்டுப் போச்சோ என்கிற தடுமாற்றத்தில் விலகுகிற மகனின் பார்வை. அவன் கண்ணுக்குள் முகம் காட்டிவிட்டு மறைகிற ஒரு கள்ளத்தனம்.

"சொல்லுடா... சோடாவா, கலரா....?"

"ஏதாச்சும் ஒன்னு."

முணுமுணுப்பாக கிசுகிசுக்கிற ஆறுமுகம். தொண்டைக்குள் உயிராக பம்மிப் பதுங்குகிற குரல்.

"கடையிலே போய்.... வாங்கிக்கறியா?"

"அப்ப... துட்டு குடு."

"ஊம்... சாயங்காலம் பால் வாங்கலாம்னு வெச்சிருந்தேன். அதுக்கும் சனியனா நீ வந்துட்டியா?"

கவலைப் பெருமூச்சோடு முந்திமுடிச்சை அவிழ்த்தாள். ஒன்னரை ரூபாய். எடுத்து நீட்டி விட்டு.. வெறும் முந்தியை உதறினாள். கடந்த கால முடிச்சின் அடையாளமாய் சுருக்கங்கள். வெறுமனே காற்றில் அசைந்தது, சோகமாய்.

துட்டை வாங்கிக் கொண்டான். அவனுக்குள் ரெக்கையடிக்கிற சந்தோஷப் படபடப்பு. விசிலடிக்கிற மனப் பரபரப்பு.

ஒரே ஓட்டமாய் ஓடினான். சிட்டாய்ப் பறந்தான். ஆகாயத்தில் மிதக்கிற ஆனந்தக் கிறுகிறுப்பு.

ஆசை ஆசையாய் ஓடினான். அவனுக்கும் முன்னால், அவன் மனசு. பாய்ச்சல் வேகத்தில் கடையில் நின்றான். கலர் வாங்கினான். ஆசை ஆசையாகக் குடித்தான். ஆரஞ்சுக் கலர். மிடறு மிடறாக, பதறாமல், ஆற அமர... ரசித்து ரசித்துப் பருகி....

நாக்கில் பரவுகிற தித்திப்பு. வருகிற ஏப்பம். நாசிக்குள் முட்டுகிற ஆரஞ்சு வாசம். நாக்கில் படிந்திருக்கும் திரவ நிறத்தைப் பார்க்கணும், கண்ணாடியில். வீட்டுக்கு ஆவலாய் வந்தான். வாசலை நெருங்கினான். அங்கே -

சோகத்தில் நனைந்து துவண்டு போன அம்மாவின் அங்கலாய்ப்புக் குரல். அழுகைக் கசிவான குழைவுக் குரல். தனிமைப் புலம்பல்

"நாவுக்கு ருசியா நாலா பண்டங்க வாங்கிக் குடுக்குறதுக்கு வக்கத்துப் போன இந்தப் பாதகத்தி வவுத்துலே வந்தா... நீ பொறக்கணும்? ஏந் தங்கப் பெட்டி... ஒரு கலருத் தண்ணிக்கு இம்புட்டு வேஷமும் பாவ்லாவுமா.... நீ போடணும்?"

வாழ்வின் அவலமாய் அம்மாவின் குரல். ஆறுமுகத்தை கற்றையாய் அறைந்த அம்மாவின் உள் மன ரணம். இப்போது கலர் கசந்தது, ஆறுமுகத்துக்கு.

# ஆன்மீகம் பேசிய பாவேந்தர்!

அப்போது நான் பம்பாயில் ஒரு பள்ளி ஆசிரியையாக இருந்தேன். அங்கு வாழும் தமிழர்கள் அழைப்புக்கிணங்க, பாவேந்தர் பாரதிதாசன் சொற்பொழிவுகள் ஆற்ற வந்திருந்தார். எனக்கு அவருடன் அறிமுகம் உண்டு. அவரது பேச்சுக்களைக் கேட்கவும் விருப்பம்தான். ஆனால் ஏதேதோ வேலைகள். செல்ல முடியாத சூழ்நிலை.

ஒரு நாள் நண்பகல். வாசலில் ஒரு கார் வந்து நிற்க, யார் என்று பார்க்கப் போன எனக்கு இன்ப அதிர்ச்சி. பாரதிதாசன் தான் என்னைத் தேடி வந்திருந்தார்!

"என்ன, நேற்று என் சொற்பொழிவுக்கு வந்தாயோ?" என்று கேட்டார்.

"இல்லை..." - தயங்கினேன்.

"போகட்டும். கோரேகான் பேச்சுக்கு?"

"மிகத் தொலைவு... இரவு நேரம் வேறு. அதனால், அதற்கும் வரவில்லை!"

அவருடன் வந்திருந்த சில ஆசிரியர்கள், "பிற்பகல் வீட்டில் இருப்பீர்களா?" என்று கேட்க, வெளியே சில வேலைகள் இருப்பதாகச் சொன்னேன்.

கோபம் வந்துவிட்டது பாவேந்தருக்கு.

"அவர்கள் வரவும் மாட்டார்கள். வீடு தேடி வந்தால் அழைக்கவும் மாட்டார்கள்" என்றார்.

நான் பதறி, "என் வீட்டுக்கு நீங்களெல்லாம் வருவீர்களோ என்னவோ என்று தயங்கித்தான் நிற்கிறேன். வாருங்கள்!" என்று முதல் மாடியில் என் வீட்டுக்குக் கூட்டிப் போனேன்.

வரவேற்பறையில், ஒரு வாழைமர மாடல் வைத்திருந்தேன், கன்றுகளுடன். இந்தி இலக்கியத்தின் ஆயிரமாண்டு தோற்றம், வளர்ச்சி குறித்து, பள்ளியின் பத்தாம் ஆண்டு நிறைவு விழாவுக்காகச் செய்து வைத்திருந்த project அது.

"தங்களுக்கு இந்தி பிடிக்காது. இது பள்ளி விழாவுக்காகச் செய்தது" என்று தயங்கிச் சொன்னேன், அவர் அதை கவனித்ததைப் பார்த்துவிட்டு.

"யார் சொன்னது நான் இந்திக்கு எதிரி என்று? எத்தனை மொழிகள் தெரிந்து கொண்டாலும் நல்லதுதான். நீயும் படி. நன்றாகக் கற்றுக் கொடுக்கவும் செய்!" என்றார்.

இது எனக்கு முதல் வியப்பு.

சற்று நேரம் இருந்து, பேசிவிட்டுப் புறப்பட்டார்.

"இனிய கனவு போல் உள்ளது. நீங்கள் வந்த போது என் கணவர் இல்லாததுதான் குறை" என்று வருத்தப்பட்டேன்.

"எப்ப வருவான்?" என்றார்.

"மாலை ஆறரை ஆகிவிடும்!"

'சரி' என்று புறப்பட்டு விட்டார்.



இரவு ஏழரைக்கு கதவு தட்டப்பட, திறந்தால், மீண்டும் பாவேந்தர்!

"உள்ளே வான்னு சொல்லு. நீதானே உன் புருஷன், நான் வந்தா சந்தோஷப்படுவான்னு சொன்னே? வந்தேன்!"

சிலிர்த்துவிட்டது எனக்கு!

"இரவு ஒன்பது மணிக்கு 'பாண்டுப்'பில் கூட்டம் இருக்கிறது.

நேரமாகி விடும்தான். ஆனால் வண்டி இருக்கிறது. கிளம்புங்கள்!" என்றார்.

கிளம்பினோம்.

போகிற வழியில், "நீதான் இன்றைய கூட்டத்துக்குத் தலைமை!" என்றார். அதிர்ந்து விட்டேன்.

"ஐயோ, அதெல்லாம் முடியாது!" என்று உடனே மறுத்துவிட்டேன்.

அவரா விடுவார்? மேடைக்குப் போனதும் பொதுமக்கள் எதிரிலேயே என்னைக் கூப்பிட்டு தலைமைக்கு உட்கார வைத்துவிட்டார்!

அந்தக் கூட்டத்தில் எனக்கு இரண்டாவது ஆச்சர்யம், அவரது பேச்சு முழுக்க ஆன்மிகமாகவே இருந்தது! பட்டினத்தார், அடிகளார், தேவாரங்கள், திவ்யப்பிரபந்தம் என்று ஏராள மேற்கோள்கள்!

கூட்டமே வியந்தது!

திரும்புகையில், "நான் ஏன் உன் வீட்டுக்கு வந்தேன் தெரியுமா? சங்கத்துல உன்னை 'எங்கே'ன்னு கேட்டப்போ, பயலுங்க சரியா பதில் சொல்லலை. தவிர, திட்டிப் பேசினாங்க. 'சரிதான் சரக்கு இருக்கும் போல'ன்னுதான் நேர்லயே பார்க்க வந்தேன்!" என்றார்.

'முதுகுக்குப் பின்னால் ஒருவரைப் பற்றிச் சிலர் தூற்றினால், அதை நம்பாத இப்படி ஒரு பண்பாளரா!' என எண்ணிச் சிலிர்த்துப் போனேன்.

- மீனாட்சி சேஷன்,
சென்னை - 4.

மெய்சிலிர்த்த அனுபவம்



# முஸ்தபா

நெகடிவ் ஹீரோ கதையாகத் தொடங்கி, இந்து – முஸ்லிம் இணக்கம் பற்றியெல்லாம் சொல்லி, குடும்பப்பாங்கு முகம் பெற்று, சென்ட்டிமென்ட்களில் மூழ்கி எழுந்து, உணர்ச்சி கொப்பளிக்க முடித்து விடுகிறார்கள் – ஒரு வழியாக!

நாடகக்காரர் பிரசன்னாவின் கதை, வசனம் என்பதால் அடிக்கடி, 'நாம் இருப்பது உதயம் தியேட்டரிலா, ராணி சீதை ஹாலிலா?' என்ற சந்தேகம் வந்து விடுகிறது. ஆனாலும் ரொம்ப நாட்களுக்குப் பிறகு வசனங்களுக்காகக் கைதட்டல் வாங்குகிற படம் என்ற வகையில் கவனம் பெறுகிறது.

முஸ்தபாவாக வந்து 'வாப்பா, வாப்பா' என்று கூப்பிட்டு, ஒரு காட்சியில் குரான் ஓதி, மிச்சத்தில் சுருட்டு கடித்து, சண்டை போட்டு, செத்துப் போகிறார் நெப்போலியன். பாவங்கள் ஏதும் காட்ட, முகம் மறுக்கிறது. ஒரே மாதிரி பார்வை. ஒரே மாதிரி பேச்சு. ஒரே மாதிரி அழுகை. ரசிகர்கள் ஒரே மாதிரி முகம் சுளிக்கிறார்கள்.

ஆனால் கவுண்டமணி வரும்போதெல்லாம் கலகலப்பும் வந்து விடுவதால் கொஞ்சம் சுவாசிக்க முடிகிறது. குரலைக் கொஞ்சம் குறைத்துக் கொண்டால் ரசிக்கவும் முடியும்.

இரட்டை வழிப் பாதையில் செல்லும் கதை. ஒன்று, நெப்போலியனின் அடியாள் உத்தியோகமும் அதில் சந்திக்கும் சோகங்களும்.

இன்னொரு பாதையில் ஒரு நேர்மையான அரசு ஊழியரின் குடும்பமும் ஏழ்மையும்.

இரண்டும் உரசுகையில் இந்து – முஸ்லிம் சமத்துவம் பற்றிப் பேச ஒரு மேடை கிடைக்க, வசனகர்த்தா பிரசன்னா நகைச்சுவை முலாம் தடவி என்னவோ தருகிறார். ரசிக்கலை.

படத்தில், பளிச்சென்ற விஷயங்கள் இரண்டு. 1. சார்மிளா 2. கேமரா. பாடல்களோ, இசையோ, தொகுப்போ – ஏதும் சுகமில்லை. படம் அபார நீளமாகத் தெரிகிறது. கண்ணை மூடிக் கொண்டு முதல் அரைமணி நேரக் காட்சிகளைத் தூக்கிப் போட்டார்களென்றால் சுமாரான நாடகம் பார்த்த உணர்ச்சியாவது மிஞ்சும்.

...ன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
...ரியர் : சீதா ரவி.
...வரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624;
...குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
...ண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
... மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# ஓம் ஸ்ரீ ஸ்கந்தாஸ்ரமம்

போன் : 240660

**உடையாப்பட்டி, சேலம் - 636 140**

## வேண்டுகோள்

அன்புடையீர்,

உலக மக்கள் நலம் கருதி ஸ்ரீகாளி, தாரா, ஷோடசீ, புவனேஸ்வரி, பைரவி, சின்னமஸ்தா, தூமாவதி, பகளா முகி, மாதங்கி, கமலாத்மிகா என்று தச மஹாவித்யையில் கூறப்பட்டுள்ள, பத்து பராசக்திகளின் மஹாமந்திர ஹோமம் ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்களின் அருளாணைப்படி பத்து நாட்களில் யுவ வருஷம் பங்குனி மாதம் 15-ஆம் தேதி முதல் 24-ஆம் தேதிவரை (28.3.96 முதல் 6.4.96) வரை தினசரி காலை 7.00 மணி முதல் மாலை 7.00 மணி வரை சேலம் ஓம் ஸ்ரீ ஸ்கந்தாஸ்ரமத்தில் நடைபெற உள்ளது.

பத்து பராசக்திகளின் மஹாமந்திரத்தின் பலன்கள் சொல்லுக்கு அடங்காததாகும்.

இன்று மக்களிடம், ஆசை, பேராசையாகி மக்களின் நல்லறிவைக் கெடுத்து வருகிறது.

உலக மக்கள் அனைவருமே ஆசைக்கு அடிமையாகிவிட்டார்கள் என்று நன்கு தெரிய வருகிறது என்றும், ஆசைகள் மக்கள் மனத்தை விகாரப்படுத்தி வருகிறதென்றும் பகுத்தறிவுள்ள மனித குலத்தைத் துன்பங்களில் சிக்க வைப்பது ஆசைதான் என்பதை நல்லறிவுள்ள மக்கள் மறந்து விடக்கூடாதென்றும்,

உலக மக்களை அஞ்ஞானிகள் ஆட்டிப் படைத்து வருகிறார்கள் என்றும்,

பேராசையுள்ளவனிடம் உண்மையிராது. பேராசை ஆத்திரத்தையுண்டாக்கி வைப்பதுடன், கலகத்தையும் உண்டாக்கும்.

பேராசையுள்ளவனிடம் கௌரவம் இராது. பேராசை உள்ளவன் அநியாயத்தை தைரியமாகச் செய்வான்.

பேராசை மதிமயக்கத்தை உண்டாக்கி, மனிதனின் மனத்தைக் கெடுத்துவிடுமென்றும்,

ஆசைக்கு அடிமையான மனிதனின் மனம் பொறாமைப்பட்டு, சுயநலத்தினால், பிறரைக் கெடுத்து வருவது, இக்காலத்தில் தினம்தோறும் உலகநாடுகளில் நடைபெற்று வரும் செய்திகளாக இருந்து வருகிறது என்றும்,

பேராசையினால் சத்தியத்தை, தர்மத்தை, மனிதாபிமானத்தை மறந்து தனது நாட்டிற்கும், வீட்டிற்கும் மிகப் பெரும் கேட்டை உண்டாக்கி வருகிற மக்கள் இவ்வுலகில் இருந்து வருகிறார்கள். சுயநலத்தின் மயக்கத்தினால் கண்கள் இருந்தும் அது குருடாகவே இருந்து வருகிறது.

மனிதனிடமுள்ள ஆற்றலை பேராசை மறைத்து அறிவையும், அன்பையும் அழித்து வருகிறது என்றும்,

சோம்பேறிகள் சுயநலத்தினால் கடமை, கண்ணியம், கட்டுப்பாடுகளை மறந்து, தனது நாட்டிற்கும், தனது வீட்டிற்கும் பலவீனத்தை உண்டாக்கி, உலகையே கெடுத்து வருகிறான் என்றும்,

இறைவன் உண்மையாக இருக்குமிடமான மனித குலத்தினரைத் துன்பப்படுத்திப் பேராசையினால் தனது நாட்டையும், தனது வீட்டையும் கெடுத்து வரும் மனிதன் தேசத் துரோகியாவான் என்றும், தனது மனசாட்சியை மறந்துவிட்ட பேராசை உடையவர்கள், பிறரைக் கண்டு பொறாமைப்பட்டு, கடமை, கண்ணியம், கட்டுப்பாடுகளை அறவே மறந்து, ஒழுக்கமற்றவனாகி, தீயவழியில் சென்றுவரும் இன்னாளில்,

பத்து பராசக்திகளின் திருவருள்உலகில் இருந்து வரும் ஒவ்வொரு ஆண்களுக்கும், பெண்களுக்கும் உறுதியாக வேண்டுமென்பதை முன்னிட்டு பத்து நாட்களில், தசமஹா வித்யா ஹோமத்தை, சேலம், ஓம் ஸ்ரீ ஸ்கந்தாஸ்ரமத்தில் சாஸ்திர சம்மதப்படி. உறுதியாக நடத்த ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்கள் அருளாணை பிறப்பித் துள்ளார்கள்.

மனித குலத்தில் பிறந்துள்ள ஒவ்வொரு ஆண்களும், பெண்களும், சேலம் ஓம் ஸ்ரீ ஸ்கந்தாஸ்ரமத் தில் 28.3.96 முதல் 6.4.96 வரை நடைபெறும் ஹோமத்தினை நன்கு உறுதியாக நடத்திக் கொடுக்க முன்வந்து, நமது நாட்டின் ஒவ்வொருவருடைய க்ஷேமத்தையும் முன்னிட்டு, முழு மனத்துடன் ஹோம கைங்கர்யத்தில் உண்மையாக ஈடுபட வேண்டுமென்று, ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் விரும்புகிறார்கள்.

**ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள்**

*மற்றும் ஸ்ரீஸ்ரீ ப்ரும்மானந்த ஸ்வாமிகள் ஆக்ஞைப்படி*

**E.V. விஸ்வநாதன்,** அட்வகேட்

**S.T. அண்ணாமலை,** ஆடிட்டர்

காரியதரிசிகள்



# 23

# மாலை மயங்குகின்ற நேரம்

கணவனின் கடிதம் தந்த அதிர்ச்சியில், மூச்சுக் காற்றுக்கு உதயரேகாவின் உடல் தவித்த போது அவளது உயிரும் அப்போது போய்விடப் போவதாகவே அவளுக்குத் தோன்றியது. அப்போதே இறந்து, ஆவி உலகில் கணவனை எட்டிப் பிடித்து விடப் போவதாகக் கூட எண்ணினாள்.

ஆனால், அவளது நிலையை உணர்ந்த மணிவாசகம், சட்டென வந்து தோளைப் பற்றிக் குலுக்கினான். குலுக்கியபடியே,

"உதயரேகா, இந்த வினாடி வரை, கேஸியின் உயிருக்கு எந்த ஆபத்தும் இல்லை. இந்தக் கடிதத்தை சற்றுப் பொறுத்துத் தரச் சொன்னான் என்றேனே! மறந்து போயிற்றா? உதயரேகா?.... சிஸ்டர்?'' என்று தெளிவான உச்சரிப்புடன் உரக்க உரைத்து, அவளை மேலும் உலுக்கினான்.

அவனது பேச்சைக் கருத்தில் ஏற்றாற் போல, உதயரேகா ஒரு பெரும் நெட்டுயிர்ப்புடன் மூச்சு விடத் தொடங்கவும், அவளை நடத்திச் சென்று ஒரு பிரம்பு கூடை நாற்காலியில் அமரச் செய்தான். உள்ளே சென்று, ஒரு தம்ளரில் குளிர்ந்த நீர் கொண்டு வந்து கொடுத்துக் குடிக்கச் சொன்னான்.

ஒரு மிடறு நீர் அருந்தும் போதே, ஒரு திடுக்கிடலுடன் நிமிர்ந்து, "நீங்.... நீங்கள் சொன்னது நிஜம்தானே? சும்மாவேனும் சொல்லவில்லையே? அவர் - உங்கள் நண்பர் இருக்கிறார் தானே?'' என்று வினவினாள். அந்த வினாடியில் அவளைக் காப்பதற்காக, மணிவாசகம் பொய் சொன்னானோ என்ற சந்தேகம் அவளுக்கு வந்து விட்டது.

ஆனால், ''சர்வ நிச்சயமான உண்மை, சிஸ்டர். வேண்டுமானால் கேசி மீதே சத்தியம் செய்யட்டுமா?'' என்று மணிவாசகம் உறுதியாகக் கூறவும், ஆறுதலுற்றவளாய், வேண்டாம் என்று தலையசைத்துவிட்டு மீதி நீரை அருந்தினாள்.

தம்ளரைக் கீழே வைத்துவிட்டு, மணிவாசகத்தை நேராக நோக்கினாள். "இந்த வினாடி வரை என்றீர்கள்....?''

அவன் தலையாட்டி விட்டுப் பேசாமலே நிற்கவும், "இப்போது கூட மறைப்பீர்களா?'' என்று அழுதுவிட்டாள் அவள்.

"மறைப்பதில் எனக்கு எப்போதும் உடன்பாடு இல்லை என்றேனே. கடிதத்தில் எல்லாமே எழுதியிருப்பதாகக் கேசி சொன்னான். அதனால்தான்....'' என்று நிறுத்தினான் அவன்.

அவனது இறுகிய பிடியில் கசங்கியிருந்த கடிதத்தை வெறித்துப் பார்த்தாள் உதயரேகா.

இதுவெடித்த முதல் குண்டிலேயே குலை நடுங்கிப் போயிற்று. இன்னும் என்ன சொல்லப் போகிறது இது?

"ஆனால் அவருக்கு ஆபத்து என்பது உண்மை?''

"ஆமாம்."

"பெரும் ஆபத்தா...?''

"ஆமாம்."

"என்ன மாதிரி ஆபத்து?''

கனிவுடன், "பாருங்கள் சிஸ்டர், அனேகமாக

நீங்களே இதற்குள் ஊகித்திருப்பீர்கள். முன்பு ஒரு சமயம் கேசியின் தலையில் அடிபட்டு.... அப்போது, கல்லூரியில் கடைசி ஆண்டு. சுற்றுலா போன போது படகுச் சவாரி போயிருக்கிறார்கள். வயதுப் பையன்கள் அல்லவா? 'நாங்களே துடுப்பு வலிக்கிறோம்' என்று கிளம்பி, படகு கவிழ்ந்து... இரண்டு பேர் இறந்து கூடப் போனார்கள். கேசிக்கு நீச்சல் தெரியும். அவனே முடிந்த அளவு ஏழெட்டு பேரைக் காப்பாற்றியிருக்கிறான். கடைசியில் படகோ, துடுப்போ, ஏதோ கட்டையோ பிடரியில் மோதி அடிபட்டு மயக்கமாகியிருக்கிறான். அதிக நேரம் தண்ணீருக்குள் முழ்கியிருந்ததால் மயக்கம் வந்திருக்கும் என்று எண்ணி அதற்கான சிகிச்சை மட்டும் செய்திருக்கிறார்கள். இவனுக்கும் எதனால் மயக்கம் வந்தது என்று எதுவுமே தெரியாது. விரைவில் தெளிந்து விடவும், யாரும் அது பற்றி மேலே யோசிக்கவே இல்லை. பிறகு அவ்வப்போது தலை வலிக்கத் தொடங்கியிருக்கிறது. வலி தீர, தேவைப்பட்டபோது மாத்திரை போட்டுக் கொண்டது தவிர, அப்போதும் அந்த விபத்தோடு இந்தத் தலைவலியைச் சம்பந்தப்படுத்தி கேசி யோசித்தான் இல்லை. உங்கள் திருமணத்துக்கு ஆறு மாதங்களுக்கு முன்பாகத்தான், தலைவலி தாங்கமாட்டாமல் போகவே, முழு வைத்தியப் பரிசோதனை செய்து பார்த்திருக்கிறான். அப்போதும், பெற்றோருக்குத் தெரிந்தால் அனாவசியமாய்க் கவலைப்படுவார்கள் என்று தானாகவேதான். அப்போதான்...." என்று நிறுத்தி அவளைப் பார்த்தான்.

"மூளையில் புற்று... இல்லையில்லை. அடி பட்டது என்றால் உள்ளே ரத்தக் கட்டியா?"

"ஆமாம்."

"அதுதான் இப்போதெல்லாம் மருத்துவ விஞ்ஞானம் எவ்வளவோ முன்னேறி விட்டதே! அதை அகற்றிவிட வேண்டியது?" என்று படபடவென்று யோசனை கூறியவள், தயங்கி, "அதிலேயும் சிக்கலா?" என்று கலக்கத்துடன் வினவினாள்.

"ஆமாம், அம்மா." என்றான் மணிவாசகம்.

"கட்டி அமைந்திருக்கும் இடத்தில் அறுவை சிகிச்சை மிகவும் கடினம். அதைச் செய்தாலும், வெற்றி வாய்ப்பு மிகவும் குறைவு. அப்படியே உயிர் தப்பினாலும், பெரும்பாலும் ஒரு தாவரம் போல, எந்தவித உணர்வும் இல்லாமல் வாழ வேண்டியிருக்கும். கோமா நிலை என்கிறார்கள் டாக்டர்கள்" என்றான் பரிவான குரலில்.

"சிகிச்சை செய்யாமல் விட்டு விட்டால்? இப்போது போலவே, தேவைப்பட்ட போது வலிக்குரிய மாத்திரை போட்டுக் கொண்டு, இப்படியே இருந்து விடலாமே!" என்று மீண்டும் அவசரப் படபடப்புடன் பேசினாள் உதயரேகா.

"கேசி தலைவலியினால் வேதனைப்படும் போது நீங்கள் பார்த்ததுண்டா, உதயரேகா? நேராக நடக்கக்கூட அவனால் முடியாது. உடனேயே மாத்திரை போட்டால் கூட வெகு நேரம் வலி தாங்க முடியாது. யார் கண்ணிலும் படாமல் அறைக்குள் சென்று உள்ளே பூட்டிக் கொள்வான்."

"பார்த்திருக்கிறேன்." என்று உரைத்தவளுக்கு உள்ளே வலித்தது.

இதைப் போய் என்ன வெல்





"எங்க தலைவர் சிலைதான்... கொஞ்சம் மாடர்ன் டைப்பில் வச்சுட்டோம்!"

— உ. ராஜாஜி.

---

லாம் எண்ணி விட்டாள்!

ஆரோக்கியத்தைக் கெடுக்கும் எதையும் உட்கொள்ள மாட்டேன் என்று அவ்வளவு உறுதியோடு சொன்னானே! அப்போது கூட, இப்படி இருக்கக் கூடுமோ என்று யோசிக்கத் தெரியாமல் போயிற்றே! ஆனால் இது எப்போதோ வரும் வலி. தினமுமே வந்தால் கூடச் சிலமணி நேரம் பல்லைக் கடித்து, சகித்துக் கொண்டு இருந்து விடலாமே. உயிர் எவ்வளவோ பெரிதாயிற்றே. ஏன் இந்த சிகிச்சை செய்ய வேண்டும்?

ஏன் என்பதை மணிவாசகம் சொன்னான். "மிக நுண்ணிய அளவில் என்றாலும், அந்தக் கட்டி வளர்ந்து வருகிறது. அடுத்து அது, உயிர் நடத்தும் உறுப்புக்களுக்கான கட்டளைகளைப் பிறப்பிக்கும் நரம்பு மண்டலத்தை அழுத்தப் போகிறது. அப்போது மரணம் நிச்சயம்.... இதற்கு மேல் நீங்கள் கேசியின் கடிதத்தைப் படிப்பது மேல், உதயரேகா. இந்த அடிப்படை உண்மைகளைத் தவிர, உங்களிடம் அவன் இன்னும் கூட ஏதேனும் சொல்லவிரும்பியிருக்கலாம்" என்று முடித்து விட்டு எழுந்து சென்றான்.

கலங்கியவாறே மீண்டும் கடிதத்தைப் பார்த்தாள் உதயரேகா.

"நூற்றில் ஒரு வாய்ப்பாக மட்டும் இந்தக் கடிதம் நீ படிக்கத் தேவை இராமல் போகலாம், உதிம்மா. ஏனெனில் நான் உயிர் பிழைத்து வந்து, இதையெல்லாம் உன்னிடம் நேரில் சொல்வதற்கு மருத்துவர்கள் தரும் நம்பிக்கை ஒரே ஒரு சதவீதம் மட்டுமே. மற்ற தொண்ணூற்றொன்பது சதவீத உண்மை நான் பிழைக்க மாட்டேன் என்பதே" என்று தன் நிலைமை யைத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டியிருந்தான் கிருஷ்ண சந்திரன்.

கண்ணைத் துடைத்துக் கொண்டு மேலே படித்தாள்.

"நீ உதயத்தின் ரேகை. நானோ அஸ்தமன சந்திரன். என் முடிவில்தான் உன் தொடக்கமே! உன்னை நான் மணந்தது எவ்வளவு பெரிய இமாலயத் தவறு! அப்போதே நான் பிடிவாதமாய் மறுத்திருக்க வேண்டும்! ஆனால், உன்னை அருகில் இருந்து பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் என்று ஓர் அடக்க முடியாத ஆசை! அம்மா வேறு பெரிதாக மிரட்டவும், அதுதான் சாக்கென்று இருந்து விட்டேன்.

"கடப்பாரையை விழுங்கி விட்டு, சுக்குக் கஷாயம் சாப்பிடுவது போல, அப்போதும் கண்மணி, சும்மா உன்னை மணந்து உன் வாழ்வை வீணாக்கி விடக் கூடாது என்று ரொம்பவும் யோசித்து, ஒரு வழி கண்டு பிடித்து வைத்திருந்தேன். தனிமையில், உன்னை விட்டு விலகியே இருந்தால், பின்னர் - என் மறைவின் பின் உனக்கு இன்னொரு வாழ்வு அமைவது எளிதாக இருக்கும் என்று எண்ணினேன். ஆனால் மிகவும் பரிதாபகரமாக அதிலும் தோற்றேன்!"

"உன்னை மணந்தது ஒரு மடத்தனம். என்றால், உன்னைத் தொட்டது என் சுயநலத்தின் உச்சம்! நான் மிகவும் பலவீனமானவன், உதிம்மா. வெகுவாய்ப் போராடி, இத்தனை நாள் என்னால் ஒடுக்கி 'வைக்கப்பட்டிருந்த காதல் உணர்வு.. அல்லது காமப் பேயிடம் அடியோடு தோற்றுப் போனேன்! என் செல்வமே! அன்று உன்னை விட்டு வினாடி நேரம் விலகக் கூட என்னால் முடியவே இல்லை. என் கண்மணி! அதற்காக நீ என்னை மன்னிக்க வேண்டும், கண்ணே!"

நெஞ்சை அழுத்திக் கொண்டு, சிலகணங்கள் உதயரேகா, அப்படியே அமர்ந்திருந்தாள்.

மன்னிப்பதா? யார், யாரை?

'வாழ் நாள் முழுமைக்குமான இன்பம் அத்தனையும் அன்றே அனுபவித்துத் தீர்த்து விடுவான் போல' என்று எண்ணினேனே! மெய்யாகவே, அப்படித்தானே நடந்து கொண்டிருக்கிறான்! அவளுக்குத்தான் அறிந்து கொள்ளத் தெரியவில்லை! அது மட்டுமா புரியவில்லை? அன்று படத்தைத் தடவிக் கொடுத்தானே? கூந்தலை வருடினானே! அப்போதெல்லாம் 'மனைவியிடம் தோற்பதற்கு வருந்துகிறானே!' என்று எண்ணினேனே! அவன் மரணத்திடம் தோற்பது குறித்தல்லவா நொந்திருக்கிறான்! எல்லாமே இப்போதல்லவா புரிகிறது!

பெருமூச்சுடன் மீண்டும் கடிதத்தைப் பார்த்தாள்.

"என் பெயர் கிருஷ்ணசந்திரன். அர்த்தம் தெரிகிறதா, கண்மணி? கறுப்பு சந்திரன் - அமாவாசைச் சந்திரன். அதாவது இல்லாத சந்திரன். தங்களை அறியாமலே, என் பெற்றோர், எனக்கு

எவ்வளவு பொருத்தமாய்ப் பெயர் சூட்டியிருக்கிறார்கள் பார்!

"என் பெற்றோர் மிகவும் பரிதாபத்திற்கு உரியவர்கள், உதிம்மா. அவர்களுக்குத் திருமணமாகி ரொம்ப நாள் கழித்து - பத்து ஆண்டுகளுக்குப் பிறகுதான் நான் பிறந்தேனாம்! என் மேல் மிகுந்த பாசம் அவர்களுக்கு. 'கண்ணிழந்தான் பெற்றிழந்தான் போல' என்று கம்பராமாயணத்தில் ஓர் இடம் வரும். படித்திருக்கிறாயாடா? என்னை அவர்கள் பெறாமலே இருந்திருந்தால், 'இல்லை' என்ற அந்த ஒரே துன்பத்தோடு போயிருக்கும். இப்போது, 'பெற்றிழக்கும்' இந்தத் துயரம் எப்படித் தாங்குவார்கள்?

"அதனால்தான், பெறாமலே இருந்திருக்கலாமே என்ற எண்ணம் உருவானால், இழப்பின் துயரம் குறையக் கூடும் என்று எண்ணித்தான், அவர்களிடம் கெட்டவனாக, தீய பழக்கங்கள் உடையவனாக, இரக்கமற்ற ஓர் அரக்கனாக நடித்தேன், கண்மணி.

"இப்போதும், இனியும் கூட இந்த உண்மை அவர்களுக்குத் தெரியலாகாது, கண்ணம்மா. அவர்களைப் பொறுத்தவரையில் கெட்டலைந்து திரிந்த மகன், இப்போது கண்காணாத இடத்துக்குச் சொல்லாமல் கொள்ளாமல் போய் விட்டதாகவே இருக்கட்டும். செல்லுமிடம் யமனுலகம் என்பது தெரிந்தால் இன்னமும் அவர்கள் தாளமாட்டார்கள்.

"பெற்றோரிடம் மறைத்து, உனக்கு எழுதுகிறேன் என்றால், உன்னிடம் எனக்குள்ள அன்பு மட்டானது என்று அர்த்தமல்லடா, என் கண்ணே! நீ என்னைத் தவறாக எண்ணுவதை என்னால் தாங்க முடியவில்லை.

"என் வாழ்வில் இது மாலை மயங்குகின்ற அந்தி நேரம். ஒளி மெள்ள மெள்ளக் குறைந்து உயிர் ஒடுங்கிக் கொண்டு இருக்கிறது. இந்த அஸ்தமன வேளையில் போய், என் வாழ்வில் வந்தாயே, என் செல்வமே! முன்பே நாம் சந்தித்திருந்தால், சில ஆண்டுகளேனும் நாம் இருவரும் இன்பமாய் வாழ்ந்திருக்கலாமே என்று ஏக்கமாக இருக்கிறது. ஆனால், என்ன என் சுயநலம் பார்த்தாயா? ஆண்டுக் கணக்கில் சேர்ந்து வாழ்ந்த பின் பிரிவது உனக்கு எவ்வளவு கடினமாயிருக்கும்! இப்போதே... இப்போதேனும், சிறிது காலத்தில் இதை மறந்து, இன்னொரு வாழ்வில் ஈடுபட, உனக்குக் கொஞ்சம் வாய்ப்பு இருக்கிறது.

மறப்பதா? இவனையா? இந்தப் பிறவியில் நடக்கிற காரியமா!

"இப்போது, சில சுமைகளை நான் உன் மீது சுமத்தப் போகிறேன், உதிம்மா. பணம்காசை நீ பெரிதாக நினைப்பவள் அல்ல என்பது எனக்குத் தெரியும். நம் தொழிலில், என் பங்குகள் அனைத்தையும் உன் பெயருக்கு மாற்றி விட்டேன். தொழிலைக் கவனிப்பது உன்



**"ராப்பிச்சைகிட்டே அதிகம் வச்சிக்காதே'ன்னு சொன்னேனே கேட்டியா?"**

**"ஏன்?"**

**"அம்மா... தாயே....!'ன்னு கூப்பிட்டவன் இப்ப, 'அக்கா... உடன் பிறவா சகோதரியே....!'ன்னு கூப்பிடறான் பாரு!"**

**— ஆலத்தம்பாடி ராஜகோபால்.**

பொறுப்பு.

"அடுத்து, என் தங்கை. அவளுக்கு ஒரு நல்ல வாழ்வை அமைத்துத் தரும் பொறுப்பை, உன்னிடம்தான் ஒப்புவிக்கப் போகிறேன். ஆனால், வசுவின் மனதறிந்து, செய்யக் கூடியவள் நீதான் என்பதோடு, என் பெற்றோரும் உன் வார்த்தைக்கு மதிப்புக் கொடுப்பார்கள்.

"ஆனால் ஒன்று, உதி! உனக்கு ஒரு நல்ல எதிர்காலம் அமைய, இவற்றுள் எந்தப் பொறுப்பேனும் தடையாக இருக்குமானால், அதை நீ உதறித் தள்ளிவிட வேண்டும், அம்மா. இதுவே என் தலையாய விருப்பம்.

"ஒருவேளை, அடுத்த பெரும்பான்மை வாய்ப்பாக நான் உயிர் பிழைத்தாலும் கோமா நிலையில் நான் வாழக்கூடும். உதயா, நான் சாவதற்குக் கூட அஞ்சவில்லை. பெருமளவு, அதற்கு நான் என்னைத் தயார்ப் படுத்திக் கொண்டே இருக்கிறேன். ஆனால் உணர்வே இல்லாமல், உயிரை மட்டும் வைத்துக் கொண்டு, பிறருக்குப் பாரமாக... கடவுளே! என்னால் முடியவே முடியாதம்மா! அப்படி ஒன்றும் இல்லாத நிலையில் நான் உயிரோடு இருக்க நேருமேயானால், 'மெர்ஸி கில்லிங்' முறையில் என்னைக் கொன்று விட வேண்டும் என்று என் டாக்டர் நண்பனிடம் சத்தியம் பெற்றிருக்கிறேன். புருஷோத்தமனும் மணியைப் போலவே எனக்காக எதையும் செய்வான்; இந்த சத்தியத்தையும் காப்பான்.

"எனவே, இந்த என் கடிதத்தை நீ படிக்க நேர்ந்தால், அதற்குமேல் நாம் சந்திக்க வாய்ப்பில்லை என்பதால், உன்னிடம் இப்போதே விடை பெறுகிறேன். உன் அன்பன் கிருஷ். கொஞ்சம் கிறுகிறு கிருஷ்" என்று கடைவரியாகக் கணவன் கடிதத்தை முடித்திருந்தது வரை படிக்கு முன்பே, "ஐயோம்மா!" என்று கதறிப் பதறியபடியே உதயா எழுந்தாள்.

(தொடரும்)

# மனசெல்லாம் முள்

அஞ்சு உற்சாகமாய் இருந்தாள். வேணுமாமா ஊரிலிருந்து வருகிறார்.

திருவாரூரில் ஹவுசிங் யூனிட்டில் எதிர் சாரி ப்ளாட்டில் இருந்த போது வேணுமாமா பழக்கம்.

அடிக்கடி வீட்டுக்கு வருவதும் தன்னைத் தூக்கி மடியில் வைத்துக் கொண்டு கொஞ்சுவதும் இன்னும் பசுமையாய் ஞாபகத்தில் பதிந்திருக்கிறது அஞ்சுவுக்கு.

தஞ்சாவூருக்கு மாறுதலாகி வந்த பின்பும் கூட மாதம் ஒரு முறை அப்பாவைத் தேடி வருவதும், தன்னைக் கடைக்கு அழைத்துப் போய் வெங்கடா ஹோட்டலில் நெய்மாவும், 'பூஸ்ட்'டும் வாங்கித் தந்ததில் ஏக சந்தோஷம்.

கடைசியாய் அம்மா பிரசவ சமயம், இறந்து போனபோது வந்து போனவர்தான். இந்த மூணு வருஷத்தில், அவர் தலை காட்டாதது வருத்தமாயிருந்தது.

இன்றுதான் வருவதாய்க் கடிதம் எழுதியிருந்தது ஞாபகத்தில் நின்றது.

நெய்சாதமும் குழ குழ காப்பியும் குடித்து வருஷமாயிற்று.

சித்தி மிகவும் வாட்டுவதாய்ப் பட்டது. தனக்கு நேராய் அப்பாவின் இரண்டாவது திருமணம் போன வருஷம் நடந்தது பசுமையாய்...

வந்த புதிதில் என்னமாய்த் தாங்கினாள்! பருப்பு நெய் சேர நன்றாய்த்தான் சாப்பாடு போட்டாள்.

தம்பிப்பையன் பிறந்ததும், தன்பக்கம் திரும்பவே மறுக்கிறாள் என்கிற வருத்தம் நிறையவே அஞ்சுவிடம்.

"எந்திர்ரீ... சாப்ட்டு தட்டக் கழுவு, பாயசுருட்டி ஓரமா வைடி. குளிச்சிட்டு துணிய அலசு. எருமமாடு மாதிரி நிக்கிறதப்பாரு...!"

இப்போதெல்லாம் இப்படித்தான் சித்தி எரிச்சலாய்ப் பேசுகிறாள்.

அப்பாவிடம் சித்தி சொல்ல விடுவதில்லை. அவரும் சாயங்காலமோ, இருட்டியோ வீடு வந்தால், சாப்பிடுவதும் சித்தியோடு உள் அறையில் படுத்துக் கொள்வதும் பிடிக்கவேயில்லை.

கூடத்தில் நல்ல இருட்டாகி விடும். கொஞ்சம் பயமாகக்கூட இருக்கும்.

"அப்பா இங்க படுக்க பயமா இருக்கு"–இப்படிப் பலதடவை கெஞ்சியிருக்கிறாள் அஞ்சு.

"போர்வைய இழுத்துப் போத்திட்டு தூங்கு. பயமிருக்காது. அப்பாவுக்கு உடம்புவலி. சித்தி தைலம் தேய்க்கட்டும். படுத்துக்க" அப்பா பல தடவை ஒரே பதிலைச் சொல்லச் சொல்ல, கண்களில் இருட்டு மின்ன, கண்ணீர் துளிக்கும்.

அறைக் கதவைச் சாத்த வரும் சித்தி ஒரு முறை, முறைத்து விட்டுப் போவாள், பகீர் என்கிற மாதிரி.

அப்பாவும், சித்தியோடு சேர்ந்து மாறி விட்டார்.

முன்பு ஒருமுறை அப்பா கேட்டது இன்னும் ஞாபகத்தில் உறைந்திருக்கிறது.

"ஏன் அஞ்சு, அம்மா செத்துட்டாளேன்னு கவலையா இருக்கா? அம்மா மாதிரியே ஒரு சித்திய நம்ம வீட்டுக்குக் கூட்டிட்டு வந்திருவமா?"

பேசாமலிருந்தாள் அஞ்சு.

அதன்பின்னர் வேணுமாமா சொன்னதும் தான், 'சரி' என்று சம்மதம் சொன்னாள்.

சித்தியைப் பற்றி வேணுமாமாவிடம் சொல்ல வேண்டும். ஒரு ரொட்டி, பிஸ்கட், மணிக்காராப்பூந்தி இப்படி ஏதும் வாங்கித் தருவதில்லை என்கிற எரிச்சல் அதிகம்.

யூனிபார்ம் அழுக்காய் இருந்ததற்காய் மிஸ் திட்டியதில் அழுகை வந்த போதும், மன ஆறுதலுக்கு வேணு மாமாதான்




வருகிறார்.

வேணு மாமாவைக் கண்டாலே உற்சாகம்தான்! வேணுமாமா, அஞ்சு மூன்றாவது படித்த சமயத்தில், ஏதோ உதவி என வந்ததாக ஞாபகம்.

அம்மா-தன் கழுத்தில் கிடந்த ரெட்டை வட்ச் சங்கிலியைக் கழட்டி, வேணுமாமாவிடம் கொடுத்ததும், அதை வாங்கவே நிறைய சங்கடப்பட்டதும்.

"சும்மா வாங்கிக்கங்க மாமா! ஒரு உதவிதானே"- புரிந்து சொன்னோமா? இல்லை புரியாமல் சொன்னோமா என்கிற நினைப்புகூட அஞ்சுவுக்கு இப்போது இல்லை.

சித்தி படுத்துவது தெரிந்தால் வருத்தப் படுவார். அப்பாவிடம் கூட எடுத்துச் சொல்லச் சொல்லலாம். வேணுமாமா சொன்னால் அப்பா கேட்பார். அப்படிக் கேட்கவில்லையென்றால் வேணுமாமாவோடு போய்விட வேண்டும்- என மனசுக்குள் முடிவெடுத்துக் கொண்டாள்.

**வீ**ட்டிற்குள் நுழைந்ததுமே, என்றுமில்லாமல் தம்ளரில் காப்பியும், இரண்டு பிஸ்கட்டுகளும் தட்டில் இருந்தது, ஆச்சர்யமாய்ப்பட்டது அஞ்சுவுக்கு.

புத்தகப்பையை மேசை மேல் கிடத்திவிட்டு, பிஸ்கட் ஒன்றை எடுக்கப்போனவளை நோக்கி,

"சனியனே, அத எடுக்காத! விருந்தாடி வந்தவுங்களுக்கு. பேசாம போய் ரூம்ல படி. கொஞ்ச நேரம் கழிச்சி காப்பி தர்றேன்."

முகத்தில் அடித்தது போன்றுதான் இருந்தது அஞ்சுவுக்கு.

கொல்லைப் புறமிருந்து வேணு மாமா

சுக்குள் குதூகலம்.

'அப்பாடா' சொல்ல வேண்டும் போல் ாணிற்று.

"மாமா, எப்ப வந்தீங்க? நீங்க நவீங்கண்ணுட்டு எனக்குத் தெரியுமே." ன்றபடி புன்னகைத்தாள் அஞ்சு.

"அப்டியா?"– முகத்தில் பட்ட ண்ணீரைத் துண்டால் ஒற்றி எடுத்தபடியே கட்டுக் கொண்டு நாற்காலியில் ட்கார்ந்தார்.

"ஓங்களப்பாத்து எத்தனை நாளாச்சு? ன் மாமா வரவே மாட்டேங்குறீங்க?"

"அதுவா..." என்றபடி இழுத்தார்.

"ஏய் அஞ்சு, போய் படிங்கிறேன்ல? பரியவங்க நாங்க பேசிக்கிட்டு ருக்கோம், நீ போ"– எரிந்து விழுந்தாள்.

"மாமா கொஞ்ச நேரங்கழிச்சி கடைக்குப் பாவமா?"– என்றவளை, சித்தி குறுக்கிட்டு,

"யேய், உள்ள போங்கிறேன்ல? ப்படித்தாங்க! இவளோட தொல்லை ங்க முடியல. ஒரு ஆள் வீட்டுக்கு ந்துடக் கூடாது. உடனே அவுங்க கூட பாய்டணும்."

சித்தி அநியாயமாய்ப் பொய் சால்கிறாள் என நெஞ்சுக்குள் எரிச்சல். ப்போது எதையும் சொல்லக்கூடாது. ாமாவிடம் தனியே அழைத்துப்போய் சால்ல வேண்டும் என மனம் அடித்துக் காண்டது.

பிஸ்கட்டையும் காபியையும் முடித்து ிட்டார் மாமா.

சித்தியிடம் எதுவோ பேசிக் காண்டிருந்தார். எதையும் காதில் ாங்கிக் கொள்ளத் தயாராய் இல்லாதது பான்று அஞ்சுவின் முகம்.

கொஞ்ச நேரம் ஆனது. கூடத்தில் பச்சுக்குரல் காணோம். அறையிலிருந்து ழுந்து கூடத்திற்கு வந்தாள் அஞ்சு.

அங்கே வேணுமாமா இல்லை...

வாசலில் குரல் கேட்டது.

"வர்றேங்க! அவன் வந்தா சொல்லுங்க. ராம்ப சிரமத்துல இருந்தேன். தக்க மயத்துல உங்க மோதிரத்தைக் கொடுத்து தவினீங்களே, ரொம்ப நன்றிங்க. அஞ்சுவுக்கு செல்லம் குடுக்க வேணாம், ரண்டு போடு போட்டு வளக்கச் சொல்லுங்க! வரட்டா?"

அஞ்சுவுக்கு, மனசெல்லாம் முள் தைத்தது போல் இருந்தது..

## 'சுருக்–நறுக்' என்றொரு சொல்லோவியம் – 23

### கல்வி என்பது...

வெறும் சோற்றுக்கு வழி செய்கிற விஷயம் மட்டும் அல்ல. மனிதனை, மனிதனாக அடையாளம் காட்டுவதும் அது தான்!

கல்வி குறித்து நீங்கள் ஒரு சொல்லோவியம் தீட்டுங்கள். நச்சென்று இருக்க வேண்டும்.

பிரசுரமாகும் ஒவ்வொரு சொல்லோவியத்துக்கும் ரூ.50 பரிசு. இன்னும் மூன்றே வாரங்களில் முடியப் போகும் இந்தப் போட்டியில் உங்களில் யார் அதிக முறை பரிசுகள் வெல்கிறீர்களோ, அவருக்கு மெகா பரிசாக ஒரு ஜோடி டைடன் கைக்கடிகாரங்கள்!

**முடிவு தேதி : 25.3.96.**

ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

– ஆர்.

**கல்வி என்பது :** ..............................

..............................

..............................

..............................

..............................

**பெயர் :** ..............................

**முகவரி :** ..............................

..............................

..............................

..............................

♦ இலவச வேட்டி, சேலையில் இத்தனை ஊழலா? வேட்டி சேலைகளை வாங்கும் மக்கள், இறைவனே அவதரித்து அளிப்பது போல் காலில் வணங்கி வாங்குவதும், கண்ணில் ஒற்றிக் கொள்வது போல் செய்வதும்.... இத்தனை கோடி ஊழல் தெரிந்தால் இனி இலவசங்களே வேண் டாம் என்று சொன்னாலும் சொல்வார்கள்! சரி யான நேரத்தில் நெத்தியடித் தலையங்கம்.

மதுரை, ச.வனஜாராணி.

**ரூ. 20/- பரிசுக் கடிதம்**

♦ 'ஏழைகள் வயிற்றிலடிக்கும் 'ஜெ' அரசு செய்யும் எண்ணற்ற தில்லுமுல்லுகளை அம்பலப் படுத்தி 'அபாய அறிவிப்பு' செய்து எச் சரித்துள்ளீர்கள்! இறங்கும் இடம் அல்லது ரயில் போய்ச் சேரும் ஸ்டே

## இலவசங்களே வேண்டாம்!

ஷன் அருகில் இருந்தாலும் பேராபத் தைத் தவிர்க்கப் பயணிகள் அபாயச் சங்கிலியை இழுத்து நிறுத்துதல் அவசியமே! ஆட்சி முடியும் காலக் கெடு நெருங் கினாலும் தவறுகட்குத் தக்க தருணத்தில் தண் டனையளிக்கத்தான் வேண்டும்!

இனாம் மணியாச்சி, ச.ஆ. கேசவன்.

♦ "ஹவாலா" புதுக்கவிதை, இன்றைய அரசியல் அவல நிலையைப் படம் பிடித்துக் காட்டும் சிறப் பான கவிதை. சிரிப்பான கவிதை மட்டுமல்ல; சிந்திக்க வைத்த கவிதையும் கூட!

பழவந்தாங்கல், நெல்லை மணிபாரதி.

♦ சினிமாக்காரர்கள், அரசியல்வாதிகள் ஆகி யோரின் பின்னாலேயே அலையும் பத்திரி கைகளைப் போலன்றி, உயர்ந்த விஷயங்களைத் தேடிப் பிடித்து வாசகர்களுக்குத் தருகிற உண்மை யான சேவையை கி. ராஜேந்திரன் செய்திருக் கிறார். முக்கூர் பற்றிய கட்டுரையைச் சொல் கிறேன். காலம் எவ்வளவுதான் மாறினா லும் தரம் தாழாத 'கல்கி'யைப் போற்று கிறேன்.

சென்னை -18, எஸ். வரதராஜன்.

♦ பாலகுமாரனின் பேட்டி, அவரது மெல்லிய உணர்வுகளைப் பிரதிபலித்தது. நிறைய கேள்விகள். நிறைவான பதில்கள். பாராட்டுகள்.

தூத்துக்குடி, சிவராமசுப்பிரமணியன்.

♦ பாலகுமாரனின் பேட்டி மிக அருமை. ஒவ்வொரு பதிலும், தெளிவாகவும் நேர்மையாகவும் இருந்தது.

திருச்சி - 1, கே. சிட்டு.

வட்ட மேஜை

♦ உலகக் கோப்பை கிரிக்கெட் போட்டியை நடத்துவதற்குப் பெரிய பெரிய நிறுவனங் களெல்லாம் போட்டி போட்டுக் கொண்டு ஏன் கோடி கோடியாய்க் கொட்டுகிறார்கள் என்பதைக் கட்டுரையிலிருந்து தெரிந்து கொள்ள முடிந்தது. அதுவும் வில்ஸ் என்ற பெயரைச் சேர்த்துக் கொள்வதற்காக 53 கோடி ரூபாய்களைக் கொட்டி யிருக்கும் ஐ.டி.சி. நிறுவனம், 530 கோடி ரூபாய் களுக்கு சிகரெட்டை விற்று அவற்றை வாங்கிப் புகைத்த 26,500 பேர்கள் இறப்பதன் மூலம் தான் லாபத்தைப் பெறுகிறது என்பதைப் படித்த போது அதிர்ச்சியாக இருந்தது. சமூக நலனில் அக்கறை கொண்டோர் இது குறித்து அவசியம் சிந்திக்க வேண்டும்.

சிறுமுகை, ஜி.கதிரேசன்.

♦ அடுத்த புரட்சித் தலைவி ஆந்திராவில் உருவாகி விட்டார் என்பதை ஆணித்தரமாகவே உணர்த்துகிறது கவர்ஸ்டோரி.

திருச்சி - 20, எஸ்.வி. பார்த்தசாரதி.

♦ கடந்த கால அரசியலை நினைத்துப் பெருமைப் பட்டேன். இக்கால அரசியலை நினைத்து பெருமூச்சு விட்டேன். அருமையாக அமைந்து விட்ட அறுசுவை விருந்து! முப்பதே வாரங்களில் முடித்து விட்டாரே சி.வி.என்!

அரக்கோணம், எல்.கோபாலகிருஷ்ணன்.

♦ போலீஸ் என்றால் ஆளுங்கட்சிக்கு அஞ் சுபவர்கள்-அடிமைகள் என்ற நிலைக்குத் தள்ளப்பட்டு விட்டனர். கட்சி சாராத பொது மக்களிடம் போலீசுக்குள்ள மதிப்பும் மரியாதை யும் அகன்று, ஆண்டுகள் பலவாயிற்று. நோய் நாடி..... குறளின் படி, நரசிம்மன் காவல் துறை நோய்க்கு காரணங்கண்டு நோய் நீக்க மருந்தையும் தந்துள்ளார்.

கல்யாணபுரம், அ. சம்பத்.

♦ வாழுகின்ற மக்களுக்கு, வாழ்ந்தவர்கள் பாடம். சி.வி.நரசிம்மன் அவர்களின் 'மூன்றாவது கண்' தொடரை, தலைமுறைகளுக்கு, முக்கியமாக, காவல் துறைக்கு உதவும் வகையில் பல்கலைக் கழகப் பாடமாக்கி விடலாம்!

திருச்சி -8, ரமா ரகுநாத்.

♦ சி.வி. நரசிம்மனின் "மூன்றாவது கண்" அவரே சொல்வதுபோல் 30 வாரங்கள் ஓடியதே தெரிய வில்லை. இந்திய அரசியலையும் ஆட்சியி யலையும் வாசகர்களுக்குப் படம் பிடித்துக் காட்டிய காலக் கண்ணாடி இக்கட்டுரைத் தொடர்.

நெல்லை, தி.சு.பாலசுப்பிரமணியன்.

♦ சி.வி.நரசிம்மன் அவர்களின் கட்டுரைத் தொடர் மூலம் கல்கி தேவையான சமயத்தில், சரியான சேவை செய்துள்ளது. இத்தகைய கட்டுரைகள் எல்லாம் கல்கி தவிர வேறெந்தப் பத்திரிகையில் காணமுடியும்?

திருவான்மியூர், கீதா கணேசன்.

# இடைவெளி

ப. கோ. ரகுராமன்



"சார்... உங்களை மானேஜர் கூப்பிடு கிறார்" என்றான் பியூன் கந்தையா.

எனககு நடுக்கமாக இருந்தது. புது மானேஜர். இளைஞன். கொஞ்சம் அடா வடி டைப் என்று பேச்சு இருந்தது.

நடுங்கியபடியே உள்ளே போய், "சார்..." என்றேன்.

"யெஸ்!" என்றவன், என் கையில் 'பைல்' ஒன்றைத் திணித்தான்.

"யார் வேலை இது?"

பைலைப் பிரித்தேன். எக்ஸ் போர்ட் கொட்டேஷன்.

"சார்... பத்மாம்மா."

ப்யூனை அழைக்கும் பொத் தானை அழுத்தினான்.

"பத்மாம்மாவை நான் வரச் சொன்னேன்னு சொல்லு..." என் றான்.

கந்தையா காணாமல் போனான்.

"சார்.. ஏதும் தப்பு பண்ணிட்டாங்களா?"

"ம்ம்"

பத்மாம்மாவை நினைத்த போது பரிதாப உணர்ச்சி வந்தது.

"சார்... அவங்க லீவ்ல இருந்து ஜாயின்ட் பண்ணி ரெண்டு நாள்தான் ஆகுது. அதோட... கார் ஆக்ஸிடென்டில் ஹஸ்பெண்டையும், ஒரே சன்னையும் இழந்தவங்க."

"இருக்கட்டுமே.... அதுக்காக வேலையில தப்பு பண் ணலாமா? சம்பளம் வாங்குறாங்கல்ல...?"



"அடுத்தபடியாக தலைவர் அவர்கள் இன்ஸ்பெக்டருக்கு நூறு ரூபாய் மாமூல் வழங்கி இந்தப் புதிய போலீஸ் ஸ்டேஷன் பணியைத் துவக்கி வைப்பார்கள்."
- ஆர். முத்துவேல்

பத்மாம்மா, 'என்னவாக இருக்கும்?' என்ற கவலை ரேகைகள் முகத்தில் தெரிய, உள்ளே நுழைந்தார்கள்.

"யெஸ்.... நீங்கதானே எக்ஸ்போர்ட் கொட்டேஷன் பார்க்கிறது?

"ம்ம்... என்று மையமாகத் தலை அசைத்த பத்மாம்மாவிடம்,"

நீங்க இதுல என்ன தப்பு பண்ணியிருக்கீங்கன்னு கண்டுபிடிங்க... வேலைக்கு வரும் போது வீட்டோட கவலையெல்லாம் வீட்லயே மூட்டை கட்டி வச்சுட்டு வாங்க... உங்கள இன்னும் ரெண்டு நாள்ல வேற செக்‌ஷனுக்கு மாத்தலாம்னு இருக்கேன்" என்றான்.

"சாரி... ஏதோ கவனக்குறைவிலே..."

"சாரி எதுக்கு? உங்க வேலையை நீங்க ஒழுங்கா செஞ்சாப் போதாது?" என்றான்.

அவள் போனதும், என்னிடம் திரும்பியவன், "நேற்று ஹெட் ஆபீஸில் இருந்து வந்திருந்த கம்ப்யூட்டர் பயிற்சிக்கான நோட்டீசை எல்லோருக்கும் தெரிவிச்சுடுங்க... யார் யார் போகணும்னு விருப்பப்படுறாங்களோ அவங்களையெல்லாம் ரெண்டு நாளைக்குள்ள 'நேம்' கொடுக்கச் சொல்லுங்க...." என்றபடி தம் முன்னால் இருந்த மற்றொரு பைலை எடுத்துக் கொண்டான்.

நான் போகலாம் என்றுதானே அர்த்தம்!

மாலை நான்கு மணியளவில் ரூமிலிருந்து வெளியே வந்தவன், பத்மாம்மாவின் டேபிளுக்குச் சென்றான்.

எல்லோருடைய காதிலும் விழும்படியாகவே, "உங்களுக்கு இன்னும் ரெஸ்ட் வேணும்னு நினைச்சீங்கன்னா... லீவ் லெட்டர் கொடுங்க... ஹெட் ஆபீஸ்க்கு ரெக்கமண்ட் பண்றேன்" என்றான்.

அவனுடைய இந்த செய்கை ஆபீஸில் உள்ள அனைவர் மனதிலும் அவனைப் பற்றிய எண்ணத்தில் மேலும் சறுக்கச் செய்தது.

அவன் போனதும் நான் பத்மாம்மாவிடம், "லீவு எடுக்கப் போறீங்களா?" என்றேன்.

"இல்லைங்க... நான் வேலைக்கு வர்றதே.. வீட்ல இருந்தா திரும்பத் திரும்ப வர்ற என்னோட ஹஸ்பெண்டோட நினைவையும் மகனோட நினைவையும் தவிர்க்கத்தான். எனக்கு ஒருத்திக்குன்னு இனிமேலும் சம்பாதிக்கணும்னு அவசியமில்லை. இனிமேல எனக்கு என்ன இருக்கு? ஒரு மாறுதல் வேணும் இல்லையா? அதுக்குத்தான் ஆபீஸ் வர்றேன்" என்ற போது வெடித்து அழுதார்கள்.

அன்று காலை மானேஜர் அறைக்குள் உள்ளே நுழைந்ததும், "யார் யார் கம்ப்யூட்டர் கோர்ஸ் போறதுக்கு நேம் கொடுத்திருக்காங்க?".

எனக்கு குரூரத் திருப்தி. நான் உதட்டைப் பிதுக்கி, "ஒருவரும் இல்லை..." என்றேன். உண்மையிலேயே யாரும் டெல்லி போக விரும்பவில்லை.

ஆபீஸில் வேலை பார்க்கும் மொத்த பேரும் சேர்ந்து அவனுக்கு எதிர்ப்பு காட்டியதாகவே நினைத்தேன்.

ஒரு முழு நிமிடம் யோசனையில் இருந்தவன் ஏதோ முணுமுணுத்து விட்டு, "பத்மாம்மாவை அனுப்பி வைச்சுரலாம்னு நினைக்கிறேன்" என்றான்.

"சார்... வந்து..." என்று நான் சொல்ல ஆரம்பித்த போது...

"நீங்க நினைக்கிற மாதிரியான எண்ணம் எனக்கு இல்லை. இங்க ஒழுங்கா வேலை செய்யலை, அதனால பயிற்சின்னு அனுப்பி வைச்சுரலாம்னு சொன்னேன்னு நினைக்காதீங்க! உங்களை மாதிரியே ஆபீஸ்ல எல்லோரும் இருக்கிறதுதான் பத்மாம்மாவுக்கு கஷ்டம். அவங்க எல்லாத்தையும் மறக்கணும்னு வேலைக்கு வர்றாங்க. நீங்க... ஆபீஸ்ல வேலை பார்க்கிற எல்லோரும் அவங்க வாழ்கையில நடந்த விபத்துக்கு சாட்சி மாதிரி அவங்ககிட்ட பரிதாபம் காட்றீங்க. அது அவங்களுக்கு நடந்த விபத்தை அடிக்கடி ஞாபகப்படுத்தும். அவங்கள டெல்லிக்கு அனுப்பி வைச்சுட்டோம்னா புதிய இடம், புதிய சூழ்நிலை... வாழ்க்கையிலே இனிமேல் எதுவும் இல்லேன்னு நினைக்கிறவங்களுக்கு இன்ட்ரஸ்டிங்கான கம்ப்யூட்டர் பயிற்சி... அதனாலதான் அவங்களுக்கு ரெக்கமண்ட் பண்ணி டெல்லிக்கு அனுப்பிடலாம்னு நினைக்கிறேன்."

வேலையில் கண்டிப்பும் சின்சியாரிட்டியும் எதிர்பார்க்கும் இளைஞனாய்... படபடப்புக்குரியவனாய் இருந்தாலும், அவனுக்குள் இழையோடி இருக்கும் மனிதத் தன்மையும், எதையும் வித்தியாசமான கோணத்தோடு அணுகும் முறையும் ஆச்சரியத்தைத் தந்தது. அவனைப் பற்றி ஒன்றும் தெரியாமல் ஆபீஸில் இருக்கும் நாங்கள் எல்லோரும் உருவாக்கிக் கொண்டிருக்கும் பிம்பத்திற்கும்... அவனுடைய உண்மை சொரூபத்திற்கும் உள்ள இடைவெளி என்னை வியப்பில் ஆழ்த்தியதோடு மட்டுமில்லாமல் வெட்கப்படவும் வைத்தது!

கிருஷ்ணசந்திரனின் கடிதத்தை, அவன் மனைவி தனிமையில் இருந்து படிக்கட்டும் என்று கருதி, மணிவாசகம் வெளி வராந்தாவில் சென்று நின்றிருந்தான்.

இனி என்ன செய்வது என்று யோசிக்கவும் அவனுக்குத் தனிமை தேவைப்பட்டது.

ஆனால், அடிபட்ட மானாய் உதயரேகா கதறவும், விழுந்தடித்துக் கொண்டு உள்ளே ஓடிவந்தான். "என்னம்மா? என்ன என்ன?" என்று பதற்றத்துடன் வினவினான்.

பேச மாட்டாமல், கிருஷ்ணசந்திரனுடைய டாக்டர் நண்பனின் சத்தியம், அதை யொட்டிய பகுதிகளை மணிவாசகத்திடம் காட்டினாள் அவள்.

"இல்லையே! நாளைதானே...." என்று யோசித்தவன், உடனே தெளிந்து, "முதலிலேயே நான் உங்களிடம் என்ன சொன்னேன் சிஸ்டர்? கேசி, உங்களிடம் இந்தக் கடிதத்தைக் கொடுக்கச் சொன்ன நாளைக்கு வெகு முன்னதாகவே தருகிறேன் என்றேனில்லையா?" என்று அவளுக்கு நினைவூட்டினான்.

ஒரு நீண்ட நெடுமூச்சுடன், உதயரேகாவும் சற்றே அமைதியுற்றாள்.

"உடனேயே, நாளைதானே என்றால் நாளைக் கேவா?" என்று விழியகல பீதியுடன் வினவிவிட்டு, "மணி சார், எனக்கு ஓர் உதவி செய்யுங்களேன்! ப்ளீஸ்! இந்த அறுவை சிகிச்சையைக் கொஞ்சம் தள்ளி வைக்கச் சொல்ல முடியுமா?... அதிகமில்லை. ஓர் இரண்டு அல்லது மூன்று நாள் தான்" என்று கெஞ்சிக் கேட்டாள்.

உதயரேகாவின் காரணத்தை ஒருவாறு ஊகித்து, "எதற்காக, அம்மா?" என்று மணி தயங்கினான்.

மீறித் துடித்த உதடுகளைக் கட்டுப்படுத்தி, "நான் அவரிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும். அவரைப் பற்றித் தப்பாக-போதை மருந்து எடுக்கிறார் என்று நினைத்தேன். அவரிடமும் சொன்னேன். இன்னும்... இன்னும் அவரிடம், எத்தனை பிறவி எடுத்தாலும் அவர்தான் என் கணவர்; வேறு வாழ்வு எல்லாம் ஒன்றும் கிடையாது என்று சொல்ல வேண்டும்..." என்று யோசித்துக் காரணம் சொன்னாள்.

மணிவாசகம் பேசாமலே நிற்கவும், "இந்த இரண்டு நாட்கள் அவரோடு எனக்கு வேண்டும், மணி சார். வேண்டுமானால் இந்தக் கடிதம் முழுவதும் படித்துப் பாருங்கள். அவர் அருகில் இருந்து நான் அவருக்கு ஆறுதல் அளிக்க வேண்டும்..." என்றவள் சட்டென் உடைந்து, "அய்யோ! அம்மா! என்னால் தாங்க முடியவில்லையே!" என்று அழத் தொடங்கி விட்டாள்.

"சிஸ்டர், ப்ளீஸ், வேண்டாம். கேசி ரொம்பவும் பிடிவாதமாகச் சொன்னானே என்று யோசித்தேன். வாருங்கள். முதலில், அவனோடு டெலிஃபோனில் பேசுவோம். பிறகு மற்றது யோசிக்கலாம்" என்று கூறவும், உதயரேகாவும் அதற்குச் சம்மதித்தாள்.



ஆனால், பலமுறை முயன்றும் கிருஷ்ணசந்திரன் தங்கியிருந்த மருத்துவமனையோடு தொடர்பு கொள்ளவே இயலாது போயிற்று. ஏதோ, 'டெக்னிகல் ஃபால்ட்' என்று காரணம் சொன்னார்கள்.

வெறுப்புடன் ரிசீவரை வைத்துவிட்டு, "சாரிம்மா" என்றான் மணிவாசகம். "இவ்வளவு நேரம் விருதாவாகக் கழியும்படிச் செய்து விட்டேன்" என்றான் கழிவிரக்கத்துடன்.

"இதில் உங்கள் மேல் ஒரு தப்புமில்லையே" என்று முறுவலிக்க முயன்றாள் அவள். "இனி அவர் முகவரி தருகிறீர்களா? நான் கிளம்புகிறேன். இனித் தாமதம் செய்யாதீர்கள். ப்ளீஸ்..." என்று அவசரப்படுத் தினாள்.

"இந்த மாதிரி சூழ்நிலையில் உங்களைத் தனியே அனுப்ப நான் அரக்கன் அல்ல, உதய ரேகா. வாருங்கள். நானே அழைத்துப் போகிறேன்" என்று இரண்டு எட்டு எடுத்து வைத்தவன் மீண்டும் யோசனையோடு தயங்கினான்.

"என்ன? உங்களுக்கு வேறு வேலை ஏதேனும் இருந்தால் நானே போய்க் கொள்கிறேனே?"



என்றாள் அவள் துன்பம் தோய்ந்த குரலில்.

"கேசியின் அப்பா ஒரு தகவலும் இல்லாமல் உங்கள் இரண்டு பேரையும் காணவில்லை என்றால் ஊரையே தலை கீழாகப் புரட்டி விட மாட்டாரா?"

"அவருக்கும் ஏதோ கடிதம் எழுதியிருக்கிறாராமே.."

"ஆமாம். நாளை தான் அவர் கைக்கு கிடைக்க வேண்டுமாம். நாளைக்கு உள்ளூர் தபாலில் போட நினைத்தேன்."

நெற்றிப் பொட்டை அழுத்தி, உதயரேகா ஒரு கணம் யோசித்தாள். "அதைக் கையோடு எடுத்து வாருங்கள். வழியில் எங்காவது தபால் பெட்டியில் போட்டு விடலாம். நானும் வெளியூர் போவதாக வீட்டுக்கு... ஃபோன்.. இல்லை வீடு வரை போய் நேரிலேயே சொல்லி விடலாம். கொஞ்சம் துணி மணி... பணம் எடுக்க வேண்டும்.. வாருங்கள். சீக்கிரம் போகலாம். எங்கள் காரில் போகலாமா? அது இன்னும் கொஞ்சம் வேகமாகப் போகும்..." என்றாள் முன்னே நடந்தபடி.

வாய் பேசியபோதும், மனம் எங்கோ இருப்பதை அவளது கண்கள் காட்டின.

வேறு எங்கே? கணவனிடம்தான் என்பதை ஊகித்த மணிவாசகம், பெருமிதமும் கனிவுமாய் நோக்கி, "கேசி சும்மா பெருமை பேசவில்லை, சகோதரி. வாருங்கள் போகலாம்" என்று கூறியபடி, டீ.வி. ஸ்டாண்டின் கீழ்த்தட்டில் இருந்த ஒரு சிறு பெட்டியை எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

மணிவாசகம் வெளியூர்ப் பயணத்துக்கு ஆயத்தமாகவே இருந்திருக்கிறான்! எங்கே என்று அறியப் பிரமாதமான மூளை தேவையில்லை! ஆனால் எப்போது, எந்தச் செய்தியின் பின் கிளம்புவதாக இருந்தான் என்று எண்ணிப் பார்க்கும் போதே உதய ரேகாவின் வயிறு, நெஞ்சு எல்லாவற்றையும் ஏதோ இறுக்கிப் பிடித்தாற் போல நடை தடுமாறினாள்.

**கா**ரைத் தானே ஓட்டுவதாக மணிவாசகம் கூறவும், சாவியை எடுத்து அவனிடம் கொடுத்து விட்டாள்.

வெகு விரைவிலேயே பெங்களூர் மார்க்கத்தில் கார் விரைய, நெற்றியைப் பிடித்தபடி, கதவோரமாய்ச் சோர்ந்து கிடந்தாள் உதயரேகா.

என்னென்னவோ பயங்கரக் கற்பனைகளில் அவளுக்கு அவ்வப்போது உடல் சிலிர்த்து, தூக்கி வாரிப் போட்டது.

ரமணி சந்திரன்



''உங்கள் கமண்டலத்திலிருக்கும் புனித நீரில் எனக்கு ஒரு மூணு அவுன்ஸ் தரலாகதா குருவே!''

''ராஸ்கல்! அதில் நான் விஸ்கி ஊற்றிவச்சிருப்பதை தெரிஞ்சுக்கிட்டு கிண்டலா பண்றே?!''

— உ ராஜாஜி

---

இவளே இப்படிக் கலங்கிக் கொண்டு இருந்தால், அவனுக்குக் தைரியமூட்டுவது எப்படி?

ஒரு தரம் அவள் அப்படிக் குலுங்கியபோது, "என்னம்மா?" என்று பரிவுடன் மணிவாசகம் வினவினான்.

"ஒன்றுமில்லை.. சும்மாவே தவித்தவரை நான் வேறு என்ன மாதிரி நரகவேதனை அனுபவிக்க வைத்து விட்டேன்!" என்று விழிகளில் ததும்பிய நீரை உள்ளுக்கு இழுக்க முயன்றவாறே வருத்தத்துடன் உரைத்தாள் உதயரேகா.

"இல்லையே, சிஸ்டர்! உங்கள் சாமர்த்தியம், நகைச்சுவை உணர்வு பற்றியெல்லாம் கேசி மிகவும் பெருமையாகத்தானே பேசுவான்" என்று மறுத்தான் மணிவாசகம்.

அவனை வம்புக்கிழுத்து, மடக்கிப் பேசியது எல்லாம் நினைவு வர அவள் விசித்தாள்.

மணிவாசகம் திரும்பிப் பார்க்கவும், "அதில்லை மணி சார். உங்கள் நண்பருக்கு என்னிடம் சும்மாவே மிகுந்த அன்பு. என்னோடு பேசிச் சிரிக்க, பழக எல்லாம் அவருக்கு இயல்பாகவே அதிக ஆசைதான். ஏற்கெனவே அதையெல்லாம் வெளிக்காட்டாமல் மறைக்கவும், அவர் படாத பாடு பட்டுக் கொண்டிருந்திருக்க வேண்டும். அப்போது போய், நான் அவரை விரட்டிப் பிடிக்க முயன்றபோது தன்னை அடக்கிக் கொள்வது அவருக்கு எவ்வளவு கடினமாக இருந்திருக்கும்! விதி ஒருபுறம் சோதித்தது என்றால் இன்னொரு பக்கம் நானல்லவா அவரைப் பெரிதும் வதைத்து விட்டேன்!" என்று மறுகினாள் அவள்.

"அப்படி அல்ல, சிஸ்டர். பெற்றோரையும் தங்கையையும் எண்ணி உள்ளூர நொந்து கொண்டிருந்தவனின் வாழ்வில் நீங்கள் ஒரு தென்றலாக வந்து, கொஞ்சம் சுகம் கொடுத்தீர்கள். உங்கள் பேச்சும், சிரிப்பும்... ஏதோ எழுபத்தைந்து லட்சமேதான் விலை என்று பென்ஸ் கார் கேட்டீர்களாமே, அதைச் சொல்லிச் சொல்லி எப்படிச் சிரித்தான் தெரியுமா?"

சற்றே ஆறுதலாக உணர்ந்தவள், கணவனுடைய நண்பனின் புறமாய்த் திரும்பி, நனைந்த விழிகளால் நோக்கி, நன்றி தெரிவித்தாள்.

அதை ஒன்றுமில்லை என்று ஒதுக்கி, "நான் கூட உங்களுக்கு நன்றி தெரிவிக்க வேண்டும் சிஸ்டர். வசுமதி விஷயத்தில் ஒரே பிடிவாதமாக நின்று தடுத்தீர்களாமே! நல்லவேளை! இல்லை என்றால் அந்தக் குழந்தையை மனைவியாக எண்ண நான் மிகவும் கஷ்டப்பட நேர்ந்திருக்கும்! கேசிக்கு என்னிடம் மிகுந்த நம்பிக்கை! தங்கையை பாசம் காட்டிப் பாது காப்பேன் என்று எண்ணம். ஆனால், மண வாழ்வுக்கு வெறும் பாசமும் பாதுகாப்பும் மட்டும் போதாதே!" என்றான் அவன்.

"அவரது நம்பிக்கையின் காரணம் இப்போது புரிகிறது மணி சார்" என்றாள் அவள் மணிவாசகத்தின் பேச்சில் ஈடுபட்டு. "நான் கூட முதலில் உங்களைத் தவறாக நினைத்திருந்தேன்..."

"கேசி சொல்லியிருக்கிறான். அந்த நினைப்பில் ஏதேனும் மரியாதைக் குறைவாகப் பேசினால்கூடப் பொருட்படுத்த வேண்டாம் என்றான்" என்று முறுவலித்தான் மணிவாசகம்.

"அவர் திரும்பத் திரும்ப உங்களைப் பற்றி உயர்வாகக் கூறியபோதும் அப்போது எனக்குப் புரிந்து கொள்ளத் தெரியவில்லை... தயவு செய்து மன்னித்துக் கொள்ளுங்கள்" என்றாள் உதயரேகா பணிவுடன்.

"இந்த மாதிரி வார்த்தைகளுக்கு அவசியமே இல்லை, சிஸ்டர். அதெல்லாம், ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ளாத அன்னியர்களிடையே மட்டுமே தேவைப் படுபவை. கேசியின் மனைவி என் சகோதரி அல்லவா?" என்று முடித்து விட்டுப் பேச்சை மாற்றினான் அவன்.

"நளினா விஷயம் வெளியானதும் நீங்கள் என் பங்கைக் கண்டு கொள்வீர்கள் என்று நான் கேசியிடம் சொல்லிக் கொண்டே இருந்

---




"அவர் சினிமா உலகத்துக்கு ஒன்றுமே செய்ததில்லை. அவரைப் போய் கலை உலகத்துக்கு சேவை செய்ததா பாராட்டி மாலை போடறாங்களே?"

"அவர் நடிகை ஜிகினா ஸ்ரீயை கல்யாணம் செய்துகிட்டு திருமணத்துக்குப் பிறகு நடிக்கக் கூடாதுன்னு சொல்லிட்டாரே, அது பெரிய சேவையில்லையா?"

— பாஸு

# மக்கள் சக்தி இயக்கம்



17-A தெற்கு அவென்யூ,
திருவான்மியூர்,
சென்னை - 600 041.
☎ : 411800



என் இனிய தமிழ்ப் பெருமக்களே!

நாம் பாக்கியம் செய்தவர்கள். நம் முன்னோர்கள் உலகிற்கே வழிகாட்டக்கூடிய அறிவையும், ஞானத் தெளிவையும் நமக்கு விட்டுச் சென்றிருக்கிறார்கள்.

ஆனால் இன்றையத் தமிழனின் நிலை என்ன?

மக்களின் வரிப்பணமும், சேமிப்பும், பொதுச் சொத்துக்களும் கொள்ளையடிக்கப்படும் நிலையும், அடியாட்களை வைத்து மிரட்டி ஆட்சி நடத்தும் கொடுமையும் நடைபெறுகிறது.

நாம் இதற்கு ஒரு வழி காண வேண்டும்!

நாட்டின் தலைவிதி மக்களின் வாக்குகளால்தான் நிர்ணயிக்கப்படுகிறது. மக்கள் சக்தி ஒன்று திரளுமானால் உங்கள் தீர்ப்பினால் ஒரு அமைதியான பெரும் மாற்றத்தை நாம் கொண்டுவர முடியும். இதைக் கருத்தில் கொண்டு, உங்கள் சார்பில், வரும் பொதுத் தேர்தலில் ஒரு அரசியல் கட்சியாக பங்கு கொள்வது என்று மக்கள் சக்தி இயக்கம் தீர்மானித்திருக்கிறது.

இயக்கம் என்ன செய்தது எட்டாண்டுகளில்?

- தஞ்சை நரிமணத்தில் நாலாயிரம் கோடி ரூபாயில் எண்ணெய் சுத்திகரிப்பு நிலையம் வரக் காரணமாயிருந்தது. மதுவிலக்கிற்காக சிறை சென்றது.
- தென்னகத்து நதிகளை இணைக்கக் கோரி கன்னியாகுமரியிலிருந்து சென்னை வரை 1030 கிலோ மீட்டர் 38 நாட்கள் பாதயாத்திரை நடத்தியது. இன்று நாங்கள் அளித்துள்ள மகாநதி, கோதாவரி, கிருஷ்ணாவை காவிரி, வைகையுடன் இணைக்கும் திட்டம் சாத்தியம்தான் என்று மத்திய அரசினால் ஏற்றுக் கொள்ளப்பட்டு இருக்கிறது.
- நாமக்கல்லில் கடந்த மூன்றாண்டுகளாக ஒரு புதிய கல்வித் திட்டத்தை அமுல்படுத்தி வருகிறது.
- களக்காடு, பத்மநாபபுரம், அய்யனார்புரம், ஸ்ரீவில்லிப்புத்தூர் போன்ற பல கிராமங்களில் சமுதாயப் பணிகள் பல செய்து கொண்டு இருக்கிறது.

இத்தனையும் எந்த பதவியும் இல்லாமல்!

மாணவர்களே! மாணவிகளே!

மாணவர் சக்தி கிராமங்களுக்குச் சென்று வீட்டுக்கு வீடு, கடைக்குக் கடை, என்று ஊர் ஊராகப் பிரசாரம் செய்யுமானால், மக்கள் இந்த உண்மைகளைத் தெரிந்து கொள்வார்கள்.

மக்கள் சக்தி இயக்கம் நாட்டில் மாற்றம் காண மாணவர் சக்தியை அழைக்கிறது. நடுத்தர வர்க்க சக்தியை அழைக்கிறது. இந்த நாட்டின் கலாச்சாரத்தை காத்து நிற்கும் பெண்கள் சக்தியை அழைக்கிறது.

அநியாயங்களுக்குச் சாட்சியாய் இருந்தது போதும்! அணியாகத் திரளுவோம்!

தம்பி! மகளே! கோயிலில் சாமி இருப்பது உண்மையானால் நீங்கள் நல்லவர்களுக்காக மணியடியுங்கள்!

சகபயணி
எம்.எஸ். உதயமூர்த்தி

குறிப்பு :
1. உறுப்பினராக விரும்புபவர்கள் தலைமையகத்திற்கு எழுதுங்கள். நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன. (ஆனால் கண்டிப்பாக ரூ. 1000க்கு மேல் அனுப்ப வேண்டாம்).
2. கட்சி சார்பற்ற நல்லவர்கள் வேட்பாளராக நிற்க விரும்பினால் உடனே தொடர்பு கொள்ளுங்கள். மக்கள் சக்தி இயக்கம் உங்களை ஆதரிக்கும்.

## 'சுருக்-நறுக்' என்றொரு சொல்லோவியம் - 24

# பொறுமை என்பது....

"...கடலினும் பெரிது" என்று வழக்கமாகச் சொல்வார்கள். நமக்கெல்லாம் அதைவிடவே அதிகமாகத்தான் இருக்கிறது. இல்லாவிட்டால் நாட்டு நடப்புகளைப் பார்த்துக் கொண்டு வயிறு எரிந்தாலும் இன்னொரு பக்கம் பிரைம் ஸ்போர்ட்ஸில் மாட்ச் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா?

போகட்டும். 'பொறுமை' குறித்து நீங்கள் ஒரு சொல்லோவியம் தீட்டுங்கள். சுருக்கென்று இருக்க வேண்டும். சுலபமாக மனசில் உட்கார்ந்து கொள்ளும்படியாகவும் இருக்க வேண்டும். சிறந்த சொல்லோவியங்களுக்கு ரூ. 50/- பரிசு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

ஆயிற்று, இன்னும் இரண்டே வாரங்கள். டைடன் கடிகாரங்கள் உங்களில் யாருடைய மணிக்கட்டுகளை அலங்கரிக்கப் போகின்றன? காத்திருங்கள்!

முடிவு தேதி : 1.4.96

பொறுமை என்பது ..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

..........................................

தேன். ஆனால், மனதுக்கு அவன் நிறைய வேலை கொடுத்ததால், நீங்கள், இது பற்றி எண்ணிப் பார்க்கவே இல்லை போலத் தெரிகிறது!" என்றான் சற்று இலகுவான குரலில்.

லேசாக முறுவலித்துவிட்டு, "இப்போதுதான்..." என்று தொடங்கியவளின் முகம் உடனே வாடியது. எந்த மாதிரி நேரத்தில் நினைவு வந்தது!

அப்போதும் தப்பாகத்தானே நினைத்தாள்! வசுமதியின் பிறந்த நாளின்போது, இந்த உண்மை விளம்பி, உண்மையை விளம்பாமலே விட்டிருக்கலாமே என்று நினைத்தேனே! ஒரு பொய்யை உண்மையாய் விளம்பி விட்டு வரும்படியான உத்தரவைத்தானே நிறைவேற்றியிருக்கிறான்!

இருவருக்குமே ஆறுதல் கிட்டினாற் போல இருக்கவே, பேச்சு கிருஷ்ணசந்திரனையே சுற்றியது.

நண்பனைப் பற்றிப் பேசிய மணிவாசகம், "இப்போதைய நிலையில், இன்னமும் ஒருசில மாதங்கள் அவன் நல்லபடியாக இந்தத் தலைவலி தவிர வேறு பாதிப்பின்றி வாழ்ந்திருக்க முடியும், சகோதரி. அப்படி வாழ்ந்து முடித்துவிடத்தான் முதலில் அவன் முடிவு செய்திருந்ததும். உங்கள் திருமணத்தின் பின்னரும், வாழும் காலத்தை, உங்களோடு தன் வரையில் சுகித்திருந்துவிட்டு, விதி முடிகிறபோது அவன் பாட்டில் போயிருக்கலாம். ஆனால் அது உங்களுக்குச் செய்யும் நியாயமாகாது என்று நினைத்தான். உயிர்பிழைக்க ஒரு வாய்ப்பு இருந்தால், அதை முயற்சி பண்ணாமல் விட்டுவிடவும் இப்போது அவனுக்கு மனமில்லை..." என்று பெருமூச்சு விட்டான்.

"இப்போது ஏன் மனமில்லை?" என்பது புரிந்ததால் உதயரேகா இன்னமும் நொந்தாள். கணவனின் வாழ்நாளில் சில மாதங்களைக் குறுக்கி விட்டோமோ என்று குமைந்தாள்.

ஆனால், அது அப்படியல்ல என்றான் மணிவாசகம். அந்தக் கட்டியினால் எப்படியும் மரணம் என்கிறபோது - உயிர் பிழைப்பதற்குரிய வாய்ப்பு ஒன்று இருக்கும்போது- அது எவ்வளவு சிறுவாய்ப்பு என்றாலும் முயற்சி செய் வதுதான் சரி என்றான் அவன்.

பேச்சும் யோசனையும் கவலையும் தேற்றலுமாக ஒருவாறு பெங்களூரின் சுற்று வட்டாரத்தில் அமைந்திருந்த மருத்துவ மனையை இருவரும் சென்றடைந்தார்கள்.

கிருஷ்ணசந்திரனின் அறை மணிவாசகத்துக்கு ஏற்கெனவே தெரிந்திருந்ததால் நேரே அங்கே சென்றார்கள்.

அங்கே, தலை முழுவதும் கட்டுகளோடு, மூக்கிலும் கையிலும் குழாய்களோடு, உணர்வற்றுக் கண்மூடிக் கிடந்த கணவனைக் கண்டதும் உதயரேகா மயங்கி விழுந்தாள்!

(அடுத்த இதழில் முடியும்)

# மாலை மயங்குகின்ற நேரம்...

**25**

**ரமணி சந்திரன்**

சில்லென்று முகத்தில் நீர்பட்டுக் கண் விழித்தவளுக்கு 'ஹோ'வென்று நெஞ்சை அடைத்துக் கொண்டு வந்தது.

அவள் ஆசைப்பட்ட அந்த இரண்டு நாட்கள்! அந்த இரண்டே நாட்கள் அவளுக்கு மறுக்கப்பட்டு விட்டன!

இனி, அவளுடைய கணவனை அணைத்து, ஆறுதல் கூறி, தேற்றி, தைரியம் கொடுத்து... எதுவும் செய்வதற்கில்லை.

"நாளைதான் என்றீர்களே?" என்று மணிவாசகத்திடம் குமுறினாள்.

விசாரித்து அறிந்த விவரத்தை அவன் சொன்னான்.

அறுவை சிகிச்சையைத் துரிதப்படுத்தியது கிருஷ்ணசந்திரன்தானாம். ஒவ்வொரு நாளும் வீணாவதாகச் சொல்லி முடிந்த அளவு விரைவாக- அன்றே சிகிச்சை அளிக்கச் சொல்லி வற்புறுத்தியிருக்கிறான்.

அவனது உடல் ஆரோக்கியம் நன்றாகவே இருந்தது. ஆனால், அவனது மனதின் அமைதியின்மை உடம்பைப் பாதித்து விடக் கூடாதே என்ற கவலை டாக்டருக்கு உண்டாகி விட்டது.

அத்தோடு, டெல்லி 'ஆல் இந்தியா இன்ஸ்டிடியூட் ஆஃப் மெடிகல் சயன்ஸ்'ஸிலிருந்து ஒரு பெரிய நரம்பியல் மருத்துவர், ஒரு 'கான்ஃபரன்'சுக்காக பெங்களூருக்கு அன்று வந்திருக்கிறார். டாக்டர் புருஷோத்தமன் அவரிடம் பயின்றவரும் கூட. கேஸ்பற்றி அந்த சீனியரிடம் புருஷோத்தமன் விவரிக்கவும், அந்த அறுவை சிகிச்சையைத் தாமே செய்வதாக அவரும் ஒத்துக் கொண்டு விட்டார்.

முன்தினம் இரவு 'கான்ஃபரன்ஸ்' முடிந்து, கிட்டத்தட்ட நள்ளிரவில்தான் அவர் இதற்கு ஒத்துக் கொண்டதே. எனவே அவருக்கு வசதியாக, அன்று விடியற்காலையிலேயே ஆபரேஷனைச் செய்து முடித்து விட்டார்கள்.

"இந்தியாவின் தலைசிறந்த 'ந்யூரோ சர்ஜன்' அவர். அவர், இந்த அறுவை சிகிச்சையைச் செய்யக் கிடைத்ததே நமக்குப் பெரும் நல்ல காலம் என்பது டாக்டர் புருஷோத்தமனின் கருத்து'' என்றான் மணிவாசகம்.

''அப்படியானால் உங்கள் நண்பர் பிழைத்து விடுவாராமா? நல்லபடியாக?" என்று ஆவலே வடிவாகக் கேட்டாள் உதயரேகா.

"அது... அது டாக்டர்தான் சொல்ல வேண்டும்" என்று, மருத்துவரைக் கை காட்டினான் அந்த நல்ல நண்பன்.

"பொதுவாகக் கேசி பிழைத்து நல்லபடியாக வாழ்வதற்கு உரிய வாய்ப்பு விகிதம் மிகவும் குறைவே. நூற்றுக்கு ஒன்று... இரண்டு என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் கிருஷ்ணசந்திரனுக்கு வாழ வேண்டும் என்கிற பிடிவாதம் இருக்கிறது. உங்களிடம் அளவு கடந்த அன்பு இருக்கிறது. உங்களை விட்டுப் பிரிந்து போய்விடக் கூடாது என்கிற வெறியே இருக்கிறது. இது ஒரு நல்ல அறிகுறி. "ஒரு நோயாளிக்கு அளிக்கப்படும் சிகிச்சை வெற்றி பெறுவது மூன்று விஷயங்களைப் பொறுத்தது. ஒன்று வைத்தியரின் முயற்சி. கேசிக்கு இந்த அறுவை சிகிச்சை செய்தவர் இந்தியாவிலேயே தலை சிறந்தவர். ஏன், உலகத்தின் தலை சிறந்த நிபுணர்களில் ஒருவர் அவர். அடுத்து நோயாளியின் மனவலிமை. கேசிக்கு அதிலும் குறைவில்லை. அடுத்தது இறையருள். எல்லாம் இருந்தாலும் அந்தக் கடவுளின் கருணையில்லாமல் எதுவும் நடப்பது இல்லை" என்றார் டாக்டர் புருஷோத்தமன்.

இவ்வளவு நேரம் பேசியதில் தனக்கு வேண்டியதாய் அவர் ஒன்றுமே சொல்லவில்லையே என்றிருந்தது உதயரேகாவுக்கு. "இப்போது தான் 'ஆபரேஷனைச் செய்து முடித்தாயிற்றே. அது வெற்றியா இல்ல... அது என்னவென்று உங்களுக்குத் தெரிந்திருக்குமே, டாக்டர்?" என்று நேரடியாகக் கேட்டாள்.

கைகளை இறுக மூடிமூடித்திறந்தபடி, கண்ணிலேயே உயிரைத் தேக்கி அவள் கேட்பதைப் பார்க்க டாக்டருக்கும் பரிதாபமாகத்தான் இருந்தது. ஆனால் அவள் விரும்பும் பதி

லைச் சொல்வது அவர் கையில் இல்லையே!

" 'ஆபரேஷன் வெற்றி. ஆனால்...' என்று அநியாயமாய் ஒன்று சொல்வார்கள். கேசி விஷயத்தில் வேடிக்கையாகக் கூட அந்த வார்த்தையைப் பயன்படுத்த நான் விரும்ப வில்லை. ஆனால், அறுவை சிகிச்சையைப் பொறுத்த வரையில் அது முழு வெற்றிதான். கட்டியைப் பூரணமாக அகற்றிவிட்டோம். ஆனால் மூளை நம் உடலில் மிகமிக முக்கிய மான பகுதி; மிகமிக நுண்ணியது. அதன் ஒவ் வொரு 'செல்'லும் முக்கியமானது. அதில்.... இப்போதைக்கு மூளைக்கு எந்தவித பளுவும்

"ஆனால் டாக்டர்.." என்று தொடங்கி யவளை இடைமறித்து, "மற்றதெல்லாம் பிறகு பார்க்கலாம் என்றேனே. முதலில் நீங்கள் கட வுளிடம் வேண்டிக் கொள்ளுங்கள். இனி எல் லாம் அவர் கையில்தான் இருக்கிறது" என்று முடித்து விட்டார் டாக்டர்.

அதாவது, எது நடந்தாலும் பொறுப்பு அவ ருடையது இல்லை என்கிறார்! கனவில் நடப் பவள் போலக் கணவனின் அறைக்கு வந்து சேர்ந்தாள் உதயரேகா. கட்டிலின் அருகே சென்று நின்றவளின் பார்வை அங்கம் அங்க மாகக் கணவனை வருடியது. எத்தனை குழாய்



கூடாது என்பது முக்கியம். உடல் உறுப்பு களினால் பாதிப்பு கூடாது என்று 'ஹார்ட் லங்' மிஷினில் போட்டிருக்கிறோம். வெளிப் பாதிப்பு கூடாது என்று மயக்கத்தில் வைத் திருக்கிறோம். உள் காயங்கள் ஆறும்வரை இப் படியே இருக்கட்டும். பிறகு பார்ப்போம்."

கிருஷ்ணசந்திரன் அஞ்சிய 'கோமா' நிலை பற்றி இவர் எதுவும் கூறுவதாக இல்லை. கட்டி யினால் இனி மரணம் இல்லை. ஆனால், அந்த 'மெர்சி கில்லிங்?' அவளுக்கு அவன் இருந் தாலே போதுமே! 'பொட்டோடு, பூவோடு' என்பதற்காக இல்லை. அவன் இருக்கிறான் என்பது மட்டுமே கூட....

கள்? இவையெல்லாம் என் கணவரை எப்படிக் காப்பாற்றப் போகின்றன?

ஆனால், கடவுள்தான் காப்பாற்ற வேண்டு மாம்?

கிருஷ்ணசந்திரனின் கட்டிலின் அருகே மண்டியிட்டவளின் மூடிய இமைகளின் பின்னே ஒளி வெள்ளம் தோன்றிப் புருவ மத்தியில் நிலைகொண்டு பேரொளியாய் மாற, அவள் தன்னை மறந்தாள்.

தொடர்ந்து மூன்று தினங்கள், தன்னைச் சுற்றிலும் என்ன நடந்தது என்றே உதயரேகா அறியாள்.



**''வர வர அரசியல்வாதிங்களுக்கு துளிக் கூட மக்களிடம் பயமில்லாம போச்சு!''**

**''எப்படி சொல்றே?''**

**''முதலீடே இல்லாமல் கோடி கோடியா சம்பாதிக்கும் முதல்வரே வருகன்னு பேனர் கட்டி இருக்காங்க!''**

**– தஞ்சாவூர் ராஜபாரதி**

---

அது அவளது கற்பனையாகக் கூட இருக்கலாம். ஆனால், சுயம் பிரகாசமாய் உருவம் அறியாமல் நின்ற ஏதோ ஒன்றிடம் கணவனைக் காப்பாற்றும்படி முறையிட்டது மட்டுமே அவளுக்குத் தெரியும்.

மற்றபடி, மணிவாசகத்தின் வற்புறுத்தலில் உண்டது, உறங்கியது, டாக்டர்கள் கிருஷ்ணசந்திரனின் சிகிச்சைக்காக வந்தபோது வெளியே சென்றது, வந்தது எதுவுமே அவளுக்கு நினைவில்லை.

எல்லாமே, விழித்தெழுந்தபின் நினைவுகூட வராத கனவு போல நடக்க, அவளின் ஒரு கூறு மட்டும் தன் முறையீட்டை நிறுத்தவே இல்லை!

கடைசியாக ஒரு நர்ஸ். அவள் கன்னத்தில் மென்மையாகத் தட்டி, ''பாருங்கள் மிசஸ் கிருஷ்ணசந்திரன், உங்கள் கணவர் பிழைத்து விட்டார். இப்போது கண் விழிக்கப் போகிறார். பாருங்கள்!'' என்று இனிய குரலில் கூறி, அவளை எழுப்பி நிறுத்தியபோதுதான் அவள் முழுமையாக நனவுலகுக்குத் திரும்பினாள்.

வெள்ளமாகப் பொங்கிப் பெருகிப் பார்வையை மறைத்த கண்ணீரை, அவசரமாக இமைகளைத் தட்டித்தட்டி அகற்றியபடியே கணவன் முகத்தை வைத்த கண் வாங்காமல், அவள் பார்த்துக் கொண்டிருந்தபோது, கிருஷ்ணசந்திரனின் இமைகள் லேசாக அசைந்தன.

இருமுறை தட்டி விழித்தவனின் பார்வை, மனைவியின் முகத்தில் நிலைக்க, "உதி..." என்றான் பலவீனமான குரலில்.

அதன்பின், கிருஷ்ணசந்திரனின் ஆரோக்கியம் சற்றும் பின்னடையவில்லை.

டாக்டர் புருஷோத்தமனே வியக்கும்படியாக வெகு விரைவில் குணமடைந்தான். "எல்லாம் மனைவி என்கிற மந்திரமாக்கும். 'காற்றில் ஏறி அவ்விண்ணையும் சாடுவர் காதல் பெண்டிர் கடைக்கண் பணியிலே' என்றார் பாரதியார். நம் கேசி, யமலோக வாசல் வரை சென்றுவிட்டு, பாசக்கயிறு, எமகிங்கரர்கள் எல்லோரையும் உதறித் தள்ளி விட்டுத் திரும்பி ஓடி வந்து விட்டான்பா'' என்று கிண்டல் செய்தார் அவர்.

நண்பன் மனைவியைப் பெருமையுடன் நோக்கி, "அந்தக் கால சாவித்திரி சத்தியவான் கதையை இனி நான் கூட நம்புவேன் கேசி. அப்..ப்பா! அந்த மூன்று நாட்கள் சிஸ்டர் முகத்தைப் பார்க்க வேண்டுமே! பொதுவாக எனக்கு இந்தக் கடவுள் நம்பிக்கை எல்லாம் அவ்வளவாகக் கிடையாதுதான். ஆனால்.... என்னவோ, சிஸ்டரின் பிரார்த்தனைதான் உன்னைத் திருப்பிக் கொணர்ந்தது என்பதுதான் என் அபிப்பிராயம்!'' என்றான் மணிவாசகம்.

கிருஷ்ணசந்திரன் பெருமிதமாய்ப் புன்னகைக்க, "என்ன அநியாயம்! என் சீனியரைக் காலைப் பிடித்துக் கெஞ்சாத குறையாகக் கூட்டி வந்து 'ஆபரேட்' பண்ண வைத்து, என் பசி, தாகம், தூக்கம் அத்தனையும் தியாகம் செய்து, மணிக்கொருதரம் வந்து நானே நேரடியாகக் கவனித்திருக்கிறேன், பாராட்டு மட்டும் ஒட்டுமொத்தமாய் சிஸ்டருக்கா?" என்று குறைப்பட்டு விட்டுச் சிரித்தார் புருஷோத்தமன்.

"இப்படி அருமையான நண்பர்கள் இருப்பதுதான் அவர் பிழைத்ததன் முக்கிய காரணம்'' என்றாள் உதயரேகா மகிழ்ச்சியோடு. முறுவலித்தபடி, நண்பர்கள் இருவரும் குடித்து முடித்த காப்பி கப்களை வாங்கி வைத்தாள்.

"ஓகே, மணிவாசகம். இனி கேசியாய் நம்மை வெளியே போ' என்று சொல்லும்முன்பாக, நாமாகக் கிளம்பி விடலாமா?'' என்று புருஷோத்தமன் எழ, மணிவாசகமும் புன்னகையோடு கிளம்பினான்.

"ஆமாமாம். அதுவும் சரிதான். அத்தோடு, இன்று எனக்கு உங்கள் பெங்களூரைச் சுற்றிக் காட்டுவதாகச் சொல்லியிருப்பதையும் மறக்க வேண்டாம்'' என்று டாக்டர் நண்பனிடம் நினைவூட்டியவன், "சிஸ்டர், உங்களுக்கு ஏதாவது வாங்கி வரவேண்டுமா?'' என்று அவளிடம் விசாரித்தான்.

அதற்குள், "புரு'' என்று நண்பனை அருகழைத்து, கிருஷ்ணசந்திரன் ஏதோ கேட்க, அதற்குப் பதிலளித்து விட்டு, "ஜமாய்!'' என்று சிரித்தான் அந்த சிநேகிதன்.

கிருஷ்ணசந்திரன் உடலில் பலம் பெருகப் பெருக, முன் மாலையில் நண்பர்கள் இப்படிச் சேர்ந்து பேசுவது வழக்கம்தான். அன்று மணிவாசகமும் புருஷோத்தமனும் சென்றதும், மனைவியை நோக்கி முறுவலோடு கை நீட்டினான் கிருஷ்ணசந்திரன்.

பதிலுக்குப் புன்னகை புரிந்தவாறே, அருகில் வந்து அமர்ந்து, அவன் கையைப் பற்றிக் கொண்டாள் மனைவி.

# மக்கள் உடலில் நோய் தோன்றும் வரலாறு

## நோய் வருவதற்கான காரணங்கள் :-

1. பழவினை – முன்வினைத் துன்ப (பாப)ங்களாலும்
2. நாம் உண்ணுகின்ற உணவின் செயல்களாலும் அளவுப்படி நீர்பருகாமை – அளவுக்கு மீறி நீர் அருந்துதலாலும் அளவுப்படி உணவு உண்ணாமை – அளவுக்கு மீறி உணவு உண்ணுதலாலும் ஒரு பொழுது மட்டும் உணவு உண்டு பலபொழுதுகள் உண்ணா நோன்பு நோற்பதாலும் – அடிக்கடி பட்டினி கிடத்தலாலும் சலிப்புடன் சாப்பிடுவதினாலும்
3. சகிப்புத்தன்மை இல்லாததினாலும்
4. கோபப்படுதலினாலும்
5. எப்பொழுதும் சத்தமாய்ப் பேசுதலினாலும்
6. உடற்பயிற்சி யாதுமின்றி – தொழிலற்று சோம்பலாய் இருத்தலினாலும்
7. பச்சை மரத்தை வேருடன் வெட்டி சாய்ப்பதாலும்
8. ஈரத்துணியை எப்போதும் உடலில் கட்டிக்கொண்டே இருத்தலினாலும் – அடிக்கடி மழையில் நனைவதினாலும் எப்போதும் ஓத்மாயிருக் (ஈரமாய்)கின்ற சதுப்பு நிலத்தில் வசிப்பதனாலும் – எப்போதும் பனியிலேயே திரிகின்றதாலும்
9. மது அருந்தி வெறிகொண்டு மதிமயங்கி பேசுவதனாலும் – சூது ஆடுவதினாலும் – சூது செய்வதினாலும்
10. சபையில் சங்கீதம் கேட்கும் போது இராக ஆலாபனையின் போது தப்பும் தவறுமாக தாளமிடுதலும் தலையசைத்தலும்

என்று பதினெண் சித்தர்களில் ஒருவரான தேரையர் இயற்றிய தேரையர் கரிசல் என்கிற பழமையான சித்த மருத்துவ நூல் கூறுகிறது.

-சித்த மருத்துவர் டாக்டர் A. ராமலிங்கம், பி.ஐ.எம்.

சற்று நேரம் அப்படியே இருந்தவன், ஓர் ஆறுதல் பெருமூச்சுடன், "இப்போது எவ்வளவு நிம்மதியாக இருக்கிறது! முன்பெல்லாம், ஒருபக்கம் உன் அருகாமையை அனுபவிக்கும் போதே இன்னொருபுறம் 'ஐயோ ஐயோ' என்று பதைப்பாகவே இருக்கும். எல்லாம் மறைத்து நடிப்பது வேறு. அந்தத் துன்பம் ஒன்றும் இனி இல்லை என்றால் பாதி, அதை நம்பக்கூட முடியவில்லை!" என்றுரைத்தான்.

பேச்சின்றி அவன் நெற்றியை வருடி விட்டாள் அவள்.

தலையைத் தொட்டுப் பார்த்துவிட்டு, "முடியை ஒட்ட எடுத்து விட்டார்களோ! பார்க்க அசிங்கமாக இருக்கிறதா?" என்று அவன் வினவினான்.

"ஊகூம், மூக்கு, புருவம், கண் எல்லாம் இன்னமும் பளிச்சென்று எடுப்பாய்த் தெரிகிறது" என்று மென்குரலில் இயம்பியவள், "சந்திரனுக்குச் சிகை உண்டாமா?" என்று சன்னமாய்ச் சிரித்தாள்.

கூடச் சேர்ந்து முறுவலித்தவன் முகத்தில் யோசனை பரவியது. "அம்மா, அப்பா அறிவார்களா, உதி?" என்று கிருஷ்ணசந்திரன் சற்றுக் கவலையோடு வினவினான்.

"அது... அது பிறகு பேசுவோமே!" என்று உதயரேகா தயங்கவும், "எனக்கு இனி ஒன்றுமில்லை, உதிம்மா. டாக்டரிடமே கேட்டு விட்டேன். சொல்லு. அவர்களுக்குத் தெரியுமா?" என்று மீண்டும் கேட்டான்.

"இல்லை, குணமாகி வீடு திரும்பினால் பிறகு சொல்லிக் கொள்ளலாம் என்று சும்மா உங்களோடு செல்வதாக மட்டும் சொல்லச் சொன்னேன்..."

லேசாக இமை இடுக்கி நோக்கி, "குணமாகியிரா விட்டால்?" என்று கேட்டான் கணவன்.

லேசாக அவள் முகம் வாடியபோதும் அவன் விடாமல் கேட்கவும், "உங்களோடு நானும் தேசாந்திரம் போகப் போவதாக எழுதி விட்டு இங்கேயே இருந்து விடலாம் என்று, காரில் இங்கு வரும்போதே முடிவு செய்திருந்தேன்" என்றாள் அவள்.

அவன் மீண்டும் கேள்வியாய் நோக்கவும், "அப்படி உங்களை அழிக்க நான் விட்டு விடுவேன் என்று நினைத்தீர்களா? தடுக்க சத்தியாகிரகம் செய்திருக்க மாட்டேனா? இந்த டாக்டர் உங்கள் நண்பர். அவருக்கும் இந்த 'மெர்ஸி கில்லிங்' அப்படி ஒண்ணும் உவப்பாய் இருக்க முடியாது. எனவே, அதை நிறுத்துவது கடினமல்ல. கல்வியில் எனக்குப் பல தகுதிகள் உண்டு. நம் இருவர் செலவுக்கும் போதுமானதாக, இங்கேயே ஒரு நல்ல வேலையைத் தேடிக் கொண்டு, உங்களையும் பார்த்துக் கொண்டு, இங்கேயே இருந்து விடுவது என்று தீர்மானித்திருந்தேன்" என்றாள் அவள் உறுதியான

குரலில்.

பெருமை பொங்க, மனைவியின் முகத்தை மெல்ல வருடினான் அவன். மனைவி, தன்னிடம் உயிரை வைத்திருக்கிறாள் என்றால் எந்த ஆண்மகனுக்குத்தான் ஆனந்தமாய் இராது?

''முடிந்த அளவு என்மேல் படும்படி நெருங்கி உட்காரேன், உதி. உன்னைத் தொடத் தொட என்னமோ பலம் பெருகுவது போலத் தோன்றுகிறது... ஒன்றும் பயமில்லை. நான் புருஷோத்தமனிடம் கேட்டு விட்டேன்'' என்று மனைவியை அருகழைத்தான் கிருஷ்ணசந்திரன். கூடவே, "இன்றைய நிலையில் நானும் அதிகப்படியாய் ஒன்றும் போய் விடப் போவதுமில்லை!" என்று உதட்டைப் பிதுக்கி விட்டு நகைத்தான்.

டாக்டரின் 'ஜமாய்'யும் சிரிப்பும் நினைவு வர, உதயரேகாவின் முகம் சிவந்த போதும், கணவனின் விருப்பத்தை நிறைவேற்ற அவள் சற்றும் தயங்கவில்லை.

கைகள் பின்னிப் பிணைத்திருக்க, தோளோடு தோள் ஒட்டியபடி இருவரும் அமர்ந்து கொண்டனர்.

ஏதோ, மலையை வென்ற உணர்வு இருவருக்கும். களைப்பும்தான். ஆனால், "அப்பாடி!' என்பது போல நிம்மதியான சோர்வு.

மனைவியின் மென் விரல்களை வருடியபடி கிருஷ்ணசந்திரன் சொன்னான். "அம்மா, அப்பா, இப்படியே நினைத்துக் கொண்டிருக்கட்டும், உதி. என்னை நீ திருத்தி அழைத்து வந்து விட்டதாகவே இருக்கட்டும். இதையெல்லாம் அறிந்தால் வேதனைப் படுவார்கள். அனாவசியமாய் அவர்களுக்கு அந்தத் துன்பம் ஏன்?"

"சொல்ல வேண்டாம் என்றுதான் நானும் நினைத்தேன். ஆனால் அதன் காரணம் வேறு. ஒரு தரம் இப்படி நடந்து விட்டதால், அவர்களுக்கு உங்களை உன்னிப்பாய்க் கவனித்துக் கொண்டே இருக்கத்தோன்றும். சும்மா, ஏதேனும் யோசனையில் நீங்கள் வேறு கவனமாய் இருந்தால்கூட, மீண்டும் எதை மறைக்கிறீர்களோ என்று கவலைப்படத் தோன்றும். அதனால்தான், அநியாயமாய் உங்களை மாமா அத்தை தவறாக நினைத்துக் கொண்டு இருப்பார்களோ என்று மனதுக்குக் கொஞ்சம் கஷ்டமாக இருந்தால்கூட, பரவாயில்லை, இப்படியே இருக்கட்டும் என்று எண்ணினேன்" என்றாள் அவள்.

"உன் காரணமும் சரிதான்" என்றான் கணவன்.

"ஆனால் ஒன்று. இனி, இந்த மாதிரி ஒளிவு மறைவுகள் எதுவும் என்னிடம் கூடாது. என்ன! இனிமேல் எதையும் ஒளித்து வைத்துத் தனியாக வேதனைப்படமாட்டீர்களே?"

மனைவியின் முகத்தைத் திருப்பிப் பார்த்து விட்டு, "போச்சுடா! அப்பா அம்மாவைச் சொல்லி, நீயே அதுபோலக் கவலைப்படு வாயா? நிச்சயமாக உன்னிடம் எதையும் மறைக்க மாட்டேன். சத்தியமாய் மாட்டேன். இனி நிம்மதியாக இருப்பாயா? என்னடா? அதுதான் சத்தியம் செய்துவிட்டேனே, நான் சத்தியத்தை மீறுவேனா?" என்று ஆதரவாய்ப் பேசி, அவள் கண்களில் திரண்டிருந்த கண் ணீரை அன்போடு துடைத்து விட்டான் கிருஷ்ணசந்திரன்.

ஆறுதல் உற்றவளாய் அவள் மெல்லப் புன் னகைக்கவும், "உன்னிடம் ஒன்று கேட்க நினைத்திருந்தேன், உதி. உன்னிடம் நான் பல முறை மிகவும் கடுமையாவும், வருத்தப்படும்



**"என்னோட 57-வது பிறந்தநாள் விழாவுக்கு 57 அடி உயரத்துக்கு கட்-அவுட் வைக்காம, வெறும் 52 அடி உய ரத்துக்கு ஏன்யா கட்-அவுட் வச்சிருக் கீங்க...?"**

**"அது உங்க வய சைப் பொறுத்தது இல்லை தலைவரே... ரூபா ஒரு கோடி ஊழலுக்கு ஒரு அடி உயரம் வீதம், நீங்க பண்ணின 52 கோடி ரூபா ஊழலுக்காக அப்படி செஞ்சோம்....!"**

**- ஆர்.கே.**

படியாகவும் பேசியிருக்கிறேன். அதெல்லாம் ஏன், எதனால் நேர்ந்தவை என்று இப்போது புரிந்து கொண்டாய் தானே? என்று வின வினான்.

"உம்... எல்லாமே... ஆனால், கிருஷ், அந்த முதல் தடவைதான் கொஞ்சம் குழப்பம். அப் போது என்னைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளு வேன் என்றீர்களே! அதுதான் இன்னமும் புரியவில்லை. முதல் முதலாகப் பார்க்கும் போதே எப்படி, அப்படி?" என்று விளக்கம் கேட்டாள் மனைவி.

"முதல் தடவையா? உன்னை நான் அதற்கு முன் பலமுறை பார்த்திருக்கிறேன், தெரியுமா?"

"அப்படியா?! எப்போது?"

"உதி, அம்மா, வசுவிடம் நேரில் பார்க்கும் போதெல்லாம் கடுமையாகப் பேசி, முகம் வாடச் செய்ய வேண்டிய கட்டாயம் எனக்கு. அவர்களின் சிரித்த முகத்தை ஆசை தீரப் பார்ப்பதற்காக அங்கங்கே மறைந்திருந்து கவ னிப்பேன். ஆசை தீரப் பார்ப்பதில் அவர் களோடு உன் முகமும் சேர்ந்து கொண்டது. அதனால் நீ புதியவள் என்கிற எண்ணமே எனக்குக் கிடையாது."

"ஓகோ!" என்று கணவன் பேச்சை ஜீரணித் தவளுக்குத் தனக்கும் அதேபோல அவன் புதிய வன் என்கிற எண்ணமே இல்லாதிருந்தது நினைவு வந்தது. என்ன பொருத்தம் என்று வியந்தபடி அவனிடம் அதைக் கூறினாள்.

கூடச் சேர்ந்து முறுவலித்தான் அவன். "அன்றைக்கு, நீ அலுவலகத்துக்கு வந்து என்னை அதட்டினாயே, சிறு குழந்தை ஒன்று நீதிபதி ஸ்தானத்தில் இருந்து கண்டிப்பது போல எவ்வளவு அழகாக இருந்தது தெரி யுமா? உன்னிடம் என் நிலைமையைச் சொல்ல லாமா என்றுகூட ஒரு கணம் தோன்றி விட் டது. யோசித்தேன். உனக்கு என் வீட்டாரிடம் அவர்களிலும் அம்மாவிடம் மிகுந்த பாசம் இருந்தது நன்றாகத் தெரிந்தது. நான்தான் அன் றைக்கு எல்லோருக்கும் பொல்லாதவன் ஆயிற்றே! உன்னிடம் கடுமை காட்டினால் என்னவர்களிடம் இன்னமும் அதிகமாய் ஒட் டிக் கொள்வாய் என்பது ஒரு காரணம்..."

"மற்றது?"

"மற்றதா?... அடுத்த காரணம்... உனக்கு என் மேல் எந்த விதப் பற்றும் உண்டாகி விடக் கூடாது என்பதுதான்."

சட்டெனச் சிரித்தாள் உதயரேகா. "என்னை விரட்டுவதற்காகவா? நல்ல திட்டம்தான்! பிர மாதம்! ஆனால், உரிமைக் காரியாக வந்து நின் றால் இப்படி வெளியேற்ற முடியாதே என்று அன்றிலிருந்துதான் உங்களை மணப்பது குறித்து நான் தீவிரமாக நினைக்கத் தொடங்கி னேன், தெரியுமா?" என்றுரைத்து, சலங்கை ஒலியாய் மீண்டும் நகைத்தாள்.

மனைவியின் சிரிப்பை ஆவலாகப் பார்த் திருந்து விட்டு, "இதே சிரிப்புத்தான்! இந்தச் சிரிப்புத்தானே என்னை விழத் தட்டியது!" என்றவன், உடனே திருத்தி, "இதுவேதான் என் உயிரைக் காத்ததும். அன்று என் பிடிவாதம் வீழ்ந்திரா விட்டால், பிழைப்பதில் இந்த வேக மும் எனக்கு வந்திராது. உதி, அமுதம் உண்டு அமர ஆனார் என்று படித்திருக்கிறாயாடா? நானும் அப்படித்தான்! இந்த இதழ் அமுதம் உண்டு, நானும் இறப்பிலிருந்து மீண்டு விட் டேன்! ம்ம... பழைய நினைவு என்னென் னவோ ஆசைகளைத் தூண்டுகிறது. இப்போ தைக்கு, ஒரு சின்ன 'சாம்பிள்' கிடைக்குமா? அல்லது ஊருக்குப்போய், ஒட்டு மொத்த மாகவே பெற்றுக் கொள்ளலாமா?" என்று அவன், ஒற்றைப் புருவம் உயர்த்திக் கேட்கவும், உதயரேகாவின் முகம் அந்த உதயகாலக் கீழ் வானம் போலவே செக்கச் சிவந்து போயிற்று!

(முற்றும்)

# குடை: ஐடியா நன்கொடை!

ஒரு மழை நாளில் மூளையைக் குடைந்ததில் சில புது டிசைன் குடைகளுக்கு ஐடியா கிடைத்தது.

கற்பனை : மௌஷ்மி

## ஸ்கிரீன் குடை

பட்டனை அழுத்தினால் திரை விழும். பஸ், லாரி, கார் எத்தனை தண்ணீரை வாரி அடித்தாலும் பலமான தார்பாலின் திரை காக்கும்.




## டூ - இன் - ஒன் குடை

பார்த்தால் நீண்ட தடி. பட்டன் தட்டினால் குடை. தெருவில் மழை நீர்த் தேக்கத்தை ஆராய உதவும்.




## எலெக்ட்ரானிக் கண் குடை

(வீட்டு ஓனர் போன்ற பிடிக்காதவர்களை ஒதுக்க...)




## உடன்பிறவா சகோதரி மாடல்

(காதலர்களுக்கும் வசதிதான்)



## படகுக் குடை

நவீன ரப்பரில் லைஃப் போட் மாதிரி விரியும்.



இரண்டாம்தர விஞ்ஞானி என்றும் பெண்களை நிர்வாணமாகப் பார்ப்பதற்கே அவரது கண்டுபிடிப்பு பயன்படும் என்றும் சிலர் அவரை மறைமுகமாய்க் கேலி செய்தார்கள். ஆனால் அவர் அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை.

அவரது சாதனைக்கு 1901ல் நோபல் பரிசு கிடைத்தது. அத்துடன் கிடைத்த சன்மானத் தொகையை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. அவ்வளவு பணத்தையும் மக்களின் நலனைக் கருதி விஞ்ஞான வளர்ச்சிக்காக பல்கலைக் கழகத்திற்குக் கொடுத்து விட்டார்.

அவர் விரும்பியிருந்தால் தமது கண்டுபிடிப்பின் உரிமையைத் தனியார் நிறுவனங்களுக்கு விற்று கோடிக்கணக்கில் பணம் சம்பாதித்திருக்கலாம். ஆனால் அவர் அப்படியெல்லாம் ஆசைப்படவில்லை. மிக எளிமையாகவே வாழ்ந்தார். முதல் உலகப் போர் முடிவில் தம் தேவைகளுக்குக் கூட பணமில்லாத வறுமை நிலையில் மாண்டு போனார்; 'வில்ஹெம் கான்ராட் ராஞ்ஜன் (W.C. Roentgen), எக்ஸ்ரேயைக் கண்டுபிடித்த விஞ்ஞானி. 1895–நவம்பரில் கண்டுபிடித்தார். சரியாக நூறு ஆண்டுகள் ஆகி விட்டன!

அவரது மகத்தான கண்டுபிடிப்பை கௌரவிக்கும் வகையில் தபால் தலைகள் வெளியிடப்பட்டன.



இக்கதிர்களின் இயல்பு முழு... யாகப் புரியாத நிலையில் அவ... றுக்கு 'X' கதிர்கள் என்று ராஞ்ஜ... பெயர் வைத்தார்.

# ராஞ்ஜ...

ராஞ்ஜனின் வாழ்க்கை ஒரு சுவையான கதை : இளமையில், பல்கலைக் கழகத்தில் இடம் மறுக்கப்பட்ட நிலையில், சாதாரண பாலிடெக்னிக்கில் சேர்ந்து படித்தார். இருந்தாலும் அவரது ஆராய்ச்சி உத்வேகம் குறையவில்லை.

வாயு அடைக்கப்பட்ட குழாயில் உச்ச மின்சாரத்தைச் செலுத்தும் போது என்ன நிகழ்கிறது என்பதை ஆராய ஆர்வமாய் இருந்தார். அப்போது எதிர்பாராதவிதமாக அதிலிருந்து ஒருவகை அமானுஷ்ய கதிர்கள் வெளிப்பட்டு, மேஜை மீது சன்னமான வெளிச்சத்தை ஏற்படுத்தின. ஒரு புகைப்படத்தை கனமான அட்டையால் மறைத்து வைத்த போதும் இந்தக் கதிர்கள் அதை ஊடுருவி, புகைப்படம் கறுத்துப் போயிற்று.

தம் மனைவியின் கையை... புகைப்படத் தட்டின் மீது (பிலிப்... வைக்கச் சொல்லி அந்த விசித்தி... கதிர்களை செலுத்தினார். பிற... படத்தை டெவலப் செய்து பார்த்... போது, கை எலும்புகளும் அணி... திருந்த மோதிரம் மட்டுமே தெரி... தன. இதுதான் உலகத்திற்கு அறிமு... மான முதல் எக்ஸ்ரே!

இதன் பிறகு பல விஞ்ஞானிகள் படி... படியாக ஆராய்ச்சி செய்து எக்ஸ்... முறையைப் பக்குவப்படுத்தியிரு... கிறார்கள். ஆனால் ஆரம்ப நா... களில் அதற்கு அவர்கள் கொடுத்... விலை மிக அதிகம் – தீவிரமா... எக்ஸ்ரே ஆராய்ச்சியில் ஈடுபட்டவ... களுக்குச் சரும நோய்களும் அல்ச...





போன்ற [illegible] வந்தன.

# கேலிக்கு ஆளான விஞ்ஞானி!

'டியூமர்' என்கிற ஒருவகை கான்சரை எக்ஸ்ரே செலுத்தி குணப்படுத்தலாம் என்று தெரியவந்ததும் அதே சிகிச்சை முறையை வேறு சில நோய்களுக்கும் கடைப்பிடிக்க ஆரம்பித்தார்கள். அதன் விளைவாக பத்து லட்சம் பேர் கான்சர் வந்து இறந்து போனார்கள்!

டார்க்டர் ஹெர்மன் சி. மார்ச் என்பவர், அதிகப்படியான எக்ஸ் கதிர்கள், மனித உடல் அணுக்களின் குரோமோஸோம்களை நேரடியாக பாதிக்கக்கூடியது என்பதை ஆதாரபூர்வமாக நிரூபித்தார். அதன் பிறகே பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன.

நோயாளிகள் உடலில் வாங்கும் ஒவ்வொரு ஆயிரம் மில்லிரம்ஸ் கதிர்களுக்கும் இரண்டிலிருந்து பதினைந்து நாள் வரை ஆயுட்காலம் குறைகிறது என்று ஒரு ஆராய்ச்சி குழு கருதுகிறது. ஒருவர் வாழ்நாளில் பதினைந்து மார்பு எக்ஸ்ரே எடுத்துக் கொண்டால் இந்த அளவை சுலபமாய் எட்டி விடலாம்!

இவை தவிர, ஒருவர் அடிக்கடி ஐ.வி.பி., ரீனல் ஆன்ஜியோகிராம் போன்ற எக்ஸ்ரேக்களை எடுத்துக் கொள்வாரேயானால், அவருக்கு மலட்டுத்தன்மை ஏற்பட வாய்ப்பு இருக்கிறது. பெண்களுக்கு இதன் பாதிப்பு ஆண்களுடன் ஒப்பிடும் போது இரண்டு மடங்காக உயர்கிறது. கருவுற்ற பெண்களானால் கருச்சிதைவு கூட உண்டாகலாம். குழந்தைகளுக்கும் எக்ஸ்ரேக்களால் பாதிப்பு அதிகம்.

எக்ஸ்ரே பகுதியில் வேலை பார்ப்பவர்களுடைய உடலில் அதிகப்படியாக வாங்கக்கூடிய எக்ஸ்ரேக்களின் உச்ச வரம்பு ஐந்நூறு மில்லிரம்ஸாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இதனால் வருடத்திற்கு இவர்களுக்கு ஒரு மாத காலம் கட்டாய விடுப்பு அளிக்கப்படுகிறது. பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் அரசாங்கம் இத்தகைய கதிர்களால் மக்களுக்கு நேரும் வீணான கேடுகளை குறைக்க போதிய பாதுகாப்பு நடவடிக்கைகளை எடுத்து வருகிறது.

ஆனால் இங்கு அப்படி இல்லை!

இத்தனை அபாயகரமானதாக இருப்பினும் எக்ஸ்ரேயை உபயோகப்படுத்துவதற்கு என்ன காரணம்?

காசநோய், இருதய நோய், ரத்தக் குழாய் அடைப்பு சிறுநீரகக் கல் அடைப்பு ஆகியவற்றை எளிதில் எக்ஸ்ரே படம் எடுத்துப் பார்த்து விட முடிகிறது. இன்னும் விரிவாகப் பார்ப்பதற்கு சி.டி. ஸ்கேன் என்ற பிரம்மாண்டமான நவீன இயந்திரத்தில் பயன்படுவதும் எக்ஸ்ரேதான். உபாதையின் தன்மையும் அது நிலைகொண்டுள்ள இடமும் துல்லியமாகத் தெரிவதால், சிகிச்சை அல்லது ஆபரேஷன் செய்வது சுலபமாகிறது.

மருத்துவத் துறையில் மட்டுமின்றி பொறியியல் துறையிலும், வெல்டிங் முடிந்த பிறகு எங்கேனும் விட்டுப் போயிருக்கிறதா என்று பார்க்கவும், துவாரங்கள் ஏதேனும் இருக்கிறதா என்று உலோகக் குழாய்களை பரிசோதிக்கவும் எக்ஸ்ரே உதவுகிறது. எக்ஸ்ரேயைக் கண்டுபிடித்த போது ராஞ்ஜன் அதற்கு இத்தனை உபயோகங்கள் இருக்கக்கூடும் என நினைத்திருப்பாரா...? சந்தேகம்தான்!

- மதுமனோ



# சுப்பையா பார்த்த ஷூட்டிங்

**நா. நாகராஜன்**

கவிதாதான் ஒற்றைக் காலில் நின்றாள். "மெட்ராஸ் வந்துட்டு சினிமா ஷூட்டிங் பார்க்காமல் திரும்ப மாட்டேன்."

"அக்காதான் சொல்றாங்களே... அத்தானுக்கு கூட்டிக்கிட்டு போக நேரம் கிடையாதுன்னு..."

"நீங்க வாங்களேன்..." அப்பாவை இழுத்தாள்.

"எனக்கு யாரைத் தெரியும்?"

"அதெல்லாம் ஆளைத் தெரிய வேண்டாம். தரமணி போனால் தன்னால பார்க்கலாமாம்..."

மனமில்லாமல்தான் கிளம்பினார். கவிதா அவரது கடைசிப் பெண். தாய் இல்லாதவள். அந்தச் செல்லம்.

நன்றாகப் படிப்பாள் - அந்த சுதந்திரம்.

மூத்த பெண் வர முடியாததால் அவளது இரண்டு குழந்தைகளும், கவிதாவுமாய் சுப்பையா பிள்ளை ஷூட்டிங் பார்க்கக் கிளம்பினார்.

பழைய நாளில் கட்டபொம்மன், கப்பலோட்டிய தமிழன் மற்றும் சில நல்ல படங்கள் மட்டும் கட்டாயத்தின் பேரில் பார்த்திருக்கிறார்.

உறவினர் வீட்டில் விடிய விடிய தனியார் டீவியில் படம் காண்பித்தாலும் அவர் வாசலுக்கு வந்துவிடுவார் சலிப்புடன்.

"என்ன படம் எடுக்கறானுங்க. சண்டையும், வசனமும் சகிக்கலை. கதையே இல்லாம எப்படித்தான் இழுக்கறாங்களோ. இதையும் பொறுமையா ஜனங்க உட்கார்ந்து பார்க்குதே, சோறு தண்ணி மறந்து..."

தெருவில் முன்னே மாதிரி குழந்தைகள் கூடி விளையாடுவது கூட இல்லை. பெரியவர்கள் திண்ணைப் பேச்சு இல்லை.

தி.நகர் பஸ் ஸ்டாண்டில் விசாரித்த பொழுது பஸ் நம்பர் தெரிந்தது.

கொஞ்ச நேரம் கூட கவிதாவால் காத்திருக்க முடியவில்லை.

"ஆட்டோ பிடிக்கலாமாப்பா..."

"இடம் தெரியாதேம்மா. தெரிஞ்சவங்களையே ஏமாத்தற இடம் இது..."

பஸ் வந்தது.

கூட்டம் அதிகம் தான். கடைசியாக அவர் ஏறுவதற்குள் பஸ் கிளம்பிவிட்டது. சமாளித்து ஏறினார்.

காமராஜர் நினைவாலயம், ராஜாஜி நினைவாலயம் எல்லாம் பார்க்கும்பொழுது அவர் மனத்தில் அந்தத் தலைவர்களின் நினைவுகள் வந்து போயின.

அகலமான ரோட்டையும், குளிர்ச்சியான சூழ்நிலையையும் காணும் பொழுது நகரம் அழகுதான் என்று தோன்றியது.

'பிலிம்சிட்டி இறங்கு' என்று சொன்ன போதுதான் இறங்க வேண்டிய இடம் வந்து விட்டது தெரிந்தது.

மெயின் கேட்டில் டிக்கெட் எடுத்துக் கொடுத்துவிட்டு நீண்ட தூரம் நடக்க வேண்டியிருந்தது.

ஒரு பெரிய சுறா மீனின் வாய் வழியே உள்ளே நுழையுமாறு வைத்திருந்தது அச்சம் தருவதாய் இருந்தது.

'சினிமாங்கற சுறா மீன் நம்மை எல்லாம் முழுங்கற மாதிரி...' தமக்குள் நினைத்துச் சிரித்துக் கொண்டார்.

பெரிய மீசையுடன் மேளத்தைத் தலையில் தூக்கி வைத்திருக்கும் மனிதன்.

கொரில்லா பொம்மை.

நீச்சல் குளம், சிங்கப்பூர் மாடல் கோயில், சறுக்கு ஊஞ்சல், கார் விளையாட்டு என்று எல்லாமே காண வேடிக்கையாக இருந்தன.

கவிதாவிற்கு மிகவும் சந்தோஷம்.

இரண்டு பெரிய ஒட்டகச் சிவிங்கி சிலைகள்



தத்ரூபமாக இருந்தன.

"அப்பா ஷூட்டிங் நடக்கற மாதிரி தெரியலையே...?"

"நடக்குதும்மா... நேரே போனீங்கன்னா... ஷூட்டிங் நடத்தன்னு தனியா, வீடு, கடைவீதி, போலீஸ் ஸ்டேஷன், பார்க், கோயில்னு எல்லாம் இருக்கிற இடம் இருக்கு. அங்க ஹிந்தி ஷூட்டிங் நடக்குது..."

"ஹிந்தியா... யார் ஹீரோ?"

"தெரியலைம்மா..."

"சீக்கிரம் வாங்கப்பா..."

சுப்பையா பிள்ளையால் அத்தனை விரைவாய் நடக்க முடியவில்லை.

ஒரு காலத்தில் குறுக்குத் துறையிலிருந்து டவுனுக்கும் பாளையங்கோட்டைக்கும் பணம் வசூலிக்க நடையாய் நடந்த நாட்கள் உண்டு - பிழைப்புக்காக.

இப்போது வயதாகிவிட்டது.

"நீ முன்னால போம்மா..."

"அப்பா எவ்வளவு பெரிய மாளிகை மாதிரி கட்டி இருக்காங்க பார்த்தீங்களா...?"

ஒரு பஸ்ஸில் ஜெனரேட்டர் பொருத்தப்பட்டு, சதா நேரமும் உறுமிக் கொண்டிருந்தது அது - மின்சாரத்திற்காக. பாம்பு மாதிரி - நீள நீள ஒயர்கள் குறுக்கே போயின. தோட்டத்தின் ஒரு மூலையில் பெரிய எவர்சில்வர் கேரியரில் இருந்து காப்பி எடுத்து விநியோகமாகிக் கொண்டிருந்தது. நான்கு பெரிய லைட்டுகள் கோணம் பார்த்து வைக்கப்பட்டிருந்தன.

இருபது பெண்களும் இருபது ஆண்களும் ஜிகினா உடையில் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

பேண்ட், பனியன் போட்ட பெண்மணி நடனமணிகளை ஆட்டுவித்துக் கொண்டிருந்தார்.

ஓர் ஓரத்தில் பாடலின் வரிகள் திரும்பத் திரும்ப ஒலிபரப்பாகிக் கொண்டிருந்தன. கூட்டம் கூடிக் கொண்டே வந்தது.

ஹீரோவிற்காகக் காத்திருந்தவர்களை - காக்கிச் சட்டை சேவகன் எல்லோரையும் விரட்டிக் கொண்டிருந்தான்.

ஹீரோயின் ஆடும்போது ஆர்வமிகுதியால் கூட்டம் முன்னேறியது.

தலையை விரித்தபடி சின்னப் பாவாடையில் பஞ்சாபி பாணியில் இடுப்பில் ஒரு துண்டைக் கட்டிக் கொண்டு அந்த நடிகை ஆடும்போது - அந்த வெயிலில் டச்அப் செய்து கொண்டு ஆடும்போது - அவருக்குப் பாவமாக இருந்தது.

"எவ்வளவு அழகா இருக்கா இல்லே..." கவிதா கேட்டாள்.

"மேக் அப்பா இருக்கும்..." அவரின் பேத்தி பதில் கொடுத்தாள்.

திடீர் பரபரப்பு.

ஒரு பெரிய வெளிநாட்டுக் கார் வந்து

நின்றதும் கூலிங் கிளாஸை கழற்றிச் சுழற்றிய படி ஹீரோ...

தெய்வம் பார்த்த பக்தர்களாய் கூட்டம் அலைமோதியது... "வாழ்க... வாழ்க!"

ஹீரோவுக்கும் லேசாக ஸ்டெப்ஸ் சொல் லிக் கொடுக்கப்பட்டது.

நடிகையிடம் ஜாலியாக ஏதோ சொல்லி அவள் வயிற்றில் விளையாட்டாகக் குத்தி னான் ஹீரோ - அத்தனை பேர் சுற்றி இருப் பதை மறந்து.

ஹீரோ, ஆடும்போது துணை நடிகர்கள் 'அப்...அப்' என்று கைதட்டி ஆரவாரம் செய் தார்கள்.

முழுதாக இரண்டு மணி நேரம் கடந்த பின் னும் கேமிரா இயங்க ஆரம்பிக்கவில்லை. மறுபடி மறுபடி திருத்திக் கொண்டார்கள்.

படத்தில் பாடல் வரிகளும், இசையும் ஏறக் குறைய அனைவருக்கும் மனப்பாடம் ஆகி விட்டது.

ட்ராலியிலும், க்ரேனிலும் கேமிரா ஆங்கிள் பார்க்கப்பட்டது.

அவருக்குப் பசித்தது.

கவிதா நகரக் காணோம்.

"காப்பி என்ன விலைப்பா...?"

"நாலு ரூபாய் பெரியவரே..."

"கவிதா... கிளம்புவோமா...?"

"இருங்கப்பா... ஒண்ணும் உருப்படியாப் பார்க்க விடமாட்டீங்களே... வீட்டில போய் என்ன செய்யப் போறோம்...?"

"காப்பி சாப்பிடலாம். இங்க நாலு ரூபாய்னு சொல்றான்..."

"சும்மா குடிங்கப்பா... வெளில போனா திரும்ப உள்ளே வர பத்து ரூபா கொடுக்க ணும்..." கவிதா அலட்சியமாகச் சொன்னாள். ஷூட்டிங் ஆர்வம்!

**வெ**யில் தகித்தது.

ஒரு மரத்தின் கீழ் நின்று கொண்டார்.

திடீரென நீர் ஊற்றுகள் மூன்றடி இடை வெளியில் ப்ளஸ் மாதிரி வடிவத்தில் கிளம்ப ஆரம்பித்தன. முதலில் சின்னதாகத் துவங்கி யது உயரம் கூடி பத்தடி உயரத்திற்கு வேகமாக விழுந்தன. பூ வடிவத்திலும் தண்ணீர் விழுந் தது.

அவருக்கு அவரது கிராமம் நினைவில் வந்து போனது. விவசாயம் பற்றிய கவலை. இந்த நீரில் ஐந்தில் ஒரு பங்கு இருந்தால் தக்காளி, கத்தரி, வெண்டை போட்டு நன்றாக விளையச் செய்யலாம்.

நடன இயக்குனர் இரண்டு சுவர்களையும் இணைக்கும் வண்ணம் ஒரு நீளப் பலகை போட்டு அதன் நடுவில் நின்று நீர் ஊற்றை இசைக்கு ஏற்ப கூட்டிக் குறைத்துச் செய்து காட்டினார் உள்ளங்கையால்.

நடிகை அதே மாதிரி செய்ய - உடலெல் லாம் நனைந்தது.

பிறகு ஹீரோ...

விளையாட்டாக ஒரு கை நீர் எடுத்து ஹீரோ ஹீரோயினின் முகத்திலடிக்க மறுபடி யும் அதே காட்சி...

நிறுத்தப்பட்டு தொடரும் நீரூற்று.

"கவிதா வாம்மா போகலாம்..."

"இருங்கப்பா..."

"அட... இன்னிக்கு அக்கா வீட்ல தண்ணி லாரி வரும். பிடிச்சு வைக்கணும். உன் அக்கா கர்ப்பிணி... முடியாது. நாமதான் செய்யணும். வா."

"இந்த அப்பா எதையும் ரசிக்க விடமாட் டார்..."

கவிதா முணுமுணுத்தபடி வந்தாள்.

"அப்பா மேலே கோபமா...?"

"ஆமாப்பா..."

"ஏம்மா... எவ்வளவு நேரம்தான் நிப்பே... வெயில்ல...!"

"அந்த ஹீரோ எவ்வளவு உயரம். நடிகை எத்தனை அழகு. பார்த்தீங்களா...?"

"எல்லாம் கனவும்மா... எவ்வளவு தண்ணி வேஸ்ட் பார்த்தியா...? இந்த தண்ணீரும் கரண் டும் இருந்தா எவ்வளவு சாதிக்கலாம்..."

"தாத்தா அதெல்லாம் வேஸ்ட் கிடையாது. திரும்பத் திரும்ப அதே தண்ணியைத்தான் யூஸ் பண்ணுவாங்க..."

"தெரியும்மா... தண்ணி எங்களுக்குத் தங்கம்... ஆனா கிடைக்கிறது இல்லே..."

"ஏன் தாத்தா... நீயும் இங்கே விவசாயம் பண்ணினா என்ன...? ஏன் கிராமத்துலே



**"இந்த வாரம் 'டாப் டென்' விற்பனையிலே எந்த கேசட் முத லிடம் வகிக்குது?"**

**"கலெக்டருக்கு வீரப்பன் கொடுத் தனுப்பிச்ச கேசட்!"**

**- எஸ். இராஜேந்திரன்**

கிடந்து கஷ்டப்படறே?" பேத்தி விளையாட்டாகக் கேட்டாள். சிரிப்பு வந்தது அவருக்கு.

"நிலத்தை வித்து பேங்க்ல போட்டா உழைக்காமலே சாப்பிடலாம்..." பேரன் சொன்னான்.

"எங்களாலே அது முடியாதும்மா. உழைச்சே பழகிட்டோம். உக்கார வைச்சு சாப்பிடச் சொன்னா உயிர் போயிடும். உனக்கு அது புரியாது..." என்றார் சுப்பையா சோகமாக. வரும்போது இருந்த கொஞ்ச ஆர்வமும் வற்றிவிட்டது.

அவர் கண்முன்னே... ஃபவுண்டன் ஏறி ஏறி இறங்கிக் கொண்டிருந்தது.

கிளம்பத் தயாராக இருந்த நேரம் ஷூட்டிங் நடந்த இடத்திலிருந்து 'வீல்' என்ற ஒரு பெண்ணின் அலறலும், "ஐயோ பாம்பு... பாம்பு" என்ற பலரது பதற்றமான குரல்களும் கேட்டன.

நிமிடத்தில் கூட்டம் கலைந்தது.

ஹீரோயின் சமீபத்தில் ஓர் ஆறடி நாகம். திரும்பிப் பார்த்துவிட்டு கூட்டத்தை நோக்கி வந்து கொண்டிருந்தது.

கவிதாவும், பேரன் பேத்தியும் திகைத்துப் போயிருந்தனர்.

வேஷ்டியை வரிந்துக் கட்டிக் கொண்டு பக்கத்திலிருந்த மரத்திலிருந்து ஒரு கம்பை ஒடித்து முன்பக்கம் 'V' வடிவத்தில் உடைத்துவிட்டுப் பாம்பின் பக்கம் நெருங்கினார்.

மிக லாகவமாக அதை வைத்துப் பாம்பின் தலையில் அழுத்திவிட்டு வாலைப் பிடித்துத் தூக்கினார்.

"பக்கத்துல வாங்க... இனிமே பயமில்லை. ஏதாவது பாதுகாப்பான இடத்துல வைச்சிருந்தா பாம்பாட்டி வந்து தூக்கிக்கிட்டுப் போயிடுவார்..." என்றார்.

கூட்டம் நம்பாமல் பார்த்தது. நிமிடத்தில் ஹீரோவாகிவிட்டார்.

ஹீரோவும் டைரக்டரும் தலைக்கு நூறு ரூபாய் நோட்டைத் தந்தபோது மறுத்துவிட்டார்.

ஹீரோயின் வந்து அவரது கையைப் பிடித்து முத்தமிட்டபோது தலையில் கை வைத்து ஆசீர்வதித்தார்.

அவர்களை ஓரமாக நிற்கச் சொன்ன வாட்ச்மேன் அவர் உட்கார நாற்காலி கொண்டு வந்து போட்டான். காப்பி வந்தது.

"தன்யவாத்..." என்றார் ஹீரோ.

"மஞ்சிதி... மீகு சால தேங்க்ஸ்" என்றார் டைரக்டர்.

கவிதா ஆச்சரியம் மாறாத விழிகளுடன் அப்பாவைக் கூட்டிக் கொண்டு கிளம்ப ஆரம்பித்தபோது, யூனிட் கார் அவர்களை வாசல் வரை கொண்டு வந்து விட்டது.

"இவங்களும் பாவம்தான்..." என்றார் சுப்பையா.

## 'சுருக் – நறுக்' போட்டி முடிவு – 5

# ஊழல் என்பது...



- ஊழல் என்பது முகவரி தொலைத்தவர்களைக் கூட சரித்திர நாயகர்கள் ஆக்கும் அட்சய பாத்திரம்.
  – சி. நாச்சிமுத்து, ஈரோடு – 9.
- அரசியல்வாதியின் ஆனந்த பானமாய் மாறும் அறியா மக்களின் வியர்வைத் துளிகள்.
  – 'தஞ்சை' கலைவாணர்தாசன், கோட்டையூர்.
- தனக்குத் தானே கட்டும் சமாதி.
  – விமலா சுகுமார், திருச்சி.
- கையில் கறை படிந்தாலும் மெய்யில் மெருகேற்றுவது.
  – கஸ்தூரிமைந்தன், நல்லாலம்.
- உண்மை உழைப்புக்குச் சமாதி எழுப்பத் துடிதுடிக்கும் குட்டிச்சாத்தான்.
  – எல். சண்முகசுந்தரி, இராமநாதபுரம் -1.
- ஐந்து வருட ஆட்சியில் முன்னேற்றம் காணும் ஒரே துறை.
  – எஸ். சுகந்தி, சென்னை – 33.
- அடுத்தவர் புரிவது.
  – ஆர். ஸ்ரீநிவாசன், ஸ்ரீரங்கம்.

(ஒவ்வொன்றும் ரூ. 50 பரிசு பெறுகிறது)

● சீதாமகன், மதுரை - 16.

*? தமிழ் வளர்ச்சித் துறையின் சிறப்பு ஆணையராக (கா.கா) கா. காளிமுத்து பதவி ஏற்றது பற்றி?*

! கரைந்ததற்குக் கிடைத்த பரிசு!

● கே. கண்ணன், கோவை. ❑

*? தேர்தலுக்குச் சற்றுமுன் வீரப்பனைப் பிடித்து அதை ஒரு பெரிய சாதனையாக மக்களிடம் சொல்வார்களோ?*

! வீரப்பன் பிடிபட்டு வாக்குமூலம் தந்தால் யார் யார் தலை உருளுமோ! அதனால் பிடிக்க மாட்டார்கள்!

● புளியரை கணேசன், சென்னை - 30.

*? ஜம்ஷெட்பூர் ஒரு நாள் போட்டியில் இந்தியா இவ்வளவு கேவலமாகத் தோற்றிருக்க வேண்டுமா?*

! அமிர்தசரஸில் சேர்த்து வைத்து ஜெயித்து, சமன்படுத்தி விட்டார்களே! ஆனால் இந்தப் போட்டிகளில் மழைதான் 'மேன் ஆஃப் தி சீரிஸ்'!

● நெற்குப்பை கி. மனோகரன்.

*? மத்திய அமைச்சர் ப. சிதம்பரத்தை 'தேசிய உணர்வு இல்லாதவர்' என முதல்வர் சொல்லியிருக்கிறாரே?*

! ஆமாமாம்! சிதம்பரம் என்ன ஹவாலா மோசடிக்கா துணை போகிறார்...? சே! தேசபக்தி கொஞ்சங்கூட இல்லைப்பா!

● பி. ஜெயப்பிரகாஷ்,
சேத்துமடை.

*? 'ரோட்டில் போன வாழப்பாடியாரைத் தலைவராக்கியவர் ராஜீவ்காந்தி...' என்று பிரபு, எம்.பி. கூறியுள்ளது பற்றி...?*

! வாழப்பாடியைத் தாக்குவதாக நினைத்துக் கொண்டு, ராஜீவ் காந்தியையும் சேர்த்து மட்டம் தட்டும் அசட்டுத்தனம்.

ங்கே தேசபக்தி...?



## சிதம்பரத்துக்கு தேசிய உணர்வு இல்லை என்கிறாரே 'ஜெ'?

● கே. விக்ரம், கோவைப்புதூர்.

*? தமிழக அரசு அதிகாரிகள் முதல்வர் சொல்படி நடக்கிறார்கள்; சி.பி.ஐ. பிரதமர் சொல்படி நடக்கிறது... தமிழக மக்கள் யார் சொல்படி நடக்க வேண்டும்?*

! மனச்சாட்சி சொல்படி, வருகிற தேர்தலில் வோட்டுப் போட்டால் போதும்!

● சுந்தர் அழகேசன், திருச்சுழி.

*? மாதுரி தீட்சித் நடித்த 'ஹம் ஆப்கே ஹை கோன்' படத்தை, மதுரையைச் சேர்ந்த மருதப்பன் என்பவர், தொடர்ந்து 240 தடவை பார்த்துட்டாராமே...?*

! சபாஷ்! எம்.எஃப். ஹுசைனுக்குச் சரியான போட்டிதான்!

● கண்மணி சுப்பு வேதையா
சித்திரவேலு, கருப்பம்புலம்.

*? சுர்லா?*

! பத்திரிகைகளின் வலிமை குறித்து 'ஜெ'வுக்குச் சமீபத்தில் நினைவூட்டியவர்!

● எச். மோகன், மன்னார்குடி.

*? தமிழக அமைச்சராவதற்கு*

● நம்பி ஸ்ரீனிவாஸ்,
கும்பகோணம் - 2.

*? மருத்துவச் சேவையை நுகர்வோர் சட்ட வரம்புக்குள் கொண்டு வர முடியும் என்ற உச்சநீதி மன்றத் தீர்ப்பு குறித்து...?*

! இனி விலாவாரியாக எழுதி வாங்கிக் கொண்டுதான் மருத்துவ நிபுணர்கள் நோயாளி மீது கை வைப்பார்கள். தப்பிக்கும் வழிகள் அவர்களுக்குத் தெரியாதா என்ன...! 'லாப' நோக்கு குறைந்து, மனிதாபிமான நோக்கு அதிகரிப்பதற்கு மனமாற்றம்தான் உதவ முடியுமேயொழிய சட்டத்திருத்தங்கள் மட்டுமே போதாது.

● வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி,
சென்னை - 106.

*? வளர்ப்பு மகனின் கல்யாணத்தை வைதீக முறையில் நடத்திய முதல்வர், சிதம்பரத்தில் கூட்டுக் கல்யாணத்தை சுயமரியாதை தோரணையில் நடத்தி விட்டாரே?*

! என்ன இப்படிச் சொல்றீங்க! அந்த சிதம்பரம் பந்தலில் 'சுயமரியாதை' என்கிற வார்த்தைக்கே இடமில்லாமல் அல்லவா இருந்தது!



* போட்டி கிளப்பியவர்....

# நீங்கள் கேட்டவை - தராசு

*என்னென்ன தகுதிகள் வேண்டும்?*

! குறைந்தது இரண்டு மூன்று வழக்குகளிலாவது சம்பந்தப்பட்டிருக்க வேண்டும். பெண்கள் மோசடி வழக்கு என்றால் ரொம்ப விசேஷம்!

● முகதி. சுபா, கீழ்நத்தம்.

***? பார்த்தீர்களா சார், தமிழகத்தின் தலைவிதியை...? கொள்ளையர்கள் சாதாரண மக்களை பிளாக் மெயில் செய்த காலம் போய், இப்போது வீரப்பன் தமிழக அரசையே மிரட்டிப் பணம் வாங்க ஆரம்பித்து விட்டானே...?***

! 'வீரப்பனுக்கு பணம் ஏதும் தரவில்லை; சிறப்பு அதிரடிப் படையைப் பார்த்ததுமே அவனும் கூட்டாளிகளும் பயந்து போய் பிணைக் கைதிகளை விடுவித்து விட்டு ஓடிப் போய் விட்டனர்...' என்ற தேவாரத்தின் ஸ்டேட்மென்ட், தமிழ் சிறுகதை/நாவல் ஆசிரியர்களின் கற்பனைக்குச் சவால்! டி.ஜி.பி.யின் முயற்சியை முதல்வர் பாராட்டியுள்ளதோ அந்த கற்பனை வளத்துக்கு சாகித்ய அகாதமி பரிசு!

● அவ்வை கே. சஞ்சீவிபாரதி, அவ்வையார்பாளையம்.

***? 'பதவி' என்பது பெரிய விஷயமா? சில்லறை விஷயமா?***

! சில்லறை சேர்க்க உதவும் பெரிய விஷயம்!

● பி. உதயகுமார், சென்னை - 2.

***? கஸ்டம்ஸ் எக்ஸைஸ் துறையில் லஞ்ச, ஊழல் காரணமாகச் சிலரை சி.பி.ஐ. கைது செய்த போது, அத்துறையைச் சேர்ந்த பணியாளர்கள் போராட்டம் நடத்தியது குறித்து...?***

! 'மற்ற துறைகளிலெல்லாம் இல்லாத ஊழலா...?' என்கிறார்கள் கஸ்டம்ஸ் ஊழியர்கள்... இப்படிக் கூட ஒரு தவறை நியாயப்படுத்துகிறார்களே...! கஷ்டம்! கஷ்டம்!



* எழுத்தாளர்களுக்குப் போட்டி...

● முருகேசன், தேனி.

***? கலாக்ஷேத்ரா சங்கரமேனன் பற்றி...?***

! கலாக்ஷேத்ரா நிறுவனத்தை ஆல் போல் வளர்க்க ருக்மிணி தேவிக்கு உறுதுணையாய் இருந்த சங்கர மேனனின் மறைவு. மிக உயரிய கொள்கைகளையுடைய கல்வியாளர். பகவத் கீதை உரைகளை ஆங்கிலத்தில் அவர் நிகழ்த்தினால் நாள் முழுதும் கேட்கலாம். இந்திய கலை, பண்பாடு ஆகியவற்றின் ஒட்டுமொத்த சின்னமாக வாழ்ந்தார்.



* இந்தியாவின் சின்னம்

● ஆர். பிரகாஷ்,
திருச்சி - 4.



* நினைவூட்டினார்....



* வாக்குமூலம் தந்தால்

***? கும்பகோணம் கோவிலில், லட்சக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள நகைகள் களவு போயிருப்பது குறித்து...?***

! இது ஒன்று மட்டுமா...? அடுத்தடுத்து பல கோயில்களில் கொள்ளை நடந்து வந்திருக்கிறது. ஆட்சியிலிருப்பவர்களே கொள்ளை அடிப்பதில் படு 'பிஸி'யாக இருக்கும் போது, இதையெல்லாம் எங்கே கவனிப்பார்கள்!

● காடாவூர் இலக்கியன்,
செங்குன்றம்.

***? மூன்று கோடி ரூபாய், முதல்வருக்கு ஒருநாள் வசூல் தானே என்று வீரப்பன் பேட்டி கொடுத்திருப்பது பற்றி...?***

! பாம்பின் கால் பாம்பறியும்!





* தவறான தாக்குதல்!

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
கே. கண்ணன்,
அருண் இல்லம்,
2, லட்சுமி நகர்,
கோவைபுதூர் அஞ்சல்,
கோவை - 641 042.



கௌசல்யா ரங்கநாதன்

“நினைச்சப்ப கடைகளை மூடறது என்னங்க நியாயம். இது போல திடீர்திடீர்னு கடைகளை மூடினா பொது மக்களுக்கு எவ்வளவு அவதி..?” என்றேன்.

கடைக்காரர் என் நண்பர்.

“சார் நீங்க பிரச்னையை உங்க கோணத்திலிருந்து மட்டுமே பார்க்கிறீங்க... நாங்களும் மனுசங்கதான்... பொது மக்களை நம்பித்தான் எங்க பொழப்பே நடக்குது சார்... உங்களைப் போல உள்ள வாடிக்கையாளர்கள் தான் சார் எங்க தெய்வம்...”

“அப்ப ஏன் இது போல கடைகளை ஒட்டு மொத்தமா அடைக்கணும்? உங்களுக்குனு ஒரு வியாபாரிகள் சங்கம் இருக்குல்ல... அது மூலமா பிரச்னைகளைப் பேசித் தீர்த்துக்கலாமில்ல?”

“நீங்க சொல்றது நூத்துக்கு நூறு சரிதான் சார். சில பிரச்னைகளை எந்த சங்கத்தாலயும் தீர்க்க முடியாதப்ப, ஜனநாயக முறையில் போராடத்தான் வேண்டியிருக்கு. எங்க எதிர்ப்பை எப்படி சார் ஜனங்களுக்குப் புரிய வைக்கிறதாம்?”

“என்ன சொல்றிங்க?”

“சார் ஒரு கடைனா பல பேர் வருவாங்க... போவாங்க.. பலத்தரப்பட்ட கஸ்டமர்கள்... அன்னைக்கொரு நாள் ஒரு கட்சிக்காரர் என் கடைக்கு வந்தார், புடை சூழ.... என்ன நடந்தது தெரியுமா?”

“என்ன கண்ணப்பா வியாபாரம் எல்லாம் எப்படியிருக்கு?”

“நல்லா இருக்குதுங்க...”

“வர்ப்போற தேர்தல்ல நம்ம பார்ட்டிக்குத்தான் நீங்கல்லாம் ஓட்டுப் போடணும்.”

“நிச்சயமா...”

“கணிசமா நிதி கொடுக்கணும்...”

எங்கள் விதியை நொந்து கொண்டு “சரிண்ணே” என்றேன்...

அந்த செல்வாக்கு படைத்த கட்சிக்காரர் என்கிட்ட குசலம் எல்லாம் விசாரிச்சிட்டு குளிர் பானங்கள் குடிச்சிட்டு சிகரெட், வெத்திலை பாக்கு வாங்கிக்கிட்டு துட்டு கொடுக்கலை. இவங்ககிட்ட துட்டு கேட்டுட்டு வீணா வம்பை விலைக்கு வாங்கணுமான்னு பேசாம இருந்துட்டேன்...

“கண்ணப்பா எவ்வளவு ஆச்சு...” சொன்னேன்...

“இந்த கசமாலம் துட்டு எடுத்துக்கிட்டு வரலை.... நீங்கள்ளாம் எப்படிடா நாளைக்கு தேர்தல்ல ஜெயிச்சு வந்தா ஆட்சி பண்ணுவீங்க. கண்ணப்பன் நமக்குத் தெரிஞ்சவன்... அப்புறமா துட்டு கொடுத்தா வாங்கிக்குவான்... துட்டு எடுத்துக்கிட்டு வராம என்னத்துக்கு என் கூட வந்தீங்க நாய்ங்களா...” என்று திட்டினார்.

“இருக்கட்டும் அண்ணே... துட்டு எங்கே போகுது”என்று ஒப்புக்குச் சொன்னேன். இது வராத பணம் என்பது எனக்குத் தெரியும்.

“அண்ணே மன்னிச்சிருண்ணே... மறந்துட்டேன்.”

“அண்ணிகிட்ட கேட்டு வாங்கிட்டு வர வேண்டியது தானேடா நாயே...”

அந்த ஜால்ரா தலை குனிந்து நின்று கொண்டிருந்தான்.

அப்போது ஒரு வாலிபன் கடைக்கு வந்தான். வந்தவன் கட்சிக்காரரைப் பார்த்து “வணக்கம் அண்ணே...” என்றான்.

“ஊம்ஊம்...” என்றவன், “எப்படா பணம் கொடுக்கப் போறே... வாங்கின கடனை திருப்பித்தரணும்ற நினைப்பே இல்லையாடா உனக்கு... உப்பு போட்டுக்கிட்டுத்தானே சோறு தின்றே...”

“அண்ணே பெரிய வார்த்தை எல்லாம் பேசாதீங்க...”

“பின்ன எப்படா கொடுக்கப் போறே...”

இவர்களுக்குள் வாக்குவாதம் முற்றிப்போனது... கட்சிக்காரன் அந்த வாலிபனை கன்னா பின்னா வென்று திட்ட, கூட்டம் கூடியது என் கடை வாயி லில்...



சிறிது நேரத்தில் கட்சிக்காரன், அந்த வாலிபனைக் கத்தியால் சரமாரியாகக் குத்த... "அண்ணே.... அண்ணே இப்படி செஞ் சிட்டீங்களே... இப்பத்தான் அண்ணே எனக்குக் கல்யாணமாச்சு... என் பெண்சாதி வேற முழுகாம இருக்கா... எங்கப்பன் சீக்காளி" என்று தட்டுத்தடுமாறி சொல் லிக் கொண்டே கீழே விழுந் தான். சற்று நேரத்துக்கெல் லாம் போலீஸ் வரவே எல்லா கூட்டமும் சிதறி யோடியது.

வந்த இன்ஸ்பெக்டர் "என்ன மிஸ்டர் சோமு என்னாச்சு?" என்றார்.

"இந்தக்கடை வாசல்ல இதோ செத்துப் போயிட் டானே இவன் எங்க தலை வரைத் தரக்குறைவா பேசி னான். எங்காளுக ஆத்திரப் பட்டாங்க. நான் தடுத்தேன். அதுக் குள்ளாற எங்காளு ஒருத்தன் 'தலை வரைப் பத்தி தரக்குறைவா பேச றியா'ன்னு ஆத்திரப்பட்டு குத்திட்டான்... நான் தடுத்தும் அவன் கேட்கலை..."

"எங்கே அந்தாளு?"

"ஓடிட்டான் சார்..."

"இந்தக்கடை வாசல்ல நடந்திருக்கிறதால இந்தக் கடைக்காரர் சாட்சி சொல்ல கோர்ட்டுக்கு வருவாரா?"

"தம்பி கண்ணப்பன் நமக்கு வேண்டப்பட்ட பையன். நடந் தது அத்தனையும் அவனும் பார்த்துக்கிட்டிருந்தான். தம்பி கோர்ட்டுக்கு வந்து சாட்சி சொல்வான்..."

"ஆளை அடையாளம் காட்டுவாரா?"

"ஊம் நிச்சயமா..."

நான் திறந்த வாய் மூடாமல், எதுவும் பேசத்தோன்றாமல் இருக்கும் போதே போலீஸ் ஜீப்பில் ஏறி அந்த கட்சிக்காரனும் இன்ஸ்பெக்டருடன் போய் விட்டான்.

எங்கள் கூட்டாளிகளைக் கேட்டேன். என்ன செய்வது என்று. 'இங்கே நடந்ததை அப்படியே சொல்லு கண்ணப்பா'ன் னாங்க.

மறுநாள் போலீஸ் ஸ்டேஷன் போன போது, லாக்கப்பில் ஒருத்தனை அடைத்து வைத்திருந்தனர்.

அவனைக்காட்டி, "இவன் தானே அன்று கொலை பண்ணின வன்... விவரமாக எல் லாம் இந்த பேப்பரில் எழுதியிருக்கிறேன்... கையெ ழுத்துப் போடு''ன்னார் இன்ஸ்பெக்டர்.

"இல்லை... இவன் குற்ற வாளி இல்லை..."

''பின்ன... பின்ன யார் உண்மையான குற்றவாளி. சொல்லுங்க..."

"சொன்னா தண்டிக்கப் போறீங்களாக்கும்!"

''நிச்சயமா... அவன் எப்படிப்பட்ட கொம்பனா யிருந்தாலும்...'' என்றார்



இன்ஸ்பெக்டர்.

"சோமுதான் இந்த படுபாதக செயலை செய்தது. அதுவும் கொலையுண்ட ஆள் யாரையும் தரக்குறைவா பேசலை. இவங்களுக் குள்ளாற கொடுக்கல் வாங்கல்ல தகறாரு... முன் விரோதம் இருந்திருக்கு... சம்பவம் நடந்த அன்னைக்கு குற்றவாளி சோமு தன் பரிவாரம் புடைசூழ என் கடைக்கு வந்து கூல்டிரிங்ஸ், வாழைப்பழங்கள் சாப்பிட்டுட்டு கடையை விட்டுக் கிளம்பறப்பத்தான் கொலையுண்டவர் என் கடைக்கு வர அப்பத்தான் தகராறு வந்து, வாய்ச்சண்டை முற்றி, கடைசியில் கொலையில் முடிந்தது... இதுதான் உண்மை..."

## குரு சொல் கேட்டு...

**கர்நாடக மாநிலம் 'ஹன்சூரில் பல திபேத்திய மக்களின் குடியிருப்பு உள்ளது. இங்கு உள்ள சென்ட்ரல் ஸ்கூலில் பத்தாம் வகுப்பு பொதுத் தேர்வை பல மாணவர்கள் எழுதினர். பரீட்சை தாள்களைத் திருத்தியவர்கள் திகைத்துப் போனார் கள். காரணம் 40 மாணவர்களின் விடைத்தாள்களில் கேள்விக்கான பதில்கள் வரிக்கு வரி மாறாமல் ஜெராக்ஸ் செய்யப்பட்டதுபோல இருந்தன! 'ஏதோ' நடந்திருப்பதை உணர்ந்த அதிகாரிகள் 40 மாணவர் களின் தேர்வு முடிவை நிறுத்தி வைத்து விசாரணை நடத்தினர். பள்ளி ஆசிரியர்களே காப்பி அடிக்க முழு ஒத்துழைப்புக் கொடுத்தது தெரிய வந்தது. மாணவர்களின் தேர்வு சதவிகிதம் குறைந்தால் தங்கள் 'இன்க்ரிமெண்ட்' நிறுத்தி வைக்கப்பட்டு விடும் என்ற பயத்திலேயே எல்லா மாணவர்களை யும் காப்பி அடிக்க ஆசிரியர்கள் தூண்டினர். பாவம், 'குருவின்' சொல்கேட்ட மாணவர்கள் மாட் டிக் கொண்டு முழிக்கிறார்கள்!**

**ஆதாரம் : த வீக்**
**தகவல் : எஸ். ஆலன்**

"அப்படியா?"

"ஆமாம் சார்..."

"சரி போங்க கவனிச்சுக்கிறேன்."

அன்று மாலைவேளை மறுபடி சோமு வும் இன்னும் சிலரும் என் கடைக்கு வந்தனர். உடன் போலீஸ் இன்ஸ்பெக்டரும் வந்தார் மப்டியில்...

"என்ன கண்ணப்பா... இன்ஸ்பெக்டர் என்னஎன்னவோ சொல்றாரே..."

"என்ன சொல்றார்?"

"அவர் சொன்ன இடத்தில் சொன்னபடி கையெழுத்துப் போட மாட்டேன்றியாமே..."

"உண்மையைத்தானே சொன்னேன்..."

"கண்ணப்பா... நான் ஒரு அரசியல்வாதி... அரசியல்ல இதெல்லாம் சகஜம்... போலீசுக்குத் தேவை ஒரு குற்றவாளி. உனக்கென்னாச்சு... ஏன் பிரச்னை பண்றே..."

"சார் என் கண் எதிரில் ஒரு குற்றம் நடந் திருக்கு.. கொலை பண்ணினது நீங்க... இப்ப என்னை பொய் சாட்சி சொல்லச் சொல் நீங்க..."

"இதபாரப்பா, உனக்கு என்ன வேணும் சொல்லு... பணமா... வேற எதனாச்சுமா... தலைவர்கிட்ட சொல்லி முடிச்சிடறேன். நீ மட்டும் இந்த ஸ்டேட்மெண்டில் ஒரு கையெ ழுத்துப் போடு... அப்புறம் கோர்ட்டுக்கு வந்து சாட்சி சொல்லணும்... அவ்வளவுதான்..."

நான் யோசித்துச் சொல்வதாகச் சொல்லி சமாளித்தேன்...

இதற்குள் கொலையுண்டவனின் மனைவி யும் அவன் தகப்பனும் வந்து என்னிடம் அழுத னர்.

"நியாயம் கிடைக்கணும் சார்... இது உங்க கடைக்கு முன்னால் நடந்திருக்கு... உண்மை யான குற்றவாளியை விட்டுட்டு இன்னொரு ரெடிமேட் குற்றவாளியைத் தண்டிக்கக் கூடாது..." என்றனர்.

'நான் நியாயத்தின் பக்கம் தான் இருப் பேன்' என்று உறுதிகூறி நடந்ததை நடந்த படியே எழுதிக் கொடுத்தேன் போலீசிடம்.

அன்றிரவே என்கடை சில ரௌடிகளால் நொறுக்கப்பட்டது...

இதையும் போலீசில் புகார் கொடுத்தேன்...

"இவங்களை எதிர்த்து எதுவும் செய்ய முடியாது சார். உங்களுக்கேன் வீண் வம்பு... இவங்களை அட்ஜஸ்ட் பண்ணிக்கிட்டு போயி டுங்க... அதுதான் உங்களுக்கும் உங்க குடும்பத் துக்கும் நல்லது" என்று இன்ஸ்பெக்டர் சொன் னார்.

"எது நடந்தாலும் சரி நான் பின் வாங்கப் போறதில்லை... சத்தியத்துக்குப் புறம்பா நடக்கமாட்டேன்!" என்று இன்ஸ்பெக்டரிடம் சொன்னேன்.

"பட்டப்பகல்ல ஓர் அப்பாவி, கொடுத்த கடனை திருப்பிக் கொடுக்க முடியலைங்கிற ஒரே காரணத்துக்காகப் படுகொலை செய்யப் பட்டிருக்கான். அப்புறம் இதேபோல் நினைச்ச இடத்தில் தங்களுக்கு வேண்டாதவங்களை வெட்டிச் சாய்ச்சிட்டு எவனோ ஓர் அப்பாவி யைச் சரண் அடையச் சொல்றது. இதுக்கு போலீசும் உடந்தைன்னா எப்படிங்க சும்மா இருக்க முடியும்? இதுக்குத்தான் சக கடைக் காரர்களும் சேர்ந்து கடைகளை மூடியிருக் கோம் சார்... நிச்சயமா பொது மக்களுக்குத் தொந்தரவு கொடுக்கணும்னு இல்லை" என்றார் கண்ணப்பன்.

## மூன்றாவது கண் - 17

# கிரிமினல் மூளையை முறியடித்த புலனாய்வு புத்தி!

**சி.வி. நரசிம்மன்**

இந்த வாரம் ஒரு வினோத மான கேஸ் பற்றிச் சொல்லப் போகிறேன். ஊழல் வழக்காக ஆரம் பித்து, முடிவில் ஒரு ஏமாற்றுப் பேர் வழியின் முகத்திரையைக் கிழித்த வழக்கு இது. என் சர்வீஸில், நான் விசாரித்த மிகக் குறிப்பிடத் தகுந்த வழக்குகளில் ஒன்று இது!

கேரளாவில், எர்ணாகுளம் அருகே ஓர் ஊரில், ஒரு வயதான, உடல் நலமில்லாத கிழவர் ஒருவர். 'இன்றைக்கோ, நாளைக்கோ' என்று உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு தம் முடிவுக்காகக் காத்திருந்தவர்.

அவருக்குத் தெரிந்த ஒரு ஆள். அவன் பெயர் அச்சுதமேனன். இந்த அச்சுதமேன னுக்கு ஒரு ஐடியா வந்தது. சாகிற தருவாயில் இருக்கிற இந்தக் கிழவரை - அவர் மரணத் தையே மூலதனமாகக் கொண்டு 'சம்பாதிக் கிற' ஐடியா!

எப்படி?

அந்தக் கிழவரை ஒரு இன்ஷூ ரன்ஸ் எடுக்க வைத்தான். ஆனால் சாகிற நிலையில் இருப்பவரை எந்த இன்ஷூரன்ஸ் கம்பெனி கிளையண்ட்டாக ஏற்கும்?

அதற்கொரு வழி செய்தான். அப்ளிகேஷனை, அந்த முதிய வரைக் கொண்டு நிரப்பச் செய்து, அதை எடுத்துக் கொண்டு, தான் போய் இன் ஷூரன்ஸ் அலுவலக மருத் துவர் முன் நின்று, பரிசோத னைக்கு உட்பட்டு, சர்ட்டிபி கேட் வாங்கி விட்டான். இன்ஷூ ரன்ஸும் தரப்பட்டு விட்டது!

உடனே, அச்சுதமேனன், நேரே அந்தக் கிழவரிடம் வந்து, நைச்சிய மாகப் பேசி, 'தம் மறைவுக்குப் பின் இன்ஷூரன்ஸ் பணம் அச்சுதமேனனுக்குப் போய்ச் சேர வேண்டும்' என்று பத்திரத்தில் எழுதி வாங்கிக் கொண்டு விட்டான்! 'தம் மரணத்தின் மூலமாவது தெரிந்த ஒருவனுக்கு உதவ முடிகிறதே' என்று அவர் நினைத்தார் போலும்!

சில மாதங்களுக்குப் பிறகு அவர் இறந் தும் போனார்! அவர் எழுதித் தந்த பத்திரத்தை ஆதாரமாக வைத்து, அச்சுதமேனன், இன்ஷூ ரன்ஸுக்கு அப்ளை செய்தான்.

எல்.ஐ.சியின் கொச்சி பிரிவு பிராஞ்ச் மானேஜரின் பார்வைக்கு அந்த விண்ணப்பம் வந்தது.

அவருக்குச் சந்தேகம் வந் தது. 'இது எப்படி? ஹெல்த் ரிப்போர்ட் மட்டும் 'ஹெல்த்தி'யாக இருக்க, இன்ஷூரன்ஸ் எடுத்த நாலாவது மாதத்திலேயே ஆள் இறந்து விட்டான்; காத்திருந்தது போல் இவன் 'கிளெய்ம்' பண்ணிக் கொண்டு வந்து நிற் கிறானே!

சந்தேகம் எழுந்ததும், கிருஷ்ணமூர்த்தி என் கிற அந்த பிராஞ்ச் மானேஜர், பாலிஸி எடுத்த வரின் மெடிக்கல் ரிப்போர்ட்டை மறுபடி எடுத்து ஆராய்ந்தார்.

அந்த பாலிஸியை நிராகரிப்பதற்கான பல ஓட்டைகள் அந்த ரிப்போர்ட்டில் இருப்பதை உணர்ந்தார். (புகைப்படம் ஒட்டவில்லை; வயது குறிப்பிட்டதில் தவறு இன்ன பிற.)

உடனே அவர் அந்த இன்ஷூரன்ஸ் பாலி ஸியை நிராகரித்தார்!

அச்சுதமேனன் இதை எதிர் பார்க்கவில்லை. ஒரு லட்ச ரூபாய் பாலிஸி அது! எத்தனை சிரமப்(?)பட்டு காலம் கனியக் காத்திருந்த வேளையில் இப்படி ஒரு முடிவா?

தாங்க முடியவில்லை அவனால். மேலும் ஒரு குறுக்கு வழி நாடினான்.

'கிருஷ்ணமூர்த்தி, பிராஞ்ச் மானேஜர், எல்.ஐ.சி. கொச்சின்' என்ற பெயருக்கு தன் பாங்கு கணக்கில் ஒரு 'செக்' எழுதினான். தொகை ரூ. 500/-

அதை எடுத்துக் கொண்டு பாங்க்குக்குப் போய், கவுண்ட்டரில் கொடுத்து, தானே 'கிருஷ்ணமூர்த்தி' என்று கையெழுத்துப் போட்டுவிட்டு, பணத்தை வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் போய் விட்டான்.

அவனுடைய அடுத்த கட்ட நடவடிக்கை



**எழுத்தாளர் : 'பொன்வண்டு' பத்திரிகைக் காரங்க வேணும்னே என் பேரைக் கெடுக்கி றாங்க சார்....!**

**நண்பர் : என்னதான் செய்றாங்க அப்படி?**

**எழுத்தாளர் : நான் அனுப்பறதிலே காப்பி ஜோக்குகளை மட்டும் போட்டுட்டு, ஒரிஜினல்-ஜோக்குகளைத் திருப்பி அனுப்பிடறாங்களே!**

**— பெ. கலாசாமி**

என்ன தெரியுமா?

சி.பி.ஐ.க்கு ஒரு புகார்க் கடிதம் எழுதினான்.

"ஐயா, எனக்கு மிகவும் வேண்டிய ஒருவர் இறந்து விட்டார். தம் மரணத்துக்குப் பின் தமது இன்ஷூரன்ஸ் பணம் முழுதும் அச்சுத மேனன் என்கிற எனக்கே கிடைக்கும்படி பத் திரம் எழுதித் தந்திருக்கிறார். அவர் இறந்து விட, நான் அப்பத்திரத்தையும் எனது மனு வையும் எல்.ஐ.சி.யின் கொச்சின் பிரிவுக்கு அனுப்பி வைத்தேன். பணம் வருவதாக இல்லை. நேரே போய் பிராஞ்ச் மானேஜரிடம் கேட்டபோது, 'ரூ. 500/- பணம் தந்தால் உடனே காரியம் நடக்கும்' என்றார். அதன்படியே நான், அவர் பெயருக்கு.... தேதியிட்ட.... எண் காசோலை ஒன்றைத் தந்தேன். அது பாங்க்கில் போடப்பட்டு, பணமும் எடுத்து விட்டார். அப் புறமும் எனக்குச் சேர வேண்டிய தொகையை தர அவர் மறுக்கிறார். நீங்கள் விசாரிக் வேண்டுகிறேன்!"

- இது அந்தப் புகாரின் சாரம்.

சி.பி.ஐயில் வழக்கு பதிவானது. முன் நடந்த எதுவும் அப்போது எங்களுக்குத் தெ யாது. எங்களைப் பொறுத்தவரை, ஒரு எல்.ஐ.சி ஆபீசர் லஞ்சம் வாங்கி இருக்கிறார்; பாதிக்கப் பட்ட அச்சுதமேனன் நீதி கேட்டு நிற்கிறார் அவ்வளவுதான்.

**அ**ந்த கிருஷ்ணமூர்த்தியின் மேல் வழக்கு பதிவு செய்தோம். விசாரணையில் அவர், தாம் ஒரு பைசாவும் யாரிடமிருந்தும் வாங்கவில்லை என்று உறுதியாகச் சொன்னார். கூடவே 'இந்த இந்த காரணங்களால் நான் நிராகரித்தேன் என்றும் விளக்கினார்.

**சி**.பி.ஐ., வழக்கைப் பல கோணங்களில் ஆராய ஆரம்பித்தது!

என் புலனாய்வு அதிகாரி, வெளியே தெரி யாமல் அச்சுதமேனன் தொடர்பான விவரங் களைச் சேகரிக்க ஆரம்பித்தார்.

இறந்து போன கிழவரின் இன்ஷூரன்ஸ் சம்பந்தப்பட்ட ஃபாரங்களிலும், அவர் எழுதி வைத்த உயில் சம்பந்தப்பட்ட காகிதங்களிலும் ஏதோ ஓர் இடத்தில் பெருவிரல் ரேகை பதிவாகியிருந்தது. அது அவருடையது என்று சொல்லப்பட்டது. ஆனால் விசாரணையின் போது சந்தேகம் எழுந்தவுடன் அந்த விரல் ரேகையையும் அச்சுதமேனன் தான் வைத்திருப் பான் என ஊகித்தோம். அதற்காக அச்சுத மேனனின் பெருவில் ரேகையைப் பதிவு செய்ய என் ஆபீஸர் முயன்ற போது, அவ னுடைய பெருவிரலின் மேல் பாகம் acid கொட்டி சுட்டுப் போயிருந்ததைப் பார்த்தார். அதனால் அந்த விரலின் ரேகை உருவற்றுப் போயிருந்தது.

இது ஒரு புறம் இருக்க, எல்.ஐ.சி. ஆபீஸர் கிருஷ்ணமூர்த்தி மிகவும் நேர்மையானவர் என்றும் தெரிய வந்தது. தாம் கண்டறிந்த விஷயங்களை விளக்கி, "சார்! அந்த எல்.ஐ.சி. ஆபீசர் மேல் தவறு எதுவும் இல்லை; அச்சுத மேனன்தான் ஏதோ விளையாடியிருக்கிறான்" என்றார் என் புலனாய்வு அதிகாரி.

**சா**தாரணமாக கேஸ் அத்துடன் முடிந் திருக்க வேண்டும். எல்.ஐ.சி. ஆபீசர் ஊழல் செய்தாரா, இல்லையா என்பதுதான் எங்க ளுக்கு வந்த கேஸ். அது, 'இல்லை' என்று முடி வானதோடு முடிந்திருக்க வேண்டும்.

நான் விடவில்லை. ஓர் ஆள் அத்தனை பேரையும் - சி.பி.ஐ. உட்பட - இளிச்சவாயர் களாக நினைத்து ஏமாற்றி இருக்கிறான்.

அவனைச் சும்மா விடக் கூடாது என்று முடிவு செய்தேன்.

விசாரணையின் அந்தக் கட்டத்தில் ஏமாற்றுதல் சம்பந்தப்பட்ட செக்ஷன்களையும் வழக்கில் சேர்த்து, அச்சுதமேனனைக் குற்றவாளியாகக் குறித்து விசாரணையைத் திசை திருப்பிவிட்டேன்.

புலனாய்வு அதிகாரி அச்சுதமேனனின் கிராமத்துக்குப் போய், அங்கே அவன் 'பெயர் எப்படி இருக்கிறது' என்று தெரிந்து வர முயன்றார்.

பலரை விசாரித்ததில், அச்சுதமேனன், 'ஒரு ஏமாற்றுப் பேர்வழி' என்பது மட்டும் உறுதி ஆயிற்று! தவிர எப்போதோ ஒருமுறை அவன் போலீஸ் ஸ்டேஷனுக்கும் போயிருக்கிறான் என்கிற தகவலும் கூடுதலாகக் கிடைத்தது.

இது போதாதா!

உடனே அது எந்த ஊர் போலீஸ் ஸ்டேஷன் என்பதை விசாரித்துத் தெரிந்து கொண்டு, அங்கே விரைந்தார்.

ஒருவன் மேல் குற்றம் சாட்டப்பட்டு அவன் போலீஸாரால் கைது செய்யப்பட்டிருந்தால் நிச்சயம் போலீஸ் ஸ்டேஷனில் அவன் விரல் ரேகை பதிவாகி இருக்கும்!

அவன் ஒரு நாள் மட்டும் கூட போலீஸ் லாக் அப்பில் இருந்தால் (குற்றம் நிரூபிக்கப் பட்டாலும் படாவிட்டாலும்) அவன் உடைமைகளையெல்லாம் கணக்கெடுத்து, கையெழுத்து, கைநாட்டு வாங்கி வைக்க வேண்டும் என்பது போலீஸ் இலாகாவின் விதிகளில் ஒன்று.

சம்பந்தப்பட்ட இன்ஸ்பெக்டர் ஒழுங்காக, விதி முறைகளைப் பின் பற்றுபவராக இருந்தால், அந்த ரிஜிஸ்தரைப் (Prisoners Search Register என்று பெயர்) பராமரித்து வந்திருக்கக் கூடும்.

எதற்கும் முயற்சி செய்து பார்ப்போமே என்று 'அந்த ரிஜிஸ்தரைத் தேடித்தர முடியுமா?' என்று என்னுடைய அதிகாரி கேட்டார்.

ரிஜிஸ்தர் கைக்கு வந்தது. அவசரமாகக் குறிப்பிட்ட தேதியில் விசாரணைக்காக வந்த அச்சுதமேனன் பற்றிய விவரங்களைத் தேடினோம்!

அங்கே சிக்கியது கைரேகை! கேட்க வேண்டுமா பிறகு?

அதை வைத்துக் கொண்டு, எல்.ஐ.சி. ஃபாரத்துடன் ஒப்பு நோக்க, படு துல்லியம்!

உடனே சார்ஜ் ஷீட் போட்டு, கோர்ட்டில் நிறுத்த, குற்றம் நிரூபிக்கப்பட்டு, அவன் தண்டனை பெற்றான்.

எனக்கு மிகவும் திருப்தி தந்த கேஸ் இது. ஓர் ஏமாற்றுக்காரனை இனம் கண்டு தண்டிக்க முடிந்ததே என்பதால் அல்ல; ஒரு நேர்மையான எல்.ஐ.சி. ஆபீசர் மேல் அபாண்டமாக விழுந்த ஊழல் பழியைத் துடைக்க முடிந்ததே என்பதால்!

சி.பி.ஐயில் மட்டுமல்ல; நான் மாநில போலீஸில் பணியிலிருந்த போதும் இது போன்ற ரசமான கேஸ்கள் பலவற்றை புலனாய்வு செய்ய வேண்டி இருந்தது. அவற்றில் சிலவற்றைப் பின்னால் சொல்கிறேன். அதற்கு முன் இரண்டு மூன்று முக்கியமான விஷயங்களைப் பற்றிச் சற்று விரிவாகச் சொல்லி விடலாம் என்று நினைக்கிறேன்.

''என் வீட்டுக்காரர் ஜோக் எழுத்தாளரா இருக்கறதும் ஒரு விதத்துல நல்லதாப் போச்சு!''

''எப்படிச் சொல்ற?''

''நேத்து ராத்திரி வந்த திருடனை ஜோக் சொல்லியே துரத்திட்டார்!''

— கொங்கணாபுரம் வே.செந்தில்



முதலில் -

'போபர்ஸ் விவகாரம்' போன்ற பெரிய கேஸ்கள் ஏன் வருஷக் கணக்கில் இழுத்தடிக்கின்றன என்று எப்போதாவது யோசித்துப் பார்த்திருக்கிறீர்களா? இது பற்றியெல்லாம் யோசிக்க வேண்டியது மிக முக்கியம்.

நாட்டின் பொருளாதாரம் சம்பந்தப்பட்ட விஷயங்களில் குற்றம் நடந்து, அது இன்னொரு நாட்டுடனும் சம்பந்தப்படுமானால் ஏற்படுகிற தலைவலி இருக்கிறதே....

சிக்கல்களை விடுவித்து வழக்கை முடிப்பது இந்த விஷயத்தில் சாதாரணமானதல்ல! Interpol என்கிற சர்வதேச காவல் துறையின் ஒத்துழைப்பு இங்கேதான் வேண்டியிருக்கிறது!

அதென்ன இன்டர்போல்? எப்படி இயங்குகிறது, அது?

(அடுத்த வாரம்)

## போட்டிக் கதை - 13

ராம்லாலிடம் அவ்வளவு விஷயங்களை யாரும் எண்ணிப் பார்க்க முடியாது. ஜிம் கார்பட் நேஷனல் பார்க்கின் அடர்ந்த காடுகளின் நடுவே டூரிஸ்ட்டுகளை யானை மீது ஏற்றிச் சென்று மான்களையும், முதலைகளையும் சுற்றிக் காண்பிக்கும் - யானைப் பாகனிடம் அதிகமாய் சுவாரசியம் இருக்காது என்றே நினைத்தேன்; அவன் தலையின் பின் பகுதியைப் பார்க்கும் வரை.

பார்க்கில் இருக்கிற புல்வகைகளைப் பற்றி ஆய்வு செய்கிற பணிக்காக, பதினைந்து நாட்கள் அங்கேயே தங்க மத்திய அரசிடமும், வன இலாகாவிடமும் சிறப்பு அனுமதி பெற்று தங்க நேரிட்ட பொழுதுதான் எனக்கு ராம்லாலிடம் பரிச்சயம் நேர்ந்தது. சதா வெற்றிலையையும், பான் பராக்கையும் மாவு மில் போல் மென்று கொண்டிருக்கும் வாயுடன் - ஓர் இறுக்கமான முகத்துடன் - வழக்கமாய் நாம் பார்க்கும் தோற்றங்களினின்று வித்தியாசமாய் அவன் அநேகமாக சற்று கூடுதலாக நீண்டிருக்கும் மூக்கினால் அப்படித் தோன்றுகிறதா, தெரியவில்லை. பார்க்கில் அதிக வருட அனுபவம் ராம்லாலுக்குத்தான் என்பதால் அங்கு நடந்த எதைப் பற்றிக் கேட்டாலும் அவனிட மிருந்து விடை கிடைக்கும். அதிகமாகப் பேசிப் பழகாத ரகமாக இருந்தாலும் பேச ஆரம்பித்து விட்டால் அந்த முகத்துக்கும், குணத்துக்கும் சம்பந்தமில்லை என்பது தெரியும்.

புல்வகைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்து இரண்டொரு தீவனப் புல்வகைகளை வெளியிட்டது மட்டுமே என் அனுபவம். வன விலங்கு மையங்களுக்கும் எனக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை. நேஷனல் பார்க்



# ஜிம் கார்பெட் நேஷனல் பார்க்

இருக்கும் இடங்களில் மனித இனம் இன்னும் பயன்படுத்தாத பல தாவர வகைகளின் இனங்கள் அகப்பட வாய்ப்புண்டு என்ற காரணத்தால் இப்படிப்பட்ட ஆராய்ச்சியை மேற்கொண்டேன். தினமும் காலையில் யானை மீதேறி ராம்லாலுடன் புல்தரைப் பகுதிகளில் சென்று அவற்றை இனம் கண்டுவிட்டு மதியத்திற்குள் திரும்பி விடுவேன். புல்தரைப் பகுதிகளில்தான் மான்கள் மேய்ச்சலுக்கு வரும் என்றும் மான்களைப் பிடிப்பதற்காக புலிகளும் நடமாடுவதுண்டு என்றும் பயமுறுத்தியிருந்தார்கள்.

இந்த அடர்த்தியான மரங்களையும், பச்சைப் பசேலெனப் படர்ந்திருக்கும் தாவர இனங்களையும், சலசலத்துப் பளிங்கு போல் எதுவும் கலக்காமல் ஓடுகின்ற ராம் கங்கா நதியையும் பார்த்தபொழுது அங்கேயே இருந்து விடலாமா என்று கூடத் தோன்றியது.

"ராம்லால். உன்னைப் பார்க்கும் பொழுது நான் கூட இப்படி யானையைப் பழக்குபவனாக இருந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது."

வெற்றிலையைச் சுருட்டிப் போட்டுக் கொண்டே ராம்லால் சொன்னான். "சாப்! ஓரிரு நாட்கள் இங்கு வருபவர்களுக்கு அப்படித்தான் நினைக்கச் சொல்லும். ஆனால் இங்கேயே இந்த மிருகங்களுடன் இருந்து பார்த்தால் உண்மை தெரியும் சாப். இது எவ்வளவு கஷ்டமான வேலை, ஆபத்தான வேலை என்று."



"என்ன ராம்லால் எங்கள் வேலை மட்டும் கஷ்டமானது இல்லையா? நாங்களும் நகரத்தில் வீட்டை விட்டுப் போனால் திரும்பி வருகிற வரைக்கும் எங்கள் உயிருக்கு உத்தரவாதம் கிடையாது."

"நான் வனவிலங்குகளைப் பற்றிச் சொல்லவில்லை. அவற்றைத் தீண்டினால்தான் பிறாண்டும். ஆனால் இந்த மனித மிருகங்கள் பற்றித்தான் என் பயமெல்லாம்." கண்களில் ஓரமாய்த் தேங்கிய நீரை வெளிக்காட்டிக் கொள்ளாமல் உடனடியாகச் சென்று விட்டான்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. மிகவும் மரியாதையுடன் பேசுகிறவன் ஏன் இப்படியொரு வார்த்தையைக் கூறிவிட்டுப் போகிறான். கண்களைக் கசக்கிக் கொண்டு ஏன் உடனடியாக இடத்தை விட்டுச் செல்ல வேண்டும். யானை மீது மனிதர்களை ஏற்றிக் கொண்டு, காலை மாலை காட்டுக்குள் செல்லுகிற இவனுக்கு, யார் சிரமம் கொடுத்துவிடப் போகிறார்கள்.

மறுநாள் காட்டுக்குச் செல்லும் போது இயல்பாகக் கேட்டேன்.

"நானும் பத்து நாட்களாகக் காட்டுக்கு உன்னுடன் வருகிறேன். ஒருமுறை கூட என் கண்களுக்குப் புலி தென்படுவதில்லையே, ஏன்?"

"சாப். புலி நடமாட்டம் ராத்திரியிலதான் இருக்கும். பகல்ல அது வெளிவர்றதில்லை. அதனால எப்பவாவதுதான் தட்டுப்படும். வெள்ளக்காரங்க நம்ப நாட்டை ஆண்டப்ப இஷ்டத்துக்கு புலிகளையெல்லாம் வேட்டையாடிக் கொன்னுட்டாங்க. அதனால பயந்துக்கிட்டு புலிங்க பகல்ல நடமாட்டத்தைக் குறைச்சிக்கிட்டு ராத்திரியில வெளிவர்ற பழக்கத்தை ஏற்படுத்திக்கிச்சிங்க, பாவம்."

"நம்ப மக்கள் எந்த உயிரை உருப்படியா வாழ விடறாங்க. ஆண் யானையை தந்தத்துக்காகக் கொல்றாங்க."

"ஆமாம் சாப். இப்ப இந்தியாவுல ஆண் யானைங்க எண்ணிக்கை வெகுவாக் குறைஞ்சி போச்சி. இப்ப குட்டி ஆண் யானைங்க நம்மைத் தந்தத்துக்காகத்தான கொல்றாங்க;

**இறையன்பு**

# அருள்வாக்கு

எல்லாம் அவன்தான் என்றாலும் ஒன்றுக்கும் தன்னுடைய ஈச்வரத்வம் தெரியவில்லையே! நமக்கு நம் ஈச்வரத்வம் கொஞ்சமாவது தெரிகிறதா? தெரிந்தால் இத்தனை ஆசை, கோபம், பயம், அழுகை, பொய், பாபம் இருக்குமா? அதனால் எல்லாம் அவன் என்றாலும், பூர்ணமான அவனாகத் தன்னைத் தெரிந்து கொள்ளாமல் அவனே போட்டுக் கொண்ட



வேஷங்களாகத்தான் இருக்கின்றன. நாமெல்லாம் நன்றாக அஞ்ஞான வேஷம் போட்டுக் கொண்டு, மூல ஆஸாமியை அடையாளமே கண்டுகொள்ள முடியாத படியானவர்களாக இருக்கிறோம். ஆசார்யர் என்பவர் இத்தனை கோணா-மாணா வேஷமாக இல்லை. அவரிடம் ஆஸாமியை அடையாளம் கண்டுகொள்ள முடிகிறது. அதனால் அவரிடம் ஈச்வரத்வத்தை நாம் பக்தி பண்ணினால் கண்டு அநுபவிக்கலாம். நம்மிடமே தெரிந்து கொள்ள முடியாத தெய்வத் தன்மையை அவரிடம் ஸுலபமாகத் தெரிந்து கொள்ளலாம். பல தினுஸாக வேஷம் போடுகிற ஒரே ஈச்வரன்தான், ரொம்பவும் அசட்டு வேஷமான நம்மை சமர்த்தாக்குவதற்கே, ஸ்பெஷலாக ஆசார்ய வேஷத்தில் வந்திருக்கிறான். இப்படி உணர்ந்து அவரிடம் பக்தி பண்ணினால் அப்புறம் அங்கே வேஷத்தை முழுசாகவே கலைத்துவிட்டுத் தன்னையே தெரியப்படுத்திக் கொண்டு விடுவான். அப்புறம், அப்புறந்தான் – நம் வேஷத்தின் அசட்டுத்தனங்களையும் போக்கி, அப்புறம் இந்த வேஷத்தையும் கலைத்து, நாமும் அவனேதான் என்று அறிந்து அநுபவிக்குமாறு அருள் செய்வான்.

***– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.***

காமமும் பொருளாசையும் துறப்பதற்கு முன் ஞானம் உதிக்கவே உதிக்காது. துறவும் (தியாகம்) ஏற்பட்டதும் எல்லா அறியாமையும், எல்லா அவித்யையும் நாசமாகி விடும். பூதக் கண்ணாடி வழியாக சூரியகிரணங்களைச் செலுத்தி எதனையும் எரித்து விடலாம். ஆனால் சூரிய கிரணம் செல்லாத இருட்டறையில் அது பிரயோஜனப்படமாட்டாது. மனதும் அப்படிப்பட்டதே. உலகமாகிய இருட்டறையிலிருந்து அதனை வெளியில் கொண்டு வந்து சுயம் பிரகாசமான திவ்விய ஒளியை அதனுள் புகுத்த வேண்டும். அப்போது தியாக புத்தியுண்டாகி சகல அறியாமையும் நாசமுறும்.

– ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்

நமக்குத் தந்தமே வேணான்னு சொல்லி தந்தம் முளைக்கறதுக்கு முன்னாடியே பாறையில தேச்சித் தேச்சி தந்தமே வளராமப் பாத்துக்க ஆரம்பிச்சிட்டதுங்களாம். அன்னைக்கி எங்க பெரிய அதிகாரி யார் கிட்டயோ சொல்லிக் கிட்டிருந்தாரு."

"இந்த யானைக்கு என்ன தீனி கொடுக்கறீங்க?"

"இதை நான்தான் பாத்துக்கணும். காலையில காட்டுக்குள்ள போய் பத்து மணி சுமாருக்குப் புல், தழை எல்லாம் கொண்டு வரணும். ஒரு நாளக்கி 3000 கிலோ புல் தழை எல்லாம் சாப்பிடக் கொடுப்போம். ஆறு கிலோ ஆட்டா இதுக்குச் சாப்பிடக் குடுப்போம். சில பேரு பிரியமா தாங்கள் கொண்டு வந்திருக்கிற வாழைப் பழம், தேங்காய் எல்லாம் தருவாங்க."

"உம் பசங்க எங்க படிக்கிறாங்க?"

"என்னாத்த சாப் படிக்கறாங்க. இங்க ஒரு பள்ளிக்கூடம் இருக்கு. அஞ்சாங் கிளாஸ் வரைக்கும் படிக்கலாம். அதுக்கப்புறம் படிக்கணுமுன்னா பார்க்கை விட்டு வெளிய போனாத்தான் முடியும். அதுக்கெல்லாம் கட்டுப்படியாகாது. ஏதாவது ஒரு எடுபுடி வேலை வாங்கிக் கொடுக்க வேண்டியதுதான்."

"இப்படி காட்டுக்குள்ள தினமும் வர்றீங்களே, உங்க உயிருக்கு ஆபத்து ஒண்ணும் கிடையாதா. உனக்கு எப்பவுமே பயம் உண்டாகறதில்லையா?"

"நாம்ப எல்லோருமே என்னிக்காவது சாவப் போறவங்கதான். இந்த மிருகங்கள் எல்லாம் நல்லதுங்கதான் சாப். நம்பளைப் பாத்து பயந்துக்கிட்டு தானா ஓடிப் போயிடும். அது நம்பகிட்ட வர விரும்பறதில்லை. ஆனா நாம்பதான் அதுங்களைக் கெடுக்கறோம்."

"காட்டுக்குள்ள இருக்கற மிருகங்களைப் போயி யாரு கெடுக்க முடியும் ராம்லால்?"

"அஞ்சி வருஷத்துக்கு முன்னாடி டில்லியில் இருந்து ஒரு முக்கியஸ்தர் வந்தாரு சாப். குடும்பத்தோடு வந்து இங்க தங்கினாரு. அவங்க ரொம்பப் பெரிய இடம். அவங்களுக்கு இங்க ராஜமரியாதை நடந்தது. ஏன் சாப் இவங்களுக்கு சாப்பாடு அலுக்கவே அலுக்காதா? தினமும் பிரியாணி கோழின்னு ஒரே தடபுடல். முதல் நாளு யானையில

## 'சுருக் நறுக்' என்றொரு சொல்லோவியம் - 8

# சிறுகதை என்பது....

'சிறுகதை என்பது உரைநடையில் எழுதப்படுகிற கவிதை!' இப்படிச் சொன்னவர் ஜெயகாந்தன். இதுபோல் நிறையப் பேர் நிறைய மாதிரி சொல்லியிருக்கலாம்!

இருப்பினும் சிறுகதை பற்றி ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விளக்கம் மனத்துக்குள் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. காரணம் அத்தனை சிறுகதைகள் படிக்கிறோம்!

எனவே, சிறுகதை பற்றி உங்கள் மனத்தில் உள்ள சொல்லோவியத்தை கீழுள்ள கூப்பனில் நறுக்கென்று எழுதியனுப்புங்கள். **கடைசித் தேதி : 11.12.95.**

பிரசுரமாகும் ஒவ்வொரு 'சுருக் நறுக்' சொல்லோவியமும் ரூ. 50 பரிசு பெறும். இன்னும் 18 வாரங்களுக்குத் தொடரப் போகும் இப்போட்டியில் அதிக முறை கலந்து கொண்டு பரிசுபெறும் ஒரு திறமைசாலிக்கு ஒரு மெகா பரிசும் காத்துக் கொண்டிருக்கிறது.

போட்டி முடிவுகளில் ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

— ஆர்

சிறுகதை என்பது ..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

..........................................

போயி காட்டை சுத்திப் பாத்தாங்க. அவங்க கண்ணுக்குப் புலி அகப்படல. உலகத்திலேயே மொத்தம் 5000 புலிகள்தான் இருக்காம். நாம்ப ஒரு புலியை பாத்தாச்சுன்னா, ஐயாயிரத்துல ஒன்னைப் பார்த்துட்டதா அர்த்தம். நாம்ப முக்கியஸ்தர் அப்படிங்கறதுனால புலி நம்ப கண்ணு முன்னாடி வந்து நிக்குமா? புலிக்கு யாரு முக்கியமானவங்க? யானைப்பாகனும் அவங்களைக் காட்டுக்குள்ளாற ரொம்ப தூரம் அழைச்சிக்கிட்டுப் போயிருக்கான். பொதுவா புலியைப் பாத்தவுடனே குரங்கு ஒருவிதமா சத்தம் குடுக்கும். அதை வச்சியே புலி நடமாட்டத்தைத் தெரிஞ்சிக்கலாம். மரத்து மேல உசரமாக உக்காந்திருக்கறதுனால புலி, குரங்கு கண்ணுக்குத்தான் முதல்ல அகப்படும். அது கத்தி சத்தம் போட்டவுடன் மத்த மிருகமெல்லாம் உஷாராயிடும். மான் வகையெல்லாம் ஒரு மாதிரி பயத்தில கத்திக்கிட்டு ஓடும். அந்த சத்தத்தை வச்சி அந்தப் பாகன் ரொம்ப தூரம் காட்டுக்குள்ளாற கூட்டிக்கிட்டுப் போயிருக்கான். ஆனா சருகோட சலசலப்பு கேட்டுக்கிட்டுப் புலி எங்கயோ பதுங்கிக்கிடுச்சி. ரொம்ப நேரம் சுத்திப் பார்த்தும் புலி தென்படல. அன்னக்கி ராத்திரி, முக்கியஸ்தர் அதிகாரியைக் கூப்புட்டு விரட்டியிருக்காரு. அவரோட மருமகள் புலியைப் பாக்கலயேன்னு ரொம்பக் கோவிச்சிக்கிடுச்சாம். அதனால அவரு பத்து நாள் அங்கயே தங்கப் போறதாகவும் அதுக்குள்ள புலியைப் பாக்கறதுக்கு எப்படியாவது ஏற்பாடு பண்ணலேன்னா, அதிகாரியை மாத்திப்புடறதாவும் மிரட்டினாரு. அதிகாரி என்னா பண்ணுவாரு சாப். ஒரு வருஷத்துக்கு எத்தனை முறை குடும்பத்தைக் காடுவுட்டு காடு மாத்த முடியும் சொல்லுங்க. காட்டில இருக்கிற புலியை எப்படி நாம்ப இவங்களுக்குக் காட்ட முடியும் சொல்லுங்க. அன்னக்கி அப்படித்தான்.

"அரியானாவுல இருந்து ஒரு மந்திரி வந்து அவரு பாட்டுக்கு எவ்வளவு சொல்லியும் கேக்காம ஆத்தில மீன் புடிக்க ஆரம்புச்சிட்டாரு. மனுசங்க நடமாட்டம் ஆத்துப்பக்கமா இருந்தா எப்படி மானோ புலியோ தண்ணி குடிக்க வரும்? சொல்லுங்க, 'கடைசியில இங்க வந்திருந்த சில வெளிநாட்டு விஞ்ஞானிங்க பிரச்னையைக் கிளப்ப, வேறவழியில்லாம 2500 ரூபா ஃபைன் கட்டினாரு. மந்திரி பதவியும் இதனால பறிபோயிடுச்சாம்...."

"ராம்லால் விஷயத்துக்கு வா. அப்புறம் அந்த முக்கியஸ்தருக்குப் புலி தென்பட்டதா?"

"சாப் புலியைப் புடுச்சி கட்டியா வக்க முடியும். மந்திரம் மாயம் பண்ணியா காட்ட முடியும்? நம்ப கண்ணு முன்னாடி வந்து நிக்கறதுக்கா புலியை நாம்ப பாதுகாக்கறோம்."

ஒரு வகையில் அவன் வியாக்கியானங்கள்

என் பொறுமையை சோதித்தாலும், அவற்றைத் தடை செய்தால் அவன் ஆர்வம் குன்றுமே என்பதற்காக அவன் சொல்வதையெல்லாம் ஆர்வத்துடன் கேட்பது போல் கவனித்திருந் தேன்.

"எங்க அதிகாரி பாவம் ரொம்பத் தவிச்சிப் போயிட்டாரு சாப். அப்ப அவருகிட்ட ஒருத் தர் ஒரு ஐடியா குடுத்தாரு. ஏதாவது ஒரு இரையை தினமும் ஒரு குறிப்பிட்ட இடத்துல கட்டி வச்சமுன்னா, புலி அதைச் சாப்பிட வரும். அப்ப முக்கியஸ்தரை அழைச்சிக் கிட்டுப் போயி காட்டிடலாமுன்னு சொன் னாரு."

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. நேஷ னல் பார்க்கிற்குள் எந்த விலங்கையும் கொண்டு வரக் கூடாது எனக் கடுமையான விதிமுறையிருப்பது எனக்குத் தெரியும்.

"இது குற்றமில்லையா ராம்லால்."

"சொல்றேன் சாப். முழுசாக் கேளுங்க."

"அதுசரி. தினமும் வெவ்வேறு புலி வந்து மிருகத்தைச் சாப்புட்டுட்டா என்ன பண்ண முடியும்."

"அப்படி நடக்காது சாப். ஒவ்வொரு புலிக் கும் ஒரு எல்லையிருக்கு. ஒரு பத்து சதுர கிலோ மீட்டருக்கு ஒரு ஆண்புலியும் இரண்டு மூணு பெண்புலியும்தான் இருக்கும். வேற புலி அந்த எல்லைக்கு வராது."

"பிறகு என்ன ஆச்சி?"

"தெனமும் ஒரு ஆட்டை ஒரு குறிப்பிட்ட எடத்துல கட்டி வச்சிடலாமுன்னு முடிவு பண்ணினாங்க. வெயில் காலத்துல தண்ணி சில இடங்கள்ல மட்டும் தேங்கியிருக்கும். அங்க தாகத்துக்காகப் புலி தண்ணி குடிக்க வரும் பொழுது ஆடு தெரியறமாதிரி கட்டற துக்கு ஏற்பாடு பண்ணுனாங்க. நேஷனல் பார்க்கில இந்த மாதிரி வெளி விலங்கைக் கொண்டு வர்றது தப்பு மட்டுமில்ல சாப். குற்றம். ஆனா யாரு தண்டிக்கணுமோ அவங் களே குற்றம் பண்ணுனா நாம்ப என்னா பண்ண முடியும். இதை யாருக்கும் தெரியாம காதும் காதும் வச்ச மாதிரி ரகசியமா செய்ய ணுமுன்னு முடிவு பண்ணி, ஒரு நம்பகமான யானைப்பாகன் மூலம் செஞ்சாங்க. அவங்க எதிர்பாத்த மாதிரியே நடந்துச்சு. புலி தண்ணி குடிக்க வரும் போது ஆட்டைப் பாத்துச்சி. இரண்டு மூணு நாளா ஒரே இடத்துல இரை கிடைச்சதும் அதுக்கும் சந்தோஷம். ஏன்னா கஷ்டப்படாம உணவு கிடைக்குது இல்லயா? புலிக்கும் வேட்டையாடறது அவ்வளவு சுலப மில்லை. மானைத் துரத்தணும். சமயத்துல அகப்படாது. சில சமயம் கொம்புல குத்துனா காயம் கூட ஏற்படும். எந்த சங்கடமுமில்லாம ஆடு கிடைக்க ஆரம்பிச்சதும், தினமும் குறிப் பிட்ட நேரத்துல ஒரு புதருக்குப் பின்னாடி ஒளிஞ்சி ஆட்டுக்காகக் காத்துக்கிட்டிருக்க ஆரம்பிச்சுடுச்சி புலி. ஒரு நாள் முக்கியஸ்தர் குடும்பத்தை அந்த நேரமாப் பார்த்து அழைச் சிக்கிட்டுப் போனாங்க. புலி கண்ணில் பட்டி ருச்சி. அவங்களுக்கு ஏகப்பட்ட சந்தோஷம். அதிகாரியைக் கூப்புட்டு பாராட்டி அவரு பிரமோஷனுக்கு வழி பண்றதா சொல்லிட்டு போனாங்க."

"எப்படியோ பிரச்னை தீந்து போச்சி இல் லையா?"

"இல்ல சாப். அதுக்கப்பறமாத்தான் பிரச் னையே ஆரம்பமானது."

"எப்படி ராம்லால்."

"இங்க ஜூன் 15ம் தேதி சீஸன் முடிஞ்சி போயிரும். அதுக்கப்புறம் யாரையும் பார்க்குக் குள்ள அனுமதிக்கறது கிடையாது. வழக்கமா ஆட்டைக் கட்டிப் போட்டுட்டு வர்ற யானைப் பாகன், புல்லு கொண்டு வர்றதுக்காக யானை மேல ஏறி காட்டுக்குள்ள போயிருக்கான். புலி இவன் தனக்குத்தான் தீனி கொண்டுக்கிட்டு வர்றான்னு நெனைச்சி காத்துக்கிட்டிருந் திருக்கு. அவன் ஆடு எதையும் வழக்கமா கட்டற எடத்துல கட்டலேன்னதும் அதுக்கு ரொம்பவும் ஏமாத்தமாப் போயிடுச்சி. அவன் பின்னாடியே பதுங்கிப் பதுங்கி வந்திருக்கு.

அவனுக்கு அது தெரியல. யானைக்குத் தண்ணி காட்டறதுக்கு ஆத்துப் பக்கமா அழைச்சிக்கிட்டுப் போயி அதை விட்டுவுட் டுத் திரும்பும்போது, அவன் மேல பாஞ்சி அவனோட மண்டை பின் பகுதியை ஒரு அடி அடிச்சிருக்கு. பக்கத்துல இன்னும் சில பாகன் கள் யானைக்குத் தண்ணி காட்டிக்கிட்டிருந்த வங்க, சத்தம் கேட்டு ஓடி வந்தவுடனே இவ னைப் போட்டுட்டு ஓடிப் போயிருச்சி. பின் னால மனுஷங்கள அடிக்கற புலியா அது மாறி, அதைச் சுட்டுக் கொன்னுட்டாங்க!"

"அந்தப் பாகன் செத்துட்டானா ராம் லால்?"

"இல்ல சாப். உயரோடதான் இருக்கான். மண்டையோட்டை பின்பகுதியில ஆப ரேஷன் செஞ்சி, தகடு வச்சி மாத்திட்டாங்க."

"அவனை எனக்கு நாளக்கிக் காட்டு ராம் லால்.

"நாளக்கி என்னா சாப். இன்னைக்கே காட்டறேன்...."

ராம்லால் தொப்பியை கழற்றினான்.



"அரசாங்கத்தின் அநாவசியச் செலவுகளைக் குறைக்க, சிபாரிசு செய்ய அமைக்கப் பட்ட குழு ஒரு துறையை மட்டும் எடுத்துவிடச் சொன்னதை காபினெட் ஏகமனதா அங்கீகரிச்சுடுத்தாம்!"

"எந்தத் துறையை?"

"லஞ்ச ஒழிப்பு மற்றும் கண்காணிப்புத் துறையை!"

— து. பூவராகன்



# ஏக்கம்

படியேறுகிற போதே கண்ணனுக்கு சோர்வாக இருந்தது. மற்ற பையன்கள் மாதிரி வீட்டுக்கு வருகிற அவசரமோ, உற்சாகமோ எப்போதும் அவனைத் தொற்றுவதில்லை.

காரணம், வீட்டில் யார் இருக்கிறார்கள். அவனிடம் பேச? விளையாட? டிபன் எடுத்துக் கொடுக்க? மாற்றுடை அணிய வைக்க? எல்லாம் அவன்தான் பார்த்துக் கொள்ள வேண்டும். அது அவனுக்கு எரிச்சலாகத்தானிருந்தது. அம்மாவிடம் சொன்னதற்கு நன்றாகத் திட்டிவிட்டாள்.

"தேர்ட் ஸ்டாண்டர்டு வந்தாச்சு. இன்னும் அம்மா கோண்டாவாவே இருக்கிறே. நாளைக்கு படிச்சு, பெரியாளாகி, வேலைக்குப் போனா, கூடவே நானும் வர முடியுமா?"

"...."

"அம்மா வேலைக்குப் போறதால தானே உன்னைக் கவனிக்க முடியலை? நான் எதுக்குச் சம்பாதிக்கிறேன்? உனக்கு எல்லா வசதியும் பண்ணித் தர்றதுக்கு தானே!" என்று சமாதானப் படுத்தினாள்.

'எனக்கு எந்த வசதியும் வேணாம். நீ வீட்ல இருந்தாப் போதும்' என்று சொல்ல வேண்டும் போலிருந்தது அவனுக்கு.

வழக்கம் போல், 'எதிர் வீட்டில் சாவி இருக்கும்' என்று நினைத்துப் போனவனுக்கு திறந்திருந்த வீடு ஆச்சரியம் கொடுத்தது. யார் வந்திருப்பார்கள் அதற்குள்ளாக? அம்மாவா, அப்பாவா?

அதற்குள் அம்மா வந்து விட்டது அவனுக்கு ஆச்சரியமாயிருந்தது. எப்போதும் வீட்டுக்குவர எட்டுமணி, எட்டரை ஆகிவிடும் அம்மாவுக்கு. இன்று ஏன் சீக்கிரமே வந்து விட்டாள்? அப்பாவேறு வந்து விட்டார்?

"கொஞ்சமாச்சும் யோசிச்சுப் பாத்தியா நீ? என்னையாச்சும் ஒரு வார்த்தை கேட்டிருக்கலாமில்லை? பொசுக்குனு வேலையை விட்டுட்டேன்னு சொல்றியே!"

"என்னங்க நீங்களும் புரியாமப் பேசிக்கிட்டு. படிச்சிப் படிச்சி சொன்னனில்ல, ஆபீசுல என்ன நடந்ததுன்னு. அதுக்கப்புறமும் அங்க நான் வேலை பார்த்தா என்னை சூடு சொரணையற்ற ஜென்மம்னு மத்தவங்க நினைச்சிக்கிட மாட்டாங்களா?"

"கேட்கிறவங்க, மாசம் பொறந்தா சம்பளம் தருவாங்களாக்கும்?"

அம்மாவும் அப்பாவும் அதன் பின் ரொம்பநேரம் வாதப் பிரதிவாதங்களில் ஈடுபட்டிருந்ததில் கவனம் செலுத்தாது தன்னறைக்குள் நுழைந்து வீட்டுப்பாடம் செய்ய நோட்டை எடுத்த போது, அவனுக்குள் ஒரு ரகசிய சந்தோஷம் அரும்பியிருந்தது.

அப்பாடா! இனிமேல் அம்மா வேலைக்குப் போக மாட்டாள்!

'எப்போது மணி நாலாகும்? வீட்டுக்கு எப்போது கிளம்பலாம்!' என்று துடித்தபடியிருந்தது கண்ணனின் மனம். மணி அடித்ததும் அவசர அவசரமாக ஓடின அவனை ஆச்சர்யத்துடன் பார்த்தார்கள் நண்பர்கள்.

வீட்டு முன் மோதி விடுகிற மாதிரி அவன் வந்து நின்ற போது, வீடு பூட்டியிருந்தது. பொடிப் பொடியாய் உதிர்ந்து போனது அந்தக் குழந்தை மனசு.

***

"இவங்கதான் நம்ம லேடீஸ் கிளப்புல சேர்றதுக்காக புதுசா வந்திருக்கிற மெம்பர். பக்கத்துலதான் வீடு இருக்கு. சத்யா அபார்ட்மென்ட்ஸ்."

உயரமான கொண்டை போட்ட ஒரு பெண்மணி, கண்ணனின் அம்மாவை யாருக்கோ அறிமுகம் செய்து வைத்துக் கொண்டு இருந்தாள்.

– தி. சிவசுப்பிரமணியன்



* 'ராகம் - சங்கீதம்'

# சுரிதாருக்கு 144!

**ரா**ஜ் டீவியில் ஒளிபரப்பாகிற 'ராகம்-சங்கீதம்'! கர்நாடக இசை அடிப்படையிலான வினாடி வினா.

"இந்த ஐடியாவை முதலில் சன் டீ.வி.யில் தான் சொன்னேன். ஏனோ அவர்கள் ஏற்க வில்லை. ராஜ் டீ.வி.யில் உடனே ஓகே ஆன துடன் பிரமாத வரவேற்பு"என்கிறார் நிகழ்ச் சியை நடத்தும் கே. வி. மோகன் வைத்யா. வீணை, வாய்ப்பாட்டு, வயலின் என்று பல சங்கதி தெரிந்து வைத்திருக்கும் மோகனின் குடும்பமே இசைக் குடும்பம். தந்தை, தில்லி ரேடியோவில் நிலைய வித்வானாக இருந்து ரிடையரானவர். அவர் ரிடையராகிறவரை மோகனும் டெல்லிவாசிதான்.

அங்கே யாமினி கிருஷ்ணமூர்த்தி, சரோஜா வைத்யநாதன், ஸ்வப்ன சுந்தரி, பாரதி சிவாஜி என்று பல நடனர்களுக்கு நட்டுவாங்கம் செய்திருக்கிறார்.

**ரா**ஜ் டீ.வி. நிகழ்ச்சி ஆரம்பமான தும், முதலில் கலந்து கொள்ள நபர்கள் கிடைப்பதில் சற்று சிர மம் இருந்திருக்கிறது. பல வித்வான்களுக்குத் தகவல் சொல்லி, சிஷ்யர் களை அனுப்ப வேண்டி இருக்கிறார் மோகன்.

பின்னால் நிகழ்ச்சி பாப்புலர் ஆனதும் கட்டுப் படுத்த முடியாத கூட்டம்! அண்மையில் தொடர்ந்து பத்து நாட்கள் - 35 வார நிகழ்ச்சிகளைப் படம் பிடித்த போது மலைத்து விட்டார் களாம்- கூட்டத்தைப்பார்த்து.

ஆனால் ஆர்வமுள்ளோர் அனைவரையும் மோகன் கலந்து கொள்ள விடுவதில்லை. இசை தொடர்பாக ஒரு மினி இண் டர்வியூ நடத்தி, அதில் தேறுபவர் களுக்கே சான்ஸ்! பாப்பா முதல் பாட்டி வரை யாரும் கலந்து கொள் ளக் கூடிய இந்த ராகம்-சங்கீதம் படப்பிடிப்பில் உடை விஷயத்தில் ஏக கெடுபிடி!

"சுரிதார், பேன்ட், ஜீன்ஸ் உள் ளிட்ட எந்த நவீன ஆடைகளுக் கும் 144தான்'' என்கிறார் மோகன்.

"இரண்டு ஜோடி வாண்டு கள் ஒரு நிகழ்ச்சியில் பங்கேற் றார்கள். இரண்டு அணி களுமே பிரமாதமாய் விடையளித்தா லும், நூலிழையில் ஒரு அணிக்குப் பரிசு கைநழுவியது. தோற்றாலும் கூட, ஆறுதல் பரிசாவது அந்தக் குழந்தைகளுக்குக் கொடுத் திருக்கலாம் என்று ஏகப்பட்ட கடிதங்கள்.

"'ஓம் விக்னேஸ்வரா கல்சுரல் அகாடமி' என்ற சபாவில், அவர்களது ஆண்டு விழா அன்றைக்கு, அதே இரண்டு வாண்டு ஜோடி கள் பங்கேற்க, ராகம் சங்கீதத்தை 'லைவ்' மேடை நிகழ்ச்சியாய் நடந்து.

"இப்போது, கும்பகோணத்தில் ராகம் சங்கீதத்தை மேடை நிகழ்ச்சியாய் நடத்தக் கூப்பிட்டிருக்கிறார்கள்.''

மோகனுக்கு நெடு நாளாய் சினிமாவில் நடிக்க ஆசை. அதுவும் டைரக்டர் பவித்ரன் மூலமாய் நிறைவேறி விட்டதாம். தவிர, 'மாலே மணிவண்ணா' என்ற டீ.வி. தொடரில் மோகன்தான் மகாவிஷ்ணு!

— மௌலி

## பூ போன்ற மனசு!



* ராஜ்குமார் பாரதி

**எ**ந்த எழுத்தில் முடிகிறதோ, அதே எழுத்தில் ஆரம்பித்து சினிமாப் பாட்டு பாடும் டீ.வி. நிகழ்ச் சியைப் பார்த்துவிட்டு, 'இதேபோல கர்நாடக இசையை வைத்துச் செய்தால் என்ன?' என்று யோசித்ததன் விளைவுதான் ஜி.ஈ.சி. டீ.வி.யில் ஒளிபரப்பப்படும் "அந்தாதி" நிகழ்ச்சி. வழங்கு பவர்கள் ராஜ்குமார் பாரதி + திருமதி. பாலா விஸ்வநாதன்.

முதல் ரவுண்டில் அந்தாதியாய் பாட்டுப் பாடினாலும், அடுத்து வரும் ரவுண்டுகள் குவிஸ், ராகம் கண்டுபிடிப்பது என்று போகின்றன.

இந்த நிகழ்ச்சியில், கர்நாடக இசை பற்றித் தெரியாதவர்களும், தெரிந்து கொள்ளும் விதமாக, ஆலாபனை என்றால் என்ன, பலவிதமான ராகங்கள், தாளங்கள், ஸ்வர பேதம், ஸ்ருதி பேதம் பற்றியெல்லாம் அனைவருக்கும் புரிகிறாற்போல, எளிமையாய்ச் சொல்லப்படுவது பாராட் டுக்குரிய விஷயம். பங்கேற்றவர்களின் சின்ன முயற்சிக்குக் கூட மார்க்கு கொடுத்துவிடும் பாரதியின் பேரனுக்குப் பூ போன்ற மனசுதான்!

- மௌஷ்மி

# கமலாம்பா

அண்ணா இன்று கோபப்படவில்லை. "இந்தத் திருவாரூரில் கைடு உத்தியோகம் பார்க்கத்தான் சரியாயிருக்கு" என்று ஆத்திரப் படவில்லை.

அவனுக்குக் கோபம் வந்தால் அதில் முக்கால் திட்டம் அவள் பேரில் தான் திரும்பும். கொடியிலிருந்து வேஷ்டியை உருவும் வேகத்திலும் தண்ணீரை மொண்டு மொண்டு ஊற்றிக் குளிக்கும் பரபரப்பிலும் கால் வாசிதான் கரையும்... "கமலாம்பா!" என்று இரைந்து "துப்புகெட்டவளே"வில் தொடங்கி அவளைக் காரணமில்லாமல் கரித்துக் கொட்டி முடித்தபிறகு மீதியும்.

அண்ணாவுக்கு அதட்ட வசதியாயிருக்கட்டும் என்றுதான் தனக்கு அம்மா, கமலாம்பா என்று பெயர் வைத்தாளோ?

"கமலாம்பா!" அண்ணாவுடைய குரலின் கோபத்தை மனத்தில் நினைத்துப் பார்த்த போதே வயிறு கலங்கியது.

மூன்றாம் வகுப்பு 'சி' செக்ஷனில் தன்னுடன் படிக்கும் அஜிதாவையோ, வனிதாவையோ, தேவியையோ, கே. ஷைலஜாவையோ, பி.ஷைலஜாவையோ, தமிழரசியையோ இப்படிக் கோபமாய்க் கூப்பிட முடியுமா...?

தனியாயிருந்த சமயங்களில் கமலாம்பாள் இந்தப் பெயர்களையெல்லாம் கோபமாய் உச்சரித்துப் பார்த்தாள்– அண்ணாவைவிட அதிக கோபமாய்... ஏனோ அந்தப் பெயர்களுடன் கோபம் ஒட்டவில்லை.

"கமலாம்பா!" அதுதான் கோபத்துக்கென்றே ஏற்பட்ட பெயர்.

'ஏன் இந்தப் பெயரை வைத்தாய்?' என்று சண்டை பிடிக்க அம்மா இல்லை. போட்டோவில் சிரிக்கும் அவளிடம் கேட்டால் பதில்தான் சொல்வாளா...!

பாட்டியிடம் கேட்டிருக்கிறாள்.

"அம்பாள் பேருடீ! பொண் குழந்தைகளுக்கு இந்த ஆத்திலே அதைத்தான் வைக்கிறது..."

பாட்டி சொன்னது நம்பிக்கை தரவில்லை. அதட்ட வசதியாய் இருக்கட்டுமே என்று வைத்ததுதான்– "கமலாம்பா!"

ஆனால் இன்று அண்ணா ஒரு தடவை கூட அப்படி அதட்டவில்லை. மெட்ராஸிலிருந்து வந்திருந்த ராமகிருஷ்ணனைச் சுற்றி சுற்றி பவ்யமாய் நடந்தான்.

கமலாம்பாளிடமிருந்து காப்பியைப் பிடுங்கி தானே நுரைக்க ஆற்றி ராமகிருஷ்ணனிடம் கொடுத்தான்.

"கமலா, வெந்நீர் தயாராயிடுத்தா பாரும்மா..." அவளிடம் கூட அனுசரணையாய்ப் பேசினான்.

கமலாம்பாளுக்கு எல்லாமே கனவில் நடப்பதுபோல் இருந்தது. 'இந்த ராமகிருஷ்ணன் நிச்சயம் பெரிய ஆளாக இருக்க வேண்டும். அண்ணாவுக்குப் பிடித்த கமலஹாசன், இல்லை ரஜினிகாந்த் மாதிரி...'

'மெட்ராஸில் பாட்டுக் கச்சேரி செய்பவர்' என்று பாட்டி சொன்னாள்.

கமலாம்பாள் கச்சேரி கேட்டதில்லை. அண்ணா எப்போதாவது சினிமாவுக்கு அழைத்துப் போவான்– 'நடுவில் பேசக் கூடாது; தண்ணி கேட்கக் கூடாது; திங்கறதுக்கு வாங்கித்தர மாட்டேன்' என்று நிபந்தனைகளுடன்...

'கச்சேரி எப்படியிருக்கும்...?'

கூடத்து ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த ராமகிருஷ்ணனை இன்னொரு முறை எட்டிப் பார்த்தாள் கமலாம்பாள்.

அண்ணாவுக்கு ஒரு அண்ணாபோல் இருந்தார். ஆனால், கோபமே வராத அண்ணா.

பௌர்ணமி சந்திரன் மாதிரி முகம். மீசை அளவாக உதடு தாண்டாமல் நின்றது. பிரகாசமான திராட்சைப்பழக் கண்கள். நெற்றியை மறைக்காத தலைமுடி. கீழே கீற்றாக விபூதி, நடுவில் குங்குமம்...

"இங்க வா, குழந்தை..."

ராமகிருஷ்ணன் கூப்பிட்டபோது கமலாம்பாளுக்குக் கூச்சமாகி விட்டது. திரும்பி உள்ளே ஓடுவதற்கு முன் ஒரு முறை மீண்டும் அந்தக் கண்களைப் பார்த்தாள். 'கோபமே வராது' என்று அவை சத்தியம் செய்தன.

**சீதா ரவி**



ராமகிருஷ்ணனைக் கோவிலுக்கு அழைத்துப் போனார்கள். அண்ணாவும் அவரும் நடந்த வேகத்துக்கு ஈடுகொடுக்க, கமலாம்பாள் பாவாடை தடுக்க ஓடினாள்.

சற்று திரும்பிப் பார்த்த ராமகிருஷ்ணன் நிதானித்து வேகம் தணித்தார்.

"உன் பேர் என்ன, குழந்தை...?"

"கமலாம்பாள்."

"அடடா!..." ராமகிருஷ்ணன் ஒரு கணம் நடக்க மறந்து நின்றார். "எத்தனை அழகான பேர்... தினமும் அம்பாள் பேரைச் சொல்லணும்னுதான் உனக்கு இந்தப் பேர் வைச்சிருக்கு..."

'இல்லை... ஜோராக அதட்டிக் கூப்பிடத்தான் அப்படி வைச்சிருக்கு' – கமலாம்பாள் சொல்லிவிடலாமா என்று நினைத்தாள். அதற்குள் ராமகிருஷ்ணன் "வா..." என்று கைநீட்டி அவள் கையைப் பிடித்துக் கொண்டார்.

அண்ணா வடக்கு வாசலைத் தவிர்த்து வலது பக்கமாகப் போய் மேலை வாசல் நோக்கி அழைத்துப் போனான்.

கமலாலயத்தை நெருங்கியதும் ராமகிருஷ்ணன் அப்படியே நின்றுவிட்டார். எல்லோரையும்போல் விறுவிறுவென்று படியிறங்கிப் போய்த் தண்ணீரை எடுத்துத் தலைக்குத் தெளித்துக் கொண்டு அடுத்த வேலை பார்க்க ஓடவில்லை.

இறங்கிப் போய், படிகளில் உட்கார்ந்துவிட்டார். கமலாம்பாளும் அவர் பக்கத்தில் உட்கார்ந்தாள். அண்ணாதான் நின்று கொண்டிருந்தான்.

இலேசாக இருட்ட ஆரம்பித்திருந்தது. ராமகிருஷ்ணன் மௌனமாக இருந்தார். கமலாம்பாள் அவர் முகத்தைப் பார்த்தாள். புதிதாக வைத்த ரோஜா செடியில் முதல் பூவைப் பார்த்த பூரிப்பு அதில் பரவியிருந்தது.

கமலாலயம் 'சளக் புளக்'கென்று அலையடித்தது.

"போகலாமா...? பெரிய கோயில்; பார்க்கிறதுக்கு நேரமாகும்..." அண்ணா தயக்கமாய்க் கேட்டான்.

"இந்த கமலாலயத்துல எப்படி தாளம் தப்பாம அலையடிக்கறது பார்த்தாயா...?" கேட்டபடியே ராமகிருஷ்ணன் எழுந்தார்.

கமலாம்பாளுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. ராமகிருஷ்ணனைப் போல் அவளும் ஒருநாள் உட்கார்ந்து அலையின் பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்தாள். "கமலாம்பா! இருட்டுற நேரத்தில இங்கென்னடி கனா...!" என்று அண்ணா முதுகைப் பதம் பார்த்துவிட்டான்.

மேலை வாசல் ஆஞ்சநேயரைத் தாண்டிக்கொண்டு கோவிலுக்குள் போனார்கள்.

"இந்தப் பக்கம் கமலாம்பாள் சந்நிதி... அப்படி கீழ கோபுரம் பக்கமா போய் வாசல் லேர்ந்து வருவமா...?"

"அம்பாளையே முதல்ல பார்த்துடுவோம்... என்ன குழந்தை...?"– ராமகிருஷ்ணன் கமலாம்பாளைப் பார்த்துக் கேட்டார்.

"ம்..."

அம்பாள் சிவப்புப் புடைவையில் அலங்காரங்களுக்கிடையே ஒடுங்கி இருந்தாள். குருக்கள் ராமகிருஷ்ணனைப் பார்த்ததும் சந்தோஷத்துடன் ராகம் போட்டு அர்ச்சனை செய்தார். கற்பூர ஆரத்தியுடன் நீளமாய்ப் பூச்சரத்தைக் கொண்டுவந்து ராமகிருஷ்ணனின் கழுத்தில் போட்டார்.

கமலாம்பாளுக்குக் கூட அன்று அம்பாள்

# சாருமதி

ராஜாராமன் வீட்டிற்குள் நுழைந்ததுமே 'சாருக்குட்டி' என்று குரல் கொடுத்துக் கொண்டே வந்தார்.

சாருவுக்கு எழுந்து ஓடிச் சென்று அப்பாவைக் கட்டிக் கொள்ள ஆசை வந்தது. உடம்பு துவண்டு சோர்வாய் இருந்தது. 'அப்பா' என்று குரல் கொடுக்கக் கூட வார்த்தை வரவில்லை.

அதற்குள் அப்பா படுக்கையறைக்கு வந்துவிட்டார். சாருமதியைப் பார்த்ததும் அவருக்கு வினோதமாய்ப் பட்டது. எப்போதும் வெளி வராண்டாவிலேயே படித்துக் கொண்டு தன் வருகைக்குக் காத்திருக்கும் சாருகுட்டிக்கு இன்று என்ன ஆயிற்று?

கோழிக் குஞ்சாய் சாருக்குட்டி சுருண்டு படுத்துக் கிடந்தது வருத்தமாகிவிட்டது.

"என்னடா அதற்குள்ள படுத்துட்ட? படிக்கலியோ?" என்றவாறே அவர் அவளைத் தூக்கி அணைத்துக் கொண்டார்.

உடம்பெல்லாம் கதகதப்பாய் இருப்பதைக் கண்டு அதிர்ச்சியடைந்தார். தலையை வருடிக் கொடுத்தார். சாருமதிக்கு இதமாய் இருந்தது. கண்களில் தாரை தாரையாய் நீர் பெருகியது.

அவர் உடனே தன் மனைவி மாலதியைக் கூப்பிட்டார். அம்மாவுக்கு எப்போதும் தைரியம் கிடையாது. அவள் 'ஓ'வென்று புலம்ப ஆரம்பித்து விட்டாள்.

"என்னம்மா ஆச்சு உனக்கு? ஏன் திடீர்னு சுரம்?" அம்மா சாருக்குட்டியை வாங்கிக் கொண்டு ஏதேதோ கேட்டாள். கொஞ்சினாள். சாருகுட்டி வாயைத் திறக்கவில்லை.

இனியும் தாமதிக்க வேண்டாம் என்று அவளை டாக்டரிடம் அழைத்துச் சென்றார்கள்.

"பயப்பட ஒன்றுமில்லை. சுரம் தான் கொஞ்சம் ஹெவியாய் இருக்கு. அதான் குழந்தை துவண்டுருக்கா. இன்ஜெக்‌ஷன் கொடுத்து இருக்கேன். இன்னும் இரண்டு மணிக்குள்ள குழந்தை முழிச்சுக்குவா. பால் மட்டும் குடிக்கக் கொடுங்க. போதும்" என்று குழந்தையைத் தட்டிக் கொடுத்து, வழியனுப்பி வைத்தார் டாக்டர்.

வீடு வந்த பின்பும் ஒன்றும் பேசிக் கொள்ளவில்லை.

சாருமதிக்கு பக்கத்திலேயே கிடந்தார்கள். மாலதிக்கு எல்லாமே புதிராய்ப் பட்டது. ஸ்கூல் விட்டு வந்ததிலிருந்தே சரியில்லை. ஏன் இப்படி? என்னாயிற்று சாருகுட்டிக்கு?

சாருகுட்டிக்கு விழிப்பு வந்த பின்பும் பேச்சு இல்லை. அதே தடுமாற்றம் தான். கண்களில் மிரட்சி. அழுகை நிற்கவில்லை. ராஜாராமன் எவ்வளவோ முயற்சித்தும் பலன் இல்லை. சாருகுட்டியால் பேச முடியவில்லை. ஒரே குழறல். மாலதியின் அரற்றல் எல்லை மீறி விட்டது. ராஜாராமனுக்கு இருந்த கொஞ்ச நஞ்ச தைரியமெல்லாம் மாலதியின் அழுகையிலேயே கரைந்து விடும் போல் பட்டது.

அந்த நடுநிசியில் சாருகுட்டியைத் தூக்கி கொண்டு நகரத்தின் மையத்தில் இருந்த தனியார் க்ளீனிக்குச் சென்றார்கள்.

சாருகுட்டியை உள் அறையில் டாக்டர் பரிசோதிப்பது கண்ணாடி சதுரத்தின் வழியே தெரிந்தது. ராஜாராமன் மௌனமாய் இறுகின முகத்தோடு, சக்கையாய்க் கிடந்தார். மாலதி, அவர் அருகில் அவரின் கையை கெட்டியாய்ப் பிடித்த நிலையில்.

டாக்டர் வெளியில் வந்தார். அவர்களோடு உட்கார்ந்து கொண்டார்.

"குழந்தைக்கு என்ன டாக்டர்? இனிமே பேச மாட்டாளா?" மாலதி விசும்பலுடன் கேட்டாள்.

"டோண்ட் பீ ஸில்லி. அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. குழந்தை சிவியரா பாதிக்கப்பட்டிருக்கா. மெண்ட்டலி இன்ஜுர்டு."

பின்னும் அவரே கேட்டார்.

"யாராவது அவளைக் கடுமையா திட்டினாங்களா? அடிச்சாங்களா?"

மாலதிக்கு ஒன்றுமே புரியவில்லை. 'பள்ளியில் ஏதாவது....'

"நல்லவேளை. பெரிசா பாதிக்கப்படலை. மைல்ட்தான். ட்ரீட்மெண்ட் கொடுத்து இருக்கேன். பார்ப்போம். பதட்டப்படாதீங்க."

வீட்டிற்கு வந்து சேர விடியல் நேரமாகிவிட்டது. குழந்தை இன்னமும் தூங்கிக் கொண்டே இருந்தது. இனி கவலை இல்லை.

மாலதி வெளியில் கிடந்த பால் கவரை எடுத்துச் சென்று



காப்பி போட்டு வந்தாள்.

ராஜாராமன் அன்று ஆபீசுக்கு விடுப்பு கொடுத்தார். சாரு குட்டியின் ஸ்கூலுக்குக் கிளம்பினார். மாலதிக்குப் பயம். 'இதைப் பெரிசு படுத்த வேண்டாம்' என்று கேட்டுக் கொண்டாள்.

ஸ்கூலின் முன்புற வராண்டாவிலேயே இருபுறமும் தடுப்பு கட்டி வகுப்புகள் நடந்து கொண்டிருந்தன. வெளியில் இருந்த பாட்டி ஒருத்தி தான், அவரை வழி மடக்கி "யாரைப் பார்க்கணும்?" என்று வழிப்படுத்தி அனுப்பினாள்.

இடதுபுறம் திரும்பியவுடன் மாடிப்படிக்குக் கீழே ஒதுக்குப் புறமாய் இருந்த வகுப்பறை முன்பு வந்து நின்றார் ராஜாராமன்.

உள்ளே பாடம் நடத்திக் கொண்டிருந்த அவள், "யெஸ் யாரைப் பார்க்கணும்?" என்றாள்.

"மிஸ் மகாலட்சுமி."

"நான்தான்!"

"நான் சாருமதியோட அப்பா."

மகாலட்சுமி முகம் சிறுத்துக் கொண்டது. நேற்று வகுப்பறையில் சாருமதி நடந்து கொண்ட விதம் பற்றிச் சடசடவென பொறிந்து தள்ளினாள். ராஜாராமன் ஒன்றும் பேசவில்லை. அமைதியாய்க் கேட்டுக் கொண்டார்.

கடைசியாய், "அவளைக் கண்டிச்சு வைங்க. நாளை க்ளாஸுக்கு வரச் சொல்லுங்க" என்று நிறுத்தினாள்.

"அவ என்ன தப்பு செஞ்சா?"

மிஸ் மகாலட்சுமிக்குக் கோபம் வந்தது. ஒரு மாதிரியாகப் பார்த்தாள்.

"அனாவசியமா மிஸ்ஸைப் பற்றிப் புறங்கூறுதல் தப்பு இல்லையா?"

"அப்படியென்ன சொன்னாள் என் குழந்தை?"

"ஐம்பது பிள்ளைங்க இருக்கற வகுப்புல எச்எம் ரவுண்ட்ஸ் வந்தபோது, மிஸ் பாடமே நடத்தலைன்னு கம்ப்ளெயிண்ட் பண்ணா சார்! ஐம்பது பிள்ளைங்க நடத்திட்டாங்கன்னு சொல்லும் போது உங்க மகளுக்கு மட்டும் நடத்தலைன்னா என்ன அர்த்தம்?"

"ஐம்பது பிள்ளைங்க உங்களைப் பார்த்து பயந்து இருக்காங்க. அதான் நடத்தாத பாடத்தை நடத்திட்டதா பொய் சொல்லி இருக்காங்க. அதையே என் பொண்ணும் சொல்லணும்னு எதிர்பார்க்கறீங்க."

"ஏன் உங்க குழந்தை பொய் சொல்லி இருக்கக் கூடாது?"

"லுக்! வேற ஏதாவது சொல்லுங்க. அனாவசியமா பேச்சு நீட்டிக்க வேண்டாம். நீங்க அந்தப்

பாரதி விவேக்



***"சரி.... போட்டி வைச்சி மாருதி கார் கலர் டீ.வி. எல்லாம் கொடுங்க வேண் டாங்கலே... அதுக்குன்னு நான் முதல் பாட்டு பாடி முடிச்சதும், 'பாகவதர் இப்ப எந்த ராகத்திலே பாடினார்'னு கேள்வி கேட்டு இன்ஸல்ட் பண்ணறது நல்லா இல்லே!"***

**— அகில்**

---

பாடத்தை நடத்தலை. அப்படி இருந்தா அது சம்பந்தமா நோட்ல என் குழந்தை எழுதி இருப்பா. அவளோட அன்றாடப் படிப்பைப் பற்றி எனக்குத் தெரியும்."

மகாலட்சுமி மிஸ் மேலும் மேலும் பொய் சொல்வது புரிந்தது. ராஜாராமனுக்குக் கோபமெல்லாம் போய் அவள் மேல் பரிதாபம் வந்தது. சாருமதி அந்த அளவுக்குப் பயந்து இருந்ததில் தப்பில்லை. இவளால் எப்படி இப்படி நடந்து கொள்ள முடிகிறது?

பக்கத்து வகுப்பறையில் இருந்து வேறு ஒரு மிஸ் வந்து அவரை சமாதானப்படுத்தி அழைத்துச் சென்றாள்.

"என் பெயர் இந்துமதி" என்று அறிமுகப் படுத்திக் கொண்டாள் அவள்.

"சார் நீங்க தான் சாருமதியோட அப்பாவா? நான் அவளுக்குப் போன வருடம் க்ளாஸ் மிஸ்."

"......"

"சார், உங்க மகள் மேல் தப்பில்லைதான். ஆனாலும் எல்லோரும் அமைதியா இருக்கும் போது இவ மட்டும் இந்த எக்ஸஸைஸ் நடத்தலைன்னு சொல்லலாமா?"

"அவளா போய் தலைமை ஆசிரியைகிட்ட இதையெல்லாம் நடத்தலைன்னு சொன்னா அதை நானே கண்டிப்பேன். எச்எம்., தானே கிளாஸுக்கு வந்து அவங்க என்ன நடத்தலைன்னு கேட்டாங்க. அதற்கு இவ பதில் சொன்னா, அது எப்படித் தப்பாயிடும்?"

"அப்கோர்ஸ். கொஞ்சம் அசிங்கம்தன். உங்ககிட்ட சொல்லறதுக்கென்ன. ஆனா பாருங்க, எச்.எம். என்ன பண்ணாங்க தெரியுமா? அந்த மிஸ்ஸை அழைத்து, நீங்க பாடம் நடத்தலைன்னு ஸ்டூடண்ஸ்ஸெல்லாம் புகார் கொடுத்து இருக்கறதா சொல்லி இருக்காங்க. உடனே மிஸ் கோபப்பட்டுக் கத்த, எச்.எம். அவங்களையே நேர க்ளாஸுக்கு அழைச்சிட்டுப் போய் பிள்ளைகளைக் கேட்டு இருக்காங்க. எல்லாரும் மிஸ்ஸைப் பார்த்து பயந்துக்கிட்டு வாயைத் திறக்கலை. சாருமதி மட்டும் எழுந்து நின்று, 'நீங்க நடத்தலைன்னு சொல்லி இருக்கா. மிஸ்ஸுக்குக் கோபம் வந்து, மற்றவங்களை அதட்டலா கேட்க, அவங்க எல்லாம் நடத்திட்டதா சொல்லிட்டாங்க. அதான் இவ மேல அவங்களுக்குக் கோபம். இவளும் அமைதியாய் இருந்திட்டிருக்கலாமில்லையா?"

"ஆக்சுவலா அந்த எக்ஸர்ஸைஸெல்லாம் நடத்தலைதானே? குழந்தைக்கு எப்படித் தெரியும்? மிஸ்ஸுக்கும் எச்.எம்க்கும் உள்ள மனத் தாங்கல்கள்? அதுவும் அவளுக்கு அது தேவையில்லாத ஒன்றுதானே!"

இந்துமதிக்கு தர்மசங்கடமாய்ப் போய் விட்டது. ராஜாராமனின் கேள்வி நியாயமாய்ப் பட்டது.

"இது மட்டுமில்லாம, குழந்தையை அடிச்சிருக்காங்க. 'நாளைக்கு ப்ரேயர்ல எல்லோர் கிட்டயும் மன்னிப்பு கேட்கணும், அப்பாவை அழைச்சிட்டு வரணும், இனி என் க்ளாசுல இருக்கக் கூடாது' அப்படின்னு குழந்தையை பயமுறுத்தி இருக்காங்க. இதெல்லாம் தப்பில்லையா?"

ராஜாராமன், முதல்நாள் நடந்த ரகளையைச் சொன்னார். மேற்படி சம்பவங்களெல்லாம் குழந்தையை எப்படி பாதிச்சிடுச்சி என்று விளக்கம் தந்தார்.

"இதெல்லாம் அவளுடைய தப்பா? அப்படி என்ன செய்தாள் அவள்?"

"......"

"இப்பக் கூட எவ்வளவு அதட்டலா பேசறாங்க. இதை நான் பெரிசாக்க விரும்பல. என்ன நடந்ததுன்னு கேட்கத்தான் வந்தேன். உங்களால முடிந்ததை செய்யுங்கன்னு சொல்

§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§

**◆ மதுவந்தி, லதாங்கி, பெஹாக், கேதார் - இவையெல்லாம் என்ன என்று சங்கீத ஞானம் உள்ளவர்களிடம் கேட்டால், 'டக்'கென்று 'ராகங்கள்' என் கூறிவிடுவர். மடிப்பாக்கம்வாசிகளிடம் கேட்டால், இங்குள்ள சில அபார்ட்மெண்ட்களின் பெயர் என கூறுவர். ஆம். மடிப்பாக்கத்திலுள்ள ஒரு கன்ஸ்ட்ரக்ஷன் நிறுவனத்தினர் தாங்கள் கட்டும் ஒவ்வொரு அபார்ட்மெண்ட்டுக்கும் ஒரு ராகத்தின் பெயரைச் சூட்டுகிறார்கள். பார்ப்பதற்கு கவர்ச்சிகரமாய் இருக்கிறது.**

**— டி.என். பாலகிருஷ்ணன்**

றாங்க. ஆனா எனக்கு அவங்க மேல பரிதாப மாத்தான் இருக்கு.''

''ஆச்சுவலா எச்.எம். தான் இதுநாள் வரை அந்த கிளாசை எடுத்துக்கிட்டு இருந்தாங்க. இந்த வருடம் கரஸ்பாண்டென்டே மகா லட்சுமிகிட்ட கொடுத்துட்டார். அதான் அவங்க கோபம். மேலும் அந்த வகுப்புல நிறையப் பசங்க. ட்யூஷன் வருமானம் இனி கிடையாதுங்கற பொறுமல். மகாலட்சுமியும் அப்படி நடந்துக்கறவ இல்ல. எச்.எம். மோட நச்சரிப்புல இப்படி ஆயிடுச்சி. அவங்களுக்காக நான் மன்னிப்பு கேட்டுக்கறேன். குழந்தை இப்ப எப்படி இருக்கா? பாவம் அவள்'' என் றாள் இந்துமதி.

''என் குழந்தையை நினைத்து எனக்குப் பெருமையா இருக்கு. எல்லோரும் பயப் படறப்ப அவ மட்டும் உண்மையைச் சொன்னா பாருங்க. ஆச்சரியமா இருக்கு. பாவப்பட வேண்டியது அவ மேல இல்லை. அவ க்ளாஸ் மிஸ். மகாலட்சுமி, எச்.எம்., அவ ளோட படிக்கிற மற்ற பசங்க மேலதான். ஏன் இப்படி எல்லாரும் கோழையாய் இருக்காங்க?''

''........''

''மகாலட்சுமியால எச்.எம்.மை எதிர்க்க முடியல. எச்.எம்மால பரந்த மனசோட வேலை செய்ய முடியலை. மற்ற குழந்தையெல்லாம் தெரியாமலேயே அநியாயத்திற்குத் துணை போறாங்க. அவங்களைச் சொல்லியும் தப் பில்ல. ஒருத்தருக்கொருத்தர் ஏமாத்திக்கறோம்!''

இந்துமதி அப்புறம் பேசிதெல்லாம் காதில் விழவில்லை. நிறைய யோசனை வந்தது.

''என் குழந்தையோட டீ.சியைத் தந்து விடுங்க. போதும் அவபடிச்சது. இனி நானே வீட்டில சொல்லி தந்துக்கறேன்.''

''சாருக்கு இன்னும் கோபம் தணியலை. அவ நாளைக்கு முடிஞ்சா ஸ்கூலுக்கு வரட்டும். இனி நான் அவளுக்குப் பொறுப்பு'' என்றாள் இந்துமதி.

ராஜாராமன் சிரித்தார்.

''நீங்க நினைக்கறபடியில்ல. இனி அவளால இங்க ஒத்துப் போக முடியாது. அப்படி அவ சியமும் இல்லை. வீட்டிலிருந்தே படிச்சிக் கட்டும். அவ இவங்களைப் போல ஆயிடக் கூடாதில்லையா?''

**வீ**ட்டிற்கு வந்ததும் மாலதி என்ன நடந்தது என்று கேட்டாள். ராஜாராமன் கொஞ்ச நேரம் அமைதியாய் இருந்தார். பின் எல்லாவற்றையும் சொன்னார். 'இனி அவள் ஸ்கூல் செல்ல வேண்டாம்' என்றார். வீட்டி லிருந்தே நேரிடையாய்ப் படிக்கட்டும் என்றார். ''மியூசிக், டான்ஸ், பெயிண்டிங் கத்துக்கிடட் டும்.''

மாலதிக்கு இதையெல்லாம் கேட்ட உடன் என்ன சொல்வது என்று தெரியவில்லை. ஆனால் தன் கணவனின் பிடிவாதத்தை யாரால் தடுத்துவிட முடியும்?

''மத்தவங்க மாதிரி என் குழந்த வளர வேண்டாம். அவளாவது உண்மையாய் இருக் கட்டும். என்ன, கொஞ்சம் கஷ்டப்படுவா. படட்டுமே. நான் எதுக்கிருக்கேன்? அவள மாதிரியும் இந்த உலகத்திலே சிலர் இருந் துட்டுத்தான் இருக்காங்க. எண்ணிக்கையில குறைச்சலா இருக்கு. அவ்வளவுதான். ஆனா அவங்க எல்லாம் தான் சந்தோஷமா இருக் காங்க.''

மாலதி அமைதியாகி விட்டாள்.

''**ஸ்**கூலை விட்டு ஏன் அப்பா என்னை நிறுத்திட்டீங்க? மிஸ் வரவேண்டாம்னு சொல் லிட்டாங்களா?'' என்றாள் குழந்தை.

ராஜாராமன் சாருமதியை அணைத்துக் கொண்டார்.

''அப்படியெல்லாமில்லைடா கண்ணு. எனக்குப் பிடிக்கலை, நீ அவங்களோட இனி படிக்கறது.''

குழந்தை விடுவதாய் இல்லை. 'ஏன்' என்று மீண்டும் கேட்டாள்.

''பொய் சொல்றவங்களோட நீ இனி படிக்க வேண்டாம். நீ என்னைக்கும் இப்படியே உண் மையா, அழகா இருக்கணும்.''

குழந்தை அப்பாவைக் கட்டிக் கொண்டது.

ராஜாராமன் கொஞ்ச நேரம் பொறுத்து குழந்தையிடம் கேட்டார்.

''இனி நானே உனக்குப் பாடம் சொல்லித் தரேனாம். பாடத்தோட நீ டான்ஸ், மியூசிக், பெயிண்டிங்ஸ் எல்லாம் கத்துக்கறியா?''

குழந்தை சந்தோஷத்தால் குதித்தது. பழைய மலர்ச்சி அதனிடம் வந்து ஒட்டிக் கொண்டது.

''கச்சேரியை ஸ்பான்சர் செஞ்ச சூயிங்கம் கம்பெனி மேலே ஏகக்கடுப் பாயிட்டார் பாக வதர்!''

''ஏன்?''

''ஒவ்வொரு டிக்கட் பின்னாலேயும் 'இதைப் போல கொடு மையான நேரங்களில் மெல்லுங்கள் ஜுஜுபி பபுள்கம்'னு போட் டிருக்காங்களாம்!''

— நாகலை இளவல்





* மனைவியுடன்....



* விஸ்வேஸ்வரன்

# 100 தந்தி வீணை

'யாங்குயின்' என்றால் தெரியுமா? கானூன்? டல்சிமர்? ஹாமர்டு டல்சிமர்? சந்தூரி?

பிரசித்தி பெற்ற காஷ்மீர் வாத்தியமான 'சந்தூரு'க்கு முறையே சைனா, ஜப்பான், இங்கிலாந்து, அமெரிக்கா, கிரேக்க நாடுகளில் உள்ள பெயர்கள் தாம் இவையெல்லாம்.

இந்த 'சந்தூர்' கருவிக்கு ஒரு சிறப்பு - வேதகாலத்திலிருந்தே இருந்து வரும் வாத்தியம் இது. அப்போது இதன் பெயர் சத தந்தி வீணா. அதாவது நூறு தந்திகள் கொண்ட வீணை.

கி.மு. 3000 முதல் 2500 வரையிலான காலத்தில் வேத விற்பன்னர்களால் பயன்படுத்தப்பட்ட இந்த வீணையில் தந்திகள் இழுத்துக் கட்டப்படுவது, 'மூஞ்சா' என்ற ஒருவித புல்லால்தான்!

பிற்காலத்தில் இஸ்லாமியர்கள் தம் மத வழிபாட்டில் சந்தூரைப் பயன்படுத்தியதாகச் சொல்கிறார்கள்.

சந்தூரின் ஷேப் சற்று வித்தியாசமான நாற்கர வடிவம். பெரிய சைஸ்! (வால்நட் மரத்தால் செய்யப்படுவது) சம்மணமிட்டு உட்கார்ந்து, இரு கைகளாலும் வாசிக்க வேண்டும். கொஞ்சம் கஷ்டம்தான்!

இந்தியாவில் சந்தூர் கலைஞர்கள் ரொம்பக் குறைவு. வடக்கே பண்டிட் உமாநாத் சர்மாதான் சந்தூரைப் பிரபலப் படுத்தியவர். அவரது சிஷ்யர் சிவகுமார் சர்மா. சிவகுமாரின் சிஷ்யர், நம்மூர் விஸ்வேஸ்வரன்.

நடனக் கலைஞர் சித்ரா விஸ்வேஸ்வரனின் கணவர்!

"ஆரம்ப காலத்தில் நான் வீணை வித்வான். கிடார் வாசிப்பேன். திரைப்படங்களில் நிறைய பணியாற்றி இருக்கிறேன். பம்பாய்க்கு ஒருதரம் ரெக்கார்டிங்குக்காகப் போயிருந்த போது சிவகுமார் சர்மாவின் சந்தூர் இசையைக் கேட்டு சொக்கிப் போய் விட்டேன்!

அந்த நிமிடமே என் கிடாரைக் கீழே வைத்துவிட்டு, சிவகுமார் சர்மாவிடம் சிஷ்யனாகச் சேர்ந்து விட்டேன். இன்று ஓரளவுக்கு என்னால் 'சந்தூர்' சிறப்பாக வாசிக்க முடிகிறது என்றால் அது என் குருவின் பிச்சை" என்கிறார் விஸ்வேஸ்வரன்.

மற்ற கருவிகளைப் போல சந்தூர் அத்தனைப் பிரபலமாகாததற்கான காரணம் என்ன?

"இது ஒரு மென்மையான இசைக்கருவி. இதைக் கொண்டு, 'ஸோலோ' கச்சேரி செய்வது சிரமம். கற்றுக் கொள்வது வெகு கஷ்டம். அதனால்தான் பலர் வரத் தயங்குகிறார்கள்."

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# "மூட்டுவலி உங்கள் வாழ்க்கையை துயர் மிக்கதாய் ஆக்குகிறதா ?"



திருமதி. சங்கரி பி. ஐயர்
செயலாளர்,
திருவான்மியூர் லயன்ஸ் கிளப்,
17, பாஷா தெரு, குளைமேடு,
சென்னை -

**"இன்று லயன்ஸ் கிளப்பில் நான் சுறுசுறுப்பாகச் செயல்படுகிறேன் TABE சிகிச்சைக்கு நன்றி".**

"தீராதவலி, முதலில் 1984-ல் தொடங்கியது. 1993 ஆண்டு அளவில் என்னால் நடக்க முடியவில்லை. திருவான்மியூர் லயன்ஸ் கிளப்பின் முன்னாள் தலைவியாகவும், சுறு சுறுப்பாகச் செயல்படும் ஓர் உறுப்பினராகவும் இருந்த நான், சங்கத்தின் கூட்டங்களுக்குக் கூட செல்ல முடியாத நிலை ஏற்பட்டது. குதிகால் எலும்பில் ஏற்பட்ட வலி என் வாழ்க்கை முறையையே பாதித்துவிட்டது.

அதன் பிறகு ஒரு நாள் என் கணவரும் நானும் TABE விளம்பரத்தைப் பார்த்து, அன்று மாலையே அந்த சிகிச்சை நிலையத்திற்குச் சென்றோம். அங்கு அவர்கள் கூறிய முறைப்படி சிகிச்சையைப் பின்பற்றினேன். சிகிச்சை தொடங்கிய 15 நாட்களிலேயே நான் நிவாரணத்தை உணர்ந்தேன். ஒரு மாதத்திற்குப் பிறகு சிறந்த முன்னேற்றம் கண்டேன். இப்போது, சிகிச்சை முடிந்து 2 வருடங்களுக்கு மேலாகியும் எனக்கு வலியேதும் தெரியவில்லை. TABE சிகிச்சைக்கு நானும் என் கணவரும் என்றென்றும் நன்றி உள்ளவர்களாக இருப்போம்."



திருமதி. வித்யா வாக்ளே
3, சர்வமங்களா நிவாஸ்,
28, வெங்கடராமன் தெரு,
சென்னை - 17.

"கிட்டத்தட்ட 8 வருடங்களாக ஆஸ்டியோ-ஆர்த்திரிட்டிஸ் பிரச்சனையால் என் வாழ்வில் எத்தனையோ சிரமங்கள்... தொடக்கத்தில், இதன் கடுமையான விளைவுகளைச் சிறிதும் சிந்திக்காமல், சுறுசுறுப்பான மற்ற பெண்களைப் போலவே நானும் வலியையும் தொல்லையையும் பொருட்படுத்தாமல் இருந்துவிட்டேன். வலி மிக மிகக் கடுமையானதும் தான் நான் உதவியை நாடினேன். இங்கும் அங்கும் நடமாடுவதும் தடைப்பட்டது. இளமையுடன் சுறுசுறுப்பாக பல்வேறு பணிகளை செய்து வந்த எனக்கு, இந்த நிலைமையை ஏற்றுக்கொள்ளவே முடியவில்லை. மேலும், பள்ளி செல்லும் என் குழந்தைகளிடம் எப்போதும் கவனம் செலுத்த வேண்டியிருந்தது.

இதர சிகிச்சை முறைகளைச் செய்து பார்ப்பதை விட TABE சிகிச்சை செய்வது என்று முடிவு செய்தோம்-- பத்திரிக்கைகளில் ஒரு சில விளம்பரங்களை பார்த்த பிறகு... அங்குள்ள டாக்டர்கள் மிகமிக உதவியாக இருந்தனர். இப்போது நான் மீண்டும் சுறுசுறுப்பான வாழ்க்கையை மேற்கொள்ள முடியும். சிரமமாக இருந்த பணிகளையும் இப்போது எளிதில் மகிழ்ச்சியுடன் செய்ய முடிகிறது."

**"தர்மார்த்த காமமோக்ஷானாம் ஆரோக்யம் மூலம் உத்தமம்"**
-சரக சூத்திரம் 1:15

**"தர்மம், செல்வம், சந்தோஷம், மோட்சம் இவற்றின் உயரிய-அடிப்படையே உடல் நலம் என்பதை நாங்கள் "TABE"பில் நம்புகிறோம்."**

★ காலத்தால் சோதிக்கப்பட்ட ஆயுர்வேத **மூலிகை பவுல்டிஸ்** (poultice) மூலம் TABE சிகிச்சை நிலையங்கள் விரிவானதொரு வெளிப் பிரயோக சிகிச்சை திட்டத்தை **ஆர்த்ரிட்டிஸ், ஸ்பாண்டிலிட்டிஸ், தோள்பட்டை வலி, இடுப்பு வலி, குதிகால் வலி** போன்றவைகளுக்கு தகுதி வாய்ந்த ஆயுர்வேத மற்றும் அலோபதி டாக்டர்களின் மேற்பார்வையின் கீழ் வழங்குகின்றன.

★ "இரு வேறு நபர்கள் ஒன்றுபோல் இருப்பதில்லை" என்பதை TABE சிகிச்சை நிலையங்கள் நன்கு உணர்ந்துள்ளன. எனவே, காலம் மற்றும் விளைவுகளைப் பொறுத்தவரை சிகிச்சையும் பலன்களும் வேறுபடலாம்.

**கலந்து ஆலோசிக்க, இப்போதே தொடர்பு கொள்க: தொலைபேசி: 8553772**

1, ஸ்ரீரங்கம் அவின்யூ, 53, பாந்தியன் சாலை, எழும்பூர், சென்னை - 8
காலை 9.00 மணி முதல்; இரவு 7.00 மணி வரை.
வாரத்தில் 7 நாட்களும் திறந்திருக்கும்.

அனைத்து முக்கிய கிரெடிட் கார்டுகளும் ஏற்றுக்கொள்ளப்படும்.

TABE
TREATMENT CLINICS



# அடைக்கு

"அம்மா எங்கே?"

"உள்ளே வாயேன். சாவகாசமாப் பேசுவோம்!"

கையில் கொண்டு வந்திருந்த சிறிய பெட்டியை முற்றத்துத் தூணில் சாய்த்து வைத்தான். அண்டாவிலிருந்து 'ஜில்'லென்ற கிணற்று நீரைப் பார்க்கும் போதே பரவசம் உண்டாயிற்று. மணியக்காரர் மனைவி நீர் நிரம்பிய செம்பைத் தந்து, 'சௌக்கியமா' என்றதற்கு சிரிப்புடன் தலையாட்டினான். முகம் கைகால் எங்கும் குளிர்ந்த நீர் பரவியது. முகத்தைத் துடைத்துக் கொண்டு கொல்லைப்புற கதவைத் திறந்து கொண்டு உட்கார்ந்தான். ஐயர் அவனைத் தாண்டி படியில் இறங்கி இரண்டாவது கருங்கற்படியில் உட்கார்ந்து கொண்டார். கொல்லையிலிருந்த காற்று இவர்களைக் கடந்து தழுவிப் போனது.

"லெட்டர் வந்ததா ராமகிருஷ்ணா?"

தலையசைத்தான்.

"நீ என்ன முடிவு பண்ணியிருக்கே?"

என்னவென்று சொல்ல? ஒன்றும் தோன்றாமல் எதிரேயிருந்த பாதாம் மரத்தைப் பார்த்தான். இந்த மரத்தின் மேல் எத்தனை முறை ஏறி காய் பறித்திருப்பான்? கீழே சின்ன அண்ணா சிவராமன் நிற்பான். ஏறி, காயைப் பறித்துப் போட வேண்டியது ராமகிருஷ்ணன் வேலை. நடுவே குப்பை கொட்ட கொல்லைக்கு வரும் ஐயர் மாமி இவர்களை எதேச்சையாகப் பார்த்து,

"என்னடா பண்றேள் அங்கே?"

இருவரும் இறங்கி, திபுதிபுவென்று ஓடுவார்கள். கணக்குப் பார்த்து, பிரித்துக் கொடுக்க நடுவர் கோடி வீட்டு கிட்டு. கமி

தூரத்திலே இருந்து பார்த்தபோதே மணியக்கார ஐயரின் உருவம் தெரிந்தது. அவரும் இவனை எதிர்பார்த்திருப்பார் போலும்! அருகில் சென்ற போது புன்னகை செய்தார். முன்பு பார்த்ததற்கு இப்போது ரொம்பவும் தளர்ந்திருந்தார்.

"இப்பத்தான் வர்றயா ராமகிருஷ்ணா?"

"ஆமா மாமா. காலையில் அஞ்சரை மணி பஸ் பிடித்தேன். மாறி மாறி, டவுன் பஸ்ஸில் சவாரி செய்து வருவதற்குள் வெயில் கொளுத்த ஆரம்பித்து விட்டது."

"சரி... சரி... உள்ளே வா. முகம், கைகால் அலம்பிண்டு கொஞ்ச நேரம் தோட்டத்தில் போய் உட்காருவோம்."

# தாழ்

போட்டிக் கதை - 15

ஜெ. ரமேஷ்பாபு

ஷனாக அவனுக்குச் சில காய்கள். அந்த நாட்கள்... அந்த சந்தோஷம் எங்கே? பெருமூச்சு விட்டான்.

"அம்மா எங்கே மாமா?"

"சொல்லி அனுப்பியிருக்கேன். அநேகமா வந்துண்டே இருப்பா. அவ வர்றத்துக்கு முன்னாடி உன்னண்டை கொஞ்சம் பேச வேண்டியிருக்கு. அதான் வழியிலேயே உன்னை மடக்கி இங்கே அழைச்சுண்டு வந்துட்டேன்."

"சொல்லுங்க மாமா."

"உங்கம்மாவுக்கு வயசு அதிகமாயிடுத்து. தள்ளாமை முன்னைக்கு இப்ப ஜாஸ்தி. உங்க அப்பா போனதுக்கப்புறம் இவ்வளவு நாள் தனி ஆளா காலம் தள்ளிட்டா. யார் தயவும் இல்லாம அவ வேலைகளைத் தானே பார்த்துக்கறது, கோயிலுக்கு தினமும் மாலை கட்டிக் கொடுக்கறது, குத்தகைக் காரனை விரட்டறது... எல்லாம் இவ்வளவு நாள் அவளே பார்த்துண்டது சரிதான். இனிமேலும் அவளைத் தனியா விடறது நல்லதில்லை. நீங்க யாராவது அவளைக் கொண்டு போய் வெச்சுக்கறதுதான் நல்லது."

அவன் பேசாமல் இருந்தான்.

"உங்க கஷ்டம் எனக்குப் புரியறது. ரெண்டு பேர் வேலை பார்க்கிற சிட்டி வாழ்க்கை எவ்வளவு யந்திரத்தனமானதுன்னு எனக்குத் தெரியும். ஆனா எனக்கும் வயசாறது. என் பையன் கிட்டே, டெல்லிக்குப் போயிடலாமான்னு நானும் மாமியும் யோசிச்சுண்டிருக்கோம். வர வர கிராமமும் டவுன் மாதிரி ஆயிண்டிருக்கு. ஊர் பூராவும் ஒரே குடும்பமா வாழ்ந்த காலமெல்லாம் போயாச்சு. அதனாலத்தான் உங்கம்மா சார்பா நானே உங்க எல்லார்க்கும் லெட்டர் போட்டேன்."

"அதைப் பார்த்துதான் கிளம்பி வந்தேன். அண்ணாக்கள் கிட்டேயிருந்து ஏதாவது பதில் உண்டா?"

"இதுவரை இல்லை. எதிர்பார்த்துண்டு இருக்கேன்."

அந்த லெட்டர் படுத்திய பாட்டை யோசித்துப் பார்த்தான். அன்று இரவு அவன் வந்த உடனேயே சாந்தா ஆரம்பித்து விட்டாள்.

"உங்க அம்மாகிட்டேயிருந்து லெட்டர் வந்திருக்கு."

"ம்... ம்..." அவன் கேட்காவிட்டாலும் அவள் விடப் போவதில்லை. அவளே சொல்லட்டும்.

"உங்கம்மாவுக்கு வயசாயிடுத்தாம். இனிமேயும் தனியா இருக்கறது கஷ்டமாம். யாராவது ஒருவர் பொறுப்பிலேதான் இருந்தாகணுமாம். அதனாலே வந்து அழைச்சிட்டுப் போக முடியுமான்னு கேட்டு மணியக்காரர் எழுதியிருக்கார். அதிலே ஒரு கண்டிஷன் வேற. அம்மாவை யார் வெச்சுக்கறாங்களோ அவங்களுக்குத்தான் கிராமத்திலிருக்கிற நிலமாம். இல்லையென்றால் கிடையாதா?"

"மணியக்காரர்தானே எழுதியிருக்கார்?"

"அம்மா சொல்படி மணியக்கார ஐயர்னு எழுதியிருக்கே!"

"என்ன தப்பு? யார் வெச்சுக்கறாங்களோ அவங்களுக்குக் கொடுக்க வேண்டியதுதானே நியாயம்?"

"வெச்சுக்கறத்துக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்? உங்க அண்ணன்களுக்கு என்ன குறை? அவங்க என்ன உங்களை மாதிரி பியூனா? பெரியவர் டெல்லியிலே ரேடியோவில ஆபீசர். அடுத்தவர் பீகார்லே பேங்க்லே இருக்கார். ரெண்டு பொண்களை பெத்து வச்சிட்டு அவஸ்தைப்படறது நாம்தானே?"

"எங்க அம்மாவை நம்பியா பெத்துக்கிட்டே?"

"என்ன பேச்சு இது? விவஸ்தை கெட்ட பேச்சு!"

"விவஸ்தையோட பேசட்டுமா? அம்மாவைக் கொண்டு வந்து வச்சுப்போம். அந்த நிலத்தைக் காத்து நீ என்ன வேணுமோ அதை வாங்கிக்கோ."

"இருக்கிற தொல்லை போதாதாக்கும்! ஆளுக்கொரு பக்கமா காலையிலே போனா ராத்திரிதான் வர்றோம். வயசான உங்கம்மாவை – நகர வாழ்க்கைன்னா என்னன்னே தெரியாத பட்டிக்காட்டை எப்படி வெச்சுக்கிறது?"

# மெய்சிலிர்த்த அனுபவத்தைப் பகிர்ந்து கொள்ளுங்கள்!

ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் ஏதாவது ஒரு முறையாவது மெய்சிலிர்த்த ஆன்மீக அனுபவம் ஒன்று நிச்சயமாக இருந்தே தீரும். கோயிலிலோ, பூஜை அறையிலோ அல்லது ஓர் ஆன்மீக குருவைச் சந்தித்த போதோ நீங்கள் அவ்வாறு மெய் சிலிர்த்திருக்கலாம். இயற்கையின் பேரழகை தரிசித்த போதோ, ஓர் உயர்ந்த கலைஞரின் இசை அல்லது பஜனை நிகழ்ச்சியின் போதோ கூட அவ்வாறு உணர்ந்திருக்கலாம்.

அப்படிப் பெற்ற உங்கள் அனுபவத்தைப் பலரோடும் பகிர்ந்து கொள்ள வேண்டாமா? சுருக்கமாக ஒரு இன்லண்ட் லெட்டரில் எங்களுக்கு எழுதியனுப்புங்கள்; படிப்போரும் மெய் சிலிர்க்கட்டும்.

சிறப்பான அனுபவங்கள் தொடர்ந்து பிரசுரமாகும்.

முடிவு தேதி : 26.12.95

– ஆசிரியர்.

---

"பட்டிக்காடுதான். இல்லைங்கலை. உன் புருஷனும் அந்தப் பட்டிக்காடு பெத்தெடுத்த பட்டிக்காடுதான். மறந்துடாதே!"

"அதுக்கென்ன பண்றது? இரண்டு புள்ளை பெத்ததுக்கப்புறம் எங்க விட்டுட்டுப் போறது?"

மூக்கைச் சிந்த ஆரம்பித்தாள். நேரமாக ஆக ஏகத்துக்குக் கத்தினாள். அலறினாள். கூட இருந்த பிள்ளைகள் இரண்டு அம்மாவிடம் ஒட்டிக் கொண்டன. அப்பாவை வில்லனைப் பார்ப்பது போல் பார்த்தன. அவனுக்கு வெறுத்துப் போனது. அழுகை... சே... பெண்களின் ஆயுதம். ஆகாத்தியம் செய்தாவது அநியாயங்களைச் செய்ய நிர்ப்பந்தப்படுத்துவது!

அடுத்த நாளே வசந்தி சுறுசுறுப்பானாள். அண்டை அயலில் விசாரித்து ஒரு ரியல் எஸ்டேட்காரனை வரவழைத்தாள். அவனோடு ஆட்டோவிலே போய் நிலத்தைப் பார்த்து விட்டு வந்தாள். பொன்னேரிக்குப் பக்கத்தில் இரண்டு பிளாட் நாற்பதாயிரம் என்று பேரம் பேசினாள். அவனிடமே இந்தக் கிராமத்து நிலம் எவ்வளவு போகும், யாரை அணுகலாம் என்ற தகவலெல்லாம் சேகரித்தாள். இரண்டு நாள் மும்முரத்திற்குப் பிறகு அவனருகில் வந்தாள்.

"யோசிச்சுப் பாருங்க. நமக்குன்னு ஒரு பிளாட் கிரவுண்டாவது இருந்தாத்தானே நாளைக்கு ஏதாவது லோன் போட்டாவது வீடுன்னு எதுவும் கட்ட முடியும்? அதுக்காக உங்கம்மாவை வச்சிக்கிட்டாத்தான் ஆச்சு அப்படீங்கிறது வியாபாரம் மாதிரியில்ல இருக்கு? யோசிச்சுப் பாருங்க. நாம இருக்கிற இந்த நிலைமையிலே உங்க அம்மாவைக் கொண்டு வந்து வச்சுக்க முடியுங்களா?"

அவன் அவளை அர்த்தத்தோடு பார்த்தான்.

"அதனாலே என்ன சொல்றேன்னா, நீங்க ஊருக்குப் போங்க. உங்க அம்மாகிட்டே நைஸா பேசி 'அங்கே வந்தா கஷ்டம், நீ இங்கேயே இருக்கறதுதான் நல்லது'ன்னு பேசிப் புரிய வைங்க. வேணும்னா கிராமத்திலே மணியக்காரர்கிட்டேயே அம்மாவைப் பார்த்துக்க நாங்க மாசம் ஏதாவது பணம் அனுப்புறோம்னு பேசி உதவிக்கு ஆளை அரேஞ்ச் பண்ணிட்டு வாங்க. ஆனா மறக்காம அந்த நிலத்தை வித்து நமக்குக் காசு கிடைக்கிற மாதிரி வழி பண்ணிட்டு வாங்க. வழக்கம் போல் வழவழா கொழகொழான்னு பேசாதீங்க."

"அம்மா மட்டும் வேண்டாம். அவ காசு மட்டும் வேணுமா?"

"கிளிப்பிள்ளை மாதிரி சொன்னதையே சொல்லிக்கிட்டிருக்காதீங்க. வசதியுள்ள உங்க அண்ணாக்களே பேசாதிருக்கும் போது பியூன் வேலை பார்க்கிற நாம எதுக்கு அலட்டிக்கணும்?"

வாசற்புறம் சப்தம் கேட்டது. இருவரும் திரும்பிப் பார்த்தனர். அம்மாதான். வயதானாலும் அதே வேக நடை, சுறுசுறுப்பு. என்றைக்குமே அவள் பருமனென்று இருந்தது கிடையாது. இப்போது மேலும் இளைத்திருந்தாள். உடம்பெல்லாம் சுருக்கம்.

"வந்திட்டியாடா ராஜா... நீ வந்தேன்னு ஆள் வந்து சொன்னான். நிலத்திலே குத்தகைக்காரனை பார்க்கப் போயிருந்தேன். அதான் வர நேரமாயிடுச்சு."

சுற்று முற்றும் பார்த்தான். அவன் மௌனமாக 'இல்லை'யென்று தலையசைத்தான்.

"பசங்களைப் பார்த்து எவ்வளவு நாளாகுது? சின்னவளும் பள்ளிக்குப் போறாளா? அவ நல்லாப் படிப்பாளே! அவளுக்கு அவ தாத்தா முகஜாடை. முகத்திலே அதே புத்தி சாலித்தனம். முதலாமவள் உன்னை மாதிரின்னு நினைக்கிறேன். சராசரியா இருப்பா.

## 'சுருக் நறுக்' என்றொரு சொல்லோவியம் – 10

### மனைவி/கணவன் என்பவர்....

**கணவன் அல்லது மனைவி என்பவர் எப்படியெப்படியெல்லாம் இருக்க வேண்டும் என்று பலரும் பல பட்டியல்களைக் கொடுத்து விட்டார்கள்.**

**வாழ்க்கைத் துணை நலன் (கணவன் அல்லது மனைவி) எப்படியிருக்க வேண்டும் என்பது பற்றி நீங்களும் புகுந்து விளையாட வேண்டியதுதானே! உங்களின் சிந்தனையைக் கீழுள்ள கூப்பனில் சுருக்கமாக எழுதி 18.12.95க்குள் எங்களுக்கு அனுப்பி வையுங்கள்.**

**பிரசுரமாகும் ஒவ்வொரு சொல்லோவியமும் ரூ. 50 பரிசு பெறும். 26 வாரப் போட்டியில் அதிக முறை பரிசு வாங்கும் ஒரு திறமைசாலிக்கு ஒரு மெகா பரிசும் காத்திருக்கிறது.**

**போட்டி முடிவுகளில் ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.**

**– ஆர்.**

மனைவி/கணவன் என்பவர்........................
..................................................................
..................................................................
..................................................................
..................................................................

பெயர் : ...................................................
முகவரி : .................................................
..................................................................
..................................................................
..................................................................

என்ன, சரிதானே?''

அம்மா எத்தனை கெட்டிக்காரி! சின்னக் குழந்தையாய் இருக்கும்போதே பார்த்த குழந்தைகளைப் பற்றி எப்படி தீர்க்கதரிசனமாய்க் கூறுகிறாள்? இந்த சராசரியால் உன்னிடம் வியாபாரத்தனமாகப் பேச முடியுமா அம்மா?

"நம்ம வீட்டுக்குப் போகலாமா அம்மா?''

"வேணாண்டா ராஜா. அந்த வீடு நடுக்கட்டு, பின்பக்கம் எல்லாமே சரிஞ்சு விழுந்துடுச்சு. மிச்சம் இருக்கிறது முன்கட்டு திண்ணைதான். திண்ணையிலே துணியை மறைப்பா கட்டிக்கிட்டு நடத்திக்கிட்டு இருக்கேன்.''

அவன் கண்கள் கலங்கின.

"ஏம்மா.. திண்ணையிலேயா குடும்பம் நடத்தறே. இது பத்தி லெட்டர் ஏன் எழுதவேயில்லை?''

"எழுதினா உனக்கு அனாவசிய கவலைதானே ராஜா. ஒரு ஆளுக்கு இது போதாதா?''

மணியக்கார ஐயர் நாசூக்காக வாசற்பக்கம் வேலையிருப்பது போல் நழுவிப் போனார். அம்மா சுற்று முற்றும் பார்த்தாள்.

''மணியக்கார ஐயர் எழுதிய கடுதாசி கிடைச்சுதா?''

மெதுவாகத் தலையசைத்தான்.

''நான் வேண்டாம்னாலும் கேட்கலை அந்த ஐயர். நான் சௌரியமாத்தான் இருக்கேன். கொஞ்சம் வயசாயிடுச்சு. மெதுவா செய்யறேன். அவ்வளவுதான். இவரு டெல்லியோட புள்ளைகிட்டே போறார்ங்கிறதாலே என்னையும் உங்ககிட்டே அனுப்பத் திட்டம் போடறாரு.''

"...''

''உங்களாலே என்னை வெச்சுக்க முடியுமா? நான் பட்டிக்காடு. டவுன்வாசம் எனக்கு சரிப்படுமா? நீங்க எல்லாம் ஓடுற ஆளு. நானோ நொண்டிக் கிழவி. ஆனாலும் அவர் சொல்றப்ப என் பசங்களாலே என்னை வெச்சுக்க முடியாதுன்னு சொன்னா உங்களுக்கெல்லாம் இல்லே கௌரவக் குறைச்சல்? அதனாலே, 'போடுங்க' அப்படின்னேன்.''

"......''

"அவர் எதிரே என்னைக் கூப்பிடற மாதிரி கூப்பிடு. நான் முடியாதுன்னு அடிச்சுப் பேசிடறேன். அண்ணன்களெல்லாமும் உனக்கு லெட்டர் போட்டு உன்னை அனுப்பி என்னை கூப்பிடச் சொன்னதா சொல்லு. நான் தட்டிக் கழிச்சுடறேன். என் காலம் ஆனதுக்கப்புறம் அந்த நிலம் உனக்குத்தான். எந்தத் தாய்க்கும் கஷ்டப்படற பிள்ளைதான் ராஜா உசத்தி. சரி... நான் சொன்ன மாதிரி மணியக்காரர் எதிரே பேசறியா?''

அவன் தலைகுனிந்து நின்றான்.



# புது மனைவி

"ராகவன்... போன்கால்!"

ஹெட்கிளார்க் அழைத்தார்.

எதிர்முனையில் பேசிய அவன் மனைவி வசந்தியின் குரலில் உற்சாகம் கொப்பளித்தது.

"நான்தான்... தெருக்கோடி 'பூத்'திலேருந்து பேசறேங்க. கோயமுத்தூர்லேருந்து அப்பாவும் அம்மாவும் வந்திருக்காங்க..."

"ம்.... ம்..."

"என்னங்க, குரலில் சுரத்தே இல்லை?"

"ஒண்ணுமில்லே... இங்க ஹெவி ஒர்க். அதுதான்... அது சரி, என்ன இவ்வளவு தூரம் திடீர் பயணமாம்?"

"அப்பாவுக்குக் கொஞ்சநாளா வயத்து வலியாம். டாக்டர்கிட்ட கூட்டிட்டுப் போகணுமாம். அப்புறம் சில ரிலேடிவ்ஸ், பிரண்ட்ஸ் வீட்டுக்குப் போகணுமாம். அதனால ஒரு அரை நாள் லீவு போட்டுட்டு வர முடியுமான்னு கேட்கச் சொன்னார்."

'உங்கப்பா அம்மாவுக்கு ஊர் சுத்திக் காட்ட நான் பியூனா இல்லை டூரிஸ்ட் கைடா?' என்று மனதுக்குள் குமைந்த ராகவன், புது மனைவியுடன் நேரடி மோதலைத் தவிர்க்க எண்ணி தேனாய்ப் பேசினான். "ஸாரிம்மா... இன்னிக்கு பார்த்து ஹெட் ஆபீஸ் இன்ஸ்பெக்ஷன்! இன்ஃபாக்ட் நான் வீட்டுக்கு வரவே ராத்திரி ஒன்பது மணியாயிடும்."

"பரவாயில்லை... நானே பாத்துக்கிறேங்க. நீங்க கவலைப் படாம வாங்க!" என்று சொல்லி போனை வைத்தாள் வசந்தி.

திருமணமானதிலிருந்து மூச்சுக்கு மூச்சு 'எங்கப்பா, எங்கம்மா' என்று பெற்றோர் புராணம் பாடி போரடித்தாள் வசந்தி. ஒரே பெண்ணான அவளுக்கு அவர்கள் மேல் அவ்வளவு பாசமாம்! இதனால் ஏகமாக எரிச்சலடைந்திருந்தான் அவன். எனவே இப்போது ஏகப்பட்ட வேலை என்று புளுகி ஒதுங்கிக் கொண்டான். 'அவர்கள் நன்றாகக் கஷ்டப்படட்டும்!' என்று ஒரு குரூரமான எண்ணம் ஏற்பட்டது.

ஆபீஸ் விட்டதும் 'உட்லண்ட்ஸி'ல் ஆர அமர டிபன், 'தேவி'யில் இங்கிலீஷ் படம் என்று இரவு ஒன்பதரை மணிக்கு வீடு திரும்பியவனுக்கு அதிர்ச்சி...



சோபாவில் அமர்ந்திருந்தது அவனுடைய அப்பாவும் அம்மாவும்!

"ஏண்டா, துரைக்கு அம்மா, அப்பாவைக் கவனிக்கக்கூட முடியாதபடி அவ்வளவு ஆபீஸ் வேலையோ...? பாவம், வசந்தி! மெட்ராஸுக்குப் புதுசுன்னாலும் அசராம, முகம் கோணாம, ஆட்டோ ரிக்ஷாவிலே எங்களை எல்லா இடத்துக்கும் கூட்டிட்டுப் போனா... தங்கமான பொண்ணுடா... சரி சரி உனக்காகக் காத்துக் கிட்டுருக்கா... போய்ச் சாப்பிடு" என்றார்.

சமாளித்துக் கொண்ட ராகவன் "ஆபீஸ்ல இன்னிக்கு பயங்கர ஒர்க்குப்பா... சரி... கோயமுத்தூர்லேருந்தா வந்தீங்க?" என்று கேட்டான்.

"ஆமாண்டா! மருதமலைக்கு ரொம்ப நாளா ஒரு வேண்டுதலை நிறைவேத்தாம இருந்தேன். அதனால மதுரைலேருந்து மருதமலை போயிட்டு, கோயமுத்தூர் வந்து பஸ்ஸைப் பிடிச்சு வந்தோம்..."

சாப்பிடும் போது 'உர்'ரென்று இருந்த ராகவன் பெட்ரூமில் எரிந்து விழுந்தான். "முண்டம், கோயமுத்தூர்லேருந்து வந்திருக்காங்கன்னு நீ சொன்னப்போ உங்கம்மா, அப்பாதான் வந்திருக்கிறதா நினைச்சுட்டேன். வந்திருக்கறது எங்கப்பா, அம்மான்னு தெளிவா சொல்லக் கூடாதோ?"

வசந்தி மிரண்டு விட்டாள். விழிகளில் கண்ணீர் எட்டிப் பார்த்தது.

"சாரிங்க... என் தப்புத்தான்... எனக்கென்னமோ உங்கப்பா அம்மா, எங்கப்பா அம்மான்னு பிரிச்சுப் பேசணும்னு தோணலீங்க... எனக்கு ரெண்டு பேரும் ஒண்ணுதான்!..." என்று விசும்பியவளைத் தன் பக்கம் திருப்பிய ராகவன், இறுக அணைத்தான்.

- ஆர். ரகோத்தமன்

## கண்ணன் தந்த குழல்

அகாடமி அரங்கில் செளராஸியா வாசித்துக் கொண்டிருந்தார். ஏஸி குளிரில் தம்புரா சுருதி தளர்ந்துவிட்டது. தந்தி முடுக்குவதற்குள் தபலா சுருதி போய்விட்டது. அதைத் தட்டி கொட்டிச் சரிசெய்யுமுன் செளராஸியா சொன்னார் : "வாத்தியக் கலைஞர்கள் தங்கள் நேரத்தில் பாதியை சுருதி சேர்க்கவே செலவழித்துவிட நேர்கிறது. ஆனால் கிருஷ்ண பரமாத்மா ஓர் அற்புதமான வாத்தியத்தை உருவாக்கினார். சுருதி சேர்க்கின்ற பிரச்னையே இல்லாமல் எளிய மூங்கிலில் புல்லாங் குழல் உருவாக்கிவிட்டார்" என்றார். அன்று கச்சேரி கேட்ட நமக்குத் தோன்றியது கிருஷ்ண பரமாத்மா புல்லாங்குழலை மட்டுமா உருவாக்கி னார்? அதை வாசிக்க ஓர் அற்புதக் கலைஞராக செளராஸியாவையும் அல்லவா படைத்திருக்கிறார்!

## ஹவாயன் கிடார்!

மகாராஷ்டிர லலித கலாநிதி நடத்திய குளிதாஸ் சங்கீத சம்மேள னில் மேற்படி நிகழ்ச்சி என்றால் அஷோக் லேலண்ட் ஃபைனான்ஸ் - முத்ரா இணைந்து நடத்திய கலைவிழாவில் கோட்டு வாத்தியம் ரவிகிரண் ஒரு புதிய வாத்தியத்தை அறிமுகப்படுத்தினார் : ஹவாயன் கிடார்! காதுக்குப் படுசுகம். அவருடன் அவர் மனைவி ஜெயந்தி கிரண் வீணை. ஜுகல்பந்தியில், நவரசங்களை உணர்த்தும் ராகங்களைத் தேர்ந் தெடுத்து வாசித்து அமர்க்களப்படுத்தி விட்டார்கள்! கச்சேரி முடிந்த போது நமக்கு மனமெல்லாம் அற்புத ரசம்தான்!



## பேச்சாவர்த்தனம்!

அசோக் லேலண்ட் ஃபைனான்ஸ் - முத்ரா வழங்கிய நிகழ்ச்சிகளில் மட்டு மின்றி அவர்கள் ராம ராவ் கலாமண்ட பத்தை அலங்கரித்திருந்த அழகிலும் உயர்ந்த ரசனை பளிச்சிட்டது. கச்சேரி கேட்டதுடன் - பார்த்த அனுபவமும் இனிமை. ஆனால், அந்தச் சூழலையும் குலைக்கும் கொடுமையாக, ஒரு தனி யாவர்த்தனத்தின்போது, உரத்த குர லில் பேச்சாவர்த்தனம் நடத்தித் தள்ளிவிட்டார்கள், ஒரு பத்தி ரிகை ஆசிரியரும் ஒரு பெண் மணியும். பத்திரிகை பேசுகிறதே, போதாதோ!



* டி.வி.எஸ் : காபி டபுள் ஸ்ட்ராங்!



* செளராஸியா : கண்ணனுக்கு நன்றி!

## தொடரும் போட்டி!

பேச்சுக்கும் பாட்டுக்குமான போட்டி, சீசன் முடிய துரத்தும் போலி ருக்கிறது. கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் துவக்க விழாவில் மேடை நிறைய பேச்சா ளர்கள். பெரும்பாலும் சம்பிரதாயமான 'bore'!

தாம் பேச்சிலும் சளைத்தவரல்ல என்று ஆங்கில ஏற்புரை யில் நிரூபித்தார் இசைப் பேரொளி விஜய் சிவா.

மறுநாள் பாம்பே ஜெயஸ்ரீ, டி.வி. சங்கரநாராயணன் கச்சேரி கள் தொடங்கு முன்பும் கலைஞர்களை அறிமுகப்படுத்தி சபா நிர்வாகி பேசினார்! அந்த நேரத்தில் கூடுதலாக ஒரு பாட்டுக் கேட்கலாமே ஐயா!

ஐந்து மணி கச்சேரியில் ஜெயஸ்ரீ பாடிய பூர்வி கல்யாணி ராகத் தையே ஏழு மணி கச்சேரியில் டி.வி.எஸ். எடுக்க, ரசிகர்களிடையே பயங்கர சலசலப்பு! தொடர்ந்து வந்த 'காபி' ராகம் டபுள் ஸ்ட்ராங்!



அதை ரசிப்பதா அல்லது அதை கும் ரசிகர்களை ரசிப்பதா என்று பமே வந்துவிட்டது!

எம்.எஸ்.ஜி., உமையாள்புரம் ராமன், நாகராஜன் பக்கவாத்தியக் டணியுடன் டி.வி.எஸ். சரவெடி சுவரம் பாட, வெளியே நிஜமாகவே வெடி - ஐயப்பன் பூஜைக்கும் தானே சீசன்!

## மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் உள்ளே :

பதினைந்து ரூபாய் இருக்கை பலத்த சர்ச்சை -

"இது பந்துவராளியா? பூ கல்யாணியா?"

- பாடிக் கொண்டிருந்த



* ரவிகிரண் - ஜெயந்தி : அற்புத ரசம்!

# ாட்டுக் கச்சேரியும் பேச்சுக் கச்சேரியும்!



லோகநாத சர்மா. இடைஞ்சலான குரலை ரொம்ப முயற்சி எடுத்துப் பாலில் ஊற வைத்துப் பதப்படுத்தியிருக்கிறார்.

பதினைந்து ரூபாய்க்கு அவர் பாட்டுடன் 'டான்ஸை'யும் காண முடிந்தது. அவ்வளவு தூரம் உடம்பு ஆடு ஆடென்று ஆடுகிறது மனித ருக்கு....!

இதைக் கண்டுகளிக்காமல் ஒரு ஐ.ஓ.பி. ஆசாமி, இந்தியன் எக்ஸ்பிரஸின் இம்பிரிண்ட் வரை கர்மசிரத்தையாக மனனம் செய்து கொண்டிருந்ததும் வயலின் மீரா அணிந்திருந்த வயலட் பட்டுப்புடைவையைக் காட்டி "நன்னாருக்கு இல்லை?" என்று ஒரு மாமி தம் கணவரை அதிர்ச்சிக்கு உள்ளாக்கியதும் திருச்சி ஸ்வரண்சிங்கின் திடீர் டிரான்ஸ்ஃபர் பற்றி ஒருவர் அங்கலாய்த்துக் கொண்டிருந்ததும் காவலுக்கு (ஏவலுக்கு?) நின்றிருந்த ஸ்கவுட் மாணவர்கள் ஊர்மிளா ஆராய்ச்சியிலிருந்ததும் சைட்-லைட் தகவல்கள்.

## மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் - வெளியே :

**ப**லப்பல விளம்பர பேனர்கள் ஸ்பான்சர்களின் சாகசங்கள். கேஸட் ஸ்டாலில் நல்ல வியாபாரம் - உண்ணி கிருஷ்ணனும் செம்மங்குடியும் சௌம்யாவும் வேகமான விற்பனை. விவா பாட்டில்கள் நிறைந்த கடை பார்க்க அழகாக இருந்தது. ("சாம்ப்பிள் பாக்கெட் கிடையாதா?" - கார் வைத்திருக்கும் ஒரு கனவான்.)

கான்ட்டீனில் காப்பி தரமாக இருக்கிறது. (கொஞ்சம் ஷுகர் குறைச்சுக்கலாம் மாஸ்டர்.)

"இன்னிக்கு ஒண்ணும் சரியில்லை. நாளன்னைக்கு வியாபாரம் பிச்சிக்கும்" என்று கவுண்ட்டர் நபர் யாரிடமோ சொல்லிக் கொண்டார்.

அவர் சொன்ன 'நாளன்னைக்'குப் பாட இருந்தவர் சாருமதி ராமச்சந்திரன்.

**— நமது நிருபர்கள்**

முத்துராஜன்

# நெஞ்செல்லாம் நீ

விடிகாலைப் பனிமூட்டங்களை முண்டாசு கட்டிக் கொண்டு தொலைவில் தெரிந்த மேற்குத் தொடர்ச்சி மலை முகடுகளைப் பார்த்தவாறு வாசல் திண்ணையில் உட்கார்ந்திருந்த என் கையில், 'புடி பொன்னு' என்றபடி காப்பி தம்ளரை தந்துவிட்டுப் போனாள் அத்தை.

எதிர்த்திண்ணையில் உட்கார்ந்திருந்த மாமா நாலே மடக்கில் காப்பியை முடித்துக் கொண்டு துண்டால் மீசையை வழித்தபடி பேச்சைத் தொடர்ந்தார். சங்கதி அதேதான்... நேற்று இங்கே வந்ததிலிருந்து ராத்திரி தூங்கும் வரை மாமா என் காதில் பாராயணம் பண்ணிக் கொண்டிருந்த சங்கதி....

'ஓம்பது சென்டு இடம், ஓட்டு வீடு, பத்து தென்னை, கட்டிப் புடிக்கிற கணக்கா புளிய மரம் மூணு... புளிய மரம் மட்டும் ஒவ்வொண்ணும் இன்னைய தேதிக்கு என்ன விலை போகும் தெரியுமா பொன்னு? மூணாயிரத்துக்கு மேலேதான்... இதல்லாம ஜாதி மாமரம் ரெண்டு, எல்லாத்தையும் வித்து காசு பண்ணிக்கிட்டு மகள் வீட்டோட போய்ச் சேர்ந்திடலாம்னு இருக்காரு பக்கத்து வீட்டுப் பெரியவரு....'

தலையாட்டிக் கொண்டிருந்தேன்.

"பெரியவரு ஒண்ணேமுக்கால் லட்சம் விலை சொல்லிக்கிட்டிருக்காரு. நமக்கானால் ஒண்ணரைக்கே முடிச்சூடலாம். குறுக்காலே இருக்கிறது முள்ளு வேலி மட்டும்தான். அதை எடுத்திட்டா போதும், நம்ம வீட்டோட ஏகமா சேர்ந்துடும். அறுவடைப் பணம், கோவாப்பரேட்டிவ் பாங்கு லோன் அப்படி இப்படின்னு ஒரு லட்சத்துக்கு மேல் நானே ஒப்பேத்திடுவேன். மீதிக்குத்தான் வழி தெரியலே...." மோவாயைத் தடவியபடி மாமா என் முகத்தைப் பார்த்தார்.

பக்கத்து வீட்டை வளைத்துப் போட மாமா படுகிற இந்த அவஸ்தை எனக்கு விசித்திரமாக இருக்கிறது. இது என்ன அநியாய ஆசை! அறுபதைத் தாண்டிய வயதில், பிள்ளை குட்டி இல்லாத மாமாவுக்கு ஆஸ்தி சேர்க்கிற ஆசை அவசியம்தானா... அதுவும் கடன் வாங்கி கஷ்டப்பட்டு... எந்தப் பிள்ளை சுவீகாரம் செய்ய இந்த அவதியெல்லாம்...?

இந்தக் கேள்வியை நான் கேட்கப் போனால் அது அபசாரமாக இருக்கும்.

அம்மா இருந்தவரை தன் தம்பிக்காரனை நினைத்து அவ்வப்போது அங்கலாய்த்துக் கொள்வாள். 'குருவி மாதிரி சேர்த்துச் சேர்த்தே பழகினவன்டா அவன். ஒம்பதை பத்தா, தொண்ணூறை நூறு ஆக்குவதிலேயே குறியா இருப்பான். அந்தப் பாவி தெய்வம், அவனுக்கு புத்திரபாக்கியம் தராமல் விட்டுட்டார். உன்னைத்தான்டா அவன் புள்ளையா நினைச்சிருக்கான். நீதான் கடைசி வரை அவனுக்கு ஆதரவா இருக்கணும்.'

"ஏம் பொன்னு, நான் பாட்டுக்குப் பேசிட்டிருக்கேன். நீ வாயே திறக்காம புள்ளையாராட்டம் உட்கார்ந்திருந்தா எப்படி...? நீ சரின்னு சொன்னா பெரியவர் கிட்டே இன்னைக்கே பேசி முடிச்சுடலாம்."

"சரி மாமா, நான் ஆச்சு!" என்று ஊக்கமாக பதில் சொல்ல எனக்கும் ஆசைதான். மாமாவுக்குக் கொடுத்தால் எங்கே போய்விடப் போகிறது. எல்லாம் வரவு கணக்கில்தான் சேரும், தீவனமாய்த் தந்து பாலாய்க் கரந்து கொள்கிற மாதிரி. ஆனால் தென்பு வரவில்லை. காரணம் என் பொருளாதாரமும் தற்சமயம் க்ஷீண தசையில் இருக்கிறது. உத்தியோகம் பார்க்கிற மகாநகரத்தில் லட்சங்களைக் கொட்டி ஃப்ளாட் வாங்கி ஆறுமாதம் கூட ஆகவில்லை. அந்தத் தளர்ச்சி தீரவே இரண்டொரு வருஷம் ஆகும் போல தெரிகிறது. ஃப்ளாட்டுக்காக இருபது பவுனை தூக்கித் தந்த என் மனைவி சுலோ, அதன் பிறகு முழுசாக சிரித்துப் பார்க்கவில்லை. இருபது பவுனை மீட்டுத் தந்து சுலோ முகத்தில் மந்தகாசத்தை வரவழைப்பதுதான் இப்போது என் முக்கிய

விசாரம்.

உள்ளேயிருந்து அத்தை குரல் கொடுத்தாள். "பொன்னு, நீ வந்து குளிச்சு சாப்பிடப்பாரு... உங்க மாமாவுக்கென்ன இன்னைக்குப் பூரா வேணும்னாலும் இந்த ஒம்பது சென்டு, பத்து தென்னை புராணத்தையே பாடிகிட்டிருப்பாரு. வரவர அவரு தலையிலே பித்தம் ஏறிக்கிட்டு வருது...."

"இவ ஒருத்தி விவரம் புரியாதவ... ஆக்கி அரிச்சுப் போட்டுட்டா எல்லாமே நெறைஞ்சு போனதா நெனைப்பு இவளுக்கு... சரி சரி நீ உள்ளே போய் குளிச்சுட்டு வா பொன்னு."

"என்ன மாமா இது, ஊருக்கு வந்துமா பாத்ரூம் குளியல். நம்ம ஊர் ஆத்துலே முழுகி எழுந்து எத்தனை நாள் ஆச்சு. வாங்க மாமா ஆத்துக்கே போய் குளிக்கலாம்."

"ஆத்துலே எங்கே தண்ணி ஓடுது, பொன்னு? மணல்லேதான் புரண்டு வரணும். நாங்களே ஆத்துக் குளியலை மறந்து ரொம்பக் காலமாச்சு."

"இல்லையே நேத்து பஸ்லே வரும்போது பார்த்தேனே. ஆத்துலே ஜனநடமாட்டம் தென் பட்டுதே."

"அது சலவைக்காரங்களா இருக்கும் இல்லே ஊத்துத் தோண்டிக் குளிக்கிறவங்களா இருக் கும். கோவண அகலத்துக்கு அங்கே கொஞ்சம் இங்கே கொஞ்சமா ஓடிட்டிருக்கும். அதிலெல் லாம் உன்னாலே குளிக்க முடியாது."

"ஏதோ இருக்கிற தண்ணியிலே உடம்பை நனைச்சு ஆசையை தீர்த்துக்கறேனே...." என்று



## நெல்லை துணுக்ஸ்

### ஜோக் :

**"என்ன இந்தச் சிலை மட்டும் உடைபடாம அப்படியே இருக்கு?"**

**"அதுவா இது வெள்ளைக்காரன் சிலை எந்தச் சாதின்னு தெரியலையாம்!"**



### நூதன திருட்டு!

பஸ் நிலையங்களில் இப்போது ஒரு வகையான திருட்டு நடைபெறுகிறது. ஒரு டியூபில் மோசமான வகையில் வாசனை வரும் ஒரு பொருளை வைத்து யாருடைய முதுகு, தோள் முதலிய பாகங்களிலாவது அடித்து விட வேண்டியது. "சார் உங்க சட்டையில் ஏதோ அசிங்கமாக ஒட்டி இருக்கிறது" என்று சொல்ல வேண்டியது. அவர் அதனைக் கழுவ வேண்டித் தம் கையில் உள்ளதைக் கீழே அல்லது அருகில் வைக்கும் போது பொருள் அபேஸ்!

### இது எப்படி இருக்கு?

ஒரு வீட்டின் சுவரில் வெள்ளை அடித்து, "இங்கே விளம்பரம் எழுதாதே!" என்று எழுதி வைத்தனர். மறுநாள் அந்தச் சுவரில், யாரோ, "சரி எழுதவில்லை போதுமா" என்று எழுதி வைத்திருந்தனர்.

**– எஸ். ஆர். ஸ்வாமி, திருநெல்வேலி – 11.**

### நூத்துக்கு ஒருத்தராவது....

பாளை கதீட்ரல் பள்ளி அருகே, 'அலெக்ஸ் ஸ்டோர்ஸ்' என்ற கடை வைத்திருக்கும் அலெக்ஸ் ஒரு வித்தியாசமான மனிதர். அவர், கடையின் இரு கதவுகளிலும் "பீடி, சிகரெட் கிடையாது" என்று எழுதி வைத்துள்ளார். "நீங்கள் விற்காவிட்டால், ஒருவருமே புகைக்காமல் இருப்பார்களா என்ன?" என்று கேட்டால், "இதைப் பார்க்கிறவங்க எல்லாரும் மாறிடுவாங்கன்னு சொல்ல முடியாது. ஆனா நீங்க இதைப் பார்த்துட்டு எங்கிட்ட வந்து கேட்கிறீங்க. உங்க மனசுல ஒரு பாதிப்பை ஏற்படுத்தியதால்தானே இப்ப வந்து கேட்டீங்க. எப்படியும் பார்க்கிறவங்கள்லே நூத்துக்கு ஒருத்த ராவது திருந்துவாங்கன்னு நினைக்கிறேன்" என்று நம்பிக்கையுடன் கூறுகிறார்.

### ஊர் சுற்றும் வாலிபன்!

"மக்கள் என் பக்கம், உழைப்பாளி, (நெல்லை), மாவீரன்" – இவை திரைப்படப் பெயர்கள் மட்டும் அல்ல, நெல்லையில் ஓடும் சில தனியார் நகரப் பேருந்துகளின் பெயர்களும் கூட. இங்குள்ள ஒரு ஆட்டோவின பெயர் 'ஊர் சுற்றும் வாலிபன்'.

**– லம்போதரன், கீழ்நத்தம்.**

**('நெல்லை துணுக்ஸ்' இந்த இதழுடன் நிறைவடைகின்றன. 'நெல்லைச் சீமை பயோடேட்டா' எழுதிய கே.ஜி.எஸ். கோவிந்தன் (கிருஷ்ணாபுரம்) சிறப்புப் பரிசாக ரூ. 100/- பெறுகிறார்.)**

நான் தொடர்ந்து வற்புறுத்த, மாமாவும் ஒப்புக் கொண்டார்.

**மா**மா கையில் சோப்பு டப்பா எடுத்துக் கொள்ள, அத்தை மரப் பெட்டிக்குள்ளிருந்து எடுத்துத் தந்த ஈரிழைத் துண்டை தோளில் போர்த்திக் கொண்டு ஆற்றுக்குக் கிளம்பினோம். அம்மன் கோயில் வளைவு திரும்பி கடைவீதி முனைக்கு வந்தபோது, பஸ் நிறுத்தத்துக்கு முன்னால் புதிதாய் உருவாகிக் கொண்டிருந்த அந்தக் கட்டடம் கண்ணில் பட்டது.

"ஏன் மாமா, இது சங்கரிப்பாட்டி வீடு இல்லையா? இது என்ன புதுசாய்க் கட்டடம்?"

"சங்கரிப்பாட்டி வீடேதான்... சரிதான், உனக்கு அந்தக் கதையெல்லாம் தெரியாதில்லையா.... பாட்டி கண்ணை மூடி ஒரு வருஷத்துக்கு மேலேயே ஆச்சு. ஆவி பிரிஞ்சு ஒரு முழுப்பகல் முடிஞ்ச பின்னேதான் விஷயம் வெளியே தெரிஞ்சது. அப்புறம் நடுஜாமத்துக்கு மேலே ஊர்க்காரங்க சேர்ந்து எடுத்துப்போய் ஆத்து மேட்டுலே அடக்கம் பண்ணினோம். உனக்குத்தான் தெரியுமே, கிழவி யாரோடவும் அண்டாமல், அடுக்காமல் புதையல் காக்கிற பூதம் மாதிரி இந்த வீட்டுக்குள்ளே ஒண்டியா வாழ்ந்த கதை."

மாமா சொன்னது சரிதான். புதையல் காக்கிற பூதம் மாதிரி ஒரு அமானுட பின்னணியில் தான் சங்கரிப்பாட்டி வாழ்ந்து வந்தாள். மிலிட்டரியில் இருந்த பாட்டியின் கணவர் இளம் வயதிலேயே யுத்தத்துக்கு பலியாகிப் போனாராம். புருஷனின் மரண அறிவிப்பைச் சுமந்து வந்த சீருடை பார்சலை பார்த்ததிலிருந்து பாட்

# அவசர பந்தன மகா ஜெயாபிஷேகம்!



* கோபுர சாரம் பிரிக்கும் முன்னரே முடிந்துவிட்ட கும்பாபிஷேகம்!

திருநாகேஸ்வரம் நாகநாதசுவாமி கோவில் கும்பாபிஷேகம், ஜெ.வுக்காக அவசர அவசரமாக, அரைகுறையாக நடத்தி முடிக்கப்பட்டது தெரியும். உள்ளூர் மக்கள், கோவில் அதிகாரிகளின் அதிருப்தி ஒருபுறம் இருக்க, இன்னொரு விஷயம் ஒட்டு மொத்தமாக முகம் சுளிக்க வைத்து விட்டது!

திருப்பணி செலவுகளுக்காக ரூபாய் முப்பது லட்சம் எஸ்டிமேட் போடப்பட்டு, அதில், அரசின் பங்காகப் பதினொரு லட்சம் அளிப்பதாக அறிவிக்கப்பட்டது. (அரைகுறையாகவாவது) திருப்பணிகள் முடிந்து, கும்பாபிஷேகமும் நடந்தேறிவிட்டது. இன்னும் அரசு ஐந்து பைசா கூடத் தரவில்லையாம்!

கும்பாபிஷேகத்தை ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட குன்னக்குடி வைத்யநாதனின் வயலின் கச்சேரிக்குக் கூட பணம் தர முடியாமல், இறுதியில் ஒரு குடந்தைத் தொழிலதிபர் தயவில்தான் செட்டில் செய்யப்பட்டிருக்கிறது.

ஜெ.வின் ராகு தோஷம் நீங்குவதற்காக நடத்தப்பட்ட கும்பாபிஷேகம் இது. கோவிலின் ராகுபகவான் சந்நிதிக்கு எந்த முக்கியத்துவமும் அளித்து, புதுப்பிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. கோபுரங்களுக்குப் போடப்பட்ட சாரம் கூட பிரிக்கப்படாத நிலையில் ஒரு கும்பாபிஷேகமா? ஆச்சரியத்தோடு கவலைப்படுகிறார்கள்.

திருநாகேஸ்வரத்திலிருந்து : **எஸ். சந்திரமௌலி**

---

டிக்கு சித்தம் பேதலித்துப் போனதாக என் சின்ன வயதில் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

குழந்தைகுட்டிகள் இல்லாத பாட்டிக்கு சொந்த பந்தம் என்று சிலபேர் இருந்தார்கள். ஆனால் யாரோடும் உறவோ, ஒட்டுதலோ வைத்துக் கொள்ளாமல் உலகத்தோடு பிணக்கம் கொண்டவள் மாதிரி, தன் அடைபட்ட வீட்டுக்குள்ளே தனி ஜீவனாகவே காலம் தள்ளினாள் பாட்டி. மாதமொருமுறை பென்ஷன் பணம் வாங்கி வர வாசல் படலை மூடிவிட்டு வெளியே போவது தவிர, வீட்டுக்கு வெளியே பாட்டியின் நடமாட்டம் தென்பட்டதில்லை.

வேலித் தடுப்புக்குள்ளே செடியும் கொடியுமாய் புதர் மூடிய வீட்டுக்குள்ளிருந்து புலம்பல் சத்தம் மட்டும் ஓயாமல் ஒலித்துக் கொண்டிருக்கும். அருவமான யாரையோ நோக்கிக் குரலெடுத்து அரற்றிக் கொண்டிருப்பாள். ஒரு சமயம் ஒப்பாரி, மறுசமயம் வசவு, பிறகு சாபமிடல். சிவந்து மெலிந்த பாட்டியின் உருவம் என் பார்வையில் பட்ட இரண்டொரு சந்தர்ப்பங்களில் நான் அந்த முகத்தில் பார்த்தது கோபமோ, சோகமோ வெறுப்போ அல்ல. மாறாக எல்லா உணர்ச்சிகளும் வெந்து தணிந்து போன மாதிரி ஒரு வெறுமை மட்டுமே.

"ஏன் மாமா, பாட்டி கைவசம் நிறைய காசு பணமெல்லாம் இருந்ததா பேசிக்குவாங்களே... அதெல்லாம் யாருக்குப் போய் சேர்ந்தது?" மடித்துக் கட்டிய வேட்டியும் மேல்துண்டு முண்டாசுமாக எனக்கு முன்னால் நடந்து கொண்டிருந்த மாமாவிடம் கேட்டேன்.

"அந்த வேடிக்கையை ஏன் கேக்கறே.... அது ஒரு தனி கதை. கிழவி சொத்திலே அவ சொந்தக்காரங்க சில பேருக்கெல்லாம் ஒரு கண் இருந்தது. ஆனால் கிழவி ஒரு காரியம் செஞ்சிருந்தது பாரு, அதுதான் அபாரம்....! சாவுச் சேதி தெரிஞ்ச உடனே நம்ம ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் விஸ்வநாதய்யர் இல்லே, அவரு இங்கே வந்தாரு. நம்ம ஜாதி ஜனங்கள் சில பேரை கூப்பிட்டுப் பேசி, அவங்க கையிலே ஒரு தொகையைத் தூக்கித் தந்தாரு. பாட்டி தன் ஈமச் செலவுகளுக்காக அவர் வசம் கொடுத்து வைச்சிருந்த பணமாம்.

"பத்து வருஷமாகறது இந்த பணம் என் கைக்கு வந்து. அதுக்கான வட்டியும் சேர்த்துத் தந்திருக்கேன். பாட்டி காரியங்களை எந்தக் குறையும் வைக்காமல் உங்க வழக்கப்படி பேஷா நடத்தி முடியுங்க'ன்னாரு. அது மட்டுமில்லை கிழவி எழுதி வைச்சுட்டுப் போயிருந்த உயிலையும் எடுத்து, ஐயரே எல்லோருக்கும் படிச்சுக்காட்டினாரு. அதன்படி தன் கழுத்து, காதில் இருக்கும் நகைகளை பொள்ளாச்சியிலுள்ள தன் புருஷன் வழி தங்கை மகளுக்குக் கொடுக்கச் சொல்லியிருந்தாள். வீடு, இடம், அப்புறம் ரொக்கப்பணம் இதெல்லாம் நம்ம ஊர் அம்மன் கோவிலுக்குச் சேர வேணும்னும் எழுதி வைச்சிருந்தாள். எப்படியோ இந்த கிறுக்கு கிழவி புண்ணியத்திலே நம்ம அம்மன் கோயிலுக்கு அதிர்ஷ்டம் அடிச்சுது. அதான், வீட்டை இடிச்சு அந்த இடத்திலே புதுசா மண்டபம் கட்டிக்கிட்டிருக்காங்க; கல்யாணம் காது குத்துன்னு ஊர்ஜனங்களுக்கு உபயோகமா.... மண்டபத்துக்குப் பேரு கூட சங்கரிப்பாட்டியோடதுதான்."

பாட்டியின் அந்திமப் படலம் மனதைத் தொட்டது. மலைப்பு ஊட்டியது. பித்துப் பிடித்த மாதிரி வெளியுலகத்துக்குக் காட்சி தந்த பாட்டி எவ்வளவு விவேகமாய்ச் செயல் பட்டிருக்கிறாள். தன் ஈமச் செலவுகளுக்குக் கூட அச்சாரம் தந்து வைத்திருந்த அந்த முன் யோசனை, தன் உடைமைகளை ஊருக்கு உப யோகமாய் விட்டுப் போயிருக்கிற அந்தப் பெருந்தனம், தன் எண்ணங்களைச் செயல்படுத் தும் பொறுப்பை நம்பகமான ஒருவர் கையில் ஒப்புவித்த அந்த மதியூகம்.... பூதம் மாதிரி வாழ்ந்த பாட்டி தெய்வம் மாதிரியல்லவா இறந் திருக்கிறாள்!

ஆற்று மேட்டை அடைந்து ஆலமரப் படித்துறை வழியாக இறங்கினோம். கண்ணுக்கு முன்னால் மெத்தை விரித்த மாதிரி தெரிந்த மணல் பரப்பு. வண்ண வண்ண பாத்தி வரிசை களாய் சலவை செய்து மணல் படுகையில் உலர்த்தப் போட்ட புடைவை, வேட்டி வகைய றாக்கள். ஒரு காலத்தில் தன் மடியெல்லாம் நீர் புரள, கரை தழுவி ஓடிக் கொண்டிருந்த ஜீவநதி இது.

அந்த நாளில் அம்மாவின் கையைப் பிடித்த படி ஆற்றோட்டத்தின் இழுப்பில் காலுக்கடி யில் மணல் கரைய, மீன் குஞ்சுகள் விரலைக் கொஞ்சலாகக் கொரிக்க, முழுகி முழுகிக் குளித்த காட்சி நினைவுக்கு வருகிறது.

இப்போது, மேற்கே உருவான அணைக் கட்டுக்குத் தன் சாரத்தையெல்லாம் தந்து விட்டு சக்கையாகக் காட்சி தருகிறது ஆறு, ஒரு வாழ்ந்து கெட்ட வீடு போல.

''பாத்தியா பொன்னு, ஆத்தோட கோலத்தை! என்ன முழிக்கிறே, இதுலே எப்படி குளிக்கிறதுன்னா....'' மாமா நக்கலடித்தார்.

மாமா பேசியது காதில் விழ தார்ப்பாய்ச்சிக் கோவணத்தோடு முதுகைக் காட்டியபடி மணல் பரப்பில் உட்கார்ந்திருந்த உள்ளூர் சலவைக்காரர் திரும்பிப் பார்த்தார். "என்ன சாமி, ஆத்துப்பக்கம் அபூர்வமா?" என்று கேட் டார்.

''அடடே, சாமிக்கண்ணுவா... தங்கச்சி மகன், பம்பாயிலிருந்து வந்திருக்கான். சொன்னா கேட்கலை, நம்ம ஊர் ஆத்துலே குளிக்கணும்னு பிரியப்பட்டான்... ஆனால் தண்ணியே தென்படலையே....''

''கண்ணுக்குத் தெரியாததெல்லாம் இல்லவே இல்லைன்னு ஆயிடுங்களா?'' என்று சொல்லிவிட்டு வெற்றிலைக் காவி தெரிய ஒரு வேதாந்த சிரிப்பு சிரித்தார் சாமிக்கண்ணு. பிறகு, பக்கத்தில் வைத்திருந்த மண்வெட்டி யைத் தூக்கிக் கொண்டு, "வாங்க என் கூட" என்றபடி முன்னே நடக்க -

மறுகரை ஓரமாய் பாறாங்கல் வரிசைக்கு மறைவில் தன் வறட்சிக் கோலத்துக்காக நாணிய மாதிரி கையகலத்துக்கு ஓடிக் கொண் டிருந்தது நீர்.

சாமிக்கண்ணு குனிந்து கையிலிருந்த மண் வெட்டியால் நீளவாக்கில் இடம் வலமாய் மண லைத் தோண்டத் தோண்ட முதலில் சன்ன மாய்க் கசிந்து, அப்புறம் தாரையாகி வழிந்து ஊற்றுக்கண் திறந்து தேக்கம் கட்டுகிற நீரோட் டத்தைப் பார்க்கிற போது... அடேயப்பா இந்த வறட்சியிலும் கூட இப்படி ஒரு வள்ளல் தனமா....

"பார்த்தீங்களா ஆறு நமக்காக நெஞ்சுக் குழிக்குள் நீர் சேர்த்து வைத்திருக்கிற வித் தையை!" என்று மீண்டும் ஒரு சித்தர் சிரிப்பு. சாமிக்கண்ணு முழங்காலுக்கு மேல் நீர் தேங்க "போதுங்களா" என்று கேட்டபடி நிமிர்ந்தார்.

"போதும் போதும் யதேஷ்டம்" என்றார் மாமா.

முதலில் கலங்கலாகத் தெரிந்த நீர் சற்றைக் கெல்லாம் படிந்து தெளிய குப்புறக் கவிழ்ந்து உடம்பு குளிர முழுகி முழுகி எழுகிற போது ஏதோ புண்ணிய தீர்த்தத்தில் நீராடுகிற சுகம்.

குளித்து முடித்து ஈரவேட்டியோடு அரச மரத்தடி பிள்ளையாரப்பனுக்குக் கும்பிடு போட்டு வீடு திரும்புகிற வழியில் மாமா என் தோளைப் பிடித்தபடி சொன்னார்.

''பொன்னு நான் சொல்றதைக் கேட் டுக்கோ. எனக்கும் வயசு ஏறிக்கிட்டு வருது. நல்ல காரியங்களை நாள் கடத்தாமல் செய் யணும்பாங்க. இந்த அறுவடை முடிஞ்ச உடனே பக்கத்து வீட்டுப் பெரியவர் கிட்டே பேசி விவகாரத்தை முடிச்சுடுவேன். கிரயம் பண்ணுகிற போது என் பேரில் இருக்கிற பழைய சொத்துக்களையும் சேர்த்து ஒட்டு மொத்தமா உன் பேருக்குப் பதிவு பண்ணி முடிச்சுடலாம். தபால் போடுவேன், தவறாமல் வந்துடு."

நான் தவித்துப் போனேன். பேச்சு வர வில்லை. இப்படியும் ஒரு பெரும்போக்கா! வருந்தி வருந்திச் சேர்ப்பது, அப்புறம், 'இந்தா வைத்துக் கொள்' என்று வாரித் தந்து விடுகிற இந்த வள்ளல் தனம்... சொந்த வீடு, பெண் டாட்டிக்கு நகை என்று குறுகலாய் வட்டம் போட்டு வாழ்ந்து கொண்டிருக்கிற என் போன் றவர்களுக்கு இந்த அருங் குணமெல்லாம் வரப் போவதில்லை. இதற்கு ஒரு மன விசாலம் வேண்டும், சங்கரிப்பாட்டி மாதிரி, இந்த மாமா மாதிரி, நெஞ்சுக்குழிக்குள் சேர்த்து வைத்த நீரை ஊற்றுக்கண் திறந்து சுரக்கிற இந்த ஊர் ஆறு மாதிரி.....

மனசு ஒரு முடிவுக்கு வந்திருந்தது. சுலோ வுக்கு இருபது பவுனை மீட்டுத் தருகிற திட்டத் தைக் கொஞ்ச காலத்துக்குத் தள்ளிப் போட்டு விட்டேன்.

# சப்தமும் நாதமும்

**திருவாரூர் பாபு**

இருபத்தெட்டு வயதில் இன்னும் எனக்கு அந்த அனுபவம் இல்லை. ஆனால் நண்பர் களுக்காக நான்கு இடங்களில் பெண் பார்த்து – ஏனோ அந்த வைபவத்தில் மனசு அத்தனை லயிக்கவில்லை. நான்கில் ஒன்று கூட கூடி வராதது அதற்கு ஒரு காரணமாக இருக்கலாம்.

ஆனால் இது முடிந்து விட்டது. திட்ட வட்டமாகச் சொல்ல முடியாவிட்டாலும் கிட்டத்தட்ட முடிந்து விட்டதுபோல்தான் எனக்குத் தோன்றியது.

கணேசன் வீட்டிலிருந்த அனைவரும் வந்து பார்த்துச் சென்று விட்டார்கள். பெண்ணின் வீட்டிலிருந்தும் பார்த்துச் சென்று விட்டார் கள். என்றாலும், ஏதோ ஒரு தேக்கத்தில் முகூர்த்தத்துக்கு இன்னும் நாள் குறிக்கப் படாமல் தள்ளிப் போய்க் கொண் டிருக்க.... கணேசன் என்னை உசுப்பினான்.

“நீ ஒரு தடவை பார்த்துட்டு வந்துடுடா... எனக்கு அந்தப் பொண்ணை புடிச்சிருக்கு... ஆனா என்னைப் பத்தித்தான் ஒனக்குத் தெரியுமே... வீட்டுல இதைச் சொல்ல முடியல... முடிஞ்சா பெண்ணுகிட்டயோ... அல்லது அவுங்க வீட்லயோ விசாரிடா... வீணை வாசிக்கத் தெரியும்னு சொன்னாங்களே தவிர அது எவ்வளவு தூரத்துக்கு உண்மைன்னு தெரியல... ப்ளீஸ்டா... அப்படியே பொண்ணையும் நீ ஒரு தடவை பார்த்த மாதிரி இருக்கும்...” கண்களில் கனவோடும் நான் போவேனா என்கிற சந்தேகத்தோடும் பேசினான்.

நான் சிரித்தேன்.

“ஏண்டா... நல்லா குடித்தனம் நடத்தத் தெரிஞ்சிருந்தா போதாதா...? வீணை வாசிக்கத் தெரியணும்... இல்ல அதுமாதிரி எதுலயாவது ஈடுபாடு இருக்கணும்... இதெல்லாம் எதுக்குடா...? வீணை வாசிக்கிறதும்... பாட்டுப்பாடறதும்தான் வாழ்க்கையா...?”

“பார்த்தியா...? என்னைப் பத்தி அவ்வளவு தெரிஞ்சிருந்தும் நீயே கிண்டலடிக்கிற பாரு...”

“சரி... பார்க்கிறேன் போதுமா...?”என்றதும் தான் திருப்தியானான்.

கணேசன் பள்ளிக்கூட நண்பன். கிட்டத்தட்ட பதினான்கு வருடங்கள் ஒன்றாகப் படித்து, ஒன்றாக ஊர் சுற்றி, வங்கித் தேர்வெழுதி வேலை கிடைத்து அவன் நிரந்தரமாகிவிட... நான் அப்பாவின் தொழிலில் ஐக்கியமானேன்.

இருவரும் இருவேறு திசையில் இருந்த போதும் பழக்கத்தில், நட்பில் எந்தவித விரிசலும் விழவில்லை.

படித்த காலத்தில் இருந்த மாதிரியே நட்பு இறுக்கமாகத்தான் இருந்தது.

இறுக்கமான நட்பு என்ற போதிலும் சிற்சில விஷயங்களில் எனக்கும் அவனுக்கும் நிறைய வேறுபாடு இருந்தது.

ஞாயிற்றுக்கிழமை சினிமாவுக்குப் போவது என் வழக்கம். ஆனால் கணேசன் பெரும்பான்மையான ஞாயிறுகளில் ஊரில் எங்காவது கச்சேரி நடந்தால் அங்கு இருப்பான். இல்லை கமலாலயக் கரையில் அமர்ந்து கொண்டு கோவில் ஒலி பெருக்கியிலிருந்து வழிந்து வரும் எதையாவது ரசித்துக் கொண்டிருப்பான்.

நான் அழைத்து சினிமாவுக்கு வர மாட்டான். ஆனால் அவனோடு நான் கச்சேரிக்குச் செல்வேன். மும்மூர்த்திகள் விழா நடக்கும் ஒரு வார காலமும் அவனோடு மும்மூர்த்திகள் சபாவே கதியாகக் கிடப்பேன். இப்படி ஒரு அனுசரிப்பு இருந்ததால்தான் நட்பு இன்னும் உடையாமல் இருக்கிறது.

எப்படியோ சங்கீதம் அவனோடு ஒன்றிப் போய் விட்டது. அதை மறுக்கவோ இல்லை அவனை அதிலிருந்து மாற்றவோ எனக்கு விருப்பில்லை. நண்பன் சராசரி ஆண்மகனாக இல்லாமல் வித்தியாசமாக இருந்தது சந்தோஷமாக இருந்தது. என் நண்பன் ரசனை உடையவன் என்பது கொஞ்சம் கர்வமாகக்கூட இருந்தது.

ஆனால் தனக்கு வரப்போகிற மனைவிக்கும் சங்கீதம் தெரிந்திருக்க வேண்டும் என்கிற நிபந்தனை விதித்துக் கொண்டிருந்த காரணத்தி

னால் இரண்டு மூன்று வரன்கள் தட்டிப் போய் விட்டதுதான் எனக்கு வேதனையாக இருந்தது.

நல்ல வரன்கள். கடைசி யாய்க் கூடி வருகின்ற நேரத்தில். "பொண்ணைப் பார்த்தா ஞான சூன்யம் மாதிரி இருக்குடா... இது எனக்கு சரிப்பட்டு வராது" என்று என்னிடம் சொல்லி விட்டு அவன் அம்மா, அப்பா விடம் வேறு ஏதோ காரணம் சொல்லிக் கல்யாணத்தைத் தவிர்த்து விட்டான்.

இது எனக்குப் பிடிக்க வில்லை. அவன் இல்லாதபோது வீட்டுக்குச் சென்ற என்னிடம் அவன் அம்மாவும், அப்பாவும் வருத்தப்பட..... நான் அவ னைத் தனிமையில் கோபித்துக் கொள்ள...

"சரி... சரி... இந்த இடம் கட் டாயம் முடிஞ்சிடும்... நான் ஒத் துக்கறேன்... பொண்ணுக்கு வீணை வாசிக்கத் தெரியும்னு புரோக்கர் சொன்னாரு. அது உண்மையான்னு மட்டும் என் அம்மா, அப்பாவுக்குத் தெரி யாம... ப்ளீஸ்..."

**சொ**ன்ன அடையாளங் கள் பொருந்தியிருந்த வீட்டுக்கு முன்னே வேப்ப மர நிழலில் மொபட்டை நிறுத்தி இறங்கி னேன். சப்தம் கேட்டு வெளியே வந்த பெரியவரைப் பார்த்து வணங்கினேன். பதிலுக்குக் கை கூப்பியவர் வேகமாய் வந்து கதவைத் திறந்து விட்டார்.

"நான் ரமேஷ்... மாங்குடியில அலயன்ஸ் பேசிக்கிட்டு இருக் கீங்கள்ல... கணேசன்... அவ ரோட ஃபிரெண்ட்..."

"அடடா...வாங்க.... வாங்க..."

ஆர்ப்பாட்டமான வர வேற்பு.

அவரைப் பின்தொடர்ந்து உள்ளே நுழைந்தேன்.

"மகாலெட்சுமி... மாப்புள வீட்லயிருந்து வந்திருக்காங்க... மாப்பிள்ளையோட ஃபிரெண் டாம்..." சத்தமாய்ச் சொன்ன சிறிது நேரத்திற்கெல்லாம் அந்த அம்மா இழுத்திப் போர்த்திக் கொண்டு அடுப்படியை விட்டு வெளியே வந்து "வாங்க..." வணங்கினார்.

சிரித்தேன்.

"என்னான்னு தெரியல...



நிச்சயத்துக்கு நாள் குறிக்க வர்றோம்னு மாப்பிள்ளையோட மாமாவும் சித்தப்பாவும் சொன்னாங்க. வரல... காரணம் தெரியலி யேன்னு குழம்பிக்கிட்டு இருக்கிறப்பவே நீங்க... ஏதும் சேதி சொல்லி அனுப்பிச்சாங் களா...?'' ஆர்வமாய்க் கேட்டார்.

"என்கிட்ட அதெல்லாம் ஒண்ணும் சொல் லலை. இந்த பக்கம் கொஞ்சம் வேலை இருந் துச்சி...போறேன்னு கணேசன்கிட்ட சொன் னேன்... அவன்தான் போயிட்டு வாடான்னு...''

"சரி...சரி... வந்தவரைக்கும் சந்தோஷம்... என்ன சாப்பிடறீங்க...? டீ...காபி....''

"அதெல்லாம் ஒண்ணும் வேணாம்....''

"ஐய்யோ...அதெப்படி...? ஒண்ணும் சாப் பிட மாட்டேன்னா... ஏதாச்சும் குடிங்க...'' என்றார்.

சிறது நேரத்தில் டீ வந்தது. டீயை உறிஞ்சிக் கொண்டே தாழ்வாரத்து சுவரோரத்தில் வைக்கப்பட்டிருந்த வீணையைப் பார்த்துக் கொண்டே கேட்டேன்.

"ஒங்க டாட்டர் வீணை வாசிப்பாங் களா...?''

"பிரமாதமா வாசிப்பா... நாலு வருஷம் ஒரு அம்மா வீட்டுக்கு வந்து கத்துக் கொடுத் தாங்க...''

"அப்படியா...?''

"மூணு பேர்ல அவ ரொம்ப சுட்டி.... மதிய நேரத்துல கொஞ்சம் நேரம் படுக்கக்கூட மாட்டா... எம்பிராய்டரி பண்ணிக்கிட்டு இருப்பா... இல்ல படம் வரைவா...''

மனசுக்குள் கணேசனுக்கு வாழ்த்துச் சொன்னேன்.

அவர் சொன்னதில் நான் லயித்துப் போயி ருக்க... பக்கத்து அறையிலிருந்து பளிச் என வெளியே வந்தாள் அவள்.

"வாங்க....'' என்று என்னைப் பார்த்துச் சிரித்து விட்டுப்போக... அந்த திடும் "வாங்க'' வில் நான் கொஞ்சம் தடுமாறித்தான் போனேன். நல்ல அழகாகவே இருந்தாள்.

"அப்புறம் நான் கிளம்பட்டுமாங்க...?''

"நல்ல வெயிலா இருக்கே.... இருந்து மதியம் சாப்பிட்டுட்டு பொழுது சாஞ்சி போகலாமே...''

"ஐய்யோ... நான் பூந்தோட்டம் வரைக்கும் வியாபார வேலையா போகணும்...''என்றேன்.

"சரி... அப்ப வாங்க...''

வெளியே வந்த அம்மாவைப் பார்த்துக் கைகுவித்துவிட்டுத் திரும்பும்போது, அவள் வெளியே வந்த அறைக்குள் ஏதேச்சையாகச் பார்வை போனது. அந்த பீரோ கண்ணாடி யின் மூலையில் ஜாதகத்தோடு கொடுத்தனுப் பிய கணேசனின் ஃபோட்டோ செருகப்பட் டிருந்தது.

நான் உள்ளுக்குள் சிரித்துக் கொண் டேன்.

கணேசனிடம் சொன்னால் சந்தோஷப்படு வான் என்று நினைத்துக் கொண்டேன். நல்ல இடம். பார்க்க, பேச மிக நல்லவர்கள் மாதிரி தெரிகிறார்கள். நாலைந்து இடங்கள் தள்ளிப் போனாலும் அதுவும் நல்லதுக்குத்தான். கணேசா... கங்கிராட்ஸ்!

"ஏன் சேதி ஒண்ணும் சொல்லி அனுப் பல. பொண்ணு வீட்டுல பொண்ணோட அப்பா கவலைப்பட்டுக்கிட்டு இருக்காரு...'' என்றேன் மாலை கணேசன் வீடு சென்றபோது.

கணேசனின் அப்பா மௌனமாக இருந் தார்.

"நீ போனியா...?'' அம்மா கேட்டார்.

"ஆமாம்மா... இவன் போயி பார்த்துட்டு வாடான்னு சொன்னான்....எங்க அவன்...?''

அம்மாவும், அப்பாவும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

"கொல்லப்பக்கத்துல இருக்கான்... இப்பத்தான் ஆபீஸ்லேந்து வந்தான்...''

கொல்லைப்புறம் சென்றேன்.

"வாடா...'' கணேசன் அழுத்தமாக அழைத் தான்.

"ஏய்... கை கொடு மொதல்ல... ஒன் வுட்பி நாலு வருஷம் வீணை கத்திருக்காங்க. அத விட சந்தோஷமான இன்னொன்னு... ஜாதகத் தோட கொடுத்தனுப்புனமே உன்னோட ஃபோட்டோ... அது அவுங்க ரூம் கண்ணாடி யில ஒட்டி இருக்குடா... ஒன் ஆளு கனவு காண ஆரம்பிச்சாச்சி...''

"ப்ச்...'' என்றான்.

"என்னடா...?''

"அது இல்லடா... மன்னார்குடி முடிஞ்சிட் டுது. வர்ற ஞாயிற்றுக்கிழமை நிச்சயம். காலை யிலதான் பேசி முடிச்சோம்.''

திடும் என்று பின்னந்தலையில் தாக்கப்பட் டது போல் உணர்ந்தேன்.

"ஏண்டா... திடீர்னு ஏன் இந்த முடிவு...?''

"பொண்ணு வீட்டுல ஹண்ட்ரடு சிசி- வாங்கித் தர்றதா சொன்னாங்கடா... எனக்கும் ஆந்தகுடி பிரான்ஞ்சுக்கு டிரான்ஸ்ஃபர் ஆயி டும் போல இருக்கு...போக வர வசதியா இருக் கும்ல... அதான் சரின்னு சொல்லிட்டேன்...''

நான் அமைதியாக இருந்தேன்.

அந்தப் பெண்ணின் முகம் மனத்தில் ஓடி யது. அவள் கண்ணாடியில் செருகி வைத் திருந்த கணேசனின் படம் நினைவில் ஓடியது. 'வாங்க... வாங்க' அந்த ஆர்ப்பாட்டமான வர வேற்பு!

ஹண்ட்ரட் சிசி-ஆந்தகுடி டிரான்ஸ்ஃபர்.

ஹண்ரட் சிசி.யின் சப்தத்தில் வீணையின் நாதம் காணாமல் போனது!



**காந்திஜி** தென்னாப்பிரிக்காவில் இருக்கும்போது, ரயிலில் முதல் வகுப்பில் பயணப்பட்டார் அல்லவா? அந்த ரயிலுக்கு 'மகாத்மா காந்தி எக்ஸ்பிரஸ்' என்று தற்போது பெயரிடப்பட்டுள்ளது! காந்தியடிகளின் 125 வது பிறந்த நாளை முன்னிட்டு நெல்சன் மண்டேலா அரசு இவ்வாறு முடிவு செய்தது.

- வை. அனந்தராஜ்



## போட்டிக் கதை - 17

**உ**ச்சிச் சூரியன் தகித்துக் கொண்டிரு தான். சைக்கிளை அவசரமாக வராந்தாவில் நிறுத்தி விட்டு உள்ளே நுழைந்த செல்வம், வாங்கி வந்திருந்த புது மஞ்சள் கயிற்றை விமலாவிடம் நீட்டினான்.

அவள் கணவனைப் பார்த்தாள். எதுவும் கேட்கவில்லை. கேட்காமலே புரிந்து விட்டது.

“இதைக் கட்டிக்கிட்டு செயினைக் கழட்டிக் குடு விமலா....” குரலில் நிறையவே தயக்கம். அவள் கண்களைப் பார்ப்பதைத் தவிர்த்தான்.

அவளையும் அறியாமல் விமலாவின் விரல் கள் தாலியைத் தாங்கித் தொங்கிய அந்த ஆறு பவுன் சங்கிலியையும் அத்தோடு இணைந் திருந்த காசுகளையும் குண்டுகளையும் வருடிப் பார்த்தன. காது, மூக்கு, கைகள், விரல்கள் எல் லாமே வெறுமையாகி, கடைசியாகத் தங்கி யிருந்தது இந்தச் சங்கிலிதான்.

எல்லாம் இந்த ஒரு வருடத்திற்குள்தான்.

“அடகு வைக்கவா?” அவளது உதடுகள் வார்த்தைகளை ரகசியமாகப் பிரசவித்தன.

“இல்லே. வித்துடத்தான்” - கணவனின் குரலும் மனைவிக்கு மட்டும்தான் கேட்டது.

மஞ்சள் கயிற்றை வாங்கிய விமலா அடுப்படியில் சுவாமி படங்கள் வைத்திருந்த அலமாரி நோக்கி நடந்தாள்.

செல்வத்துக்குக் கண்கள் கலங்கின.

‘ஏன்?... ஏன் இதெல்லாம்? தேவைதானா இந்தப் பிடி வாதம். ஒரே ஒரு



மன்னிப்புக் கடிதம் போதும். எல்லாம் பழைய படி மாறிவிடும். மாறிவிடலாமா? சாகக் கிடக்கிற அம்மாவுக்கு மருந்து கூட வாங்கி முடியாம... எதுக்கு இதெல்லாம்...?'

'சலனப்பட்டு விடுவோமோ?' என்ற பயம் அவனுள் எழுந்த போது அடிவயிற்றில் அமிலம் சுரந்து 'கூடாது கூடாது!' என்று அழுத்தியது.

**செ**ல்வத்துக்கும் அவனது மேலதிகாரி அரங்கநாதனுக்கும் கடந்த மூன்று வருடங்களாக்வே யுத்தம் நடந்து வந்தாலும் சென்ற வருடம் தான் அது உச்சத்தை எட்டியது.

நகரின் எல்லையில் பரந்து கிடந்த ஆராய்ச்சி நிலையத்தில் செல்வத்துக்கு டிரைவர் வேலை. அந்நிலையத்தின் இயக்குநர் அரங்கநாதனுக்கு அவன்தான் காரோட்டி.

"இத பாருப்பா செல்வம். உன் திமிரான போக்கை இத்தோட நிறுத்திக்கோ. இல்லேன்னா நான் என்ன செய்வேன்னு தெரியாது...."

"மரியாதை குடுத்துப் பேசுங்க சார்...."

"நீ பண்றது ஒண்ணும் மரியாதையா இல்லையே. என்னைப் பத்தியும், என் நிர்வாகத்தைப் பத்தியும் ஊரிலே இருக்கிற மஞ்சள் பத்திரிகைக்கெல்லாம் கன்னா பின்னான்னு செய்தி குடுக்கிறியாம். இந்த வாரம் நெற்றிக்கண் பத்திரிகையிலே என் மீது குற்றம் சாட்டி வந்திருக்கிற கட்டுரை நீ எழுதிக் குடுத்தது தான்னு எனக்குத் தகவல் வந்தாச்சு."

"மன்னிக்கணும் சார். அதைப் பத்தி நான் உங்ககிட்ட பேச விரும்பலை...."

"என்னடா விரும்பலே? மரியாதையா உன்

## ராஜ்கோகுல்

வேலையைப் பார்த்துக்கிட்டு இரு. இல்லேன்னா ரொம்ப கஷ்டப்படுவே...."

"சார் வார்த்தைகளை நிதானமாப் பேசுங்க."

"சரி, சரி. உன்கிட்டே என்ன பேச்சு. உன்னை டிராக்டர் டிரைவரா மாத்தியிருக்கேன். நாளையிலே இருந்து உனக்குப் பண்ணையிலேதான் வேலை...."

"என்னாலே அதை ஒத்துக்க முடியாது சார்."

"ஏன்? நீ பெரிய மைனர்! டிராக்டர் ஓட்ட மாட்டியோ?"

"எதையும் ஓட்டலாம் சார். ஆனா அது அதுக்குள்ள லைசென்ஸ் வேணும். டிராக்டர் ஓட்ட எனக்கு அனுமதி கிடையாது. என் லைசென்ஸிலே அதுக்குன்னு தனியா 'என்டார்ஸ்மெண்ட்' வாங்கினாத்தான் நான் டிராக்டர் ஓட்டலாம்...."

"நீ என்ன கருமத்தை வாங்குவியோ எனக்குத் தெரியாது. நாளையிலே இருந்து நீ கார் டிரைவர் இல்லே."

"முடியாது சார். எனக்கு வேலை குடுக்கும் போது கார், பஸ் போன்ற வாகனங்கள் ஓட்டற டிரைவராத்தான் அப்பாயிண்ட் பண்ணினாங்க."

"சட்டம் பேசறியோ, சட்டம்! நான்தான் இந்த ரிசர்ச் சென்ட்டருக்கே சீஃப். நான் சொன்னதைச் செய், போ. இல்லேன்னா தொலைச்சுடுவேன், தொலைச்சு!"

"சும்மா கத்தாதீங்க சார்... எனக்கும் தெரியும் உங்களை என்ன செய்யணும்னு!"

"என்னடா செய்துடுவே நீ... ஒழிச்சுக்



கிரிக்கெட் அம்பயரின் பாக்கெட்டில் இருக்கும் 'பேஜரில்' அவர் மனைவி : "சந்தேகப்பட்டு முழிக்காதீங்க ரன் அவுட் கொடுங்க!"

— லெ.நா. சிவகுமார்

கட்டிருவேன், கட்டி." அவருக்கு உடம்பே ஆட ஆரம்பித்தது.

"பார்த்துக்கலாம் வாய்யா! உன் சின்ன வீடு செட் அப் எங்க ஏரியாவிலேதானே இருக்கு. அந்தப் பக்கம் வந்துதானே ஆகணும். நல்லா கவனிச்சு உடச் சொல்றேன்...."

- பதிலுக்கு அவனும் கத்தி விட்டு வெளியேறி விட்டான்.

அடுத்த நாள் அவன் வேலைக்குப் போன போது அவனுக்குக் காத்திருந்தது - தாற்காலிக வேலை நீக்கம் - சஸ்பென்ஷன் உத்தரவு!

**மி**கப் பெரிய அட்வகேட் என்று கேள்விப்பட்டிருந்த வக்கீல் வெள்ளயங்கிரி இவ்வளவு எளிமையாக இருப்பார் என்று செல்வம் எதிர்பார்க்கவே இல்லை.

"ரொம்ப விரிவா, தெளிவா எழுதியிருந்தே. லெட்டர் முழுசும் படிச்சேன். சரி, உன் மேலே உங்க டைரக்டருக்கு அப்படி என்ன ஆத்திரம்?"

"அலுவலக வேலைக்காக அவருக்குத் தரப்பட்டிருக்கும் காரை தன் சொந்த வேலை எல்லாத்துக்கும் பயன்படுத்த நினைப்பார் சார். டூட்டி நேரம் தவிர என்னை நேரம் காலம் இல்லாம காரோட்டக் கூப்பிட்டார் சார். நான் போக மாட்டேன். தினமும் பதினைந்து கிலோ மீட்டர் டவுனுக்குப் போய் அவங்க மனைவி ஷாப்பிங் பண்ண நான் கார் ஓட்டணும்னு சொன்னார். நான் ஒத்துக்கலை. அரசாங்கக் காரை சொந்த உபயோகத்துக்குப் பயன்படுத்த நான் ஒத்துழைக்க முடியாதுன்னு கண்டிப்பா சொல்லிட்டேன் சார். 'நாகர்கோவிலிலே கல்யாணம் காரை எடு'ன்னு சொல்வாரு. 'பழனியிலே காது குத்து கிளம்பும்பாரு. எல்லாத்துக்கும் மேலே டவுனிலே அவர் செட்அப் பண்ணியிருக்கிற சின்ன வீட்டுக்கு அழைச்சிட்டுப் போயிட்டு விடிய விடிய, காரோட கேட்டிலேயே காவல் காக்க வைச்சிட்டாரு சார். நான் போய் அவரு மனைவி கிட்டே பத்த வைச்சுட்டேன். ரோட்டிலே வண்டியை நிறுத்திக்கிட்டு, 'போய் பிராந்தி பாட்டில் வாங்கிட்டு வா'ன்னார். 'அதுக்கு வேற ஆளைப் பாருங்க'ன்னு சொல்லிட்டேன். எல்லாம் சேர்ந்து என் மீது ஏகமாக் கோபத்தைத் தூண்டி விட்டுடுச்சு சார்...."

"கொய்ட் இன்ட்ரஸ்டிங்... அப்புறம்?"

"இதெல்லாம் பெரிசில்லை சார். என்னை பெட்ரோல் திருடச் சொன்னார். பொய்யா பெட்ரோல் பங்க்கிலே பில் வாங்கிக் குடுக்கச் சொன்னார். நான் மறுத்துட்டேன். அப்புறமெல்லாம், இந்த மாதிரி வேலைகளுக்கு என்னைக் கூப்பிடுவதில்லை. வேன் டிரைவர் முருகேசனைப் பயன்படுத்திக்கிட்டார்."

"மொத்தம் எத்தனை டிரைவர் இருக்கீங்க?"

"கார், ஜீப், ஒரு வேன், ஸ்டாஃப் பஸ், பண்ணையில் டிராக்டர். மொத்தம் அஞ்சு டிரைவர் இருக்கோம். புது டயர் மாத்தறதா கணக்கு எழுதிட்டு ரிரீநட் டயரை வாங்கிப் போட்டுருவாங்க சார். போன வருஷம் ஜீப் வாங்கினப்போ புது இஞ்சினை அங்கேயே கழற்றி வித்துட்டு, காயலாங்கடை இஞ்சினை மாட்டிட்டு வந்துட்டாங்க. வண்டிகளைத் தரமா வேலை பார்க்கிற வொர்க்ஷாப்பிலே விடறதில்லை சார். எந்த ரிப்பேரையும் ஒழு காப் பண்றதில்லே. ஆனா மாசா மாசம் பத்த யிரம் பதினைந்தாயிரம்னு ரிப்பேர் செல்வுக்கு கணக்கு மட்டும் எழுதிடறாங்க சார். இந் வண்டிகளை ஓட்டுறது உயிருக்கு ஆபத்தா விஷயமா இருக்குன்னு பல முறை டிரைவர்க புகார் பண்ணியிருக்கோம் சார்...."

"இந்த விஷயத்தையெல்லாம் பத்திரி களிலே எழுத வைச்சு வெட்டவெளிச்சமா கீட்டிங்களாக்கும்?"

"ஆமாம் சார். நெற்றிக் கண் நிருபர் சந்தி னோட அறிமுகம் மூலமா அதன் ஆசிரி ரோட பழக்கம் ஏற்பட்டுச்சு. எனக்குத் தெரிஞ் முறைகேடுகளை எல்லாம் சொன்னேன். எழு யும் கொடுத்தேன். செய்தி நல்லாவே ப விடுச்சு."

"அவருக்கு உன் மேலே கோபம் வரா இருந்திருந்தாத்தான் ஆச்சரியப்படணு மானத்தை வாங்கியிருக்கியே! ம்ம்.... கீழ்ப்ப யாமை, அதிகாரியைத் தகாத வார்த்தைகளா திட்டி பயமுறுத்தியது... யூனிபார்ம் போடாம டூட்டிக்கு வந்தது.... மூன்றாவது குற்றச்சாட் உண்மையா செல்வம்....?"

"நிச்சயமா பொய் சார். வெள்ளை பேண்ட் சர்ட், தொப்பி இல்லாம காரைத் தொடமாட டேன் சார்."

"சரி. நான் சொல்றதை எழுதிக்கோ...."

குற்றச்சாட்டுகளை மறுக்கும் வகையி அவர் ஆறு பக்கத்திற்குக் கூறிய பதில்களை எழுதிக் கொண்டு புறப்பட்டான்.

"ஃபீஸ் எதுவும் வேண்டாம்ப்பா. 'இந்த போராட்டத்திலே வெற்றி கிடைச்சிடுச் திரும்பவும் வேலையில் சேர்ந்துட்டேன்'னு ஒ போஸ்ட் கார்ட்டு எழுதிப் போட்டின்ன அந்த சந்தோஷத்தையே ஃபீஸா வைச்சு குறேன்... போயிட்டு வா. ஆல் தி பெஸ்ட்...."

"ஏம்பா செல்வம் இப்படி அவசர படறே? உடனே போராட்டம் பண்ணனும்ன எப்படி? சஸ்பென்ஷன் தானே பண்ணியிரு காங்க. கோரிக்கை குடுக்கணும். பேசிப் பார் கணும். பேச்சு வார்த்தையிலே தீரலைன்னா தானே போராட்டத்துக்குப் போகணு கவலைப் படாம இருப்பா. சங்கம் உன்னை அப்படி விட்டுடாது. சரி, சரி இன்னொரு ஆ



***"தலைவர் கொஞ்ச நாளா எல்லா எதிர் கட்சித் தலைவரையும் பாராட்டிப் பேசுறாரே. ஏன்?"***

***"தேர்தல்ல யார் கூட கூட்டணி அமைக்க துன்னு குழப்பத்துல இருக்கார்!"***

***— அம்பை தே***

லெட்டும் ஊத்தப்பமும் ஆர்டர் கொடு....'' செல்வத்தின் காசில் நிதானமாகச் சாப்பிட்டுக் கொண்டே முணுமுணுத்தார் தொழிற்சங்கத் தலைவர் மோகன்தாஸ். 'நீ பொழைக்கத் தெரியாத கூமுட்டை போ....'

செல்வம் எரிச்சலானான். அவர் பின்னே போவதை நிறுத்திக் கொண்டான். கை காசைச் செலவு செய்து, 'நியாயம் வேண்டும், நியாயம் வேண்டும்' என்று போஸ்டர் அடித்து ஊர் முழுக்க ஒட்டினான்.

நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன.

வேண்டுமென்றே ஆட்சிக்குழுக் கூட்டத்தைக் கூட்டாமல் காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தார் டைரக்டர். சஸ்பென்ஷனை மட்டும் நீட்டித்துக் கொண்டேயிருந்தார்.

விமாலாவின் தோடு, மூக்குத்தி, வளையல் என்று ஒவ்வொன்றாக கை நழுவிப் போய்க் கொண்டிருந்தன.

ஸ்கூல் ஃபீஸ் கட்ட முடியாமல் பிள்ளைகள் இருவரையும் கார்ப்பரேஷன் பள்ளிக்கு மாற்றி விட்டான். நானூறு ரூபாய் வாடகை வீட்டை விட்டு, நூற்று அம்பது ரூபாய் காலனிக்குக் குடி புகுந்தான். மருந்துக்கு ஏங்கிய அம்மாவைத் தொடர்ந்து இரும விட்டான்.

அவனது வற்புறுத்தலைத் தாங்காமல் தொழிற் சங்கம் ஒரு தர்ணாப் போராட்டத்தை நிர்வாகத்துக்கு எதிராக அறிவித்தது. ஆனால் உண்மையில் நிர்வாகத்தைப் பகைத்துக் கொள்ள யாருக்கும் விருப்பமில்லை. பத்துப் பேர் கூட கலந்து கொள்ளாமல் பிசுப் பிசுத்துப் போன போராட்டத்தை காரில் அமர்ந்தவாறே பார்த்து நகைத்து விட்டுப் போனார் டைரக்டர்.

செல்வம் மனம் நொந்து போனான். தனி மனிதனாக நின்று சாதித்துவிட முடியுமா என்று மனம் தளர்ந்த போது 'நெற்றிக்கண்' ஆசிரியர்தான் அவனுக்கு உற்சாகமும் தைரியமும் ஊட்டினார்.

செல்வம் பக்கமிருந்த நியாயத்தைப் புரிந்து கொண்டு விஞ்ஞானிகள் சங்கமும், ஆராய்ச்சி மாணவர்கள் சங்கமும் இணைந்து அவனுக்கு ஆதரவாக உண்ணாவிரதப் போராட்டம் நடத்திய போது, அதனை தலைப்புச் செய்தியாக வெளியிட்டு, தலையங்கமும் எழுதினார். வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் 'ஆராய்ச்சி நிலைய ஊழல்' என்று கட்டம் கட்டி எழுதினார்.

ஆனால் டைரக்டர் அரங்கநாதன் இதற்கெல்லாம் அயரவே இல்லை. மேலிடத்தில் அவருக்கு அத்தனை செல்வாக்கு, டெல்லி வரை! பெரிய சூட்கேஸ் கொடுத்துப் பதவிக்கு வந்தவராயிற்றே! எதிர்க்குரல் எழுப்பியதைப் பொருட்படுத்தாமல், ஏதேதோ சொல்லி செல்வத்தை மேலும் ஆறு மாதம் வரை சஸ்பென்ஷனில் வைக்க அனுமதி பெற்றுவிட்டார்.



"சும்மா தொந்தரவு பண்ணாம போயிடு. திடீர்னு உன்னை என் 'வளர்ப்பு சிஷ்யை'னு அறிவிப்புச் செய்யறதெல்லாம் நடக்காத காரியம், ஆமாம்!

— அகில்

நாட்கள் நகர்ந்து நகர்ந்து சஸ்பென்ஷன் காலம் ஒரு வருடத்தை நெருங்கிக் கொண்டிருந்தது.

உச்சக்கட்ட போராட்டமாகக் குடும்பத்துடன் உண்ணாவிரதப் போராட்டம் நடத்துவதென்று முடிவு செய்தான் செல்வம். படுக்கையில் அம்மா, குழந்தைகள், மனைவி சகிதம் ஒரு நாள் உண்ணாவிரதம் நடத்தியும் காட்டினான். நிறைய ஜனங்கள் வேடிக்கைப் பார்த்துப் போனார்கள். நெற்றிக்கண் பெரிதாகச் செய்தி வெளியிட்டது. நிறைய விளம்பரம் கிடைத்தது.

ஆனால் பலன்? அது மட்டும் கிடைக்கவில்லை. செல்வம் வெறுத்துப் போனான்.

அடுத்தநாள் நேரே போய் டைரக்டரின் அறைக்குள் நுழைந்தான். அவர் பயந்து அரண்டு போய் எழுந்து நின்றார்.

"ஏய்! நீ... நீ ஏன் இங்கே வந்தே? போ.... வெளியே போ...."

"போயிடறேன் சார். நீங்க ஒரு உதவி மட்டும் செய்யுங்க சார். சீக்கிரமா ஆட்சிக் குழுக் கூட்டத்தை நடத்துங்க சார்...."

"அது எனக்குத் தெரியும். நீ போ மேன் வெளியே...."

பியூன் வந்து வெளியே தள்ளிக் கொண்டு போனான்.

வாசலில் கார் நின்றது. துடைக்காமல் அழுக்கேறி, நிறமாறி ஆங்காங்கே உரசி பெயிண்ட் உதிர்ந்து அலங்கோலமாகப்பட்டது அவன் கண்ணுக்கு. எவ்வளவு நாளாகி விட்டது, அதில் அமர்ந்து அந்த ஸ்டியரிங்கைப் பிடித்து?... அவனுக்குள் ஏக்கம் பீரிட்டது. ஆசையாகத் தடவிப் பார்த்தான். கையில் கறுப்பாக ஒட்டியது. கதவைத் திறந்து உள்ளே நுழைந்து அமர்ந்து ஸ்டியரிங்கை இறுகப் பற்றினான். கண்கள் கலங்கி, துளிகள் மடியில்



"டாக்டர், இங்கே நான் என் காதுலே கார் ஓடறாப்லே சத்தம் வருதுன்னு புலம்பிக்கிட்டிருக்கேன். நிலைமை புரியாமே... நீங்க யாருக்கோ போன் போடறீங்களே....?"

"ரெண்டு நாளா என் மாமாவோட காரைக் காணோமாம்.. அவருக்குத்தான் போன் பண்றேன்....!"

— லெ.நா. சிவகுமார்.

விழுந்து தெறித்தன.

"ஏய் செல்வம், காரிலே என்ன பண்றே?" - புகையும் பீடியுடன் ஓடிவந்த டிரைவர் முருகேசன் விரட்டினான்.

**அ**தற்கடுத்த நாளே, டைரக்டர் சென்ற கார் மரத்தில் மோதி விபத்து என்றும், காரின் பிரேக்கைக் கழற்றிவிட்டு சதி செய்தது சஸ்பெண்ட் ஆன டிரைவர் செல்வம்தான் என்றும் செய்தி பரவிய போது செல்வத்துக்கு அழுகையே வந்து விட்டது. இனிமேல் என்ன, அவனை நிரந்தரமாக வேலையிலிருந்து நீக்க, டைரக்டருக்கு நல்ல காரணமாகவே மாட்டி விட்டது! பொய் சாட்சி சொல்லத்தான் முருகேசன் தயாராகி நிற்பானே!

**செ**ல்வம் கொடுத்த மஞ்சள் கயிற்றை அணிந்து கொண்டு, செயினை அவனிடம் நீட்டினாள் விமலா. அக்கயிறு அவளுக்கு அழகாகத்தான் இருந்தது. ஆனால் அத்தோற்றம் அவனைச் சித்திரவதை செய்தது.

"வர்ற வெள்ளிக் கிழமை ஆட்சிக்குழுக் கூட்டம் நடக்கப் போகுதாம் விமலா...."

"அப்படியா?...."

"ஆமாம் விமலா. பார்லிமெண்ட் கூட்டத்துக்காக நம்ம எம்.பி. டெல்லியிலே இருக்கார். நமக்கு ஆதரவாப் பேசக் கூடிய விஞ்ஞானிகள் சங்கத் தலைவர் ஃபாரின் கான்ஃபரன்ஸுக்குப் போயிருக்கார். டெபுடி டைரக்டர் ஹார்ட் அட்டாக்கிலே மெடிக்கல் லீவிலே இருக்கார். நல்ல நேரம் பார்த்து டைரக்டர் கூட்டத்தைக் கூட்டியிருக்கார். கார் விபத்துக்குச் சதி செய்தேன்னு குற்றம் சாட்டி ரொம்ப ஈஸியா என்னை டிஸ்மிஸ் பண்ணிடுவார்."

"இது ஓரளவு நாம எதிர்பார்த்ததுதானேங்க...."

"எதிர்பார்த்ததுதான். அதனாலதான் எடிட்டர் சார் எனக்கு துபாயிலே ஒரு வேலைக்கு ஏற்பாடு செய்து கொடுத்திருக்கார். பாஸ்போர்ட், விசாவுக்கெல்லாம் ஏற்பாடு பண்ணியாச்சு. இந்த நகையை வித்து இருபதாயிரம் ரூபாயை டிராவல் ஏஜெண்டிடம் கொடுக்கணும்... மாசம் பத்தாயிரத்துக்கு மேலே சம்பளம் வருமாம்...."

"வேலை நீக்கம் மட்டுமில்லாம துபாய்க்கு நாடு கடத்தல் வேறயாக்கும்?" அந்தச் சூழ்நிலையிலும் அவளால் சிரிக்க முடிந்தது. "அங்கே, போய் என்ன வேலை பார்க்கப் போறீங்க?"

அவன் அவளை நிமிர்ந்து பார்த்துச் சொன்னான் - "டிராக்டர் டிரைவர்!"

அவள் மீண்டும் சிரித்தாள். "அதைப் பேசாம இங்கேயே பார்த்திருந்தா தொல்லையே வந்திருக்காது.. அது சரி... இவ்வளவு நீளப் போராட்டத்துக்குப் பிறகு கடைசியிலே தோல்விதானே கிடைச்சுருக்கு?"

"இல்லை விமலா! டைரக்டரோட தவறுகளைக் கண்டுக்காம விட்டு, அவர் சொன்னபடி வளைஞ்சு கொடுத்து நடந்திருந்தாதான் எனக்கு அது தோல்வி. இவ்வளவு தூரம் அவரை எதிர்த்துத் தனிமனிதனாப் போராடியிருக்கேனே, அதுவே ஒரு பெரிய வெற்றிதான். இந்த யுத்தம் இத்தோட முடியலை விமலா. என்னை டிஸ்மிஸ் பண்றதை எதிர்த்து கோர்ட்டிலே கேஸ் போடவும் எடிட்டர் ஏற்பாடு செய்திட்டிருக்கார். நான் துபாய் போய் சம்பாதிக்கப் போறது நமக்காக மட்டுமில்லே, அந்தக் கேஸுக்கும் சேர்த்துத்தான். எனக்கு நம்பிக்கை இருக்கு. நிச்சயமா நியாயம் ஜெயிக்கும். நீ தான் அம்மாவையும் குழந்தைகளையும் பாத்துக்கணும்..."

"துபாயிலே எத்தனை வருட காண்ட்ராக்ட்?" ஒரு யுத்த வீரனாய்ப் பேசினான்.



"ஜோக் போட்டியில எனக்கு ஆயிரம் ரூபா பரிசு கிடைச்சிருக்கு!"

"அதுக்கு ஏன் வருத்தப்படற?"

"நான் கவிதையில்ல அனுப்பியிருந்தேன்!"

— கொங்கணாபுரம் வே. செந்தில்

"என்னங்க சிவா... அதிகாலைல வந்திருக்கீங்க... ஏதும் அவசர வேலையா எங்காவது போகப்போறீங்களா...?" வெகு இயல்பாய்க் கேட்டார் அந்த முதியோர் இல்லத் தலைவர் செண்பகராமன்.

"ஆமாம் ஸார்.... என் மனைவிக்கு தலைப் பிரசவம்... டாக்டர் குறிப்பிட்ட நாள் இன்னைக்குத்தான். அதான் மாமனார் வீட்டுக்குப் புறப்பட்டுக்கிட்டு இருக்கேன்... நார்மல் டெலிவரியா இருக்கணும்னு மனசு கிடந்து அடிச்சுக்குது ஸார்..."என்றான் சிவா.

"எல்லாம் நல்லபடியா நடக்கும்... ஆண்டவன் மேலே பாரத்தைப் போட்டுட்டுக் கவலையை விடுங்க..." கனிவாய்ச் சொன்னார்.

எழுந்து பேண்ட் பாக்கட்டில் கை விட்டு, "இந்த மாசம் கொஞ்சம் தாமதமாயிட்டுது..."என்றபடி அவசர அவசரமாய் பணத்தை எண்ணினான்.

"அதனால என்ன..." என்று நெஞ்சை வருடும் புன்னகையைச் சிந்தினார் செண்பகராமன்.

"அப்பா எப்படி இருக்காரு... ஏதும் பிராப்ளமில்லையே..."என்று போக வேண்டிய அவசரத்தில் கேட்டான்.

"ம்..., நல்லா இருக்காரு... ஒரு

# ஜனனம்

பத்து நிமிஷம் இருந்து உங்கப்பாவைப் பாத்திட்டுப் போங்களேன்..."

"ஸாரி ஸார்... எனக்கு இப்ப அதுக்கெல்லாம் நேரமில்லை... ரேணுகா இப்ப பிரசவ வேதனையிலே துடிக்க ஆரம்பிச்சிருப்பா... நான் உடனே போகணும்...!"என்றபடியே எழுந்தான்.

"நல்லது... கடவுளின் அருள் எப்பவும் இருக்கும்!"என்றபடி கைகளைக் குவித்து அவனுக்கு விடை தந்தார் செண்பகராமன்.

கிடைத்த பஸ்ஸில் ஏறி, கிடைத்த இடத்தில் அமர்ந்து கொண்டான்.

அவன் மனம் முழுவதும் ரேணுகாவே வியாப்பித்திருந்தாள். ரேணுகா அவனுக்குத் தூரத்துச் சொந்தம்தான். சொந்தத்தில் பெண் எடுத்தால்தான் குடும்பத்தைப் பொறுப்பாய்க் கவனித்துக் கொள்வாள் என்று கருணாகரன் கணக்குப் போட்டார்.

அவருடைய கணக்கைப் பொய்த்துப் போகச் செய்து விட்டாள் ரேணுகா.

ரேணுகாவுக்குக் கடலளவு ஆசைகள். கல்யாணமான புதிசில் புதுமணத் தம்பதிகள் என்று அவரும் கண்டு கொள்ளாமல்தான் இருந்தார்.

தினசரி தேவையில்லாமல் ஷாப்பிங் செல்வதையும் தேவைக்கதிகமாக ஆடம்பரச் செலவுகள் செய்வதையும் அவரால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அவருடைய சின்னச் சின்ன உபதேசங்களைக் கூட அவளால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

மனைவியின் மீது ஏற்பட்ட அதீத கவர்ச்சியின் விளைவால் மனைவி சொல்லே மந்திரம் என்று நினைத்தான் சிவா.

சின்னச் சின்ன பிரச்னைகள் விஸ்வரூபம் எடுத்தன. 'வயசானாலே இப்படித்தான் அடுத்த தலைமுறையினரை அனுசரித்துப் போகத் தெரியாது' என்ற குற்றச்சாட்டு கருணாகரனின் மீது சுமத்தப்பட்டது.

மனம் கசந்து, குடும்பத்தில் வாழ்ந்து கொண்டிருப்பதைவிட காப்பகமே மேல் என்று நினைத்தார் கருணாகரன். 'நல்ல வேளை, கற்பகம் இந்தக் கொடுமையெல்லாம் பார்க்க வேணாம்னுதான் முன்பே போய்ச் சேர்ந்து விட்டாள்'என்று இறந்து போன தமது மனைவியைப் பற்றி நினைத்து பெருமூச்சு விட்டார்.

பஸ்ஸின் டிரைவர் அநியாயத்திற்கு மெதுவாகச் சென்றார். 'ச்சே! போயும் போயும் இந்த பஸ்ல ஏறினேனே' என்று முணுமுணுத்துக் கொண்டான் சிவா. அவன் மனது கிடந்து அடித்துக் கொண்டது. 'ஆண்டவா... என் மனைவிக்கும் குழந்தைக்கும் எத்தகைய கஷ்டமும் வராமல் காப்பாத்து...' மனம் ஒவ்வொரு துடிப்பிலும் இறைவனைத்தான் வேண்டிக் கொண்டது.

பஸ் பல இடங்களில் நின்ற போதும் ஒரு சிங்கிள் டீ கூட குடிக்க வேண்டும் என்ற உணர்வற்ற நிலையில் தவிப்புடன் இருக்கையில் அமர்ந்திருந்தான்.

பஸ்ஸை விட்டு இறங்கியதும், உறுமிக் கொண்டு காத்திருந்த ஆட்டோவில் தாவி ஏறினான். ஆஸ்பத்திரி நோக்கி விரைந்தான்.

மருத்துவமனை வாசலில் காத்திருந்த

**சிநேகிதா**



அவனுடைய மாமனார் மகாலிங்கம், "வாங்க மாப்பிளே... உங்களுக்கு மகன் பிறந்திருக்கான்... எனக்குப் பேரன் பிறந்திருக்கான்... நான் தாத்தாவாயிட்டேன்"என்று உற்சாகக் குரல் தந்தார்.

"ரேணுகா எப்படி மாமா இருக்கா... சுகப் பிரசவம்தானே... ஒண்ணும் சிரமமில்லையே," படபடப்பாய்க் கேட்டான்.

"அதெல்லாம் ஒண்ணும் சிரமமில்லே மாப்பிளே... எல்லாம் சுகப் பிரசவம்தான். போய் ரேணுகாவையும் குழந்தையையும் பாருங்க மாப்பிளே..."என்று அறைக்குள் அனுப்பி வைத்தார்.

இவன் உள்ளே நுழைந்ததும் அறைக்குள் இருந்த பெண்கள் நாசூக்காய் வெளியேறினார்கள்.

ரேணுகாவின் முகம் மலர்ந்தது. குழந்தையை ஆசை பெருக்கெடுக்கப் பார்த்தான். மனைவியின் தலைமாட்டில் அமர்ந்து அவள் தலையை ஆதரவுடன் தடவினான். அவளுடைய கையும் அவனுடைய கையும் ஒன்றாய் இணைந்து கிடந்தன. விழிகளே ஆயிரம் ஆயிரமாய் விசாரித்துக் கொண்டன.

தட்டிவிட்டு, அறைக்கதவு திறந்து உள்ளே வந்தார் ராமசாமி. அவர்களுக்குத் தூரத்து உறவு. கையில் பிளாஸ்க் இருந்தது. கண்ணாடி தம்ளரில் ஊற்றி, "பஸ்ல வந்தது களைப்பா இருக்கும் சிவா, காப்பி சாப்பிடு"என்று உபசரித்தார்.

"எப்படி மாமா இருக்கீங்க?"என்றான்.

"எம்பொழப்பு எப்படியோ ஓடுதுடா... புள்ளையா, குட்டியா ஒண்டிக்கட்டை... அங்கங்க பத்து நாள்னு தங்கி காலத்தை ஓட்டிடுறேன்..." அவர் முகத்தில் வருத்தம் இருந்தது.

ஆனால் சட்டென மனசை மாற்றிக் கொண்டு உற்சாகக் குரலில் சொன்னார், "உம் மகன் யாருக்கும் அதிகம் சிரமம் கொடுக்காம சட்டுன்னு பொறந்திட்டான்... உன்ன மாதிரியில்லாம..."

"என்ன மாமா சொல்றீங்க...?"

"ஆமாண்டா... நீ பொறந்தப்ப... எல்லாருக்கும் எவ்வளவு கஷ்டமாப் போயுட்டுது தெரியுமா... உங்கப்பன் மருந்து வாங்கக் கடை கடையா அலைஞ்சான்... நீ முழுசாப் பிறந்து வர்றத்துக்குள்ளே தவியா தவிச்சிப் போய்டான்ப்பா... போய் உங்கப்பன்ட்ட சொல்லு... 'அப்பா உன் பேரன், நான் உனக்குக் கஷ்டம் கொடுத்த மாதிரி கொடுக்காம, சமத்தா பொறந்துட்டான்'னு..." என்று சொல்லி வெகுளியாகச் சிரித்தார்.

கன்னத்தில் அறையப்பட்டது மாதிரி உறைந்து போய் அமர்ந்திருந்தான் சிவா.

# இருட்டுக்குள்ளே...



இருட்டுக்குள்
என்னென்னமோ நடக்கிறது!
பூமிக்குள்
புதைந்திருக்கும் வித்து
புத்துயிர் பெறுகிறது!

ஆழ்க்கடலின் உள்ளே
ஆயிரம் அற்புதங்கள்
அவதாரம் எடுக்கின்றன!

அண்டத்தைக் காக்கும்
இருட்டில்தான்
விடியலின் விலாசம்
ரகசியமாய் எழுதப்படுகிறது!

முட்டைக்குள்ளே
முழு இருட்டடைப்பில்
'உயிர்த்தெழுதல்' நடக்கிறது!

இருட்டுக்குள்தான்
மனச்சாட்சியின் வாசல்
திறந்து கொள்கிறது

என்றாலும் -
மனதுக்குள் இருக்கும்
இருளை எல்லாம்
வெளிச்சமாக்கி
வீசுபவன் எவனோ...
அவனே... மகாமனிதன்!

*- கருமலைப்பழம் நீ...*

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# பரிசு

இரா. முருகன்

“சீக்கிரமா வா... நிறைய இடம் போக வேண்டி இருக்கு...”

காரில் இருந்தபடியே குரானா இரைந்தான். டிரைவர். நீலக் கோட்டும், சிவப்புத் தலைப் பாகையுமாக ஆறடி உயரத்தில் சர்தார்ஜி.

காஷ்மிலான் ஸ்வெட்டரை முழங்கைக்குக் கீழே இழுத்து விட்டபடி காரில் ஏறினேன். பகல் சூரியன் தட்டுப்படாத டிசம்பர் முப்பத் தொண்ணு. தில்லி ஏகமாகக் குளிர்ந்து கிடந் தது.

குரானாவையும் என்னையும் சேர்த்துப் பார்க்கிற யாரும், அவன் அதிகாரி, நான் ஊழி யன் என்று நினைக்கலாம்... நினைத்து விட்டுப் போகட்டும். அவரவர் ஆகிருதி அப்படி. நான் ஐந்தரை அடிக் கருப்பன். நல்ல கம்பளி உடுப்பு வாங்கிச் சம்பாத்தியத்தைச் செலவழித்து ஆயுசு முழுதும் தில்லியில் இருக்கப் போவதில்லை. இரண்டு குளிர் காலம் இதே ஸ்வெட்டரோடு ஓட்டியாகி விட்டது. இதுவும் முடிந்து போனால், அடுத்த வருடம் ஊரைப் பார்க்கக் கிளம்பி விடலாம்...

“என்ன பேசாம வரே? அதிகாரி எல்லாம் டிரைவர்கிட்டே பேச்சு வச்சுக்கக் கூடாதுன்னு சொல்லியிருக்காங்களா?”

குரானா வாயைப் பிடுங்குகிறான். எதையா வது நான் உளறி, எக்குத்தப்பாக அவன் புரிந்து கொண்டால் வேறு வினையே வேண்டாம். சர்தார்ஜிக்கு சுபாவமாகவே கோபம் மூக்குக்கு மேலே.

காலையிலிருந்தே பொழுது சரியில்லை. இருந்திருந்தால், ஊருக்கு முன்னால் ஆபீஸுக்கு வந்து, ஜெனரல் மானேஜர் கண்ணில் பட்டுத் தொலைத்திருக்க மாட்டேன்.

“பி.ஆர்.ஓ. சின்ஹா திடீர்னு மட்டம் போட் டுட்டான். வருஷத்துலே கடைசி நாள்... முக்கியமான வாடிக்கையாளர்களுக்குப் புத்தாண்டுப் பரிசு கொண்டு கொடுக்கணும்.. நீ குரானாவோட இப்பவே காரிலே கிளம்பு... அவனுக்கு எல்லா இடமும் தெரியும்... பிடி லிஸ்டை...”

லிஸ்டில் இன்னும் நாலு பக்கம் பாக்கி உண்டு.

பின் சீட்டில் திரும்பிப் பார்த்தேன். வண் ணக் காகிதம் சுற்றிய அட்டைப் பெட்டிகள். மஞ்சள் செலபோன் காகிதம் சுற்றிய கூடைகளில் ஆப்பிளும், ஆரஞ்சும்... டிக்கியில் காலண்டர், டைரி என்று நிறைத்திருக்கிறது.

ஒவ்வொருவராகப் படி ஏறிப் போய்ப் பார்த்துக் கொடுத்து, கம்பெனியின் வாழ்த்துக் களைச் சொல்லி...

கிரேட்டர் கைலாஷில் முதல் செக்டாரில் மிசஸ் பூனம் கன்னா பங்களாவில் ஆரம் பித்தபொழுது பத்து மணி. எம்.டிக்கு வேண்டப் பட்ட குடும்பம்.

பத்து நிமிடம் வாசலில் நின்று மணியடித்து உள்ளே போனால், கன்றுக்குட்டி சைஸ் நாயைக் கட்டிப் போடாமல் அது துரத்தி வந்து...

கால்சராய் ஓரம் கிழிபட்டு, கட்டைவிரல் மேஜையில் இடித்து விண்விண்ணென்று தெறிக்க, புத்தாண்டு வாழ்த்துச் சொல்லி நீட்டிய பரிசை, அசிரத்தையாகக் கையைக் காட்டி மேஜையில் விட்டு விட்டுப் போகச் சொன்ன பூனைக்கண்ணி பூனம்கன்னா.

‘‘ரிலாக்ஸ்...ரிலாக்ஸ்...’’ என்று நாயை அதிர்ச்சியடையாமல் சமாதானப்படுத்துவதில் அவள் மும்முரமாக இருக்க, வெளியே வந்த போது காரில் உட்கார்ந்தபடி குரானா சிரிக் கிறான்...“என்ன... முழுசா வந்தியா?”

டிபன்ஸ் காலனியில் மேஜர் டிரஹான் பங்களா. பச்சைப் பசேல் தோட்டத்தைக் கடந்து உள்ளே நடக்க “அங்கியே நில்லு... கம்பள விரிப்பை இப்பத் தான் சுத்தம் பண்ணியிருக்கு...” ஹூக்கா புகை யோடு இடிக்குரலில் ரிடையர்ட் மேஜர்.

பஞ்சாபி வேலைக்காரி என் கையிலிருந்து பிடுங்கிக் கொண்டு போனதை எல்லாம் அரை வினாடி பார்த்து, “இந்த மாதிரி ஆயிரம் கச்சடா வந்திருக்கு...”என்று நடந்து போகிற வரின் முதுகுக்குப் பின்னால், வாசலிலேயே நின்று வாழ்த்துப் பாட வேண்டிய கஷ்டம்... கம்பெனி வேலை... நாய் வேஷம் போட்டாகி விட்டது...

லாஜ்பத் நகரில் மிஸ்டர் மிட்டல் வீடு. ஏதோ மினிஸ்ட்ரியில் சீப்செகரடரியாக இருந்து ஓய்வு பெற்று, இப்போது பல நிறுவனங் களுக்கு நிதி ஆலோசகர்.

“எத்தனை பேருக்குப் பரிசு போகிறது... எவ்வளவு செலவானது... கம்பெனியில் இந்த வருஷம் என்ன லாபம் எதிர்பார்க்கப்படுகிறது? புவனேஷ்வர் யூனிட்டில் என்ன தகராறு?...” கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டுத் துளைத்து எடுத்தவர், மரியாதைக்குக் கூட உட்காரச்

சொல்லவில்லை.

"அதிகாரி என்கிறாய்... ட்ரிம்மாக வர வேண்டாமா... பால்காரன் மாதிரி இப்படிப் பச்சை ஸ்வெட்டரும், பாலீஷ் போடாத ஷூவுமாக நிற்கிறாயே"என்று கிண்டல் வேறு.

பேசாமல் குரானாவையே உள்ளே அனுப்பியிருக்கலாம்.

அவன் ஜமீன்தார் போல காரை விட்டு இறங்கவே இல்லை.

"இப்படிச் சுத்தணும்னு தெரிஞ்சுதான் காலையிலேயே ஒரு பிடி பிடிச்சுட்டு வந்துட்டேன்..."

குரானா ஏப்பம் விட, காலையில் இரண்டு ரொட்டியோடு காய்கிற என்வயிறு இரைகிறது.

லோதி எஸ்டேட்டில் ராமகிருஷ்ணன் வீடு. கம்பெனியின் டைரக்டரும் கூட. "தமிழா நீ... நல்லதாப் போச்சு..."

அட்டைப் பெட்டியை நானே அலமாரியில் வைத்து, பழங்களை, ஃபிரிட்ஜில் அடுக்கி, காலண்டரைப் பிரித்துச் சுவரில் மாட்டி... சுடச்சுட தேநீர் குடித்தபடி வேலையை மேற்பார்வையிடுகிற மிசஸ் ராமகிருஷ்ணன்.

இரவு கனமாகக் கவிகிறது. குளிரும்தான். சதாசிவம் மெஸ் மூடியிருக்கும். பசியும் தாகமுமாகப் புத்தாண்டு பிறக்கப் போகிறது.

"இறங்கு..." குரானா சொல்கிறான். இந்த அழுக்குச் சந்தில் எந்த வி.ஐ.பி?

கையைப் பிடித்து உள்ளே தரதரவென்று இழுத்துப் போகிறான்.

மங்கலான வெளிச்சத்தில் எழுந்து நிற்கும் சர்தாரிணி. குரானாவின் தோளைப் பிடித்து எக்கித் தொங்கும் ஐந்து வயதுப் பையன்.

"சாப் பசியா இருக்கார்.. எடுத்துவை சீக்கிரமா.."

குரானா கோட்டைக் கழற்றிக் கதவில் மாட்ட அவன் சட்டைக் கிழிசல் கண்ணில் படுகிறது.

"என்ன பாக்கறே.. இப்படி உக்காரு... டிரைவர் வீட்டுலே அதிகாரி சாப்பிட்டா ஒண்ணும் குறைஞ்சு போக மாட்டார்..."

சுடச்சுடத் தட்டில் விழுகிற ரொட்டியும் பருப்பும்.

"வா... உன்னைக் கொண்டு விட்டுட்டுக் காரை கேரேஜ்லே போடணும்..."

குரானா முன்னால் நடக்க, முன்குடுமி வைத்த சின்னப் பையன் எதையோ கொண்டு வந்து எனக்கு முன் நீட்டுகிறான். எதுவும் எழுதாத போன வருஷ டைரி.

"பேவகூப்பையா... உனக்கு விளையாடக் கொடுத்தா..."

குரானாவைக் கையைக் காட்டி நிறுத்தி விட்டு, டைரியைப் பத்திரமாக சட்டைப்பையில் வைக்கிறேன்.

"ஹாப்பி நியூ இயர்..."

சின்னக் கையைப் பற்றிக் குலுக்கி விட்டு நடக்கிறேன்.

குளிர் இதமாக இருக்கிறது.



# அன்பளிப்பாக ஆரோக்கிய வாழ்க்கை!

அவசர அவசரமாகச் சாப்பாடு. பஸ்ஸில் ஆபீசுக்கு ஓட்டம். ஜோக்குகளில் வருவது மாதிரி ஆபீசில் தூங்காமல், உழைப்போ உழைப்பு. மாலையில் வீடு திரும்பும் போது சோர்ந்து களைத்துப் போய், சோபாவிலேயே சுருண்டு முடங்கிவிடும் கணவன்மார்களே!

பால் பாக்கெட் வரும் முன்னாலேயே விழித்து எழுந்து, ஸ்கூல் போகிற பையனுக்கும் பெண்ணுக்கும் ஹோம்ஒர்க் செய்து கொடுத்து (அல்லது சொல்லிக் கொடுத்து!) கறிகாய் நறுக்கி,



சமையல் செய்து, அவர்களைப் பள்ளிக்கூடத்துக்கும், கணவனை ஆபீசுக்கும் அனுப்பும் பரபரப்பில் மூழ்கிவிடும் மனைவிமார்களே!

உங்களுக்கெல்லாம் யாராவது பரிசு கொடுக்கிறார்களா?

'அட, யார் கொடுப்பார்கள்?' என்று கேட்கிறீர்களா?

"கணவனுக்கு மனைவியும், மனைவிக்குக் கணவனும் கொடுக்கக்கூடிய பரிசு இருக்கிறது. அதுதான் ஆரோக்கியமான வாழ்க்கை!" என்கிறார் அப்போலோ ஹாஸ்பிடல்ஸ் ஜெயஸ்ரீ.

"டாக்டரிடம் போய் ஒரு செக்அப் செய்து கொள்ளுங்கள் என்று சொன்னால் கேட்பதில்லை. நான்தான் வலுக்கட்டாயமாக இழுத்துக் கொண்டு போக வேண்டும் ஒருநாள்!" என்று மனைவிமார்கள் சொல்லுகிறார்கள்.

"ஒரு கம்ப்ளீட் செக்-அப் செய்து கொள்வதுதானே?" என்று கணவன்மார்கள் சொல்லும் யோசனையை எத்தனை மனைவிமார்கள் ஏற்றுக் கொண்டு டாக்டரிடம் புறப்படுகிறார்கள்?"

அப்போலோ மெடிகல் சென்டரிலிருந்து 'GIFT OF GOOD HEALTH FOR SOME ONE SPECIAL' திட்டத்தில், ஒரு முழு ஹெல்த் செக்அப் செய்து கொள்ள வசதி செய்திருக்கிறார்கள்.

"டயாபடீஸ், ரத்த அழுத்தம், புற்று நோய், மூச்சுக் குழாய் சம்பந்தப்பட்ட நோய்கள் முதலியவற்றை இந்த மாதிரி பரிசோதனைகளின் போது கண்டுபிடித்து விடலாம். பிறகு தகுந்த சிகிச்சைகள் மூலம் கட்டுப்பாட்டுக்குக் கொண்டு வந்து விட முடியும். நோய் முற்றிய பிறகு சிகிச்சை மேற்கொள்ளுவதை விட, அதைத் தவிர்ப்பதோ முளையிலேயே களைவதோதானே நல்லது?'' என்கிறார் ஜெயஸ்ரீ.

கம்பெனிகள் கூட தங்கள் ஊழியர்களுக்கு இந்த 'ஹெல்த் செக்அப்'பைப் பரிசாக அளிக்கலாம்.

நண்பர்களுக்கு, அப்பா-அம்மாவுக்கு, ஏன் மாமனார் - மாமியாருக்குக் கூட - ஆரோக்கிய வாழ்க்கைப் பரிசு அளிக்கலாம்!

அப்போலோவில் பரிசோதனைகள் செய்து எக்ஸ்ரே, இ.ஸி.ஜி., அல்ட்ரா சவுண்ட் முதலான இருபத்தெட்டு டெஸ்ட்டுகள் எடுத்து, ஒரு முழு ரிப்போர்ட் தயாரித்துக் கொடுத்து விடுகிறார்கள்.

கட்டணம் - கணவன்களுக்கு என்றால் 1250 ரூபாய். மனைவிகளுக்கு என்றால் 1350 ரூபாய். இரண்டு பேருக்கும் சேர்த்து என்றால் 2425 ரூபாய்தான்!

- சித்தார்த்

# என்ன பிடிக்கும் இவர்களுக்கு?




பேட்டி : ஜி.எஸ்.எ
படங்கள் : ஸ்ரீஹரி,கிருஷ்ணமூர்

**உள்ளே—வெளியே :**

*உள்ளே....*

"வருஷா வருஷம் புத்தகக் கண்காட்சி நடத்த ஏன் லேடீஸ் காலேஜைத் தேர்ந்தெடுக்கறாங்க தெரியுமா? கண்-காட்சிக்குத்தான்!"

– பச்சையப்பன் கல்லூரியின் தவப் புதல்வர் ஒருவர் தம் சீரிய ஆராய்ச்சியின்



# கண்காட்சியில் நடந்த 'கண்' ஆராய்ச்சி!

விளைவான கண்டுபிடிப்பை உரக்கச் சொல்லிக் கொண்டிருந்தார். இடம் – காய்தே மில்லத் பெண்கள் கலைக் கல்லூரி. நடப்பது புத்தகக் கண்காட்சி. கல்லூரி என்னவோ லீவ் விட்டாச்சு!

கடந்த பத்தொன்பது ஆண்டுகளாக இந்த Book-fare இதே மாதத்தில், அநேகமாக இதே தினங்களில் நடந்து கொண்டிருக்கிறது. கண்காட்சிக்கென ஒரு நிரந்தர இடம் வேண்டி, அரசைக் கேட்கப் போவதாகச் சொன்னார்கள், அமைப்பாளர்கள். அடுத்த வருஷம் ஒர்க்-அவுட் ஆகிவிடும் என்கிறார்கள். அந்தப் பச்சையப்ப மாணவர் அப்போது வருவாரா, தெரியவில்லை.

நாட்டில் புத்தகம் படிக்கிற பழக்கம் அதிகமாகி இருக்கிறதோ என்னவோ, புத்தகங்களின் வரவு மிக அதிகம். சமையலிலிருந்து சாட்டிலைட் வரை, கைரேகை சாஸ்திரத்திலிருந்து கம்ப்யூட்டர் சாஸ்திரம் வரை அடுக்கடுக்காகப் புத்தகங்கள்.

"ஆனால் வியாபாரம் கொஞ்சம் டல்தான்" என்றார் கவிதா பப்ளிகேஷன்ஸ் ஸ்டாலில் இருந்தவர்.

"பேப்பர் உள்ளிட்ட அச்சுப் பொருள்களின் அநியாய விலை உயர்வால் புத்தகங்களின் விலை எகிறி விட, பலரும் பராக்குப் பார்த்துப் போய் விடுகிறார்கள். சிலர் ஸ்டாலில் நின்றபடிக்கே ஒரு அறுபது பக்கங்கள் படித்தும் விடுகிறார்கள்!"

"விலை ஏறி என்ன, ஏறாட்டா என்ன? இங்கிலீஷ் புக் ஸ்டால்ஸ் பக்கம் போய்ப் பாருமய்யா. கம்ப்யூட்டர் புக்ஸெல்லாம் பிச்சுக்கிட்டுப் போகுது!" என்றார் சுற்றி வருகையில் எதிர்ப்பட்ட கம்ப்யூட்டர் எழுத்தாளர் இரா. முருகன்.

அந்த ரக ஸ்டால்களில் நோட்டம் விட்டதில், ஆங்கிலப் புத்தகம் வாங்குகிறவர்கள் அதற்கென்றே தனியாக ஓவர்டைம் செய்து சம்பாதித்திருக்க வேண்டும் என்று தோன்றியது.

ஒரு ஜென் கதைப் புத்தகத்தை (ரெண்டு கல்கி ஸைஸ்) எடுத்து என்னவாம் விலை என்று பார்த்தால் இருநூற்றுத் தொண்ணூற்று மூன்று ரூபாய்.

"பில் போட்டுறட்டுங்களா சார்?" என்று கேட்டவருக்கு ஓர் அசட்டுச் சிரிப்பை அன்பளிப்பாகக் கொடுத்துவிட்டு, ரை, ரைட்ஸ்!

பொதுவாக, புத்தகங்கள் தயாரிப்பில் ஒருவித நவீனம் வந்திருப்பதைக் காண முடிந்தது. முன்போல் வரைந்த அட்டைகளும் கரைந்த எழுத்துக்களுமாக இல்லாமல், சகல விதமான சப்ஜெக்டுகளுக்கும் அங்கிங்கெனாதபடி நடிகைகள் அட்டைப் படம். அது நாவலானாலும்சரி, நான்மணிக்கடிகையானாலும் சரி.

எண்டமூரி வீரேந்திரநாத்தின் ஒரு மொழிபெயர்ப்பு நாவலின் அட்டையில் இரு பெரிய கண்கள் மட்டும். அவை ஜெயப்பிரதாவினுடையதா,

பானுப்ரியாவினுடையதா என்று மூன்று இளைஞர்களுக்கிடையில் சில்லறைச் சர்ச்சை. நம் ஊகம் – சில்க் ஸ்மிதா. (சரியா பப்ளிஷர்?)

'சமைத்துப் பார்' நாலைந்து வால்யூம்கள் வாங்கிக் கொண்டு, பில் போட நின்ற சமயத்தில் ஒரு பெண்மணி, "சாப்பிட்டுப் பார்க்க நன்னா இருக்கோ இல்லியோ, படிக்க டேஸ்டா இருக்கு."

அம்பேத்கரின் அரசியலமைப்புச் சட்ட எண்ணங்கள் ஐந்தாறு வால்யூம்களில் மொத்தமாக வந்திருப்பதும் மலையாளத்தின் முதல் நாவலான இந்துலேகாவின் தமிழ் மொழி பெயர்ப்பும் (பிரமாதமான கெட்-அப்) இந்த வருஷ விசேஷம். அப்படியே ரஜனீஷின் இளமைக்கால அனுபவங்கள் – அவரது சுயசரிதையாக ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. "நல்ல சேல்ஸ்" என்று பூரித்தார் கம்பெனிக்காரர்.

தினசரி மாலை ஐந்தரைக்கு மைக் வைத்து ஏதாவது பிரசங்கமோ, கலந்துரையாடலோ, நேருக்கு நேரோ கண்காட்சிக்கு உள்ளேயே நடத்துகிறார்கள். எதற்கு என்று தெரியவில்லை. என்னதான் அவை சுவாரஸ்யமாக இருந்தாலும் புத்தக வேட்டையில் மூழ்கி இருப்பவர்களுக்கு மைக் இரைச்சல் மகா ரோதனை. யோசிக்க வேண்டும்.

அப்புறம் கேன்டீன். பலகாரங்கள் அத்தனை சுவையாக இல்லை. நாலு ரூபாய் வாங்கிக் கொண்டு, காப்பி என்று ஒரு திரவம் தருகிறார்கள். டிகாக்ஷன் தயாரிக்க, பக்கத்தில் ஓடும் நதித் தண்ணீர் உபயோகிக்கப்படுகிறதா என்று தெரியவில்லை. சரியான கெட்ட வாசனை. (பிளாஸ்கில் காப்பி கொண்டு போய் விடுங்கள்.)




## வெளியே....

கண்காட்சி நடக்கிற பத்து நாட்களும் காய்தே மில்லத் கல்லூரியின் பிளே-கிரௌண்ட் காதலர்கள் ஸ்பாட் ஆகி விடுவது வழக்கம்.

புல்வெளியில் பட்டாம்பூச்சிகளின் சாம்ராஜ்யம். சீக்கிரமே வேறு இருட்டி விடுகிறதா? வெகு உபயோகம். இங்கே ஸ்பெஷல் ட்யூட்டி போடலாம்.

காம்பவுண்டுக்கு வெளியே, பிளாட்பாரத்தில் சிலர் பழைய புத்தகங்களைக் கடை விரித்திருக்கிறார்கள். உள்ளே கிடைக்காத பல நல்ல புத்தகங்கள் இங்கே கிடைக்க சாத்தியங்கள் தெரிகின்றன. ரமணரும் அயன் ராண்டும் தஸ்லீமா நஸ்ரீனும் ஜேம்ஸ் ஹாட்லி சேஸூம் சகாய விலைக்குக் கிடைக்கிறார்கள்.

— கிச்சா

படம் : ஸ்ரீஹரி

# கவர்ச்சி!

செல்வராஜுக்கு எப்படியோ ஒருவழியாக சென்னையில் வேலை கிடைத்தது.

அடுத்தது தங்க ஒரு இடம் தேடியாக வேண்டும். தேடினான்.

புரோக்கர் பின்னால் அலைந்தான். விளம்பரங்களைப் பார்த்தான். எதுவுமே சரிப்பட்டு வரவில்லை. ஒரு வாரமாய் இப்படியே அலைந்து திரிந்ததில் ரயில்வே ஸ்டேஷன் அருகே 'டுலெட்' போர்டுடன் ஒரு வீடு கண்ணில் பட்டது. ஆனால் வீடுதான் பார்க்கும்படியாக இல்லை. பிரிட்டிஷ்காரன் காலத்தில் கட்டப்பட்டிருந்த அந்தக் கட்டடம் பட்டினி கிடந்தவன் வயிறு போல அங்கங்கே உதிர்ந்து போயிருந்தது.

உள்ளே சென்று பார்க்க அவனுக்குத் தயக்கமாக இருந்தது. எனினும் மனசைத் தேற்றிக் கொண்டு சென்றான்.

கூடத்தில் வீட்டுச் சொந்தக்காரர் கனகசுப்பிரமணியம் ஈஸிசேரில் உட்கார்ந்திருந்தார். செல்வராஜ் வருவதைக் கண்டதும் தொண்டையை செருமிக் கொண்டார்.

"யாரு வேணும்?" என்றார் பரிசீலனையாக.

"ரூம் ஏதாச்சும் காலி இருக்குங்களா?"

"கல்யாணம் ஆயிடுச்சா?"

"இன்னும் இல்லீங்க. இப்பத்தான் வேலையே கிடைச்சிருக்கு."

"சொந்த ஊர் எது?"

'கொட்டாம்பட்டி மதுரைப் பக்கம்."



கனகசுப்பிர மணியம் மூக்குக் கண்ணாடியை நிமிர்த்திக் கொண்டு ஒருகணம் அவனை ஸ்தூலமாய் ஏறிட்டார். பிறகு கேள்வியைத் தொடர்ந்தார்.

"எங்கே வேலை?"

"ஆர்.பி.ஸி. இண்டஸ்ட்ரீஸ். அம்பத்தூர்ல இருக்கு."

"சம்பளமெல்லாம் ஒழுங்கா கிடைக்குமா?"

செல்வராஜுக்கு எரிச்சலாக வந்தது. ஒரு டப்பா வீட்டை வைத்துக் கொண்டு இல்லாத கேள்வியெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கிறானே என்று உள்ளுக்குள் கருவினான். எனினும் மேலுக்கு அமைதியாகவே பதிலளித்தான்.

"நான் வேலை பார்க்கிறது பெரிய கம்பெனிங்க. சம்பளமெல்லாம் கரெக்டா கிடைச்சிடும். அதுல ஒண்ணும் சந்தேகமில்லை."

அதன் பிறகுதான் அவருக்கு நம்பிக்கை வந்து எழுந்து கொண்டார்.

"பேச்சிலர்தான் வசதியா இங்கே தங்க முடியும். கல்யாணம் ஆனவங்களுக்கெல்லாம் சரிப்பட்டு வராது. ஒரே ரூம். வாடகை நானூறு ரூபாய். அட்வான்ஸ் நாலாயிரம் ரூபாய்."



திக்கென்றது அவனுக்கு. இந்த பாவிக்கு இவ்வளவு பேராசையா என்று நினைத்துக் கொண்டான். எனினும் ஒப்புக்கு அவருடன் நடந்தான். படியேறி இரண்டாம் மாடிக்குச் சென்றான். படியெல்லாம் கூட அங்கங்கே சிதிலமடைந்திருந்தன. கொஞ்சம் கவனப் பிசகாய்க் கால் வைத்தாலும் விழுந்துவிட வாய்ப்பிருந்தது. போதாக்குறைக்கு வழிநெடுக ஒட்டடை வேறு. இரண்டாம் மாடியில் இருபுறமும் வரிசையாய் அறைகள். ஒரு பூட்டிய அறை அருகே கனகசுப்பிரமணியம் நின்றார்.

"கொஞ்சம் இருங்க வந்துடறேன்" என்று எதிர்த் திசையிலிருந்த ஒரு போர்ஷனுக்குச் சென்றார்.

"செண்பகம்" என்று குரல் கொடுத்தார்.

மதுமனோ

அவர் அப்படி அழைத்ததும் உள்ளிருந்து ஒரு பெண் வந்தாள். அவளது யௌவனமும் பளிச்சென்ற அழகும் அவனை ஒருகணம் தடு மாற வைத்தது.

இவள் யார்? இவள் மட்டும் தனியாகவா இங்கு இருக்கிறாள்? இவ்வளவு கொள்ளை அழகுடைய பெண் இங்கு எப்படி வந்தாள்!

கனகசுப்பிரமணியம் அவளிடமிருந்து சாவியை வாங்கிக் கொண்டு நகர்ந்த பிறகும் அவனுக்கு ஒரே சிந்தனையாக இருந்தது. வீட்டுக்காரர் அருகே வந்து தொண்டையை செருமிய பிறகே கவனம் கலைந்தது.

அவர் ஏதோ சொர்க்க வாசலைத் திறந்து காண்பிப்பது போல எதிர்த் திசையிலிருந்த ஓர் அறையைத் திறந்து காண்பித்தார்.

அறை பத்துக்குப் பத்து சைஸில் இருந்தது. உள்ளே ஏகப்பட்ட தூசி. தரையிலும் பாதி இடத்திற்கு மேல் சிமெண்ட் பெயர்ந்திருந்தது. எனினும் வீட்டுக்காரர் ஏகமாய்ப் புகழ்ந்தார்.

"ராசியான வீடு. ஜன்னலை திறந்து விட்டா காத்து அபாரமா கொட்டும். ஃபேனே தேவை யில்லை. அருமையா தூக்கம் வரும்."

ஜன்னலைத் திறந்து பார்த்தான். தென்னை மரங்களும், மாமரங்களும் மிக உயரத்திற்கு வளர்ந்திருந்தன. தென்னங்கீற்று கைக்கு எட்டும் அளவிற்கு கட்டடத்தை உரசிக் கொண்டு நின்றிருந்தது.

எதிர்த்திசை ஜன்னலில் இன்னமும் அந்தப் பெண் செண்பகம் நின்றிருப்பது தெரிந்தது. அவனுக்கு இப்போது அந்த வீட்டின் மீதிருந்த அதிருப்தியும் வெறுப்பும் குறைந்து போயிருந் தது. ஜன்னல் வழியாக வீசிய காற்று உண் மையிலேயே மனசுக்கு இதமாக இருந்தது. ஆனாலும் வாடகையும் அட்வான்ஸையும் நினைத்த போது வருத்தமாக இருந்தது. தன்னால் இயன்ற வரை பேரம் பேசிப் பார்த் தான். பிரயோஜனம் இல்லை. வீட்டுக்காரர் கறாராக இருந்தார்.

'ஜல்ஜல்'லென்று கொலுசு சத்தம் கேட்டது. பெருவாய் வெளியே எட்டிப் பார்த்தான்.

எதிர் போர்ஷன் செண்பகம் இடையில் தண்ணீர்க் குடம் சுமந்தபடி சென்று கொண் டிருந்தாள். அவளது இடை அசைவும் கொலுசு சத்தமும் ஜதி பிசகாமல் இருந்தன. வீட்டுக் காரரும் அவனது மனசைப் புரிந்து கொண் டவராய் பேசினார்.

"ஜன்னல் வழியா பார்த்தா ஜோரா பொழுது போயிடும். ரயில் வர்ற சத்தம் கேட் டதும் இறங்கிப் போய் ரயிலை பிடிச்சுடலாம்."

செல்வராஜ் ஒருவழியாய்த் தலையசைத் தான்.

"சரிங்க. வீட்டை யாருக்கும் விட்டுடாதீங்க. இப்ப ஒரு நூறு ரூபாய் டோக்கன் அட்வான்ஸ் கொடுக்கறேன். மீதி அட்வான்ஸை சாயங் காலமா வந்து கொடுத்துடறேன்."

அவரும் அதற்கு ஒப்புக் கொண்டார்.

செல்வராஜுக்கு அங்கு குடிபுகுந்த ஆரம்பத்தில் அசௌகரியமாகவும், அன்னிய மாகவும் இருந்தது. ஆனால் போகப் போக பழகி விட்டது. எதிர் போர்ஷன் பெண்ணின் தரிசனமும், அவளது பார்வையின் வருடலும் அவனுக்கு இதமாக இருந்தது. அவளிடம் நல்ல சமயமாய்ப் பார்த்துப் பேச வேண்டுமென்று ஆசைப்பட்டான்.

ஒருநாள் காலை சீக்கிரமாகவே விழித்து அவள் வருகைக்காக ஆவலாய்க் காத்திருந் தான்.

## வாசகர்களே, சிறந்த சிறுகதைகளைத் தேர்ந்தெடுங்கள்!

ஒவ்வொரு மாதமும் கல்கியில் வெளி யாகும் சிறுகதைகளில் எது சிறந்த கதை? இனி வாசகர்களாகிய நீங்களே முடிவு செய்யலாம்! அப்படி உங்களால் தேர்ந் தெடுக்கப்படும் சிறுகதையின் ஆசிரியருக்கு சிறப்புப் பரிசு வழங்கப்படும்!

இதற்கு நீங்கள் செய்ய வேண்டியது என்ன?

இந்த மாதத்திலிருந்து ஒவ்வொரு வார மும் கல்கியில் வெளியாகும் சிறுகதை களைப் படித்து, அந்த மாதம் முழுவதும் வெளியான சிறுகதைகளில் எது சிறந்த சிறுகதை என்று நீங்கள் கருதுகிறீர்களோ அதை எங்களுக்குத் தெரியப்படுத்துங்கள். எந்தக் காரணத்தினால் அது சிறந்தது என்று நினைக்கிறீர்களோ அந்தக் காரணத்தையும் இரண்டே வரிகளில் சுருக்கமாக எழுதி அனுப்புங்கள். ஒவ்வொரு மாதக் கடைசி இதழிலும் இதற்கென்று ஒரு தனி கூப்பன் பிரசுரமாகும். அந்தக் கூப்பனில்தான் உங்கள் தேர்வையும் கருத்தையும் எழுதி யனுப்ப வேண்டும்.

இந்த (7.1.96) இதழிலிருந்தே இந்தத் தேர்வுக்குத் தயாராகுங்கள். இந்த மாதம் நீங்கள் தேர்ந்தெடுத்து அனுப்புவதற்கான கூப்பன் 28.1.96 இதழில் வெளியாகும்.

பரிசு, நீங்கள் தேர்ந்தெடுக்கும் சிறுகதை ஆசிரியருக்கு மட்டும்தானா? வாசகர்களுக்கு இல்லையா? நிச்சயம் உண்டு! பரிசு பெறும் கதைக்கான சிறந்த இரு வரி விமர்சனம் எழுதியவருக்கு ஒரு சிறப்புப் பரிசு!

— ஆசிரியர்

'சுருக் - நறுக்'கென்று ஒரு சொல்லோவியம் - 13

# சுற்றம் என்பது....

'சுற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை' என்பது உண்மை என்றாலும் சுற்றம் என்பது எப்படி இருக்க வேண்டும்? உங்களுக்கென்று ஓர் அபிப்பிராயம் இருக்குமே!

கீழுள்ள கூப்பனில் உங்கள் எண்ணத்தை - அபிப்பிராயத்தை ஒரு சொல்லோவியமாக எழுதியனுப்புங்கள். பிரசுரமாகும் ஒவ்வொரு சொல்லோவியத்துக்கும் 50 ரூபாய் பரிசு. மொத்தம் 26 வாரம் நடக்கும் இப்போட்டியில் அதிக முறை பரிசுபெறும் ஒருவருக்கு மெகா பரிசாக ஒரு ஜோடி டைடன் கைக்கடிகாரங்கள்!

**முடிவு தேதி : 16.1.96.**

ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

- ஆர்.

சுற்றம் என்பது..........................................

..........................................................

..........................................................

..........................................................

..........................................................

பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................................

..........................................................

..........................................................

அரைமணி நேரம் ஆகியும் அவள் வராமல் போகவே எட்டிப் பார்த்தான். எத்தனை முறை பார்த்த போதும் ஏமாற்றமே மிஞ்சியது. அதன் பிறகு அவளது தரிசனம் கிடைக்கவே இல்லை.

அவனுக்கு ஒரே சிந்தனையாக இருந்தது. செண்பகத்திற்குத் திடீரென்று என்ன ஆகியிருக்கும்? எங்கு சென்றிருப்பாள்? உடல்நலம் சரியில்லாமல் ஊருக்குப் போயிருப்பாளா? வீட்டுக்காரரிடம் கேட்டால் என்ன? சட்! வேண்டாம். ஒருவேளை அவர் தவறாக நினைக்கக்கூடும்.

ஒருநாள் பலத்த மழை பெய்தது. ஜன்னலை சாத்திய பிறகும் ஓட்டை வழியே தண்ணீர் தெறித்து அறைக்குள் வழிந்தோடியது. இது குறித்து முறையிட வீட்டுக்காரரைத் தேடிச் சென்றான். ஆனால் அவர் அதே தெருவில் கடைசியில் இருந்த துணிக்கடை ஒன்றின் சொந்தக்காரரான தம் நண்பருடன் பேசிக் கொண்டிருந்தார்.

"எப்படி தயானந்தம் வியாபாரம் நடக்குது?"

"என் வியாபாரத்துக்கு என்ன கேடு? ஆமா உன் வீட்டு போர்ஷன்ல எல்லாத்துக்கும் ஆள் வந்தாச்சா?"

"வந்தாச்சு தயானந்தம். எல்லாம் உன் தயவுதான். நீ மட்டும்இப்படியொரு செட் அப் பண்ணித் தரலைன்னா வாடகைக்கு ஆள் வருமா?"

தயானந்தம் மெலிதாய் சிரித்தார். அந்தச் சிரிப்பினூடே அனுபவம் பளிச்சிட்டது.

"எந்த விஷயத்திலும் காலத்துக்கு ஏத்த கோலம் வேணும் கனகு. இல்லேன்னா பிழைக்க முடியாது. நீயும் பார்த்துக்கிட்டுத் தானே இருக்கே, எந்தக் கடையிலே எது வாங்கினாலும் இல்லை டீ.வி.ல ஏதாச்சும் பார்த்தாலும் இல்லை வாரப் பத்திரிகை ஏதாச்சும் வாங்கினாலும் ஏதோ ஒண்ணு இனாம் கொடுக்கிறதும் இல்லேன்னா பரிசுத் திட்டங்களை அறிவிக்கிறதும்! இப்படி கவர்ச்சி காட்டித்தானே ஜனங்களை இழுக்கறாங்க. கவர்ச்சி இல்லேன்னா வியாபாரம் இல்லேன்னு அல்லவா ஆயிப் போச்சு."

"ஆமா தயானந்தம். நீ சொல்றது ரொம்ப கரெக்ட். அடுத்த வாரம் முதல் மாடியில ஒரு ரூம் காலியாக இருக்கு. வாடகைக்கு ஆள் பார்க்கணும்."

"கவலைப்படாதே! இந்தத் தடவை என் கடைல வேலை பார்க்கிற வசுமதிய அனுப்பிச்சு வைக்கிறேன். அவ செண்பகத்தை விட அழகு. அவ அப்படி இப்படி அசைஞ்சு நடக்கிறதைப் பார்த்தா ஆள் க்ளீன் போல்ட் ஆயிடுவான். அதுக்கப்புறம் நீ பத்தாயிரம் ரூபாய் அட்வான்ஸ் கேட்டாலும் அப்பீலே இல்லாம தந்துட்டுப் போவான். நீ போ. ஜமாய்ச்சுடலாம்."

செல்வராஜ் ஸ்தம்பித்து நின்றான்!

உணவே மருந்து! மருந்தில்லா மருத்துவ ஆய்வு நூல்! மருந்தே உணவு!

பச்சைக் காய், கனிகள் உண்போம்! பற்பல நோய்களையும் போக்குவோம்!

# இயற்கை உணவே நோய் தீர்க்கும் மருந்து

**இரண்டாம் பதிப்பு** **விலை ரூ. 100**

**ஆசிரியர் : இயற்கை உணவு நிபுணர் : மூ. ஆ. அப்பன்**

(இவர் இயற்கை உணவுச் சித்தர், சிவசைலம் நல வாழ்வு ஆசிரம ஸ்தாபகர், தேங்காய் பழ சுவாமிகளின் பிரதம சீடரும் தம்பியும் ஆவார்)

மருந்து மாத்திரைகள் இல்லாமல், பக்க விளைவுகள், பின் விளைவுகள் இல்லாமல் அறுவை சிகிச்சைகள் இல்லாமல் இயற்கை உணவுகளை அதாவது பச்சைக் காய், கனிகளை மட்டுமே உண்டு எப்படிப்பட்ட நோயாயினும், எவ்வளவு நாட்பட்ட நோயாயினும், மொத்தத்தில் டாக்டர்களால் கைவிடப்பட்ட தீராத நோய் எதுவாயினும் தீர்த்துக் கொள்ள முடியும் என்பதற்கு இந்நூல் ஓர் ஆதாரம்.

முடி உதிர்தல், தீராத தலைவலி, குடிப்பழக்கம், நாட்பட்ட மலச்சிக்கல், மூலம், அல்சர், அலர்ஜி, சைனஸ், ஈசனோபீலியா, அப்பெண்டிக்ஸ் போன்ற சிறிய நோய்களினின்றும், தொழுநோய், இரத்த அழுத்தம், ஆஸ்துமா, நீரிழிவு, ஆர்த்தரெடிக் ரொமாட்டிஸம், வலிப்பு, காசம், புற்று, எய்ட்ஸ், இதய நோய், சிறுநீரக நோய், ஆண்மைக் குறைவு, நரம்புத் தளர்ச்சி, மலடு, மனநோய், வெண்குஷ்டம் போன்ற பெரிய நோய்களினின்றும் விடுதலை பெறலாம் என்றால் நீங்கள் நம்பத்தான் மாட்டீர்கள். ஆனால் அவ்வளவும் உண்மை. உண்மை. உண்மையேதான். அனைத்துக்கும் ஆதாரம் உண்டு! உண்டு! அனுபவக் கடிதங்கள் மூலமாக உண்மைகளை வெளிப்படுத்துகிறார் ஆசிரியர்.

ஆசிரியரே ஒரு தொழு நோயாளியாக இருந்து பிணி நீங்கப் பெற்றவர் என்பதே இயற்கை உணவுக் கொள்கைக்கு ஒரு சிறந்த அத்தாட்சியாக அமைகிறது. அவர் தாம் நலமடைந்த விவரத்தையும் மேற்கொண்ட உணவு முறையையும் நூலில் விளக்குகிறார்.

எந்தெந்த நோய்க்கு எந்தெந்தக் காய், கனிகள் உண்ண வேண்டுமென்று இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது ஒரு தனிச் சிறப்பாகும். எனவே, உங்களுக்கு நீங்களே மருத்துவராகி உங்கள் நோய் எதுவாயினும் போக்கிக் கொள்ளலாம் என்பது உறுதி.

எனிமா, ஈரத் துணிப்பட்டி, ஈரமண் துணிப்பட்டி, இடுப்புக் குளியல், முதுகுத் தண்டுக் குளியல், மண் குளியல், வாழையிலைக் குளியல், சூரிய ஒளிக் குளியல், நீராவிக் குளியல், காந்த சிகிச்சை, கோதுமைப் புல்சாறு மருத்துவம், அறுகம்புல் சாறு மருத்துவம், மூலிகைத்தூள் சாறு மருத்துவம், சிறுநீர் மருத்துவம் ஆகிய மருத்துவ வகைகள் யாவும் விளக்கப்பட்டுள்ளன. இயற்கை நலவாழ்வு வாழ விரும்புவோருக்கும் தீராத பிணிகளுக்கு உட்பட்டு திக்கு திசை தெரியாமல் அலைபாயும் பிணியாளர்களும் இந்நூல் வழிகாட்டும் ஒளிவிளக்காய் அமையும் என்பது திண்ணம்.

புத்தகத்தைப் படிக்க உண்மைகளை நீங்களே உணருவீர்கள். இன்னும் என்ன யோசனை? என்னடா நோய் ஒன்றும் இல்லாதபோது இந்தப் புத்தகத்தை ஏன் வாங்க வேண்டும் என்று நினைக்கிறீர்களா; பிணியாளர்களுக்கு மட்டுமல்ல சார்! உங்களுக்காகவும்தான் இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

இயற்கை உணவுகளை - பச்சைக் காய், கனிகளை உண்டு உங்களது, உங்கள் குடும்பத்தாரது, ஆரோக்கியத்தை மேம்படுத்திக் கொள்ளக் கூடாதா? நோய் வருமுன் காக்கக் கூடாதா? உங்கள் நலம் கருதி உங்களுக்காகவே இந்நூல் எழுதப்பட்டுள்ளது. நீங்கள் அன்றாடம் உண்ணும் காய், கனிகளைக் கொண்டே எப்பேர்ப்பட்ட நோய்களையும் போக்கிக் கொண்டு விடலாம். தொழுநோயே குணமாகிவிட்ட பிறகு மற்ற நோய்களைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? நிச்சயம் குணம் காணலாம். கவலையே வேண்டாம். இந்நூலைப் பெறுங்கள். வழிமுறைகளைக் காணுங்கள். இயற்கை உணவைக் கொள்ளுங்கள். இன்பம் அடையுங்கள். இப்போது இந்நூல் இரண்டாம் பதிப்பாக விற்பனையாகிறது. முதற் பதிப்பு நூலைப் பெற்றவர்கள் ஏகோபித்துப் பாராட்டுகிறார்கள். பலர் நோய் நீங்கி வாழ்கிறார்கள். வாயார வாழ்த்துகிறார்கள்.

தனிப்பிரதி விரும்புவோர் புத்தக விலையோடு தபால் செலவிற்கு ரூ. 5 சேர்த்து M.O. அனுப்பவும். வி.பி.பி. செலவு தனி. புத்தகக் கடைகளிலும் கிடைக்கும்.

## ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்,

2, முத்துக்கிருஷ்ணன் தெரு, த.பெ. எண். 1040, பாண்டி பஸார், தி.நகர், சென்னை - 17. தொலைபேசி : 8281902.

டைக்குமிடங்கள்: ● கோயமுத்தூர்: ராதாமணி ஸ்டோர்ஸ், 137, ராஜவீதி, விஜயா பதிப்பகம், 20, ராஜ வீதி, வஸந்தம ஸடோரஸ, 53 கிராஸகட ரோடு ● சேலம்: ...ளலார் புத்தக நிலையம், 266-A, செர்ரி ரோடு, சந்திரா புக் ஷாப், 5, தேர்வீதி, ஏ.வி.எஸ்.புக் சென்டர், தேர் அருகில், ● மதுரை: சர்வோதய இலக்கியப் பண்ணை, /1, மேல வெளி வீதி, மதர்லாண்ட் புக்சென்டர், 11, மேலவெளி வீதி, செந்தில் புக் சென்டர், நியு காலேஜ் ஹவுஸ், செல்வி புக் ஷாப், நேதாஜி ரோடு, ● திருச்சி: ...தி பப்ளிகேஷன்ஸ், 46-A, மேலபுலிவார்டு ரோடு, இளங்கோ புத்தக நிலையம், 32, மேலபுலிவார்டு ரோடு, ● தஞ்சாவூர்: முரசு புத்தக நிலையம், மணிக்கூண்டு,

கவிதா சந்தோஷத்தில் பூவாய் மலர்ந்தாள். தன் காதல் தந்தையால் இத்தனை சுலபமாய் ஏற்கப்பட்டு விடும் என்று கனவிலும் அவள் எண்ணவில்லை. அப்பா முற்போக்கான எண்ணம் படைத்தவர்தான். ஆனால் தன் திருமணத்திற்கு இந்த அளவு சுதந்திரம் தருவார் என்று கவிதா துளியும் எண்ணி இருக்கவில்லை.



வழக்கம் போல் – இன்று காலையில் சாப்பிடும் போது அப்பா பேச்சைத் துவக்கினார். "கவி.. படிப்பு முடிஞ்சிடுச்சு... நீ எதிர்பார்த்த மாதிரி ஒரு நல்ல வேலையும் கிடைச்சிடுச்சு. இனி எதுக்காக உன் கல்யாணத்தைத் தள்ளிப் போடணும்?"

கவிதா பதில் சொல்லவில்லை. அவள் கண்முன்னே கண்ணன் தோன்றி மறைந்தான். கவிதா பதில் பேசாததைக் கண்டு அப்பாவே தொடர்ந்து கேட்டார். "கவி... மனசில் யாரையும் நினைச்சிட்டு இருக்கியா? அப்படி நினைச்சிட்டு இருந்தா சொல்லிடு... நல்ல பையனா இருக்கும்பட்சத்தில் – நானே கல்யாணத்தை நடத்தி வைச்சிடுறேன். உன் சிந்தனை, உன் ரசனை தனி. அதற்கேற்ற நபரை நீ சந்தித்து இருக்கலாம்...."



இப்போதும் கவிதா பதில் சொல்லவில்லை. திரும்ப அவள் கண்முன்னே கண்ணன் தோன்றி மறைந்தான்.

"என்ன கவிதா பதிலையே காணோம். யாரையும் மனசில்..."

"அப்படியெல்லாம் கிடையாதுப்பா..."

"அப்ப வரன் பார்க்கவா... உனக்கு கிருபாகரன் சாரை தெரியுமில்லையா... நம்ம வீடு கட்டின இன்ஜினியர். அவர் தம் பையனுக்கு உன்னைக் கேட்கிறார். பையனும் இன்ஜினியர்தான். உன் டான்ஸுன்னா அவனுக்கு ரொம்பப் பிடிக்கும். நீயும் அவனைப் பார்த்து இருப்பே..."

"சங்கர்தானே..."

"ம்... ரெண்டு மூணு தடவை உன்னைக் கேட்டு வந்தாங்க. நாந்தான் சாக்குப்போக்குச் சொல்லி அனுப்பிடுறேன். பர்ஸ்டைம் 'படிக்கிறே'ன்னு சொல்லி அனுப்பினேன். பிறகு கேட்ட போது 'வேலை கிடைக்கட்டும்'னு சொன்னேன்... இப்போ திரும்ப வந்து இருக்காங்க. என்ன பதில் சொல்ல... பெண் பார்த்தல் எல்லாம் கிடையாது. உனக்கு ஓகேன்னா – ஜாதகத்தைக் கொடுத்து, பொருத்தம் பார்க்க வேண்டியதுதான்... என்னம்மா சொல்றே...?"

"அப்பா... ஒன் மன்த் என்னை ஃப்ரீயா இருக்க விடுங்க. அப்புறம் என்

# சாத்தியமில்லாத உறவுகள்...

மேரேஜ் பத்திப் பேசலாம்."

அப்பா கவிதாவைப் பார்த்தார். "எத்தனையோ வருஷம் பொறுத்து இருந்தாச்சு. இனி ஒரு மாசம்தானே. சரி" என்று கூறின அப்பாவையே கவிதா பார்த்தாள்.

கண்ணனைப் பற்றி அப்பாவிடம் சொல்லலாமா... அப்பாதான் சொல்லி விட்டாரே, மனசில் யாரையேனும் நேசித்தாயானால் சொல்லி விடு' என்று.

ஆனாலும் இன்னும் கண்ணனிடமே என் காதலை நான் தெரியப்படுத்தவில்லையே. தெரியப்படுத்த கூச்சமாய், அச்சமாய் உள்ளது. கண்ணனாக – காதலை முதலில் வெளிப்படுத்தினால் நன்றாக இருக்கும். இல்லை காதல் என்று லேசாக ஒரு புள்ளி வைத்தால் போதும். நானே கோலம் போட்டு விடுவேன். ஆனால் கண்ணன் இன்னும் எதுவும் சொல்லாமல் இருக்கிறான். பெண்ணான நான் எப்படி தயக்கத்தை விட்டுச் சொல்வேன்...

ஆனால் கண்ணன் என்னை விரும்புகிறான். இல்லையேல் தினசரி ஒரு முறையாவது ஆபீஸுக்கோ இல்லை வீட்டுக்கோ போன் பண்ணுவானா. எங்கு என் நாட்டிய நிகழ்ச்சி நடந்தாலும் தவறாமல் வந்து விடுகிறானே... குறையோ, நிறையோ அக்கறை எடுத்துக் கொண்டு விமர்சிக்கிறானே... அதோடு நான் பத்திரிகைகளுக்கு எழுதும் கட்டுரைகளைப் படித்த கையோடு பாராட்டத் தயங்குவதே இல்லையே கண்ணன்... காதல் இல்லை என்றால் இத்தனை ஈடுபாடு ஏன்?

அவ்வப்போது – அவன் தன் அலுவலகப் பணி நிமித்தமாய் வெளியூருக்குப் போகும் போதெல்லாம் பரிசுப் பொருட்களை அள்ளி வந்து குவிக்கிறானே... இதெல்லாம் காதல் இல்லை என்றால் செய்வானா?

பிறகேன் காதலிப்பதை சொல்லத் தயங்குகிறான். நான் என்ன சொல்வேன் என்றா... நாளை பம்பாயில் இருந்து வந்து விடுவான். வேலை நிமித்தமாய்ச் சென்று இருக்கிறான். வந்ததும் போன் பண்ணுவான்... ஏதாவது பரிசுப் பொருள் கொடுத்தால் – மறுத்து அவன் காதலைப் பரிசாகக் கேட்க வேண்டும்.

கொடுத்து விடுவான்... பிறகென்ன அப்பாவிடம் சொல்லி திருமணத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

**க**விதா தயங்கித் தயங்கித் தன் காதலை வெளிப்படுத்தி விட்டாள். அதற்குள் அவள் முகத்தில் ஏராளமான வியர்வைப் பூக்கள். கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொண்டாள். காலையில் பம்பாயில் இருந்து கண்ணன் வந்ததும் கவிதாவுக்கு போன் செய்தான்.

## யோகி

'மாலையில் சந்திப்போம்' என்றான்.

மாலையில் – பம்பாயில் பிரபலமாய் இருக்கும் ஒரு கஜல் ஆடியோ கேசட்டை பரிசாக கொடுக்க கண்ணன் எத்தனிக்கையில் 'வேண்டாம்' என்றாள். அவனுக்கு ஆச்சர்யம். இதென்ன... தான் தரும் பரிசை இவள் மறுப்பாளா... என்று.

"என்ன கவிதா... ஏன் வேணாங்கறே..."

"எனக்கு வேறு ஒண்ணு வேணும்."

"எது..."

"காதல்... கண்ணன் ஐ லவ் யூ... நீங்களா இதப் பத்திப் பேசுவீங்கன்னு எதிர்பார்த்தேன்... பேசலை... என்னால் உள்ளுக்குள் வைச்சிட்டு இருக்க முடியலை... அதை மறைக்கிற ஒவ்வொரு நிமிஷ





"பாதிக் கச்சேரி போனதே தெரியலை!"

"அப்புறம்?"

"சமர்த்தா இருந்த குழந்தை திடீர்னு அழுது என் தூக்கத்தைக் கலைச்சிடுச்சு!"

– லீலா ஜெயபாண்டியன்

மும் உங்களை இழந்துடுவேனோன்னு பயம் வரும்."

கண்ணன் சற்று நேரம் மௌனமாய் இருந்தான். பிறகு தொண்டையை செருமிக் கொண்டான். தன் மௌனத்தைக் கலைத்து விட்டுச் சொன்னான். "கவிதா... இது எனக்கு ஆச்சர்யம்தான். நீ என்னை விரும்பறதா சொல்றது... நா உன்னோட வைச்சுக்கிட்ட ப்ரண்ட்ஷிப்பை நீ காதல் என்று எப்படி அர்த்தம் கொண்டுக்கிட்டே... சாதாரண பெண் மாதிரியா நீயும் ஒரு சினேகத்தை காதலா கொச்சைப்படுத்தறது..."

கவிதா அதிர்ந்து போனாள். இவன் என்ன சொல்கிறான். அவளுக்கு அவனது பதில் தந்த ஏமாற்றத்தால் அழுகை கூட வந்தது. கட்டுப்படுத்திக் கொள்ள முயன்றாள். முடியவில்லை. அழுதே விட்டாள்.

கண்ணன் பயந்து போனான். என்ன இது.. சின்னக் குழந்தை போல் அழுகிறாள். "கவிதா ஏன் அழறே... நா உன்னை ஒண்ணும் சொல்லலையே...!"

"கண்ணன்... வெறும் நட்பினால் மட்டும் தானா உங்களுக்கு என் மீது அத்தனை ஈடுபாடு?"

"நிச்சயமா... நா எப்போதாவது உன்னை ஈர்க்கிற மாதிரி, வசப்படுத்தற மாதிரி நடந்துக்கிட்டேனா?"

"இல்லை." அந்த விதத்தில் கண்ணன் கண்ணியமானவன்.

"பிறகு எப்படி கவிதா நீ அப்படி அர்த்தப்படுத்திக் கொள்ளலாம் நம் நட்பை..." என்றவன் சிறிது நேரம் பேசாமல் இருந்து விட்டு பிறகு சொன்னான்.

"கவிதா... என் மனசில் உன்னைப் பற்றி எந்த மாதிரியான எண்ணங்கள் இருக்குன்னு சொல்றேன். அப்புறம் என் விருப்பமின்மைக்கான காரணம் உனக்குப் புரியும்."

"என்ன?" என்பது போல் கவிதா பார்த்தாள்.

"கவிதா... உன்னை முதன் முதலா பார்த்தப்ப என் மனசில் மெலிதான ஒரு பரவசம் ஏற்பட்டது. அப்போ உன்னை ஏன் என் வாழ்க்கைத் துணையாக்கிக்கக் கூடாதுன்னு கூட ஒரு எண்ணம் ஏற்பட்டது... ஆனா உன்னோடு பழக ஆரம்பிச்சதுக்கப்புறம் என்னுடைய எண்ணங்கள் மாறுபட ஆரம்பிச்சது...

"நீ சாதாரண பெண் இல்ல. எல்லா விதத்திலும் மேம்பட்டவள். இன்னிக்கு நீ பேர் சொல்ற ஒரு சிறப்பான டான்ஸர். ஒரு நல்ல பத்திரிகையாளர். இதோட நீ உன் லட்சியத்தைத் தொட இன்னும் எவ்வளவோ நடக்க வேண்டி இருக்கு. என்னைக் கல்யாணம் பண்ணிட்டா – அதெல்லாம் சாத்தியம் இல்லை."

"ஏன்?"

"உங்க அப்பாவைப் பார்க்கும்போதெல்லாம் எனக்கு ஆச்சர்யமா இருக்கும். நீ ஒன்றை விரும்பிட்டா அதை அந்த நொடியே வாங்கித் தந்துடுவார். உன் விருப்பம் போலவே உன் வாழ்க்கை அமைய சற்றும் தயங்காதவர். இன்று நீ விரும்பின துறைகளில் எல்லாம் நம்பர் ஒண்ணா இருப்பதற்கு அவரும் ஒரு காரணம். அவர் உனக்கு இந்தளவு சுதந்திரம் கொடுத்து இருக்கலேன்னா உன் ஆர்வம், உன் திறமை முளையிலேயே கிள்ளி எறியப்பட்டு இருக்கும்..."

கவிதா – அவன் சொல்வதைக் கேட்டு விட்டு – பொறுமை இழந்தாற்போல் கேட்டாள். "நீங்க சொல்வதற்கும் – என்னை நீங்க நிராகரிப்பதற்கும் என்ன தொடர்பு இருக்கு?"

"சொல்றேன் கவிதா... நீ இன்னும் உன் வாழ்க்கையில் ஜெயிச்சுட்டே இருக்கணும்னா – முற்போக்கான, பரந்த எண்ணம் கொண்ட கணவர்தான் உனக்கு வரணும்... என்னை நீ கல்யாணம் பண்ணிட்டே, நிச்சயம் எதுக்கும் பிரயோஜனம் இல்லாதவளா போயிடுவே. நா என்னதான் உன் மீது அக்கறை செலுத்தினாலும் அதெல்லாம் சிநேகிதியா நீ இருக்கிற வரைதான். நீ என் துணைவியாயிட்டேனா என் ஈகோ சும்மா இருக்காது. என் மேல் ஷாவனிஸம் சும்மா இருக்காது... என் ஒரு முகம் இளகியதுன்னா இன்னொரு முகம் மோசமானது. நம் கல்யாணத்துக்குப் பிறகு நீ இன்னொரு ஆணிடம் பேசினாக் கூட என்னால் சகிச்சுக்க முடியாது... ஏன்னா – நா வளர்ந்த சூழ்நிலையும் வாழ்ந்த சூழ்நிலையும் அப்படி."

கவிதா அவன் சொல்வதை நம்பாதது

போல் அவனைப் பார்த்தாள்... நீங்க என்னை நிராகரிக்க ஒரு காரணம் கண்டுபிடிச்சுச் சொல் நீங்க..."

"இல்ல கவிதா... உன்னை மணக்க யாருக்குத்தான் பிடிக்காது. பிரமிப்பூட்டும் அழகு.. உன் மீதுள்ள அபிமானத்தால்தான் உன்னை நிராகரிக்கிறேன். என்னால் நீ சிதைஞ்சு போயிடக் கூடாது. உன் திறமை வீணாகி விடக் கூடாது. என் மாதிரியான நபர்கள் உனக்கு சரிப்பட்டு வராது. நீ பின்னாடி ஏமாந்து போயி அழக் கூடாது."

கவிதா எதுவுமே பேசவில்லை. அவனது பேச்சு அவளுக்கு பைத்தியக்காரத்தனமாய்ப்பட்டது. அதேசமயம் அதில் சின்ன உண்மை இருப்பது விளங்கிற்று. எத்தனையோ திறமைசாலியான பெண்களின் வாழ்க்கை – திருமணத்திற்குப் பிறகு சிதைந்து போய் இருக்கிறதே. அவர்களின் அபிலாசைப்படி வாழ இயலாமல் போய் இருக்கிறதே. பிறரைப் பற்றிக் கவலைப்படாதவர்கள் கணவன் எனும் வட்டத்தை விட்டு வெளியே வந்து தங்களை நிலைநிறுத்தி இருக்கிறார்கள்.

சில பெண்கள், 'கணவனே உலகம் அவன் சொல்லே வேதம்' என்று தங்களை குறுக்கிக் கொண்டு பேருக்கு வாழுகிறார்கள்.

ஐயோ... தன்னால் அப்படி வாழ முடியுமா... அப்பாவை மாதிரி எல்லா ஆண்களும் இருந்துவிட மாட்டார்கள். அவர்களின் ஈகோ சும்மா இருக்காதே. கண்ணன் அந்த உண்மையை உரைத்து விட்டானே.

ஆனாலும் – அவனை மனசில் இருந்து முழுசுமாய்த் துடைக்க முடியவில்லை..

"கவிதா... உன் மீதுள்ள விருப்பத்தால் நீ ஒரு தாரகையாகவே மின்னனுங்கிற ஆசையால்தான் உன்னை விலக்குகிறேன்" என்றவன் கிளம்பினான்.

கவிதாவுக்குக் குழப்பமாய் இருந்தது. அப்பா சொன்ன இன்ஜினியர் பையன் எப்படிப்பட்ட குணம் படைத்தவனாக இருப்பானோ என்று பயப்பட ஆரம்பித்தாள்.

# இனி கிண்டல் பண்ண முடியாது!

● *பான் பராக் விற்றுக் கொண்டிருந்தார் மேத்தா. அவர் கடையில் இதர சில ஐட்டங்களும் இருந்தன. ஒரு பெண்மணி, அத்தனை துடைப்பங்களை அலசி ஆராய்ந்து, ஒன்றைத் தேர்ந்தெடுக்க அரைமணி நேரம் செலவிட்டதைப் பார்த்தார் மேத்தா. 'ஒரு brand name உடன் துடைப்பம் தயாரித்து விற்றால் என்ன...?' என்று தோன்றப் போக, 'மங்கி பிராண்ட்' துடைப்பம் மார்க்கெட்டுக்கு வந்தது! மேத்தாவின் மனைவி இம்முயற்சியை பயங்கரமாகக் கிண்டல் செய்தாலும் அவர் வணங்கும் ஆஞ்சநேயர் ('மங்கி' பிராண்ட் பெயரே ஆஞ்சநேயர் நினைவாகத்தானாம்!) அவரைக் கைவிடவில்லை. வருடத்தில் முந்நூறு கோடி ரூபாய்க்கு வியாபாரம் ஆகிறதாம்! 'துடைப்பக்கட்டைக்குப் பட்டுக் குஞ்சலம்' என்று இனி ஒருத்தரும் நக்கல் பண்ண முடியாது!*

- எஸ். சுமதி




● டெலிபோன் வசதி நவீனமடைந்துள்ளதால் கடிதம் எழுதும் கலையே அழிந்துவிடும் என்று பயப்படுகிறார்கள் ஜப்பானியர்கள். அப்பழக்கத்தை நினைவூட்டி ஊக்குவிக்க ஜூலை 23 ஆம் தேதியை 'லெட்டர் ரைட்டிங் டே' என்று கொண்டாடி, சிறப்புத் தபால் தலையும் வெளியிடுகிறார்கள். இதற்கு மக்கள் அளிக்கும் ஆதரவைக் கண்டு பிற நாடுகளிலும் இதே கொண்டாட்டத்தை ஆரம்பித்துள்ளனர். நெதர்லண்டு கொண்டாடிய கடித தினத்தையொட்டி வெளியிடப்பட்ட தபால் தலைதான் மேலுள்ளது.

– அ. குமார்

● *இரண்டாம் உலகப் போர் நடந்து கொண்டிருந்த சமயம்... இங்கிலாந்தின் பிரதமராக இருந்தவர் வின்ஸ்டன் சர்ச்சில். ஒரு பள்ளியின் 150 வது ஆண்டு விழாவில் மாணவர்களிடையே பேச அவரை அழைத்தார்கள். அவர் மனஉறுதி பற்றிப் பேசுவதைக் கேட்க பெருங் கூட்டம். சொன்னார் :*



*NEVER*
*NEVER*
*NEVER*
*NEVER*
*GIVE UP*

*பேச்சு அவ்வளவேதான்! அவருடைய வாழ்க்கையின் வெற்றி இரகசியத்தை ஐந்தே வார்த்தைகளில் கூறி விட்டார். விடாமுயற்சியின் பலம் புரிந்து அரங்கம் கைதட்டி ஆரவாரித்தது.*

*- இந்திராகாந்தி திறந்தவெளி பல்கலைக் கழகத்தின் MBA பாடப் புத்தகத்திலிருந்து :*
*எஸ். எம். வள்ளியப்பன்*



அருகதை கூட எனக்கு இருக்கவில்லை.

ஆனால் அந்த யோசனையெல்லாம் அப்போது தோன்றவில்லை. புறப்பட்டு காஞ்சீபுரம் போய் விட்டேன். அங்கு சென்ற பிறகுதான் அவர் மௌன விரதம் மேற்கொண்டிருந்தது தெரியவந்தது. ஆனால் மிகச் சிறப்பான தரிசனம் கிடைத்தது. அந்தச் சமயத்தில் அகில உலகமும் என் நினைவிலிருந்து அகன்றது. இனம்புரியாத இன்பம் மட்டுமே மனத்தில் வந்து சூழ்ந்தது. நகரவும் மறந்து அவரெதிரில் நின்றேன். சிப்பந்திகள்தான் 'மற்றவர்கள் தரிசிக்க வேண்டும்' என்று என்னை அகற்றினார்கள்.

அதன் பிறகு அடிக்கடி காஞ்சீபுரம் போக ஆரம்பித்தேன். ஒருமுறை புதிதாக ருத்ராட்ச மாலை வாங்கி, பெரியவரின் திருமுடியில் வைத்துப் பிரசாதமாகப் பெற விரும்பிக் கொடுத்தேன். ஆனால் மகா பெரியவர் அதைக் கையில் வாங்கி ஜபிக்க ஆரம்பித்து விட்டார். அவர் ஜபித்து அருளிய அந்த மாலையைப் பெற்றுக் கொண்டதே மிகப் பெரிய திருப்பமாக என் வாழ்வில் அமைந்தது. அன்று முதல் தீய பழக்கங்களை ஒவ்வொன்றாகக் கைவிட முடிந்தது. நெஞ்சில் தூய எண்ணங்கள் நிறைய ஆரம்பித்தன.

எல்லாவற்றுக்கும் காரணம் அவருடனான எனது முதல் சந்திப்புதான். அப்போது ஏற்பட்ட பரவசத்தை வர்ணிக்க எனக்கு ஆற்றலுமில்லை; சொற்களுமில்லை.

– கே. சிவசுப்ரமணியன், பூவாளூர்.

(அனுபவங்கள் தொடரும்...)

# மெய்சிலிர்த்த அனுபவங்கள்!

## மௌனமாய் அருளினார்!

கண்ணதாசனின் 'அர்த்தமுள்ள இந்து மதம்' புத்தகத்தைப் படித்த போது எனக்குள் ஒரு பாதிப்பு... அதில் ஸ்ரீ மஹா பெரியவரைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தார் கவிஞர். அவரைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆவல் வந்தது. அப்போது (1990) நான் பலவிதமான கெட்ட பழக்கங்களுக்கு ஏறத்தாழ அடிமையாகவே இருந்தேன்! பெரியவரின் அண்மையில் செல்லும்


பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன். ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# KALKI SHOPPING PAGE

# காதலுக்குக் கல்யாணம்

ஜெரா

கதிர்வேல் பஸ்ஸை விட்டு இறங்கும் போது சூரியன் உச்சியில் காய்ந்து கொண்டிருந்தான்.

ஹாஸ்டல் ஸ்டாப்பிங் மோரித் திட்டின் மீது சாய்ந்து நின்றபடி பீடியை உறிஞ்சிக் கொண்டிருந்த பலராமன், இவனைப் பார்த்ததும் பீடியைச் சுண்டி விட்டுப் பரபரப்பாய் ஓடி வந்தான்.

கைநீட்டி ப்ரீப்கேஸை வாங்கிக் கொண்டவன், "தந்தி நேத்தே கிடைச்சிருக்குமே" என்று கரகரத்தான்.

சற்று ஒதுங்கி அரசமர நிழலில் நின்று கொண்ட கதிர்வேல் ஆயாசமாய் பெருமூச்செறிந்தான்.

"பணம் பொரட்டிட்டு வரணுமில்லே! அதான் லேட்டாயிருச்சு."

இயல்பாய் பேசிக் கொண்டிருந்த கதிர்வேல் சந்தேகமாய் பலராமனைப் பார்த்தான். நெற்றிப் பரப்பில் கோடுகள் பிறக்க,

"சுகன்யாகிட்டே சொல்லிட்டே இல்லே...?!" என்றான்.

பலராமன் பேசவில்லை.

தலைதாழ்த்திக் கொண்டான்.

இருள் அப்பிய முகத்தில் வெளிச்சப் பொட்டாய் கண்ணீர் எட்டிப் பார்த்தது.

இவனிடம் எப்படிச் சொல்லப் போகிறோம் என்ற பயமும், நடுக்கமும் பரவலாய் அப்பிக் கொள்ள, "நடந்துக்கிட்டே பேசலாம் கதிரு" என்று முணுமுணுத்தான்.

இருவரும் பங்களா கேட்டின் பக்கம் சமீபித்த போது, காலனிக்குள்ளிருந்து வேகமாய் வந்த டாக்ஸி ஒன்று வேகத்தடைக்காகச் சற்றே தயங்க, உள்ளுக்குள் பாதுகாப்பாய் உட்கார்ந்திருந்த அவளை கதிர்வேல் பார்த்து விட்டான்.

சர்வ அலங்காரத்துடன் மின்னலாய் ஜொலித்துக் கொண்டிருந்த அவள் சட்டென்று முகம் கவிழ்த்துக் கொண்டாள். இருவர் கண்களும் சந்தித்துக் கொண்ட அந்தக் கண நேரத்தில், அவனிடம் தென்பட்ட பதற்றத்தைப் படித்து விட்ட கதிர்வேல் கோபமாய் பலராமன் பக்கம் திரும்பினான்.

ஜிவ்வென்று அடிவயிற்றில் பயம் சிதற, கண்ணீரோடு நிமிர்ந்த பலராமன் "கதிரு... வந்து..." என்று வார்த்தை பிறழ தடுமாறினான்.

ஆதரவாய் பலராமனின் கையைப் பற்றிக் கொண்ட கதிர்வேல் உச்சிப் பிள்ளையார் கோவிலை ஏறிட்டான்.

மௌனமாய் ஆரம்பப் படிகளில் ஏறி, பாதியில் பரவி இருந்த மர நிழலில் உட்கார்ந்தான்.

எதிரே நின்றிருந்த



பலராமனை தீர்க்கமாய் பார்த்தான்.
"பலராமா... என்னடா நடந்தது..."

தண்ணீருக்குள் அமுக்கப்பட்டவன் போல சிறிது நேரம் திணறிய பலராமன், "சுகன்யா முடியாதுன்னு சொல்லிட்டா கதிரு! அவ உன்னை ஏமாத்திட்டா" என்று பல்லைக் கடித்துக் கொண்டு இரைந்தான். சட்டென்று சமன நிலைக்கு வந்து, "நாளைக்கு அவ கல்யாணம்! சேலத்துல... அதான் கார்ல போறா..." என்று எங்கோ பார்த்தபடி முணு முணுத்தான்.

கவண்கல் தாக்கிய காக்கை போல் கதிர்வேல் தொய்ந்து போனான். முகம் ரத்தமிழந்து தொங்கிப் போனது. ஆழமான வலி ஆவேசமாய் இதயத்தைப் பிசைய, அதிர்ச்சியின் தாக்கத்தில் அசையா சிலையாகிப் போனான்! உப்பிய கன்னங்களில் கரகரவென்று கண்ணீர் இறங்கி முறுக்கிய மீசை நுனிபட்டு தடம் மாறிப் போனது.

நிஜமாகவே இனி நீ எனக்கில்லையா சுகன்யா! தென்றலாய் என்னை திசை மாற்றி விட்டு, யாரையோ தேடிப் போய் விட்டாயா?

கதிர்வேல் இரண்டு மாதங்களுக்கு முன்பு கடைசியாக அவள் எழுதி இருந்த கடிதத்தை ஞாபகப்படுத்திக் கொண்டான். வழக்கம் போல புலம்பி இருந்தாள். அவள் பெற்றோரைச் சந்தித்து திருமணம் பேசச் சொல்லி வற்புறுத்தி இருந்தாள்! இவனும் வழக்கம் போலவே நல்ல நிலைமை வரும் வரை காத்திருக்கும்படி கெஞ்சி இருந்தான்!

"இனி காத்திருப்பதிலும் அர்த்தமில்லை; நம் திருமணமும் என் கையில் இல்லை" என்று அவள் எழுதி இருந்தது ஒரு சம்பிரதாயமான மிரட்டல் என்றுதான் நினைத்திருந்தான். ஆனால் இப்போது....

நீண்ட நாட்களாய் அவளிடமிருந்து கடிதமே வரவில்லை. பிறகுதான் கதிர்வேல் ஒரு முடிவுக்கு வந்தான். வீட்டை விட்டு அவளை வரச் சொல்லி, எங்காவது கோவிலில் வைத்துத் தாலி கட்டி விடுவது என்ற முடிவோடு, விவரத்தை பலராமனுக்கு எழுதி அவள் சம்மதத்தைக் கேட்கச் சொல்லி இருந்தான்!

அப்போது கூட நேரடியாக வந்து, அவள் பெற்றோரிடம் 'பெண்' கேட்கும் தைரியம் வராமல், குட்டியாய் ஒரு கோழைத்தனம் அவன் மனதுக்குள் குறுகுறுத்தது. உடனே புறப்பட்டு வரச் சொல்லி பலரா மனிடமிருந்து தந்தி வந்ததும் சுகன்யா அவன் முடிவுக்குச் சம்மதித்து விட்டாள்



என்ற நினைப்போடுதான், பணம் புரட்டிக் கொண்டு ஒரு திடீர் திருமணத்துக்குத் தயாராய் வந்திருந்தான் கதிர்வேல். ஆனால்...

சுகன்யாவின் அன்பும், காதலும் இவனுக்கு எப்படிக் கிடைத்தது என்பது சாதாரண விஷயம்!

ஆனால் அவளுடைய பிரவேசத்துக்குப் பிறகுதான், பொறுப்பில்லாமல் ஊரைச் சுற்றிக் கொண்டு உடம்பை வளர்த்துக் கொண்டிருந்த கதிர்வேல், அடிதடிக்கு அஞ்சாமல் சண்டியனாய்ச் சரிந்து கொண்டிருந்த கதிர்வேல், உழைப்பை ஓரம் கட்டும் உருப்படாத உதிரியாய் ஒதுக்கப்பட்ட கதிர்வேல், ஒட்டுமொத்தமாக உருமாறி, வேலை தேடி வெளியூர் போய் இன்று நாலு பேர் மதிக்க நடமாடுகிறான் என்பது அசாதாரணமான விஷயம்!

பெண்களின் அன்பு அசாதாரணங்களை மட்டுமல்ல, சில சமயங்களில் அதிசயங் களையும் கூட சாதிப்பதுண்டு! ஒருவேளை இந்தத் திருமணமும் அதில் சேர்த்தியோ!

**க**ண்களை அழுத்தமாகத் துடைத்துக் கொண்டான் கதிர்வேல். "கவலைப்படாதே கதிரு! நீ அவளை எந்த அளவுக்கு விரும்பறேன்னு எனக்குத் தெரியும்! 'இனிமே ஒண்ணுமே முடியாதுன்னு' அந்தச் சிறுக்கி சொன்னப்ப, என் உடம்பு எப்படிப் பதறிப் போச்சு தெரியுமா! உனக்குக் கிடைக்காத அவ இன்னொருத்தன் கூட எப்படி வாழ முடியும்? நாளைக்கு அவளோட மாமன் பையன் மாப்பிள்ளையா, இல்லே நீ மாப்பிள்ளையான்னு பாத்துப்புடுவோம்! குஸ்தி கொட்டாயில சொல்லி நம்ம பசங்களை வரச் சொல்லி இருக்கேன். இப்படியே சேலத்துக்கு பஸ் ஏறுவோம். அவ உனக்கு எழுதின கடிதாசு எங்கிட்டே கொஞ்சம் இருக்கு, இதோ..."

பலராமன் இடுப்பு வேஷ்டியில் முடிந்து வைத்திருந்த கடிதச் சுருணையைப் பதற்றமாய் எடுத்துக் காட்டினான்!

"மாப்பிள்ளை மூஞ்சியில விட்டெறியலாம், அப்புறம் பாரு அவ கல்யாணத்தை."

வக்ரமாய்ச் சிரித்த பலராமனின் கையில் இருந்த கடிதச் சுருணையை வாங்கிக் கொஞ்ச நேரம் இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான் கதிர்வேல். பிறகு தன் ப்ரீப்கேஸைத் திறந்து, அழகாய் அடுக்கி வைத்திருந்த, சுகன்யாவின் கையெழுத்துத் தெரியும் கடிதங்களைக் கொத்தாக, குழந்தை போல் அள்ளினான்.

"உங்கிட்டே இருக்கற கடிதாசுகளையும்

'சுருக் - நறுக்' என்று ஒரு சொல்லோவியம் - 14

# இளமைப் பருவம் என்பது...

இளமை என்பது உடல் சம்பந்தப்பட்டது மட்டுமல்ல; மனம் சம்பந்தப்பட்டதும் கூட. வாழ்க்கையின் வசந்தமே இளமைப் பருவம்தானே என்பாரும் ஏராளம்!

உங்கள் நோக்கில் இளமைப் பருவம் என்பது என்னவென்று தோன்றுகிறது? உங்கள் எண்ணத்தை கீழுள்ள கூப்பனில் நச்சென்று ஒரு சொல்லோவியமாக எழுதி எங்களுக்கு அனுப்புங்கள். பிரசுரமாகும் ஒவ்வொரு சொல்லோவியத்துக்கும் 50 ரூபாய் பரிசு. இன்னும் 12 வாரங்கள் தொடரப்போகும் இப்போட்டியில் அதிக முறை பரிசு பெறும் ஒருவருக்கு மெகா பரிசாக ஒரு ஜோடி டைடன் கைக் கடிகாரங்கள்!

முடிவு தேதி : 22.1.96.

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

— ஆர்.

**இளமைப் பருவம் என்பது : ..................**

..................................................

..................................................

..................................................

..................................................

**பெயர் : ..................................**

**முகவரி : ................................**

..................................................

..................................................

..................................................

எடு; அவ வண்டவாளத்தைத் தண்டவாள மேத்திப்புடுவோம்!''

கதிர்வேல் பதில் பேசவில்லை. மௌனமாய் எல்லாக் கடிதங்களையும் மடக்கி, நீட்டி பலராமனின் சட்டைப் பாக்கெட்டில் துருத்திக் கொண்டிருந்த தீப்பெட்டியை எடுத்து, குச்சி உரசி, முனையில் பற்றவைத்தான்.

பலராமன் வார்த்தை வராமல் பதறப் பதற, தீ ஆவேசமாய் கடிதங்களைக் கடித்துச் சுவைத்து, கரியாக்கித் துப்பியது. எல்லாம் சாம்பலாகும் வரை மௌனத்தில் சயனித்திருந்த கதிர்வேல், பலராமனின் தோளில் தட்டினான்!

"பலராமா! சுகன்யா மேல் தப்பே இல்லே. வசதி வரட்டும், வரட்டும்னு சாக்கு சொல்லி ஒரு பொண்ணோட வாழ்க்கைப் பிரச்னையை சுலபமா எடுத்துக்கிட்ட நான்தான் முட்டாள்!

"வாழ்க்கையோட போராட பயந்து தயங்கி நின்ன என்னைத் தள்ளி வச்சிட்ட அவபேர்ல தப்பே இல்லே. என் பலவீனத்தை ஒத்துக்காம அவ எழுதின லட்டரைக் காட்டி, அவ என் மேல வச்சிருந்த அன்பைக் கொச்சைப்படுத்திப் பழிவாங்கறது கேவலமான சின்னத்தனம்... அதை நான் நிச்சயம் செய்ய மாட்டேன். அந்த நெனப்பு கூட என் நெஞ்சிலே வரக் கூடாதுங்கறதுனாலதான் லட்டரை எல்லாம் எரிச்சேன்...

"ஏன்னா... நான் இன்னமும் அவளை நேசிக்கிறேன். நான் நேசிக்கற, நேசிச்ச உயிர் என்னிக்கும் நல்லா இருக்கணும்; சந்தோஷமா இருக்கணும்! அப்படி நினைக்கறதும் நடந்துக்கறதும்தான் உண்மையான நேசம்; காதல்!''

கதிர்வேல் கலங்கிய கண்களுடன் பாக்கட்டிலிருந்து தாலி கோத்த தங்கச் செயின் ஒன்றை எடுத்துக் கொஞ்ச நேரம் பார்த்தான்.

தாலியை மட்டும் கழற்றிக் கொண்டு, செயினை பலராமனிடம் நீட்டினான்.

"நீயும், நம்ம பசங்களும் அவ கல்யாணத்துக்குப் போயி, சந்தோஷமா கலந்துக்கிட்டு ஒத்தாசையா இருந்து கல்யாணத்தை நல்ல படியா நடத்திக் குடுங்க. இதை என் அன்பளிப்பா அவளுக்கு 'மொய்' எழுதிடுங்க. இது தான் நீங்க எனக்குச் செய்யற உண்மையான உதவி...''

கைகள் நடுங்க செயினை பலராமன் வாங்கிக் கொண்டான். கண்கள் பனிக்க, அவன் கைகளைப் பற்றி அழுத்திய கதிர்வேல், குனிந்து ப்ரீப்கேஸை எடுத்துக் கொண்டு மெல்ல படிகளில் இறங்கத் தொடங்கினான்!

# போகி

திரும்ப சுவரில் இருந்த கடிகாரத்தில் மணி பார்த்தேன். பதினொன்று. இங்கு வந்து அரை மணி நேரத்துக்கு மேலாகி விட்டது. சம்பந்தப்பட்ட அந்த ஊழியரை இன்னும் காணோம். அலுவலகம் திறக்கும் நேரம் பத்துமணியாம். ஆனால் ஊழியர் எப்போது வர வேண்டும் என்று எவரும் நேரம் பிறப்பிக்க வில்லையோ!

என்னைப் போலவே வரிசையாய் நிறைய பேர். அந்த நீள பெஞ்சில் அமர்ந்து இருந்தனர். சிலர் நின்ற வண்ணம் இருந்தனர். இன்னும் சிலர் அங்கும் இங்கும் உலாத்திக் கொண்டு இருந்தனர். என்னைப் போலவே அவர்களும் – விட்டத்தையும், சுவர்க் கடிகாரத்தையும் பார்த்துக் கொண்டு இருந்தனர்.

பியூனிடம் ஒருவர் – "சார் எப்போ வருவாரு?" என்று கேட்டார்.

"வருவாரு... வருவாரு... வரும் போது பாரு..." என்றார். அரசாங்க அலுவலகத்தில் வேலை கிடைத்து விட்டால் சாமானியனுக்கும் கர்வம் வந்து விடுமோ என்னவோ. அங்கு வந்து இருந்த ஊழியர்களைப் பார்த்தேன். ஊழியர் ஒருவர் பத்திரிகை புரட்டிக் கொண்டு இருந்தார். இன்னொரு ஊழியர் வேறு ஒரு ஊழியரின் டேபிள் முன் சேரை இழுத்துப் போட்டு சுவாரசியமாய் ஏதோ பேசிக் கொண்டு இருந்தார்.

எல்லோரும் அங்கு நடக்கும் கூத்துக்களை வேடிக்கை பார்த்துக் கொண்டுதான் இருந்தோம். எல்லோருக்கும் கோபம் தலைக்கேறியது. ஆனாலும் என்ன செய்வது. பல்லைக் கடித்துக் கொண்டு இருக்க வேண்டும். ஏதாவது பேசினால், வீண்வாதம் ஏற்படும். சம்பந்தப்பட்ட ஊழியர், விடுமுறை என்றாலோ இல்லை வர தாமதமாகும் என்றாலோ வேறு ஊழியர் எவரேனும் அவரது வேலையைச் செய்ய வரலாமே...

ஒரு டீ குடிக்க வெளியே போகலாமா



என்று யோசித்தேன். பிறகு போகாமல் உட்கார்ந்து விட்டேன். நான் இந்தப் பக்கம் எழுந்து போன சமயம், அந்த அரசு ஊழியர் வந்து விட்டால் இப்போதே கிட்டத்தட்ட நாற்பது, ஐம்பது பேர். எத்தனை மணிக்கு வேலைக்கு வந்தாலும் ஒரு மணிக்கு சரியாக கவுண்டரை க்ளோஸ் பண்ணி விடுவார்கள், இந்த உழைக்கும் சீமான்கள். பிறகு நாளை திரும்ப லோலோ



வென்று அலைய வேண்டும்.

வேறொன்றும் இல்லை. புதியதாய் ரேஷன் கார்டு பதிய வேண்டும். விண்ணப்பப் பாரத்தை தர வந்த இடத்தில் தான் இத்தனை வேடிக்கை.

நானும் ஒரு நிறுவனத்தில் கிளார்க்காக பணிபுரிகிறேன். தனியார் நிறுவனம். ஒருநாள் லீவ் போட்டு விட்டு வந்து இங்கு உட்கார்ந்து இருக்கிறேன். இன்னும் அந்த நபர் வரவில்லை. இன்று வராமலே இருந்து விட்டால் நாளை நான் திரும்ப லீவ் போட வேண்டும். "உடல்நிலை சரியில்லாத காரணத்தால்" என்று பொய் சொல்ல வேண்டும். நாம் மட்டும் நேரத்தைக் கடைப்பிடித்தால் பத்தாது. நாம் வேலை செய்யும் இடத்தில் இருப்பவர்களும், நாம் தேடிப் போகிறவர்களும் நேரத்தை சரியாய் கடைப்பிடித்தால்தான் நமக்கு எல்லாம் சரியாய் இருக்கும்.

'இவர்கள் கவர்மெண்ட் ஸ்டாப்ன்னு சொல்றதை விட கவர்மெண்ட் சோம்பேறின்னு சொல்லலாம்' என்று ஒருவர் கமெண்ட் அடித்தார் – தன் வயிற்றெரிச்சல் காரணமாய்.

நாம் நினைப்பது ஒன்று... இப்போது நடப்பது ஒன்று.. ஒன்பதரை மணிக்கு வீட்டில் இருந்து கிளம்பினேன். பத்து மணிக்கு இங்கு வந்து விடலாம். இங்கே வேலைகளை – பதினொன்றரை மணிக்குள் முடித்து விடலாம். பன்னிரெண்டு மணிக்கு ஒரு ரியல் எஸ்டேட்டுக்கு செல்ல வேண்டும் என்று எண்ணி இருந்தேன். தெரிந்த நபர் ஒருவர் சொன்னார். 'மாசம் நூறு ரூபா கட்டுனா போதும். முப்பது மாசம் கட்டணும். ஒரு ப்ளாட் தர்றாங்க. மாசா மாசம் குலுக்கல். குலுக்கல்ல விழுந்துட்டா பணம் கட்ட வேண்டியது இல்லை. ப்ளாட் நம்ம கைக்கு வந்துடும்!' என்று.

சீப் அண்ட் பெஸ்ட்டாய் உள்ளதே, விசாரிப்போம் என்று எண்ணியிருந்தேன். அலுவலக நாட்களில் போக நேரம் கிடைக்க

# ஜெயித்து விட்டேன்...

வில்லை. அதனால் இன்று போய் வந்து விடலாம் என்று எண்ணியிருந்தேன். அந்த நிறுவனம் நகரத்தின் ஒரு மூலையில் இருந்தது. பஸ் பிடித்து அங்கு போக பன்னிரெண்டரை ஆகி விடும். அங்கு விசாரித்து விட்டு சாப்பிடப் போக சரியாய் இருக்கும். மதியத்திற்கு மேல்...

இரண்டு மாசம் முன் ஒரு அவசரத் தேவைக்கு மனைவியின் நகைகளை அடகுவைத்து இருந் தேன். அதைத் திருப்ப வேண்டும். இன்னும் இரண்டொரு வேலைகளுக்கும் திட்டம் தீட்டி இருந்தேன்.

இன்று நான் திட்டமிட்ட எதுவுமே நடக் காது போல் இருக்கிறது. இன்று லீவ் போட்டது வேஸ்ட். ஒருநாள் பொழுது இப்படி பிர யோஜனம் இல்லாமல் வேஸ்ட் பண்ணுவது பயங்கர வேதனையையும், எரிச்சலையும் தரு கிறது. இந்த எரிச்சல், டென்ஷன் நாளையும் தொடரும். நாளை சடார் என்று அலுவலக வேலையோடு ஒன்ற மனசு வராது.



"தலைவர் புனைபெயரைக் கூட விட்டு வைக்கல!"

"என்ன விசயம்?"

"'கரன்சி ப்ரியன்'னு புனை பெயர் வச்சுருக்கார்!"

- அம்பை தேவா

"சார் வர்றாரு... வர்றாரு. எல்லாம் வரி சைல நில்லுங்க" என்றார் பியூன்.

எல்லோரும் ஓடிப் போய் கவுண்டர் முன் நின்றோம். அது கவுண்டர் கிடையாது. ஒரு அறையின் ஜன்னல். ஜன்னல் வழியே பாரத்தை நீட்ட வேண்டும். அந்த அரசு ஊழி யர் பாரத்தை வாங்கி வைத்துக் கொண்டு ஏதேனும் கேட்பார். அவ்வளவுதான்.

மணி பார்த்தேன். பதினொண்ணே முக் கால். ஒரு நபருக்கு ஒரு நிமிஷம் என்று வைத் தாலும் ஐம்பது பேருக்கு ஒரு மணி நேரம் ஆகிவிடும். ஆனால் அத்தனை விரைவாகப் பணி செய்தால் மழை அல்லவா பெய்யும்.

அந்த ஊழியர் உள்ளே நுழைந்தார். சபாரி டிரஸ் அணிந்து இருந்தார். எங்கேயோ கல்யாணத்திற்குப் போய் வந்திருக்க வேண்டும் போலும். நெற்றியில் சந்தனம். இவர் சொந்தக் கம்பெனி வைத்து இருந்தாலோ இல்லை தனியார் நிறுவனத்தில் பணிசெய்தாலோ இவ ரால் இப்படி அலட்சியமாய், காலதாமதமாய் வர முடியுமா? அரை நாள் லீவ் போடச் சொல் வார்கள். இங்கே யார் கேட்கப் போகிறார்கள்.

சீட்டில் உட்கார்ந்தார். பியூனை அழைத் துப் ஃபேனை ஸ்பீட் கூட்டச் சொன்னார். "இந்த குளிரில் நீ விரைத்து சாகக்கடவது" என்று சாபமிட்டேன்.

"வரிசையா நில்லுய்யா. இப்படி நின்னா எப்படிய்யா வாங்குறது" என்று பியூன் சப்த மிட்டது ஜால்ரா சப்தத்துடன் கேட்டது.

ஒவ்வொருவராய் விண்ணப்ப பாரத்தைக் கொடுத்தனர். அவர் ஏதாவது கேட்பார். இதற் குள் பியூனுக்குத் தெரிந்த நபர்கள் சிலர் இடை யில் புகுந்தனர். "சார்... நாங்க காலையில் இருந்து நிற்கிறோம்" என்று ஒருவர் முறை யிட –

"நில்லு... யாரு வேணாம்னா... நீங்க நில்லுங் கண்ணே" என்றார் பியூன் – தமக்கு வேண்டிய நபரிடம்.

மணி பார்த்தேன். பன்னிரெண்டு இருபது. பத்துப் பேரிடம்தான் வாங்கி இருப்பார் பாரத்தை. நான் முப்பதாவது ஆள். ஒரு மணிக் குள் வாங்கி விடுவாரா? பியூன் அடிக்கடி மணி பார்த்துக் கொண்டான். அந்த அரசு ஊழியரும் மணி பார்த்துக் கொண்டார். இப்படி அடிக் கடி மணி பார்க்கும் வேளையில் இரண்டு பேரி டம் பாரம் வாங்கி விடலாம்.

சிறுநீர் வருவது போல் இருந்தது. அடக்கிக் கொண்டேன். நத்தை வேகத்தில் வரிசை சென்றது. திடீர் என்று அந்த ஊழியர் எழுந்து ஜன்னல் அருகே சென்று ஒரு சிகரெட் பிடித் தார். அஞ்சு நிமிஷம் வீணானது. வந்து உட் கார்ந்தார். ஒருவர் அவசரப்படுத்தினார்.

பியூன் "எங்களுக்கு ஏழு கையா இருக்கு" என்று கேட்டார். கிட்டத்தட்ட ஜன்னலை நெருங்கி விட்டேன். எனக்கு முன் இரண்டே பேர்... மணி பார்த்தேன். ஒன்றாக ஐந்து நிமிஷம் இருந்தது. இதயம் படபடவென்று அடித்து கொண்டது. எனக்கு முன்னே இருந்த வர் கொடுத்தார்.

இப்போது நான்... வாங்கிக் கொண்டார். என்னவோ கேட்டார். என்ன கேட்கிறார் என்றே தெரியவில்லை. வாய்க்குள்ளேயே பேசிக் கொண்டார்.

நான் கொடுத்து விட்டு நகர்ந்த போது பியூன் வரிசையில் இருந்தவர்களை அப்புறப் படுத்தினார். "போய்யா... போ.. நாளைக்கு வா. ஒரு மணி ஆச்சு."

நான் ஏதோ பெரிய யுத்தத்தில் ஜெயித்த மாதிரி ஒருவித சந்தோஷத்துடன் வந்தேன்.

# தனபிரியா

வழங்கும்

# சேமிப்பு திட்டங்கள்

◆ தனயோக ஃபிக்செட் டெபாசிட் திட்டம் ◆

டெபாசிட்களுக்கு 1 கிராம் தங்க காசு வழங்கப்படும்

## க்யூமுலேடிவ் டெபாசிட்

| வருடம் | டெபாசிட் தொகை | முதிர்வு தொகை | வருடாந்திர வட்டி | ஊக்கத் தொகை |
|---|---|---|---|---|
| 12 மாதங்கள் | 10,000 | 13,000 | 30.00% | 2% |
| 26 மாதங்கள் | 10,000 | 16,000 | 27.69% | 2% |
| 36 மாதங்கள் | 15,000 | 30,000 | 33.33% | 3% |

## ஃபிக்செட் டெபாசிட்

| வருடம் | வட்டி | குறைந்தபட்ச டெபாசிட் தொகை | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| 12 மாதங்கள் | 25% | ரூ. 5,000/- | 5% |

## பென்ஷனர் மற்றும் முதியோர்

| வருடம் | வட்டி | குறைந்தபட்ச டெபாசிட் தொகை | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| 12 மாதங்கள் | 30% | ரூ. 5,000/- | 2% |

## தனபிரியா பாண்ட்

குறைந்தபட்ச முதலீடு ரூ. 25,000/- இரு மடங்காகிறது. 36 மாதங்களில் ரூ. 50,000/- ஊக்கப் பரிசு : 5 கிராம் தங்க காசு

## தனயோக பாண்ட்

குறைந்தபட்ச முதலீடு ரூ. 50,000/- மும் மடங்காகிறது. 57 மாதங்களில் ரூ.1,50,000/- ஊக்கப் பரிசு : 9 கிராம் தங்க காசு

## திருமகள் திருமண திட்டம் ரிக்கரிங் டெபாசிட் திட்டம்

ரூ.1000 x 25 மாதங்கள் அல்லது
ரூ. 500 x 25 மாதங்கள்
26ம் மாத துவக்கத்தில் ரூ. 50,000/- அல்லது ரூ. 25,000/- பெற்று 27ம் மாதம் முதல் மாதம் ரூ.1000/- அல்லது ரூ.500/- வீதம் 25 மாதத்திற்கு எந்தவிதமான வட்டி இல்லாமல் திரும்ப செலுத்தலாம் அல்லது ரூ. 25,000/-ஐ மறுமுதலீடு 10 வருட காலத்திற்கு செய்து ரூ.2,32,835 பெறுங்கள்

## ஓய்வுதாரர் நலத் திட்டம்

| | |
|---|---|
| குறைந்தபட்ச முதலீடு<br>காலம்<br>வட்டி விகிதம் | ரூ. 1 லட்சம் அல்லது அதற்கு மேல் 6 வருடங்கள் அல்லது அதற்கு மேல் 26 சதவிகிதம் வருடத்திற்கு மற்றும் 1800 சதுர அடியில் வீட்டு மனை திருமுல்லை வாயில் நகரில் இலவசமாக பத்திர பதிவு செய்து வழங்கப்படும் அல்லது ரூ. 15,000/- ரொக்கம் |

வட்டி தொகைக்கு முன் கூட்டின காசோலைகள் பின் தேதியிட்டு வழங்கப்படும்

● ஞாயிற்றுக் கிழமையும் அலுவலகம் இயங்கும் ●

DHANAPRIYA INVESTMENTS (INDIA) LIMITED

**தனபிரியா இன்வெஸ்ட்மென்ட்ஸ் (இந்தியா) லிமிடெட்**

காம்தார் பில்டிங் (2வது மாடி) 143/3. பிராட்வே, சென்னை - 600 108 போன் : 565668

**கார்பரேட் அலுவலகம் :** எண்.34 துரைசாமி சாலை, தி. நகர், சென்னை -17. போன் : 8281116.

"விரைந்து சேருங்கள் மகிழ்ச்சியாக வாழுங்கள்"



# கடிதம்

மணியார்டர் தாளில் கையெழுத்திட முடியாமல் விரல்கள் நடுங்கின. 'பார்வதி அம்மாள்' என்று பெரிது பெரிதாய் எழுத்துக்கள்.

"என்னம்மா... ஃபாரம் முழுக்கவே உங்க கையெழுத்துப் போடறீங்க" என்று கிண்டலடித்தார் தபால்காரர்.

நோட்டுகளை எண்ணிக் கொடுத்தார்.

"வேற கடுதாசி எதுவும் இல்லியா?"

"நாளைக்கு வருதா பார்க்கலாம்..." என்றார் 'இன்றைக்கு இல்லை' என்ற குறிப்புடன்.

பக்கத்து வீட்டு பொன்னி எட்டிப் பார்த்தாள்.

"என்ன பாட்டி... பேரன் அனுப்பிட்டானா..."

பார்வதியின் அருகில் வந்தாள்.

"எப்ப வரானாம்..."

"வருவான். அவனுக்கு எப்ப வசதியோ..."

கிழவி உள்ளே போய்விட பொன்னி நொடித்துக் கொண்டாள்.

'பாரேன். கிழத்துக்கு எவ்வளவு திமிரு. பேரன் மாசா மாசம் சுளையா பணம் அனுப்பி வச்சிடறான். கிழவிக்கு அப்புறமும் பேராசை. இந்த மாதிரி மனுசங்களுக்குத்தான் பணம் தேடி வருது...'

பின்னாலேயே உள்ளே போனாள்.

"ஆத்தா.. பாலு வேணும்.. அதுக்காவத்தான் வந்தேன்."

"எவ்வளவு?" பால் செம்புடன் கிழவி வந்தாள்.

"இருநூறு. புள்ளைக்குக் காய்ச்சல். சோறு வேணாம்னு..."

கிழவி பாலை அளந்து ஊற்றினாள். பொன்னி கொடுத்த காசை வாங்கி புடைவைத் தலைப்பில் முடிந்து கொண்டாள்.

'பாரேன். புள்ளைக்குக் காய்ச்சல்னு சொல்றேன். அப்ப கூட காசுலயே கண்ணு. ஒரு பசு மாட்டைக் கட்டி வச்சுக்கிட்டு.. வரட்டியைக் கூட காசு பண்ணிருது கிழவி...'

பொன்னி முனகிக் கொண்டே வெளியே போனாள்.

உண்மையிலேயே கிழவி மீது பக்கத்து எதிர் வீட்டுக்காரர்களுக்கு எரிச்சல்தான். கிழவி ஒரு பைசாக் கூட விடுவதில்லை.

'பேரன் அனுப்புற காசை என்னதான் செய்யிறாளோ...'

கிழவிக்கு வயசு எழுபதைத் தாண்டி விட்டது. சுகுமார், கிழவியின் மகள் வயிற்றுப் பேரன். கிழவிக்கு ஒரே மகள். அவள் துரதிர்ஷ்டம் மகள் போன

**ரிஷபன்**

ருடமே தவறிப் போனாள்.

சுகுமார் இந்தப் பக்கம் வருவதேயில்லை. ிழவியும் கிராமத்தை விட்டு கருவதாயில்லை.

திடீரென கிழவி உடம்பு சரியில்லை ன்று படுத்து விட்டாள். தபால்காரரை விட்டு சுகுமார் விலாசத்திற்குத் தந்தி அடிக்கச் சொன்னாள்...

'ஒரு வாரத்தில் கிளம்பி வருவதாக'க் டிதம் மட்டும் வந்தது அவனிடமிருந்து.

வந்த கார்டை அத்தனை உடம்பு நோவிலும் தூக்கிப் பிடித்து உற்றுப் பார்த்தாள்.

தபால்காரர் கூடக் கிண்டலடித்து விட்டுத்தான் போனார். 'பேரன் டுதாசியைப் பார்த்துட்டீல்ல. இனி பொழைச்சுக்குவே.'

ஆனால் கிழவிக்குப் போறாத காலந்தான்.

திடீரென மிகவும் முடியாமல் போய் தூக்கத்திலேயே மூச்சு பிரிந்து விட்டது.

பேரன் வந்து சேர்ந்தான்.

காரியங்கள் முடிந்தபின் தபால்காரர் அவன் எதிரில் வந்தார்.

"இதைக் கிழவி உன் கையில கொடுக்கச் சொல்லிச்சு" என்றார்.

தபால் அலுவலக சேமிப்புக் கணக்குப் புத்தகம்.

"நீ அனுப்பின பணம் எல்லாம் இதுலதான் போட்டு வச்சுது."

சுகுமார் திகைப்புடன் பார்த்தான்.

"மணியார்டர் ஃபாரத்துல ஒத்தை வரி இல்லியேன்னு ரொம்பவும் ஏங்கிப் போச்சு. அப்புறம் உன் கார்டைப் பார்த்த பிறகுதான் அதுக்கு மனசு சமாதானமாச்சு. அந்தக் கார்டையே வச்சுக்கிட்டு உட்கார்ந்திருக்கும்."

சுகுமார் தலைகுனிந்தான்.

"கடைசிவரை தன் உழைப்பிலேயே வாழ்ந்துட்டுப் போயிட்டா. அதுக்குத் தேவைப்பட்டதெல்லாம். பாசம்தான். பாவம்... கடைசி வரை கொடுப்பினை இல்லே."

தபால்காரர் நகர்ந்து போனார்.

சுகுமார், மாடத்தில் மடித்து பத்திரமாய் வைக்கப்பட்டிருந்த கார்டையே வெறித்தான் கண்ணீருடன்.



இளம் பிள்ளை வாதம்– சிறு வயதிலேயே முடமாக்கும் கொடிய நோய். 146 நாடுகளில் இந்த நோயை அடியோடு ஒழித்து விட்டார்கள்– எப்படி...? Pulse Polio Immunisation என்கிற திட்டம் மூலம். ஒரு பெரிய இயக்கம் போல் சமூக நல அமைப்புகள் ஒன்று சேர்ந்து, ஐந்து வயதுக்குட்பட்ட அத்தனை குழந்தைகளுக்கும் ஒரு குறிப்பிட்ட தேதியில் போலியோ தடுப்பு மருந்து கொடுக்கச் செய்தார்கள். ஆறு வாரங்கள் கழித்து அதே போல் மீண்டும் ஒரு 'டோஸ்' மருந்து கொடுக்கப்பட்டது. 146 நாடுகளில் 'போலியோ' என்கிற இளம்பிள்ளை வாதம் மறைந்தது.

இதே திட்டத்தை இந்தியாவில் செயல்படுத்த முனைந்துள்ளது ரோடரி இன்டர்நேஷனல் அமைப்பு. டிசம்பர் ஒன்பதாம் தேதி அனைத்து குழந்தைகளுக்கும் போலியோ மருந்து கொடுக்கப்பட்டது. இரண்டாவது கட்டமாக ஜனவரி இருபது அன்று இன்னொரு டோஸ் தர இருக்கிறார்கள். தமிழ்நாட்டில் மட்டும் 39,000 பொது இடங்களில் மருந்து வினியோகம் நடக்கிறது. மறக்காமல் உங்கள் வீட்டு மழலைகளை அழைத்துச் செல்லுங்கள்.

---



''மத்திய அமைச்சர் சுக்ராம் செகரட்டரியை சஸ்பண்ட் பண்ணிட்டாராமே! ஏன்?''

''அந்த மனுஷன் அமைச்சர்கிட்ட போய், ரொம்ப வெய்யிலா இருக்கே, 'டெண்டர் கோகனட்' வேணுமான்னு கேட்டாராம்!'

–து. பூவராகன்

* உதிரவேங்கை



போன்றவற்றைக் கட்டுப் படுத்தக்கூடிய வேறு பல மூலிகைகள் குறித்தும் ஆராய்ச்சிகள் மேற்கொள் ளப்பட்டுள்ளன.

முறையான ஆராய்ச்சி மூலம் மூலிகைகளை வகைப்படுத்தி, மருத்துவ குணங்களைப் பட்டிய லிடும் மாபெரும் பணி நடந்து வருகிறது. அயல் நாட்டவர்கள் இந்த விஷயத்தில் நிறைய

# முந்திக் கொண்டு மூலிகை ஆராய்ச்சி!



* வசந்தி தேவி

மனோன் மணியம் சுந்தரனார் பல் கலைக்கழகத்தின் ஓர் அங்கமான ஸ்ரீபரமகல்யாணி சுற்றுப்புறச் சூழல் அறிவியல் மையம்,துணைவேந்தர் வசந்தி தேவியின் நேரடி கவனத்தின் கீழ் உருவாகி வளர்ந்து வரு கிறது. அமால்கமேஷன்ஸ் நிறுவனம் நூறு ஏக்கர் நிலத்தையும் ஒரு கட்டடத்தையும் இம் மையத்துக்கு வழங்கியுள்ளது.

மூலிகைகள் ஆராய்ச்சியில் இம்மையம் காட் டும் ஈடுபாடு முக்கியமானது. நமது மூதாதை யர்கள் பயன்படுத்திய மூலிகைகள் பல அழிந்து போகும் அபாயம் இன்று நிலவுகிறது.

உதாரணமாக, உதிரவேங்கை என்றொரு மரம். இதன் இலைகளைப் பறித்து பழைய சாதத்தில் போட்டு வைத்தால் சாதம் சிவப் பாக மாறுகிறது. இவ்வுணவை உட்கொண் டால் உதிரப் போக்கு கட்டுப்படும் என்று நம்பு கிறார்கள்.

அழியக்கூடிய நிலையில் உள்ள உதிர வேங்கை தவிர, நீரிழிவு, ரத்தசோகை

ஆர்வம் காட்டி வருவதால், அவர்கள் சில மூலிகைகளுக்கு patent பதிவு செய்துகொள்ளும் அபாயம் இருக் கிறது. எனவே நம்மவர் முந்திக் கொண்டு இதைச் செய்வது அவசியமாகிறது.

மண்புழுக்கள் வளர்ப்பதையும் கவன மாகச் செய்து வருகிறது. மண்புழுக்களின் உதவியுடன் இயற்கை உரம் தயாரிக்க முடியும்.

ரசாயன உரங்களைக் காட்டிலும் இயற்கை உரம் மேலானது என்ற உணர்வு பெருகிவரும் இக்காலத்தில் மண்புழு வளர்ப்பு ஒரு முக்கிய பணி.

மண் புழுக்களை கழிவுகளில் (குறிப்பாக ஹோட்டல்களிலிருந்து வரும் உணவுக் கழிவு கள்) செலுத்தி, இயற்கை உரமாக மாற்றுவது தவிர, மேலப்பாளையத்தில் பீடி சுற்றும் குழந்தைத் தொழிலாளர்கள் பற்றிய புள்ளி விவரச் சேகரிப்பு, நெல்லை மாவட்டத்துக்கே உரிய பாய் பின்னுதல், மண் பொம்மைகள் செய்தல் போன்ற கலைகளை முறைப்படுத்தும் திட்டம் என்று மக்கள் பிரச்னைகளிலும் தன்னை ஈடுபடுத்தி வருகிறது இந்த மையம்.

— பாரதி

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.



அந்தச் சிறுகதை அந்த வாரமே பிரசுரமாகிவிட்டது. இரண்டாண்டுகளில் இருபத்தெட்டுக் கதைகள் பிரசுரமாகியிருந்தாலும் விஜயனுக்கு இந்தக் கதை பிரசுரமாக வேண்டுமே என்று தவித்துக் கொண்டிருந்தான்.

அந்தத் தவிப்புக்குக் காரணம் கவிதா. விஜயனின் மனதை அபகரித்து, அவன் தன் பலமெல்லாம் கவிதாவின் அங்கீகரிப்பில்தான் என எண்ண வைத்தவள்.

அவன் வேலை செய்யும் அதே செக்ஷனில் ஆறு மேஜைகள் தள்ளி அமர்ந்திருக்கிறாள். ஒரு மாதமாய் விஜய் காட்டும் பிரியத்தையும் காதல் வயப்பட்டவர்களுக்கே உண்டான விஷேச நடவடிக்கைகளையும் தெரிந்து கொண்டதாகவே காட்டாதவள். அதன் மூலம் ராட்சசி, அழுத்தக்காரி, அலட்டிக் கொள்கிறாள் கர்வி... என்றெல்லாம் விஜயால் மனதிற்குள் திட்டப்படுபவள்.

"விஜய், உங்களுக்கு போன்...."

பாதி அலுவலகம் நிமிர்ந்து பார்த்தது. பார்க்காத பாதியில் கவிதா இருப்பாள் என்று சொல்லவும் வேண்டுமா?

"ஹலோ... விஜய் பேசுறேன்...."

"கங்ராட்ஸ்... உங்க கதை இன்னைக்கு 'சூரியன்'ல வந்திருக்கு... ரொம்ப உணர்ச்சிகரமாயிருக்கு..."

"தாங்ஸ்... மதியம் பார்க்கலாம்."

விஜய் தன்னையே கதாநாயகனாக்கி, கவிதாவிடமிருந்து பதில் இல்லாததைக் கோபித்து, வருந்தி, தன் காதல் தீ தகிப்பை எழுதியிருந்த கதை இன்று இரண்டு லட்சம் பிரதிகள் பிரசுரமாகி கடைகடையாய்த் தொங்கும்.

'அத்தனை லட்சமும் படிக்கட்டும், படிக்காமல் போகட்டும்! ஏய்.... சின்னப் பேரழகியே... பேசா மடந்தையே... டிரையல் பாலன்ஸ் புலியே... இதைப்படி... என்னைப் புரிந்து கொள். காதல் ஒன்றும் பாவம் அல்ல. நான் உன்னை விரும்புகிறேன் என்று கோடிகாட்டுவது கேவலமும் அல்ல. சொல்லித் தொலையேன் நீயும் என்னை விரும்புகிறாய் என்று. உன் கௌரவமா குறைந்து விடும்!"

விஜய்க்கு வேலை ஓடவில்லை. மணி எப்பொழுது பன்னிரண்டாகும்? எப்பொழுது சாப்பாடு முடிந்து நண்பர்கள் கூடுவோம் என்ற தவிப்பு இருந்தது.

அவனை மானேஜர் அழைக்க, அவர்கள் இன்டர்னல் ஆடிட்டர் அறைக்குச் சென்றார்கள். திரும்புகையில் மணி 12.10. தன் சீட்டிற்கு ஓடினான். அவன் மேஜையருகில் நண்பர்கள் ராஜேஷ், மோகன், புவனா, ஒரு டேபிள் தள்ளி கவிதா.

"என்ன விஜய் சாப்பிட்டுட்டு வந்துர்றியா?"

**சோம. வள்ளியப்பன்**

"இல்லப்பா பசிக்கல...."

சொல்லிவிட்டு மிக ஜாக்கிரதையாய் கவிதா பக்கம் பார்த்தான். காதில் விழாமலா இருக்கும்? இராட்சசி. நிமிர வேண்டுமே... ம்ஹும்.

"ஹலோ... வயித்தக் காயப் போடாதப்பா...' சாப்பிட்டுட்டு வந்திரு."

கட்டாயமாக மறுத்தான். கவிதா இன்பார்மலாக அமர்ந்து பேசும் இந்த முப்பது நிமிடங்களைக் கேவலம் வயிற்றை நிரப்புவதில் இழக்க அவன் தயாரில்லை.

"கதை சூப்பரா வந்திருக்குப்பா...."

"படிச்சீங்களா?"

"நான் முடிச்சாச்சு. புவனா பாத்திட்டாங்க... புக் எங்க?"

சுற்று முற்றும் பார்த்துவிட்டு, "கவிதாகிட்ட இருக்கா?" என்றான் ராஜேஷ்.

விஜய் நேரடியாக கவிதாவைப் பார்த்தான். அவனுடைய மறைமுகக்




# என் சின்னப் பேரழகியே, ராட்சசியே...

காதல் கடிதம் சிறுகதையாக - பகிரங்கமாக அவள் கையில்... படி.... படி.... உனக்குப் புரியாமலா போய்விடும்!"

'தங்கம்' என்று அவள் அண்ணன்மார்கள் அவளைச் செல்லமாக அழைப்பார்களாம். ஒரு முறை மறதியாக அவளுக்கு வந்த போனில் அவன் சின்ன அண்ணன் அழைக்க, போனை எடுத்த விஜய் 'தங்கமின்னு இங்க யாரும் இல்லையே' எனச் சொல்ல, 'சாரி.... அவங்க பேரு கவிதா... வீட்ல தங்கம்' என்று கூப்பிடுவோம் எனச் சொன்னான்.

சரியாகத்தான் அழைக்கிறார்கள் அண்ணன்கள்.... என்ன ஒரு நிறம்! அந்த விரல்கள் பக்கங்களைப் புரட்டுவதையே பார்த்தவனை ராஜேஷ் குரல் திருப்பியது.

பேச்சு சிறுகதைப் போட்டிகள் பற்றியும், பின் அலுவலக டிரான்ஸ்பர்கள் பற்றியும் இருந்தது. விஜய் மனமோ கவிதா படிக்கப் படிக்க அவள் மனத்தில் என்ன ஓடும்? ரியாக்ஷன் என்ன எனப் பார்க்கத் துடித்தது.

அவள் முடித்ததும் அந்தப் புத்தகத்தைச் சிறிது சுருட்டினாற் போல் கையில் வைத்திருந்தாள்... பின்பு மேஜை மேல் வைத்துவிட்டு எழுந்தாள்.

நேரமாகிவிட அனைவரும் சொல்லிக் கொண்டு கிளம்ப, விஜய் பரிதாபமாக கவிதா பக்கம் சென்றான்.

"என்னங்க... கதை படிச்சீங்களா?"

"ம்....."

"எப்படியிருக்கு?...." நெஞ்சு படபடத்தது. அவள் முகத்தில்.. ஒன்றும் தெரியவில்லை. பெரிய ஞானி போல சீ......

"ம்.... ம்...."

"என்ன, ம்... ம்....ன்னா நல்லாயிருக்கா, இல்லையா?"

ஒரு வெற்றுப் பார்வை பார்த்துவிட்டு தன் சீட்டிற்கு சென்று விட்டாள்.

மற்றவர்களும் வந்துவிட விஜய் வேறு வழியின்றி சீட்டிற்கு வந்தான்.

தான் மிகவும் அற்பமாகி விட்டது போலவும், மிகவும் தாழ்ந்து போய் நிராகரிக்கப்பட்டு விட்டது போலவும் தோன்றியது விஜய்க்கு.

தன் இறுதி முயற்சியும் தோல்வி... இதைவிட எப்படி பட்டவர்த்தனமாகச் சொல்ல முடியும். அவன் தகுதிக்கு 'ஐ லவ் யூ' என்றெல்லாம் விடலை மாதிரி சொல்லிக் கொண்டிருக்க முடியாது என்று பட்டுத்தான் சிறுகதையாக்கி அது பிரசுரமுமாகி, படித்தும் விட்டாள். இனி



"என்ன இவரு "கதை, திரைக்கதை, வசனம் தவிர கதைச்சுருக்கம்னும் டைட்டில்ல போட்டுக்கிட்டிருக்காரே?"
"அந்தப் படத்தோட பாட்டுப் புத்தகத்துல வர்ற கதைச் சுருக்கத்தையும் அவரே எழுதினாராம், அதான்!"

- ராஜாராம்

என்ன? எல்லாம் அவுட்.

அன்று அவன் அரைநாள் லீவு. அடுத்த நாள் வந்த பொழுது டீ நேரத்தில் ஒரு சாதாரண ஆபீஸ் விஷயத்தைக் கேட்க வந்த கவிதாவிடம் பேசாமலேயே இருந்தான்.

படட்டும்... அவளுக்கும் அவமானம், உதாசீனப் படுத்தப்படுதல் என்றால் என்ன என்று புரியட்டும்.... மண்டைக்கனம் பிடித்தவள்.....

அடுத்த வாரம்.. சூரியன் பத்திரிகை வரும் அதே நாள் மீண்டும் போன்.

"ஹலோ... விஜய் ஹியர்..."

"விஜய்... உன் கதைக்கு ஏகப்பட்ட பாராட்டுகள்...."

"என்ன? சொல்லு ராஜேஷ்..."

"மொத்தம் மூணு லெட்டர்ஸ்... வாசகர் கடிதத்துல வந்திருக்குடா... அதுல ஒரு லெட்டர் தங்கம்ன்னு யாரோ எழுதியிருக்காங்க..."

விஜய் படபடப்புடன் திரும்பிப் பார்த்தான். கவிதா சீட்டில் இல்லை. இன்று லீவாம்.

"புக் உங்கிட்ட இருக்காடா?... சீட்லயே இரு... நான் இப்ப வர்றேன்...."

விஜய் ஓடினான். புத்தகத்தை வாங்கினான், பக்கங்கள் கதறின.

ஒன்று, இரண்டு... ஆ.... இதோ....

"'எனக்கொரு பதில் சொல்லாயோ,' கதை மிகச் சிறப்பாக இருந்தது. அந்தப் பெண் சம்மதம் சொல்ல மாட்டாளா? 'சொல்ல வேண்டும்' என நினைக்க வைத்து விட்டார் ஆசிரியர். அத்தகையவரைக் காதலிக்க அவளுக்குக் கொடுத்தல்லவா வைத்திருக்க வேண்டும்.

தங்கம், சென்னை - 4."

## இளைஞர்கள் விழிப்படைய ஒரு தொடர் கதை.....

◆ கி. ராஜேந்திரன் அசத்திவிட்டார். இருபத்தி நாலு வாரங்கள் வந்த 'இருட்டு அரண்மனைகள்' தொடர் எங்கள் நெஞ்சத்தைக் கொள்ளை கொண்டது.
மொரட்டுப்பாளையம், க.நா. இராஜேஸ்வரன்.

◆ சூர்யாசுவாமி, நாகநந்தியை விட கொடியவராக இருக்கலாம். ஆனால் அவரது கைங்கர்யத்தால்(?) அல்லவோ சாயாவுடன் வாசகர்களாகிய நாங்களும் கிட்டத்தட்ட ஐரோப்பா முழுவதையுமே 'இலவசமாகச் சுற்றிப் பார்க்க முடிந்தது. ஆசிரியரின் அற்புதமான வர்ணனைகளைப் புகழ வார்த்தைகள் கிடைக்கவில்லை. அரஸ் கைவண்ணமும் அற்புதம்.
கீழ்நத்தம், தி.சு.சங்கரநாராயணன்.



◆ 'இருட்டு அரண்மனைகள்' மிகவும் அருமை. "சமூக விரோதச் செயல்கள்'' புரிவோர் பற்றி விளக்கமாகப் புரியும்படி எழுதியுள்ளீர்கள். இது மாதிரி தொடர்கதை மூலம் இளைஞர்களை விழிப்படையச் செய்ய எண்ணும் உங்கள் முயற்சியைப் பாராட்டுகிறேன்.
இராஜன் நகர், எம். சுதா.

◆ சமீபத்தில் தமிழில் எழுதப்பட்ட எந்தத் தொடர் கதையுமே சமுதாய நடப்புகளை இருட்டு அரண்மனைகள் அளவுக்கு உள்வாங்கி இருக்கவில்லை. கிரைம் தொடர்கதை என்பது வாசகர்களிடையே வெறும் திகிலை ஏற்படுத்தினால் போதும் என்ற நினைப்புடன், கதாசிரியரின் க்ரைம் சம்பந்தமான புத்திசாலித்தனத்தை வெளிச்சம் போட்டுக்காட்டும் ஒரு படைப்பு என்ற இன்றைய மோசமான இலக்கணத்தை கி.ரா உடைத்து சாதனை புரிந்திருக்கிறார். அதிலும், உலக நாடுகளின் கண்டனத்தைப் புறக்கணித்து, பசிபிக் கடல் பகுதியில் அணுகுண்டுச் சோதனை நடத்தும் பிரெஞ்ச் அரசாங்கத்திற்கு, அதன் உள்நாட்டில் ஒரு மனித அணுகுண்டை கற்பனையில் தம் கதையில் வெடிக்க வைத்துப் பாடம் புகட்டியிருப்பது பிரெஞ்ச் அரசின் அணுக் கொள்கையை எதிர்க்கும் அத்தனை பேருடைய ஆதங்கமாகவும் கி.ரா. மூலமாக வெளிப்பட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.
திருநெல்லிக்காவல், ஆர். காமராஜ்.

# நடராஜ் சிட்ஸ் (தமிழ்நாடு) பிரைவேட் லிமிடெட்

நடராஜ் ஃபைனான்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ்,
நடராஜ் எஸ்டேட்ஸ் - (பண்ணை நிலம்).

"சாந்தி காம்ப்ளெக்ஸ்", 3வது மாடி, 26, ரங்கநாதன் தெரு, தி. நகர், சென்னை-600 017.

**வட்டி 24% P.A. பரிசு 4% + 1% பென்ஷனர்**

கிளைகள் : "இதயம் காம்ப்ளெக்ஸ்", 51- தெற்கு வீதி, (மாடி), திருவாரூர்- 610 002.
2-B - செல்வம் நகர், மெடிகல் காலேஜ் சாலை, தஞ்சாவூர்- 613 007.
1-B - காமராஜர் சாலை, (மாடி), காஞ்சிபுரம்- 631 501.

**Phone : 434 20 98, 484 01 50**



" சிறிய தொழில் ஒன்று ஆரம்பிக்க படாத பாடுபட்டேன். வங்கிகளில் எல்லாம் முயற்சித்துப் பார்த்தேன். ஆனால் நடராஜ் சிட்ஸ் நிறுவனத்தில் சந்தாதாரராகி, சீட்டு எடுத்து தற்பொழுது தொழில் முனைவராக ஆகி உள்ளேன்".

*—கீதா கிருஷ்ணாநந்தன்*

*நடராஜ் சிட்ஸ்*
*அளிக்கும்*
*மிகப்பெரிய பரிசு திட்டம் 1996*
*விரைவில் எதிர்பாருங்கள்*

" சிட் பண்ட் சட்டப்படி பதிவு செய்யப்பட்ட ரூ. 5,000, ரூ. 10,000, ரூ. 15,000, ரூ. 25,000 சீட்டு குரூப்புகள் நடைமுறையில் உள்ளன. மேலும் புதிய பெரிய குரூப்புகள் ஆரம்பமாக இருக்கின்றன".

சீட்டில் சேர்கிறவர்களுக்கும் அறிமுகப்படுத்துகிறவர்களுக்கும் பரிசு பொருட்கள் காத்திருக்கின்றன.

...ங்கள் வாராந்திர விடுமுறை நாட்களை, ...கிழ்ச்சியுடனும், நிம்மதியுடனும் கழிப்பதற்கு அமைதியான, அழகான சூழ்நிலை

...சென்னை - பெங்களூர் நெடுஞ்சாலையில் ...காஞ்சீபுரத்துக்கு அருகே - பஸ்ரூட்டில் தயாராகிறது. ...மாற்றத்தை தவிர்க்க இன்றே முன்பணம் செலுத்தி ...திவு செய்து கொள்ளுங்கள்.






## சிறுகதைத் தேர்வுக் கூப்பன்

கடந்த 7.1.96 கல்கி இதழ் தொடங்கி இந்த (28.1.96) இதழ் வரை வெளியான சிறுகதைகளில் எந்தச் சிறுகதையை நீங்கள் சிறந்ததாகக் கருதுகிறீர்கள்? சிறுகதையின் தலைப்பு, ஆசிரியர் பெயர் மற்றும் நீங்கள் அதைத் தேர்ந்தெடுத்ததற்கான காரணத்தையும் சுருக்கமாக இரண்டே வரிகளில் எழுதியனுப்புங்கள்.

ஒவ்வொரு மாதமும் இப்படி நீங்கள் தேர்ந்தெடுக்கும் சிறுகதையை எழுதிய ஆசிரியருக்கும் சிறப்புப் பரிசு; அதற்கான காரணத்தை இரண்டே வரிகளில் எழுதினாலும் கச்சிதமாக எழுதும் ஒரு வாசகருக்கும் சிறப்புப் பரிசு!

இம்மாதக் கூப்பன் அனுப்பக் கடைசி தேதி : 8.2.96

### ஜனவரி மாத சிறுகதைத் தேர்வுக் கூப்பன்

சிறந்த சிறுகதை : ...............................

...............................................

கதாசிரியர் பெயர் : ...............................

தேர்ந்தெடுக்கக் காரணம் : ...............................

...............................................

...............................................

...............................................

என் பெயர் :...............................

முகவரி : ...............................

...............................................

...............................................



அலுவலகத்துக்கு நேரடியாக போகும் பஸ் வரச் சில நிமிடங்களே உள்ளன. அதை விட்டால் எல்லாமே தலைகீழ்.

நாராயணன் வேகமாய்ப் போகப் போகப் பை தொடையில் இடித்துக் கொண்டே வந்தது. அதன் பட்டை தோள் எலும்பைக் குத்தியது. வியர்வை கண்ணுக்குள் இறங்கிக் கரித்தது.

"அய்யா... சாரு" நாராயணனின் வேகத்திற்கு ஏற்ப ஒரு குரல் துரத்தி வந்தது. அனிச்சையாய் நின்றான்.

அந்த மனிதன் கிராமத்தர்னின் தோற்றத்தில் இருந்தான். ஒரு பழைய போர்வையைக் கழுத்தில் தொங்கவிட்டிருந்தான். போர்வையில் உள்ள நிறம் அதனை நெய்த போது உள்ள நிறமாக இருந்திருக்க முடியாது.

நாராயணன் நின்றது அவனுக்குத் தெம்பைக் கொடுத்திருக்க வேண்டும். அசட்டுத்தனமாய்ச் சிரித்தான். ஏதாவது தரச் சொல்லும் பாவனையில் தலையால் அபிநயித்தான்.

நேரம் ஆகிவிட்டது...

துழாவியதில் ஏதோ ஒரு நாணய வில்லை அகப்பட்டது. என்ன என்று கூடப் பார்க்கவில்லை.. அவனை நோக்கி வீசிவிட்டு மீண்டும் வேகமாக நடந்தான்.

பஸ்ஸில் டிக்கட்டிற்குக் காசு எடுக்கப் போகும் போது ஒரு ரூபாய் நாணயம் பையில் இல்லாமல் போனது தெரிந்தது. அதையா அவனுக்குப் போட்டோம். நாராயணனின் பையில் இதர தக்கையான வில்லைகளும் இருந்தன. அவை சட்டைப் பையின் இதர காகிதங்களுக்குள் சிக்கிக் கொண்டதால் அகப்பட்டது ஒரு ரூபாய் நாணயம்தான்.

நாராயணனுக்கு அது மிகையான தருமத் தொகையாகப் பட்டது. பஸ் புறப்பட்டு வேகம் எடுத்ததில் நாராயணன் அனைத்தும் மறந்தவனானான்.

அடுத்த நாள்......

பஸ் ஸ்டாண்டில் இன்னும் பஸ்ஸைக் காணோம். "சாமி... நான் பண்ருட்டிங்க.. ராத்திரி கும்மோணத்துலேந்து இங்க வந்து இறங்கறப்போ பைய எவனோ அடிச்சுட்டுப்,

ாயிட்டான். ஊருக்குப் போவணும்."

அவனேதான்... அவனுடைய முகம் மறந்து ாயிருந்தாலும் அவன் போர்த்தியிருந்த ரசித்தி பெற்ற போர்வை மறக்கக் கூடியதா? ற்று காலை என்னிடம் காசு வாங்கி விட்டு ன்றைக்கு விடிகாலை வந்ததாகப் புளுகு தைப் பார்.

"நேத்திக்கு நா குடுத்த ஒரு ரூபாய என்ன ண்ணே...?" நாராயணன் அவனை ஸ்தம்பிக்க வப்பதற்காகக் கேட்டான். ஆயிரம் பேரிடம் நவன் பிச்சை எடுக்கலாம். ஆயிரம் பேரில் ரு ரூபாய் போட்டவனை நிச்சயம் நினைவு நிறுத்திக் கொள்ள முடியும்.

அவன் நாராயணனின் கேள்விக்காக அலட்டிக் கொள்ளவில்லை. தன்னை ஒருவன் மடக்கி விட்டானே என்னும் குற்ற உணர்ச்சி அவன் முகத்தில் ஏற்படவில்லை.

"ஆமா, ஒரு ரூபாய மாசம் பூராவுமா வச்சிருப்பாங்க. நேத்தியே காலி. பசிக்குது சாமி. மயக்கமா இருக்கு ராஜா..." அவனுடைய காதில் கறுத்துப் போன முனையுடன் பாதிப் பீடி ஏவுகணை போலச் சாய்வாக அமர்ந்திருந்தது.

அவன் சிரித்தான். அதே அசட்டுச் சிரிப்பு.



சுப்ரமணியன் ரவிசந்திரன்

நாராயணன் பையைத் துழாவுவதை ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான். இன்னும் ஒரு ரூபாயா.

"பசிங்கறே... பீடி புடிக்கறே?" பேசிக் கொண்டே துழாவிய நாராயணனின் கைகளுக்கு நாணயம் அகப்படவில்லை. அவசரமாய் நாராயணன் கையை எடுத்து விட்டு நகர்ந்தான். அவனுடைய பஸ் வந்து விட்டது...

"சாமி... சாமி..." என்று உடன் ஓடி வந்தவன் ஈடுகொடுக்க முடியாமல் நின்று போனது, தேய்ந்த ஒலியின் மூலம் தெரிந்தது. "தத்" என்று அவன் துப்பியது மட்டும் கேட்டது.

அந்த அவசரத்திலும் நாராயணனுக்கு அவமானமாய் இருந்தது. நேற்று ஒரு ரூபாய் போட்ட நன்றி கூட இல்லாமல் 'தத்' நாராயணனைப் பார்த்துத்தான் துப்பினான் என்பது யாரும் அறியாமல் இருக்கலாம்.

ஆனாலும் பஸ்ஸில் அமர இடம் கிடைத்தும்கூட அவனால் அதற்கான சுகத்தை அனுபவிக்கும் நிலைக்கு மனதைக் கொண்டு வர முடிய வில்லை.

மரியாதை அற்ற பயல். சாயங்காலம் வரட்டும்...'

அன்று மாலை பஸ் ஸ்டாண்ட் முழுதும் தேடினான். இல்லை. சாயங்காலங்களில் வேறு ஏதேனும் உபரியாய்த் தொழில் வைத்திருக்கிறானா. வேறு ஏரியாவா?

தொலைகிறான்.

அடுத்து இரண்டு நாட்கள் அவன் பிச்சை கேட்ட போது நாராயணன் அவனைப் புறக்கணித்து விட்டுப் போனான். நாராயணன் இப்போது நெஞ்சில் பாரம் அற்றவனாக ஆனான்.

திங்கட் கிழமை.. மாமூலாய் வரும் டிரைவர் கண்டக்டர்கள் இன்று வர மாட்டார்கள். ஆஃப் ட்யூட்டி ஆட்கள்தான். அவர்கள் சரியாக வண்டியை எடுத்து விடுவார்கள். ஆபீசிலும் பங்ச்வாலிடி இன்ஸ்பெக்ஷன் என்ற பெயரில் ஒரு குழு புறப்பட்டிருக்கிறது. பாண்டிச்சேரியில் தாமதமாய் வந்த பெண்ணிற்கு ஸ்தலத்திலேயே சஸ்பென்ஷன் ஆர்டர் கொடுத்திருக்கிறார்கள். போன வாரம் தான்.

நாராயணன் நடையை எட்டிப் போட்டான்.

"சாமி..." யார்? அட இவன் வேறு.. நாராயணன் நடந்தான்.

"அய்யா.. தொரை..." தொரையா... நாசமாப் போச்சு.

"அய்யா... ஒன்னத்தான..."

"..............."

"யோவ்... ஜோல்னாப் பை.. மனுசன் கத்தறானில்ல... யோவ்..."

நாராயணனுக்கு ஒரு நிமிடம் வெலவெலத்துப் போனது. சஸ்பென்ஷன், பங்சுவாலிடி அனைத்தும் மறந்து போனது. 'யோவ்... ஜோல்னாப் பை!'

'ராஸ்கல்... உன்னை...'

'ம்ஹூம்.. டயமாச்சு' என்று உள்ளே கூவிய குரலால் உந்தப்பட்டு பஸ் ஸ்டாண்டை நோக்கி ஓடினான்.

பஸ் லேட்டாகவே வந்தது. இடமும் போராடாமல் கிடைத்தது. மூடிய கண்ணிற்குள் 'யோவ் ஜோல்னாப் பை' என்று கூவியபடி அவன் நடன்ம் ஆடினான். பல்லை நெறித்த நாராயணனின் நெற்றி நரம்பு துடித்தது.

அன்றைக்கே அவனைத் துவட்டியிருக்க வேண்டும்... விட்டதில் துளிர்த்துப் போய் விட்டது. என் முகமும், தோற்றமும், என்ன வேண்டுமானாலும் பேசலாம் என்ற தைரியத்தைத் தருகிறதா? ஒருநாள் காசு போட்டது தப்பாய்ப் போயிற்று. இன்றைய உலகத்தில் காசு போடாதவன் நல்லவன்.

அவனை மன்னிக்கவோ, மறப்பதோ நடவாத காரியம். காலம் பூராவும் நாராயணன் என்றால் அவன் மிரள வேண்டும். யாராவது தெரிந்தவர்கள் இன்று காலை பார்த்திருப்பார்களா?

இன்றைக்கு அதிர்ஷ்டம் நாராயணனின் பக்கம் இருந்தது. பாட்லி காண்டீன் வாசலில் அவன் யாரையோ யாசித்துக் கொண்டிருந்தான்.



**காதலி : இன்னிலேர்ந்து இப்படி திரும்பி உட்கார் வோம்ன்னு எதுக்கு சொல்றீங்க ரமேஷ்...?**

**காதலன் : இன்னும் எவ்வளவு நாளைக்குத்தான் இந்தக் கடலையே பார்த்துக்கிட்டு இருக்கப் போறோம்ன்னு நீதானே சொன்னே நேத்து...?**

**— நெய்வேலி ஜீவி**

வறியோடு அவனை நோக்கிப் போன நாராய ணனின் மூளைக்குள் மின்னல் அடித்தது. அவன் கண்ணில் படும் வகையில் வாதீனமாய் நாராயணன் நடந்து போனான். நாராயணனின் எதிர்பார்ப்பு வீண் ஆகவில்லை.

"சாமிய்...." நெருங்கி வந்தான்... 'வா மகனே...'

"என்னண்ணே... பண்ருட்டிக்குப் போகத் ட்டு வேணுமா?"

"அய்ய... ஆமாம் சாமி... ஏதோ ஓம்பேரச் சால்லிட்டு ரெண்டு இட்லி புட்டுப் போட் ப்பேன்."

"ரெண்டே ரெண்டு இட்லியா... போதுமா?"

"பத்துமோ பத்தாதோ... அதுக்கு மேல கேட் டாலும் நீ வாங்கியா குடுக்கப் போறே?"

நாராயணனுக்குச் சந்தோஷமானது. அள வடுத்தாற் போல எல்லாம் நடக்கும் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை...

"சரி உள்ளாற வா... எம் பின்னாடியே..."

ஓட்டலில் யாருமே இல்லை... ரொம்ப சௌகரியமாய்ப் போயிற்று. நாராயணன் அமர்ந்த பின் எதிரில் அவன் அமர்ந்தான்.

"என்ன சார் வேணும்?" சர்வர் அவனை ஒரு மாதிரி பார்த்தபடி நாராயணனைக் கேட் டான்.

"என்ன ஒண்ணும் கேக்க வேணாம்... அண்ணனுக்கு என்ன வேணுமோ குடுங்க... நா பணம் தர்றேன்."

"நீங்க நல்லா இருக்கணும் சாமி... ஏம்பா ட்டா என்ன இருக்கு?" என்றான் கம்பீரமாய்...

சர்வர் பிடிப்பு இல்லாமல் கடமைக்கு ஒப்பு வித்தான்.

"சரி... ஆறு இட்லி மொதல்ல கொண்டா..."

ஆறு இட்லிக்குப் பின் தயக்கமாய் நாராய ணனைப் பார்த்தான். சும்மா சாப்பிடு என்பது போல் நாராயணன் ஊக்குவித்தான்...

பூரி வந்தது, மசால்வடை ஒன்று, மெது வடை ஒன்று, வெங்காய தோசை..."

எழப் போனவனை நிறுத்தினான் நாரா யணன்...

"இருங்கண்ணே... போண்டாவே சாப் டலியே... சர்வர் ஒரு செட். போண்டா குடுங்க..."

ஒன்றரைப் போண்டா தின்ற பின் திணற ஆரம்பித்தான். நாராயணனைப் பார்த்துச் சிரித் தான். இயலாமை தெரிந்தது.

"இருங்க.. இன்னும் கதம்ப பஜ்ஜி இருக்கு...."

"போறும் சாமி... நா செஞ்ச புண்ணியம்... ரொம்ப நாளைக்கப்புறம் வயிறாரச் சாப்புட் டேன்..." கும்பிட்டான்..

"அப்படி சொன்னா ஆச்சா... கதம்ப பஜ்ஜி ண்ணு."

"ஐயோ சாமி... தெம்பில்லேங்க... பொழச்சுக் கடந்தா நாளைக்குப் பாத்துப்போம்..."



## மாநாடும் மக்கள் கஷ்டங்களும்!

திருச்சி நகரில் தி.மு.க., அ.தி.மு.க. மாநில மாநாடுகள் நடைபெற உள்ளன. இதை விளம் பரப்படுத்தும் விதமாக இரு கட்சியினரும் போட்டி போட்டுக் கொண்டு சுவர் விளம்பரம் செய்துள்ளனர். நகரிலும் சுற்றியுள்ள பகுதி களிலும் உள்ள எல்லாப் பாலங்களுக்கும் கறுப்பு, சிவப்பு ஆயில் பெயிண்ட் அடித்துள்ளனர். பாலங்களின் கைப்பிடிச் சுவர்களில் வெள்ளை நிறமே தெரியவில்லை. பாலங்களின் ஓரப்பகுதிகள் இரவு நேரங்களில் வாகன ஓட்டிகளுக்கு நன்கு புலனாவதற்காகவே பாலங்களின் கைப்பிடி கிரில் சுவர்களுக்கு வெள்ளை வர்ணம் அடிக்கிறார்கள். இதைப் புரிந்து கொள்ளாமல் அவற்றில் கறுப்பு சிவப்பு வர்ணம் பூசுவது எவ்வளவு அறிவீனம். இவர்கள் ஆட்சிக்கு வந்து மக்களுக்கு என்ன நன்மை செய்ய முடியும்? மேலும் மாநகராட்சியும் இதைக் கண்டு கொள்ளாதது மக்களுடைய பெரிய துரதிருஷ்டம்.

—சரவணபவன்

"பொழச்சுக் கெடக்கறதா... அயோக்கிய படுவா... இந்தப் பசியாலதான, இந்த வயித்துக் காகத்தான, மனுஷன் தராதரம் தெரியாம காலம்பற, 'யோவ் ஜோல்னாப் பை'யின்னே.. சாப்புடறா ராஸ்கல்..." நாராயணனின் குரலில் காரம் ஏறியது.

"அய்யோ... நா ஒங்களச் சொல்வனா..."

"சொல்லாமயா கேக்கறன்... சாப்புடு மரியா தையா... முடியாதுன்னே கொன்னுட்டேன்..."

மிரண்டுப் போய்ச் சாப்பிட்டவன் கண் ணீர் நீர் மல்க, நாராயணனின் கால்களில் தடா லென்று விழுந்தான்

"தப்புத்தான் சாமி..."

ஹோட்டலில் கூட்டம் கூடியது... என்ன வென்று கேட்டவரை லட்சியம் செய்யாமல் கூட்டத்தை விலக்கிக் கொண்டு, காசைக் கொடுத்துவிட்டு நடந்தான் நாராயணன். அவன் மனம் நிறைந்திருந்தது. இருந்த ஒரே யொரு ஒரு எதிரியையும் விரட்டிய திருப்தி...

அடுத்த நாள் காலை...

பஸ்ஸைஸ் நினைத்து ஓடிய நாராயணனை இழுத்தது அந்தக் குரல்... "சாமி... ஓட்டல் சாமி..."

நாராயணனுக்கு மயக்கமாய் வந்தது...

**மெய்சிலிர்த்த அனுபவம்:**



# ஊர் மறந்தேன்; பேர் மறந்தேன்!

'வாழ்வனைத்தும் யோகம்' என உலக அரங்கிற்குப் பல பேருண்மைகளைக் கூறிய ஸ்ரீ அரவிந்தர்–ஸ்ரீ அன்னை பற்றி என் கணவர் சொல்லி அறிந்திருந்தேன். சில புத்தகங்கள் படித்தும் தெரிந்து கொண்டேன். ஆனால் பாண்டிச்சேரி அரவிந்தர் ஆசிரமத்துக்கு நேரில் போனதில்லை.

முதல் முறையாக அங்கு செல்லும் வாய்ப்பு 1993 பிப்ரவரியில் கிடைத்தது. அங்கு செல்லும் அன்று ஸ்ரீ அன்னையின் பிறந்த தின விழா. அதிகாலை மூன்று மணிக்கே தயாராகி ஆசிரம வாசலை அடைந்தோம். சரியாக நான்கு மணிக்கு விளக்குகள் ஒளிர தரிசனம் ஆரம்பமானது. எல்லோருக்கும் வாய்ப்புத் தரும் வகையில் தரிசன நேரம் குறித்து 'நுழைவு அட்டை' கொடுத்து விட்டார்கள். நிறைய கூட்டமானாலும் அமைதியும் கட்டுப்பாடும் நிலவியது.

பூரண அமைதி தவழ்ந்த ஆசிரம சூழலில் எனக்குள்ளே ஓர் இனிய மாற்றம் ஆரம்பமாவதை உணர்ந்தேன். கைகளிலிருந்த ஸ்ரீ அன்னையின் நூலைப் புரட்டினேன்:

'எப்போதும் அன்பு காட்டு; காரசாரமான கைப்பான விமர்சனங்களை விடு; எதிலும் தீமையைப் பார்க்கும் பழக்கத்தைத் தவிர். எங்கும் இறைவனது அருளின் பிரசன்னத்தையே பார்ப்பது என்று உறுதி செய்துகொள். அப்போது ஓர் அற்புதம் நிகழ்வதைக் காண்பாய்– உன்னுள்ளே மட்டுமில்லாமல் உன்னைச் சுற்றிலும் அமைதி, மகிழ்ச்சி நம்பிக்கை– இவை கொண்ட ஒரு சூழல் உருவாகும். உன் உள்ளத்திலும் அமைதியும் மகிழ்ச்சியும் நிரம்பும்.'

– இந்த வார்த்தைகள் கண்ணில் பட்டு, மனத்தை ஊடுருவின.

ஆசிரமத்துக்குள் கால் பரவியபோது 'மெத்மெத்' தெனப் பஞ்சு மேகங்களிடையே இறங்குவது போல் உணர்வு. நம் இதயங்களில் தூய தெய்வீக அன்பை வெள்ளமாகப் பாய்ச்சி, நம்மை ஆன்மிகத்தின் சிகரங்களுக்கும் ஆழங்களுக்கும் விசாலங்களுக்கும் இட்டுச் சென்ற மகான்கள் வாழ்ந்த அறையருகே வந்தபோது... நான் என் ஊர் மறந்தேன்; பேர் மறந்தேன். கண்களில் ஆனந்தம் வழிந்தது. கண்கூசும் திவ்ய ஒளி என்மீது கவியும் உணர்வு... லிஸ்ட் போட்டு வைத்திருந்த லௌகீக ஆசைகள் கழன்று கொள்ள, மனம் நல்லன வேண்டும் என்று உறுதியாக இறைஞ்சியது.

அங்கிருந்த சாதகர் ஒருவர் என் கையில் அன்னையின் ஆசி அட்டையும் மலர்களும் தந்த போது மனங்குளிர பெற்றுக் கொண்டேன். அழகும் ஆனந்தமும் மிக்க அந்த ஆசிரம தரிசனத்துக்குப் பின் என் நிறை வாழ்வுக்குத் தெளிவான பாதை அமைந்தது.

**–எஸ். மாலதி, முசிறி.**

(அனுபவங்கள் தொடரும்)

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி; பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# பிறந்தநாள் பரிசு

"எங்கே வலிக்குது? இடது கையின் மேல் பகுதியிலா? வலி எப்படி இருக்குது, சுரீர் சுரீர்னா அல்லது தொடர்ந்து ஒரே மாதிரியா? நடக்கும் போது அதிகம் வலிக்குதா?" என்றெல்லாம் விக்டரை வரிசையாகக் கேள்விகள் கேட்ட டாக்டர், "ஈ.ஸி.ஜி. எடுத்துப் பார்க்கணும்" என்று சொன்ன போதுதான் திவ்யாவின் மனத்தில் நிலைமையின் தீவிரம் உறைத்தது.

விக்டருக்கு ஏற்பட்டிருப்பது மாரடைப்பு என்று சந்தேகப்படுகிறாரா?

"என்ன விக்டர் இது?" மேலே பேச வார்த்தைகள் வராமல் பதைபதைத்த திவ்யாவை வருத்தத்தோடு பார்த்தான் விக்டர்.

"எனக்கு அப்பவே இந்த சந்தேகம் வந்தது திவ்யா. அதனாலேதான் டாக்டர்கிட்டே அழைச்சிக்கிட்டு வரச் சொன்னேன்."

இருபத்தி எட்டு வயதில் மாரடைப்பு ஒருவருக்கு ஏற்படக்கூடும் என்று திவ்யா இதுவரை எண்ணிப் பார்த்ததில்லை. அதுவும் விக்டருக்கு! கடவுளே, அப்படி இருக்காது, இருக்கக் கூடாது. அவனுக்கு உடல்நலம் சரியானவுடன் தான் திருப்பதி மலையை நடந்தே ஏறி வருவதாகப் பிரார்த்தனை செய்து கொண்டாள். கூடவே இணைப்பாக இன்னொரு யோசனை தோன்ற, 'குழந்தை ஏசு'வுக்குக் காணிக்கை செலுத்துவதாகவும் வேண்டிக் கொண்டாள்.

"அண்ணி மனதைத் தளர விடாதீங்க. அண்ணனுக்கு வெறும் காஸ் ட்ரபிளாக இருக்கவும் சான்ஸ் இருக்குது" என்று ஆறுதல் சொன்னாள் ஜாக்விலின். விக்டரின் தங்கை. திவ்யாவை விட இரண்டு வயது சின்னவள்.

"ஆமாம் அண்ணி" என்று கூட ஒத்துப் பாடினான் விக்டரின் எட்டு வயதுத் தம்பி ஜேம்ஸ். பிறகு திடீரென்று ஜாக்விலினைப் பார்த்து "அக்கா, அந்த சாக்லெட் பாக்ஸை அண்ணியிடம் கொடுத்திட்டீங்களா?" என்றான்.

ஜாக்விலின் கொஞ்சம் சங்கடப்பட்டாள். "இன்னக்கி உங்க பிறந்த நாளாச்சே, அதுதான் வாங்கி வச்சிருந்தேன். ஆனா காலையிலேயே அண்ணனுக்கு இப்படி ஆகிப் போய்... கவலைப்படாதீங்க அண்ணி. டாக்டர் இப்போ வந்து அண்ணனுக்கு எதுவுமில்லே. நார்மல்னு டிஸ்சார்ஜ் செய்யத்தான் போறார். அப்போ இந்த சாக்லெட்டுகளை ஹாஸ்பிடல் ஸ்டாஃபுக்கெல்லாம் விநியோகம் செய்துடலாம்."

தனக்கு இன்று பிறந்த நாள் என்பதே திவ்யாவுக்கு மறந்து விட்டிருந்தது! அம்மா நினைவுக்கு வந்தாள். தன் ஒவ்வொரு பிறந்த நாளின் போதும் ஏதாவது பரிசு கொடுக்காமல் இருக்க மாட்டாள். அதுவும் அவள் எதிர்பாராத ஆனால் ஆனந்தப்படும்படியான பரிசாக இருக்கும்.

அம்மாவை எண்ணியதும் குபுக்கென்று திவ்யாவின் கண்கள் நிறைந்தன.

இரண்டே தெருக்கள் தள்ளியிருந்தும் வைராக்கியமாகத் தன் வீட்டுக்கு வராத அம்மா, தன் சொல்லை மீறி வேற்று மதத்தவனைக் கல்யாணம் செய்து கொண்ட திவ்யாவை இன்னமும் சிறிதளவு கூட மன்னிக்காத அம்மா. வழியில் பார்த்தால் கூட அலட்சியமாக தலையைத் திருப்பிக் கொண்டு போகும் அம்மா.

ஒருவேளை அம்மாவின் வயிற்றெரிச்சல் தான் விக்டருக்கு இந்தவித உடல் கோளாறைக் கொடுத்திருக்கிறதோ? யோசிக்க யோசிக்க ஏனோ அதுதான் காரணமாக இருக்குமென்று பட்டது திவ்யாவுக்கு.

அம்மாவிடம் போய் தனது இந்த நிலையைப் பற்றிக் கூறினால் நிச்சயம் தனக்கு ஆறுதல் கூறுவாள். பிறந்த நாளன்று தன் காலில் விழும் மகளுக்கு ஆசி வழங்காமலா போய் விடுவாள்? அந்த ஆசியே கணவனை குணப்படுத்தி விடும் என்று நம்பினாள்.

உள்ளே டாக்டர்கள் விக்டருக்கு ஈ.ஸி.ஜி. எடுப்பதற்கான ஆயத்தங்களில் ஈடுபட்டிருக்க, திவ்யா எழுந்து கொண்டாள்.

"ஜாக்விலின், தெருமுனையிலே இருக்கிற கோவிலுக்குப் போயிட்டு வரேன். பத்து நிமிஷங்களிலே

அருண் சரண்யா

வந்துடுவேன்" என்றாள்.

"இன்னும் முழுக்கக் கூட விடியல்லியே. துணைக்கு ஜேம்ஸையும் அழச்சிக்கிட்டுப் போங்க அண்ணி."

வேறு வழியில்லாமல் ஜேம்ஸையும் அழைத்துக் கொண்டு வெளியில் வந்தாள்.

"என்ன அண்ணி யோசிக்கறிங்க? கவலைப்படாதீங்க. நான் கோயிலுக்கு வெளியே நின்னுக்குவேன்" என்றான் ஜேம்ஸ் பெரிய மனிதத் தோரணையுடன்.

"அதில்லே ஜேம்ஸ். இன்னிக்கு என் பிறந்த நாள் இல்லையா? அதனாலே எங்க அம்மாகிட்டே ஆசீர்வாதம் வாங்கப் போறேன்."

"அப்படியா? இப்படி திடீர்னு போறிங்களே? உங்க அம்மா ரெடியா உங்களுக்குப் பிறந்த நாள் பரிசு வாங்கி வச்சிருப்பாங்களா?"

"பரிசு தரணும்கிறதில்லையே. வெறும் குங்குமச் சிமிழை நீட்டினாலே போதும். இப்போதைய நிலையிலே அதுதான் எனக்கு மிகப் பெரிய பரிசு."

ஜேம்ஸுக்குப் புரியவில்லை.

வீடு நெருங்கி விட்டது. ரேழியில் அப்பாவின் செருப்புக்கள் காணப்படவில்லை. நைட்–ஷிஃப்டாக இருக்கும். தெருவை ஒட்டியுள்ள அறையில் ஜன்னல் திறந்திருந்தது. அதன் வழியாகப் பார்த்த போது அம்மாவின் முதுகுப்புறம் தெரிந்தது. அவள் விசும்பும் ஒலி சன்னமாகக் கேட்டது. அவள் கையிலிருந்தது தன்னுடைய புகைப்படம்தான் என்பதைப் பார்க்காமலேயே புரிந்து கொள்ள முடிந்தது.

"அம்மா" என்றாள் மெல்ல.

கயிற்றை அறுத்துக் கொண்டு கன்றிடம் ஓடும் பசுவைப் போலத்தான் ஜிவ்வென்று வாசலுக்கு வந்தாள் அம்மா. ஆனால் திடீரென்று அவளிடம் ஓர் ஆவேசம் தோன்றியது.

'என்ன வேணும் உனக்கு?



**போ**லீஸ்காரர்களால் அதிக பட்சம் எத்தனை தூரம் சீப்பாக நடந்து கொள்ள முடியும் என்று நினைக்கிறீர்கள்? ஒரு சாம்பிள் பாருங்கள். திருவனந்தபுரம் கன்டோன்மென்ட் போலீஸ் ஸ்டேஷனின் அஸிஸ்டன்ட் கமிஷனர் சோமன். ஓரிரவு வெளியே போய்விட்டு, தாமதமாக வீடு வந்தவர், சாப்பிட ஏதுமில்லாததைக் கண்டு ஒரு பார் அட்டாச்டு ஓட்டலுக்குப் போனார். அவர் மனைவி பார்ட்னராக இருந்த ஓட்டல் அது.



# ஊழலுக்குப் பரிசு பதவி உயர்வு!

இரவு நேரமாகி விட்டபடியால், ஓட்டலை மூடி விடும்படி, ரோந்து வந்த ஆலப்புழை எஸ்.பி.ஸ்ரீலேகா ஓட்டல்காரர்களிடம் சொல்ல, அப்போதுதான் சாப்பிட வந்திருந்த சோமன் கடுப்பாகி விட்டார். ஆத்திரத்தில் ஸ்ரீலேகாவைக் கண்டபடி திட்டி, தகாத முறையில் நடந்து கொண்டிருக்கிறார்.

பப்ளிக்காக நடந்த இந்த சம்பவத்தால் பாதிக்கப்பட்ட ஸ்ரீலேகா, மேலிடத்தில் புகார் செய்ய, அஸிஸ்டன்ட் கமிஷனர் சோமன் மேல் விசாரணை நடத்தி, சஸ்பென்ட் செய்யப்பட்டிருக்கிறார் இப்போது!

**சி**.பி.ஐ. ரெய்டில் அரசியல்வாதிகள் தான் சிக்க வேண்டும் என்பதில்லை. ஒரு டீ.வி. டைரக்டரும் மாட்டி இருக்கிறார். அதுவும் பெண்!

திருவனந்தபுரம் தூர்தர்ஷன் இயக்குநர் எம்.எஸ். ருக்மணி மேல் ஏகப்பட்ட குற்றச்சாட்டு. அளவுக்கதிகமான சம்பாத்தியம்; கணக்கில் வராத சொத்து என்று பல புகார்கள். விசாரித்த சி.பி.ஐ. இதனை உறுதி செய்திருக்கிறது.

ஏற்கெனவே இவர் பெங்களூர் டி.வி.யில் இருந்தபோதே விளம்பரதாரர் நிகழ்ச்சிகள் அலாட் பண்ணுவதில் நிறைய 'விளையாடி' இருப்பதாகக் குற்றம் சாட்டி, பெங்களூர் சி.பி.ஐ.யும் வழக்கு நடத்தி வருகிறது.

அதன் தொடர்ச்சியாகவே திருவனந்தபுரத்தில் விசாரித்தபோது, இங்கும் ஊழல் தொடர்ந்திருப்பது தெரிய வந்துள்ளது!

ருக்மணியின் வீடு, ஆபீஸ், வங்கிக் கணக்கு, லாக்கர்கள் என்று சோதனையிட்டு, ஆதாரங்களை அடுக்கி இருக்கிறது சி.பி.ஐ.

இது போதாதென்று, ஹவுஸிங் போர்டு சேர்மன் கோட்டாவைப் பயன்படுத்தி, நாலாஞ்சிறை என்ற இடத்தில் ஒரு பிளாட் வாங்கி, அதை கூடுதல் வாடகைக்கு விட்டு மேலும் சம்பாதித்திருப்பதும் தெரியவந்துள்ளது.

சி.பி.ஐ.யின் கிடுக்கிப் பிடியில் சிக்கிக் கொண்டிருக்கும் ருக்மணிக்கு சமீபத்தில் புதுதில்லி தூர்தர்ஷனின் டெபுடி டைரக்டர் ஜெனரலாகப் பதவி உயர்வு கிடைத்திருப்பது தான் இதில் சுவாரஸ்யமான கிளைமாக்ஸ்!

– திருவனந்தபுரத்திலிருந்து : **எஸ்.எஸ்.மணி**

---

பிறந்த நாள் ஆசீர்வாதம் வாங்கிக்க வந்தியா? என் முகத்திலேயே முழிக்க வேணாம்னு சொல்லியிருக்கேனா இல்லையா? இருபத்தியொரு வருஷம் உன்னை மனம் நோகாம வளர்த்தோமே எங்களுக்கு நல்லா நன்றி தெரிவிச்சே. போடீ வெளியே..." என்ற அம்மா மேலும் ரௌத்ரம் கொண்டாள். "நாளைக்கே உன் பெண்ணும் இப்படி வளர்ந்து வேறே இனத்தைச் சேர்ந்த எவனையாவது இழுத்துக்கிட்டு ஓடணும். அப்போதான் உனக்கும் அவனுக்கும் புத்தி வரும்."

கதவை அடித்துச் சாத்தி விட்டு உள்ளே தள்ளாடியபடி சென்றாள் அம்மா.

மௌனமாக மருத்துவமனையை நோக்கி திவ்யா நடக்க, கூட வந்த ஜேம்ஸ் கேட்டான். "என்ன அண்ணி, உங்க அம்மா உங்களுக்குப் பரிசு எதுவுமே கொடுக்காம கோவிச்சுக்கிட்டு அனுப்பிட்டாங்களே."

"யார் சொன்னது எனக்கு அவங்க பரிசு கொடுக்கல்லேன்னு. எங்களுக்குக் குழந்தை பிறக்கணும்னு ஆசீர்வதிச்சிருக்கார். அந்தக் குழந்தையின் கல்யாண வயது வரை நானும் விக்டரும் உயிரோடு இருக்கணும்னு விரும்பியிருக்கார். இதைவிட என்ன பரிசு வேணும்?" என்றபடி சந்தோஷத்துடன் தன் கண்களைத் துடைத்து விட்டுக் கொண்ட திவ்யாவின் பேச்சு அந்தச் சிறுவனுக்குப் புரியவேயில்லை.

# எம்.டி. வாசுதேவன் நாயர்



தமது இலக்கிய சேவைக்காக, கடந்த (1995) ஆண்டின் ஞானபீட விருதைப் பெற்றிருப்பவர், மலையாள எழுத்தாளரும் மாத்ருபூமி (வார இதழ்) ஆசிரியருமான எம்.டி. வாசுதேவன் நாயர். இவரது 'இருண்ட உள்ளம்' என்னும் (நீண்ட) சிறுகதையின் மூன்றாம் பகுதி தான் இது. என்றாலும் முழுமையான கதையை உணர முடியும் என்பதால் பிரசுரித்திருக்கிறோம். இந்தக் கதையை வாசகர் தேர்வுக்கான சிறுகதைகளோடு சேர்க்க வேண்டாமென்றும் வாசகர்களைக் கேட்டுக் கொள்கிறோம்
— ஆர்.

வேலாயுதன் ஓர் உடைந்த சட்டித் துண்டை எடுத்து, தரையில் ஏணிப்படியின் படம் வரைந்து கொண்டு உட்கார்ந்திருந்தான்.

அவன் கண்களிலிருந்து இருள் மெதுவாக விலகிக் கொண்டிருந்தது.

'எங்கே இருக்கிறேன்?'

அவன் சுற்றுமுற்றும் பார்த்தான். சாதாரணமாக யாரும் வராத பின்கட்டு. அவன் எழுந்து நின்றான். தலைமீது ஏதோ பாரம் அழுத்துவதுபோல் இருந்தது. அவன் கால்கள் தள்ளாடின. காலை அசைத்த போது சங்கிலி ஒலித்தது. அவன் காலைச் சுற்றிச் சங்கிலியால் கட்டியிருந்தார்கள். அவன் குனிந்து அதைப் பார்த்தான். சுவரில் ஓட்டை செய்து சங்கிலியை அதில் பிணைத்திருந்தார்கள். சங்கிலி உராய்ந்து உராய்ந்து கணுக்காலில் தோல் உரிந்திருந்தது. யார் அவனைச் சங்கிலியால் கட்டிப் போட்டது?

அவன் எப்போது இந்தத் தாழ்வாரத்திற்கு வந்தான்? யாராவது விளையாட்டிற்கு இப்படிச் செய்திருப்பார்களோ?

'தரையெல்லாம் மண்ணும் சேறுமாக அல்லவா இருக்கிறது? ஐய்யே, சுற்றிலும் ஒரே அசிங்கம்!'

வேலாயுதன் யோசித்துப் பார்த்தான். ஒன்றுமே தெளிவாக விளங்கவில்லை. மூடுபனியில் வரும் தெளிவற்ற உருவங்கள் போலிருந்தன, அந்தக் கடந்தகால நிகழ்ச்சிகள்! ஒரு கேள்வி மட்டும் மீண்டும் மீண்டும் எழுந்தது: மனிதர்களை யாராவது நாய்களைப் போலச் சங்கிலியிட்டுக் கட்டி வைத்திருப்பார்களா?

அவனுக்கு உடல்நிலை கெட்டிருந்த நேரம், அதனால் அவனை இங்கே கொண்டு வந்து போட்டிருப்பார்களோ? ஆனால் எதற்காக சங்கிலியிட்டுப் பிணைக்க வேண்டும், நாயைப் போல?

அடுக்களையிலிருந்து பாத்திரங்கள் ஓசை கேட்டது. யாராவது வெளியே வந்தால்... 'எனக்கு இப்போது உடம்புக்கு ஒன்றும் இல்லை... இந்தச் சங்கிலியை அவிழ்த்து விடுங்கள்' என்று சொல்லலாம்.

'எங்காவது மனிதர்களைச் சங்கிலியிட்டுக் கட்டுவதுண்டா?'

அடுக்களைக் கிணற்றை நோக்கியுள்ள ஜன்னல் திறக்கும் சப்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து தண்ணீர் இழுக்கும் சப்தம்.

"பெரியம்மா... பெரியம்மா..."

பதிலில்லை.

'வேறு யாரைக் கூப்பிடலாம்? இவர்கள் எல்லாம் என்ன மனிதர்கள்? எனக்கு இப்போது உடம்புக்கு ஒன்றும் இல்லை.'

மண் படிந்து கிடக்கும் தனது உடம்பைப் பார்த்த போது அவ

# இருண்ட உள்ளம்

னுக்கே அருவருப்பு உண்டாயிற்று. இன்னொருதரம் பார்க்கையில் வெட்கமே வந்து விட்டது. இடுப்பில் துணி இல்லை. யாராவது பார்த்தால் என்ன நினைப்பார்கள்? யார் கண்ணிலும் படக்கூடாதே! எவ்வளவு பெரியவன்! கறுத்த தாடி கழுத்தை மூடி வளர்ந்திருக்கிறது. அத்தனை வயதான ஒருவன் இடுப்பில் துணி இல்லாமல் நிற்பதென்றால்... சேசே!

வேலாயுதன் குனிந்து முழங்காலைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்தான். 'ஒரு வேட்டி வேண்டும்'. யாரைக் கூப்பிடலாம்? பெரியம்மாவைக் கூப்பிட்டால் பிரயோஜனமில்லை. கோபியைக் கூப்பிட்டான். திரும்பத் திரும்ப உரக்கக் கூப்பிட்டான்.

'வேட்டி உடுத்திக் கொள்ளுமுன் இங்கு யாரும் வரக் கூடாதே!'

யாரோ தாழ்வாரத்துக்கு எதிரில் வந்து கேட்டார்கள் : "என்ன?"

"இங்கே வராதே... இங்கே வராதே... கோபி எங்கே?"

"நான்தான் கோபி. உனக்கு என்ன வேணும்?"

நீலக்கால் சராயும் ஷர்ட்டும் அணிந்திருந்தான் கோபி. அவன் பெரியவனாகி விட்டான். சமர்த்துப் பிள்ளை!

"ஏன் சும்மா கூப்பிடறே?"

"எனக்கு ஒரு வேட்டி கொண்டு வந்து கொடு."

"கிழிச்சுப் போடத்தானே?... ஊஹூம்!"

"கிழிக்க மாட்டேண்டா கோபி. வேட்டி சீக்கிரம் கொண்டு வாடா, யாராவது வரதுக்கு முந்தி."

கோபிக்கு இன்னும் சந்தேகம் தீரவில்லை.

"நல்ல பிள்ளையாச்சே. போடா, சீக்கிரம் கொண்டு வாடா."

கோபி திரும்பிப் போய் ஒரு வெள்ளை வேட்டியுடன் வந்தான். வேலாயுதனுக்குப் பரம சந்தோஷம். "நல்ல வேட்டி."



"கிழிச்சுடுவியா?"

"எதுக்குக் கிழிக்கிறேன்?"

"கோபி, அதை இப்படிச் சீக்கிரம் கொடு... யாராவது என்னைப் பார்த்தால்...?"

கோபி அதை வீசி எறிந்தான்.

வேட்டி உடுத்திக் கொண்டபின்தான் வேலாயுதனுக்கு நிம்மதியாயிற்று. இனிமேல் யாராவது இந்தப் பக்கம் வந்தாலும் பரவாயில்லை.

"யாரடா என் காலில் சங்கிலி மாட்டியது?"

கோபி அதற்குப் பதில் சொல்லவில்லை.

"இதை அவிழ்த்து விடச் சொல்லேன்!"

அதைக் கேட்ட கோபி மெதுவாகச் சிரித்தான்.

"அவிழ்த்து விடுடா... என்னடா, நான் என்ன நாயா?"

கோபி வந்த வழியே திரும்பி விட்டான்.

அவன் பாட்டியைக் கூப்பிட்டான். பெரியம்மாவைக் கூப்பிட்டான். ஒருவராவது வரவில்லை.

ஏதோ ஒரு செருப்புச் சப்தம் கேட்டது; சற்று நேரத்தில் தாழ்வாரத்தின் எதிரில் மாமா வந்து நின்றார்.



வேலாயு
தன் மரியாதை
யாக எழுந்து நின்றான். மாமா
முன்னால் மருமகன் உட்காரலாமா?"

"என்னடா?"

அவன் ஒன்றுமே பதில் சொல்ல
வில்லை.

"உம்... என்ன வேணும் உனக்கு?"

"இதை அவிழ்த்துவிட்டா..."

"இன்னமும் யார் மேலேயாவது பாய
றதுக்கா?"

"எதுக்காக என்னைச் சங்கிலியாலே
கட்டியிருக்காங்க?"

"நீ கொழுப்புக் காட்டறயே அதுக்காகத்
தான். உன் பைத்தியம் தெளியுதான்னு நான்
பார்க்கறேன்..."– அதோடு மாமா திரும்பிப்
போய் விட்டார்.

வேலாயுதன் யோசித்துப் பார்த்தான் :
'என்ன கொழுப்புக் காட்டினேன்? உடம்பு சுக
மில்லாதிருந்தது.... இப்போ... இப்போ ஒன்று
மில்லை... ஒன்றுமில்லை...'

'எனக்கு உடம்புக்கொன்று
மில்லை... எனக்குப் பைத்திய
மில்லை' என்று உரக்கச் சப்த
மிட்டுச் சொல்ல வேண்டும்
போலிருந்தது அவனுக்கு.

யாரும் இதை அவிழ்க்க வர மாட்டார்
களா? அழுகை தொண்டையிலிருந்து வெடித்து
வரும்போல் இருந்தது.

உதட்டைக் கடித்து, அழுகையை அடக்கிக்
கொண்டு, அவன் ஒவ்வொன்றாக ஞாபகப்
படுத்திக் கொள்ள முயன்றான்.

**எ**ல்லோரும் 'அவனுக்கு உடம்பு சரியாக
இல்லை' என்று சொல்லிக் கொண்டிருந்தார்
கள்.

'எனக்கு இப்போது உடம்புக்கு ஒன்று
மில்லை. ஒன்றுமில்லை... என்னை விடுவியுங்
கள்...'

செல்லரித்துப் போன பழைய மரத்தூண்
மீது சாய்ந்தபடி, அவன் உட்கார்ந்தான். ஓ!
சற்று முன்னால் அவன் இடுப்பில் துணியில்
லாமல்... யாரெல்லாம் பார்த்திருப்பார்கள்?
அம்முக்குட்டி இந்த வழியே வந்திருப்பாளோ?

'அம்முக்குட்டி...'

அம்முக்குட்டியை ஒரு தடவை பார்க்க
முடிந்தால்....

அவளைக் கண்டால், அவளுக்கு அவன்
மேல் வெறுப்புத் தோன்றுமோ? உடம்பெல்
லாம் ஒரே மண்! முகத்தைக் கண்ணாடியில்
பார்க்க ஏதாவது வழியுண்டா? முகத்தில்
ரோமம் எப்படி வளர்ந்துள்ளது! சடைபிடித்த
தலையைச் சொறிந்த போது நாலாபக்கமும்
மண்ணும் பொடியும் உதிர்ந்தன.

அம்முக்குட்டியின் உடம்பில் அழுக்கே
இருக்காது. அவளுக்குப் பக்கத்தில் நின்றாலே
போதும். தாழம்பூவினுடைய நறுமணம் கம்
மென்று மூக்கைத் துளைக்கும்.

அவள் இப்போது அவனைப் பார்த்தால்...

அம்முக்குட்டியைப் பற்றி எண்ணிப்
பார்த்த போது மிக மிக இரகசியமான ஒரு
சங்கதி அவன் நினைவிற்கு வந்தது. யாருக்
குமே தெரியாத இரகசியம். அவன் அதை யாரி
டமும் சொல்ல மாட்டான். தோட்டத்து
மூலையிலிருக்கும் குளத்தின் பக்கத்தில்,
மாமரத்தின் கீழ் காற்றில் மாம்பழம் விழுவதை
எதிர்பார்த்து உட்கார்ந்திருக்கும்போது..

அவன் அவளுடைய கன்னத்தை ஒரு கடி
கடித்தான். கோபம் வந்த அம்முக்குட்டி அவ
னைப் பிராண்டினாள், கிள்ளினாள், வேண்
டியமட்டும் அடித்தாள்.

அன்று அவர்கள் இருவரும் குழந்தைகள்.
இன்றோ எவ்வளவு பெரியவர்கள்!

அதற்கப்புறம் என்னவெல்லாம் நடந்தது!
எல்லாம் தெளிவாயில்லை. அடைத்துக் கிடக்
கின்ற ஒரு கதவு. ஓலைத் தட்டியால் மூடப்
பட்ட ஒரு ஜன்னல். இருள்சூழ்ந்த அந்த அறை
யில் என்னவெல்லாம் நிகழ்ந்தது? இந்தச் சங்
கிலி எப்போது அவன் காலில் கட்டப்பட்டது?

'குட்டியண்ணா! உன் உடம்பு குணமாகும்...'
– மெல்லிய குரலில் அவள் சொன்ன இந்
தச் சொற்கள் மட்டும் அவனுள்ளத்தில் ஒலித்
துக் கொண்டிருந்தன!

**அ**வனுக்கு உடம்பு சரியில்லாதிருந்த
போது அவர்கள் சொன்னது, எல்லோரும்
சொல்லிக் கொண்டிருந்தது... பகவதீ, உண்மை
தானா?

கால் மூட்டுகளுக்கிடையில் தலையைப்
புதைத்துக் கொண்டு அவன் அழுதான். கண்
ணீர் விழுந்தபோது, சங்கிலி உராய்ந்ததனால்
தோல் உரிந்த இடத்தில் எரிந்தது.

இருப்பினும் அவனுக்கு ஆறுதல். இப்
போது எல்லாம் குணமாயிற்றே!

'எனக்கு உடம்புக்கொன்றுமில்லை. எனக்கு
எந்த வியாதியுமில்லை.'

அவன் உரக்கச் சப்தமிட்டான் : "என்னை
விடுவியுங்கள்... என்னை விடுவியுங்கள்..."

யாருமே வரவில்லை. யார் காதிலுமே விழ
வில்லையோ? மனிதர்களை எங்காவது சங்கிலி
யால் பிணைப்பதுண்டா? அவன் என்ன
நாயா? "என்னை விடுவியுங்கள்... என்னை விடு
விக்கக் கூடாதா?...."

அவன் தாழ்வாரத்தின் மறுபுறத்தை ஆவலு
டன் எட்டிப் பார்த்தான்.

சுவருக்கு வெளியே யாரோ தலையை

நீட்டினார்கள். குட்டிச்சங்கரனாக இருக்குமோ? ஆம், குட்டிச் சங்கரனேதான்!

"குட்டிச் சங்கரா?..."

குட்டிச் சங்கரன் சுவரின் மறைவிலிருந்து வெளியே வந்தான்.

"குட்டிச் சங்கரா? இங்கே வாயேன்."

அவன் முடியாது என்று தலையை அசைத்தான்.

"கிட்ட வா, ஒண்ணு கேக்கணும்."

"எதுக்கு, என்னை அடிக்கவா?"

"இல்லை. நான் அடிக்க மாட்டேன்!" - வேலாயுதனின் குரல் தடுமாறியது.

குட்டிச் சங்கரனுக்கு இன்னும் தயக்கம் தான்.

"நான் ஒண்ணும் செய்யமாட்டேன்."

குட்டிச் சங்கரன் பயந்து பயந்து இன்னும் சற்று அருகில் வந்தான். "இங்கே வரப்படாதுன்னு சொல்லியிருக்கா."

"யாரு?"

"அப்பா?"

"என் காலிலே சங்கிலியிட்டது யாரு?"

பயத்துடன் நடுங்கியவாறு நின்று கொண்டிருந்த குட்டிச் சங்கரனை வேலாயுதன் ஒருமுறை ஏற இறங்கப் பார்த்தான்.

"யார்?"

"அப்பா சொல்லிக் கருமான் கொண்டு வந்து..."

"இதைக் கொஞ்சம் அவிழ்த்து விடறயா?"

"ஐயோ, நான் மாட்டேன்."

"எனக்கு ஒண்ணுமில்லையடா, இதை அவிழ்த்து விடுடா!"

"ஊஹூம். நான் மாட்டவே மாட்டேன். உனக்குப் பைத்தியம்."

பொங்கும் அழுகையை அடக்கிக் கொண்டு வேலாயுதன் சொன்னான் : "இல்லை... எனக்குப் பைத்தியமில்லை... குட்டிச் சங்கரா எனக்கு..."

வேறு யார் அவிழ்த்து விடுவார்கள்? பாட்டி அவிழ்த்து விடுவாள். இல்லாவிட்டால் அம்முக்குட்டி நிச்சயமாகச் செய்வாள்.

"குட்டிச் சங்கரா! பாட்டியைக் கூப்பிடறியா?"

குட்டிச் சங்கரன் கைகொட்டி உரக்கச் சிரித்தான்.

"கொஞ்சம் கூப்பிடேன்..."

"உனக்குச் சரியான பைத்தியம்! பாட்டி எப்பவோ செத்துப் போயாச்சே!"

அதைக் கேட்டதும் வேலாயுதன் முற்றிலும் சோர்ந்து போனான். பாட்டி இறந்த துக்கத்தை விட அவனைத் துயரத்தில் ஆழ்த்தியது வேறோர் எண்ணம்தான்; இருட்டில் அவனை அறியாமல் என்னென்ன சம்பவங்கள் நடந்தன! எத்தனை நாட்கள்? எத்தனை மாதங்கள்?

**ச**ங்கிலி மீண்டும் ஒலித்தது.

யார் இதை அவிழ்த்து விடுவார்கள். யாருமே கேட்க மாட்டார்கள்... அவன் குரலைத் தாழ்த்திக் கொண்டு குட்டிச்சங்கரனிடம் சொன்னான் :

"குட்டிச் சங்கரா! உங்க அக்காவை இரகசியமாகக் கூப்பிடேன்?"

அம்முக்குட்டியிடம் தனக்கு இப்போது வியாதி ஏதும் இல்லையென்று சொன்னால் அம்முக்குட்டிக்குப் புரியும்.

"அக்காவும், அம்மாவும் பொறந்த வீட்டுக்குப் போயிருக்காங்க" என்று சொல்லும் போது குட்டிச் சங்கரன் முகத்தில் பரிகாசத்தை விட பரிதாபம்தான் அதிகமாக இருந்தது.

"என்னிக்கு போனா?"

"ரொம்ப நாளாச்சு, நானும் போயிருந்தேன். நேத்திக்குத்தான் அப்பாவோட திரும்பி வந்தேன்."

"எப்ப வருவா?"

"இனிமே இப்போ ஒண்ணும் வர மாட்டா?"

"ஏன்?"

"அடுத்த மாசம் அக்காவுக்குக் கல்யாணம்!"

அதற்குப் பின் வேலாயுதன் அவனிடம் ஒன்றும் கேட்கவில்லை. அவனுக்கு ஒன்றுமே தெரிந்திருக்கவில்லை...

உடம்பு சரியாக இருக்கவில்லை... மூடின கதவு... ஓலைத் தட்டியால் மறைக்கப்பட்ட ஒரு ஜன்னல். மயிர் நிறைந்த ஒரு தடித்த கை...

'குட்டியண்ணா உன் வியாதி குணமாகும்.'

'இப்போது அவளைப் பார்க்க முடிந்தால்... அம்முக்குட்டி! எனக்கு இப்போது உடம்புக்கு ஒன்றும் இல்லை... அவளைப் பார்க்க முடிந்தால்...'

**வீ**ட்டுக்குள்ளேயிருந்து கூச்சல் கேட்டது. பெரியம்மாவின் குரலை அவன் தெரிந்து கொண்டான். அவள் கோபியைக் கடிந்து கொண்டிருந்தாள் :

"ஏண்டா அந்த வேட்டி கிழிச்சுப் போடறதுக்கா என்ன? அத்தனை நல்ல வேட்டியை ஏண்டா எடுத்துக் கொடுத்தே?"

"அதுதான் கெடச்சுது அம்மா."

"உன்னைச் சொல்லிக் குற்றமில்லை. இப்போ பைத்தியம் வேலாயுதனுக்கு அல்ல; உனக்குத்தான்."

'பெரியம்மா! எனக்குப் பைத்தியமில்லை' என்று வேலாயுதனுக்குக் கத்திச் சொல்ல வேண்டும் போல் இருந்தது.

வாழைத் தோட்டத்திற்குள் இருட்டு புகுந்து கொண்டிருந்தது. அரிவாளுடன் யாரோ ஒருவன் வாழை மரங்களுக்கிடையே நடந்து கொண்டிருந்தான். அரிவாள் மட்டும்தான் தெரிந்தது.

அரிவாள் ஒரு வாழைப் பூவை அறுத்துக் கீழே தள்ளியதை அவன் கண்டான். வாழைப் பூவிலிருக்கும் தேனின் சுவையை அவன் நினைத்துக் கொண்டான். அம்முக்குட்டிக்குத் தேன் பிடிக்காது. அவளுக்கு வாழைப் பூவிற்குள்ளிருக்கும் பூத்தண்டு போதும். பக்கத்து வீட்டு ஜானுவிற்கும் பூத்தண்டுதான் பிடிக்கும். வாழைப்பூ கிடைத்தால் அவர்கள் இருவருக்கும் சண்டை மூளும் –

'பூவா, தலையா, பார்க்கலாம்.'

'நான் போடறேன்.'

'நீ வேண்டாம், குட்டியண்ணா போடட்டும்.'

ஓர் இலையைப் பறித்துக் கொண்டு வந்து கேட்பாள்!

"பூவா, தலையா?"

இலை கீழே விழும் வரை அம்முக்குட்டி கண்ணை மூடி நிற்பாள். அவள் பகவதியை வேண்டிக்கொண்டு நிற்கிறாளாம்!

இப்போது அம்முக்குட்டி அவள் வீட்டிலிருப்பாள். அவள் எதற்காக அங்கே போனாள்? குழந்தையிலிருந்து இங்கேதானே இருக்கிறாள்?

அவளுடைய வீட்டிற்குப் போகும் வழி அவனுக்கு நினைவிருக்கிறது. சின்னப் பையனாக இருந்த போது மாமியின் வீட்டுக்கு அம்மாவுடன் அவன் விருந்திற்குப் போயிருக்கிறான். வழியின் இருமருங்கிலும் எத்தனை குன்றிமணிச் செடிகள். வழியெல்லாம் குன்றிமணிகள் உதிர்ந்து கிடக்கும்.

வாய்க்கால் பக்கத்தில்தான் அவர்கள் வீடு. அந்த வீட்டில் ரஸகுண்டுகள் தொங்கும் ஓர்

***மனைவி : நூறு புடைவைகளை ஆறு மணி நேரமாக் கலைச்சுப் போட்டு ஒரு புடைவை எடுத்தேன்னு சொல்லிக் காட்றீங்களே! நீங்க மட்டும் ரொம்ப யோக்கியமா?***

***கணவன் : நான் என்ன பண்ணினேன்?***

***மனைவி : மூணு வருஷமா முப்பது பெண் பார்த்து சொஜ்ஜி பஜ்ஜி மொக்கிட்டுத்தானே என்னைக் கல்யாணம் பண்ணிக்கிட்டீங்க!***

***– ஆர். திலகவதி***



அறை. அதன் சுவரில் மான் கொம்புகள் பதிக் கப்பட்டிருக்கும்.

'அம்முக்குட்டி இப்போது என்ன செய்து கொண்டிருப்பாள்? உடம்புக்குக் குளித்து விட்டு, வடக்குத் திண்ணையில் அம்மிக்குப் பக்கத்தில் நின்று கேசத்தைக் கோதிக் கொண்டிருப்பாளோ?

'அவள் இனி வரமாட்டாளா?'

'அம்முக்குட்டியை ஒரு தடவையாவது பார்க்க வேண்டும். கல்யாணம் ஆன பிறகு அவள் இங்கே எங்கே வரப் போகிறாள்?.... ஒரு தடவையாவது பார்க்க வேண்டும்.'

வேலாயுதன் சுவரில் முதுகைச் சொறிந்து கொண்டான். காலில் கட்டியிருந்த சங்கிலி அப்போதும் ஒலித்தது. இந்தச் சங்கிலியிட மிருந்து மட்டும் விடுதலை கிடைத்தால் தாழ் வாரத்திலிருந்து வெளியே போகலாம். அவன் சங்கிலியை இழுத்துப் பார்த்தான். கைதான் வலித்தது. இந்தச் சங்கிலியை அவிழ்க்க முடி யாதோ... யாராவது அவிழ்த்துத் தர மாட்டார் களா?...

ஆட்டுக்குட்டியைப் பிடித்துக் கட்டுவதற் காகப் பெரியம்மா அந்தப் பக்கமாகப் போனாள். வருவாள் என்ற நம்பிக்கை இல்லை தான். இருந்தாலும் கூப்பிட்டுப் பார்த்தான். அவள் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை.

**வா**சலில் உட்கார்ந்து குட்டிச் சங்கர னும், கோபியும், 'நமசிவாய, நமசிவாய' என்று ஜெபித்துக் கொண்டிருந்தார்கள்...

உள்ளே விளக்குகள் அங்குமிங்கும் போய்க் கொண்டிருந்தன. அடுக்களைக்குள்ளிருந்து பாத்திரங்களின் சப்தம் கேட்டது. 'இனி யாரும் இந்தப் பக்கம் வரமாட்டார்கள்' – இருட்டி னிடம் அவன் மெல்லச் சொன்னான் : "என்னை அவிழ்த்துவிடு... என்னை அவிழ்த்து விடு."

'அக்கம் பக்கத்து வீடுகளில் யாருமே இல் லையா? அவர்களில் யாராவது இந்தச் சங் கிலியை அவிழ்த்து விடக் கூடாதா?'

உரக்க அவன் சப்தமிட்டான் :

"ஐயோ அம்மா...!"

ஒரு வெளிச்சம் சற்று தூரத்திலிருந்து வரு வது தெரிந்தது. கூடவே ஒரு சப்தமும் :

"வேலாயுதா!"

"என்னை விடுவியுங்கள்... என்னை விடு வியுங்கள்."

"பேசாமல் அங்கே படுத்துக்கோ. இல்லா விட்டால் உன் எலும்பை நொறுக்கிடுவேன்."

அந்த விளக்கு மறைந்தது.

வீட்டிற்குள் சந்தடி மெல்ல மெல்ல குறைந்து வந்தது. 'கடிக்கின்ற நாய்களைச் சங் கிலியால் கட்டிப் போடுவதுண்டு. ஆனால் மனிதனை... இந்தச் சங்கிலியை அவிழ்க்க முடிந்தால்... ஒரு கண்ணி அறுந்தால் போதும். ஒரே ஒரு கண்ணி.'

பைத்தியமாம், பைத்தியம், அவர்களுக்குத் தான் பைத்தியம்! இல்லாவிட்டால் அவனை இப்படித் துன்புறுத்துவார்களா?

'எனக்குப் பைத்தியமில்லை.... எனக்குப் பைத்தியமில்லை...'

அவன் பலமுறை அந்தச் சங்கிலியை இழுத்துப் பார்த்தான்.

அசைந்தபோது சங்கிலி ஒலித்தது.

வந்த கோபத்தில் கால்களைச் சுவரின் மீது அழுத்தி ஊன்றிச் சங்கிலியைப் பலமாக இழுத் தான்.

ஒரு கண்ணி அறுந்தால் போதும்... ஒரே ஒரு கண்ணி.

ஒரு தடவைகூட....

"அம்மாாா..."

அவன் அப்படியே பின்னால் சாய்ந்து விட்டான். சங்கிலி அறுந்தது!

**எ**ழுந்திருந்த போது உடம்பெல்லாம் வலி. நொண்டிக் கொண்டே அவன் முற்றத்தில் இறங்கினான். ஒவ்வோர் அடி வைக்கும் போதும், காலில் எஞ்சியிருந்த சங்கிலிக் கண் ணிகள் ஒலி எழுப்பின.

சாத்தியிருந்த கேட்டைத் திறந்து கொண்டு அவன் வெளியே வந்தான்.

எதிரே வயல்கள். அதன் முதுகெலும்பு போல் நீண்டு கிடந்த வரப்பின் வழியாகப் போகும்போது ஒருகணம் அவன் யோசித் தான் :

"எங்கே போகிறோம்?"

எல்லாவற்றிற்கும் மேலாக அவன் உள்ளத்

---

**"அந்தப் பல் டாக்டர் போலின்னு எப்படிச் சொல்றே?"**

**"பின்னே, பல்லைப் பிடுங்கிக்கப் போனா, சோப்புப் போட்டு எடுத்தா சுலபமா வந் துடும்னு சொல்றாரே!"**

– ராஜாராம்



## நிகழ்...



*மனசின் கதவுகளைக்*
*கழற்றிப் போட்டிருக்கிற*
*தோல்விகள்...!*

*காற்று வலையால்*
*கனவு பிடிக்க முயலும்*
*பிரயத்தனங்கள்...!*

*நிழலுக்குள்*
*முடங்கிச் சரிகிற*
*நிஜங்கள்....!*

*கிழிசல் சட்டையின்*
*பொத்தான்களைப்*
*போல முயற்சிகள்....!*

*பாதி விழிப்பும்*
*பாதி உறக்கமும்*
*எனக் கழிகிற*
*பொழுதுகளில்*

*எதுவும் பட்டுவிட*
*முடியாத நெருப்பின்*
*பளபளப்பாய்*
*நம்பிக்கை ஆறாமல்...*

**- ஹரணி**

---

தில் அந்தத் தாழ்வாரத்திலிருந்து எப்படியாவது தப்பிவிட வேண்டும் என்ற எண்ணம்தான் மேலோங்கி நின்றிருந்தது. காலையில் அவர்கள் கண்ணில் பட்டால் மறுபடியும் கால்களில் சங்கிலி போடுவார்கள்... எங்கானாலும் சரி, கால் போன இடத்திற்குப் போகலாம்.

காற்றில் நெற்கதிர்கள் அசையும் தாளத்திற்கேற்ப சங்கிலி ஒலித்தது. தெற்கே ஒரு நாய் ஈனக்குரலில் ஊளையிட்டது. சங்கிலியில் கட்டிப் போட்ட நாயாக இருக்கலாம்...

மங்கிய நிலவொளியில் தெரிந்து கொள்வது சுலபமாக இருந்தது.

இரவின் குளிர்ந்த அமைதியை அந்தச் சங்கிலிச் சத்தம் கலைத்தது.

வரப்பு முடியுமிடத்தில் சாலை. தாழம்பூச் செடிகளைத் தாண்டி அவன் சாலைக்கு வந்தான். ஆற்றங்கரையை ஒட்டியவாறு சாலை போகிறது.

காலையில் அவர்கள் எழுந்து பார்க்கும் போது வேலாயுதன் என்கிற நாய் சங்கிலியிலிருந்து தப்பித்து விட்டுப் போனதை அறிவார்கள். அதை நினைத்த போது அவனுக்கு உரக்கச் சிரிக்க வேண்டும்போல் இருந்தது. ஆனால், அவர்கள் தேடிப் பிடிக்க வருவார்களே! அதற்குமுன் எப்படியாவது தப்பி ஓடிவிட வேண்டும். எங்கே போவது? அவனை யாரும் நம்பமாட்டார்கள்; அவன் பேச்சை யாரும் கேட்க மாட்டார்கள்!

அவன் தனக்குத்தானே சொல்லிக் கொண்டான் : "எனக்குப் பைத்தியமில்லை... எனக்கு உடம்புக்கொன்றுமில்லை."

'குட்டியண்ணா! உன் உடம்பு குணமாகும்' என்று சொன்னது அம்முக்குட்டிதான்.

'என் அன்புமிகு அம்முக்குட்டி! எனக்கு இப்போ ஒன்றுமில்லை.'

அவள் நம்புவாள். அவளுக்கு மட்டும்தான் அவன் வார்த்தையில் நம்பிக்கை இருக்கும்.

பாதையில் மண் நனைந்திருந்தது; அது பனி பெய்ததனால் ஆயிருக்கலாம். அந்த வழியாக நடந்த காலம் மறந்தே போய் விட்டது. எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்னால் போனது. அடைத்துக் கிடக்கும் கடைகளையும், துறைக்கடுத்துள்ள பள்ளி வாசலையும் கடந்து அவன் நடந்தான்.

பள்ளி வாசலுக்கு அடுத்தாற்போலுள்ள இடுகாட்டையும், பேய்கள் வசிப்பதாகச் சொல்லப்பட்ட ஆலமரத்தையும் கடந்து போன போது அவனுக்குத் துளியும் பயம் இருக்கவில்லை.

தலைக்கு மேல் வானம் வெளுத்துக் கொண்டே வந்தது. சாலை ஓரத்திலுள்ள சுமைதாங்கியைப் பிடித்துக் கொண்டு வேலாயுதன் சற்று நேரம் நின்றான். கீழ்வானம் சிவந்து கொண்டிருந்தது.

வயலுக்கு மேல் நீளமான மூடுபனி பரவியிருந்தது. சங்கிலி ஒலிக்க, அவன் நடந்து சென்ற பொழுது தோளில் கலப்பையை ஏந்தி ஒரு கறுத்த உருவம் எதிரே வருவதைக் கண்டான்.

பக்கத்தில் வந்ததும் அந்த உருவம் நின்றது.

"யாரது?"

வேலாயுதன் பதில் சொல்லவில்லை. ஒரு கணம் தயங்கி நின்று ஓரடி முன்வைத்த போது அந்த மனிதன் கலப்பையைக் கீழே போட்டு விட்டு வயலுக்குள் குதித்தான்.

அவனை அசட்டை செய்து வேலாயுதன் நடக்கலானான். இளவெய்யில் உடம்பில் பட்ட போது அவனுக்குச் சுகமாக இருந்தது. வயலின் மத்தியில் நின்றபடி அவன் நாலா

புறமும் பார்வையைச் செலுத்தினான்.

மண் கலயங்களைத் தலையில் சுமந்து வந்து கொண்டிருந்த ஹரிஜனப் பெண்கள் அவனைப் பார்த்ததும், விளைச்சலான வயல்கள் வழியே, 'பைத்தியம் பைத்தியம்' என்று கத்திக் கொண்டே ஓடினார்கள்.

பின்னாலிருந்து கூச்சலும் கூப்பாடும் கேட்டன. வேலாயுதன் வேகமாக நடந்தான். பின்னால் ஆட்கள் வருகிறார்களா? மேட்டிலுள்ள நாற்று நடும் வயலுக்குப் போக யத்தனிக்கையில் தாழம்பூச் செடிகளின் முட்கள் பட்டு கால்களைக் கீறின. அங்கிருந்து அவன் ஒரு சந்துக்குள் பிரவேசித்தான்.

பின்னால் கூச்சல் அதிகமாகிக் கொண்டிருந்தது. ஆனால் எதிரே வருகிற யாரும் அவனைத் தடுத்து நிறுத்தவில்லை. அவனுக்குச் சற்று நிம்மதி. கண்ணெதிரே தெரிந்தவர்களெல்லாம் அவனுக்கு வழி விட்டார்கள். பயத்தை விட அவனுக்கு மனவருத்தம்தான் மேலிட்டது.

"எனக்குப் பைத்தியமில்லை.... எனக்குப் பைத்தியமில்லை."

பின்னாலிருந்து ஜனங்கள் சப்தமிட்டார்கள்: 'பைத்தியம்... பைத்தியம்.'

சந்து முனையை அடைந்தபோது அங்கேயிருந்த ஒரு பெரிய பாறைக் கல்லை கட்டிப் பிடித்துக் கொண்டு நின்றான். என்ன களைப்பு! மீண்டும் நடக்க முனைந்த போது பின்னாலிருந்து யாரோ கர்ஜித்தார்கள் : "நில்லடா... அங்கே..."

தலையில் முண்டாசும் நரைத்த மீசையுமாய் ஒரு நெடிய மனிதன் வந்து கொண்டிருந்தான்.

"நிற்கிறாயா, இல்லையா? உன்னை விட பெரிய பெரிய கொம்பன்களை நான் பிடிச்சுக் கட்டியிருக்கிறேன்."

வேலாயுதன் மூச்சு வாங்கச் சொன்னான் : "எனக்குப் பைத்தியமில்லை...."

"உன் பைத்தியத்தை நான் தெளிய வைக்கிறேன்."

அந்த மனிதன் தன் பின்னால் ஒளித்து வைத்துக் கொண்டிருந்த மூங்கில் தடியைச் சுழற்றியவாறு நெருங்கின போது வேலாயுதன் மனம் பகீரென்றது.

அருகே கிடந்த ஒரு பாறாங்கல்லை எடுத்து, உயரத் தூக்கிப் பிடித்தவாறு வேலாயுதன் நின்றான்.

அந்த மனிதன் பின்வாங்கினான்.

வேலாயுதன் நடக்கலானான். சந்து போய்ச் சேருமிடம் ஒரு குன்றின் சரிவு.

குன்றின் மீது ஏறுவது சிரமமாக இருந்தாலும், அவன் வேகமாக ஏறினான். உச்சியை அடைந்ததும், நாலுபுறமும் ஒரு பார்வை பார்த்துக் கொண்டான்.

நேர் எதிர்ப்புறத்தில் ஒரு பாலை மரமும், அடுத்தாற்போல் ஒரு சிறு கோவிலும் தெரிந்தன. அந்த இடம் வேலாயுதனுக்கு நினைவு இருக்கிறது. பாலைமரம் இருக்கும் மேட்டை விட்டு இறங்கினான். அங்கே ஒரு முந்திரித் தோட்டம். அதற்கு அப்பால் ஒரு சந்தும் வாய்க்காலும்...

அந்த வாய்க்காலுக்குப் பக்கத்திலிருக்கும் வீட்டிற்கு எதிரில் நிறையக் குன்றிமணிகள் பரவிக் கிடக்கும்.

'அன்பார்ந்த அம்முக்குட்டி, எனக்குப் பைத்தியமில்லை.'

குன்றின் உச்சியில் ஒருவரும் இல்லை; ஒரு கறுப்புக் காளை மட்டும் மேய்ந்து கொண்டிருந்தது.

அவன் கால்பட்டுப் பனித் திவலைகள் புல்லிலிருந்து தெறித்தன.

'இந்தத் தனிமையான இடத்தில் சற்று நேரம் நிம்மதியாக இருக்கலாம்.'

பாலைமரத்தின்கீழ் அவன் வந்த போது கால் முட்டிகள் சகிக்க முடியாத அளவிற்கு வலித்துக் கொண்டிருந்தன. புல் தரைமீது அவன் இளைப்பாறுவதற்குச் சற்று நேரம் உட்கார்ந்தான். குளிர்ந்த காற்று உடம்பில் பட்டபோது கண் அயரத் தோன்றியது. முதுகு வலியெடுத்தது. பனி படர்ந்த புல் தரையில் குப்புறப் படுத்தான்.

திடீரென்று அவன் தூக்க மயக்கத்திலிருந்து கண் விழித்தான். முதுகில் ஏதாவது விழுந்ததோ? எழுந்து பார்த்த போது சற்றுத் தூரத்தில் ஏழெட்டு மாடு மேய்க்கும் சிறுவர்கள் நின்று கொண்டிருக்கக் கண்டான். அந்தச் சிறுவர்கள் அவனைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார்கள். இன்னொரு கல் கூட வந்து விழுந்தது. நல்ல காலம், அவன் மீது படவில்லை.

வேலாயுதன் கலவரத்துடன் எழுந்து நின்றான். காலில் சங்கிலி ஒலித்தது.. பாறைக் கட்டின் வழியாகச் சங்கிலியை இழுத்துக் கொண்டே அவன் ஓடினான். சந்தை அடைந்து அவன் திரும்பிப் பார்த்தான்.

"அம்மா"'.... – அவன் உரக்க அழுதான். நெற்றியைத் துடைத்துப் பார்த்தபோது கையில் இரத்தம் இருந்தது.

"அவனைப் பிடியுங்கள்... பிடியுங்கள்..."

"இதோ வருது... பைத்தியம் வருது... வழி விடுங்கள்..."

வயலுக்குள் இறங்கியபோது ஆட்கள் இங்குமங்கும் கலைந்து ஓடுவதைப் பார்த்தான். வழியில் உட்கார்ந்து இருந்த குழந்தை ஒன்று வீறிட்டது.

"பைத்தியம்... பைத்தியம்... ஆளுங்களைத் தொந்தரவு செய்யும்... வழிவிடுங்கள்."

பின்னாலிருந்து திரும்பத் திரும்பச் சப்தம் வந்து கொண்டிருந்தது. வேலாயுதன் வயல் ஓர மாக நடந்தான். அவன் வாய்க்காலை வந்த டைந்தான். அங்கிருந்து அவன் சந்திற்குள் நுழைந்தான். இருமருங்கிலும் மரங்கள் செறிந்த அந்தச் சந்து வழியாகப் போகும் போது மண்ணில் குன்றிமணிகள் பரவிக் கிடப்பதைக் கண்டான்.

குழந்தையாய் இருக்கும்போது அந்தச் சந்தில் அவன் விளையாடியதற்கு அள வுண்டோ? செங்கல்லினால் செய்த மதில்சுவ ரையும், பாய்வதற்குத் தயாராக நிற்கும் அனு மாரின் மரப் பிரதிமை வைத்த வீட்டையும் பார்த்தபோது வேலாயுதத்தின் இதயம் துடித் தது... 'அங்கேதான்... அங்கேதான் அம்முக் குட்டி இருக்கிறாள்.'

அவளை ஒரு தடவைப் பார்த்தால் போதும்... 'அம்முக்குட்டி, என் வியாதி... என் வியாதி குணமாகி விட்டது. எனக்கு ஒன்றும் இல்லை.'

அவன் கேட்டைக் கடந்தான். முற்றத்தில் வில்வச் செடிகளுக்கு அருகே ஒரு குழந்தை ஓலைப் பந்தை வைத்து விளையாடிக் கொண் டிருந்தது. சாணம் மெழுகிய முற்றத்தில் காலை வெய்யில் பளிச்சென்று இருந்தது. அந்தப் பெரிய வீட்டின் முன்னால் நின்று வேலாயு தன் நாற்புறமும் பார்த்தான்.

ஓலைப் பந்தைச் சட்டென்று கையில் எடுத் துக்கொண்டு அந்தக் குழந்தை உள்ளே ஓடிப் போயிற்று.

"அம்முக்குட்டி இல்லையா?... அம்முக் குட்டி?"

அவன் மெல்ல முற்றத்தின் ஓரமாக நாலடி நடந்தான். திண்ணைக்கருகே ஒரு பெண் ஈர வேட்டியைக் கொடியில் உலரப் போட்டுக் கொண்டிருந்தாள்.

மறுபடியும் சங்கிலி ஒலித்தது. அவள் திரும் பிப் பார்த்தாள். ஒருகணம் வேலாயுதன் சிலை யென நின்றான். அவன் மீண்டுமொருமுறை அந்த முகத்தை உற்று நோக்கினான்.

"அ... அம்முக்குட்டி..."

அவள் தன் கையிலிருந்த ஈரத்துணிகளைக் கீழே போட்டு விட்டு உள்ளே ஓடிப் போய் உரக்கக் கத்தினாள்.

'அம்முக்குட்டி, நான்தான். எனக்குப் பைத் தியமில்லை' என்று அவனுக்குச் சொல்ல வேண்டும் போல் இருந்தது. ஆனால், நா எழ வில்லை. இன்னொருமுறை அவன் கூப்பிட் டான் : "அம்முக்குட்டி."

அவள் எப்பொழுதோ உள்ளே ஓடி மறைந் திருந்தாள்.

உள்ளே இருந்து ஒரு கூச்சல் வந்தது :

"பைத்தியம்.. பைத்தியம்."

"அந்தத் தடியை எடு... நீ உள்ளே போ..."

வேலாயுதன் பிறகு அங்கே நிற்கவில்லை. உலர்ந்த உதடுகளை நாக்கால் நனைத்தபோது உப்புக் கரித்தது. நெற்றியில் பட்ட காயத்தின் இரத்தம் அது. காலில் எஞ்சியிருந்த சங்கிலித் துண்டையும் இழுத்துக் கொண்டு அவன் கேட் டிற்கு வெளியே வந்தான்.

உடல் சோர்ந்து தள்ளாடி விழும் நிலை யிலிருந்தான் அவன். இருந்தாலும் புயல் வேகத் தில் அவன் ஓடினான். கூக்குரல்களும், தகரத் தைக் கொட்டும் ஓசையும் அவனைத் துரத் தின.

தன் வீட்டை அடைந்தபோது மாமாவும், வேறு சிலரும் இருப்பதைக் கண்டான். சங்கிலி ஓசையைக் கேட்டு அவர்கள் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்கள்.

வேலாயுதன் மதிற்சுவரைப் பிடித்துக் கொண்டு நின்றான். மாமா உத்தரத்திலிருந்த பிரம்பை எடுத்துக்கொண்டு முற்றத்திற்கு வரு வதைக் கண்டான்.

அவன் தளர்ந்த மங்கிய கண்களைத் தன் உடலின் மீது பதித்தான். அப்போதுதான் அவன் உணர்ந்தான். தன் இடுப்பில் நூலிழை கூட இல்லை.

நொண்டி நொண்டித்தான் அவன் தாழ் வாரத்தில் போய் விழுந்தான். மாமாவும், நண்பர்களும் சுற்றிலும் வந்து நின்ற போது மூச்சு வாங்கச் சொன்னான் : "எனக்குப் பைத் தியம்.... என்னைச் சங்கிலியால் கட்டுங்கள்..."

நன்றி : மலையாளச் சிறுகதைகள்
(தமிழாக்கம் : கே. நாராயணன்),
நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா,
புதுதில்லி.

## முதல்வர் என்றால்...




தில்லியின் முதல்வர் குரானா வின் கார் நெம்பர் பிளேட் இந்தியில் எழு தப்பட்டுள்ளது. மோட் டார் வாகனச் சட்டம் இதற்கு இடம் தர வில்லை என்று அதி காரிகள் சுட்டிக்காட் டியுள்ளனர். முதல் வரோ 'இந்தியில்தான் இருக்கும்; மாற்ற முடியாது' என்று கூறிவிட்டார். அதனால் அதிகாரிகள் இதற்கு ஏற்ப வாகனச் சட்டத்தைத் திருத்தலாம் என யோசித்து வருகின்றனராம்! ஒரு குடிமகன் இதைச் செய்திருந்தால் சட்டத்தை மீறியதற்கான தண்டனை அல்லவா கிடைக்கும்!

- எஸ். பால்தம்புராஜ்

# KALKI SHOPPING PAGE

## வாழ்த்துகிறோம்



Dr. முகேஷ் & D. கீதா அவர்களின்
புதல்வியும்
திருமதி. காயத்ரி சுப்ரமணியம் சிஷ்யை
**குமாரி நிஹாரிகா (வயது 11)**
பரத நாட்டிய அரங்கேற்றம்
ABHYUDAYA BANK HALL,
VASHI, NEW BOMBAY
10.12.95 மாலை 6.00 மணிக்கு வெகு விமரிசையாக நடந்தேரியது.

வாழ்த்துக்கள் : Mrs & Mr. மோகன் ராவ், B.M.பிரபாகர்ராவ், 59 ஆதியப்ப நாயக்கன் தெரு, சென்னை - 79.
போன் : 5223755.

## தவணை முறையில் சாரிகள் விற்பனைக்கு

புதிய டிசைன்களில் சூரத் சாரிகள், பெங்கால் காட்டன், காஞ்சிபுரம் பட்டு, மைசூர் சில்க், கோரா காட்டன், சுங்குடி சேலைகள் மற்றும் சுடிதார், பிளவ்ஸ் ஆகிய அனைத்தும் மொத்த வியாபாரிகளும், தனி நபர்களும், பணிபுரியும் பெண்களும் எங்களிடம் தவணை முறையில் வாங்கிக் கொள்ளலாம்.
மேலும் விவரங்களுக்கு : -

**மீரா டெக்ஸ்டைல்ஸ்**
26/1, மோதிலால் தெரு,
தி. நகர், சென்னை - 17.
போன் : 4342696

## திருமகள் நிலைய புதிய வெளியீடுகள்

| நூல் | ஆசிரியர் | விலை |
|---|---|---|
| திருப்பூந்துருத்தி | - பாலகுமாரன் | 70.00 |
| பெரியபுவினைக் கதைகள் | ” | 43.00 |
| மீட்டாத வீணை | ” | 45.00 |
| என்னவளே அடி என்னவளே | ” | 26.00 |
| கடலோரக் குருவிகள் | ” | 50.00 |
| என்னுயிரும் நீயல்லவோ | ” | 45.00 |
| பணம் காய்ச்சி மரம் | ” | 33.00 |
| ஆஸ்டின் இல்லம் | - சுஜாதா | 13.50 |
| தூண்டில் கதைகள் | ” | 44.00 |
| ஆயிரம் கணிப்பொறி வார்த்தைகள் | | 33.00 |
| தலைமைச் செயலகம் | | 40.00 |
| பட்டாம் பூச்சியும் தூக்கமும் | - சிவசங்கரி | 25.00 |
| சொர்க்கங்களில் சில நாட்கள் | ” | 15.00 |
| மனச்சிறை | - அனுராதா ரமணன் | 37.00 |
| நெருப்புடன் உறவு | ” | 33.00 |
| உறவு ஒன்று வேண்டும் | ” | 50.00 |
| காதோடு ஒரு காதல் கதை | ” | 42.00 |
| கருப்பு மலர்கள் | - நா. காமராசன் | 15.00 |
| காட்டுக்குறத்தி | ” | 23.00 |
| நாயகம் ஒரு காவியம் | - மு. மேத்தா | 60.00 |
| மனித நேயம் | - கமலி ஸ்ரீபால் | 20.00 |
| பைந்தமிழ்ப் பூங்கா | - சு. ஸ்ரீபால் | 33.00 |
| மனித பந்தங்கள் | - கிருஷ்ணமணி | 38.00 |
| இந்து சமயக் களஞ்சியம் | - திரவியம் | 77.00 |
| பெரும்புள்ளிகள் | - வி.கே. சுப்பிரமணயம் | 16.00 |
| திருமகள் தமிழ் கையகவிதி. கையடக்கப்பதிப்பு | | 20.00 |
| ஜாதக அலங்கார யோக விளக்கம் | - எஸ்.பி. சுப்பிரமணியன் | 22.00 |
| செட்டிநாட்டு உணவு வகைகள் | - விசாலாட்சி | 40.00 |

**தனிப் பிரதி வேண்டுவோர் புத்தக விலையுடன் ரூ. 6/- சேர்த்து M.O. செய்யவும். இலவச விலைப்பட்டியலுக்கு எழுதவும்.**

**திருமகள் நிலையம்**
55, வெங்கட் நாராயணா சாலை,
தி. நகர், சென்னை - 600 017
Ph : 4342899 Fax : 4341559

# சுஜாதா பக்கம்



டில்லியில் மற்றொரு திரைப்பட விழா. இது ஒரு வருடாந்திர சடங்காகி விட்டது. தலை விரித்து அடிக்கடி விரலால் தள்ளிக் கொள்ளும் அழகிய பெண்கள் மெழுகுவர்த்தி கொடுக்க, சங்கர்தயாள் சர்மா தள்ளாடி வந்து குத்து விளக்கு ஏற்ற, தென்கொரியாவிலிருந்தோ சைனாவிலிருந்தோ 'சப் டைட்டில்' போட்டு யாருக்கும் புரியாத படத்தோடு துவங்கி, இளைஞர்கள் முரட்டுக்கதர் ஜிப்பாவில் பத்து நாள் இங்கிலீஷ் பேச, சாதாரணக் குடிமகன் என்கிறவன் இதனால் இம்மியளவும் பாதிக்கப்படாமல் பேல்பூரி சாப்பிட்டுவிட்டு 'ரங்கீலா'வை எட்டாவது தடவை பார்ப்பது பழகி விட்டது.

இந்திய சினிமா எப்படி இயங்குகிறது? இன்றைய தினங்களில் ஏ.ஆர். ரகுமான் என்கிற மந்திரப் பெயர் இருந்தால் காசட் விற்பனையில் மூன்று கோடி கிடைக்கிறதாம். உலக அழகிகள், நாகார்ஜுனா, பாபாசெகல், அலிஷா சினாய் போன்றவர் வழங்கும் போலிக் கலாசாரக் காட்சிகள். ஐரோப்பிய ஆல்ப்ஸ் மடியில் வலிப்பு நடனத்துடன் பாடல் காட்சிகள். ராப், ரேப். அறுபது செமீ உடையில் ஸ்தனதரிசனம் தரும் காஜோல், ஊர்மிளா, மனிஷா போன்ற கதாநாயகிகள். இவற்றை நம்பியே பம்பாய் ஜீவித்திருக்கிறது. தமிழ் சினிமா போன முறை வெற்றிப்படத்தின் ஃபார்முலாவை, தோல்வி தழுவும் வரை முயற்சிக்கிறது. அதில் முப்பது கார்கள் என்றால், இதில் நாற்பது கார்களை வைத்துத் துரத்தி, வெடி. அதில் டூயட் பாடும் போது பின்னணியில் இருபத்தைந்து பெண்கள் என்றால் இதில் முப்பத்தைந்து. நூறு தண்ணீர்க்குடங்களை உடைத்தார்கள் என்றால் இதில் இருநூறு. அதில் கவர்னர் கொலை என்றால் இதில் மந்திரி. பாட்டில் ஒரு வரிக்கு அவன் பாங்காக் போனால் இவன் அடுத்த வரிக்கு ஆங்காங்.

பாடல்கள், முக்காபுலா, மஸ்தானா போன்ற அகில இந்திய அபத்த வார்த்தைகளில் ஆரம்பித்து, தமிழ் வேண்டுமென்றால் 'முத்தமிட எந்த இடம் நல்ல இடம்' போன்ற ஆத்ம விசாரமான கேள்விகள் கேட்கின்றன. ப்ரெஞ்சு புரட்சியின்போது சீமாட்டிகள் 'LET THEM EAT CAKE' என்று சொன்னதுபோல், யதார்த்தத்துக்குச் சம்பந்தமில்லாத ஒரு மேக லோகத்தில் இயங்கிக் கொண்டிருக்கும் சினிமா, இன்னும் சாகாமல் இருப்பதற்குக் காரணம்: அதற்குப் போட்டியான டீ.வி., கற்பனை வறண்டு அவசரமாகத் தற்கொலை முயன்று கொண்டிருக்கிறது. ஒரு மாதத்திற்கு நான்கு மணி நேரத்துக்கு மேல் பார்க்க லாயக்கில்லாமல் போய், எந்த சேனலிலும் சினிமாவையே நம்பி தனி அடையாளத்தை இழந்து கொண்டிருக்கிறது. திரைத் துளி, திரைமலர், திரை இசை, திரை கானம், திரைத் தென்றல், திரையில் நகைச்சுவை, திரையில் வெள்ளரிப் பிஞ்சு... அதில் வருபவர்கள் எல்லாம் திரையிலிருந்து துரத்தப்பட்டவர்கள். முட்டாள்தனமான க்விஸ் போட்டிகள். (ஒரு குரங்கு சைக்கிள்விட்டு நடித்த படம் எது?) கைக் குழந்தைகளுக்கெல்லாம் வெட் க்ரைண்டர் பரிசு. இதில்லையென்றால் அழகிப் போட்டி:- கேள்வி : (ஓய்வு பெற்ற கிரிக்கெட் ஆட்டக்காரர்) மிஸ் சிந்தாதிரிப்பேட்டை ஆனால் நீங்கள் சமூகத்துக்கு என்ன செய்வீர்கள்? அழகி : அன்னை தெரசாவைப் போல ஏழைக் குழந்தைகளைப் பராமரிப்பேன்.

ஸ்டூடியோ ஆடியன்ஸ் சைகையின் பேரில் கைதட்டவில்லையெனில் இலவச கோக்கோ கோலா கிடைக்காது. டீ.வி.யிலிருந்து தப்பிக்க ஒரு 'ஸர்வைவல் மான்யுவல்' தனிப்பட்டு எழுத உத்தேசம்.

தமிழ் சினிமா டைரக்டர்களிடம் நான் அடிக்கடி கேட்கும் ஒரு சந்தேகம் :

பாடல் காட்சிகளின் பின்னணியில் ஒரே மாதிரி ட்ரஸ் போட்டுக் கொண்டு வருகிறார்களே, அந்தப் பெண்கள் யாவர்? அவர்கள் எப்படி திடுதிப்பென்று தோன்றி தேகத்தின் மைய பாகத்தை அப்படியும் இப்படியும் அசைக்கக் கூடும்? இதற்கெல்லாம் லாஜிக் இல்லையா? மக்கள் என்ன அத்தனை முட்டாள்களா?

இப்போதெல்லாம் இந்த பெண்கள் முதல் இரவு அறைக்குள் கூட உள்ளே வந்து ஆடுகிறார்கள். கல்கி வாசகர்களிடம் ஒரு போட்டிக் கேள்வி : -

கீழ் வரும் மூன்றினுள் தமிழ் சினிமாவுக்குத் தேவையே இல்லாதது எது?

*1. கதை, 2. சதை, 3. உதை.*

இதற்கு இன்னும் ஒரு வாரத்திற்குள் சரியான விடையை தபால் கார்டில் எழுதி அனுப்பும் வாசகர்களில் இருவர் 'குலுக்கல்' முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு, இரண்டு வருஷத்துக்கு உண்டான அயோடைஸ்டு உப்பு பரிசாகப் பெறுவார்கள்!

*(மீண்டும் அடுத்த வாரம்)*

உறக்கத்திற்கும் விழிப்புக்கும் இடைப்பட்ட ஒரு மயக்க நிலை அது. இப்பொழுதெல்லாம் தினமுமே அதிகாலை ஐந்து மணிக்கே விழிப்பு வந்து விடுகிறது. விழிப்பு என்றால் உடன் உதறி எழுந்து விட முடிவதில்லை. கண்மூடி மயங்கி, மெல்ல மெல்ல விழிக்கும் அந்த பம்பாய் புறநகரின் அதிகாலை நேரத்து ஆரவாரங்களை ரசிப்பது.

சுற்றியுள்ள ஃபிளாட்டுகளிலிருந்து விட்டு விட்டு வரும் குக்கர் விசில் சப்தம், பால்காரன் வந்து பக்கத்து வீட்டு 'காலிங்பெல்' அழுத்தி "தூத்.." என நீட்டும் குரல், எக்ஸ்டென்ஷன் ஏரியாக்களிலிருந்து காலை ஷிப்ட் வேலைக்குப் போவோரை ஏற்றிக் கொண்டு 'சர்சர்' என ரயில்வே ஸ்டேஷன் நோக்கிச் சீறிப்பாயும் ஆட்டோக்களின் இரைச்சல், பேப்பரைத் தாழிடுக்கில் செருகி, கதவு தட்டி, இரண்டிரண்டு படிகளாய் ஸ்லிப்பர் சப்திக்க அவசரமாய் இறங்கி ஓடும் பேப்பர்கார பையனின் காலடி ஓசை... எல்லாமே தினமும் கேட்பவைதான். ஆனாலும் அலுப்புத் தட்டாமல் அவற்றை ரசிக்க முடிகிறது.

கவிதா இல்லையென்றாகி விட்ட பிறகுதான் கொஞ்சம் கவிதைத்தனத்துடன் சுற்றி நடப்பவற்றை அப்ஸர்வ் பண்ண ஆரம் பித்திருப்பதாய்ப் பட்டது. கொஞ்சம் முயற்சித்தால் கவிதைகூட எழுதிவிடலாம். தீவிர சோகமோ, சந்தோஷமோ தாக்கிய மனிதர்களுக்கு கவிதை எழுதுவது சுலபம் எனத் தோன்றுகிறது.

மாதமொன்றாய் கவிதாவின் முதலிரண்டு கடிதங்கள் வந்தன. அண்ணன் தனக்குத் தீவிரமாய் மணமகன் வேட்டையில் இறங்கி உள்ளதாயும், அடுத்து அவனின் திருமணமும் நடைபெற வேண்டியுள்ள தால், சீக்கிரம் மணமுடிக்க வற்புறுத்து வதாயும் எழுதியிருந்தாள்.



தீவிரமான குழப்பம் பிடித்து உலுக்கியது. பதிலெழுத பலமுறை நினைத்து, 'எப்படி, என்ன எழுதுவது?' என்பதாய் யோசிப்பதிலேயே பொழுதைக் கரைத்துக் கொண்டிருந்த நேரத்தில்தான் இடியெனத் தாக்கும் செய்தி தாங்கி அந்த மூன்றாவது கடிதம் வந்தது.

அண்ணன், அவனுடன் வேலை பார்க்கும் நண்பன் ஒருவனுக்கு அவளைப் பேசிமுடித்து விட்டதாகவும், மறுவாரம் திருமணம் என்றும் எழுதியிருந்தாள்.

முடிவெடுக்காது, பதிலெழுதாது முட்டாள்தனமாய் நாட்களை

# ஒரு காதல் இரு கல்யாணம்

## ஏ. மகாராஜன்

நகர்த்தியதற்காகத் தன் மேலேயே கோபித்துக் கொண்டு, குழம்பி, சோகம் தாக்க, வேதனையின் விளிம்பில் தொங்கி, ஒரு வாரம் ஆபீஸ் செல்லாது, ஷேவ் செய்யாது அழுக்கு ஆடையுடன் சுற்ற, ஆபீஸ் நண்பன் ஒருவன் மாற்றம் கண்டு பதறிப் போனான். பரிவோடு விசாரிக்க, முழுக்க அவனிடம் ஒப்பித்து வாய்விட்டு அழுதபோது சோகத்தின் கனம் வெகுவாய்க் குறைந்து போயிருந்தது. அடுத்து வந்த நாட்களில் அவனது ஆறுதலும், அறிவுரைகளும்தான் கொஞ்சம் கொஞ்சமாய் மீண்டும் நார்மல் நிலைமைக்குக் கொண்டு வந்தன.

தங்கை உஷாவுக்கு மட்டும் நல்ல வரன் அமைந்து மணமாகியிருந்தால், ஒருவேளை மனதுக்குப் பிடித்த கவிதா எளிதாய் கிடைத்திருக்கலாம். எந்தத் தங்கையின் மூலம் கவிதாவின் அறிமுகமும் அன்பும் கிடைத்ததோ, அவள் காரணமாகவே அவற்றை இழக்கவும் வேண்டியதாயிற்று.

ஒருவேளை வெளியில் சொல்ல தைரியமில்லாது மௌனமாகவே காதலித்தது தவறோ? வயது வந்த தங்கை வீட்டிலிருக்கும் பொழுது காதலாம் காதல் என்ற எகத்தாளத்திற்கும், அவள் தனது அண்ணனின் கோபத்திற்கும் பயந்து, மௌனித்துக் கிடந்திருக்கலாம். அது கோழைத்தனமோ? தைரியமாய் காதல் வெளிப்படுத்தி அவளைக் காத்திருக்கச் சொல்லி, தங்கைக்குத் தீவிரமாய் மணமகன் தேடி, மணம்முடித்த கையோடு தானும் கவிதாவின் கரம் பற்றியிருக்க வேண்டும்.

ஆயிற்று. எல்லாம் முடிந்து போயிற்று. ஒரு காதல் வெளிக்குத் தெரியாது மௌனமாய், ரகசியமாய் அரும்பி, மலராமலே கருகி உதிர்ந்தாயிற்று. இன்று கவிதா வேறொருவனின் உடைமை. இனி அவளைப் பற்றி நினைப்பது கூடத் தவறு.

'**கா**லிங்பெல்' ஓசை நினைவு கலைக்க, உதறி எழுந்து, கதவு திறந்தான். எதிர் ஃபிளாட் ஆன்ட்டி கையில் ஒரு கவருடன் நின்று கொண்டிருந்தார்.

"கல் ஆப்னே ஈவ்னிங் ஷிப்ட் டூட்டி கயா த்தே! தபீ யே 'ரிஜிஸ்டர்ட் போஸ்ட்' ஆயா"



# ரஜினி கொடுத்த நாற்பது லட்சம்!

'நாட்டாமை' படத்தின் தெலுங்கு ரீமேக்தான் பெத்த ராயலு. மோகன் பாபு நடிக்க 'சூப்பர்-டூப்பர் ஹிட்' ஆகி படம் ஆந்திராவையே ஒரு கலக்கு கலக்கி விட்டிருக்கிறது. இந்தப் படக் கதையின் தெலுங்கு உரிமையை இவருக்காக இவர் 'உயிர்' நண்பர் வாங்கித் தந்தார். அத்தோடு அல்ல... படப்பிடிப்பில் ஒருசமயம் மோகன்பாபு வுக்கு பணமுடை ஏற்பட்ட போது அந்த உயிர் நண்பர் ஒரே செக்காக போட்டுக் கொடுத்தத் தொகை ரூ. 40 லட்சம்! அந்த 'உயிர்' நண்பர் : ரஜினிகாந்த்!

மோகன் பாபு பற்றிய மற்றொரு செய்தி : திருப்பதியிலிருந்து 14 கிலோ மீட்டர் தொலைவில் ஸ்ரீவித்யா நிகேதன் ரெஸிடென்ஷியல் ஸ்கூல்' என்ற பள்ளிக்கூடத்தை நடத்தி வருகிறார்! 48 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ள இப்பள்ளியின் சிறப்பு, 75% மாணவர்கள் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். இவர் பள்ளிக்கூடத்தில் சேர விண்ணப்பத்தில் ஜாதி பற்றிய விவரம் கேட்கப்படுவதில்லை.

ஆதாரம் : ஸ்கிரீன்
தகவல் : எஸ். ஆலன்

● பம்பாயில் பள்ளிக்கூடங்கள் இடநெருக்கடியால் ஷிஃப்ட் முறையிலேயே நடைபெறுகின்றன. காலையில் 1-ம் கிளாஸுக்கும், 2-ம் கிளாஸுக்கும் மாலையில் 3-ம் கிளாஸுக்கும், 4-ம் கிளாஸுக்கும் அதே வகுப்பறையை உபயோகிக்கிறார்கள்.

– சம்பா வைத்தீஸ்வரன்

● முக்கிய பிரமுகர்கள் மேடையில் குத்துவிளக்கேற்றி விழாவைத் தொடங்கி வைப்பார்கள். தீபத்தை ஏற்றும் மெழுகுவர்த்தியிலிருந்தே ஓரிரு சொட்டுகளை [உருக்கி] திரியின் மேல் விட்டு ஏற்றினால் விளக்கு, சுடர் விட்டு நன்றாக எரியும்.

– லட்சுமிசுந்தரம்

● அவரவர் பாவபுண்ணியங்களின் பலன்களை அவரவர் அனுபவித்தே தீர வேண்டுமெனில் மகான்களால் என்ன பயன் என்று ஒருவர் கேட்டார். ஆயிரம் ரூபாய்க்கான சில்லறைகளை ஒருவன் சுமந்து கொண்டு நடக்கிறான். இடையில், ஒரு வங்கியில் அதைக் கொடுத்து நோட்டாக மாற்றிக் கொள்கிறான். முன்பிருந்ததும் ஆயிரம் ரூபாய், இப்போதும் அதே தொகைதான். ஆனால் முன்பு பாரம் அவன் தோளை அழுத்தியது. இப்போது நிம்மதியாக நடக்கிறான். மகான்களும் இப்படியே துன்பங்களினால் உங்களுக்கு ஏற்படும் பாதிப்புகளை, வருத்தத்தைக் குறைப்பார்கள்.

– ஸ்ரீசத்யசாய்பாபா
தகவல் : அ. ஷண்முகசுந்தரம்

---

குழப்பமாய் ஃப்ரம் அட்ரஸ் பார்க்க, தங்கையின் பெயர் இருந்தது. கதவுமூடி உள்வந்து, உறை பிரித்து வாசிக்கலானான்.

"...ஒரு முக்கியமான விஷயமாய் இக் கடிதம் எழுதுகிறேன். நம் வீட்டுக்கு அடிக்கடி வருவாளே என் தோழி கவிதா... அவளின் அண்ணனும், நானும் நீண்ட நாட்களாய் உயிருக்குயிராய் காதலிக்கிறோம். அவர் எந்தவித வரதட்சணையுமின்றி என்னை மணக்கத் தயாராயுள்ளார். இத்தனை நாட்களாய் அவரது தங்கை கவிதாவின் திருமணம் நடைபெறாதிருந்ததால் வெளியே யாருக்கும் தெரியப்படுத்தாது இருந்தோம். சென்ற மாதம் அவளின் திருமணம் முடிந்து விட்டது. நீங்கள் தயவுசெய்து கோபிக்காமல் அப்பா, அம்மாவிடம் எடுத்துச் சொல்லி, எங்களின் திருமணத்தை எல்லோரின் சம்மதத்துடனும் எப்படியாவது விரைவில் நடத்தி வைக்க வேண்டுகிறேன்..."

படித்துக் கொண்டிருந்தவனுக்கு தலைசுற்றுவது போலிருக்க, சுவர் பிடித்து படுக்கைக்கு வந்து சாய்ந்தான். மயக்கமாய் கண்மூடி, விட்டு விட்டு கேட்கும் குக்கர் விசில் சப்தம், ஆட்டோ இரைச்சல், எங்கேயோ தமிழ் வீட்டிலிருந்து வரும் எம்.எஸ். சுப்புலட்சுமியின் வெங்கடேஸ்வர சுப்ரபாத இசை என வெளி ஆரவாரங்களில் மெல்ல மனசைத் திசைதிருப்ப முயன்று பரிதாபமாய் தோற்றுக் கொண்டிருந்தான்.

## மெய்சிலிர்த்த அனுபவம்





* குருவாயூர் : கோவிலும் தெய்வமும்

**ந**ண்பர்களுடன் குருவாயூர் போயிருந்தேன். பயணக் களைப்பு மிகுதியாக இருந்ததால், அன்றிரவு மற்றவர்களுடன் சுவாமி தரிசனத்துக்குப் போகாமல் அறையிலேயே தூங்கிப்போனேன். தூக்கத்தில் கனவு: ஏதோ ஒரு ஊரில் கோயில். தரிசனத்துக்காகப் போகையில் அழகான கோபுரம் தெரிகிறது. தலைக்கு மேல் கரம் குவித்து வணங்குகிறேன்; ஆனால் அந்தக் கோயிலுக்குப் போக வழி தெரியவில்லை. அப்போது அசரீரி போல் ஒரு வாக்கியம் காதில் தொடர்ந்து ஒலித்தது: "உனக்கு ஒரு சிறுவன் வருவான்; வழிகாட்டுவான்; பயப்படாதே!"– அத்துடன் கனவு கலைந்தது.

மறுநாள் குருவாயூரப்பனை தரிசனம் செய்தபோது, கனவில் ஒலித்த அசரீரி போன்ற வாக்கியமே மனத்தில் சுழன்றடித்தது. ஊர் திரும்பியபோது மனைவியின் முகத்தில் ஒரே பூரிப்பு. "இன்று காலை லீலாக்காவுடன் டாக்டரைப் பார்க்கப் போனேன். நான் கர்ப்பம் அடைந்திருப்பதை டாக்டர் உறுதிப்படுத்தியிருக்கிறார்" என்றாள். முதன் முதலாகத் தந்தையாகப் போகும் இனிய செய்தி கேட்ட அந்த நேரத்திலும் சரி, அந்த முதல் குழந்தை ஆண் பிள்ளையாகப் பிறந்த சமயத்திலும் சரி– அந்த அசரீரி வாக்கு நினைவுக்கு வர, சிலிர்த்துப் போனேன்.

# "வருவான்; வழி காட்டுவான்!"

– **சுந்தர் சுந்தரி, கோவை.**

**ம**காபலிபுரம் சுற்றுலாவின் போது ஒரு ஜெர்மானியரைக் கண்டேன். மகிஷாசுரமர்த்தனி சிற்பத்தின் முன் சப்பணம் இட்டு உட்கார்ந்து கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்.

மெள்ள அவரிடம் பேச்சுக் கொடுத்தேன். அவருக்கு நமது புராண இதிகாசங்கள் பற்றி பல விஷயங்கள் தெரிந்திருந்தது. எனது வியப்பைக் கண்டவர், "இதோடு நான்காவது முறையாக இந்தியா வந்துள்ளேன்" என்று விளக்கினார்.

"அப்படி என்ன இங்கே இருக்கிறது?" என்றேன்.

"அதுவா! ஒரு லவ் சமாசாரம்..."

ஆகா! மனிதர் ஏதோ காதல் வலையில் சிக்கியுள்ளார் என்று மேலும் காதைத் தீட்டிக் கொண்டேன்.

சற்று இடைவெளி கொடுத்து அவர் பேசியபோது எனக்கும் உடன் வந்த நண்பர்களுக்கும் சட்டென்று சிலிர்ப்பு ஏற்பட்டது.

"ஆமாம்! இது மதர் இந்தியாவின் பேரில் எனக்கு ஏற்பட்ட காதல்..." என்றார்.

– **எம். ஆர். ஜெகந்நாதன், காஞ்சிபுரம்.**

**ஐ**யப்பன் ஊர்வலத்தில் வந்த யானை திடீரென்று தறிகெட்டு ஓட ஆரம்பித்தது. ஒரு விளக்குக் கம்பத்தை முட்டித் தள்ளி, ஒரு கைவண்டியை உடைத்து, முன்னேறியது. மனிதர்களெல்லாம் வழிவிட்டு ஓடி விலகிக் கொண்டனர். யானைப் பாகன் மட்டும் செய்வதறியாது தவிக்க, எங்கள் தெருவுக்குள் நுழைந்தது யானை. அது நடந்த திசையில் குறுக்கே படுத்திருந்தது, குட்டிகளைச் சமீபத்தில் போட்டிருந்த ஒரு நாய். யானையின் கோபத்தில் குட்டிகளுக்கு என்ன கதியாகுமோ என்று நாங்கள் நடுங்கினோம். ஆனால் அவற்றை நெருங்கியதும், மதம் பிடித்த அந்த யானை நின்றுவிட்டது. சில நொடிகள் அவற்றைப் பார்த்தபடி நின்றது. பிறகு மெள்ள, தன் பெரிய உடலைக் கஷ்டப்பட்டு வளைத்துத் திருப்பிக் கொண்டு, குட்டிகளுக்குத் துளியும் இடையூறு ஏற்படாத வண்ணம் முன்னேறிச் சென்றது.

சில வருடங்களுக்கு முன் நடந்த இச் சம்பவம், கூடியிருந்த ஐயப்ப பக்தர்கள் அனைவரையுமே வியக்கவும் சிலிர்க்கவும் வைத்தது.

– **சந்திரா ராஜகோபால், கோவை – 25.**



# இளமை + இனிமை = சாரங்க்!

"அவர்களுக்கு மூன்று குழந்தைகள் பிறந்தன. பீட், ரிபீட், சியாங் சாங் என்று பெயரிட்டனர்."

"பீட் சரி, ரிபீட் சரி, அதென்ன சியாங் சாங்?"

"முட்டாளே, உலகில் பிறக்கும் ஒவ்வொரு மூன்றாவது குழந்தையும் சீனக் குழந்தை என்று புள்ளிவிவரங்கள் கூறுவதை மறந்து விட்டாயா?"

- வீதி நாடகம் ஒன்றில் கேட்ட ஜோக். வெடிச் சிரிப்புக்கள் அந்தப் பகுதியை நிறைத்தன.

வீதி நாடகம் என்பது சீரியஸான விஷயமில்லையோ என்று முகம் ஆச்சரியப்பட வேண்டாம்.

கல்லூரி மாணவர்களே, மாணவர்களுக்காக நடத்திய கலை நிகழ்ச்சி என்பதால் இளமைக்கும் இனிமைக்கும் நகைச்சுவைக்கும் குறைவில்லை.

வழக்கமாக 'மார்டி க்ரா' (Mardi Gras) என்ற பெயரில் ஒவ்வொரு ஜனவரியிலும் சென்னை ஐ.ஐ.டி.யில் நடைபெறும் கலை விழாதான். இம்முறை "சாரங்க்" என்று புதிதாகப் பெயர் சூட்டப்பட்டிருந்தது.

ரோம் நாட்டு விருந்து தினம் ஒன்றின் பெயர் 'மார்டிக்ரா'. 'மார்டி க்ரா' என்று சொன்னால் நேற்றுதான் கல்லூரியில் சேர்ந்து ராகிங்கில் மாட்டிக் கொண்டு ஓவென்று அழும் ஜூனியர் பப்பாவுக்குக் கூடத் தெரியும் என்ற நிலையில் அந்தப் பெயரை மாற்றுவானேன்?

"நம் பண்பாட்டுக்குத் தகுந்த வகையில் சில மாற்றங்களை இம்முறை புகுத்தியிருக்கிறோம். அதற்கேற்றவாறு 'சாரங்க்' என்று பெயர் மாற்றப்பட்டிருக்கிறது" என்கிறார் ஐ.ஐ.டி. இயக்குனர். (சாரங்க் என்றால் மான் என்று அர்த்தம்.)

கலைப் பிரிவுச் செயலாளரான ஸ்ரீனிவாஸ், "முன்பு இடம் பெற்றிருந்த ஃபேஷன் ஷோவை நிறுத்தி விட்டோம். கொஞ்ச காலமாக இந்த நிகழ்ச்சியின் போது சிலர் தரக்குறைவாக நடந்து கொள்கிறார்கள். சில வருடங்களாக இல்லாமலிருந்த ஸோலோ இசைக் கருவி போட்டி மீண்டும் புகுத்தப் பட்டிருக்கின்... கொரி யோக்ராஃபி பிரிவில் இந்திய, ... கத்தியப் பிரிவுகளுக்குத் தனித் தனிப் பரிசுகள் இம்முறை உண்டு. வீதி நாடகங்கள் அறி முகமாகின்றன" என்றார்.



* க்விஸ்....



"நெஞ்சைத் தூள் தூளாக்கி விட்டு போகிறாயே?" என்று திருவனந்தபுரக் கல்லூ





* வீதி நாடகங்கள்..

மாணவர் ஒருவர் கதறிக் கொண்டிருந்தார்.

''காதல் கொண்டாலே பய மென்ன?'' என்று தடாலடியாக ஒரு மாணவி குரலெழுப்பினார்.

"தீக்குச்சி எரியும்போது அதைத் தென்றல் அணைக்கலாம். தென் றலே தீயை வளர்த்தால், அதை எப் டி அணைக்க?" என்று தத்து வார்த்த வருத்தப்பட்டார் சூரத் மாணவர்.

படித் தொடங்கும் பாடல்கள் மட்டு வேறு பல அந்...தக் கால இந்திப் பாடல் ம் அனாயாசமாக எடுத்து விட்டு நெக் கினார்கள். 'நாஸ்டால் ஜியா' (பழைய வுகள்) என்ற இந்தப் பிரிவுக்கு ஏராள டியாளர்கள்.

ட்டுப் போட்டிகளில் உற்சாகம் கரை து!

ாளி கே பீச்சே புகழ்) இலா அருண் பாடல் ஒன்றுக்கு 'காக்ரா' ஆடி பெங்களூர் மாணவிகள் சையும், முதல் பரிசையும் க் கொண்டனர். 'வெஸ் மியூசிக்' பிரிவில் முத பெற்ற கிறித்துவக் கல்



லூரி மாணவர் குழு ஐ.ஐ.டி.யின் அடிமடியிலேயே கை வைக்கத் துணிந்தனர்!

அறிவு ஜீவி மாணவர்கள் வெளிநாட்டுக்குச் செல்லும் போக்கைக் கிண்டலடித்தது அவர்கள் பாடல்!

விழாவில் கவர்ந்த ஒரு அறிவிப்பு: ப்ளாஸ்டிக் கோப்பை ஒன்றை வைத்து "இதில் உங்களுக்கு விருப்பமான குளிர் பானத்தைப் பெறலாம்" என்று குறிப்பிட்டிருந்தார்கள். பக்கத்திலேயே உருத்தெரியாமல் சிதைந்த அதே மாதிரி கோப்பை. அதன் அருகில் "ப்ளாஸ்டிக் கோப்பையை நீங்கள் வீதியில் எறிந்தால், மான்கள் உங்களை இப்படி ஆக்கி விடும்" என்கிற எச்சரிக்கை. வேறொன்றுமில்லை. தவறிப் போய் ப்ளாஸ்டிக்கை மான்கள் சாப்பிட்டு விட்டால் அவை இறந்து போகவும் வாய்ப்பு உண்டு. மான்கள்? ஆமாம் ஐயா! வளாகத்தில் எக்கச்சக்கமாக மான்கள் உண்டு!

இந்த விழாவின் பெயர் மாற்றம் மற்றும் ஃபேஷன் ஷோ நீக்கத்தைத் தொடர்ந்து விழாவின் முக்கிய ஸ்பான்ஸர்களான பெப்ஸி ஐ.ஐ.டி. தங்கள் தாராளமான நிதி உதவியைக் குறைத்துக் கொண்டு விட்டதாக செய்திகள் வந்தனவே என்று கலைப் பிரிவு செயலாளர் ஸ்ரீனிவாஸைக் கேட்டோம்.

"பெப்ஸிக்காரர்கள் தங்கள் பட்ஜெட்டைத் தாங்களாகவே இந்த முறை சுருக்கிக் கொண்டிருக்கிறார்கள். பெயர் மாற்றத்திற்கும் அதற்கும் சம்பந்தமில்லை. இரண்டு தனித் தனிச் செய்திகளை நாளிதழ்கள் இணைத்து விட்டிருக்கின்றன" என்று விளக்கினார் (சமாளித்தார்?) ஸ்ரீனிவாஸ்.

**- ஜி.எஸ்.எஸ்**

படங்கள் : **கிருஷ்ணமூர்த்தி**





அப்பச்சி இறப்பதற்கு நாலு வருசத்திற்கு முன்னால் இந்தத் தென்னை மரத்தை தென்னம் பிள்ளையாகக் கொண்டு வந்திருந் தார்.

அப்பச்சி இறந்து போய் பதினைந்து வரு டங்கள் ஆகிவிட்டன. தென்ன்ன மரம் இப் போது வீட்டு உயரத்தைத் தாண்டி வளர்ந்து விட்டது.

“ஏம்பா... சிவராமா... மரம் நல்லா காப்பு புடிச்சிருக்குது... உரம் கிரம் போடறியா?”

“இல்லீங்க மாமா... மண்ணு நல்ல மண்ணு... அப்பச்சி மண்ணைப் பார்த்துட்டு அப்பவே சொன்னாரு... இந்த மண்ணுக்கு தென்னை மரம் வெச்சா அம்சமா வளரும்னு...”

“எண்ணெய்க்கு ஆட்டனும்னா எண்ணெய் அருமையா வரும் கண்ணு....” என்றார் சித் தப்பா.

“நாக்கெல்லாம் சுருசுருன்னு இழுக்குது. நல்ல ருசி மாப்ளே...” என்றார் காயத்ரியின் அண்ணன்.



# தென்னை மரத்து வீடு

**கனகராஜன்**

காலனிக்குள் தென்னை மரத்து வீடு என்று பெயர் வாங்கியாகி விட்டது. சிலுசிலுவென பச்சை ஓலைகள் பரப்பி நிழலாக நின்றிருந்தது. வீட்டிற்கு அழகாக இருந்தது. காலனியில் வீடுகள் அதிகமாகி விட்டன. தென்னை மரத்து வீட்டைப் பார்த்து விட்டுப் பல வீடுகளில் தென்னம் பிள்ளை வளர்க்க ஆரம்பித்து விட்டிருந்தார்கள். சில வீடுகளில் தென்னை மரமாகி குருத்து முளைக்க ஆரம்பித்துவிட்டன.

சிவராமன் கோயமுத்தூரில் புரோகிராமராக வேலை பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்கு பொள்ளாச்சியில் வேலை கிடைத்து விட்ட பின்னால் - கல்யாண ஏற்பாடு நடந்தது.

காயத்ரியை முதலில் போட்டோவில்தான் பார்த்தான்.

இவனுடைய கலர் போட்டோக்கள் இரண்டை அவர்கள் வீட்டில் யாரோ வாங்கிக் கொண்டு போனார்கள். காயத்ரியை நேரில் பார்க்க ஆசைப்பட்டான். வெள்ளிக்கிழமை தவறாமல் மாசாணியம்மன் கோவிலுக்கு வருகிறவள் என்கிற தகவல் கிடைத்ததும், ஒரு வெள்ளிக்கிழமை தயாரானான்.

அவளைப் பார்த்தான்.

பெரியம்மா, அத்தை, அண்ணி, அக்கா மகள், அண்ணன் மகன் என்று கொஞ்சம் உறவுப் படையோடு வந்திருந்தாள்.

குழந்தை முகம். கண்கள் பட்டாம் பூச்சியைப் போலத் துறுதுறுத்தன. அவனைப் பிடுங்கினாள். கூட்டத்தில் பய பக்தியுடன் நின்று கொண்டிருந்தவள் எதற்கோ எதிர்ப்பக்கம் நோக்க, அவனைக் கண்டாள். அடையாளம் கண்டு கொண்டு விட்ட அவள் கண்கள் மிரள, சாமி பக்கம் திரும்பிக் கொண்டாள்.

சாமி கும்பிட்டு முடித்து விட்டு வெளியே வந்த போது பழத்தட்டோடு அவள் இவனைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே போனாள்.

**கா**யத்ரி வந்த பின்னால் இந்த வீடு நிறைய மாற்றம் பெற்றது. பின் பக்கம் விதவிதமான பூச்செடிகள். காய்கறிச் செடிகள். புத்தக அலமாரி அழகானது. எப்போதும் கொலுசுச் சத்தம். கண்ணாடி வளையல் ஓசை. சிரிக்கிற முகம். சின்ன விஷயத்திற்கும் கூட ஆச்சரியத்தில் விரியும் கண்கள். பக்கத்து வீட்டுப் பூனைகளுக்குப் பால் வைத்துக் கொஞ்சுவது. தொடர் கதை படித்தால் அடுத்த வாரம் என்ன நடக்கும் என்று கவலை கொள்வது. ஒருமுறை வெள்ளை கனகாம்பரச் செடியை கழுதை தின்று விட்டுப் போக - ஒரு நாள் முழுக்க விசனத்தில் கலங்கி புலம்பிக் கொண்டிருந்தாள்.

அந்த காயத்ரிதான் மரத்தை வெட்டச் சொன்னாள்.

"இங்க பாருங்க. சின்னத் தேங்காய் விழுந்து கண்ணாடி ஓடு உடைஞ்சு போயிடுச்சு."

தென்னை மரம், குறி பார்த்துக் குரும்பைத் தேங்காயை கண்ணாடி ஓட்டின் மேல் வீசியிருப்பதைப் போல் இருந்தது. கண்ணாடிச் சில்லுகள் சிதறிக் கிடந்தன. சுத்தப்படுத்தினார்கள்.

இரண்டு நாட்களுக்குப் பின்னால் - பழுத்த தென்னம் மட்டை 'தொபீர்' என்று விழுந்தது.



## கோடியில் ஒருவர்!

முதல்வர் ஜெயலலிதா கடந்த மூன்று ஆண்டுகளாக வருமான வரி கணக் சமர்ப்பிக்கவில்லை. அதற்கு முந்தைய மூன்று ஆண்டுகளில் அவர் வருமானம் பி வருமாறு:

*1990 - 91 : ரூ. 1.89 கோடி*

*1991 - 92 : ரூ. 2.60 கோடி*

*1992 - 93 : ரூ. 5.82 கோடி*

ஒரு ரூபாய் சம்பளக்காரரான முதல்வர், தமக்கு ஹைதராபாத் திராட்சை தோட்டமும் அன்பர்களின் அன்பளிப்புகளும் இவ்வளவு வருவாயை அளித்துள்ளதா விளக்கம் தந்துள்ளார்.

இந்த வருவாய்க் கணக்கையும் விளக்கத்தையும் வருமானவரி அதிகாரிகள் முழுமையாக ஏற்றுக் கொள்ளாமல், பெறப்பட்ட பரிசுகள் குறித்து விளக்கம் கேட்டிருக்கிறார்கள்.

அரசு விதிமுறைகளின்படி முதல்வர் பெறுகின்ற பரிசுகளை அவரது சொந்த சொத்தாகக் கருத முடியாது; அவை அரசாங்கத்துக்கே உரியவை.

நன்றி : இந்தியன் எக்ஸ்பிரஸ்

நடு இரவில் தூங்கிக் கொண்டிருந்த காயத்ரி 'அய்யோ....' என்கிற கத்தலோடு அவனை இறுக்கிக் கொண்டாள். பயத்தால் அவள் உடல் நடுங்குவதை உணர முடிந்தது.

"காயத்ரி... ஒண்ணுமில்லே... மட்டை விழுந் திருக்கு...."

அவன் சொன்னது அவள் காதில் விழா ததைப் போல பயத்தில் முனகினாள்.

சின்னக் கரப்பான் பூச்சியைக் கண்டால் கூட கூச்சல் போடுகிற ரகம். இரவில் திடீ ரென்று பவர்கட் ஆனால் 'என்னங்க... என்னங்க...' என்று இவனைத் தேட ஆரம்பித்து விடுவாள். 'சீக்கிரம் டார்ச் லைட்டை எடுங்க...' என்று நச்சரிப்பாள். அவசரத்தில் கிடைக்கிற டார்ச்சினாலோ தீப்பெட்டியினாலோ வெளிச்சமாக்கினால் எங்காவது சுவரோடு படம் மாதிரி ஒட்டிக் கொண்டு இருப்பாள். வெளிச்சத்தைக் கண்ட பின்னால் அவளுக்கு உயிர் வரும்.

பயங்களுடன் பழகி வளர்க்கப்பட்ட பெண் ணாக இருந்தாள் காயத்ரி. பாம்பு என்று விளை யாட்டுக்குச் சொன்னால் கூட, புன்னகை முகம் மாறி, கண்களில் பயம் பரவ நிலை குலைந்து நிற்பாள். இரவில் காற்றில் ஆடுகிற துணியைக் கண்டால் பயம். கயிற்றைக் கண்டால் பயம். செகண்ட் ஷோவிற்குப் போய் விட்டு வருகிற போது இவன் கையை இறுக்கிக் கொண்டு நெருக்கி ஒட்டிக் கொண்டு வருவாள்.

மரம் உயர உயர காயத்ரியின் பயம் வளர்ந்தது. முன்பை விட இப்போதெல்லாம் மரம் காற்றில் சலசல என்று சத்தமிடுகிறது. மழைக் காலத்தில் 'உய்... உய்....' என்று பேய் காற்றிற்கு கத்துகிறது. அவள் அடிக்கடி தூக்கம் இழந்து பயத்தில் தவித்தாள்.

"ஏங்க... காத்து வேகமா வீசுதே. மரம் வுழுந் துடாதா?"

"மரம் விழாது காயத்ரி...."

அவள் அவனை இறுக்கிக் கொண்டு தூங்க விடாமல் ஏதாவது கேட்டுக் கொண்டே இருப் பாள்.

ஓடுகள் அடிக்கடி உடைவது - மாற்றுவது வழக்கமாயிற்று.

காயத்ரி மரத்தை வெட்டச் சொல்லி வற்புறுத்துவது அதிகமாயிற்று.

அவனுக்கு இந்த மரத்தை வெட்டி விட மனசில்லை. பாசமாய் இருந்த அப்பச்சியின் நினைவுச் சின்னமாய் அது நின்றது. 'தென்னை மரத்து வீடு' என்கிற சிறப்புப் பெயரை இழக் கவும் மனசில்லை. அண்ணன் குடியிருந்த போதும் சரி... வாடகைக்கு மளிகைக் கடைக் காரர் குடியிருந்த போதும் சரி... இப்போது இவன் குடியிருக்கிற போதும் சரி.... காலனியில் நிறைய வீட்டில் தென்னை மர நிழல் வந்து விட்ட போதிலும் - இந்த வீடுதான் தென்னை மரத்து வீடாக இருக்கிறது.

சிவ்ராமனை சிலர் 'தென்னை மரத்து வீட்டுக்காரரே....' என்கிறார்கள். காயத்ரியைக் கூட 'தென்னை மரத்து வீட்டுப் பொண்ணு.....' என்கிறார்கள்.

நேற்று இரவு காயத்ரி அழுது ஆர்ப் பாட்டம் செய்து விட்டாள்.

"பயம்மா இருக்குதுங்க. சலசலன்னு ஓலைச் சத்தம் காதுக்குள்ள ஊசி மாதிரி குத்துதுங்க. ராத்திரி தூங்க முடியாம, தவிப்பா இருக்குது. இந்த மரத்தை வெட்டிருங்க."

அன்றைக்கு நல்ல மழை வேறு.

"ரொம்ப இம்சையா இருக்குது... பக்கத்துல லைன் கம்பம் வேற இருக்குது. மரம் வளர்ந்து பெரிசானா பழுத்த மட்டை லைன் கம்பத் துக்கு நேரா வந்து விழும்... இதை வெட் டிருங்க...."

"காயத்ரி... எங்க அப்பச்சி வெச்ச மரம்...."

"ஓடு எத்தனை தடவை ஒடைஞ்சிருக்கு... செவத்து ஓரமா மரம் இருக்கறதால எத்தனை பிரச்னை..... மரம் வளைஞ்சு நிக்கறதால பெட் ரூமுக்கும் சமையல் ரூமுக்கும் பொதுவில

# KALKI SHOPPING PAGE

## THUS SPAKE THE PARAMACHARYA



நடமாடும் தெய்வமாய் விளங்கி நானிலத்தில் உள்ளவர்களை நல்வழிப்படுத்திய மாமுனிவர் காஞ்சி பெரியவர் ஸ்ரீ மஹா சுவாமிகளின் அருளுரைகளைத் தொகுத்து ஆங்கிலத்தில் **"THUS SPAKE THE PARAMACHARYA"** என்ற **1000 பக்கங்களிலான புத்தகம்** விரைவில் வெளிவர இருக்கிறது. இப் புத்தகத்தை டால்மியாபுரம் மேல்நிலைப்பள்ளி ஓய்வு பெற்ற தலைமை ஆசிரியர் **'வித்யாசேவாரத்னா'** திரு. **A. கணபதி இராமன்** தொகுத்துள்ளார். இந்த புத்தகத்தில் **750** பக்கங்கள் மகாசுவாமிகளின் அருளுரைகளும் **100** பக்கங்கள் சுவாமிகளின் அபூர்வ புகைப்படங்களும், **250** பக்கங்கள் காஞ்சி பெரியவரை வெளிநாட்டு அறிஞர்கள் சந்தித்த வினோத அனுபவங்களும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. இப்புத்தகம் மற்றும் காமாட்சியம்மன் டாலர் விலை ரூ.300/-. முன்கூட்டி பணம் அனுப்பி பதிவு செய்து கொள்பவர்களுக்கு நூலும், டாலரும் ரூ.250/-க்கு வழங்கப்படும். தேவைப்படுவோர் திரு. **A. கணபதி இராமன், Rtd. H.M. 7, கணேஷ்நகர், லால்குடி, திருச்சி — 621 601** என்ற முகவரிக்கு M.O. or D.D. அனுப்பவும்.





30 - 33 நாட்கள்
ஸ்ரீபத்ரிநாத்,
கேதார்நாத்,
நேபாள்,
கயா,
கல்கத்தா,
டில்லி, பூரி,
பம்பாய்
பண்டரிபுரம்
உள்ளிட்ட இமாலய

## காசி யாத்திரை

ஸ்பெஷல் 6.5.96 - 7.5.96 - 15.7.96 ம் தேதிகளில் தனி 3 டயர் ஸ்லீப்பர் கேரேஜ் மூலம் சென்னையிலிருந்து புறப்பட்டு மீண்டும் சென்னைக்கு திரும்பி வருகிறது. ரயில் சார்ஜ், காலை காபி, டிபன், மாலை காபி 2வேளை பிராமணாள் போஜனம் உள்பட கட்டணம் ரூ.7775/-பத்ரி, கேதார், நேபாள் போய் வரும் பஸ் சார்ஜ் ரூ.2750/- தனி. விபரத்திற்கு 2ரூ ஸ்டாம்ப் அனுப்பவேண்டும்.

ஸ்ரீ நாமகிரி டிராவெல் சர்வீஸ்
34/2, அக்ரஹாரம், மேலசிந்தாமணி, திருச்சி - 2.
போன்: 24823



## மணமக்கள் தேவை
## கம்யூட்டர் ஜாதகம்

அனைத்து சமூகத்திலும், ஆயிரக் கணக்கான வரன்கள் பெற உடன் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

கம்யூட்டர் ஜாதகங்கள் நொடிப் பொழுதில் ஆங்கிலம், தமிழ் ரூ. 50/-
எதிர்கால கணிப்புடன் ரூ. 150/-
ஆண்டு புலன் : ரூ. 50/-
கல்யாண பொருத்தம் : ரூ. 50/-
**Numerology prediction : Rs. 50/-**
**ASTROLOGY SOFTWARE FOR SALE.**

## ஸ்வயம்வரா

(GOVT. REGD.)
18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33. போன் : 425822,
7-ஏ, சாந்தி வஹார் காம்ப்ளக்ஸ், லஸ், சென்னை - 4. போன் : 846278,
88, 1, 16th Cross, 6th Main, Malleswaram, Bangalore - 560 055. Ph. : 3340146

ADYAR
## STUDENTS XEROX

*Quality that is close to perfection*

**XEROX**
**LASER PRINTING**
**WORD PROCESSING**
**DTP**
**ELECTRONIC & MANUAL TYPING**
**BINDING & LAMINATION**



"ஹவாலா மோசடியில் கோடி கோடியா பணம் கை மாறியிருக்கிறதைப் பத்தி என்ன நினைக்கிறீங்க?"

"வாழிய பாரத 'MONEY' திரு நாடு!"

- ஞா. ஞானமுத்து

சாஞ்சு இருக்குது. போதாததுக்கு லைன் கம்பம் வேற... தொப் தொப்புன்னு ஏதாச்சும் விழுகிற போது மனசு படபடங்குது...."

மரம் வளர்ந்தால் வெயில் காலத்திற்கு 'குளு குளு' என்று இருக்கும் என்கிற நினைப் பில் அப்பச்சி சுவர் ஓரமாக நட்டு வைத்து விட்டார்.

இப்போது காயத்ரி இப்படி பயந்து சாகிறாள்.

"**கா**யத்ரி.. கம்பெனியில இன்னிக்கு இன்ஸ்பெக்ஷன். லீவு போட முடியாது. மாரி முத்து அண்ணன் கிட்ட சொல்லி இருக்கிறேன். ஆளுகளோட வருவாரு... மரத்தை வெட்டு வாங்க. பார்த்துக்கோ."

காலையில் கம்பெனிக்குப் புறப்படும் போது சொன்னதும் காயத்ரியின் முகம் மலர்ந்தது.

"எத்தனை மணிக்கு வருவாங்க?"

"பத்து பத்தரைக்கு வந்திருவாங்க."

கண்களில் மகிழ்ச்சியின் அடையாளம்.

**அ**ன்றைக்கு அவனுக்கு வேலை ஓடவில்லை. கம்ப்யூட்டர் ஸ்கிரீனில் கர்சர் பாயிண்டைப் போல மனசு துடித்தது. புரோகிராமில் நிறையத் தவறுகள் வந்தன. இன்ஸ்பெக்ஷன் என்பதால் வேலைப் பளு அதிகமாகி விட்டது. அடிக்கடி பிரிண்ட்டர் ரிப்பேர் ஆகி மக்கர் செய்தது.

அவன் நினைப்பெல்லாம் தென்னை மரத் தையே சுற்றிச் சுற்றி வந்தது.

எட்டாம் வகுப்பில் ஓவிய மாஸ்டர் சொந்தப்படம் வரையச் சொன்ன போது முதன் முதலாக அவன் வரைந்த சிறந்த படம் தென்னை மரம். வரைவதற்கு சுலபமாக இருந் தது. அதுவே அவன் ஓவிய ஆர்வத்திற்கு வித்தானது. தென்னையைப் பற்றி ஒரு பெரிய கவிதை கூட எழுதியிருக்கிறான். காலேஜி கிராபிக்ஸ் புரோகிராமில் ஒரு தென்னந் தோப பையே உருவாக்கி இருக்கிறான்.

"தென்னை மரத்து வீடு...."

இந்தப் பெருமையை அந்த வீடு இழக்கப் போகிறது.

**சா**யங்காலம் அவன் திரும்பிய போது வீடு வெறிச்சென்று இருந்தது. அந்நியமான ஒரு சூழ்நிலை. வேறு வீட்டிற்குள் நுழைவதைப் போல் இருந்தது. சுவர் ஓரமாக பச்சை ஓலை கள் அடுக்கப்பட்டிருந்தன. திண்ணையில் தேங் காய்க் குலையும் இளநீர் குலையும் இருந்தன.

காயத்ரி மகிழ்ச்சியில் இருந்தாள்.

"மரத்தை வெட்டியாச்சு..." என்றாள்.

மரம் இருந்த இடத்திற்குப் போனான். அடி மரம் இருந்தது. ஈரப் பசையோடு பச்சை சிராய் கள் சிதறிக் கிடந்தன. உயரம் போகிற உற்சாகத் தோடு வளர்ந்த மரம். விசனம் பொங்கியது.

அன்று இரவு காயத்ரி நிம்மதியாகத் தூங்கி னாள். இவனுக்குத் தூக்கமே இல்லை. அவதி யாக இருந்தது.

ஒரு வாரத்தில் நிறையப் பேர்கள் கேட் டார்கள்.

"என்னங்க... மரத்தை வெட்டிட்டாங் களா?"

"ஏன் சார் மரத்தை வெட்டினீங்க?"

"நல்லா காய் காய்ச்ச மரம். வெட்டிப் போட்டீங்களே தம்பி...."

**அ**ன்று காலையில் வீட்டுத் தோட்டத்தில் புதிய மாஞ்செடியைக் கண்டான். இளந்தளி ரோடு புதிய குழந்தை போல்...

இது எப்படி இங்கே வந்தது....?

"காயத்ரி... காயத்ரி..." என்றான்.

"என்னங்க?" என்று ஓடி வந்தாள்.

"ஏது இந்தச் செடி?"

அவள் செடியைப் பார்த்தாள். அவனைப் பார்த்தாள். சின்னப் புன்னகை முகத்தோடு மலரச் சொன்னாள்.

"நேத்து ஒரு ஆள் வித்துட்டுப் போனாரு..."

"ம்...."

"தள்ளு வண்டியில இது மட்டும் தனியா இருந்துச்சு. எல்லாரும் பூச் செடியா வாங்கி னாங்க. தென்னை மரத்தை வெட்டின பின்னால வீடு வெறிச்சுன்னு இருந்துச்சு. மரம் இல்லாம வீட்டைப் பார்க்க எப்படியோ இருக் குது. ஒரு மரமாவது இருந்தால்தான் வீடு நல்லா இருக்கும். தென்னை மரத்தை இந்த எடத்தில் நட்டு வெச்சிருந்தா லைன் கம்பிக்கு முட் டாமல் நல்லா வளர்ந்திருக்கும்... எனக்கு அந்த மரத்தை வெட்டினதிலிருந்து மனசே சரியில் லீங்க. அதுதான் ஏதாச்சும் மரம் இருக்கட் டும்னு இதை வாங்கினேன்...."



# லவ் பேர்ட்ஸ்

இளமைத் துடிப்புள்ள காதல் கதைக்கு ஏற்ற பலமான அஸ்திவாரம்தான். கல்லூரிக் களத்தில் கலக்கலான ஆரம்பம். கொஞ்சம் மேஜிக், நிறைய டான்ஸ், சுமாராக சண்டை, சிரமப்பட்டு நடிப்பு என்று பிரபு தேவா திரையை நிறைத்து, ஓரத்தில் கொஞ்சம் நக்மாவுக்கு இடம்கொடுக்கிறார்.

வழக்கமான பணக்கார ஹீரோயின், ஏழை ஹீரோ. ஆகவே முதலில் மோதல். பின் காதல். தயாரிப்பாளரிடம் நிறைய பைசா இருந்திருப்பதால், மெட்ராஸ் காதல் சீப்பாக இருக்குமே என்று நினைத்து, கதையை பிளேனில் ஏற்றி லண்டனுக்கு அனுப்புகிறார்.

சொதப்பல் தொடங்குவது இங்கேதான்.

இன்டர்வலில் பிரமாத சஸ்பென்ஸாக பிரபுதேவா இறந்து விடுவதாகச் சொல்லிவிட்டு, லண்டனில் இன்னொரு பிரபுதேவாவைக் காட்டி, இவர் வேறு; ஒரே தாயின் இரு பிள்ளைகள், பாதிரியார் வளர்த்தது என்று ஏகமாக வழிந்து மீண்டும், 'ஸாரி, நானேதான் அவன்' என்று காதல் தியாகக் கதையெல்லாம் சொல்வதைக் கேட்க தியேட்டரில் ஆளில்லை. அநியாய இழுப்பு.

முதல் முறையாகக் குடும்ப சென்டிமென்ட்டை விடுத்து, காதல் சென்டிமென்ட்டுக்கு வந்திருக்கிறார் வாசு. காட்சி அமைப்புகளில் நாடகத்தனம் குறைந்து, கொஞ்சம் அழகு தெரிகிறது.

கதையாகப்பட்ட ஒரு முக்கிய சமாசாரத்தில் போதிய அக்கறை இன்மையால் எல்லாம் கட்-அவுட்டுக்குப் போட்ட மாலையாகக் காய்ந்து, கருகுகிறது.

லண்டனைச் சுற்றிக் காட்டும் எம்.சி. சேகரின் கேமரா, பெரும்பாலும் ஹெலிகாப்டரை விட்டு இறங்க மறுக்கிறது. அழகுதானென்றாலும், முழுப் படத்தையும் டாப்-ஆங்கிளிலிருந்து பார்த்தால் கழுத்து கழண்டு விடும்.

வழக்கத்துக்கு விரோதமாக இசைக்கு பதில் இறைச்சல் தந்திருக்கிறார் ரகுமான். 'மலர்களே' பாட்டைத் தவிர, மற்றதெல்லாம் ஜிகினாக் குப்பை. அநாவசியத்துக்கு ஒரு அப்பாச்சி இந்தியன்.

சம்பவங்களின் அநம்பகத்தன்மை, வசனங்களின் அலுப்பூட்டும் நீளம், எடிட்டர் ஆயுதத்தின் சாணை பிடிக்காமையால் விளைந்த நேர்த்தியின்மை, கொட்டாவி தரும் கிளைமாக்ஸ் எனப் பல ஓட்டைகள் படத்தில்.

பிரும்மாண்டமாக என்னவோ பண்ண நினைத்து, பிள்ளையார் சுழியோடு திருப்தி அடைந்து விட்டிருக்கிறார்கள்.

பிரபுதேவாவுக்கு மற்றொரு அடி.



# அமலாக்கப்படும் அதிர்ஷ்டம்

“பெரிய ‘ஹமாம்’ ஆபீஸர்னு சொல்லுவியே, அவருடைய விவகாரம் அமலாக்கம் வரைக்கும் போயிடுச்சி பார்த்தியா?” என்று வரதராஜன்தான் நியூஸ் பேப்பரில் அதைக் காட்டினார்.

‘திருவானைக்காவலில் அரசு அதிகாரி பாலகிருஷ்ணன் வீட்டில் அமலாக்கப் பிரிவினர் சோதனையிட்டனர். விசாரணையின் போது ஹார்ட் அட்டாக், ஏற்பட்டு, தொடர முடியாமல் போனது!’ என்று நாலே வரிகளில் ஒரு குட்டிச் செய்தி இருந்தது. அப்பொழுதும் என்னால் நம்பவே முடியவில்லை. என் மதிப்பிற்குரிய ஆபீஸர் பாலகிருஷ்ணன் மீது இப்படி ஒரு தகவலா என்று மனம் அடித்துக் கொண்டது.

“அப்பவே திருச்சி டிவிஷன் ரங்கநாதன் சொன்னான்னு நான் சொல்லலே... இங்கேயிருந்து டிரான்ஸ்பர் ஆனதும் ஆள் சுத்தமா மாறியாச்சாம்! திருவானைக்காவல்லே ஒரு பெரிய பங்களாவாம், ரெண்டு மாருதி காராம், கலர் டீ.வி., ஃபிரிட்ஜ்னு வாங்கி தள்ளிட்டே இருந்தாராம். வீட்டு வேலைக்காரி கூட, பட்டுப் புடைவை கட்டிட்டுதான் வேலை செய்வாளாம். நீதான் பழைய பாலகிருஷ்ணன்னு நினைச்சிட்டு நம்பமாட்டேன்னு அடம் பிடிச்சே... இப்ப பாரு! அமலாக்கம், ஹார்ட் அட்டாக்குன்னு போயிடுச்சு!” வரதராஜன் கொட்டித் தீர்த்தார்.

எனக்கென்னவோ அந்த அதிகாரியின் அமுல் பேபி முகம்தான் நினைவிற்கு வந்தது. அச்சமின்றி அணுகிப் பேசலாம். பந்தா இல்லாத ஆசாமி. வரதராஜன் போல், அவருடைய நேர்மையால் வரும்படி பாதிக்கப்பட்ட ஓரிருவரைத் தவிர அவரை யாருமே அப்பழுக்காய்ப் பேசியதில்லை.

திருச்சி டிவிஷன் ஒரு ‘வரும்படி’ பொக்கிஷம்தான். அதை ஒரு ஒழுங்கிற்குக் கொண்டு வரத்தான் இவரை அங்கு மாற்றினார்கள். அப்படியிருக்க இவரே மாறிவிட்டாரா.. பேப்பர்காரன் பொய் சொல்கிறானா?

மிகவும் வேதனையாகப் போய்விட்டது. உடனே போய்ப் பார்த்துவிட்டு வர வேண்டுமென்று தோன்றவே, ஆபீஸுக்கு லீவ் போட்டுவிட்டு திருச்சி கிளம்பினேன்.

திருச்சிக்குப் போய் இறங்கிய போது

இரவு ஏழாகியிருந்தது. லாட்ஜில் ரூம் போட்டு விட்டு திருவானைக்காவலுக்கு பஸ்ஸைப் பிடித்தேன். அவர் வீட்டிற்குப் போய் விசாரித்துதான் எந்த ஆஸ்பத்திரி என்பதை அறிய வேண்டும். திருவானைக்காவலில் விலாசம் கேட்டதும் ஆளாளுக்கு "ரெய்டு நடந்துச்சே, அந்த வீடுதானே!" என்று நமுட்டு சிரிப்போடு வீட்டிற்கு வழிகாட்டிய போது பாலகிருஷ்ணன் ஸாரை நினைக்க எனக்குப் பரிதாபமாக இருந்தது.

ஆனால் அந்தப் பரிதாபம் அசத்தலான அவருடைய பங்களாவைப் பார்த்ததும் மாறி விட்டது. மாமரம், தென்னை மரம் என்று புடைசூழ ஒரு பண்ணையார் வீடு கெட்டது. ஒன்றுக்கு இரண்டாக மாருதி கார்கள். இன்னும் உள்ளே என்னென்னவோ... பாலகிருஷ்ணன் மேல் எனக்கிருந்த மதிப்பில் பாதிப்பு ஏற்பட்டு விட்டது.

கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தவனை பாலகிருஷ்ணன் ஸாரின் மனைவிதான் வரவேற்றார்.

"வாங்க... வாங்க... பேப்பர்லே, நியூஸ் பார்த்துட்டு நீங்களெல்லாம் வருவீங்கன்னு எனக்குத் தெரியும்!"

"ஸாரை எங்கே போய்ப் பார்க்கறது?" தயங்கியபடி கேட்டேன்.

"எல்லாம் என் தலை எழுத்து... உள்ளே

# அகிலா கார்த்திகேயன்

பெட்ரூமுக்குப் போய்ப் பாருங்க!"

**அ**றைக்குள் எட்டிப் பார்த்தேன். தூக்கி வாரிப் போட்டது. பாலகிருஷ்ணன் ஸார் வேட்டியும் பனியனுமாக கீழே உட்கார்ந்தபடி கார்டுகளில் எதையோ எழுதி எழுதி வீசிக் கொண்டிருந்தார். அவரைச் சுற்றி கார்டுகள் காடாய் குவிந்திருக்க, நான் வந்து நிற்பதை அவர் கவனிக்கவில்லை. அவர் கிறுக்கி எறிந்ததில் ஒரு கார்டு என் அருகில் விழ, அதில் 'அமலா' என்றிருந்தது. மெதுவாக உள்ளே நுழைந்து பார்த்தபோது பகீர் என்றது. அத்தனை கார்டிலும் 'அமலா', 'அமலா', 'அமலா' தான்!

ஐயோ பாவம்! அமலாக்கப் பிரிவு இப்படி ஒரு பாதிப்பை ஏற்படுத்திவிட்டதே என்று எனக்குத் திரும்பவும் இவர்மேல் பச்சாதாபம் பிறந்தது. ஒரு நல்ல திறமையான அதிகாரிக்கு பணத்தாசையால் இப்படி மனநிலை பாதிப்பு ஏற்பட்டு விட்டதே என்றிருந்தது.

"மூர்த்தி வந்திருக்கார் பாருங்கோ... என்னமோ ஏதோன்னு அவா அவா பயந்துண்டு





''உங்க பையன் வருகாலத்துல பெரிய ஆளா வருவான் பாருங்க!''

''எப்படி சொல்றீங்க?''

''ஐயா எனக்கு 'நெஞ்சுவலி' என்பதால் பள்ளிக்கு வர இயலவில்லைன்னு லீவ் லெட்டர் எழுதரானுங்க!''

— க. கிருஷ்ணமூர்த்தி

---

உங்களைப் பார்க்க வர்றா! நீங்க என்னடான்னா பைத்தியமாட்டம் டீ.வி., பத்திரிகை, போஸ்ட் கார்டுன்னு உட்கார்ந்துட்டிருக்கீங்க. மானம் போறது!" பாலகிருஷ்ணனின் மனைவி ஒரு அதட்டல் போட்டதும் அவர் நிமிர்ந்து நான் வந்திருப்பதை உணர்ந்தார்.

"அடடா, மூர்த்தியா? வாப்பா... மெட்ராஸ் லேர்ந்து அலறி அடிச்சிட்டு வந்தீராக்கும்.... ஹக்.... ஹக்.... ஹக்...." என்று சிரிக்க ஆரம்பிக்கவே, எனக்குக் கொஞ்சம் கோபம் கூட வந்தது!

"இவ நடந்ததையெல்லாம் சொல்லியிருப்பாளே... உனக்கு முன்னாலேயே என்னை பைத்தியம்கறா பாரு... இந்த பைத்தியத்தாலேதான் இத்தனை பெரிய பங்களா, கார், கலர் டீ.வின்னு அனுபவிக்க முடியுது... 'அவனவன் அரசாங்க உத்யோகத்தை வைச்சி எப்படியெல்லாம் சம்பாதிக்கறான். நீங்க பிழைக்கத் தெரியாத பைத்தியமாட்டம் இருக்கீங்களே'ன்னு இவளே தான் என்னை அடிக்கடி குத்திக் காட்டுவா... இப்போ சம்பாதிக்கும் போதும் பைத்தியம்னு சொல்றா..."

நான் நெளிந்தேன்.

"மூர்த்தி ரொம்ப பயந்துட்டயா? பாவம். உன்னை மாதிரிதான் எல்லாரும் என்னை தப்பாவே புரிஞ்சிட்டு திரிஞ்சானுங்க. பங்களா, பிளாட், ஃபிரிட்ஜ்னு சொந்தமாக்கிக்க இப்பெல்லாம் 'அவுட் ஆஃப் வே'யிலே போய் சம்பாதிக்கணும்னு அவசியமேயில்லே... 'பன்றி மார்க் சீயக்காய் தூளே சிறந்தது, ஏனென்றால்...' ஒரு பத்து வார்த்தைக்குள்ளே இதை பூர்த்தி செஞ்சி கூப்பனை அனுப்பணும்னு 'மலர் மொட்டு' பத்திரிகையிலே போட்டி வந்திருந்தது. அனுப்பினேன். பங்களா முதல் பரிசா கிடைச்சது! டீ.வி. யிலே ஸ்ரீதேவியோட பழைய மூக்கை மட்டும் காட்டி யார்னு கண்டுபிடிக்கச் சொன்னாங்க. பம்பர் பரிசா ஒரு மாருதி அடிச்சிது.... அப்புறம் 'தரித்திர லட்சுமி ஃபைனான்ஸ்'லே நூறு ரூபாய் 'டெபாசிட்' பண்ணினேன். குலுக்கல் முறையிலே இன்னொரு கார் விழுந்தது.... போன மாசம் 'பந்த்' நடந்தன்னிக்கு 'பா.பா' டீ.வி.காங்க சிறப்பு நிகழ்ச்சி நடத்தினாங்க. 'பந்துவராளிலே அமைஞ்ச சினிமா பாட்டு எது'ன்னு போன்லே சொல்லச் சொன்னாங்க. உடனே டயல் பண்ணி சொன்னேன்... ஒரேடியா ஐம்பது பட்டுப் பொடவையைக் கொடுத்துட்டுப் போயிட்டான்! இவளே மனசு வந்து வேலைக்காரிக்குப் பத்து புடைவை கொடுத்தான்னா பாரேன்.... அப்புறம் 'காஷ்மீர் கி கலி' இந்தி படத்தோட இசையமைப்பாளர் ஓ.பி. நய்யார்னு எழுதிப் போட்டு வடக்கத்தி டீ.வி. காரங்ககிட்டேர்ந்து கலர் டீ.வி. அடிச்சேன்."

எனக்கு தலையை சுற்றிக் கொண்டு வந்தது!

"என்ன மூர்த்தி, மயக்கம் வருதா... சொல்றதைக் கேளு.... இப்படித்தான் எவனோ மொட்டை பெட்டிஷன் போட, அதை தூக்கிண்டு இன்வெஸ்டிகேட் பண்ணனும்னு 'என்ஃபோர்ஸ்மெண்ட்'காரன் வந்தான். எவிடென்ஸோட நான் சம்பாதிச்ச பொருளுக்கெல்லாம் எப்படின்னு விளக்கம் சொன்னேன். பாவம் அந்த ஆபீஸர் - எதை எதையோ எக்ஸ்பெக்ட் பண்ணிட்டு வந்தவருக்கு ஒரே ஷாக்.... ஹார்ட் அட்டாக் வந்து விழுந்துட்டாரு... அவரோட வந்தவங்க தூக்கிட்டு ஆஸ்பத்திரிக்குப் போனாங்க... பேப்பர்காரன் இதைத்தான் மொட்டையா குட்டிச் செய்தின்னு போட்டுட்டான்... இப்ப பாரு, நீயே மெட்ராஸ்லேர்ந்து அலறி அடிச்சிட்டு வந்திருக்கயே..."

நான் பேந்தப் பேந்த முழித்தேன். அவர் தொடர்ந்தார்.

"பயப்படாதே! நான் இன்னும் நேர்மையான அதிகாரிதான்... இந்த மட்டும் என்ன ஏதுன்னு விசாரிக்க வந்தியே, ரொம்ப தாங்க்ஸ்... ஊருக்கு இன்னிக்கே திரும்பறதுன்னா எனக்கொரு ஹெல்ப் பண்ணு...., 'வீட்டைத் தாண்டிய விசாலி' சீரியல்லே, வேதம் புதிது படத்தோட மூன்றெழுத்து கதாநாயகி யார்னு கேட்டிருந்தாங்க... நாளைக்குள்ளே போய்ச் சேரணும்... அதைத்தான் அமலா அமலான்னு போஸ்ட்கார்டிலே எழுதிட்டு இருந்தேன். எப்படி அனுப்பறதுன்னு புரியாம இருந்தது. நல்ல வேளை, நீ வந்தே. ஐநூறு கார்டு இருக்கு.. தி.நகர் போஸ்ட் ஆபீஸிலே கொண்டு போய் நாளைக்கே போட்டுடு... 'வாஷிங்மிஷின் விழுந்தா நீயே எடுத்துக்கோ. எங்கிட்டே ஏற்கெனவே பரிசா விழுந்தது இருக்கு!"

**பை**த்தியமா... சூழ்நிலைகளால் பைத்திய மாக்கப்பட்டிருக்கிறாரா.... குழப்பத்துடன் அவர் கொடுத்த கார்டு கத்தைகளை வாங்கிக் கொண்டாலும், சென்னை வந்து இறங்கியதும் தி.நகர் போஸ்ட் ஆபீஸ் போவது தான் என் முதல் காரியமாக இருந்தது. வாஷிங் மிஷின் விழுந்தால் வேண்டாமென்று சொல்ல எனக்கென்ன பைத்தியமா!


அகில்
“அப்பவே சொன்னேன்! முகூர்த்தத்தை வோர்ல்ட் கப் ஃபைனல்ஸ் அன்னிக்கு வைக்க வேணாம்னு!”
“ஊஹூம்! அதெல்லாம் ஒத்துக்க முடியாது... உங்க தேசத்திலே எல்லார்கிட்டேயும் கையெழுத்து வாங்கிட்டு வந்த இந்த பேட்டிலே தான் ஆடுவோம்னா எப்படி?
“ஒண்ணுமில்லே.... கொஞ்சம் ஞாபக மறதி!”
STADIUM

**திவ்யா**

# பறக்கும் ஆசைகள்

மினுக் மினுக்கென்று பச்சையும் சிவப்புமாய் விளக்குகள் மின்னப் பறந்து கொண்டிருந்த அந்த விமானத்தையே உற்றுநோக்கிக் கொண்டிருந்தாள் சாந்த்னி.

"நல்லாத்தான் பேர் வெச்சிருக்காங்கப்பா உனக்கு சாந்தினின்னு... எப்பப் பார் வானத்தையே பார்த்துக்கிட்டிரு... யாராவது ப்ரின்ஸ், சந்திரன்லேர்ந்து பறந்து வந்திட்டிருக்கானான்னு பார்க்கறீங்களாக்கும் மை டியர் ப்ரின்ஸஸ்?"

அவளை உலுக்கிக் கீழே இறக்கி வந்தாள் ராதிகா.

உண்மைதான். அடிக்கடி கற்பனைகளில் தொலைந்து விடுபவள்தான் இந்த சாந்த்னி. அழகாக இருப்பாள்.

தான் அழகு என்ற 'துளி' கர்வமும் அவளிடம் இருந்தது. எனவே தனக்கு வரும் கணவன் 'அப்படி இருக்க வேண்டும்' 'இப்படி இருக்க வேண்டும்' என்று கற்பனைக் கோட்டைகளைக் கட்டுவதும் அதிகமாகவே இருந்தது.

அவளுடைய கற்பனைகள் வார்த்தைகளில் வெளிப்படும் போது பொறுமையுடன் - அதே சமயம் ரசனையுடன் கேட்டுக் கொள்பவள் ராதிகாதான் - அவளின் நெருங்கிய தோழி.

"காஷ்மீர் கீ கலி'ல ஷம்மி கபூர் பாடறாப் போல உன்னைப் பார்த்து டூயட் பாடணுங்கற... ம்?"

அதில் வரும் 'தாரீஃப் கரூம் க்யா உஸ்கி...' என்ற பாடலைப் பாட ஆரம்பித்தாள் ராதிகா.

"ச்சீ... கிண்டல் பண்ணாத ராக்கி.. அப்படில்லாம் ஒண்ணும் பாட வேண்டாம்... பழைய ஹிந்திப் பாடல்கள் எனக்குப் பிடிக்கற மாதிரி அவருக்கும் பிடிச்சாப் போதும்."

"நீ வேணாப் பாரு.. ஷம்மி, ஷர்மிலா தாகூரை அந்தப் படத்தில சுத்தி சுத்தி வந்த மாதிரி, உன்னைச் சுத்தி, சுத்தி வரப் போறான் பாரு உன் ஹஸ்பண்ட்... ஆனா ஒண்ணு... பதினொரு மணி வரைக்கும் 'சாயா கீத்'தும் 'ஆப் கீ ஃபர்மாயிஷ்'ம் கேட்டுட்டு தான் தூங்கப் போவேன்னு வெறுப்பேத்திடாதம்மா... பாவம்!"

"ச்சீ.."

"உங்கம்மா என்னை உதைக்கப் போறாங்க!" பயந்தாள் ராதிகா.

"கவலைப்படாதே... எங்கம்மா அதெல்லாம் கண்டுக்க மாட்டாங்க."

"அப்ப... இன்னும் கொஞ்சம் ஓட்டலாங்கற... சரி... உன்னோட 'அவரை'ப் பத்தி இன்னும் என்ன என்ன கற்பனைகள்... சொல்லு."

"ம்... வைரமுத்துவின் வரிகளையும் இளையராஜாவின் இசையையும் ரசிக்கணும்.... அப்புறம்... எஸ்.பி.பியை நான் 'என்னமா பாடறான் பாரு, குண்டு கத்திரிக்கா'ன்னு செல்லமா கிள்ளினா... போட்டோலதான்... கோபிச்சுக்கக் கூடாது."

"வேற ஏதாவது பாக்கி இருக்கா?"

"ம்... ம்... முக்கியமான ஒண்ணு... ம்.. அங்க பார்த்தியா டேக் ஆஃப்?" என்று தொலைவில் ஏர்போர்ட்டிலிருந்து காற்றைக் கிழித்துக் கொண்டு கிளம்பிய ஒரு விமானத்தைக் காட்டிச் சொன்னாள் சாந்த்னி.

"அதை மாதிரி பறக்கணும்... புரியலை? அவருக்கு நல்லா பைக் ஓட்டத் தெரியணும்! நான் அவர் பின்னால உட்கார்ந்துட்டு, தலை முடி பிச்சுக்க... சூப்பர் ஸ்பீடுல பறக்கணும்!"

அந்த விமானம் மேலே பறந்து கொண்டிருந்தது.

சாந்த்னியின் அப்பா ஒரு போட்டோவோடு வந்தார்.

"இந்த போட்டோவைப் பாரும்மா சாந்த்னி... பையன உனக்குப் பிடிச்சிருக்கா சொல்லு... இருபது, இருபத்தஞ்சு ஜாதகம் பார்த்து கடைசில இது ஒண்ணுதான் பொருந்தியிருந்தது."

நெஞ்சு படபடடென்று அடித்துக் கொள்ள, போட்டோவை வாங்கிப் பார்த்தாள் சாந்த்னி. போட்டோவில் நன்றாகவே இருந்தான் அவன்.

"பையனைப் பத்தி விசாரிச்சேன்... தங்கமான பையனாம்..."

"..............."

"சின்ன வயசிலேருந்தே நல்லா படிப்பானாம்... பேருக்கு பின்னால சி.ஏ., ஐசிடபிள்யூஏ, சிஎஃப்ஏ... இன்னும் நிறைய க்வாலிபிகேஷன்ஸ்... இன்னும் ஏதோ படிச்சிட்டிருக்காராம்... ஹிந்துஸ்தான் லீவரில் ஸீனியர் பொஸிஷன்ல இருக்கார்!"

"........."

"மத்த பசங்க மாதிரி பார்க்லயும் பீச்லயும் சுத்திகிட்டு அலையாம, வாழ்க்கைல முன்னுக்கு வரணுங்கற வெறியோட உழைச்சிருக்கறதாலதான்... கம்பெனிலேயே கார் குடுத்துருக்காங்களாம்... அதுவும் டிரைவரோட...



பொண்ணு கண்ணுக்கு லட்சணமா இருக்கணும்னு சொன்னாங்களாம்... வேறே கண்டிஷன்ஸ்லாம் இல்ல... இந்த ஜாதகம் பொருந்தினது நம்ம சாந்த்னியின் அதிர்ஷ்டம்னு தான் சொல்லணும்."

சாந்த்னி துவண்டு போனாள் மனதிற்குள்.

ரேடியோ கூட கேட்க மாட்டானாமே? இவன் எங்கே முகம்மது ரஃபியையும் இளையராஜாவையும் கேட்டிருக்கப் போறான்...? கார் இருக்காமே கார்... யாருக்கு வேணும்...? பைக் கூட ஓட்டத் தெரியாத பயந்தாங்கொள்ளியா இருப்பான் போலருக்கு... உயிர் வெல்லக் கட்டி!

"ஃபார்மலா பொண்ணு பார்க்கறதெல்லாம் வேணாம், ஒரு ஈவினிங் எங்கயாவது மீட் பண்ணிப் பேசலாம் அப்படீங்கறார். உனக்கு ஒண்ணும் ஆட்சேபணை இல்லையே?"

"இல்லப்பா" என்று அவசரமாகச் சொல்லி விட்டு எழுந்து போனாள். மனசுக்குள் குழப்பமாக இருந்தது.

அவளுக்குப் படபடப்பாக இருந்தது. ஐந்தரை ஆக இன்னும் நூற்றிப் பதிமூன்று விநாடிகள் இருக்கின்றன. ஐந்தரைக்குத்தான் அவன் வருவதாகச் சொல்லியிருந்தான். கோவிலில் இன்னும் கூட்டம் வர ஆரம்பிக்கவில்லை. சூடு தேங்கியிருந்த கருங்கல் தரையில் தொடர்ந்து உட்காரச் சிரமமாக இருக்கவே, எழுந்து கொண்டாள்.

"ஸாரி. லேட் ஆக்கிட்டேனா?"

சட்டென்று எதிரே உதித்தவன், பளிச்சென்று துடைத்த சிலை போல கம்பீரமாக இருந்தான்.

"நீங்கதானே சாந்த்னி?"

"உம்."

"ஐ'ம் பிரகாஷ். அதுல பாருங்க, ஒரு படை திரட்டிட்டு வந்து, சந்தைல மாடு பிடிக்கறாப்பல பொண்ணு பார்த்துட்டு, டிபன் தின்னுட்டு, ஒரு அபத்த சஸ்பென்ஸ் வெச்சி, லெட்டர் போடறதா சொல்லி, எழுந்து போற அயோக்கியத்தனத்தை செய்ய எனக்கு விருப்பமில்லை. அதான், உங்க அப்பாகிட்ட, 'உங்க பொண்ணை எதாவது கோவிலுக்கு கூட்டிட்டு வாங்க, பார்த்துப் பேசிடறோம், ரெண்டு பேரும். ஒத்துப் போகும்னு தோணிச்சின்னா ஓகே. இல்லைன்னா 'பை' சொல்லிட்டு போயிடலாம்' அப்படீன்னேன்."

அவளுக்கு என்ன பேசுவதென்று புரியவில்லை. அவனே தொடர்ந்தான் :

"அஃப்கோர்ஸ், பத்து நிமிஷமோ, இருபது நிமிஷமோ இப்ப நாம பேசப் போறதுல பெரிசா ஒண்ணும் அபாரமா புரிஞ்சுக்க முடியாதுதான். ஆனா, அடிப்படை விஷயங்களில் குறைந்தபட்ச ஒற்றுமையாவது இருக்கான்னு பார்த்துடலாம் இல்லியா?"

"உம்."

"உங்களுக்கு ம்யூஸிக் பிடிக்குமா?"

"உம்!"

"கர்னாடிக் ஆர் வெஸ்டர்ன்?"

"ரெண்டும். எஸ்.பி.பி.னா உயிர்."

"அப்படியா? வேறென்ன பிடிக்கும்?"

"மொஹம்மட் ரஃபி, ஆஷா போன்ஸ்லே, வைரமுத்து, இளையராஜா..."

"வாவ்!"

"உங்களுக்குப் பிடிக்குமா?"

"எங்கங்க! உட்கார்ந்து கேக்கணும்னு ஆசைதான். செலக்ட்

பண்ணி ரசிக்க விருப்பம்தான். நேரம் ஏதுங்க? உலகத்துல பேய், பூதம், பிசாசு, குட்டிச்சாத்தான் எல்லாம் நிஜமா இருக்கோ இல்லையோ – சி.ஏ.ன்னு ஒரு படிப்பு இருக்கறது நிஜம்! படிப்பு முடியற வரைக்கும் வேற கவனம் இல்லாம இருந்தேன்."

அவளுக்குச் சப்பென்று இருந்தது. அவனே தொடர்ந்தான் :

"அதுல பாருங்க, இந்தக் காலத்துல பெரும்பாலும் கனவுகள்லேயே நாம வாழ்க்கையைக் கரைச்சிடறோம். தரையில கால் பாவாம நடக்கணும்னு விரும்பறோம். சிம்மாசனத்துல உட்கார வெச்சி, ரெண்டு பக்கமும் மயிலிறகால யாராவது விசிறணும்னு ஆசைப்படறோம். தப்பில்லை! ஆனா, அதுக்குக் கஷ்டப்படணும். எனக்கும் ரொம்ப ஆசைங்க! ம்யூஸிக் கத்துக்கணும், கவிதை ரசிக்கணும்... பெயிண்டிங் கத்துக்கணும். வரப் போற மனைவியை அப்படியே மானசீகமா வரைஞ்சி, பிரிண்ட் அவுட் எடுத்து வந்ததும் ஒப்பிட்டுப் பார்க்கணும்... சின்னச் சின்னதா நிறைய ஆசை!

'ஆனா இதெல்லாம் எப்ப வேணா சாத்தியம், முதல்ல லைஃப்ல செட்டில் ஆகறது முக்கியம்டா'ன்னு எங்கப்பா சொன்னார். யதார்த்தத்தைப் புரிஞ்சி, ஒத்துக்கறது கொஞ்சம் சிரமம்தான்... நீங்க சிந்துபைரவி படம் பார்த்திருக்கீங்களா? டீவில ஒருதரம் எதேச்சையா நான் பார்த்தேன்... அதுல ஒரு இடம்... சிவகுமார், லதாமங்கேஷ்கரோட பாட்டு கேட்டுட்டிருப்பாரு. அந்த ஹீரோயின்.. பேர் தெரியலை... மிக்ஸி போடுவாங்க... அவர் கோபத்துல எழுந்து வந்து திட்டுவாரு. அதுக்கு இவங்க 'லதா மங்கேஷ்கரா பருப்புப் பொடி அரைச்சுத் தருவாங்க?'ன்னு கேப்பாங்க பாருங்க, அசந்துட்டேன்! அதாங்க யதார்த்தம்! அந்த சீனுக்கு அப்புறம் நான் படம் பார்க்கலை. எழுந்து படிக்கப் போயிட்டேன். பாலசந்தரா வந்து எனக்காக சி.ஏ. எழுதப் போறாரு?"

பளிச்சென்று சிரித்தான். சாந்தினிக்கும் சிரிப்பு வந்தது.

**மொ**ட்டை மாடியில் ராதிகா கேட்டாள்.

"என்னடீ, பையன் எப்படி?"

"ப்ச்."

"ரசனை இருக்கா? இளையராஜா பிடிக்குமாமா?"

"ப்ச்."

"எஸ்பிபி?"

"ம்ஹூம்!"

"ஷம்மி கபூராட்டம் சுத்தி வர சான்ஸ் இருக்கா?"

"தெரியலை."

"பைக் ஓட்டத் தெரியுமாமா? ரொம்ப முக்கியமாச்சே உனக்கு?"

"தெரியாதுன்னு நினைக்கறேன்."

"அப்ப பூட்டகேஸ்! பிடிக்கலைன்னு சொல்லிட்டு வந்துட்டியா? பாவம்!"

"இல்லை."

"பின்னே?"

"மெட்ராஸ்ல சத்திரம் கிடைக்கறது கஷ்டம்; கல்யாணத்தை எதாவது கோவில்ல வெச்சிக்கலாமான்னு கேட்டேன்."

"அடிப்பாவி, என்னாச்சு உனக்கு?"

"யதார்த்தத்தைப் புரிஞ்சுக்கறது கஷ்டம்னு அவர் சொன்னார். ஆனா எனக்குப் புரிஞ்சிடுச்சி!"

"எனக்குப் புரியலை!"

"புரியலை? லதாமங்கேஷ்கர் பருப்புப் பொடி அரைச்சித் தர மாட்டா."

"என்னது?"

"ஒண்ணுமில்லை!" என்று சிரித்தாள் சாந்தினி.

ஒரு விமானம் தாழப் பறந்து தரையைத் தொட்டது.

## 'சுருக் நறுக்' – 15 முடிவுகள்

### சிரிப்பு என்பது....

- யாரும் பறிக்க முடியாத ஒரு நகை.
  – *இரா. கணபதி, சென்னை – 82.*

- முகப்பொலிவை அதிகமாக்க, இறைவன் மனிதனுக்கு வழங்கிய அழகு சாதனம்.
  – *என். பாலகிருஷ்ணன், ராம்பாக்கம்.*

- இதய கேமராவின் இனிய ஃபிளாஷ்!
  – *ஏ. அரசரத்தினம், திருப்பத்தூர்.*

- உள்ளம் உற்பத்தி செய்யும் உன்னத ஊட்டச்சத்து.
  – *எல். சண்முகசுந்தரி, இராமநாதபுரம்.*

- இறைவன், மனிதனுக்கு மட்டுமே அளித்திருக்கும் ஆயுட்கால போனஸ்.
  – *கோதை ராஜேந்திரன், சென்னை - 15.*

- இதயப்பூ, தன் இதழ் விரிக்கும் சப்தம்.
  – *ஜோதி, மதுரை – 20.*

**மேற்கண்ட சொல்லோவியங்கள் தலா ரூ. 50/- பரிசு பெறுகின்றன.**

# ஸ்ரீ திரு.வி.க. நகர் பெனி:பிட் :பண்டு லிமிடெட்

ஸ்தாபிதம் 1989

லைமை அலுவலகம் : 10, 2வது தெரு, ஆண்டாள் அவின்யு, (திரு.வி.க. நகர் பஸ் நிலையம் அருகில்), சென்னை - 600 082. போன் : 5378690

ாரீஸ் கிளை : 8/2, ஸ்ட்ரிங்கர்ஸ் தெரு, சென்னை - 600 108. போன் : 565760

தி. நகர் கிளை : 20, ரங்கநாதன் தெரு, சென்னை - 600 017. போன் : 4344324



**பாதுகாப்பான முறையில் சேமித்து வளருங்கள்**

## திருமூர்த்தி பாண்டு

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 20,000 | 5 ஆண்டு | ரூ. 60,000 |

## வசந்தம் பாண்டு

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 7,000 | 40 மாதம் | ரூ. 14,000 |

## பென்ஷனர் வைப்பு நிதி

| முதலீடு | காலம் | வட்டி |
|---|---|---|
| ரூ. 10,000 | 1 ஆண்டு<br>2 ஆண்டு<br>3 ஆண்டு | 21% |

★ பென்ஷனர், ஓய்வு பெற்றோர், முதியோர் (50 வயதிற்கு மேல்), விதவைகள், ஊனமுற்றோர் இத்திட்டத்தின் கீழ் பயன்பெறலாம்.
★ பிரதி மாதம் 25ஆம் தேதி வட்டி வழங்கப்படும்.

## பென்ஷனர் மறுமுதலீட்டு திட்டம்

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 5,000 | 1 ஆண்டு | 6,157 |
| | 2 ஆண்டு | 7,582 |
| | 3 ஆண்டு | 9,337 |
| | 40 மாதம் | 10,000 |

## எக்செல் பாண்டு - A திட்டம்

| முதலீடு | காலம் | வட்டி |
|---|---|---|
| ரூ. 9,000 | 2 ஆண்டு | 21% |

பிரதி மாதம் 25ஆம் தேதி வட்டி வழங்கப்படும்

## எக்செல் பாண்டு - B திட்டம்

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 9,000 | 2 ஆண்டு | ரூ. 13,648 |

## வைப்பு நிதி

| முதலீடு | காலம் | வட்டி |
|---|---|---|
| ரூ. 5,000 | 1 ஆண்டு | 18% |
| | 2 ஆண்டு | 19% |
| | 3 ஆண்டு | 20% |
| | 4 ஆண்டு | 21% |

பிரதி மாதம் 25ஆம் தேதி வட்டி வழங்கப்படும்

## மறுமுதலீட்டு திட்டம்

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 12 மாதம் | 1,195 |
| | 24 மாதம் | 1,455 |
| | 36 மாதம் | 1,810 |
| | 42 மாதம் | 2,000 |

★ சேமிப்பு திட்டம் 12% வட்டி நாள் கணக்கில் வட்டி கணக்கிடப்படும்.
★ தங்க நகைகள் பேரில் ஒரு சவரனுக்கு ரூ. 2400 வரை கடன் வழங்கப்படும். மாத வட்டி 2%.
★ சென்னை மாநகர வீடு/ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும். மாத வட்டி 2% on Reducing Balances, R.D. கட்ட தேவையில்லை. கடன் மிக விரைவாக வழங்கப்படும்.
★ பங்குதாரர்களுக்கு மட்டும்
★ ரூ.10 செலுத்தி பங்குதாரர் ஆவீர்.

## வேலை நேரம்

தலைமை அலுவலகம் : 9 முதல் 5. ஞாயிறு 9 முதல் 1
கிளைகள் : 10 முதல் 5. ஞாயிறு 10 முதல் 1
உணவு இடைவேளை இல்லை. வார விடுமுறை இல்லை.

# அப்ளிகேஷன் வேட்டை!

"ஏங்க, ஒண்ணு சொன்னாக் கோவிச்சுக்கமாட்டீங்களே?" என்றாள் என் மனைவி, காப்பி கொடுத்த கையோடு. இந்த வசனம் எனக்குக் குறைந்த பட்சம் ஐநூறு ரூபாய் செலவு வைக்கும் என்பது என் அனுபவம். வழக்கமாக இது போன்ற நேரங்களில் கொஞ்சம் அலட்டிக் கொள்பவன்தான் நான். இன்றென்னமோ அப்படிச் செய்யாமல், "சரி, சொல்லு", என்றேன்.

"நான் இன்னிக்கு நம்ம அரவிந்தை எல்.கே.ஜி.யில் சேர்க்க அப்ளிகேஷன் ஃபாரம் வாங்கிட்டு வந்தேன்."

"வெரிகுட்! இதிலே கோவிச்சுக்க என்ன இருக்கு?"

"அதில்லைங்க. கரண்ட் பில், டெலிபோன் பில் கட்ட வைத்திருந்த பணம் அதுக்குச் செலவாகி விட்டது, அதான்...."

"என்ன? எல்.கே.ஜி. அப்ளிகேஷன் ஃபாரம் எழுநூற்றியம்பது ரூபாயா? (கரண்ட் பில் முன்னூற்று ஐம்பது, டெலிபோன் பில் நானூறு) என் பெயரென்ன ஜெயின் டைரியிலா இருக்கு? இவ்வளவு காஸ்ட்லியான ஸ்கூல் நமக்குக் கட்டுப்படியாகாதம்மா...."

"இருங்க, கொஞ்சம் பொறு



மையா கேளுங்க. ஒரு ஃபாரம் எழுநூற்று ஐம்பது ரூபாயல்ல. மொத்தம் பன்னிரெண்டு ஸ்கூலில் ஃபாரம் வாங்கியிருக்கேன்."

"ஏன்? மாசம் ஒரு ஸ்கூலில் படிக்க வைக்கப் போகிறாயா?"

என் கேலியைப் பொருட்படுத்தாமல் தொடர்ந்தாள் என் மனைவி....

"நம்ம ஊர்ல மொத்தம் ஐம்பத்து நாலு ஸ்கூல் இருக்கு. அதில் எல்.கே.ஜி.யில் இருந்து ப்ளஸ் டூ வரைக்கும் இருக்கிறது இருபது ஸ்கூல்லே. அதில் பன்னிரெண்டில் நான் அப்ளிகேஷன் வாங்கியிருக்கேன்."

"ஏன்? மீதி எட்டு ஸ்கூலுக்குப் போவதற்குள் உன் வண்டியில் பெட்ரோல் தீர்ந்து விட்டதா?

(அங்கே, இங்கே போய்வர அவளுக்கு ஒரு 'சன்னி' வாங்கிக் கொடுத்திருக்கிறேன்.)

"வண்டியா? இத்தனை இடத்துக்கு என்னால் வண்டியில் போக முடியுமா? ஆட்டோவில்தான் போனேன்."

"அதான் அவ்வளவு ரூபாய் ஆச்சா?"

"சேச்சே, நான்தான் ஆட்டோவை மொத்தமா, நாள் வாடகைக்குப் பேசிட்டேனே... இல்லாட்டா இன்னும் அதிகம் செலவாயிருக்கும்."




"பெருமை வேறு பட்டுக்கிறாயா? சரி... சரி. மொத்தமாக எவ்வளவு செலவாச்சு? சுருக்கமாகச் சொல்லு!"

"இதுக்குத்தான் முதலிலேயே சொன்னேன், கோவிச்சுக்கக் கூடாதுன்னு."

குரலைக் கொஞ்சம் தாழ்த்திக் கொண்டேன். "சரி, சொல்லு."

"பன்னிரெண்டு ஸ்கூல் அப்ளிகேஷன் ஃபாரம் மொத்தம் நானூற்றுப் பத்து ரூபாய். ஆட்டோவுக்கு முந்நூறு. வழியில் இளநீர், கூல்ட்ரிங்க் சாப்பிட்டது நாற்பது. மொத்தம் எழுநூற்று ஐம்பது ரூபாய். அவ்வளவுதான்."

'உங்களுக்கு நம்ம பையன் படிப்பிலே அக்கறையேயில்லையா?' என்ற இரண்டாம் கட்டத் தாக்குதல் வருவதற்கு முன்பே சொன்னேன் : "எங்கே அந்த அப்ளிகேஷன் பாரமெல்லாம் எடுத்து வா, பார்க்கலாம்."

சம்மன் வருவதற்காகக் காத்திருந்த நெஞ்சுவலி போல, இந்தக் கேள்விக்காகவே காத்திருந்த காகிதக் கற்றை வந்திறங்கியது. கூடவே ஒவ்வொரு ஸ்கூல் பெயரும், அப்ளிகேஷன் ஃபாரம் விலையும் கொண்ட லிஸ்ட் போட்டு வைத்திருந்தாள் என் மனைவி. ஊரிலேயே புகழ் பெற்ற பள்ளியின் ஃபாரம் ரூபாய் எழுபத்து ஐந்து. மற்றவை பலவேறு விலைகளில் இருந்தன.

"அட இது என்ன? இந்தப் பள்ளிக்கூட அப்ளிகேஷன் ஃபாரம் ரூபாய் பத்து மட்டும் தானா? இங்கியே நம்ம பையனைச் சேர்த்து விடலாம்!"

"என்ன அந்த பத்து ரூபாய் ஃபாரம் பார்த்து ஏமாந்து போனீங்களா? அந்த ஸ்கூலில் ஃபாரம் பத்து ரூபாய்தான். ஆனால் 'கட்டட நிதி' என்று ஒரு உண்டியல் வைத்திருக்காங்க. அதிலே ஐம்பது ரூபாய் போட்ட பிறகுதான், பத்து ரூபாய் வாங்கிட்டு ஃபாரம் கொடுக்கறாங்க."

**சி.எஸ்.என். ராஜா**



''டைரக்டர் 'ஏன்யா லேட்டு'ன்னு கத்தினவுடனே 'வீட்டுல வசனங்களை மனப்பாடம் செய்துட்டு இருந்தேன் சார்!'னு ஒரு பொய்யைச் சொல்ல வேண்டியது தானே!''

''அது பச்சைப் பொய்'னு உடனே தெரிஞ்சுடுமே!''

''எப்படி?''

''எனக்கு இந்தப் படத்துல ஊமை வேஷம் தானே!''

— பாஸு

---

"பரவாயில்லை. அங்கியே சேர்க்கலாம். நம்ம பையன் பிற்காலத்தில் பெரிய ஆளாக வருவான்!"

இதற்குள் கோவிலுக்குப் போயிருந்த என் பெற்றோர் வந்தனர். கூடவே முகமெல்லாம் திருநீறாய், ஞானப்பழமாக என் மகன். என்னைப் பார்த்தவுடன் உற்சாகமாக "உம்மாச்சி கோவிலில் கல்கண்டு தந்தாங்க" என்றான். என்னைச் சுற்றிலும் பேப்பராக இருந்ததைப் பார்த்தவுடன் அவன் உற்சாகம் அதிகமானது. "ஹை.... பேப்பர், அப்பா போட் செஞ்சு தா" என்றான்.

எழுநூற்று ஐம்பது ரூபாயும் காகிதக் கப்பலாக மாறுவதற்குள் என் மனைவி அவனைத் தூக்கிக் கொண்டு உள்ளே போனாள். இரவு அவன் தூங்கிய பிறகு, எல்லோரும் உட்கார்ந்து விவாதித்து, பன்னிரெண்டில், பத்தைத் தள்ளுபடி செய்தோம். மீதமுள்ள இரண்டு ஸ்கூலில் எதில் முதலில் இடம் கிடைக்கிறதோ, அதில் சேர்ப்பதாக முடிவு செய்தோம்.

"இப்படி நேத்திக்கே பேசி முடிவு செஞ்சிட்டுப் பிறகு போயிருந்தா இரண்டு ஃபாரம் மட்டும் வாங்கியிருந்தால் போதுமே; இப்ப இந்த பத்து அப்ளிகேஷனும் வேஸ்ட்" என்றேன் என் மனைவியிடம்.

"இல்லீங்க, அதையும் யூஸ் பண்ணிடலாம்."

"எப்படி? யாருக்காவது ஒரே பிரசவத்தில் பத்துக் குழந்தை பிறந்திருக்கா? அப்படியே பிறந்திருந்தாலும் அந்தக் குழந்தைகளை மூணு வருடம் கழித்துத் தானே ஸ்கூலில் சேர்ப்பார்கள்!"

"கிண்டல் பண்ணாதீங்க. உங்க நண்பர்கள் இரண்டு பேருக்கு அடுத்த மாதம் கல்யாணம் நடக்கப் போகுதில்லே...."

"ஆமாம். கோபாலுக்கு அடுத்த மாதம் பத்தாம் தேதி; பாஸ்கருக்குப் பதினாறாம் தேதி. அதுக்கென்ன இப்ப?"

"அவங்க இரண்டு பேருக்கும் ஆளுக்கு ஐந்து அப்ளிகேஷன் திருமண அன்பளிப்பாகக் கொடுத்து விடலாம்."

"அப்படியே போய் பெட்ல படுத்துக்க. நான் டாக்டருக்குப் போன் பண்ணிட்டு வர்றேன்" என்று எழுந்தேன்.

"அவசரப்படாதீங்க. எனக்கு மூளையெல்லாம் குழம்பல. நல்லாத்தான் இருக்கேன். முழுசும் கேளுங்க...."

ரஜினி அரசியலுக்கு வருவாரா? அத்வானி நிஜமாகவே பணம் வாங்கியிருப்பாரா? இது போன்ற பெரிய குழப்பங்களெல்லாம் எனக்கு இப்ப ரொம்ப சின்னதாகத் தெரிந்தது.

என் மனைவியோ சிரித்துக் கொண்டே (தேவையா சார்?) கேட்டாள் : "வெயிட் அண்ட் சேவ் திட்டம்" தெரியுமா உங்களுக்கு?"

"ஓ. தெரியுமே. டீ.வி., ப்ரிட்ஜ் போன்றவை வாங்கும் போது உடனே டெலிவரி எடுத்தா ஒரு விலை. அதுக்குப் பதிலா கம்பெனிக்கு டிராப்ட் எடுத்து அனுப்பினா, கொஞ்சம் விலை கம்மியாகக் கிடைக்கும். ஆனால் நமக்குப் பொருள் கிடைக்கக் கொஞ்ச நாளாகும்."

"அதேதான்! அது மாதிரி ஸ்கீம் இப்ப நம்ம ஊர்ல எல்லா ஸ்கூலிலும் இருக்கு."

"இன்னும் கொஞ்சம் குழம்பின மாதிரி இருக்கு. பத்து ஃபாரம் வேஸ்ட் என்று சொல்லாமலே இருந்திருக்கலாம்."

தன் விளக்கவுரையைச் சற்றும் நிறுத்தாத என் மனைவி தொடர்ந்தாள்.

"வருடா வருடம் ஸ்கூல் டொனேஷன் தொகை அதிகமாயிட்டே போகுது. ஆனா நீங்க வெயிட் அண்ட் சேவ் ஸ்கீமில் இந்த வருட டொனேஷன் தொகையைக் கட்டி, குழந்தை பெயர் மட்டும் போடாமல், ஒரு புரோவிஷனல் அப்ளிகேஷன் கொடுத்திட்டீங்கன்னா, அது அடுத்த ஐந்து வருடத்துக்குச் செல்லுபடியாகும். ஒரு வேளை நீங்க ஐந்து வருடத்தில் குழந்தையை ஸ்கூலில் சேர்க்காவிட்டால், ஆறாம் வருஷம் பணத்தைத் திரும்ப வாங்கிக்கலாம்."

"ஆஹா... இதுவல்லவோ கல்விச் சேவை! எப்படியோ ஒரு புது மாதிரியான திருமணப் பரிசு கொடுக்கப் போகிறோம். அதைச் சரியான முறையில் பயன்படுத்திக் கொள்வது புது மாப்பிள்ளைங்க கையில் இருக்கு" என்றேன்.

என் அருகில் நெருங்கி வந்த என் மனைவி, "ஏங்க, ஒண்ணு சொன்னாக் கோவிச்சுக்க மாட்டீங்களே" என்றாள்.

"அய்யோ, அம்மா, தயவு செஞ்சு இன்னும் ஒரு மாசத்துக்கு நீ எதுவும் சொல்லாதே!" என்றபடியே போர்வைக்குள் போய் ஒளிந்து கொண்டேன், நான்.

## 'சுருக்-நறுக்' என்றொரு சொல்லோவியம் – 20

## சினிமா என்பது....

இந்த நூற்றாண்டின் அதிஅற்புத விஞ்ஞான சாதனை இது. ஆனால் எத்தனை மோசமாக உபயோக மாகிறது!

உங்கள் கற்பனையில் சினிமா பற்றி ஒரு 'சுருக்-நறுக்' சொல்லோவியம் தீட்டுங்கள். பிரசுரமாகும் ஒவ்வொரு சொல்லோவியத்துக்கும் ரூ. 50 பரிசு. இன்னும் ஆறே வாரங்கள்தான் இந்தப் போட்டி தொடரப் போகிறது. உங்களில் அதிக முறை பரிசு வென்று, மெகா பரிசான ஒரு ஜோடி டைடன் கைக்கடிகாரங்களைத் தட்டிச் செல்லப் போகிற அதிர்ஷ்டசாலி யார்?

முடிவு தேதி : 4.3.96
ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

– ஆர்.

சினிமா என்பது.........................................
..........................................................
..........................................................
..........................................................
..........................................................

பெயர் : ..................................................
முகவரி : ................................................
..........................................................
..........................................................
..........................................................

எம்.எல்.ஏ. மோகனசுந்தர டெலிபோனை சுழற்ற, மறுமுனைய லிருந்து தெனாவட்டான குரலில் 'ஹலோ வந்தது.

"யாருய்யா பேசறது?" – எம்.எல்.ஏ. விரட்டி னார்.

அந்த அதட்டலில் மிரண்டு போன மறு முனை "கான்ஸ்டபிள் கணேசனுங்க" என்று தடுமாறியது.

"ஹவுஸ் ஆபீசர் யாருய்யா?"

"இன்ஸ்பெக்டர் இருதயம் சார்."

"அவுரு சீட்லே இல்லையா?"

"இல்லை சார். ஒரு கேஸ் விஷயமா அவ சரமா வெளியே போயிருக்கார் சார்."

"ஆமா கிழிச்சீங்க... சரி, நான் ஏரியா எம்.எல்.ஏ. பேசறேன். இன்ஸ்பெக்டர் வந்த உடனே எனக்கு போன் பண்ணச் சொல் லுய்யா."

"ஆவட்டுங்க சார்" என்று மறுமுனை முற்றாக அடிபணிந்தது. காலை உதைத்து சல்யூட் கூட அடித்த மாதிரி இருந்தது.

ஒரு அரை மணி நேரம் கழித்து போன் மணி ஒலிக்க எம்.எல்.ஏ.யின் பத்து வயதுப் பெண் "இன்ஸ்பெக்டர் இருதயம் நய்னா" என்று சொல்லி கார்டுலெஸை தந்தை கையில் கொடுத்தது.

"எங்கேய்யா போயிடறீங்க, ஒரு அவசரத் துக்குக் கூப்பிட்டாக் கூட அகப்பட மாட்டேங் கறீங்களே?"

"ஒரு தற்கொலை கேஸ் சார். ஸ்பாட்டுக்குப் போயிருந்தேன்."

"ஆமா, இந்த மாதிரி போலீஸ் இருந்துச்



சுன்னா ஜனங்க தற்கொலைதான் பண்ணிக்கணும். சேச்சே! வரவர நம்ம ஏரியாவிலே அராஜகம் அதிகரிச்சுத்தான் வருது."

"ஏன் சார், என்ன ஆச்சு சார்..." இன்ஸ் பெக்டர் பதறிப் படபடத்த விதம் எம்.எல். ஏக்கு திருப்தியூட்ட, உதட்டில் சின்னதாய் ஒரு புன்னகை. இரண்டு கால்களையும் தூக்கி சோபாவில் வைத்து சம்மணமிட்டுச் சாய்ந்து கொண்டார்.

"பின்னே என்ன சொல்றது. நான் யாரு... இந்தத் தொகுதி எம்.எல்.ஏ....

ன் வீட்டிலேயே ஒரு திருட்டு நடக்குதுன்னா, சாதாரண ஜனங்கள் பாடு எப்படி இருக்கும்...?''

''நம்ம வீட்டிலேயே திருட்டுங்களா... எப்படி சார், எப்போது சார்?'' இன்ஸ்பெக்டர் தவித்தார். பாவம், அவர் கண்ணுக்கு முன்னால் ஈரப்பசையே இல்லாத வனாந்திரம் ஒன்று விரிந்திருக்க வேண்டும்....

''ஆமாம், களவுதான். என் வீட்டிலேயே தான். கேளுங்க. நம்ம வீட்டுக் கொல்லையிலே காய்த்திருந்தது ஒரு வாழைத்தாரு. பொள்ளாச்சியிலிருந்து என் மைத்துனர் கொண்டு வந்து நட்டது. விருப்பாச்சி வகை வாழை. ரெண்டு நாள் முடிஞ்சு தாரை அறுத்திடலாம்னு என் பொண்ணும் மனைவியும் ஆசையா காத்துக்கிட்டிருந்தாங்க. இன்னைக்கி

## முத்துராஜன்

காலையே பார்த்தா முழுத் தாரும் அபேஸ். நீங்க எம்.எல்.ஏவா இருந்து என்ன பிரயோஜனம்னு அவங்க ரெண்டு பேருமா சேர்ந்து என்னைச் சாடறாங்க!''



''சாரி சார்.''

''பாருங்க இருதயம். ஒரு வாழைத்தாரு போனதை நான் பெரிசு பண்ணறதா நினைக்காதீங்க. வாழைத்தாரு ஆகட்டும், வைர அட்டிகை ஆகட்டும் குற்றம் குற்றம் தானே. சட்டப்படி நடவடிக்கை எடுத்துத் தண்டனை வாங்கித் தர வேண்டியது என் போன்றவங்க கடமை இல்லையா?''

''கரெக்டா சொன்னீங்க சார். நியாயமான பேச்சு. இதோ நானே அங்கே வர்றேன் சார். குற்றவாளியை நிச்சயமா பிடிச்சிடலாம் சார்.''

அடுத்தகணம் இன்ஸ்பெக்டர் இருதயத்தின் ஸ்டேஷன் பம்பரமாய் சுழலத் தொடங்கியது.



இரண்டு கான்ஸ்டபிள்கள் சகிதம் இன்ஸ்பெக்டர் ஸ்தலத்துக்கு விரைந்து தடயம் சேகரித்தார்.

பிறகு, ஏரியாவிலுள்ள இந்த ரக சில்லரைத் திருடர்களின் பட்டியல் அலசப்பட்டது. ஸ்டேஷனுக்கு பரிச்சயமான மாமூல் உளவாளிகள் விசாரிக்கப்பட்டனர்.

அப்புறம் எம்.எல்.ஏ. வீட்டுக்குப் பின்புறமுள்ள குடிசைப் பகுதியில் போலீஸ் படை புகுந்தது; புரட்டி எடுத்தது.

வெற்றி! திருடன் பிடிபட்டான்.

சுமார் பதினாறு வயது பரட்டைத் தலைப் பையன். பையனுடைய கன்னித் திருட்டு இது. வாழைத் தாரும் சேதமின்றி முழுமையாக மீட்கப்பட்டது.

வெற்றுடம்பும் ரத்தம் கன்றிய கன்னங்களுமாக பையனை ஜீப்பில் உட்கார வைத்து, அவன் கழுத்தில் வாழைத்தாரை மாலை போல தொங்கவிட்டு, வெற்றிப் பெருமிதத்துடன் போலீஸ் படை எம்.எல்.ஏ. வீட்டு வாசலை அடைந்த போது, உள்ளே போனில் இரைந்து கொண்டிருந்தார் எம்.எல்.ஏ.

''என்னது நம்ம லாரியைத் தடுத்து வைச்சிருக்காங்களா... காட்டிலாகாக்காரங்களா. யாரு, புதுசா வந்திருக்கானே அந்த அசிஸ்டெண்டா? பெர்மிட்படி ரெண்டு லோடுக்கு மேலே அனுமதிக்க முடியாதுங்கறானா? சுண்டைக்காய்ப் பயலுக்கு அவ்வளவு திமிரா? காடு என்ன இவன் அப்பன் வீட்டுச் சொத்துன்னு நினைக்கிறானா... ஆவட்டும் அவனை அப்புறமா பொரட்டி எடுக்கலாம்; நீ அங்கேயே இரு. நான் டி.எஃப்.ஓகிட்டே பேசிட்டு உன்னைக் கூப்பிடறேன்.''

இன்ஸ்பெக்டர் இருதயம் தனக்கு முன்னால் கழுத்தில் வாழைத்தார் கனக்க ஒடுங்கிப் போய் நிற்கும் அந்தப் பையனை பரிதாபத்தோடு பார்த்தார்...



# கனவு கண்ட வாழ்க்கை

ஏ.சி. டூ டயர் ரயில் பயணம். அரசாங்க ஊழியனுக்குத் தரப்படும் எல்.டி.சி சலுகை. என் சம்பள உயர்வினால், இந்த வருடம் முதல் இரண்டாம் வகுப்பு ரயில் பயணத்திலிருந்து ப்ரமோஷன்.

பம்பாயில் அக்கா வீடு. நான், மனைவி, ஐந்து வயது மகனுடன் பத்து நாள் ஓசி சாப்பாட்டுக்குக் கிளம்பி விட்டேன்.

ஏ.சியின் ஜில், என்னை விட செழுமை உடையணிந்த பயணிகள், திரைச்சீலைகள் கொஞ்சம் மிரளத்தான் வைத்தன.

எதிரே மொழு மொழு முகத்துடன் ரிஷி கபூர் ஜாடையில் ஒரு குஜராத்தி, பைஜாமா, ஜிப்பாவில் பக்கத்திலிருந்த வெண்ணெய்யுடன் பேசிக் கொண்டிருந்தான்.

வெண்ணெய் அவன் மனைவி. அந்த பொத, பொத உடம்புவாகிலும் வசீகரம் இருந்தது. நிறமா இல்லை பணத்தின் மினுமினுப்பா?

மன்னார்குடியில் (கை) பிடித்த என் மனைவியைப் பார்த்தேன். உருளைக் கிழங்கு பக்கத்தில் வைத்த கருணைக்கிழங்கு! பெருமூச்சு விட்டேன்.

தடக், தடக், தடக்! லய சுத்தமாய் ரயில் ஓடிக் கொண்டிருந்தது.

ஏ.சி.யின் பிரமிப்பு நீங்கி, பார்வையைத் தூரமாக்கினேன்.

அட, அது யார்? நடைபாதையை ஒட்டிய பெர்த்தில், எனக்குக் கொஞ்சம் தள்ளி.... ராதிகாதானா அது?

என் பார்வை உறுத்தலில் திரும்பியவளின் கண்களிலும் சட்டென ஒரு மலர்ச்சி.

ராதிகாவேதான்! புன்னகை செய்தாள்!

ஆறு வருடம் கழித்து சந்திக்கும் புன்னகை. இன்னமும் அதிக சதை போடாமல் அழகாய்த் தானிருந்தாள்.

கல்யாணம்? கழுத்து, காலை ஆராய்ந்தேன். ஆகவில்லை போலிருக்கிறதே?

சின்ன குரூர திருப்தி எனக்குள் பரவியது.

"மாலு டியர், காப்பி வேணுமா?"

என் பிரியத்தை சற்று உரக்கக் காண்பித்தேன்.

வியப்புடன் பார்த்தாள் என் சகதர்மிணி.

"தலைவலின்னு சொன்னியே."

அமிர்தாஞ்சனம் கைப்பையில் இருந்தது. எடுத்து நீட்டினேன்.

"நான் வேணும்னா நீவி விடவா நெற்றியை?" - மாலுவின் வெட்கத்தைப் புறம் தள்ளி, மிக வாஞ்சையுடன் பணி செய்தேன்.

அவ்வப்போது என் பார்வை ராதிகா பக்கம் சென்று மீண்டது.

கவனிக்கிறாள்! அல்ப சந்தோஷம் என் நாடிகளில்.

"உங்களைக் கல்யாணம் செஞ்சுண்டா, நான் கனவு காணும் வாழ்க்கை அமையாது."

முகத்திலடித்தாற் போல எப்படிச் சொன்னாள்.

மைக் டைசன் குத்து விடுவதைவிட வலிமையாய் என் முகத்தைப் பதம் பார்த்த பதில். முகத்தை மட்டுமல்ல நெஞ்சையும்தான்.

தமிழ் வாத்தியாரின் மூன்றாவது பெண்ணுக்கு வந்த திமிரைப் பாரேன். எனக்கு என்ன குறைச்சல்?

ஒரே பையன். சின்ன வீடானாலும் சொந்த வீடு. அரசாங்க குமாஸ்தா. பிக்கல், பிடுங்கல் இல்லாத உறவு. கசக்கவா செய்யும்?

ஏதோ பார்க்க பளிச்சென்று இருக்கிறாளே என்று கேட்டால் 'கனவு காணும் வாழ்க்கையாம்'.

அவள் கனவில் இடி விழ! அப்போது சபித்தது வீண் போகவில்லை.

முதல் இரண்டு பெண்களின் கல்யாணச் செலவிலேயே போண்டியாகிப் போனார் இவள் அப்பா.

பணத்துக்கு எங்கே போவார் இவள் கல்யாணத்துக்கு? எவனும் வந்திருக்க மாட்டான். அப்படி வந்தவனையும் ஏதாவது சொல்லி விரட்டியிருப்பாள் ஆரம்பத்தில். இப்போது தும்பை விட்டு வாலைப் பிடிக்கும் கதையாய்.....

என் கற்பனை தந்த மகழ்ச்சியில் ராதிகாவை நோக்கினேன்.

கற்பனை என்ன, பிராக்டிகலாய் பார்த்தால் நான் நினைத்ததுதான் உண்மையாகி இருக்க வேண்டும்.

இவள் எங்கே ஏ.சி. கூப்பேயில்? பட்டப் படிப்பு தந்த அரசாங்க உத்யோகமாயிருக்க வேண்டும், என்னைப் போலவே!

பிரயாணம் முழுவதும் பாசமுள்ள, நேசமுள்ள, பிரியமுள்ள பதியாக நடந்து கொள்ள ஆரம்பித்தேன்.

நடுநடுவில் சிறு புன்னகைப் பரிமாற்றம்

## கிருஷ்ணா

மட்டுமே எங்களுக்குள். ராதிகாவும் பேச யத்தனிக்கவில்லை, வலிய வந்து. தாழ்வுணர்ச்சியோ?

காப்பி, சாக்லேட், சிப்ஸ், ஐஸ் கிரீம்.... என்று வேட்டு விட்டேன் பணத்தை. என் மகனுக்கும், மனைவிக்கும் எனது திடீர் 'கர்ணன்'



வேடம் புதுமையாயிருந்தது. சந்தோஷமாயும் இருந்தது.

"யாருங்க அது? அப்பப்ப உங்களைப் பார்த்துச் சிரிக்கறா அந்தப் பொண்ணு?"

பெண்களாயிற்றே? ஜாக்கிரதை உணர்வு அதிகம்!

"என் கிராமம். எதிர் வீட்டுல இருந்தது அவ குடும்பம். அப்புறம் பட்டணத்துக்குப் போயிட்டாங்க. ஆறேழு வருஷமாச்சு பார்த்து."

**மா**லுவின் குணமே அலாதி. எப்போதும் ஏதாவது பேசிக் கொண்டிருக்க வேண்டும். திறந்த வாய் மூடாத அரட்டைக்காரி. சுவாரஸ்யமாகவும் பேசுவாள். சட்டென யாருடனும் ஒட்டிக் கொள்வாள்.

புளியஞ்சாதத்தைப் பிரிக்கும் போது கேட்டே விட்டாள்.

"அவளையும் சாப்பிடக் 'கூப்பிடுங்களேன்'."

"எதுக்கு? ஒண்ணும் வேண்டாம்."

சடாரென எழுந்தாள். நேரே ராதிகாவிடம் சென்றாள். இரண்டே நிமிடம்! சேர்ந்து விட்டார்கள். நேரே இங்கேயே கூட்டி வந்து விட்டாள்.

எனக்குத்தான் சங்கடம். கூடவே சந்தோஷம்.

"மாலும்மா, மாலு டியர்."

வாய் நிறைய அழைத்தேன்.

"நல்லா சாப்பிடணும். உனக்குப் பசி தாங்காதே." கட்டிய மனைவிக்கே உபசரிப்பு.

ராதிகா மகா அழுத்தக்காரி. புன்னகையை முகத்தில் மாட்டிக் கொண்டபடி அருகில் அமர்ந்து புளி சாதத்தை ருசித்தாள்.

வெளியே காட்டிக் கொள்ளாவிட்டாலும், உள்ளுக்குள் நிச்சயம் ஏங்குவாள்!

என் மனசுக்குள் சமாதானம்.

"உங்களுக்குக் கல்யாணமாயிடுச்சா?"

மாலு கேட்டே விட்டாள். ஆவலாய்க் கு[illegible] திருந்தேன்.

ராதிகா என்னைப் பார்த்தபடி சொ[illegible] னாள்.

"இல்லை."

"ஏன்?"

"இனிமேதான் யோசிக்கணும்."

யோசிக்கணுமா? நல்ல சமாளிப்புதா[illegible] என் குதூகலத்தில் புளிசாதம் இரண்டு பி[illegible] கூடவே உள்ளே போனது.

"மாலு, உன் கைமணமே அலாதி. மனை[illegible] அமைவதெல்லாம் இறைவன் கொடுத்த வர[illegible] நான் பாக்கியசாலி."

வேண்டுமென்றே வம்பிழுத்தேன். பழிக்கு[illegible] பழி!?

"வேலை பார்க்கறீங்களா?"

தலையசைத்தாள் ராதிகா.

"என்ன வேலை?"

"நான் கனவு கண்ட வேலை."

"கனவு?" - திடுக்கிட்டுப் பார்த்தேன்.

"சின்ன வயசிலேயிருந்தே என் கனவு அ[illegible] இருபது வயசிலே எல்லாப் பொண்ணுங்[illegible] மாதிரியும் கல்யாணம் பண்ணிண்டு, கண[illegible] னுக்கு மட்டும் சேவைன்னு இல்லாம, ஊருக்[illegible] உபயோகப்படற மாதிரியான வேலையில[illegible] சேரணும்னு ஆசை. சேர்ந்துட்டேன்."

ஏதோ கரடி விடுகிறாளே!

"என்ன வேலை அது?"

"கலெக்டர் வேலை. டிரெயினிங் முடி[illegible] சாச்சு. மகாராஷ்டிராவிலே போஸ்டிங். எ[illegible] னோடது பெட்டர் சாய்ஸ்தானே?"

ராதிகா, கேட்டபடி என்னைப் பார்த்தா[illegible] அதே மாறாத புன்னகையுடன்.

குறுகிப்போய் தலைகுனிந்தேன் நான்.

---



''உங்க கூட கூட்டணியிலே இருந்த கட்சிகளை எல்லாம் கழற்றி விட்டுட்டீங்களே... ஏன்?''

''ஆட்சியில மட்டும் பங்கு கேட்டா பரவர் யில்லை. ஊழல்ல கூட பங்கு வேணுமாம்!''

– எஸ். எஸ். பூங்கதிர்

"அந்த அடிதடி கேஸ்ல சம்பந்தப்பட்டவருக்[illegible] மந்திரி பதவி கொடுத்ததனால கட்சிக்குள்[illegible] ஏகப்பட்ட எதிர்ப்பாமே...!"

"பின்னே, கொலை கேஸு, கொள்ளை கேஸு[illegible] சம்பந்தப்பட்டவங்கள்லாம் இருக்கும் போது அ[illegible] ருக்குப் போயி கொடுத்தா சும்மா விட்டுருவா[illegible] களா...!"

- ஒட்டநத்தம் சங்க[illegible]






கிருமித் தொற்று படிவது என இரு வேறு காரணங்களால் அப்படி நிகழலாம்.

நோய்க் கிருமிகள் மிகச் சிறிய குழந்தைகளின் மூட்டுகளில் கூட தொற்றக்கூடும். இடுப்பு மூட்டு, கை, கால் என்று எந்தப் பகுதியிலும் வரலாம். உடனடியாகக் கவனித்துச் சிகிச்சை அளிக்காவிட்டால் நோய்த் தொற்றினால் மூட்டுத் திசு நிரந்தரமாக பாதிக்கப்படும்; சக்கர நாற்காலியில் முடக்கிவிடும்.

காசநோயினால் வரும் ஆர்த்தரைடிஸை டி.பி. ஆர்த்தரைடிஸ் என்போம். முதியவர்களுக்குத் திசுக்கள் தேய்வினால் உண்டாவது போல் குழந்தைகளுக்கும் ஏற்படுவதுண்டு. இந்த நிலையை ஜுவனைல் ருமடாய்ட் ஆர்த்தரைடிஸ் என்போம்.

## ஆபரேஷன்; மீண்டும் ஆபரேஷன்!

மூட்டுத் திசுவில் பாதிப்பு குறைவாக இருந்தால் சிகிச்சை, உடற்பயிற்சி மூலம் நிலைமையைக் கட்டுப்பாட்டுக்குக் கொண்டு வரலாம். மிதமிஞ்சிய பாதிப்பினால் திசு பழுதாகிப் போனால் ஆபரேஷன் செய்து அதை நீக்க வேண்டும். Minimal invasive surgery என்ற உடலைப் பெரிய அளவில் 'கிழிக்காத' அறுவைச் சிகிச்சை செய்தாலே போதுமானது.

இந்த அறுவைச் சிகிச்சையின் போது நீக்கப்படும் திசுவின் இடத்தில் சில நாட்கள் கழித்துப் புதிய திசு இயல்பாக வளரும். இந்த அறுவைச் சிகிச்சையையும் காலாகாலத்தில் செய்யாவிட்டால் மூட்டையே மாற்றி அமைக்கும் total replacement surgery என்கிற பெரிய அறுவைச் சிகிச்சையைத்தான் செய்தாக வேண்டும். இந்த முறையில் இயற்கை மூட்டுக்குப் பதிலாகச் செயற்கை மூட்டுப் பொருத்துவோம். இதை சுமார் இருபது வருடங்கள் கழித்துத் திரும்பவும் வெளியே எடுத்து, வேறு செயற்கை மூட்டு பொருத்த வேண்டும்!

## புனைபெயர்!

வயதானவர்களுக்கு (முதுமை காரணமாக) வரும் ஆர்த்தரைடிஸை ஆஸ்டியோ ஆர்த்தரைடிஸ் என்போம்.

மேல் முதுகுத் தண்டில் வலியுள்ளவர்களுக்கு 'செர்வைகல் ஸ்பான்டிலோஸிஸ்' என்று டாக்டர்கள் சொல்வார்கள். அந்தப் பகுதி மூட்டில் வரும் ஆஸ்டியோ ஆர்த்தரைடிஸின் புனைபெயர்தான் செர்வைகல் ஸ்பான்டிலோஸிஸ்.

சில சமயங்களில், நாற்பது வயது வரை மிக சுறுசுறுப்பாக இருப்பவர்கள் திடீரென்று அலுவலக வேலைப் பளு போன்ற காரணங்களால் உடலுழைப்பைக் குறைத்து விடுவார்கள். அப்புறம் ரிடையரான பிறகு திரும்பவும் எக்சர்சைஸ் செய்கிறேன் பேர்வழி என்று ஒரேயடியாக உடலை வருத்துவார்கள். ஆரம்பித்து விடும் மூட்டுவலி!

## இதயத்தைத் தொட்டுவிடும்!

ருமாடிக் ஆர்த்தரைடிஸ் என்றும் ஒரு வகையுண்டு. 'ஸ்ட்ரெப்டோகாகஸ்' என்ற கிருமி தொண்டைப்புண் அறிகுறியுடன் உடம்பினுள் நுழைந்து, மூட்டுகளில் குடியேறுவதால் ஏற்படுவது. இதனால் இதயம் கூட பாதிக்கப்பட்டு அதிலுள்ள வால்வுகள் பழுதாகும். சின்ன வயதிலேயே இது வரக்கூடும். சீக்கிரம் கண்டுபிடித்து சிகிச்சையை ஆரம்பித்தால் ஆறு - ஏழு வருடங்களில் கட்டுப்படுத்தலாம்.

எல்லா மூட்டுகளுக்கும் வேலை தரும்படியான உடற்பயிற்சிகளைச் செய்வதன் மூலம் ஆர்த்தரைடிஸ் வருவதற்கான வாய்ப்புக்களைக் குறைக்கலாம். ஆனால் ருமாடிக், ருமடாய்ட் என்ற இரு வகை ஆர்த்தரைடிஸும் பரம்பரையாக வரக்கூடும். குடும்பத்தில் யாருக்காவது அந்தத் தொல்லை இருந்தால் அடுத்தடுத்த தலைமுறையினர் முன்னெச்சரிக்கையுடன் இருப்பது நல்லது.

தொகுப்பு : **சாருகேசி**

# மைமாந்த்ரா

**இரா. முருகன்**

நெற்றி நிறைய விபூதியும் நடுவில் குங்குமமுமாக, மஞ்சள் டெர்லின் சட்டையில் ஒரு சீனாக்காரப் பையன். ஏழெட்டு வயது இருக்கும். அவன் கையைப் பிடித்தபடி, மடித்துக் கட்டிய வேட்டியும், மஞ்சள் டெர்லின் சட்டையும், கக்கத்தில் குடையுமாக ஒரு நரை மீசைக்காரர். கொஞ்சம் பின்னால், அவசர மாகப் புடவையைச் சுற்றிக் கொண்டது போல, இடுங்கிய கண்ணும் ஒல்லியான உருவுமாகப் பையனின் ஜாடையில் ஒருத்தி. அம்மாவாக இருக்கும். கடைசியாக, தகர டப்பாவைச் செல்லமாக அணைத்துப் பிடித்தபடி, ஒட்டமும் நடையுமாக ஒரு மத்திய வயசுப் பெண்.

ஏழு 'ஆ' பிரிவுக்கு பூகோளப் பாடம் எடுக்க உலக உருண்டையோடு புறப்பட்ட வேதையா வாத்தியார் ஆபீஸ் அறை வாசலில் நின்றார்.

"கண்ணாடியை மாத்தித் தொலைக்கணும்... கண்ணு ஏதோ கொறக்களி காட்டுது!"

"இங்கே எட்மாஸ்டர் சாரு..."

நெருங்கி வந்த மீசைக்காரர் அவரைத்தான் கேட்டார்.

"நான்தான்... என்ன விஷயம்?"

சகல கம்பீரத்தோடும் பூமிப்பந்தை இடவலமாகச் சுழற்றியபடி கனிவாகப் புன்னகை பூக்க வேதையா வாத்தியார் முற்பட்டபோது, இடைஞ்சலாக 'ஏழு - ஆ'விலிருந்து உயர்கிற சத்தம்.

"எங்கேயிருந்து வர்றீங்க?"

வேதையா வாத்தியார் சீனாக்காரியைப் பார்த்துக் கேட்டார்.

"பர்மா... மாண்டலேயிலிருந்து வராங்க..." கூட வந்தவள் சொன்னாள்.

சீனா இல்லை... என்றாலும் அன்னிய தேசம்...

"பர்மாக்காரப் புள்ளையைப் பள்ளிக்கூடத்துலே போடச் சட்டம் எடம் தராதேம்மா..."

வேதையா வாத்தியார் அவர்களைத் தவிர்த்துவிட்டு நடக்க முற்பட்டார். இன்னும் தாமதமானால், 'ஏழு - ஆ'வின் குட்டிப் பிசாசுகள் பள்ளிக்கூடத்தையே இரண்டுபடுத்தி விடுவார்கள்.

"பையனுக்கு அப்பன் தமிழுதான் சார்... என் தம்பி..."

நரை மீசை வேட்டியைத் தழையவிட்டபடி மரியாதையோடு சொன்னார்.

தமிழ்ப் பிள்ளையா மூக்குச் சப்பையும் இடுங்கிய கண்ணுமாக...?

"யாவாரத்துக்குப் போன எடத்துலே இந்தப் பொம்பளையைக் கல்யாணம் கட்டிக்கிட்டான்."

மீசைக்காரர், வேதையா வாத்தியார் காதருகில் சொன்னபோது கிராம்பு வாசனை.

எல்லோர் கண்ணும் தன்னையே பார்ப்பதை உணர்ந்து அந்தப் பெண் சங்கடப்பட்டபடி இரண்டு கைகளையும் குவித்து வேதையா வாத்தியாருக்கு வணக்கம் சொன்னாள். கையில் பளபளத்த தங்க வளையல்கள், செழிப்புக்குச் சாட்சி சொல்லிக் குலுங்கின.

"தமிள்க்காரங்க எல்லாரையும் பர்மாவை விட்டுப் போகச் சொல்லி, அங்கித்து கவர்மெண்ட் உத்தரவு... அங்கே நம்ம ஆளுங்களை மதிக்கவே மாட்டாங்க சார்... நான் கூடக் கொஞ்ச நாள் இருந்துட்டு சரிப்படாதுன்னு திரும்பிட்டேன்... தம்பிக்கு இப்ப திரும்பிவர வேண்டிய கட்டாயம்... மர யாவாரம்... லட்ச லட்சமாய்ப் பணம் புரளறதை எல்லாம் வித்துட்டு வரான்... குடும்பத்தை முன்கூட்டியே கப்பல்லே அனுப்பிச்சுட்டான்... போன வாரம் தான் பட்டணத்துலே போய்க் கூட்டியாந்தேன்..."

மீசைக்காரர் தம்பி சம்சாரத்திடம் அன்னிய பாஷையில் ஏதோ சொல்ல, அவள் பிடித்திருந்த பையிலிருந்து, நாலாக மடித்த காகிதத்தை எடுத்து நீட்டினாள்.

"சர்ட்டிபிகேட்டுங்க... மாண்டலேயிலே செட்டியார் ஸ்கூல்னு தமிள்ப் பள்ளிக்கூடம் தான்..."

மீசைக்காரர் சொல்லிக் கொண்டே இருக்க, வேதையா வாத்தியார் வாங்கிப் பார்த்தார்.

நாலு வகுப்பு முடித்திருக்கும் பையன்.

"தமிழ் படிப்பியாடா தம்பி?"

பையன் கூச்சப்பட்டு நெளிந்தான்.

"உள்ளே ரைட்டர் இருப்பாரு... பீஸ் கட்டிச் சேர்த்துட்டு, நாலாங்கிளாஸ்லே உக்காரச் சொல்லுங்க... ஒரு பத்து நாள் பார்த்துட்டு எல்லாம் சரியாப்பட்டா மேலே அனுப்ப

றேன்...''

வேதையா வாத்தியார் நடக்க, மத்திய வயதுப் பெண் தகர டப்பாவை அவசரமாகத் திறந்து ஒரு கை இனிப்புகளை அவருக்கு முன் நீட்டினாள்.

“கொளுந்தியா கொண்டாந்தா... இங்கே பிள்ளைங்க எல்லாருக்கும் கொடுக்கணுமாம்... பர்மா மிட்டாயி...''

ஒன்றைப் பிரித்து வாயில் போட்டபடி வேதையா வாத்தியார் கேட்டார் -

“பெயர் என்னடா தம்பி?''

“மாமாந்தா.''

நாலு பையன்கள். தலையெல்லாம் கலைந்து கண் சிவந்து வழிந்து, சட்டை கிழிந்து...

ஒருத்தன் விசும்பி அழுது கொண்டிருந்தான்.

'நாலு - ஈ' அம்சவள்ளி டீச்சர் மாமாந்தாவின் கழுத்தைப் பிடித்துத் தள்ளிக் கொண்டு பின்னாலேயே வந்தார்.

“கொரங்குப்பய... எல்லாப் பிள்ளைங்களையும் போட்டு அடிக்கறான். இன்னிக்கே டி.சி.யைக் கிழிச்சு வீட்டுக்கு அனுப்பினாத் தான் சரிப்படும்... நேத்து பெஞ்சு மேலே ஏறிக் குதிச்சு உடைச்சு வச்சிருக்கான்... நீங்களே விசாரியுங்க சார்...''

டிரஷரிக்கு அனுப்ப சம்பளப் பட்டுவாடா பட்டியலைச் சரிபார்த்துக் கொண்டிருந்த வேதையா வாத்தியார், கூட்டுத் தொகையின் இரண்டாம் ஸ்தானத்துக்குக் கீழே பென்சிலால் புள்ளி வைத்துவிட்டு மாமாந்தாவை நிமிர்ந்து பார்த்தார்.

இவனுடைய மீசைக்காரப் பெரியப்பா,





நிருபர் : உங்க தொகுதியிலே நடந்த வன்முறைக்கு நீங்கதான் காரணமுன்னு சொல்றாங்களே...?

தலைவர் : என்னை ரொம்பப் புகழா தீங்க. என் கடமையைத்தான் நான் செஞ் சேன்!

- எஸ். எஸ். பூங்கதிர்

இரண்டு மாதம் முன்னால் படபடவென்று மோட்டார் சைக்கிளில் வந்து இறங்கி, பையனை ஐந்தாம் கிளாசுக்கு அனுப்பச் சொல்லிக் கேட்டது நினைவுக்கு வந்தது.

"தமிழ்லே மார்க் போதாதே... கணக்கும் சுமார்தான்... ஒரு வருஷம் இருந்தே வரட்டும்... கால் வருசப் பரீட்சை வேறு முடிஞ் சாச்சு..."

அப்படித் தீர்மானமாகச் சொல்லி அனுப் பாமலிருந்தால் சும்மா இருந்திருப்பானோ... நாலாவதோ... ஐந்தாவதோ.. குறும்பு குறைந் திருக்குமா என்ன...?

"பசங்களை ஏண்டா அடிக்கறே...? பெரிய ரவுடின்னு நெனைப்பா...? இல்லே பணம் இருக்கிற கொழுப்பா...?"

மாமாந்தா தரையைப் பார்த்துக் கொண்டு மௌனமாக நின்றான்.

"வாயைத் தொறந்து சொல்றானா பாரு... வீட்டுலே கண்டிச்சு வளர்த்தா இல்லே உருப் பட...?"

அம்சவள்ளி டீச்சர் கையை ஓங்க, மாமாந்தா விலகி விறைப்பாக நின்றான்.

"எல்லாப் பசங்களும் சீனாக்காரா... சீனாக் காரான்னு கிண்டல் பண்றாங்க சார்... இந்த டீச்சரம்மாவே வீட்டுலே பாம்பு திம்பியாடா... பல்லி திம்பியாடான்னு கிளாஸ்லே கேக்க றாங்க..."

"பொய் சார்... நான் அப்படியெல்லாம் கேக்கலை..."

அம்சவள்ளி டீச்சர் மேல் முறையீடு செய் தார்.

"நீங்க சும்மா இருங்க டீச்சர்... நான் பேசிக் கறேன்... ஏம்ப்பா... நாளைக்கு உங்க அப்பாவை வந்து என்னைப் பார்க்கச் சொல்லு."

மாமாந்தா ஒரு வினாடி பேசாமல் நின் றான்.

"சார்... எங்க அப்பா இன்னும் பர்மா லேருந்து வரலே... அம்மாவைக் கூட்டி வரட்டா?"

வேதையா வாத்தியாருக்கு அந்தப் பைய னைப் பார்க்க ஏனோ பரிதாபமாக இருந்தது.

"உங்க பெரியப்பா எங்கேடா?"

"கடையிலே சார்."

பர்மா ஸ்டோர் என்று ஜவுளிக்கடை. சமீபத்தில்தான் திறந்தது. ஒருநாள் முழுக்க ஒலிபெருக்கி அலறி வகுப்பில் பாடம் எடுக் கத் தொந்தரவாய்ப் போனது நினைவுக்கு வந்தது.

"ஒழுங்காப் படிக்கறதுன்னா இங்கே இரு... இல்லே நீயும் கடையிலே துணி கிழிக்கப் போய் உக்காந்துடு... தெரியுதா...? இன்னொரு வாட்டி இப்படி ஏதாவது செய்தியோ... வெளியே அனுப்பிடுவேன்... போடா கிளாசுக்கு..."

அவன் மெல்ல நடந்து போவதையே பார்த்தபடி நின்றார்.

"சார்... இவன் அப்பா பர்மாவிலே ஜெயில்லே இருக்கிறதா ஊர்லே பேசிக்கறாங்க தெரியுமா...? அகப்பட்டதை எல்லாம் சுருட்டிப் பொண்டாட்டி பிள்ளையோட அனுப்பிட்டு அவரும் கிளம்பறபோது மாட்டிக்கிட்டாராம்... பண ரெட்டிப்போ எதுவோ பண்ணி..."

"டீச்சர்... நீங்க கிளாஸ் எடுக்கப் போங்க. பிள்ளைங்க போடுற கூச்சல் ஊர்க் கோடிக்குக் கேக்கும் போல இருக்கு."

"சார்.. உள்ளே வரலாமா...?"

முன்னால் நின்ற இளைஞனை எங்கேயோ பார்த்ததுபோல இருந்தது வேதையா வாத்தி யாருக்கு.

மீசை அரும்பிய முகம் சீனக்களையில்... மாமாந்தா...

"என்னப்பா... படிக்கிறியா... எந்தக் காலேஜ்லே..."

மாமாந்தா சுமார் அழுக்கான சாய வேட்டி யில் இருந்தான். மேலே சாயம் போன சட்டை.

"படிக்கலே சார்... இங்கே எட்டு கிளாஸ் முடிச்சுட்டுப் போனேனா...? அப்புறம் தொடர்ந்து படிக்க வீட்டு நிலைமை சரிப் படலே..."

வீட்டு நிலைமை? வேதையா வாத்தி யாருக்குப் புரியவில்லை. கைநிறையத் தங்க வளையல் குலுங்க வந்த இவனுடைய அம்மா...

# நடராஜ் எஸ்டேட்ஸ்

## வழங்கும், வாரம் தோறும்



## காய்கறி - திட்டம்

"சாந்திகாம்ப்ளெக்ஸ்", 3 வது மாடி, 26, ரங்கநாதன் தெரு, தி.நகர், சென்னை 600 017.

கிளைகள் : 51, தெற்கு வீதி, திருவாரூர் - 610 002. 2-B, செல்வம் நகர், தஞ்சாவூர் - 613 007.
1-B, காமராஜ் சாலை, காஞ்சிபுரம் - 613 501

*சென்னை நகர வாசிகளுக்கு மட்டும்*

★ ரூ. 5,000 செலுத்தி 3 ஆண்டு காலத்துக்கு உறுப்பினர் ஆக வேண்டும்.

★ 3 ஆண்டு காலத்துக்கு பிறகு உறுப்பினர் கட்டணத்தை திரும்ப பெற்றுக் கொள்ளலாம்.

★ அல்லது மீண்டும் 3 ஆண்டுகளுக்கு புதுப்பித்துக் கொள்ளலாம். (ரினிவல்).

★ உறுப்பினர் கட்டணத்துக்கு அங்கீகரிக்கப்பட்ட வங்கிகள் அளிக்கும் **12% P.A.** வட்டியும் கிடைக்கும்.

உறுப்பினர் கட்டணத்தை நேரிலோ, டி.டி. மூலமாகவோ, காசோலை மூலமாகவோ அளிக்கலாம்.

**இலவசம்**

அழகிய கவர்ச்சிகரமான உறுப்பினர் கார்டையும் அத்துடன் காய்கறி நறுக்கும் **S.S.** கட்டரையும் முற்றிலும் இலவசமாக பெற்று செல்லுங்கள்



**ஞாயிறு தோறும் சப்ளை**

ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் காலை சூரியன் உதிக்கும் நேரத்தில் எங்கள் விவசாய வளர்ச்சி பிரதிநிதி பசுமையான சத்துமிகுந்த காய்கறிகள் நிறைந்த, அழகிய பாலிதின் மற்றும் சணல் பைகளுடன் உங்கள் வீட்டின் கதவை இன்முகத்துடன் தட்டுவார்.

**பூச்சிக் கொல்லி மருந்து, மற்றும் ரசாயன உரங்களை 99% தவிர்க்க முயற்சி செய்கிறோம். இயற்கை உரம் இடுவதால் உங்கள் உடல் நலம் முற்றிலும் பாதுகாக்கப்படுகிறது.**

## *சப்ளை விபரம்*

உறுப்பினர்களுக்கு ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் வாழைக்காய், வெண்டைக்காய், முருங்கைக்காய், பாகற்காய், பீர்க்கங்காய், அவரைக்காய், கோவைக்காய், கொத்தவரங்காய், வெள்ளரிக்காய், பூசணிக்காய், பரங்கிக்காய், சுரைக்காய், புடலங்காய், சுண்டைக்காய், மிளகாய், முள்ளங்கி, பிடிகரனை, முருங்கைக்கீரை, அகத்திக்கீரை, மணத்தக்காளிகீரை, முளைக்கீரை, அரைக்கீரை, வெந்தயக்கீரை, பசலைக்கீரை, புதினாக்கீரை, புளிச்சக்கீரை, பொன்னாங்கன்னிக்கீரை, மாவடு, நெல்லிக்காய், மாங்காய், தேங்காய், வாழைப்பழம், காராமணி, (சில காய்கறிகள் சீசனில் மட்டும் வழங்கப்படும்). வாழையிலை போன்றவை மாற்றி மாற்றி சப்ளை செய்யப்படும்.

**Phone : 4342098, 4840150**

திட்டமிட்ட குடும்பத்துக்கு முடிந்தவரை தேவையான காய்கறிகள் வழங்கப்படும். இயற்கை சீற்றங்களால் ஏதேனும் சேதாரம் ஏற்பட்டாலொழிய எங்கள் சப்ளை ஒருபோதும் நிற்காது. உறுப்பினராக சேர்வதற்கு குறிப்பிட்ட இடங்களே மீதி இருக்கின்றன.

NATARAJ GROUP OF COMPANIES :
**NATARAJ FINANCE, NATARAJ CHITS (TAMIL NADU) PVT. LTD., NATARAJ EXPORTS OVERSEAS, NATARAJ OIL MILLS, NATARAJ PUBLICATIONS.**

**24 % P.A.**

## 'சுருக் - நறுக்' என்றொரு சொல்லோவியம் - 21

### மகிழ்ச்சி என்பது....

'பட்டாம்பூச்சியைப் போன்றது! துரத்தினால் பிடிபடாது; எதிர்பாராத நேரத்தில் நம் தோளிலேயே வந்து உட்காரும்'. இப்படி ஆங்கிலத்தில் ஒரு விளக்கம் உண்டு. மகிழ்ச்சிக்கு உங்கள் விளக்கம் என்ன...?

'சுருக்-நறுக்' என்று ஒரு சொல் லோவியம் தீட்டுங்கள்; அனுப்பி வையுங்கள்.

பிரசுரமாகும் ஒவ்வொரு சொல்லோவியத்துக்கும் ரூ. 50 பரிசு. இன்னும் ஐந்தே வாரங் களில் முடியப் போகும் இந்தப் போட்டியில் உங்களில் யார் அதிக முறை பரிசுகள் வெல்கிறீர்களோ, அவருக்கு மெகா பரிசாக ஒரு ஜோடி டைடன் கைக்கடிகாரங்கள்!

முடிவு தேதி : 11.3.96

ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

- ஆர்

மகிழ்ச்சி என்பது ..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

..........................................

பர்மாவில் அப்பா... பர்மா ஜவுளி ஸ்டோர் பெரியப்பா...

"அப்பா ஜெயில்லே இருந்து வந்து ரெண்டாம் கல்யாணம் பண்ணிக்கிட்டு அங்கேயே தங்கிட்டாரு சார்... கொண்டு வந்த பணத்தை வண்டி வாங்க... நெலம் வாங்க... கடை வைக்கன்னு பெரியப்பா அப்பப்ப வாங்கிக்கிட்டாரு..."

"கடைதான் நல்லா நடக்குது போல இருக்கே...?"

"நடக்குது சார்... ஆனா கைமாறிடுச்சு... பெரியப்பா சினிமா எடுக்கறேன்னு போய் எல்லாம் வித்து அழிஞ்சுது... வீடும் போயி கையிலே காசு இல்லாமே நானும் அம்மாவும் தெப்பக்குளப் பக்கம் குடிசை போட்டுட்டுப் போனோம். படிப்பு நின்னு போய் நான் தச்சாசாரி லச்சுமணன்கிட்டே எடுபிடியாச் சேர்ந்தேன். அம்மா தெருவிலே இட்லிக்கடை போட்டு... போன வாரம் அவங்களும் போய்ச் சேர்ந்தாச்சு..."

தெருவில் இட்லி அவித்து விற்ற பர்மாக்காரி...

"கடைசி வரைக்கும் அப்பா வரப் போறார்னு ரொம்ப நம்பிக்கையா இருந்தாங்க..."

மாமாந்தா கண்கலங்க நின்றிருந்தான்.

"ஓர் உதவி செய்யணும் சார். அரபு நாட்டுலே கார்ப்பெண்டர் வேலைக்கு ஆள் எடுக்கறாங்களாம்... பொறுப்பான ஆளுங்ககிட்டே இருந்து நடத்தை சர்ட்டிபிகேட் கேக்கறாங்க... எனக்கு சாரைத் தவிர யாரைத் தெரியும்...?"

"என்னன்னு தர? கிளாஸ்லே பெஞ்சியை எல்லாம் போட்டு உடைச்ச பயன்னு தரட்டா?"

சிரித்தபடி லெட்டர்பேடை எடுத்தார்.

**வே**தையா வாத்தியார் ரிடையராக நாலு நாள் இருக்கும்போது, சின்னப் பையனைக் கையைப் பிடித்துக் கூட்டிக் கொண்டு அந்தப் பெண் படியேறி வந்தாள். கூடவே நாலைந்து பேர்.

"பையனோட அப்பா என் மச்சான் தானுங்க... கல்லே இருக்காரு... ஒண்ணாங் கிளாஸ்லே பையனைப் போடணும்..."

ஃபாரின் செண்டு மணக்க நின்றவள் பேசியபடி முன்னால் நிறுத்திய குழந்தை சீனாக்கார சாயலில் இருந்தது.

"இது பிள்ளைக்கு அம்மாங்க..."

அவள் கையில் தங்க வளையல்கள் குலுங்க வணக்கம் சொன்னாள்.

# வெள்ளி விழாப் பள்ளியின் வெற்றிப் படிகள்

வெள்ளி விழாக் கோலம் பூண்டு, வெற்றிப் பாதையிலே வீர நடையிட்டுச் செல்லும் பெர்க்ஸ் பள்ளியே, உனக்கு எம் பொன்னான வாழ்த்துக்கள் !

தென்னிந்திய நாட்டின் தொழில் நகராம் கோவையிலே தொழில்கள் மட்டுமென்ன, உயர்ந்த கல்வியும் சிறப்பாகத் தரமுடியும் என்று திட்டங்கள் பல தீட்டித் திறம்பட செயலாற்றிவரும் பெர்க்ஸ் பள்ளியே, நீ வாழ்க பல்லாண்டு!

ஒரு மாணவன், தன் ஏற்றமிகு வாழ்விற்கு "ஏட்டுக்கல்வி மட்டும் போதாது. பாடப் புத்தகங்கள் பகுத்தறிவை வளர்க்கட்டும். அத்தோடு, அகர முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு" என்று ஆன்மீகக் கல்வியையும் இங்கு பயில்கிறான். இன்றைய மாணவனுக்கு ஒழுக்கமும் கல்வியும் எவ்வளவு தேவையோ, அந்த அளவிற்கு அவனுக்கு விளையாட்டிற்கும், உடற்பயிற்சிக்கும் இடம் தந்து, வளமான வாழ்வை அமைத்துக் கொள்ள இங்கே வசதிகள் ஏராளம்! பச்சைப் பசேலென சோலைகள் சூழ்ந்த பெர்க்ஸ் வளாகத்தின் எழில்மிகு நீச்சல்குளம், ஏற்றமிகு நவீன இயந்திரங்கள் கொண்ட உடல்நல மையம் (Health Center) ஆராய்ச்சிக்கும் ஆன்மீகத்துற்கும் நிலைத்ததொரு சின்னமாய் உருவாக்கப்பட்டு நாள்தோறும் நூற்றுக்கணக்கானோர் வந்து பார்வையிடும் பிரமிடு, (Pyramid) மற்றும் வெள்ளித் திரையிலேயும், விரிவாகப் பாடங்களைப் பயில உதவும் திரை அரங்கம் (Perks Mini Theatre) ஆகியன வேறு எந்தப் பள்ளியிலும் பார்க்க முடியாதவை!

அண்மையில் இப்பள்ளியில் நடைபெற்ற அனைத்துத் தென்னிந்திய மாநிலங்களின் அறிவியல் கண்காட்சி ஒரு கண்கொள்ளாக் காட்சி! கேரளம், ஆந்திரம், கர்நாடகம், பாண்டிச்சேரி, தமிழ் நாடு ஆகிய மாநிலங்களினின்று வந்திருந்த ஆயிரக்கணக்கான மாணவர்கள், தங்கள் அறிவியல் கண்டுபிடிப்புகளுடன் பங்கேற்ற இந்தக் கண்காட்சியைப் பார்த்துப் பயன்பெறத் திரண்டதே கூட்டம் ! அப்பப்பா...! அதை நினைத்துப் பார்க்கும் போது மூன்றாண்டுகளுக்கு முன்னர் நம் தமிழகத்திலேயே முதன் முறையாக நடைபெற்ற அகில இந்திய யோகா போட்டியிலே, நாட்டின் பல்வேறு மாநிலங்களினின்றும் இப்பள்ளிக்குத் திரண்டு வந்து கலந்துகொண்ட அந்த விழா நினைவிற்கு வருகிறது.

அதுபோன்று அவ்வப்போது நடைபெற்று வரும் தேசிய அளவிலான போட்டிகள் இங்கே அடிக்கடி நடைபெறுகின்றன. இவ்விதம் நாட்டுப் பணிகளை நன்முறையில் ஆற்றிவரும் இப்பள்ளியின் சிறப்பு, நாட்டிற்குப் பெருமை அளிப்பதன்றோ! இந்திய நாட்டின் இன்றைய டென்னிஸ் வீராங்கனை குமாரி நிருபமாவை ஊக்குவித்து, சீரிய பயிற்சிகள் அளித்து உருவாக்கி வைத்த பள்ளியே! நீ வாழி!

நாட்டின் தலைசிறந்த வீரர்களையும், வீராங்கனைகளையும் ஒரு பள்ளி வளாகத்திலேதான் உருவாக்கமுடியும். பெர்க்ஸ் பள்ளியால் அதைச் செய்து காட்ட முடியும்! எதிர்காலத்தில் பல்வேறு துறைகளில் வீரர்களையும், வீராங்கனைகளையும் உருவாக்க இருக்கும் இப்பள்ளியின் சேவை நாட்டிற்குத் தேவை. "காலை எழுந்தவுடன் படிப்பு, மாலை முழுவதும் விளையாட்டு" ஆம். அமரகவி பாரதியின் கனவு இங்கு நனவாகிறது!

வெள்ளி விழாவை ஒட்டி இப்பள்ளி எதிர்வரும் கல்வி ஆண்டிலிருந்து (1996-1997) புகுத்த உள்ள புதிய திட்டத்தையே இங்கே குறிப்பிடுகிறோம். காலை 7.00 மணி முதல் பாட வகுப்புகள், நடுப்பகல் 12.00 மணி வரை நடைபெறும். அதன்பின் புத்தகங்களை அவன் மூடிவைத்து விடலாம். பிற்பகலில் தனக்குப் பிடித்த விளையாட்டை, நம்நாட்டின் தலைசிறந்த விளையாட்டு வீரர்களிடமிருந்து கற்கிறான். ஒவ்வொரு நாளும் குறைந்தது 4 மணி நேரம் இந்தப்பயிற்சியைப் பெறுகிறான். இத்தகைய பயிற்சி பெறும் மாணவனுக்குப் பாட வகுப்புகள் காலை 7 மணி முதல் நடைபெற இருப்பதால் அவன் பள்ளி விடுதியிலேயே , வசிக்கும் அவசியம் ஏற்படுகிறது. 1996 ஜூன் மாதம் தொடங்க உள்ள கல்வி ஆண்டில் ஐந்து, ஆறு ஆகிய இரண்டு வகுப்புகளுக்கு, ஒவ்வொரு வகுப்பிலும் 40 மாணவர்கள் மட்டுமே சேர்த்துக் கொள்ளப்பட்டு இத்தகைய தனிப்பள்ளி துவங்குகிறது. தொடர்ந்து பள்ளி இறுதி ஆண்டு வகுப்பு வரை இவர்கள் இத்தகைய கல்வி பெற வசதிகள் செய்து கொடுக்கப்படும்.

எண்ணிலடங்கா புத்தம் புதுத்திட்டங்களைப் புகுத்தி மக்கள் சேவையே மகேசன் சேவை என்பதை வலியுறுத்தி வரும் பெர்க்ஸ் பள்ளியே , வாழ்க உன் பணி! உனக்கு எங்கள் மனமார்ந்த வெள்ளி விழா வாழ்த்துக்கள்!

# காதல் கட்சி

"இது மாதிரி விவகாரங்களிலே நீங்க அவசியம் தலையை நுழைச்சுக்கணுமா?"

என் மனைவி வந்தனா கேட்டபோது, நான் அந்தக் கேள்விக்கு எந்தவித முக்கியத்துவமும் அளிக்க வில்லை.

"நான் பேசினால் அசோக் தனக்கு அனுகூலமாய் இருக்கும்னு நினைக்கிறான். அவனும் தீப்தியும் ஒருத்தரை ஒருத்தர் விரும்புகிறார்கள். இந்தக் கல்யாணம் நடப்பது நிச்சயம். எல்லாம் சம்பிரதாயப்படி நடந்தால் அசோக்கின் பெற்றோருக்குச் சந்தோஷமாக இருக்கும்."

அசோக்-தீப்தி இருவரின் பெற்றோருக்கும் பொதுவான நண்பன் நான்.

"அசோக்கின் அம்மா சுசீலாவுக்கு அவ்வளவாய் நல்ல பெயர் இல்லே!" என்றாள் வந்தனா.

"எஸ்- தெரியும்! பப்ளிக் லைஃப்லே நுழைஞ்சுட்டா ஜனங்க அவங்ககிட்டே பர்ஃபெக்ஷனை எதிர்பாக்கிறாங்க. சின்னதாக ஒரு குறை இருந்தால் கூட அதை பூதக் கண்ணாடி வெச்சு விளம்பரப்படுத்தறாங்க. சுசீலா ஒரு பிரபல சமூக சேவகி இல்லையா! உலகம் அப்படித்தான் விமர்சனம் பண்ணும். அதை எல்லாம் நாம் கண்டுக்கவே கூடாது."

"என்னவோ செய்யுங்க. உங்க இஷ்டம்!" வந்தனா அலுப்புடன் பின் வாங்கினாள்.

அன்று மாலை நான் அசோக் வீட்டுக்குப் போன போது, சுந்தரமும் சுசீலாவும் வரவேற்பறையில் உட்கார்ந்து டீ.வி. பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"அடடா! வாங்க விஜயன்! ஏது அபூர்வமாய் இந்தப் பக்கம்?"- சுந்தரம் வரவேற்றார். சமையல்காரரிடம் சொல்லி காபி வரவழைத்துக் கொடுத்து உபசரித்தார்.

நான் காபியை அருந்தி முடிப்பதற்குள் சுசீலாவுக்கு இரண்டு முறை டெலிபோன் அழைப்பு வந்தது.

"மிஸ்டர் சுந்தரத்தைவிட நீங்கதான் அதிக பிஸிபோல இருக்கு!"என்று ஐஸ் வைத்தேன்.

"அப்படித்தான்னு வெச்சுக்கங்க!" சுசீலா சிரித்தாள்.

"இரண்டு பேரும் நல்ல மூடில் இருக்கிறார்கள், ஆரம்பிக்கலாம்" என்று எண்ணி, பின்னால் புத்தக அலமாரியைக் குடைகிற பாவனையுடன் நின்ற அசோக்கைப் பார்த்தேன்.

"பெஸ்ட் ஆஃப் லக்' என்று ரகசியமாய் கையசைத்தான் அவன்.

"தீப்தியை உங்களுக்குத் தெரியுமா?"

"யாரது?" என்றாள் சுசீலா.

"அசோக் உதவி மானேஜராய் இருக்கிற கம்பெனியிலேயே ரிசப்ஷனிஸ்டாய் வேலை பார்க்கிறாள்."

"ஓ... தெரியாது!"

"தீப்தியின் அப்பா நடேசன் என்னுடன் வேலை பார்க்கிறார். உங்களை மாதிரி அவரும் எனக்கு ரொம்ப நாளாய் பரிச்சயம்."

"ஐ ஸீ..."

"தீப்தி, அவரது மூத்த பெண். மூன்று பெண்கள் அவருக்கு. தீப்திக்கு இப்போ வரன் பார்க்கிறார். 'நல்ல இடமாய் சொல்லுங்கன்னார்' சட்டுனு எனக்கு நம்ம அசோக் ஞாபகம் தான் வந்தது. அவர்கிட்டே சொல்றதுக்கு முன்னாடி உங்களை எதுக்கும் ஒரு வார்த்தை கேட்டுடலாமேன்னு நினைச்சேன்."

ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணம் என்றால், என் முதல் பொய் ஆரம்பமாகிவிட்டது. தீப்தியின் அப்பா வரன் பார்க்கவும் இல்லை. என்னிடம் சொல்லவும் இல்லை!

சுசீலா பதில் பேசவில்லை.

நான் சொன்ன விஷயம் அவள் சுவாரஸ்யத்தை அவ்வளவாகத் தூண்டவில்லை என்று தோன்றியது.

அசோக் அவளிடம் தன் காதல் விஷயமாகப் பேச ஏன் தயங்கினான் என்பது புரிந்தது. இருந்தாலும் அதை நான் கவனிக்காதவன் போல், "என்ன சொல்றீங்க?" என்றேன்.

"அசோக்குக்குப் பிடிச்சாப் பார்க்கலாம்" என்றாள் அவள்.

எனக்கு அந்த வார்த்தையே போதுமானதாக இருந்தது.

"தீப்தி நல்ல பெண். தெரிஞ்ச குடும்பம். என் சிநேகிதர் உங்களை வந்து பார்ப்பார்.."

எடுத்த எடுப்பிலேயே நடேசன் தயங்கினார்.

"எங்க அந்தஸ்துக்கு அத்தனை செல்வாக்கான குடும்பம் சரிப்படுமா சார்?"

"முயன்றுதான் பாருங்களேன்!"

"வந்து..."

"ப்ளீஸ், மிஸ்டர் நடேசன். நோ ஆர்க்யுமென்ட்ஸ்!"

பண்ணிட்டு சேர்த்து வையுங்கன்னு கெஞ்சினே! இப்போ, வரமாட்டேன்னு டிராமாவா போடறே?' என்று அவனை முறைத்தேன், செல்லமாக.

விஷயம் எதுவுமே தெரியாத சுசீலா, அவன் பெண்ணைப் பிடிக்கவில்லை என்று நிச்சயம் நிராகரித்து விடுவான் என்று எதிர்பார்த்தாள்.

அசோக்குக்கு தீப்தியைப் பார்த்ததுமே பிடித்து விட்டது.

நடேசனும் அவர் மனைவி வசுதாவும் சம்பிரதாயப்படி அசோக்கின் பெற்றோரைப் பார்க்கப் போனார்கள்.

கிளிப்பிள்ளையாய் நான் சொல்லிக் கொடுத்த வசனங்களை ஒப்பித்தார்கள்.

அசோக் நாடகத்தின் ஒரு பகுதியாய், 'பெண்ணைப் பார்க்க வரமாட்டேன்' என்று முரண்டு பிடித்தான். நானும் அவனை ரொம்பவும் சிரமப்பட்டு சம்மதிக்க வைக்கிறவனைப் போல் நடித்தேன்.

"உங்களுக்குத் தெரிஞ்சவங்களா இருக்கலாம் அங்கிள். ஆனால் பெண் எனக்குப் பிடிச்சாத்தான் சரின்னு சொல்லுவேன்."

அசோக் பிகு பண்ணினான்.

மனசுக்குள் 'படுவா ராஸ்கல்! தீப்தியை காதல்

லக்ஷ்மி ரமணன்



"கொடுக்கல் வாங்கல் ஏதாவது...?"

"நத்திங் டூயிங். நான் ஒரு சமூக சேவகி. வரதட்சணைக்கு எதிராய்க் கொடி பிடிக்கிறவள். நான் வரதட்சிணை வாங்குவதாவது? மருமகளே வீட்டுக்கு வருகிற லட்சுமி. அது போதும்!"

தீப்தியின் தாய் வசுதாவுக்கு சம்பந்தியம்மாளைப் பற்றி ஏகப் பெருமை.

"இப்படியொரு மாமியார் கிடைக்க என் பெண் ரொம்ப அதிர்ஷ்டம் செய்திருக்கணும்" என்று வார்த்தைக்கு வார்த்தை புகழ்ந்தாள்.

"முப்பது பவுன் நகை. நாலு பட்டுப் புடைவை. லட்டு, அதிரசம், மைசூர்பாகு முறுக்கு எல்லாம் அம்பத்தி ஒண்ணு வெச்சிடறோம். எதுவுமே இல்லாமே கலியாணம் பண்ணுவாளா? பெண்ணுக்கு நாலு கல்வெச்சு நவீன டிசைனில் வைரத்தோடு போடுவதாக இருக்கோம்!"

நடேசனும் வசுதாவும் பிள்ளை வீட்டார் கேட்காமலேயே விளம்பரப்படுத்திக் கொண்டார்கள்.

திருமணத்துக்கு இரண்டு நாள் முன்பு நடேசன் என்னிடம் வந்தார். முன்னால் நின்று கையைப் பிசைந்தார்.

"என்ன விஷயம்?"

"நினைச்ச அளவுக்குப் பணம் புரட்ட முடியல்லே. அதனால் நகை பதினைஞ்சு பவுன் தான் போட முடியும்" என்றார்.

"இதை பிள்ளை வீட்டார்கிட்டே நேரடியாச் சொல்லிடுங்களேன்? அவங்க நல்ல மாதிரி, இதை எல்லாம் பெரிய குறையாய் நினைக்கிற டைப் இல்லே!"

"புடைவையும் ரொம்ப விலையாய் இருக்கு. ரெண்டுதான் வாங்கியிருக்கோம். மிச்சத்தை பாலியஸ்டர் வாங்கி அட்ஜஸ்ட் பண்ணிட்டோம்."

"....."

"அமெரிக்கன் டைமண்ட் வெச்ச தோடு..."

"நடேசன்!"

"எனக்கு இன்னும் ரெண்டு பெண் இருக்காங்க சார். வைரம் போட்டுக் கட்டுப்படியாகாது."

"ப்ளீஸ், இதெல்லாம் ஏன் என்கிட்ட சொல்றீங்க? உங்க சம்பந்திகிட்டயே நேரடியா சொல்லிடுங்க. தவிர, இதெல்லாம் உங்களுக்கு முன்பே தெரியாதா? எதுக்காக அவங்ககிட்ட வாக்குக் கொடுக்கணும்? பின்னால மனஸ்தாபம் வந்ததுன்னா எல்லாருக்கும் கஷ்டம்."

"தப்பு தான் சார். ஏதோ உற்சாகத்துல... அவசரத்துல..."

எனக்கு மிகவும் தர்ம சங்கடமாகப் போய் விட்டது.

கலியாணத்திலும் கான்ட்ராக்ட் கொடுத்த சமையல்காரர்களிடம் சரியாக விருந்தினர் எண்ணிக்கையைச் சொல்லாததால், மூன்றாம் பந்தியில் உட்கார்ந்த சம்பந்தி களுக்கே சாப்பாடு இல்லை!

சமைக்க நேரம் இல்லாமல் ரகசியமாய் ஹோட்டலிலிருந்து காரியரில் சாப்பாடு வந்தது!

சுசீலாவும், சுந்தரமும் வாயைத்திறக்க வேண்டுமே? முகத்திலிருந்த புன்னகை மாறவே இல்லை. ஒரு கடுப்பு.... சிடுசிடுப்பு கோபம்... எதுவுமே இல்லை!

எனக்கு மட்டும் பயம்.

எரிமலை இன்றில்லா விட்டாலும் என்றாவது வெடிக்கத் தான் போகிறது!

'கடவுளே! பிரியப்பட்டு தீப்தியும் அசோக்கும் மணந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் இல்லறம் நன்றாக இருந்தால் போதும்' என்று வேண்டிக் கொண்டேன்.

கல்யாணம் ஆனவுடன் புதுமணத் தம்பதிகள் தேனிலவுக்கு கோவா போனார்கள்.

# கொசுவத்தியா ஜாக்கிரதை!

கொசுக்களை விரட்டும் சாதனங்களில் (வத்தி, வில்லை முதலியன) 'அல்லெத்ரின்' என்ற பூச்சிக் கொல்லி உபயோகப் படுத்தப்படுகிறது. இதனால் உபயோகிப்பாளரின் உடல் நலம் எவ்வளவு தூரம் பாதிக்கப்படுகிறது என்பது சர்ச்சைக்குரிய விஷயமாகவே இருந்து வருகிறது.

வில்லைகளில் அதிகபட்சம் 4 சதம் அல்லெத்ரின் இருக்கலாம். வத்தியில் அதிகபட்சமாக 5 சதம் இருக்கலாம் என்று வரையறுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இதுவரை ஒரே ஒரு நிறுவனம்தான் அங்கீகாரம் பெற்றிருக்கிறது.

அல்லெத்ரினால் புற்றுநோய் முதலிய வியாதிகள் மனிதர்களுக்கு (குறிப்பாக குழந்தைகளுக்கு) ஏற்படும் அபாயம் உள்ளது என்றும் அபிப்பிராயம் வெளியிடப்பட்டிருக்கிறது.

இவ்விதமாக மாற்றுக் கருத்துக்கள் இருக்கும் போது கொசுவலையை உபயோகிப்பதே சிறந்தது.

நன்றி : பறம்பை நுகர்வோர் குரல்

தகவல் : நாஞ்சில் சு. நாகராஜன்

நானும் அலுவலக வேலையாக பம்பாய் போக வேண்டி வந்தது. திரும்ப, பதினைந்து நாட்களாயின.

வந்ததும் வந்தனாவை, அசோக்–தீப்தியைப் பற்றித்தான் விசாரித்தேன்.

"அவங்களைப் பத்தி நியூஸ் தெரியாது. ஆனால் சுசீலா உங்களுடன் பேசணும்னு ரெண்டு மூணு முறை போன் செய்தாங்க."

"எதுக்கு?"

"எனக்கெப்படித் தெரியும்?"

அன்று மாலையில் சுசீலா– சுந்தரம் இரு வரையும் பார்த்து விட்டு வரக் கிளம்பினேன்.

வாசலில் புதிதாய் கூர்க்கா நின்றான்.

"யார் நீங்க?" விசாரித்தான்.

"சுந்தரம் ஐயாவுடைய சிநேகிதன் 'விஜயன்'னு பேரு."

"உங்களை உள்ளே விடக் கூடாதுன்னு அம்மா சொல்லி இருக்காங்க."

"ஏன்?"– அதிர்ந்தேன்.

"காரணம் தெரியாது சார்."

"அசோக்–தீப்தி நல்லா இருக்காங்களா?"

"அவங்க தனியாய் கே.கே. நகர்லே பிளாட் பார்த்துக்கிட்டு போயிட்டாங்க."

நான் வீட்டுக்குப் போய் போன் செய்த போது சுசீலாதான் எடுத்தாள். என் குரலைக் கேட்டதும், "நீ..... ஒரு சிநேகிதன்தானா? ரிசீவரை வை கீழே.... என்ன தைரியத்திலே போன் பண்ணினே?"

ரிசீவரை நான் வைக்குமுன் அவள் வைத்து விட்டாள்.

எனக்குப் புரிந்தது.

அசோக்கின் பெற்றோர்களுக்கு என்மேல் எக்கச்சக்க கோபம்! ஏன் என்று நான் ஆராய வில்லை.

அது, கவரிங் நகையால் இருக்கலாம். பாலியஸ்டர் புடைவை வாங்கிய நடேசனின் சின்னத்தனத்தால் இருக்கலாம். அமெரிக்கன் டைமன்ட் தோடுகளால் இருக்கலாம். சம் பந்திகளுக்கு சாப்பாடு கூட சரியாகப் போடா மல், அதைப் பற்றிக் கொஞ்சம் கூட அலட்டிக் கொள்ளாத நடேசனின் நடத்தையால் இருக்க லாம். திருமணம் ஆன கையோடு தனிக்குடித் தனம் போய் விட்ட தீப்தியின் மீது ஏற்பட்ட எரிச்சலினால் கூட இருக்கலாம்!

வீடு கட்ட அஸ்திவாரம் போடும்போது நிறைய உள் மண்ணை எடுத்து வெளியே தள்ள வேண்டி இருக்கிறது. அப்போது தான் செங்கல் உள்ளே உட்காரும். நான் தள்ளப்பட்ட மண்!

'அசோக் தீப்தியின் இல்லற அஸ்திவாரம் உறுதியாக அமைந்தால் சரி!' என்று நினைத்துக் கொண்டேன்.



"தேசிய நீரோட்டத்தில் கலந்துக்க ஏன் யோசிக்கிறீங்க?"

"எனக்கு நீச்சல் தெரியாதுங்களே!"

- ஞா.ஞானமுத்து



"நான் கரப்பான் பூச்சியை விட 'கேவலமா' போயிட்டேனா சார்?"

"சே...சே... யார் அப்படி சொன்னது?"

"பாருங்க. எனக்குப் பயப்படாத என் மனைவி, கரப்பான் பூச்சிக்குப் பயப் படறாளே...?"

– ஆர். வசந்தகுமார்

"தலைவரு படா கில்லாடிப்பா. கூட்டத்துல கணிசமான தேர்தல் நிதி வசூல் ஆகலைன்னு வச்சுக்கோ, அதுக்கும் ஒரு மாற்று ஏற்பாடு செய்யச் சொல்லியிருக்காரு."

"என்ன?"

"ரகசியமா நமக்கு தெரிஞ்ச நூறு பிக் பாக்கெட் ஆசாமிகளை கூட்டத்தில விடச் சொல்லியிருக் காரு...."

– நெய்வேலி ஜீவி



# ஹவாலா



• எங்கள் தலைவர்கள்
இந்தியத் தரத்தில் இருந்த
ஊழல்களை
இப்போது
உலகத் தரத்திற்கு
உயர்த்தி விட்டார்கள்.

இன்று
உலக ஊழல் சந்தையில்
இந்தியாவின் ஹவாலா ஊழலுக்கே
முதல் இடம்!

• எங்கள் தலைவர்களில் சிலர்
தேசிய அரசு
அமைக்க விரும்பினார்கள்
அதற்கு வெள்ளோட்டமாக
ஒரு தேசிய ஊழலை
அறிமுகம் செய்திருக்கிறார்கள்
ஆம்.
சர்வ கட்சியும் சங்கமம்
ஹவாலா மோசடியில்தானே!

• இன்றைய ஊழல்களை
நாளைய ஊழல்களால்
மறக்கச் செய்யும்
சாகசக் கலைஞர்கள்
எங்கள் தலைவர்கள்
பாருங்களேன்.
சுக்ராமுக்கு சுக்ரதிசை.
ஹவாலா சந்தடியில்
தொலைபேசி (ஊழல்) சத்தமே
தொலைந்து போனது.

• எத்தனை ஊழல்கள்
வந்தால்தான் என்ன?
விடிந்தால்,
வீடியோ பார்க்க வேண்டும்
செயற்கைக் கோள்களுக்குள்
சிறகடிக்க வேண்டும்.

ஆதலால்
நாளை
இந்த ஹவாலாவை மறந்து
இன்னொரு
உஜாலாவுக்கு மாறிவிடுவார்கள்
எங்கள் மக்கள்.



- கோ. வெள்ளைச்சாமி

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.




வேறு பல மேலதிகாரிகளுக்கும் உயர் பதவி வகிக்கும் நபர்களுக்கும் தொடர்பு இருப்பதாகக் கருத வேண்டியுள்ளது...' என்று கூறியிருக்கும் சென்னை உயர் நீதி மன்றம், மேற்கூறிய ஆதாரங்களின் அடிப்படையில் பிறப்பித்திருக்கும் விசாரணை உத்தரவு மிகவும் முக்கியம் வாய்ந்ததாக அமைந்திருக்கிறது.

● ஒரு கடிதத்தையே மனுவாகக் கருதிச் செயல்பட நீதிமன்றம் முடிவு செய்திருப்பது, பிரச்னையின் தீவிரத்தை உணர்த்துகிறது.

● சி.பி.ஐ.யில் சூப்பரின்டென்டன்ட் அந்தஸ்தில் உள்ள ஓர் அதிகாரி விசாரணையை நடத்த வேண்டும் என்றும் உயர்நீதிமன்ற உத்தரவு தெளிவாகக் குறிப்பிடுகிறது.

● தமிழக அரசின் அனுமதி இந்த விசாரணைக்கு அவசியமில்லை என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

● மதுரை போலவே மற்ற மாவட்டங்களிலும் ஜவகர் ரோஜ்கர் யோஜனா நிதி கையாடப்பட்டிருக்கக் கூடும் என்பதால், அனைத்து மாவட்டங்களிலும் விசாரணை நடத்தப்பட வேண்டும் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

இவற்றைப் பார்க்கும்போது, தமிழக அரசிடம் உயர்நீதி மன்றம் எவ்வளவு தூரம் நம்பிக்கையிழந்து போயிருக்கிறது என்பது தெளிவாகிறது.

இந்தத் தீர்ப்பைப் படித்த கையோடு, தலையங்கத்தின் ஆரம்பத்தில் இடம் பெற்றுள்ள அமைச்சர் இந்திரகுமாரியின் புகழுரையையும் படித்துப் பார்த்தால்... ஜெயலலிதாவுக்கு அவரது ஜால்ராக்கள் எவ்வளவு கவனமாக 'மேக் அப்' போடுகிறார்கள் என்பது புரியும்!

# இடம்

சுப்ரமணியன் ரவிச்சந்திரன்

**தா**ம்பூலம் வாங்கியாயிற்று. சில சில்லறை பர்ச்சேஸ்கள் முடிந்ததும் ஊரைப் பார்க்க சவாரிதான்.

முகுந்தன் தோளைத் தொட்டான். "என்னடா... போக வேண்டியதுதானே! ஏதாவது சில்லுண்டி வேலை வைத்திருப்பாயே?"

''ம்... லஸ்ஸில் செகன்ட்ஸ் பனியன்... அம்மாவுக்கு ஓடோப்ளவர் மாத்திரை... போனதரமே வந்தும், விட்டுப் போன கோல நோட்டு.... இத்யாதி, இத்யாதி."

ஒவ்வொரு பயணத்தின் போதும் லிஸ்டும் கூட வரும். முழுலிஸ்டையும் வாங்க வேண்டுமென்ற கட்டாயமோ, வாங்கிய தாகச் சரித்திரமோ இல்லை. இன்னும் சொன்னால் லிஸ்டில் இல்லாததையே வாங்க நேரிடும். அடுத்த தடவை என்ற சமாதானம் எதற்கு இருக்கிறது? ஐந்தரை பாயிண்ட் டு பாயிண்டைப் பிடித்தால் எட்டு மணி நேரத்துத் தூக்கத்துக்குப் பங்கம் இராது.

"என்ன யோசனை? நார்டன் ஸ்ட்ரீட்ல என் ப்ரண்டைப் பாக்கணும். டக்னு பர்ச்சேஸை முடி."

''அதில்ல முகுந்தா... அஞ்சரை பாய்ண்ட் டு பாய்ண்டைப் பிடிச்சு...."

"கள்ளன் மாதிரி பாதி ராத்திரி போகணும். அழகா செங்கோட்டா பாசஞ்சர்... ஜம்னு காலம்பற காப்பி சாப்பிடப் போகலாம்! முதல்ல பர்ச்சேஸை முடி."

இம்முறை லிஸ்டில் உள்ளதே வாங்கப்பட்டது.

**மு**குந்தனின்



ார்டன் தெரு நண்பர் பேச ஆரம்பித்து யாழ்ப் பாணம், ரஜினி என்று ஒரு சவட்டு சவட்டி விட்டார். முகுந்தன், கிருஷ்ணனின் வாயைப் பார்த்த யசோதையைப் போல இவரது வாயையே பார்த்துக் கொண்டிருந்தான்.

இவனுக்கு நேரமாகி, வேறு வழியில்லை என்று படவே, எழுந்து நின்றான். அவரது பேச்சுச் சங்கிலி பவீனமானது. வினாடிகளில் நன்றி நவின்று, ஸ்டேஷனை நோக்கி ஓட ஆரம் பிக்க வேண்டியதாயிற்று.

வண்டி லேட்டாக இருந்தால் நலம். காலேஜ் நாளில் மத்தியான ரயில் ஒன்று எப் போதுமே தாமதமாக வரும். மதிய வகுப்பு இல்லாதவர்கள் ரயிலின் தாமதத்தை வைத்து காலை வகுப்பைக் கடைசியில் ஒன்றையோ இரண்டையோ துண்டித்து விட்டு வருவார்கள். காலையில் இறங்கியதும் அது எவ்வளவு நேரம் தாமதம் என்று கேட்டு விட்டுத்தான் வகுப்பிற் குப் போவார்கள்.

இன்று கால் மணி லேட்.......

"ரிஸர்வேஷன்ல பார்றா!"

"சீச்சி... ஜெனரல்லியே காத்து வாங்கும்!" என்றான் முகுந்தன்.

ப்ளாட்பாரத்தின் திடீர்ச் சுறுசுறுப்பு, தொலைவில் வரும் ரயிலை அறிவித்தது. இவன் பிரயாணம் செய்யும் எல்லா தினங்களிலும் ஏதேனும் கல்யாண கோஷ்டியும் ரயிலுக்கு வரும். இன்றும் வெற்றிலைத் துப்பலும், சீண்டலுமாய் ஒன்று. இன்று இவன் போன நண்பனின் கல்யாணத்தில் விட்டுப் போனது இதுதான். நண்பனின் அக்கா வகையறா வர வில்லை. தன் பெண்ணைச் சீந்தவில்லை யென்று கோபமாம் அவளுக்கு.. அவள் ஏன் வரவில்லை என்ற துக்க விசாரிப்பிலேயே கல் யாணம் கழிந்தது.

இறக்கை முளைத்தாற்போல, பக்கவாட்டில் தொங்கிய மனிதர்களைச் சுமந்தபடி, வந்தது வண்டி... இந்த வண்டியில்தான் போக வேண் டுமா... இதில் போய்ச் சேருவது முடியுமா?

முகுந்தன் ஓடுவது கண்டு தொடர்ந்தான். அந்தக் கல்யாண கோஷ்டி ரிஸர்வ் செய்து விட்டது போலிருக்கிறது... ப்ளாட்பாரமே கடைசி நேரத்துடிப்பில் இருந்தது.... அலட் டாமல் யாராவது இருக்கிறார்களா என்று பார்க்க ஆவலாயிருந்தது.

எதிரில் இரைக்க ஓடிவந்தான் முகுந்தன்... "ப்ச்! செங்கல்பட்ல இடம் தர்றேன்றாரு டி.டி..... எதுலியாவது தொத்து."

அடப்பாவி!

ஆம்பர், பச்சைக்கு மாறப் போகிறது. இவன் பெயரை உரத்து கூவி ஒரு பெட்டிக்குள் முகுந் தன் புகுந்து கொண்டான்.

'பாம்...'

ஹாரனா? அபாய அறிவிப்பா?

"நகருங்கய்யா, அட... நகருங்கறேன்" ரயிலையே ஸ்பரிசிக்காத அந்த நபர் விரட்டி னார். இவன் சிரிப்பதா, முறைப்பதா என்று முடிவு செய்யாமல் காலின் கீழுள்ள படியைத் தேடினான்.

ரயில் வேகம் எடுக்கும் போதுதான் குதித்து விடலாமா என்கிற யோசனை தோன்றியது. மொத்த எடையையும் கை தாங்குமா என்ற கிலி புறப்பட்டது. சர்வ சாதாரணமாய் எத் தனையோ பேர் தொங்குகிறார்கள். நம்மால் முடியாமல் போனது ஏன்? எத்தனை மக்கள்? இப்போதே இப்படியானால் இன்னும் இருபது வருடங்களில்....?

"பையக் குடுடா!" என்றான் உள்ளிருந்து





**"மாமியார் மருமகள் யுத்தம்'ன்னு ஒரு படம் எடுத்தீங்களே, அது என்னாச்சு?"**

**"அதைதான் 'வீட்டில மடிசார், வெளியில கூடி தார்'ன்னு டைட்டிலை மாத்தி ரிலீஸ் பண்ணிட்டமே!"**

**— தஞ்சாவூர் ராஜபாரதி**

கைநீட்டிய முகுந்தன் என்றொரு தேவ தூதன். இம்முறையும் பை உரசியது. முன்னாலிருந்தவர் ஆட்சேபிக்கும் பிரக்ஞையில் இல்லை.

ஏதோ ஒரு ஸ்டேஷன் சுவரில் கறுப்பில் 'கடவுள் இல்லை'. அரை வெளிச்சத்தில்.

சின்ன வயதில் இது போன்ற சுவர் வாசகத்தில் ஈர்க்கப்பட்டு அப்பாவிடம் கேட்டான். 'அன்பே சிவம் என்றால் சிவன் கையில் சூலம் எதற்கு?' 'உன் கண்ணை நோண்டத்தான்டா. வெட்டிப் பயலே!' என்றவள் அம்மா - அப்பாவின் சார்பில்.

இப்போதும் சிரிப்பு வந்தது. முகத்தில் சிலீர். நாலாவது பெட்டியில் யாரோ கை கழுவுகிறார்கள். இவனுக்கு முன்னிருந்து ஒரு சக தொங்குநர், "லேய்... யார்றாவன்? ஆளு நிக்கறது தெரியாம!"

இதே ஆள் நாலாவது பெட்டியில் கை கழுவி, இதே போல யாராவது கத்தினால், காதில் விழும்பட்சத்தில் இவனுடைய பதில் என்னவாக இரக்கும்? 'அதான் தண்ணி வருதுன்னு தெரியுதில்லை? தலைய உள்ளுக்கிழுத்துக்கிட்டா என்ன?'

**செ**ங்கல்பட்டு சந்தி...

டி.டி. ஒரு ஜன்னலில் அமர்ந்து யாரையோ அதட்டிக் கொண்டு இவர்களுக்கு முதுகைக் காட்டிக் கொண்டிருந்தார். கூப்பிட்டும் திரும்பாமலிருந்தார். இவன் சக்தியைத் திரட்டி 'சார்' என்றான். டி.டி. திரும்பினார்.

"யெஸ்?"

"சார், இங்க ரெண்டு சீட் தர்றதா சொன்னீங்க".

முகுந்தனால் எப்படி முகத்தை மலர வைக்க முடிகிறது?

டி.டி. விழித்தார். நம்பவில்லையோ....

"சொன்னேன். இங்க ஆள் வந்திடுச்சே!"

"வாடா" என்றவனை, முகுந்தன் முறைத்தான். அதன் பொருள் 'பெசிமிஸ்ட் முட்டாளே..'

"கொஞ்சம் பாருங்க" என முகுந்தன் கூறவும், டி.டி. வேறு இடம் நோக்கி நகரவும், 'பாம்' அலறவும் தொடுத்தாற்போல அமைந்தன.

ஓடு......

**மு**குந்தன் ஏறிய கம்பார்ட்மெண்ட்டில் கூட்டம் அதிகமாயுள்ளதாய்ப் பட்டது. அவனுக்கென்ன... அவனை அண்டி, பின்னால் ஏறி, கை நோகத் தொங்குவது யார்? அறிவிப்பில்லாமல் முகுந்தன் ஏறிவிடுகிறான்.

பெட்டியின் உள்ளிருப்பவர்கள் மண்ணின் மைந்தர்களைப் போல.... ஏன் வெளியே இருப்பவரைப் பார்க்க வேண்டும்... காற்றில் சட்டைப்பை படபடத்தது. ரூபாய் பறக்காமலிருக்க வேண்டும்.

கழுத்துப் பட்டை வலிக்கையில் கூடுதல் உபத்திரவமாக கீழே அமர்ந்திருந்தவன் பீடியைப் பற்ற வைத்தான். குமட்டியது... அவனோ அதற்கும் அவனுக்கும் தொடர்பில்லாத நிலையில் இருந்தான்....

**இ**டையில் இரண்டு மூன்று ஸ்டேஷன்களில் வண்டி நிற்காமல் போனது. தங்கள் ஊரிலும் நிற்க வேண்டும் என்று, என்றுதான் மறியல் செய்யப் போகிறார்களோ.

உள்ளே பலகையில் ஒரு பெண், கால் மாட்டில் கணவனைக் காவல் வைத்து விட்டு, காலை நீட்டித் தூங்கிக் கொண்டிருந்தாள். கணவன் அமர்ந்த நிலையில் சாமியாடிக் கொண்டிருந்தான். யாராவது அவளை அமரச் சொல்லலாம். சொல்ல மாட்டார்கள். பலவீனமான பால்!

முகுந்தன் காலைக் குறுக்காகவும் இல்லாமல் சப்பணமும் இடாமல் யோகாசனக்காரன் போல அமர்ந்திருந்தான். அவனருகில் வைத்திருந்த இவனது மாம்பழப் பையை ஒரு புஸ்தி மீசைக்காரன் சர்வ சுதந்தரமாக நசுக்கிக் கொண்டிருந்தான்.

இன்னும் கொஞ்சம் இடம் கிடைத்தால் பரவாயில்லை... முட்டாள்கள்... கல்யாணம் என்று ஒன்று வைத்து அதற்கு அழைப்பு வேறு. இன்றைய மாப்பிள்ளையான நண்பனின் மீது ஒரு நிமிடம் சினம் மூண்டது.....

**வி**ழுப்புரம்....

இந்த அகாலத்திலும் ரயிலுக்கு வருகிறார்கள். எங்கோ கல்யாண மண்டப ஸ்பீக்கர் நாலைந்து பெண்களின் குரலுடன் சேர்ந்து பர்த்தாவைக் கிண்டல் பண்ணும் கதாநாயகியின் குரலை ஒலித்தது. பாவம் அவன். ஆயுளுக்கும் கோஷ்டி கானம்....

இறங்கி நடக்கலாம். பெஞ்சில் அமரலாம். இறங்கினால் மீண்டும் இடம் உத்தரவாதம் இல்லை.

முகுந்தன் தூங்கிக் கொண்டிருந்தான். சிலரால்தான் முடியும். வண்டியை நகராமல்



ரோஜாவை விரும்புகிறவன் அதன் முள்ளையும் மதிக்க வேண்டும்.
பெர்சியப் பழமொழி.
தகவல் : வயலூர் பா. குணா.

வைப்பதன் இம்சை யாருக்குப் புரிகிறது.

நான்கைந்து மூட்டைகளுடனும் குழந்தைகளுடனும் ஒரு கும்பல் இவன் வாசலுக்கு வந்தது.

"தடம் உடுங்க. பெண்டுக புள்ளைங்க இருக்கு!"

"யாருய்யாது? பிச்சக்காரன் ஊட்டுக்கு சனீஸ்வரன் விருந்துக்கு வந்தாப்பல. இங்கியே உறியடி உற்சவம். போய்யா அடுத்த பொட்டிக்கு!"

இடம் கேட்டவன் பேசவில்லை. அவனுடன் வந்த இளைஞன் தீவிரமாய்த் தோற்றமளித்தான்.

"யோவ்... எடம் இல்லாமயா சீட்டு குடுத்திருக்கான். ஒத்துய்யா.. அப்பன் வண்டியா இது. மஞ்ச சட்டை, ஒன்னத்தாய்யா....."

அதுதான் சரி என்பதைப் போல வழி கிடைத்தது. இவனும் உள்ளே போனான். இவன் இரண்டு முறை நகரச் சொன்ன போது யாரும் நகரவில்லை. இன்னும் இரண்டடி வைத்தால் முகுந்தன்.... "ஏய்யா முண்டுறே" என்று எரிந்து விழுந்த முன் ஆசாமியைக் கண்டு இவன் அரண்டான். பின்னாலும் போக முடியாமல் நின்றான். கழிவறை.... சாய முடியாமல் குறுக்கே கம்பார்ட்மெண்டின் கதவு....

'பாம்'.....

**அ**ப்பாடா....

"தொள்ளாயிரம் ரூவாய்க்குப் பார்த்தான். கடைசீல என்னாச்சுங்காணும்."

இடையில் ட்ராக் மாறிய இரைச்சலில் மனது பழசைத் தொடர்பு படுத்திக் கொண்டது.

இவன் வீட்டிற்கு வந்தவர் பொடி டப்பியை விட்டுப் போய்விட்டார்... டப்பா நிறைய பொடி. அப்பாவிற்குக் கொட்ட மனசில்லை. பழக்கமுமில்லை.. தாராள மனதுடன் பாலக்காட்டு நாராயணனிடம் கொடுத்தார்.

பா. நா. பெரிய தரக்கட்டுப்பாட்டாளர் என்பதை அப்போதே நிரூபிக்கும் தருணமாக அந்த வினாடி ஆயிற்று... மூடியைத் திறந்தவர், செத்த எலியைத் தொட்ட அருவருப்பில் முகம் கோணினார். கையோடு வாசல் சாக்கடையில் கொட்டினார். "இ பொடி சுகமில்லைங்காணும்."

அவர் போன பின்பு இவன் அப்பாவைக் கேட்டான்: "காணும் என்றால் என்ன பொருள்?"

கண்கள் எரிந்தன. பாய்ண்ட் டு பாய்ண்டில் போயிருந்தா இந்நேரம் கட்டையை நீட்டியிருக்கலாம். இந்தப் பாவி (தூங்குவதைப் பார்!) கெடுத்தான்.

**யா**ரோ தட்ட, நினைவுகளைக் கழற்றினான். வெற்றிலை வாயுடன் அந்த பாரி சரீர மனிதர் கழிவறைப் பக்கம் போக வந்திருக்கிறார். வெளிக் கதவை முணு முணுப்புக்கு அப்பாற்பட்டு, நகர்த்தி உள்ளே கதவைத் திறந்து, போய் விட்டார்.

ரூபாய்க்கு எட்டு என்கிறபடிக்கு 'ப்ளாச்சுளைக்காரன்' இவனைக் கூடையால் முகத்தில் கீறிவிட்டுப் போனான். புகை நுழையாத இடத்திலும் போலீஸ் நுழையும். போலீசும் நுழையத் திணறும் இடங்களில் 'ப்ளாச்சுளை' நுழையும்.

திருப்பாதிரிபுலியூரில் அப்பெண் சயனம் கலைத்து, பிற ஆடவர்கள் முன் உறங்கியதற்காக லஜ்ஜைப்பட்டு அவசரமாக எழுந்து உட்கார, மூவர் தன்யர்களாகி அமர இடம் கிடைத்தது. மூவரில் இவன் இல்லை.

கொஞ்சம் உட்கார்ந்தால் தேவலை. எவன் கேட்கிறான்.

**பொ**ழுது விடியும் அறிகுறிகள்... வானம், பால்காரர்கள், பேப்பர் ஏஜண்ட்கள், கோலம் போடும் சுமங்கலிகள்... தினசரிதான்... ஆயினும் இப்போது சிருஷ்டிக்கப் பட்டது போன்று தோற்றம்.

எங்கோ சீட்டுக் கச்சேரிக்கான காகிதத்தின் படபட... காலேஜ் நாளில் ரயில் பிரயாணத்தில் தினம் ரம்மி உண்டு... ராம்குமார் என்ற நண்பன். ஜெயித்தால் பிகானீர் சேட்டின் கடையில் பீடாவாய் வாரி இறைப்பான்... தோற்றால் யாரும் நெருங்க முடியாமல் வசவு.....

சிதம்பரம்...

நெரிசல் சற்றுச் சுலபமானது. அமர வாகாய் இடம் தேடினான். முகுந்தன் 'இங்க வாடா' என்றான்.

"நா வரட்டா... பஸ்ட் க்ளாஸ். கல்யாணம்னா இதான். செங்கோட்டா பாசஞ்சர்ல சுகமாரிடர்ன். தேங்க்யூ" என்றவாறே எதிர் திசையிலிருந்து வந்த அந்த வயதானவர் முகுந்தன் பக்கத்தில் அமர்ந்தார்.

"சார் ஆளு வருது" என்ற முகுந்தனை, இவன் தடுத்தான்.

"இட்ஸ் ஆல்ரைட்.... இன்னும் ரெண்டு ஸ்டேஷன்தான். சார் உக்காரட்டும்."

அவர் முகத்தில் 'தாங்ஸ்'. முகுந்தன் 'அட, பித்துக்குள்ளி'. உட்கார்ந்த வேகத்தில் கண்ணை மூடிக் கொண்டு, அவர் தூக்கத்தில் லயித்ததை ரசனையுடன் பார்த்துக் கொண்டிருந்தான்; கால் வலியையும் மீறி......

இதற்கேற்ப மகளிர் பூப்படைந்த முதல் ஒரு மாத காலத்தில் உண்ணக்கூடிய உணவுகளாக சித்தர்கள் வகுத்துக் கூறும் உணவுகளான காரரிசி பிட்டு - உளுந்தங்களி - உக்களி - வெந்தயக் களி - எள்ளுருண்டை - நல்லவெல்லம் - தேங்காய்த் திருகல் - அவல் - நெய் - வெல்ல வடை - பருப்பு வகைகள் இவற்றைத் தவறாது உண்ண வேண்டும்.

மேலும் மகளிர் மாதவிலக்கு ஆகும் ஒவ்வொரு முறையும் மேற்கூறிய உணவுப்பொருட்களை பயன்படுத்துவதோடு அந்த நாட்களில் எந்த வேலையும் செய்யாமல் ஓய்வு கொள்ளவேண்டுமென்றும் - அக்காலத்தில் புணர்ச்சியைத் தவிர்க்க வேண்டுமென்ற கருத்தில்தான் நம் முன்னோர் அவர்களை மாதவிலக்கு நாட்களில் வீட்டில் தனிமைப் படுத்தி வைத்தனர்.

சித்த மருத்துவர்
டாக்டர் A. ராமலிங்கம். பி.ஐ.எம்.

## தி.மு.க. எம்.எல்.ஏ. பரிதி இளம்வழுதியும் இ. காங்கிரஸ் எம்.எல்.ஏ. (சிதம்பரம் தொகுதி) அழகிரியும் சந்தித்து, இன்றைய ஆளுங்கட்சி பற்றியும் அரசியல் பற்றியும் விவாதம் செய்கிறார்கள்....

**பரிதி இளம்வழுதி :** கல்கி ஏற்பாடு செய்திருக்கும் இந்தச் சந்திப்புக்காக நீங்கள் என் வீட்டுக்கு வந்திருப்பது எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது.

**அழகிரி :** எனக்கும்தான். நீங்கள் நல்ல நண்பர் என்பது மாத்திரமல்ல; உங்கள் தந்தை இளம்பரிதி அவர்கள் மிகச் சிறந்த பேச்சாளர் என்று என் தந்தை அடிக்கடி சொல்லுவார். அப்படிப்பட்ட அரசியல் பாரம்பரியம் மிக்க உங்கள் வீட்டுக்கு வருவதில் எனக்கும் இரட்டிப்பு மகிழ்ச்சி.

**பரிதி :** காங்கிரஸில் எத்தனையோ சட்டமன்ற உறுப்பினர்கள் இருந்தாலும் உங்கள் மீது எனக்குத் தனிப்பட்ட பற்றும் பாசமும் அன்பும் மரியாதையும் உண்டு. காரணம், என்னைப் போலவே சட்டமன்றத்தில் துணிந்து ஆளுங்கட்சியை விமர்சிப்பதில் உங்களுக்கு நிகர் நீங்கள்தான். இருந்தாலும் இந்த விமர்சனங்களையெல்லாம் நீங்கள் மிகவும் தாமதமாகத் துவங்கியிருக்கிறீர்கள் என்பதுதான் என் வருத்தமெல்லாம்!



* அழகிரி

**அழகிரி :** ஆரம்பத்தில் ஜெயலலிதாவை நாங்கள் அன்னை இந்திரா காந்தியின் மறு உருவமாகத்தான் நினைத்தோம். அதுவொரு emotional thinking. ராஜீவ் கொலையுண்ட நிலையில், ஒரு மாநிலத் தலைவி தேசிய உணர்வோடு இருக்கிறாரே என்று வரவேற்றோம். ஆனால் அவர் பதவிக்கு வந்து முதல் முறையாக மாவட்ட ஆட்சித்தலைவர்கள் மற்றும் போலீஸ் உயர் அதிகாரிகளை அழைத்துப் பேசிய கூட்டத்தில் காங்கிரஸ் எம்.எல்.ஏக்களும் எம்.பிக்களும் எது சொன்னாலும் செய்யக்கூடாது என்று சொன்னார். இது அவருடைய முதிர்ச்சியின்மையின்

# மூப்பனார் மு
# கலைஞர்

வெளிப்பாடு என்று அந்த அதிகாரிகள் கருதியதால், முதலில் எங்களிடம் சொல்லத் தயங்கினாலும் பிறகு சொல்ல ஆரம்பித்து விட்டார்கள். உதாரணத்திற்கு, எனது சிதம்பரம் தொகுதியை எடுத்துக் கொண்டால் பெண்கள் பள்ளி சிதம்பரம் தொகுதியில் இருக்கிறது; ஆண்கள் பள்ளி மன்னார்குடி தொகுதியில் இருக்கிறது. பெண்கள் பள்ளியில் நடத்தினால் தொகுதியின் எம்.எல்.ஏ. என்கிற

முறையில் என்னை அழைத்தாக வேண்டுமே என்பதற்காக, எந்த விழாவாக இருந்தாலும் ஆண்கள் பள்ளியிலேயே நடத்த ஆரம்பித்தார்கள். ஜனநாயக நாட்டிலுள்ள ஒரு முதல்வர் இப்படியெல்லாம் நடந்து கொள்வது தவறல்லவா! அதோடு அ.தி.மு.க. ஆட்சிக்கு வந்து கூடிய முதல் சட்டமன்றக் கூட்டத் தொடரிலேயே ஜெயலலிதாவுக்கென்று எந்த விதமான லட்சியமும் கிடையாது; அவருக்கு மற்றவர்கள் மீது மாத்திரமல்ல; தம்மீதும் நம்பிக்கை கிடையாது என்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது. இப்படியொரு முதல்வர் இருப்பது அவர் சார்ந்த கட்சிக்கு மட்டுமல்ல; தேசத்துக்கே ஆபத்து என்பதால் அந்த முதல் கூட்டத் தொடரிலேயே அவர்களுடனாக உறவு முறிந்து விட்டதாகவே நான் முடிவுக்கு வந்து விட்டேன்.

**பரிதி :** அந்தம்மாவுக்கு லட்சியமே கிடையாது என்று சொல்வதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். ஒரு நாளைக்கு ஒரு கோடி ரூபாய் சம்பாதிப்பது என்கிற லட்சியம் உடையவர் அவர். (சிரிப்பு). முதல் சட்டமன்றக் கூட்டத் தொடரிலேயே நீங்கள் அப்படியொரு முடிவுக்கு வந்து விட்டதாகச் சொன்னாலும் மற்றவர்களின் நிலை அப்படியில்லை! பொதுவாகவே

* பரிதி இளம் வழுதி

# வர்?

# தமர்?



கேள்வி நேரத்தில் போது பாராட்டக் கூடாது; குற்றம் கூறக் கூடாது; நன்றி தெரிவிக்கக் கூடாது என்கிற மரபுகளையெல்லாம் தூக்கியெறிந்து விட்டு இப்போது எந்த மரபுதான் காக்கப் படுகிறது என்பது ஒருபுறமிருக்கட்டும் - 'ஆதி பராசக்தி, அங்காளபரமேஸ்வரி, அகிலாண்ட நாயகி, அனைத்துயிர்களின் தாயான புரட்சித் தலைவியின் ஆட்சியில் கொசு கடிக்கலாமா?' என்று ஓர் ஆளுங்கட்சி உறுப்பினர் முழ நீளத்துக்குத் துதிபாடி ஒரு கேள்வி கேட்பார். அதற்கு, 'காவிரி தந்த கலைச் செல்வி, நாவலந்தீவின் நாயகி, நானிலம் போற்றும் நம்பிக்கை நட்சத்திரம், வங்கக் கடலுக்கும் தங்கத் தாயாய் விளங்குகிற புரட்சித் தலைவியின் கருணையின்படி கொசுக்களை ஒழிப்பதற்குத் தக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும்' என்று சம்பந்தப்பட்ட அமைச்சரும் மீட்டர் நீளத்திற்குத் துதிபாடிவிட்டுப் பதில் சொல்லுவார். அவர்கள்தாம் அப்படி என்றால் உங்கள் காங்கிரஸ் உறுப்பினர்களுமா புகழ்வது? காங்கிரஸ் கட்சியின் தமிழகத் தலைவரான மதிப்புக்குரிய குமரி அனந்தன் அவர்கள் 'மண்ணாள வந்த பெண்ணரசி!' என்றார். சட்டமன்ற உறுப்பினர் பி.வி. ராஜேந்திரன் அவர்கள், 'நாங்



எஸ்.ஆர்.பி.தான்' என்று புகழ்ந்தாரோ அதே வாயால், பிறகு 'இவரைப் போன்ற அறியாமையும் முட்டாள்தனமும் மிகுந்த எதிர்க்கட்சித் தலைவரை நான் பார்த்ததேயில்லை!' என்று அவர் சொன்னார். 'ராஜீவ் காந்தி சிந்திய ரத்தத்தால் நாங்கள் ஆட்சிக்கு வரவில்லை; எங்கள் சொந்த செல்வாக்காலேயே வந்தோம்' என்றும் 'அதிகப்படியான லக்கேஜ்களை நாங்கள் கழற்றிவிட்டு விட்டோம்' என்றும் பேசினார். இப்படியெல்லாம் சொன்ன பிறகுதானே நீங்கள் வேறு வழியின்றி எதிர்க்க ஆரம்பித்திருக்கிறீர்கள்!

கள் டமாரமே அடிப்போம்!' என்றார். இன்றைக்கு ராஜ்ய சபா உறுப்பினராகியிருக்கும் சகோதரர் பீட்டர் அல்போன்ஸ் அவர்கள் தமக்கே உரிய இலக்கிய நயத்தோடு, 'நாங்கள் குங்குமம் சுமக்கும் கழுதைகள்' என்றார். இப்படியெல்லாமா புகழ்வது?

**அழகிரி** : எதிர்க்கட்சி என்றால் எதிரிக் கட்சியாகத்தான் இருக்க வேண்டும் என்று நீங்கள் நினைப்பது தவறு. தி.மு.க.வுக்கும் அ.தி.மு.க.வுக்கும் வேண்டுமானால் பங்காளிச் சண்டைகள் இருக்கலாம். எங்களுக்கு அப்படியல்ல.

**பரிதி** : எங்கள் எதிர்ப்புக்குப் பங்காளிச் சண்டை ஒன்றும் காரணமல்ல; தலைவர் கலைஞர் அவர்கள், ஜெயலலிதா ஆட்சிக்கு வந்ததும் ஆறுமாத காலம் எந்த விதமான விமர்சனமும் செய்யாமல் கால அவகாசம் கொடுத்தார். அதன் பிறகுதான் விமர்சனம் செய்ய ஆரம்பித்தார்.

**அழகிரி** : கலைஞர், ஜெயலலிதாவுக்குக் கொடுத்த ஆறுமாத கால அவகாசம் என்பது பெருந்தலைவர் காமராஜர் அவர்கள் தி.மு.க. ஆட்சிக்கு வந்த போது கொடுத்த கால அவகாசம்தான். ஜனநாயகத்தில் அப்படித்தான் நடந்து கொள்ள வேண்டும். அது போல்தான் நாங்களும் நடந்து கொண்டோம். காங்கிரஸ் உறுப்பினர்கள் ஜெயலலிதா அரசை ஆரம்பத்தில் புகழ்ந்தது உண்மைதான். இருப்பினும் எல்லை கடந்து புகழ்ந்து விடவில்லை. 'இந்த அரசு நல்லது செய்யுமானால் பாராட்டுவதோடு மட்டுமல்ல; அதை டமாரம் அடித்தும் சொல்வோம்' என்றுதான் பி.வி. ராஜேந்திரன் சொன்னாரே தவிர, 'இந்த ஆட்சி நன்மை செய்து விட்டது; அதனால் டமாரம் அடிக்கிறோம்!' என்று அவர் சொல்லவில்லை.

**பரிதி** : ஆனால் அவசியமான நேரத்தில் கூட, நீங்கள் ஜெயலலிதா ஆட்சியை எதிர்க்கவோ, கண்டிக்கவோ செய்யவில்லையே! இந்த முதல்வர் எந்த வாயால், 'சிறந்த எதிர்க்கட்சித் தலைவருக்குரிய இலக்கணத்தோடு திகழ்பவர்

**அழகிரி** : அப்படியல்ல! 91 - தேர்தலின் போது அ.தி.மு.க.வுடன் கூட்டு வைத்துக் கொண்ட நிலையில், நாங்கள் மக்களிடம் என்ன சொல்லி வாக்குக் கேட்டோம்? 'எங்கள் கூட்டணிக்கு வாக்களித்தால், அ.தி.மு.க. ஆட்சிக்கு வரும்; நாங்கள் எதிர்க்கட்சியாகச் செயல்படுவோம்' என்றுதான் சொன்னோம். உலகத்தில் வேறு எங்குமே - எந்தக் கூட்டணியுமே - மக்களிடம் இப்படிச் சொல்லி வாக்குக் கேட்டதில்லை. அப்படிப்பட்ட நிலையில் அவர்கள் ஆட்சிக்கு வந்தவுடனேயே எப்படி எதிர்க்க முடியும்? ஒரு வீட்டுக்குப் புது மருமகள் வருகிறாள்; அவள் தண்ணீர்க் குடத்தை 'டொக்' என்று வைத்துவிட்டாள் என்கிற காரணத்தாலேயே மாமியார் முரட்டுத்தனமாக நடந்து கொள்ள முடியுமா?

**பரிதி** : குடத்தை 'டொக்' என்று வைக்கவில்லை. குடத்தையே கல்லை வைத்து நசுக்க ஆரம்பித்தாள் என்கிற நிலையிலும் சும்மா இருக்கலாமா என்பதுதான்.....

**அழகிரி** : அப்படியொரு நிலைமை வந்து விட்ட போதுதான் நாங்கள் எதிர்க்க ஆரம்பித்து விட்டோமே! என்ன, நாங்கள் தோழமைக் கட்சியாக இருந்ததால் எதிர்ப்பிலும் ஒரு நிதானத்தைக் கடைப்பிடிக்க வேண்டியிருந்தது. நீங்கள் பங்காளிக் கட்சியாக இருப்பதால் இயற்கையாகவே உங்கள் எதிர்ப்பு மூர்க்கமாக அமைந்து விட்டது. அவ்வளவுதான் வித்தியாசம்! எப்படியோ, இரண்டு பேருமே எதிர்க்கிறோம். வரும் தேர்தலில் இந்த ஆட்சி அகற்றப்படப் போவதென்பதும் உறுதி. ஏனெனில் இந்த ஆட்சியாளர்கள் நினைப்பது போல், மக்கள் ஏமாளிகள் அல்ல. பாமர மக்கள் நிறைய இருந்தாலும் அவர்களுக்கு எழுதப்படிக்கத்தான் தெரியாதே தவிர, சிந்திக்கத் தெரியாது என்பதல்ல. வரும் தேர்தலில் நமது மக்கள் மௌனமாகவே சாதித்துக் காட்டுவார்கள்.



அதிமுகவுடன் கூட்டு கூடாது என்றுதான் தலைமையிடம் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

**பரிதி :** இந்த நிலையிலும் - ஆளுங்கட்சி தவறு செய்கிறது என்பது வெளிப்படையாகத் தெரிந்த நிலையிலும் - தட்டிக் கேட்டு நடவடிக்கை எடுக்க வேண்டிய மத்திய அரசு இன்னமும் நிதானம் காட்டுவது ஏன்?

**அழகிரி :** இந்த அரசு ஊழல் அரசு என்பது தெரிந்த விஷயம்தான் என்றாலும் அதற்கான நடவடிக்கைகளை எடுக்கிற போது நிதானம் காட்டுவது அவசியம். 'கலைக்கக் கூடாதா' என்று கேட்கலாம். அப்படிக் கலைத்தால் அப்போது ஊழல்கள் அடிபட்டுப் போய் அனுதாபம் பிறந்து விடும். ஆகவே, சட்ட ரீதியாக அவர்கள் தப்பிக்கக் கூடிய ஓட்டைகளையெல்லாம் அடைத்த பிறகுதான் நடவடிக்கை எடுக்க முடியும். அப்போதுதான் ஊழலை நிரூபிக்க முடியும். அந்த வகையில்தான் மத்திய அரசின் அமைப்புகள் முதல்வர் மீதும் மற்ற அமைச்சர்கள் மீதும் சசிகலா குடும்பத்தினர் மீதும் நடவடிக்கைகள் எடுத்து வருகின்றன. ஜெயலலிதாவைச் சுற்றியிருப்பவர்களை நெருங்கவே முடியாது என்கிற மாயையை மத்திய அரசுதான் உடைத்திருக்கிறது. இன்னும் சொல்லப் போனால் ஹவாலா வழக்கில் சொந்தக் கட்சிக்காரர்கள் மீதே நடவடிக்கை எடுக்கிற பிரதமர் நரசிம்மராவ், எப்படி தமிழகத்தில் நடக்கும் தவறுகளை மாத்திரம் விட்டு விடுவார் என்று சந்தேகப்படுகிறீர்கள்?

**பரிதி :** ஹவாலா வழக்கில் சுப்ரீம் கோர்ட் தலையிட்ட பிறகுதானே நடவடிக்கை எடுக்கிறார்?

**அழகிரி :** சுப்ரீம் கோர்ட் தலையிட்டு விட்டது என்பதாலேயே இப்படியொரு நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதில்லையே! விசாரணைக் கமிஷன் அது இது என்று மூடி மறைத்திருந்தாலும் தாங்களும் சம்பந்தப்பட்டிருப்பதால் எதிர்க்கட்சிகளும் கண்டு கொள்ளாமல்தானே இருந்திருக்கும்? இருந்தும் அவர் அப்படிச் செய்யவில்லையே! எனவே, தமிழகத்தில் ஜெயலலிதா ஆட்சியை வீழ்த்த வேண்டும் என்ற எண்ணமுடைய - உங்கள் கட்சி உள்பட - எல்லா எதிர்க்கட்சிகளும் காங்கிரஸ் தலைமையில் ஓரணியில் நின்று, ஜெயலலிதாவுக்கு எதிரான வாக்குகள் சிதறிப் போகாமல், அவரை வீழ்த்த வேண்டும் என்பதுதான் என்னுடைய விருப்பம்.

**பரிதி :** காங்கிரஸ் தலைமையில் ஏன் ஒன்று சேர வேண்டும்?

**அழகிரி :** இதையொரு வேண்டுகோளாகத்தான் சொல்கிறேன். ஒன்பதாண்டு காலத்துக்கு மேல் கலைஞர் முதல்வராக இருந்து விட்டார். எனவே, அவர் பெரிய மனது பண்ணி காங்கிரஸுக்கு விட்டுக் கொடுத்து ஒரு கூட்டணி ஆட்சியை ஏற்படுத்தலாம். கடந்த இருபதாண்டுகளுக்கு மேலாக டெல்லியின் அதிகார மையத்துக்கு அருகாமையிலேயே இருந்து கொண்டிருக்கும் - ஊழல் குற்றச்சாட்டுகளுக்கு ஆளாகாத - நேர்மையான - மூப்பனாரை முதல்வராக்க உதவினால் தமிழகம் மீண்டும் ஒரு பொற்கால ஆட்சியைப் பெறும் என்பதற்காகத்தான் கலைஞரை பெரிய மனத்தோடு விட்டுக் கொடுக்கச் சொல்கிறேன்.

**பரிதி :** கலைஞர் முதல்வர் பதவியை விட்டுக் கொடுக்க வேண்டும் என்பது போலவே இத்தனை ஆண்டுகாலம் காங்கிரஸ் பிரதமர்களே இருந்திருக்கிறார்கள் என்கிற நிலையில் நீங்களும் பிரதமர் பதவியைக் கலைஞருக்கு விட்டுக் கொடுக்கலாமே!

**அழகிரி :** பிரதமர் பதவிக்கு நிச்சயமாகக் கலைஞர், தகுதியுடையவர்தாம் என்பதில் சந்தேகமேயில்லை. அரை நூற்றாண்டு காலத்துக்கு மேலாகப் பொது வாழ்வில் ஈடுபட்டிருப்பவர் - ஒரு சாமான்யர் - எளிய குடும்பத்திலிருந்து வந்தவர் என்கிற வகையிலும் திறமைசாலி என்கிற வகையிலும் அவர் தகுதியானவர்தாம். ஆயினும் தி.மு.க. மாநிலக் கட்சியாக இருப்பதால் அது நடைமுறைச் சாத்தியமில்லை என்பதையும் உணர வேண்டும். இருந்த போதிலும் ஒரு பெரிய மாநிலத்தின் ஆளுனர், துணை ஜனாதிபதி போன்ற பெரிய கௌரவமான பதவிகளில் அவரை அமர வைத்துப் பார்க்க முடியும் என்று நினைக்கிறேன்.

**பரிதி :** கலைஞர் பிரதமராவது நடை முறைச் சாத்தியமில்லை என்கிற போது காங்கிரஸ் தலைமையில் நாங்கள் ஒன்றுபடுவது மாத்திரம் எப்படிச் சாத்தியமாகும் என்று நினைக்கிறீர்கள்?

**அழகிரி :** ஜெயலலிதா ஆட்சியை வீழ்த்த வேண்டும் என்பதற்காகவும் கலைஞர் இந்திய அரசியலிலும் ஓர் உயர்ந்த இடத்துக்குப் போக வேண்டும் என்பதற்காகவும்தான் இப்படிச் சொல்கிறேன்.

**(இதற்கு மேல் இருவரும் விவாதத்தைத் தொடர்ந்தால் அதற்கொரு முடிவே இருக்காது என்பதால் நாம் விவாதத்தை இத்துடன் முடிக்கச் சொல்ல, இருவரும் கை குலுக்கியபடி விடை பெறுகிறார்கள். பரிதி இளம்வழுதி, கேட் வரை சென்று அழகிரியை வழியனுப்பி வைக்க, நாமும் நன்றி கூறி விடை பெறுகிறோம்.)**

தொகுப்பு : **ப்ரியன்;** படங்கள் : **யோகா.**

சம்பத் அவசரமாக செருப்பை மாட்டிக் கொள்ளும் போது கொல்லைப்புற திண்ணை மூலையில் இருந்த துணிச் சுருள் லேசாக அசைந்தது. கூடவே தீனமான அம்மாவின் குரல்.

"யாரு... யாரு... சம்பத்தா?"

சம்பத்துக்கு எரிச்சலாக இருந்தது. வழக்கம் போலப் புறப்படும் நேரத்தில் அம்மாவின் புலம்பல்!

இதைத் தவிர்ப்பதற்காகவே அப்பா புழங்கிய உள் கோடி அறையில் அவருடைய கட்டிலிலேயே அம்மாவைக் கிடத்தி இருந்தான். அம்மாவின் நடமாட்டம் பெரிதும் அற்றுப் போன நிலையில், அடிக்கடி அந்த அறையைச் சுத்தம் செய்வது சகிக்கக் கூடியதாய் இல்லை என்று அவன் மனைவி சங்கடப்படவே, வேறு வழியில்லாமல் திண்ணையைத் தேர்ந்தெடுக்க வேண்டியதாகி விட்டது.

"என்னம்மா... சொல்லு...."

"வரும் போது... ஒரு போர்வை வாங்கிட்டு வாடா... இது ஒண்ணும் தாங்கல... பழசாயிட்டு...."

சம்பத் பதில் பேசவில்லை. பார்வை மட்டும் அம்மாவின் குச்சி உடம்பை, தோலாகப் போர்த்தி இருந்த போர்வையை மேய்ந்தது.

வாஸ்தவந்தான். நைந்து இற்றுப் போயிருந்த

## ஜெரா

போர்வை ஆங்காங்கே கண் திறந்திருந்தது. நடு நடுவே கலர் கலராய் ஊசித் தையல் வேறு.... உருண்டையாய்... கம்பளிப் பூச்சியைப் போல.

இது நடமாடிக் கொண்டிருக்கும் போது அம்மாவாகவே போட்ட தையலாகத்தான் இருக்கும்! அப்படி என்றால்... கிட்டத்தட்ட ஆறுமாத காலமாய்... இதே பழந்துணியில் புதைந்து கொண்டு....

பாவம்தான்... ஆனால்... சம்பத்தால் ஆவதொன்றுமில்லை.

வாசல் கேட்டைச் சாத்தும் போது அவன் மனைவி தொண்டையைச் செருமினாள்.

"அம்மா கேட்டுட்டாங்களேன்னு பாசத்துல உருகி காசைக் கரியாக்கிட்டு வந்து நிக்காதீங்க! வயசானவங்க ஏதாவது தொண தொணன்னு கேட்டுக்கிட்டுத்தான் இருப்பாங்க. நாமதான் எது அவசியம், இல்லை அனாவசியம்னு முடிவு பண்ணணும்! சுமதி பத்துநாளா பட்டுப் பாவாடை கேட்டுகிட்டு இருக்கா. ஞாபகம் இருக்கட்டும்."

சம்பத் நிமிஷ நேரம் தயங்கி, பின் பலமாகத் தலையாட்டிவிட்டு நகர்ந்தான். இன்றைக்கு ஓ.டி. பணம் ஐநூறு வரும் என்பதை நேற்று சொல்லி விட்டதால் வந்த வினை! ஆளுக்கொரு ஆப்ளிகேஷன்!

பஸ் பிடித்து ஆபீஸ் போய்ச் சேர்ந்ததும் இரண்டு மணி நேரம் வேலை சுமுகமாக ஓடிற்று. கேஷியர் வந்ததும் கூப்பிட்டு, கையெழுத்து வாங்கி, ஓ.டி. பணத்தை எண்ணிக் கொடுக்கவும் போன் வரவும் சரியாக இருந்தது.

சுப்ரமணி! இந்த நேரத்தில் இவன் எதற்கு போன் செய்கிறான்?

"சம்பத், எங்கப்பாவுக்கு சீரியஸ்னு ஆஸ்பத்திரில அட்மிட் பண்ணிருக்கண்டா. ரொம்ப பயமா இருக்கு. உடனே வரியா?"

சுப்ரமணி, அவனது ஒரே நண்பன். லீவ் எழுதிக் கொடுத்து விட்டு, விரைந்தான்.

அந்த சாலையின் இடதுபுற இறக்கத்தில் புதிதாக எழுந்திருந்த பிருமாண்டமான ஆஸ்பத்திரி வர்ணப் பூச்சுகளோடு சம்பத்தை வரவேற்றது. அதைப் பார்த்த மாத்திரத்தில் ஆச்சர்யத்தைவிட, 'இதற்கு சுப்ரமணி தாங்குவானா' என்ற பயமும் பரிதாபமும்தான் சம்பத்தை ஆக்ரமித்தது.

ஆஸ்பத்திரி வாசலில் கலைந்த தலையும் தூக்கமிழந்து வீங்கிய கண்களும், கசங்கி அழுக்கேறிய உடைகளுமாக சுப்ரமணி கையில் புகையும் பீடியோடு, எங்கோ வெறித்தபடி நின்றிருந்தான். சம்பத்தைப் பார்த்ததும் பரபரப்பாய் ஓடி வந்தான். விழி முனைகளில் ஈரம் எட்டிப் பார்க்க, "தனி ரூம்லே வச்சிருக்காங்கடா" என்று கரகரத்தான்.

ஆதரவாய் அவன் தோளைப் பற்றிய சம்பத், "டாக்டர் என்னதான் சொல்றாரு?" என்றான். சுப்ரமணி பதில் பேசவில்லை. அவனுடைய உதடுகள் துடிப்பதையும் மூக்கு விடைப்பதையும் முகச் சதைகள் முறுக் கேறுவதையும் பார்த்த சம்பத், அவன் அழுவதற்கு ஆயத்த



மாகிறான் என்பதை அறிந்து, ஆதரவாக அவன் கைகளைப் பற்றிக் கொண்டான்.

"இத பாரு சுப்ரமணி, இந்த நேரத்துலதான் நீ ரொம்ப தைரியமா இருக்கணும், என்ன?"

"முடியல சம்பத்... நடமாட்டம் இல்லேன் னாலும் அவரு இருக்காருங்கற நினைப்பே தெம்பா இருந்தது. அதுக்கும்...."

சுப்ரமணிக்கு தொண்டை அடைத்தது. சம்பத் அவனை அணைத்தபடி ஆஸ்பத்திரிக் குள் அழைத்துப் போனான்.

ஐ.ஸி. யூனிட்டில், ஏகப்பட்ட டியூப் இணைப்புகளோடு மார்புக்கூடு ஏறி இறங்க, மல்லாந்தபடி மூச்சுக்கு மன்றாடிக் கொண்டிருந் தார் சுப்ரமணியின் அப்பா. வெளியே இழுத் துப் போர்த்திய புடைவைத் தலைப்போடு அவன் மனைவியும், பரட்டைத் தலையும் பரி தாப முகமுமாய் அவன் வாரிசுகளும்....

சம்பத்தைப் பார்த்ததும் சுப்ரமணியின் மனைவி, புடைவைத் தலைப்பை வாயில் அழுத்தியபடி... மூக்கை உறிஞ்சினாள்.

"தைரியமா இருங்கம்மா... எல்லாம் சரியாப் போயிடும்."

சம்பத் நம்பிக்கையற்ற குரலில் அவளுக்கு நம்பிக்கையூட்ட முயற்சித்தான். கூடவே அவ ளுடைய அழுகை அவனுக்கு ஆச்சர்யமாய் இருந்தது. இந்தப் பெரியவரோடு சதா சண்டை போட்டுக் கொண்டிருந்த இவளுக்கு எப்படிப் பாசம் திடீர் என்று இப்படி நெட்டித் தள்ளும்! இது நிஜமான நெகிழ்ச்சியா, இல்லை... இனி சண்டைக்கு முற்றுப் புள்ளிதான் என்ற நிறை வில் தெறிக்கும் நிம்மதி ஆசுவாசமா?

'சே! என்ன ஒரு கொடூர நினைப்பு' - சம்பத் தன்னையே திட்டிக் கொண்டான். எத்தனைப் பிரச்னைகள் இருந்தாலும் பிரிவு ஒரு பெரிய விஷயம்தான். கை நழுவிப் போய் விடுமோ என்ற கலக் கம் யாருக்கும் இருக் கத்தான் செய்யும்!




சம்பத் முதல் வேலையாக சுப்ர மணியின் மனைவி யையும், குழந்தை களையும் வற்புறுத்தி அழைத்துக் கொண்டு கேன்டீனுக்கு வந் தான். அவர்கள் முதலில் சம்பிரதாய மாக மறுத்தாலும், கடைசியில் பசிக்குப் பணிந்து போனார் கள்.

சரளமான வாழ்க் கை திடீர் என்று சலனப்பட்டுவிட்ட தால் சுப்ரமணி சோர்ந்து போயிருந் தான். பணத்தட்டுப் பாடு அவன் பார்த் துப் பழக்கப்பட்டுப் போன ஒன்று... ஆனால் இப்படிப் பட்ட அலைச்சலும்.. பரபரப்பும்.. என்ன செய்ய வேண்டும் என்று புரிபடாத பரி தவிப்பும் அவனுக்கு முற்றிலும் புதியது.

"சுப்ரமணி, நீயும்

## 'சுருக் - நறுக்' - 18 முடிவுகள்

கீழ்க்கண்ட சொல்லோவியங்கள் ஒவ்வொன்றும் ரூ. 50 பரிசு பெறுகின்றன.

### கிரிக்கெட் என்பது......

● மழை வரக்கூடாது என்று பலரை வேண்ட வைக்கும் திருவிழா.
- ஜெயாப்ரியன், சென்னை - 26.

● விளையாட்டு உலகின் சூப்பர் ஸ்டார்!
- கே. வெங்கடேசன், வேலூர் - 4.

● மனித மூளை சாஃப்வேரும் பந்து, மட்டை என்னும் ஹார்ட்வேர்களும் சேர்ந்து படைக்கும் கிராஃபிக் விருந்து.
- எஸ். திருமலை, கோவை - 43.

● விளாசுவது, பிடிப்பது, குவிப்பது, எதிராளி தவற விடுவதையே எதிர்பார்ப்பது... அட! வாழ்க்கையைப் பிரதிபலிக்கிறது!
- இரா. விஜயரங்கம், குண்டியமல்லூர்.

● குலுக்கல் இல்லாத கவர்ச்சி ஆட்டம்!
- டி. கலைவாணி, தாந்தோன்றிமலை.

● கிராமப்புறக் கிட்டிப்புள்ளின் நகர்ப்புற ஒப்பனைப் படைப்பு.
- சி. நாச்சிமுத்து, ஈரோடு - 9.

ஏதாவது சாப்பிட்டுக்கோயேன்?"

"இல்லே.. டாக்டர் வந்துடுவாரு... பாத்துடலாம்!"

இருவரும் டாக்டரைப் பார்க்கக் கிளம்பினார்கள். டாக்டர் அட்வான்ஸ், பீஸ், மருந்து பாட்டில் இதைப் பற்றி எல்லாம் புள்ளி விபரமாய் சொல்லிக் கொண்டிருக்க, சுப்ரமணி நெளிந்தான். எழுதிக் கொடுக்கப்பட்ட மருந்துகள் உடனே வேண்டும் என்று டாக்டர் சொன்னார்.

சுப்ரமணி, சம்பத்தைப் பரிதாமாகப் பார்த்தான்.

"ஏற்கெனவே ஆயிரத்துக்கு மேல கடன் வாங்கி, செலவு செஞ்சிட்டேன் சம்பத்! கையில பொட்டு காசு இல்லை...."

சம்பத்துக்குச் சங்கடமாக இருந்தது. சட்டென்று பாக்கெட்டில் கைவிட்டான். ஓ.டி. பணம் ஐநூறு. பட்டுப் பாவாடை, போர்வை என்று வீடு முன்வைத்த செலவுகள் ஞாபகம் வந்தன. விலக்கிவிட்டு, எடுத்து "இந்தா வெச்சுக்கோ" என்றான்.

"தாங்ஸ்டா!"

"பரவாயில்லை. சீக்கிரம் அப்பாவைக் கவனி. நான் அப்புறம் வந்து பார்க்கறேன்" என்று சொல்லிவிட்டு ஆபீஸ் புறப்பட்டான்.

மாலை வீடு திரும்புகையில் வாசலிலேயே காத் திருந்த மனைவி,

"என்ன, பாவாடை வாங்கிட்டீங்களா?" என்றாள்,

"இல்லை. என் பிரெண்டு சுப்ரமணி இல்லை? அவன் அப் பாவுக்கு உடம்பு சரியில்லைன்னு ஆஸ்பத்திரில சேர்த்திருக்கான். பணம் இல்லாம தவிச்சான். அதான் பாவம்னு....."

"உடனே பாசம் பொத்துக்கிச்சாக்கும். கொஞ்சமாச்சும் வீட்டு அக்கறை இருந்தாத் தானே? கடனாத்தான் குடுத்தீங்களா? இல்லை காந்தி கணக்கா?"

சம்பத்துக்குக் கோபம் வந்தது. பதில் பேசாமல் உள்ளே போனான்.

"யாரு? சம்பத்தா? வந்துட்டியா?" கொல்லைப்புறத் திண்ணையிலிருந்து அம்மா....

"ஆமா. நான்தான்."

"கேட்டேனே. போர்வை வாங்கிட்டு வந்தியாடா?"

அம்மாவின் குரலில்தான் எத்தனை எதிர்பார்ப்பு?

சம்பத் அவளருகே போனான்..

"இல்லை... வாங்கலைம்மா. என் நண்பன் ஒருத்தனோட அப்பா உயிருக்குப் போராட்டமா ஆஸ்பத்திரியில இருக்காரும்மா.... ரொம்பக் கஷ்டப்படறான் அவன். மருந்து, மாத்திரைக்கு நிறைய செலவு ஆயிட்டுதாம். அதான் பொறுக்கமாட்டாம ஓ.டி. பணத்தை அவன்ட்ட 'செலவுக்கு வெச்சிக்கடான்'னு குடுத்துட்டேன்."

அம்மா ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

"நல்லது பண்ணினே! போர்வை அடுத்த மாசம் வாங்கிட்டாப் போச்சு. போற உயிரைத் தடுக்கறது முக்கியம்டா. குடுக்கணும்னு தோணிச்சே! அந்த வரைக்கும் நல்லதுதான்!"

சம்பத் அம்மாவைப் பெருமிதத்துடன் பார்த்தான். ஹாலில் முணுமுணுத்துக் கொண்டிருந்த மனைவியின் 'அர்ச்சனை' அப்போது ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை, அவனுக்கு.

நான் சபாபதியை எதிர்பார்க்கவில்லை, இங்கே. இந்தக் கோலத்தில்.

சபாபதி பி.ஏ. பொருளாதாரம், தட்டெழுத்து, சுருக்கெழுத்து மேனிலை.

கருநீல அரைக்கைச் சட்டை. அதே நிறத்தில் பேண்ட். காதோரம் பால்பாயிண்ட் பென். சட்டைப் பையில் எட்டிப் பார்க்கும் பில் புத்தகம்.

"யோவ், சப்ளையர்! இந்த டபராவை எடுய்யா. ஈ மொய்க்குது."

"இந்தாப்பா இந்த டேபிளைத் துடைக்கச் சொல்லு."

"ரெண்டு ரோஸ்ட், சீக்கிரம்."

"பில் குடுப்பா."

திரும்பிய பக்கமெல்லாம் கட்டளைகள். பசியின் அதிகாரம்.

சபாபதி கிளீனரைத் தேடினான். சட்டென்று இடதுகை விரல் பரப்பி, டபராக்களை வாரி உள்ளே மறைந்தான்.

என்னுள் சுருக்.

'சபாபதி உனக்கு இன்னுமா உருப்படியான வேலை கிடைக்கவில்லை? உன் படிப்பும் திறமையும் இப்படியா வீணாக வேண்டும்?'

சுற்றிலும் பார்த்தேன். ஓட்டல் நிரம்பி வழிந்தது. உட்கார இடம் கிடைப்பதே அதிர்ஷ்டம்.

"என்ன சார் வேணும்?"

சபாபதிதான். மீசை அடர்ந்து ஓரத்தில் இளநரை. முகம் மாறி,

# உறுத்தல்

கறுத்திருந்தது. என்னை ஞாபகம் வைத்திருப்பானா?

"சூடா என்ன இருக்கு?"

"தோசை... ரோஸ்ட்."

"ஒரு ரோஸ்ட்."

என் முகத்தை ஒரு விநாடிதான் பார்த்தான். நகர்ந்தான். அவனை அழைத்துப் பேச மனம் துடித்தது.

என்ன பேசுவது? எப்படிப் பேசுவது? அவனுடைய இந்த நிலைக்கு நானும் காரணமா? குழப்பம்.

ஐந்து வருடங்களுக்கு முன்பு... இதே ஊர். அரசு நிறுவனம். தலைமை எழுத்தர் பதவி. வேலை பார்த்த டைப்பிஸ்ட் தார
வுக்குக் கல்யாணம். வேலையை விட்டுவி
டாள். ஓர் இடம் காலி. மேலிடத்திற்கு எழு
னோம். வேலை வாய்ப்பு அலுவலகத்துக்கு
கைகாட்டினார்கள்.

என் மேலதிகாரி தீனதயாளன் நல்லவ
கெட்டிக்காரர். வேலையில் கண்டிப்பானவ
சொந்த ஊர் ஆரணி. ஊருக்கு மாற்றல் தேடி
கொண்டிருந்தார்.

"வேலூர்லேர்ந்து பதினைஞ்சு பேர் லிஸ்
வந்திருக்குது. இதை ஒரு பார்வை பார்த்
வையுங்க. அடுத்த திங்கட்கிழமை நா
ரெண்டு பேரும் இண்டர்வியூ பண்ணிடலா
இது பர்மனெண்ட் போஸ்ட்."

பல ரக படிப்புகள், தகுதிகள். சபாபதியி
பெயரும் அவன் தகுதிகளும் தனியாகத் தெரி
தன.

வெள்ளிக்கிழமை காலை.

வாசலில் பழக்கமில்லாத முகங்கள். ஓ
இளைஞன். அவன் தாய். கையில் சின்னப்
"யாரது? என்ன வேண்டும்?"

"ஒண்ணுமில்லே. உங்களைப் பார்த்துட்டு
போகலாம்னு."

"என்ன விஷயம்?"

"வந்து... வந்து..."

"என்ன விஷயம்? தெளிவா பேசுங்க. நா



ஆபீசு போகணும்!"

திடீரென்று என் காலில் விழுந்தார்கள்.

"நீங்கள்தான் என் குடும்பத்துக்கு விளக் கேற்றி வைக்கணும். இவன் என் மகன் சபா பதி. பி.ஏ. படிச்சிருக்கான். டைப் தெரியும்."

"அதுக்கு என்ன இப்போ?"

"திங்கட்கிழமை உங்க ஆபீசிலே இண்டர் வியூ. கடிதாசு வந்திருக்குது. நான் பரம ஏழை. ரெண்டு வீட்லே சமையல் செஞ்சு இவனைக் காப்பாத்தறேன்."

"எழுந்திருங்க. நீங்க என்னைப் பார்க்க வந்ததே தப்பு. அந்த வேலையை உங்களுக்கு வாங்கித் தர எனக்குத் தகுதியோ, திறமையோ இல்லை. உங்கப் பையனுக்குத் திறமையும் தகுதியும் இருந்தால் அந்த வேலை தானே கிடைக்கும்!"

என் முன் அந்தப் பை நீண்டது.

தட்டிவிட்டேன். பையிலிருந்து ஒரு வெள்ளிக் குத்துவிளக்கும் ஐம்பது ரூபாய்க் கட்டும் வெளியே விழுந்தன.

"என்னை ஊர்ச் சொத்தில் கொள்ளை யடிச்சுப் பிழைக்கறவன்னு நினைச்சீங்களா? எனக்கு அரசாங்கம் சம்பளம் தருது. அது போதும். உங்கள் பிச்சை வேண்டாம்."

"எங்களால இவ்வளவுதான் முடியும். இது கூட இவன் அப்பா எனக்கு கட்டிய தாலியை வித்த பணம். அவரே இல்லை. அவர் கட்டிய தாலியாவது இவன் வாழ உதவட்டுமேன்னு தான்..."



"கெட் அவுட்! நான் தகுதியையும் திறமை யையும் நம்பறவன். குறுக்கு வழி பிடிக்காத வன். தகுதியுள்ளதுதான் இந்த உலகத்துலே நீடிச்சு இருக்கும்!"

"....."

"நீங்க இங்கே வந்து தெரிந்தால் என் வேலைக்கே ஆபத்து! என் மேலதிகாரி நெருப்பு. இந்த விஷயம் தெரிந்தால் சுட்டு எரிச் சிடுவார். உங்களுடைய குறுக்குப் புத்தியாலே உங்க மகனுக்கு அந்த வேலை கிடைக்காமல் போனாலும் போகலாம்."

"ஐயையோ, தப்பா எண்ணாதீங்க. என் னவோ என் பையனுக்கு வேலை கிடைச்சுட

## ரா. குருராஜன்

ணும்கற வெறி. எல்லாத்துக்கும் ஒரு விலை இருக்குதே!"

"எதுக்கு வேணும்னாலும் விலை இருக்க லாம். தர்மத்துக்கு, நியாயத்துக்கு, தகுதிக்கு விலை இல்லை. விலைக்கு வாங்கவும் முடி யாது. இதே மாதிரி பைத்தியக்காரத்தனமா என் மேலதிகாரிகிட்டே போயிடாதீங்க. அவர் நெருப்பு.

"சபாபதி, ஒண்ணை மட்டும் நினைவில் வச்சுக்கோ. நாமெல்லாம் படிச்சவங்க. படிச் சதை வாழ்க்கையிலே கடைப்பிடிக்கணும். எத்தனை குறள் படிச்சிருக்கே. அதிலே ஒரு குறளையாவது முன் மாதிரியா வைச்சு வாழ்ந்து பார். உருப்படுவே. என்னிக்கும் திற மைக்கும் தகுதிக்கும் மதிப்பு உண்டு."

இரண்டு பேரும் தலைகுனிந்தபடி வெளி யேற, என் மனசுக்குள் ஒரு திருப்தி. ஒரு லஞ் சத்தைத் தடுத்த பெருமை.

பதினோரு மணி. டெலிபோன் அலறியது.

"ஹலோ... தீனதயாளன்தான் பேசறேன்..."

"....."

"ஆமாங்க... ஆரணிதான்."

"....."

"வந்திருக்கு... செல்வராஜா... இருக்குதே..."

"....."

"ரொம்ப சந்தோஷம்... பார்க்கறேன்..."

"....."

"கட்டாயம்... கட்டாயம். அதை மட்டும் கொஞ்சம்..."

"....."

"அப்படியா, ரொம்ப நன்றிங்க!"

என்னை அழைத்தார்.

"குரு, திங்கட்கிழமை இண்டர்வியூவை நானே கவனிச்சுக்கறேன். பேனல்லே உங்க பேர் போட்டிருக்கேன். நீங்க உங்க வேலை யைப் பார்த்துக்கங்க. பதினைஞ்சு பேர்தானே. எனக்குக் கஷ்டமில்லே."

பேச்சில் வித்தியாசம். தட்டிக் கழித்தல்.

திங்கட்கிழமை. நான் அழைக்கப்படவில்லை.

பதினைந்து பேரில் சபாபதி இருந்தான். சுலபமான கேள்விகள். 'உன் பெயர் என்ன? உன் அப்பா பெயர் என்ன? இந்தியாவின் தலைநகரம் என்ன?'

பதினைந்து பேருக்கும் நம்பிக்கை.

வெள்ளிக்கிழமை. ஒடிசலாக ஒரு பையன் வந்தான். பெயர் செ... ஜ் என்றான். சின்சியர்லிக்கு முதலில் 'C' போட வேண்டுமா 'S' போட வேண்டுமா என்று சந்தேகம் கேட்டான்.

கண்ணுச்சாமி காதைக் கடித்தான். "சார், புதுப்பையன் பெரிய ஆள் சார். 'கோட்டை' தெரியுமாம் சார்! நாப்பது ரூபாய் செலவு பண்ணியிருக்கானாம் சார். டீக்கடையிலே சொன்னான். நம்ம ஆபீசர் வீட்டுக்குப் புதுசா ஒரு ஃபிரிட்ஜும், வாஷிங் மெஷினும் வந்திருக்குது சார்."

மனம் வெறுத்துப் போனது. தீனதயாளன், நீங்கள் கூடவா?

கடைத் தெருவில் சபாபதி தென்பட்டான். பழைய சைக்கிள், பின்பக்கம் எவர்சில்வர் டிரம். கைப்பிடியில் பக்கெட். பக்கெட்டில் தம்ளர்கள். மற்றொரு கைப்பிடியில் துணிப்பை. நடமாடும் காப்பிக் கடை.

இந்த ஊரில் இருக்கப் பிடிக்கவில்லை. சேலம் கேட்டேன். தீனதயாளனும் ஆரணி போய்ச் சேர்ந்தார்.

ஐந்து வருடங்கள் கழித்து, சென்னை போக வேண்டிய நிலை. வழியில் இங்கே காப்பி சாப்பிட நிற்க -

தோசை வந்தது. காப்பி வந்தது. சாப்பிட மனம் வரவில்லை. சபாபதியும் பசித்த

---

**"ஆனாலும் என் கணவருக்குக் குழந்தை மனசு...."**

**"இருக்கலாம். அதுக்காக, ஆபீஸுக்குக் கிளம்பும்போது, 'மம்மூ ரெடியா'ன்னா கேட்கணும்...?"**

**- ஆர். வசந்தகுமார்**



தம்பலின் ஆர்டர்களுக்குத் தக்கபடி ஓடிக் கொண்டிருந்தான்.

பில்லை வைத்துவிட்டுப் போனவன் ஆளையே காணோம்.

திருவள்ளுவர் கிளம்பத் தயார் என்றார்.

எழுந்தேன்.

"இங்கே சபாபதின்னு..." கல்லாவில் கேட்டேன்.

"சபாபதியா? பக்கத்து ரூம்லே பாருங்க..." கைகாட்டினார்.

சபாபதி மேஜைமேல் குவிந்திருந்த ரூபாய் நோட்டுகளை எண்ணிக் கொண்டிருந்தான்.

"என்ன சார், சௌக்கியமா? எங்கே இவ்வளவு தூரம்? ஞாபகம் இருக்கா?"

"சபாபதி... உன்னை... இங்கே... இந்த நிலையிலே பார்க்க... எனக்கு... எனக்கு..." தொண்டை அடைத்தது. கண்ணீர் மூட்டம்.

"உட்காருங்க சார்..."

"என்னை மன்னிச்சிடுப்பா... அன்னிக்கு நான்... நான்..."

"ஏன் சார் அழறீங்க? சார், இப்ப நான் நல்லா இருக்கேன். இதுக்கெல்லாம் அன்னிக்கு நீங்க சொன்ன புத்திமதி! தகுதிக்கும் திறமைக்கும் என்னிக்கும் மதிப்பு உண்டு. சொன்னீங்களே... எவ்வளவு அருமையான புத்திமதி...!"

"சபாபதி... என்னை மன்னிச்சிடுப்பா..." அவன் கையைப் பிடிக்கப் போனேன்.

"சார்... என்ன ஆச்சு உங்களுக்கு? இப்ப நான் நல்லாத்தான் இருக்கேன். எனக்கு அந்த வேலையை வாங்கிக் கொடுக்காவிட்டாலும் நல்ல புத்திமதி சொன்னீங்க. முதல்லே அந்த வேலை கிடைக்காததுக்கு வருத்தப்பட்டேன். அப்புறம் ஓர் எண்ணம்.

"லஞ்சம் கொடுக்க வைச்சிருந்த பணத்தையே வைத்து ஏன் முன்னேறக் கூடாது? முதல்லே சைக்கிள்லே நடமாடும் காப்பிக் கடை போட்டேன். அப்புறம் டிபன் சென்டர். திறமை, தரம், உழைப்பு மூணும் என்னை வளர்த்துது. போன வருஷம்தான் இந்த பஸ் ஸ்டாண்டு கடையை காண்டிராக்ட் எடுத்தேன். வியாபாரம் நல்லா போறது. எல்லாம் உங்க உபதேசம்..."

"அப்ப இந்த டிரெஸ்?"

"இன்னிக்கு ரெண்டு பேர் லீவு. முதலாளின்னு கல்லாவிலேயே உட்கார்ந்திருந்தால் வேலை நடக்குமா? நாமும் தொழிலாளியோடு தொழிலாளியா உழைக்கணும். என்ன சொல்றீங்க?"

நெஞ்சில் நிம்மதி.

"நல்லா இருப்பா..."

திருவள்ளுவரை நோக்கி நடந்தேன் மன நிறைவோடு!

# எம்.எஸ். உதயமூர்த்தி பேட்டி

**ஆட்சியாளருக்கு அத்தியா வசியமான பண்பு நேர்மை. அது ஒன்று மட்டும் இருந்தால் அறிவாளிகளையும் ஆற்றல் மிக்கவர்களையும் பயன்படுத்திக் கொண்டு அவர் மிகச் சிறப்பான அரசை நிறுவ முடியும்...**

**—இந்தக் கருத்தைப் பல முறை கல்கியில் எடுத்துச் சொல்லியிருக்கிறோம். அதற்கு வடிவம் கொடுக்கும் வகையில் இன்று தேர்தல் களத்தில் இறங்கியிருக்கிறார் டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி. அவருடன் ஒரு சந்திப்பு:**

''மக்கள் சக்தி இயக்கத்தை ஆரம்பித்த போதே உங்களுக்கு அரசியலில் புகும் எண்ணம் இருந்ததா...?''

"ஆரம்ப விழா முடிந்த கையுடன் இந்தக் கேள்வியைப் பலர் கேட்டார்கள். அப்போது நான் ஒரு எழுத்தாளனாக மட்டுமே அறியப்பட்டேன். எனவே 'களத்தில் இறங்கவில்லை; அப்படி இறங்குவதற்குண்டான தேகப் பயிற்சி செய்கிறோம்...' என்று பதில் சொன்னேன். 88ல் இயக்கம் ஆரம்பித்தது. அதற்குப் பிறகு அனேகமாக எல்லா அரசியல் கட்சித் தலைவர்களுமே தங்களுடன் இணையும்படியோ ஆதரவு தரும் படியோ கேட்டு என்னிடம் வர ஆரம்பித்தார்கள். அடிப்படையில் நேர்மை இல்லாதவர்களுடன் இணைய எனக்கு விருப்பமில்லை. இயக்கத்தைப் பலப்படுத்திக் கொண்டு தனியாகவே அரசியலில் ஈடுபட முடிவு செய்தேன்."

**"இப்போது இயக்கம் எந்தெந்த வகைகளில் பலமடைந்திருக்கிறது...?''**

"தமிழகமெங்கும் சிறு ஊர்களிலும் பெரிய நகரங்களிலுமாக 250 கிளைகள் இப்போது எங்கள் இயக்கத்துக்கு இருக்கின்றன. தினம் தினம் புதிய கிளைகள் திறக்கப்படுவதாக எனக்குக் கடிதங்கள் வருகின்றன. எங்கள் முயற்சியில் தான் நரிமணம் பகுதியில் எண்ணெய் சுத்திகரிப்புக்கான பலகோடி ரூபாய் திட்டம் தொடங்கப்பட்டிருக்கிறது. நாங்கள் வளர்ச்சித் திட்ட கருத்தரங்கு நடத்தி அறிஞர்கள், தொழில்நுட்ப வல்லுனர்கள், அரசாங்கம், விவசாயிகள் என்று பலதரப்பினரையும் ஒன்று சேர்த்ததால்தான் அது சாத்தியமாயிற்று. வெறும் விவசாயத்தை மட்டுமே நம்பியிருந்த அந்தப் பகுதியின் பொருளாதாரம் முன்னேற்றப் பாதைக்குத் திருப்பப்பட்டிருக்கிறது.

"அதே போல், மேற்கு நோக்கிப் பாய்ந்து வீணாகும் நதிகளின் நீரை திசைதிருப்பி தென்னக நதிகளின் இணைப்பையும் நிகழ்த்திவிட்டால் தமிழ்நாட்டுக்குக் குறைந்த பட்சம் ஐந்நூறு டி.எம்.சி. தண்ணீர் உபரியாகக் கிடைக்கும் என்பதை ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டி மத்திய அரசாங்கத்தை அசைத்திருக்கிறோம். சம்பந்தப்பட்ட அண்டை மாநிலத்து (ஆந்திரா, கர்நாடகா) விவசாயிகளையும் பணக்காரர்களையும் இந்தத் திட்டத்தில் ஈடுபாடு காண்பிக்கத் தூண்டியிருக்கிறோம். இது நடைமுறைப் படுத்தப்பட்டால் அவர்களுக்கும் ஆதாயம் தானே... நாங்கள் பாதயாத்திரை மேற்கொண்டதால் அடித்தள மக்களுடன் நல்லதொரு அறிமுகம் கிடைத்திருக்கிறது. பாதயாத்திரையின்போதே மக்கள் தவிர, பல அதிகாரிகளும் காவல் துறையினரும் ஆளுங்கட்சியின் அக்கிரமங்களை மிகுந்த வருத்தத்துடன் எங்களுக்கு எடுத்துச் சொன்னார்கள். மேற்குத் தொடர்சி மலையில் 250 சில்வர் ஓக் மரங்கள் சட்ட விரோதமாக ஆளுங்கட்சியினரால் வெட்டப்பட விருப்பது அறிந்து தடுத்தோம். அந்த ஆத்திரத்தில் அந்த 250 மரங்களிலும் பட்டைகளையே உரித்துச் சாகடித்தார்கள்...''

**"இப்படி எதற்கும் தயங்காதவொரு அரா ஜகக் கூட்டத்துடன் எந்த தைரி யத்தில் நீங்கள்**



# சிவப்பு ஆறு

## தமயந்தி

இன்னும் தாமிரபரணி சலசலத்துக் கொண்டுதானிருந்தது. சபரி ஜன்னலை விசாலமாகத் திறந்து வைத்தான். காற்று நின்றிருந்தது. ஆனாலும் காற்று நிமிண்டின மாதிரி ஆறு சலசலத்தது. அமாவாசையாய் இருக்கும் போல. கும்மிருட்டில் நதி பளபளத்தது. ஆற்றின் பக்கத்தில் ரூம் கிடைத்தது லாபம். கோபமா, சந்தோஷமா, துக்கமா, விரக்தியா, உடல்வலியா... ஜன்னலைத் திறந்ததும் நதி என்ன என்று கேட்கும், விசாரிக்கும், நண்பன், ஸ்நேகிதி, அர்த்தநாரி.

சபரிக்குச் சிரிப்பு வந்தது. புத்தனுக்கு போதி மாதிரி சபரிக்கு ஆறா? தாமிரபரணியா? தாமிரபரணி நீருக்கு உள்ள ருசி சிறுவாணியில் கிடையாது. சொன்னால் பத்மனாபன் சண்டைக்கு வருவான். கோயமுத்தூர்க்காரன். வேலை தேடி கடைசியில் சபரியைப் போலவே ஒரு வாக்வம் கிளீனர் கம்பெனியில் மூவாயிரம் ரூபாய் சம்பளம், இன்சென்டிவ், பேட்டா என்று காலத்தை ஓட்டுகிறவன். ஒரு பீஸ் விற்றால் இத்தனை கமிஷன். நாய் வேலை. ஆறு மாதிரி சதா சுழலும் வேலை.

ஆனாலும் சுழல்வது சுகம். அலுத்தா போகும்? ரோட்டைக் கடந்து நாலைந்து பெண்கள் போனார்கள். கையில் புத்தகங்கள். செல்வியும் இப்படித்தான் ஊரில் ஸ்கூலுக்குப் போய்க் கொண்டிருப்பாள். மாதம் ஒரு கடிதம். 'அண்ணா... நீ அனுப்பிய எம்.ஓ. கிடைத்தது. பீஸ், வாடகை கட்டிவிட்டேன். அம்மா நலம். உன்னை விசாரித்ததாக...'' மொத்தமே எட்டு வரிக் கடிதம். ஆனாலும் சுகம். சரஸ்வதி முகம் போல.

நதி சிலிர்த்துக் கொண்டது. விடிவெள்ளி கண்சிமிட்டாமல் சபரியையே பார்த்தது. சரஸ்வதியைச் சந்தித்த போதும் இப்படித்தான் கண்சிமிட்டாமல் நிற்க முடிந்தது. அழகு என்றெல்லாம் முத்திரை குத்தக் கூடிய முகமில்லை. ஆனாலும் பளிச்சென்ற முகம். காரியத்தில் வேகம், ஆபீஸில் புது அப்பாயின்ட்மென்ட்; அக்கௌண்டன்ட். எத்தனை பீஸ் விற்றிருக்கிறது என்று அவளிடம்தான் கணக்குச் சொல்ல வேண்டும். ஒரு நாளில் எத்தனை வீட்டில் டெமான்ஸ்ட்ரேஷன் என்று கையெழுத்துப் போட்டுக் கொடுக்க வேண்டும்.

ஒருநாள் அலுத்துப் போய் ஆபீஸுக்குள் நுழைந்து தண்ணீர் குடிக்கும்போது உள் ரூமில் பத்மனாபன் சத்தம் கேட்டது.

“எதை வச்சு அப்படிச் சொல்றீங்க சரஸ்வதி? இன்னைக்கு அமெரிக்கால நல்ல பொசிஷன்ல இருக்கிற இந்தியர்கள்ல பாதி தமிழர்கள்தான்.”

“ஆனா ஏன் அவங்க அங்கே போனாங்க? அதுதான் முக்கியம். இங்க வேலையை வாங்கிட்டு... சம்பளம் குறைவு. டிக்னிட்டி ஆஃப் லேபர் நம்ம மக்கள்கிட்ட குறைவு பத்மனாபன். மனுஷனுக்கு அவசியமான ஒண்ணு அது. நாள் பூரா லோலோன்னு அலையற உங்களையே எடுத்துக்கோங்களேன். மூவாயிரம் கம்மிதான். இதே வேலைக்கு உங்களுக்கு வேற நாட்டுலே கூட மூவாயிரம்னா நீங்க போக மாட்டீங்களா?”

“ப்ரையின் ட்ரையினை நியாயப்படுத்துறீங்களா?” பத்மனாபனின் குரலில் கோபம் இருந்தது.

“இல்ல. தப்புதான். வளர்ந்த, வளர்த்த நாட்டை விட்டுப் போறது சரின்னு நான் சொல்லலை. ஆனால் காரணம் என்னன்னு இன்னும் எத்தனை வருஷம் ஆராயாம நாம இருக்கப் போறோம்?”

சபரி நிற்பது கவனிக்காமல் சரஸ்வதி ஆவேசமாய் மேஜையைக் குத்தினாள்.

“ரொம்ப ஆவேசமான டிஸ்கஷன் போல!” சபரி கேட்டதும் சிரித்தார்கள். தினம் தினம் ஏதாவது ஒன்று ஓய்வு நேரத்தில் விவாதிக்கப்பட்டது. ஹவாலா அரசியல்வாதிகளிலிருந்து பிரபஞ்சன் சாகித்ய அகாதமி வாங்கியதற்கு இன்னும் தமிழர்கள் பாராட்டி இருக்க வேண்டும் என்பது வரை. புத்தகங்கள் கைமாறின. பேசியது என்னவோ மற்றவர்களைப் பற்றி என்றாலும் சபரிக்குத் தனக்குள் ஒரு தென்றல் வீசியது தெரிந்தது.

ஆனாலும் சற்று நெருக்கமாய் அவளிடம் அணுகத் தயக்கமாக இருந்தது. ஓர் அழகான இடைவெளியை அவளாகவே ஏற்படுத்தி

பிருந்தாள். ஒருநாள் கூட அவள் குடும்பம் பற்றியோ, அவளைப் பற்றியோ அவள் சொன்ன தில்லை. அந்த அழகான இடை வெளி தாண்டி அவளை நெருங்க ஏதோ நெருடியது.

பத்மனாபனுக்கு இந்த அவஸ்தை பிடிபட்டிருக்க வேண்டும். ரூமில் இதேபோல ஜன்னலைத் திறந்து வைத்துக் கொண்டு நதியின் நெளிசல் களைப் பார்த்துக் கொண் டிருந்த போது ஒருநாள் வந் தான்.

''எல்லா இன்ட்டலெக்சுவல் நட்பும் இப்படித்தான் கலங்கும் போல...''

''என்ன சொல்றே பத்ம னாபன்...?''

"மறைக்காதே சபரி, ஐ கேன் அண்டர்ஸ்டாண்ட்."

"ஆனா அவளுக்குப் புரிய ணுமே?''

"அது கஷ்டம். என்னால உத்தர வாதம் தர முடியாது."

"ஏன்... ஏன்...?'' மனசு பதறியதில் நதி வேகமாய் நெஞ்சில் அடித்துக் கொண்டது. படகுத் துடுப்பு நீரைக் கிழித்த மாதிரி.

''சரஸ்வதி யாரு? கல்யாணமான பொண்ணா? இல்லையான்னு உனக் குத் தெரியுமா சபரி?''

''பத்மனாபன்...?''






கருத்து : ஜிவி

"தன்னைப் பத்தி எதையுமே அவள் சொன்னதில்லை. நாமளும் அதனால அஸ்யூம் பண்ணறதைத் தவிர்க்கிறது நல்லதில்லையா?"

**ம**றுநாள் ஆபீஸில் மெதுவாக ஆரம்பித்தான்.

"எங்களை உங்க வீட்டுக்கு ஒருநாள் இன்வைட் பண்ண மாட்டீங்களா சரஸ்வதி...?"

சரஸ்வதி முகம் மாறினாள். "அக்கௌண்ட்ஸ் ஃபைல் நேத்து நீங்க சப்மிட் பண்ணலையே சபரி?" என்றாள். அதற்குமேல் பேச்சைத் தொடர முடியவில்லை. ஆனால் மனசையும் கட்டுப்படுத்த முடியவில்லை. மனசுக்குள், 'இதுதான் காதலென்பதா?' என்று ஏதோ பாட்டுக் கேட்டது. கனவுகளும் கொஞ்சம் சினிமாத்தனமும்தான் காதலா? அப்படியென்றால் இது வெறும் ஈர்ப்பா? இருபத்தொன்பது வயசில் வெறும் ஈர்ப்புத்தானா? காமம்தானா? யோசன்னை இல்லையா?

**ஞா**யிற்றுக்கிழமை தனிமை மேலும் குழப்பியது. காலையில் குடித்த ஒரு கப் டீயோடு மதியம் வரை யோசனையோடு இருந்தான். மத்தியானம் சாப்பிட்டதும் மனசில் ஏதோ அசட்டு தைரியம் முளைத்தது. பார்த்துப் பார்த்து ஷேவ் செய்தான். ஷர்ட் முழுக்க சென்ட் அடித்து மாட்டிக் கொண்டான். கிளம்பும் முன் மூன்று தடவை கண்ணாடி பார்த்துக் கொண்டான்.

கதவைப் பூட்டியபோது தயக்கமாய் இருந்தது. வழியில் அரைக்கிலோ மில்க் பேடா வாங்கிக் கொண்டான், பஸ் பிடித்து வீட்டை அடையும் போது நெஞ்சுப் பக்கம் வியர்த்திருந்தது. கைசிலிர்க்க காலிங்பெல்லை அழுத்தினான்.

வரிப்புலியோ கர்ஜனை சிங்கமோ
நாக்கில் விஷம் பரவின விரியனோ
எது குகைக்குள்?
பயந்தபோது
நதிநீர் வெயிலில் மெல்ல
எட்டிப் பார்க்கும் -
நீவி விடும் நிழல்.

இதுபோல நிழல் மனசைத் தீண்டுமா? இல்லை பயந்தமாதிரியே நாக்கில் விஷம் தடவிய விரியனா?

ஒரு மாவுக்கை கதவைத் திறந்தது. சரஸ்வதிதான்.

"வாங்க..." எதிர்பாராத தயக்கம் முகத்தில் தெள்ளத் தெளிவாய்த் தெரிந்தது. "உட்காருங்க..."

"இந்தப் பக்கம் வரவேண்டிய வேலை இருந்தது. அதான்... அப்படியே... உங்களையும்" முகத்தில் பொய்யின் நிழல் படர்ந்தது.

"மம்மி... யாரு...?" ஆறு ஏழு வயதிருக்கும்... குட்டி சரஸ்வதி... இரட்டை ஜடை போட்டிருந்தது.

"நான் சொல்வேன் இல்லே, சபரி அங்கிள்..."

"ஹலோ..." சிரித்தபடி சொன்னாள். "என் பேர் ஐஸ்வர்யா..."

சபரி தடுமாறினான். உள்ளுக்குள் ஏமாற்றம் மலையாய்க் குவிந்தது.

"டீ குடிக்கிறீங்களா, காப்பியா?"

"எனிதிங்."

இரண்டு கோப்பைகளில் நிமிடத்தில் கொண்டு வந்தாள்.

"உங்க ஹஸ்பெண்ட் இல்லையா?"

"அவர் இல்லை."

'என்ன அர்த்தம்? வீட்டில் இல்லையா... இல்லை...?'

## யார் முதல்வர்?
## யார் பிரதமர்?
## உங்கள் தேர்வு என்ன?

வரும் பொதுத் தேர்தலில் தமிழகத்தின் முதல்வராக யார் வர வேண்டும்; இந்தியாவின் பிரதமராக யார் வரவேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? குறிப்பாக அவர்கள் வரவேண்டுமென்று நீங்கள் கருதுவதற்கு என்ன காரணங்கள்?

முதல்வராக, பிரதமராக வர வேண்டுமென்று நீங்கள் கருதுபவர் பெயர்களை ஒரு போஸ்ட் கார்டில் எழுதுங்கள். அதற்கான மூன்று மூன்று காரணங்களையும் அதே போஸ்ட் கார்டில் எழுதி எங்களுக்கு அனுப்புங்கள்.

பிரசுரமாகும் ஒவ்வொன்றுக்கும் 100 ரூபாய் பரிசு.

போஸ்ட் கார்டிலுள்ள முகவரி பகுதியில் கீழுள்ள கூப்பனைக் கத்திரித்து ஒட்டி அனுப்ப வேண்டியது அவசியம். உங்கள் முகவரி எழுதுவதும் முக்கியம்.

**முடிவு தேதி : 1.4.96**

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**யார் முதல்வர் - பிரதமர் போட்டி**

**கல்கி,**

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 097.

"எங்க வொர்க் பண்றார்?"

"தெரியல..."

"புரியல சரஸ்வதி..."

"ஆனா எனக்குப் புரியுது சபரி. உங்க மனசு எல்லாம் புரியுது. வேணாம். இது சாக்கடை. விட்டுடுங்க."

"இன்னும் புரியலை சரஸ்வதி."

"பதினைஞ்சி வயசிருக்கும் அப்ப. சினிமா ஆசை. மெட்ராஸ் வந்தேன். பம்பாய்ல ஷூட்டிங்னு கூட்டிப் போனார்கள். ரெட்லைட் ஏரியா... தொடர்ந்து ரெய்ட். எல்லா அசிங்கமும் உண்டு. ஒரு சமூக சேவை நிறுவனம் காப்பாத்திச்சு. எய்ட்ஸ் டெஸ்ட் பார்த்தாங்க. இல்லை. ஆனால் வேறொரு டெஸ்ட் பாசிடிவ். ப்ரெக்னென்சி! கலைச்சிடுன்னாங்க. எனக்கு இஷ்டமில்லை. பெத்துக்கிட்டேன். மேலே படிக்க வச்சாங்க. வேலை கிடைச்சு..." வார்த்தைகள் திக்கித் திணறி வெளியே வந்தன.

"என்னால உங்களைப் புரிஞ்சிக்க முடிஞ்சது சபரி. என் கடந்த காலம் அழுக்கானது. அதுல யாரையும் சம்பந்தப்படுத்த நான் விரும்பல. போறுமா? நாம நல்ல நண்பர்களா இருப்போம். நேத்து எம்.டி. வாசுதேவன் நாயருக்கு ஞானபீடம் கிடைச்சிருக்கு தெரியுமா?"

"ம்." தேநீர் உள்ளே சூடாய்ப் பரவிற்று.

"எதிர்பார்க்கவே இல்லை?"

"ம்..."

"ச்சீன்னு ஆயிருச்சா?"

"இல்லே..."

"எப்படி சபரி? அசிங்கமாத் தெரியலே....?"

"உண்மையைச் சொல்றது அழகு சரஸ்வதி..."

"சபரி..."

வாங்கி வந்த மில்க் பேடாவை நீட்டினான். ஐஸ்வர்யா வெளியே விளையாடிக் கொண்டிருந்தாள். டாட்டா காட்டினாள். நடக்கும்போது சீக்கிரம் ரூமுக்குப் போக வேண்டும் போலிருந்தது. ஜன்னலைத் திறந்து கொண்டு உட்கார வேண்டும். நதி நெளியும். உரசும். மனசோடு பேசும். இதோ பார் சபரி. என்னில் மனிதர்கள் பண்ணாத அசிங்கமா? பிணங்கள், ஆடுகள், மாடுகள், ஏன் கலவரங்களில் சிந்தப்படும் ரத்தங்கள்... அதற்காக நான் சிவப்பாகவேயா ஓடிக் கொண்டிருக்கிறேன்? என்று சபரியை நோக்கிக் கைநீட்டும்.

நதி அழகானது. சபரி ஜன்னல் திண்டில் உட்கார்ந்து கொண்டான். இன்னும் தாமிரபரணி சலசலத்துக் கொண்டுதானிருந்தது.



“தலை சீவிக்கோ. இந்தப் பவுடரைப் போடு. லேசா டொய்சிவிட்டா சென்டை அடி...” என்றாள் அம்மா.

ரவிக்குமார் சிரித்தான். ‘‘டொய்சிவிட்டா லேடீஸ் பர்ஃப்யூம்.”

‘‘ஆமா. ஸ்ரீவைகுண்டம் பொண்ணுக்கு, ‘டொய்சி விட்டா’ பர்ஃப்யூம் பற்றியா தெரியப் போகுது.”

கார் தாமிரபரணி பாலத்திற்கு அருகில் நின்று கொண்டிருந்தது.

“இன்னும் பத்து நிமிஷம் கழிச்சுக் கிளம்புவோம். ராகு காலம் முடிஞ்சிடும். ராகுகாலத்திலா பொண்ணு பார்க்கப் போகிறது?” என்றாள் அம்மா.

ரவிக்குமார் காரை விட்டு இறங்கினான். தாமிரபரணியைப் பார்த்தான். ஓர் அமைதியான அழகிருப்பது போல் தோன்றியது. அழகு ஆற்றில் இருக்கிறதா? அல்லது நம்முடைய ஊரில் ஓடும் ஆறு என்பதால் அழகாகத் தோன்றுகிறதா? கலீல்கிப்ரானுக்கு லெபனான் அழகும், தி.ஜ.ராவுக்கு காவேரி அழகும் இந்த உணர்வினால்தான் உயர்வாகத் தோன்றியதா? பம்பாயில் எத்தனையோ பெண்களைப் பார்த்துப் பழகியிருந்தாலும் கூட, கல்யாணம் என்றவுடன் திருநெல்வேலி வந்து, ஸ்ரீவைகுண்டத்தைப் பார்த்துப் பெண் பார்க்கப் போய்க் கொண்டிருப்பது இந்த உணர்வினால்தானா?

“பொண்ணு பார்க்கவா இரண்டு வாரம் லீவ். பம்பாயிலேயே ஒரு பொண்ணு கிடைக்காதா?” என்று மானேஜர் கேட்டது ஞாபகத்திற்கு வந்தது. சிரிப்பு வந்தது.

அம்மாதான் லெட்டர் போட்டிருந்தாள். நாலு பெண் பார்த்திருப்பதாக எழுதியிருந்தாள். ஒரு தடவை வந்து விட்டுப் போகச் சொன்னாள். போய் வரலாம் என்று தோன்றியது. அம்மா சொன்ன பெண்களில் மூன்றைப் பார்க்காமலே கழித்து விட்டான். இந்தப் பெண் எம்.ஏ. ஆங்கில இலக்கியம் படித்திருந்தது. எம்.ஏ. ஆங்கில இலக்கியம் ஸ்ரீவைகுண்டத்திலேயே சகஜமாகி விட்டது. இவனுடைய பாட்டி அடிக்கடி சொல்லுவாள்.

‘எங்கப்பாதான் இந்த ஸ்ரீவைகுண்டத்திலேயே முதல்ல இங்கிலீஷ் படிச்சது. அதனால் அவுகளை ‘இங்கிலீஷ் பிள்ளை’ன்னுதான் ஊரே கூப்பிடும்’ என்று பெருமை பேசுவாள்.

பெண் எப்படியிருப்பாள்? எம்.ஏ. படித்திருக்கிறாள். நாம் அவளை எப்படி இம்ப்ரஸ் பண்ணலாம்? சில புத்திசாலித்தனத்தைக் காட்டக்கூடிய கேள்விகளை யோசித்தான்.

‘‘அம்மா! போகலாமா! ராகு காலம் போயிடுச்சு” என்ற ரவிக்குமார் உள்ளே ஏறி உட்கார்ந்தான். கார் நகர்ந்தது.

பெரிய காம்பவுண்டிற்குள் கார் உள்ளே நுழைந்தது. பெரிய தோட்டம். மாமரம், தென்னை, வேறு பல செடிகள் இருந்தன. ரவிக்குமார் இறங்கி வீட்டிற்குள் போனான். வரவேற்று உட்கார வைத்தார்கள். விசாலமான ஹால். அந்த ஹாலுக்கு சம்பந்தமில்லாமல், நாலு பிரம்பு நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. ஒரு நல்ல சோபா செட் போட்டால், ஹால் எடுப்பாக இருக்கும். பம்பாயில் இந்த மாதிரி விசாலமான ஹாலே பார்க்க முடிவதில்லை.

பெண்ணைக் கூப்பிட்டார்கள். படு சிம்பிளாக வந்து, ஒரு நமஸ்காரம் சொல்லி உட்கார்ந்தது. அலங்காரம் எதுவும்

**பிருதிவிராஜ்**

# வசியம்

ன்ணவில்லை. பவுடர், சென்ட் இல்லை. ஒரு சின்ன
ஸ்கோ செயின் மட்டும் கழுத்தில் போட்டிருந்தது.

"உன் பெயர் என்னம்மா?" என்று அம்மா கேட்டது,
வனுக்கு அபத்தமாகத் தோன்றியது.

"விலாசினி" என்றாள். "இது எங்க அம்மா
பரு" என்றார் பெண்ணின் அப்பா, ஏதோ
கப் பெரிய சரித்திர நாயகியின்
யர்க் காரணத்தை விளக்குவது
பால.

ரவிக்குமார் பேச ஆரம்
த்தான். தன்னுடைய புத்தி
ாலித்தனத்தைக் காட்ட
யற்சி செய்தான். "எனக்குத்
தரியலீங்க. நான் சயன்ஸில நல்ல
ார்க் வாங்கலை. அப்பாதான் ஆங்கில
லக்கியம் படிக்கச் சொன்னார்."

படுசாதாரணமாகப் பதில் சொன்னது.

"என்னைக் கவர்ந்தவர் கவிஞர் பாரதி. பாரதியைக்
வர்ந்த ஆங்கிலக் கவிஞன் யார் தெரியுமா?"

"யாருங்க?"

"ஷெல்லி. ஒரு சமயம் ஷெல்லிதாசன்னு கூட தம் பெயரை
வைத்திருந்தார். நான் ஷெல்லி படித்ததில்லை. அப்படி
ஷல்லியிடம் என்ன விசேஷம்?"

"போன செமஸ்டரில் ஷெல்லி படித்தது. இப்ப ஞாபகம்
ல்லை" என்று சொல்லி, நாக்கை வெளியே நீட்டி உள்ளே
இழுத்துக் கொண்டது.

ரவிக்குமார் விடாமல் நாலு கேள்வி தொடர்ந்து கேட்டு
விட்டுக் கிளம்பினான்.

கார் ஸ்ரீவைகுண்டம் பாலத்தைத் தாண்டுவதற்குள் 'பெண்
ணைப் பிடித்து விட்டது' என்று அம்மாவிடம் சொன்னான்.
அம்மாவிற்கு ரொம்பவே பிடித்திருந்தது. மளமளவென ஏற்
பாடுகள் நடந்தன. நாலே நாளில் நிச்சயதார்த்தம். மூன்று
மாதம் கழித்து கல்யாணம் என்று முடிவானது.

சித்தி பொண்ணு நர்மதா நிச்சயதார்த்தத்திற்கு முந்தின
நாள் வந்திறங்கினாள்.

"டேய், கங்கிராட்ஸ். கடைசியில ஒரு பொண்ணு உன்
கிட்டே மாட்டிக்கிட்டா!"

"ஏய் உதைப்பேன்."

"உனக்கு பெண்ணைப் பிடிச்சிருக்கா?"

"சந்தேகமென்ன?"

"அது சரி. அவளை நீ நல்லா இம்ப்ரஸ்
பண்ணணும். முதல்ல அவளை நீ நல்லா
இம்ப்ரஸ் பண்ணிட்டா, பிறகு லைப்
ரா அவ சரண்டர்."

"அவளை எப்படி இம்ப்ரஸ்
பண்ணுவது, ஒரு ஐடியா குடேன்."

"பொதுவாக இப்பவுள்ள
பொண்ணுங்களுக்கு என்ன
பிடிக்கும்னா..."

"சாருகானையா?"

"அது உங்க பம்பாயில். இப்ப
எங்க மேல்ஷாவனிசத்தை எதிர்த்
துப் பேசுகிற ஆண்களைத்தான்

பிடிக்கும். நாளை
நிச்சயதார்த்தம்
முடிந்து அவளிடம் உட்
கார்ந்து பேசும் போது மேல்
ஷாவனிசத்தைப் பற்றி பேசு...
பெரியம்மா, நெல்லையப்பர்
கோவிலுக்குப் போவோமா?"
என்று கேட்டபடி நகர்ந்தாள்.

ரவிக்குமார் யோசிக்க
ஆரம்பித்தான். மறுநாள் பெண்
ணிடம் எப்படிப் பேச வேண்
டும் என்று யோசிக்க ஆரம்பித்
தான்.

நிச்சயதார்த்தம் முடிந்து,
விலாசினியுடன் உட்கார்ந்து
பேசிக் கொண்டிருந்தான். நர்
மதா வேறு சேர்ந்து கொண்
டாள்.





''என்ன இருந்தாலும் நம்ம கபாலிக்கு திமிரு...''

''ஏன் சார் அப்படிச் சொல்றீங்க...?''

''உங்க டிப்பார்ட்மெண்ட் ஆளுங்களுக்கும் எங்க ஆளுங்களுக்கும் 'ஒன்டே' கிரிக்கெட் மேட்ச் நடத்தலாமான்னு கேக்கறான்!''

– விஜயலட்சுமி பிரட்ரிக்

"தமிழ்நாட்டுக் கவிஞர்கள் எல்லாருமே மேல்ஷாவனிஸ்ட்கள். பெண்ணை ஒரு போகப் பொருளாகப் பார்த்திருக்கிறார்கள்" என்றாள் நர்மதா.

"ஆங்கில இலக்கியம் மட்டும் என்ன வாழ்கிறது? மில்டன் மிகப் பெரிய மேல்ஷாவனிஸ்ட். 'பாரடைஸ் லாஸ்ட்'ல் பெண்ணினத்தையே எவ்வளவு பழித்திருக்கிறார்."

"கவிஞர்களின் இலக்கியம் சமூகத்தின் பிரதிபலிப்புத்தானே! சமுதாயமே ஆணாதிக்கச் சமூகம்தானே!" என்று சொன்னபடி நர்மதா, கண்ணைக் காட்டியபடி நகர்ந்தாள்.

"ஆணாதிக்கச் சமுதாயத்தின் பாதிப்பை, இலக்கியத்திலிருந்து எடுத்துவிட முடியாது. சமுதாய அமைப்பையே ஒட்டுமொர்த்தமாக மாற்ற வேண்டும்" என்று ரவிக்குமார் பேச ஆரம்பித்தான். கையை ஆட்டி, ஆட்டி நிறைய விஷயங்கள் சொன்னான். விலாசினி இவன் கைகளையே பார்த்துக் கொண்டிருந்தாள். "உங்களுக்கு நகம் அதிகம் வளர்ந்திருக்குது. நகத்தை வெட்டிடுங்க" என்று சொன்னாள்.

ரவிக்குமார் மேல்ஷாவனிசத்தைப் பற்றிப் பேசுவதை நிறுத்திவிட்டு, அவளைப் பார்த்தான்.

"இரண்டு பேரும் சாப்பிட வாங்க!" என்று யாரோ கூப்பிட, விலாசினியுடன் எழுந்தான்.

இரண்டு நாளில் பம்பாய் கிளம்பினான். ஸ்டேஷனுக்கு நண்பன் சந்திரன் வந்திருந்தான். வரும்போதே கையில் ஏதோ ஒரு கிரீட்டிங் கார்டுடன் இருந்தான்.

"டேய், நீ சூப்பர் ஆள்டா. போன கையோட நிச்சயதார்த்தமே முடிச்சிட்டு வந்துட்ட. இதுல ஒரு கையெழுத்துப் போட்டு உன்னோட ஆளுக்கு போஸ்ட் பண்ணு."

"எதுக்கு?"

"இந்தா பாரு. வந்து சேர்ந்தவுடன் ஒரு கிரீட்டிங் அனுப்பு. இது எவ்வளவு அருமையான கார்டு, உனக்காக அலைந்து திரிந்து வாங்கியிருக்கேன். நாளைக்கு இரண்டு கிரீட்டிங் கார்டு. நாளை மறுநாள் நாலு. அப்புறம் எட்டு. அதுக்கப்புறம் பதினாறு. அப்புறம்..."

"நான் செத்தேன். முப்பத்திரண்டு கிரீட்டிங் கார்டா..."

"இல்ல. அங்கதான் சந்திரனோட ஐடியா வருது. ஒண்ணுமே பண்ணாமல் பத்து நாளைக்கு சும்மா இருக்கற. அவங்க தவிச்சுப் போயிடுவாங்க."

"அப்புறம் கார்டு அனுப்பணுமா?"

"இல்லை. ஒருநாள் திடீர்னு போன் செய்யணும். மறுநாள் இரண்டு தடவை பேசணும். அதற்கு அடுத்த நாள் மூணு தடவை பேசணும். திடீர்னு பேசவே கூடாது..."

"அப்புறம்..."

"ஒருநாள் பார்சல்ல நல்ல கிப்ட் அனுப்பணும். ஊருக்குப் போறவங்ககிட்ட கோல்ட் பிரேஸ்லட் வாங்கிக் கொடுத்து விடலாம்..."

"டேய். இப்படி உன் பேச்சை நான் கேட்டால், எனக்கு கல்யாணத்திற்குப் போக காசிருக்காது..."

"அடச்சீய். நீயொரு கஞ்சன். இந்த கார்டிலாவது கையெழுத்துப் போடு."

போட்டான். போஸ்ட் பண்ணினார்கள். சந்திரன் சொல்வதும் சரியாகப்பட்டது. இப்படி ஏதாவது புதுமையாகச் செய்தால், அவளை இம்ப்ரஸ் பண்ணிவிடலாம் என்று தோன்றியது.

கார்டுகள் வாங்கி, வரிசையாக போஸ்ட் பண்ண ஆரம்பித்தான். பிறகு டெலிபோன் பேசினான். கிப்ட் என்ன வாங்கலாம் என்று யோசனை வந்தது. அவளுக்கே எழுதிக் கேட்கலாம் என்று ஐடியா வந்தது. அதுபற்றி எழுதினான். 'அட்ஜஸ்ட் பண்ணற ஆண்களைத்தான் லேடீஸ்க்குப் பிடிக்கும்'ன்னு யாரோ சொன்னது ஞாபகம் வர, கடைசியில் நாலு வரி சேர்த்தான்.

"நீ என்னை இவ்வளவு நாள் கவனித்திருப்பாய். மற்றவர்களும் என்னைப் பற்றிச் சொல்லியிருப்பார்கள். எதையாவது நான் மாற்றிக் கொள்ள வேண்டுமென்றால் எழுது. உனக்காக நான் மாறுகிறேன்" என்று எழுதி முடித்தான்.

அவளிடமிருந்து பதில் வந்தது.

''வாழ்க்கையை ஒன்றாகத் துவங்கப் போகும் சகமனிதர்கள் என்ற முறையில் நம்மிடையே இயல்பான நேசம் இருந்தால் போதுமானது. நேசத்தைக் காலம் ஆழப்படுத்தும். நாம் ஒருவரையொருவர் வசியப்படுத்த அதீத முயற்சிகள் எடுக்க வேண்டாம். இயல்பாக இருங்கள். சேர்ந்து வாழும் போது, உங்களுடைய பாதிப்பு என்னிலும், என்னுடைய பாதிப்பு உங்களிடமும் தானாக வரும். நீங்களும் நானும் மாறுவது இயல்பாக நிகழும்" என்று முடித்திருந்தாள்.

ரவிக்குமார் கடிதத்தைப் படித்து விட்டு, பேசாமல் சோபாவில் சாய்ந்து கொண்டான்.



# நீந்தப் பாடும் திமிங்கலங்களின் இசை!

**ப**றவைகளின் பாடல்களைக் கவனிக்கவே நம்மில் பல க்கு நேரமில்லை - ஆனால் திமிங்கலங்களின் இசையை சிப்பவர் சில்வியா எர்ல் - அமெரிக்க ஆழ்கடல் அரசி!

"ஐம்பதடி தூரத்தில் அவை பாடியபடி நீந்துவதைக் கட்டிருக்கிறேன். உடம்பே அந்த ஓசையில் அதிரும்..." ன்கிறார்.

மூன்று வயதுக் குழந்தையாக இருந்தபோது கடற் ரையில் விளையாடிக் கொண்டிருந்த சில்வியாவை ரு பேரலை குப்புறத் தள்ளிவிட்டது. குழந்தை பயந்து அலறுவதற்குப் பதில் வியந்து மகிழ்ந்தாள். அன்று ஆரம் த்தது ஆழ்கடலிடம் காதல்.

இன்று அறுபது வயதை நெருங்கிக் கொண்டிருக் றார் சில்வியா - காதலும் கடலைப் போல் பெருகி ரிந்துள்ளது.

உலகின் பல்வேறு கடல்களிலும் மூழ்கி அவற் ல் நிலவும் உயிரியல் அற்புதங்களைப் பதிவு செய்து, ஆராய்ச்சி மேற்கொள்கிறார் சில்வியா.

இந்தத் துறையில் துணிந்து 'குதித்த' முதல் பெண் இவர்தான். இவர் தலைமையில் ஒரு பெண்கள் குழு, கடலுக்கடியில் இரு வாரங்கள் வாழ்ந்தே காட்டியது! ஆழ்கடல் குடியிருப்பி லிருந்து வெளியேறி, ஒவ்வொரு நாளும் 10-12 மணி நேரம் கடல்பரப்படியில் 'உலா' வர வேண்டும்... விண்வெளிக்கு வீரர்களை அனுப் பும் NASA அமைப்பு, தனிமைப்படுத்தப்படும் மனிதர்களுக்கு ஏதேனும் பாதிப்பு உண்டாகிறதா என்று அறிவதற்காகவே இப்படிப் பெண்களை ஆழ்கடலில் வாழச் செய்யும் சோதனையை நிகழ்த்தியது.

சோதனையின் முடிவில் NASAவுக்கு ஏதேனும் ஞானோ தயம் உண்டாயிற்றா என்பது தெரியாது. ஆனால் சில்வியா எர்லுக்கு அது உண்டாயிற்று.

கடல் பரப்பின் கீழே, உயிர்த் துடிப்புள்ள தனியொரு உலகமே இயங்கி வருவதை அவர் கண்டார். அது ஒரு நுணுக்க மான தாள கதியுடன் செயல்படுவதை உணர்ந்தார். மனிதர் களின் தலையீட்டினாலும், மீன்பிடிப்பு முதலான இடையூறு களினாலும் அந்தப் பிரத்தியேக உலகின் தாளகதி தறிகெட்டுப் போய்க் கொண்டிருப்பது அவருக்குப் புலனாயிற்று. முதல் வேலை யாக, மீன் சாப்பிடுவதை நிறுத்தினார் சில்வியா.

ஒரு குறிப்பிட்ட வகை மீனைப் பிடிப்பதற்காக வலை வீசப்படும் போது ஆயிரக்கணக்கான வேறு உயிரினங்களும் கடலிலிருந்து வடி கட்டி எடுக்கப்படுகின்றன. ஒன்றையொன்று சார்ந்திருக்கும் உயி ரினங்களின் இயல்பு வாழ்க்கை இதனால் பெரிதும் பாதிக்கப்படு கிறது. அவற்றுள் பல, அடியோடு அழிந்துகூடப் போய்விடுகின்றன — இது சில்வியா எர்ல் அனுபவித்தறிந்த உண்மை. இதுவே மீன் உணவைத் தவிர்க்கும் முடிவுக்கு அவரைத் தள்ளியது.

'Ocean Everest' என்றொரு திட்டத்தைத் தொடங்கியுள்ளார் சில்வியா. மலையேற்ற மன்னர்கள் எவரெஸ்ட் சிகரத்தை எட்டுவதற்கு முயன்றது போல் கடலின் மிக ஆழமான 'மரியானா டிரென்ச்' என்ற பகுதியைத் தொட்டுவரும் முயற்சி இது. இதுவரை இரண்டு மனிதர்கள் மட்டுமே அப் பகுதியை அடைந்து, இருபது நிமிடங்கள்வரை இருந்து திரும்பியுள்ளனர்.

"அந்தச் சாதனையை முறியடிப்பேன்..." என்கிறார் சில்வியா எர்ல்.

தாக்க வந்த சுறா மீனைச் செல்லமாக மூக்கில் அடித்து அப்புறப்படுத் திய வீராங்கனைக்கு இது ஒரு சாதாரண சபதம்தானே!

— மலர்

நன்றி : பாபுலர் சைன்ஸ்




எஸ்.வி. சேகரின் சமீபத்திய நாடகமான 'தத்துப் பிள்ளை', அவரது வழக்கமான பாணியிலிருந்து விலகி, புதிய தோற்றத்துடன் இருக்கிறது.

ஒரு சாதா காதல் கதையை அஸ்திவார மாகப் போட்டு, அதற்கு மேலே அரசியல் வீடு கட்டுகிறார் சேகர்.

வழக்கம் போல் மாமனை மணக்க விரும்பும் ஒரு பெண். வேறு பணக்கார வரன் தேடும் தாய். சுபமான முடிவு என்கிற ஃபார்முலாதான்.

ஆனால், நாட்டு நடப்புகளைப் பிடித்துக் கிழிப்பது என்று முடிவு செய்துவிட்டபடியால் கேரக்டர்களுக்கு வெகு லாகவமாக, அரசியல் சாயம் பூசி விட்டார் சேகர்.

பிரேமானந்தாவையும் சந்திராசாமியையும் இணைத்து ஒரு சாமியார் கேரக்டர். அகிலாண்ட நாயகியையும் அன்னாரின் தோழியையும் இணைத்து ஒரு கேரக்டர். மூன்றாந் தர அரசியல்வாதிகளின் ஒட்டுமொத்தக் குறியீடாக ஒரு கேரக்டர்.

வசனங்களின் கூர்மையான நக்கல், மண்டையைத் தூக்குகிறது.

("லைட் ஹவுஸ் பக்கத்துல நல்லதா ஒரு இடம் பார்த்தேன். முடிச்சிடலாம்னா கேக்க மட்டேங் கறான் சுவாமி!"

"ஏன்?"

"சும்மா இருங்க. அவங்க முடிக்கச் சொன்னது மெரீனா பீச்சை. கவர்மென்ட் அதை விக்கறதா இல்லையாம்.")

வளர்ப்பு மகன் விவகாரத்திலிருந்து, வருமான வரி ரெய்டு



# தத்துப்பிள்ளை







வரை, நெஞ்சுவலியிலிருந்து ஹவாலா வரை சகலத்தையும் ஒரு பிடி பிடித்திருக்கிறார்கள். ரஜினியின் அரசியல் முயற்சிகளைக் கூட விட்டு வைக்கவில்லை.

காட்டமான நாடகம் கண்டிப்பாகப் பாருங்கள்!

— கிச்சா

(பி.கு: அருகிலுள்ள படங்கள், தத்துப் பிள்ளை நாடகத்திலிருந்து எடுத்த காட்சிகள். கமென்ட்களின் காப்பிரைட் மட்டும் நம்முடையது.)

# தேர்வு

## தி. சிவசுப்ரமணியன்

கடையில் இன்று அதிகக் கூட்டமில்லை. அது, அந்த இளம் யுவதிக்கு வசதியாய் இருந்திருக்க வேண்டும். அவள் பாட்டுக்கு செருப்புக்களைப் பார்ப்பதும், காலில் போட்டு அழகு பார்ப்பதும், ஒதுக்குவதுமாய் இருந்தாள்.

கூட வந்தவர் அவள் தகப்பனாராக இருக்க வேண்டும். வயது சுமார் நாற்பது இருக்கலாம். ஆனால், அது தெரியக்கூடாது என்பதற்காகவே தலைமுடிக்கு 'கறுப்புச் சாயம்' இட்டிருந்தார் போலத் தோன்றிற்று.

அவர் பொறுமையாய் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார் அவளை. அவள் 'ஒரு செருப்பை எடுப்பாள்; காலில் போட்டுப் பார்த்து சரியாக இருக்கிறதா என்று பார்ப்பாள். அப்புறம் அதன் டிசைனை முன்னும் பின்னும் பார்த்து விட்டு,

"இந்த குறுக்கே இருக்கிற 'வார்' நல்லால் லையே, இதே மாடல்ல, இந்த வார் இல்லாம இருக்கிற மாதிரி 'மாடல்' எடுங்களேன்....

"இந்த டிசைன் நல்லாருக்கு ஆனால் கலர்தான் நல்லால்லை. வேற கலர் இருக்குமா?"

என்பாள்.

கிட்டத்தட்டக் கடையில் இருக்கிற எல்லா 'மாடலும்' காட்டியாகி விட்டது. ஒரு வழியாய்த் திருப்திப்பட்ட மாதிரி ஒன்றை எடுத்துக் கொண்டாள். காலில் போட்டுப் பார்த்தாள். எப்படி இருக்கிறது என்று கண்ணாடியில் பார்த்தாள். அப்புறம், "எப்படி இருக்குது?" என்று கூட அமர்ந்திருந்தவரிடம் கேட்க அவர், "அருமையா இருக்கு ரோசி!" என்றதும்தான் "பில் போடுங்க" என்றாள்.

நான் பில் போட்டு அதை பேக் செய்யும் வரை 'சரியாக இருக்கிறதா, வேறு எடுக்கலாமா?' என்ற சிந்தனை அவளுள் ஓடிக் கொண்டு இருந்ததை, என்னால் படிக்க முடிந்தது.

இருவரும் கிளம்பிப் போனதும், "நேரத்தை 'வேஸ்ட்' பண்ணிட்டுதுங்க. பார்த்தமா, எடுத்தமான்னு இல்லாம! சுத்தக் கழுத்தறுவை" - முதலாளி எரிச்சலுடன் முனகிக் கொண்டார்.

ஆனால் எனக்கு அவ்விதம் தோன்ற வில்லை. அந்தப் பெண் மேல் வெறுப்பும் தோன்றவில்லை.

என்னைப் பொறுத்தவரை, வாழ்க்கையில் தேர்வு என்பது ஒரு அருமையான விஷயம். ஏனோ எனக்கு அது ஒரு போதும் கிடைக்காது போயிற்று.

சின்ன வயசில் படிக்க ஆசைப்பட்டுத் தேர்வு செய்ததை அப்பா ஒத்துக் கொள்ளவில்லை.

"போதும் போதும் 'சைன்ஸ்' குரூப் எடுத்துப் படிச்சுக் கிழிச்சிடப் போறே. அப்படியே படிச்சாலும், டாக்டருக்கெல்லாம் படிக்க வைக்க முடியாது என்னால. பேசாம 'அக்கவுண்டன்சி' படி போதும்."

தேர்ட் குரூப்பில் தான் அப்பா சேர்த்து விட்டார்.

பி.காம் படித்து விட்டு, "சி.ஏ. பண்றேனே" என்றவனைத் தடுத்து, "உத்யோகம் தேடிக்கோ!" என்றார்.

நல்ல வேலை கிடைக்கத் தாமதமான

போது, "எந்த வேலையா இருந்தா என்ன? காசு வருதில்ல. கவுரவம் பார்க்கக் கூடாது!" என்று தம் நண்பர் மூலம் இந்தக் கடையில் 'கேஷியராகச்' சேர்த்து விட்டார்.

படிப்பிலோ, வேலையிலோ, இரண்டிலுமே விரும்பியது கிடைக்காது போயிற்று. விரும்பியதைத் தேர்வு செய்கிற உரிமை கைவராது நழுவிற்று எனக்கு. ஆனால் இந்தப் பெண்ணுக்கு அவ்வித மல்ல. காலணியே ஆனாலும் விரும்பியதைப் பொறுமையுடன் தேர்வு செய்கிற நிலையும், அதைப் பொறுமையுடன் அங்கீகரிக்கிற தகப்பனும், கிடைத்திருக்கிறது அரிய விஷயம் என்று எனக்குத் தோன்றிற்று.




**யோ**சனையுடன் நேரமும் நழுவ, கடையைப் பூட்டிக் கிளம்பின போது மணி ஒன்பதரையைத் தொட்டு விட்டிருந்தது. சைக்கிளை எடுக்கையில் சோமு கூப்பிட்டான்.

சோமு எங்கள் கடைக்கு அடுத்தாற்போல் 'பான் ஷாப்' வைத்திருப்பவன். வழக்கமாய் அவனிடம்தான் பீடா வாங்குவேன். "பீடா வாங்கினது இருக்கு, வேணாம்" என்றபடி நகரப் பார்த்த போது, அவனே அருகில் வந்து விட்டான்.

"வந்த பார்ட்டியை அசத்தலாப் பேசி கவுத்திட்டியா?"

"எந்த பார்ட்டி?"

"அதாம்மா. இப்ப வந்துட்டுப் போச்சுதே 'கார்' பார்ட்டி.... அதான்! பாவம் கெழவனைக் கட்டிக்கிட்டு காஞ்சு போயி கிடக்குது. நம்ம கடைக்கு எதுனாச்சும் வாங்க வந்தாக் கூட தளுக்கி மினுக்கும். அதான் கேட்டேன்"

"என்னது, கூட வந்தது அந்தப் பொண்ணோட புருஷனா?"

"பின்ன 'நைனா'ன்னு நினைச்சுக்கிட்டியா. பாதிப் பேரு அப்படித்தான் நினைச்சிக்குவாங்க. பாவம் அந்தப் பொண்ணு. ஏழை வூட்டுல பிறந்தது அதும் தப்புதான். அப்பன் காரன் காசுன்னதும் வாயைப் பொளந்துக்கிட்டு பொண்ணைத் தள்ளி விட்டுட்டான்."

"எப்படி சோமு அது சம்மதிச்சுது?"

"யாரு கேட்டது அதும் சம்மதத்தை? இங்லீஷ்ல ஒரு பழமொழி சொல்வாங்களே, என்னது அது?"

"பெக்கர்ஸ் கெனாட் பி சூசர்ஸ்" என்ற போது என் மனசில் பாரம் கூடியிருந்தது.




பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# ஸ்ரீராம் சிட்ஸ்.

## 0 லட்சத்திற்கும் மேலான சந்தாதாரர்களின் இதயங்களில் இடம் பெற்றுள்ள பெயர்!

### மறைந்திருக்கும் பரிசை அடைய வழி:



















ிப்பொழுது உள்ள சந்தாதாரர்களுக்கு அனுப்பப்படும் அஞ்சலில் ஒரு ழகிய சின்னஞ்சிறு காற்றாடி இடம் பெற்றிருக்கும். ஸ்ரீராம் கிளையில் ரு புதிய சந்தாதாரரை அறிமுகம் செய்தவுடன் அதனைக் கொடுத்து ரிசுக் காற்றாடிக் கூப்பனை பெற்றுக்கொள்ளலாம். இதில் உள்ள நூலை முக்கும் போது, 3 இலக்க எண் தென்படும். அதன் கூட்டுத் தாகைக்கேற்ப உங்கள் பரிசை நீங்கள் பெற்றுக் கொள்ளலாம். ஒவ்வொரு ரிசுக் காற்றாடிக் கூப்பனுக்கும் உங்களுக்கு ஒரு பரிசு உண்டு. ஸ்டெயின் லஸ் ஸ்டீல் சிந்தாமணி டப்பா முதல் 90 லிட்டர் ஃப்ரிட்ஜ் வரை.

### தொடரும் பரிசுக் குவியல்:

இந்த அறிமுகப்படுத்துவோர் பரிசுகளைத் தவிர, ஆண்டு முழுவதும் ங்களுக்காகப் பரிசுகள் காத்திருக்கின்றன. மொத்தம் ரூ. 4 கோடி திப்புள்ள 402350 பரிசுகள். கைனடிக்ஹோண்டா முதல் 2 கிராம் ங்கக்காசு வரையுள்ள மாதாந்திர சூப்பர் குலுக்கல் பரிசுகளும், 4 ிராம் தங்கக் காசு முதல் மாருதி 800 கார் வரையுள்ள பம்பர் குலுக்கல் ரிசுகளும் இவற்றுள் அடங்கும்.







*ஸ்ரீராமில் சேர்ந்திடுங்கள்.*
*பரிசுகளை வென்றிடுங்கள்.*

- கிளைமேலாளர் முன்னிலையில் மட்டுமே காற்றாடியைத் திறக்க வேண்டும்.
- அறிமுகப்படுத்துவோர் பரிசு தற்போதைய சந்தாதாரர்களுக்கு மட்டுமே.
- அறிமுகப்படுத்துவோருக்காக மறைந்து காத்திருக்கும் பரிசுகளில் அடங்குபவை SS மிக்ஸ்பௌல், 4 கிராம் தங்கக்காசு முதல் 90 லிட்டர் ஃப்ரிட்ஜ் வரை.

SHRIRAM GROUP COMPANIES MADRAS

**ஸ்ரீராம்** சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட்.
**ஸ்ரீராம்** சிட்ஸ் தமிழ்நாடு லிமிடெட்.

*நிர்வாக அலுவலகம்:* "சுப்பிரமணியம் பில்டிங்,"
1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன்: 8520700/8523932/8522651/
8525536/8520797

*ஸ்ரீராம் சிட்ஸ் - உங்கள் வளமைக்குப்பாதை.*

ADWAVE/SCI/5277

**ச**ரத். தற்போதைய தமிழக கிரிக்கெட் அணியின் நம்பிக்கை நட்சத்திரங்களில் ஒருவர். இடக்கை ஆட்டக் காரரான இவர், கோவாவுக்கு எதிராக ஆடிய ரஞ்சிகோப்பை ஆட்டத்தில் இருநூறு ரன்கள் எடுத்தார். பம்பாய்க்கு எதிராக ஆடிய போது 90 ரன்களைக் குவித்தவுடன், "சரத்தால்தான் தமிழக அணி வென்றது!" என்றார் பம்பாய் கிரிக்கெட் அணியின் மானேஜர் சுருநாயக்.

கெம்ப்ளாஸ்ட் நிறுவனத்தில் பணிபுரியும் இவர், வாழ்க்கையின் நடைமுறைகளை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்ளப் பழகியிருக்கிறார். "இந்திய அணியில் இடம்பெறும் ஆசை எனக்கும் உண்டு. ஆனாலும் என்னைப் போன்ற திறமைசாலிகள் மற்ற மாநில அணிகளிலும் இருக்கிறார்களே! எத்தனை திறமைசாலிகள் இருந்தாலும் இந்திய கிரிக்கெட் அணியில் மொத்தம் பதினான்கு பேர்தானே இடம்பெற முடியும்! எனவே, நான் இடம்பெற்றாலும் மகிழ்ச்சிதான்; பெறாவிட்டாலும் மகிழ்ச்சிதான்! ஏனெனில் கிரிக்கெட்டை அதற்காகவே - அது அளிக்கும் மகிழ்ச்சிக்காகவே நான் ஆடுகிறேன்!" என்கிறார்.

மூன்று வருடங்களுக்கு முன்பு ஏற்பட்ட விபத்தொன்றில் இடது காலில் பெரும் எலும்பு

**சேபாக் மைதானம் மீண்டும் களைகட்டியிருக்கிறது! ரஞ்சிக் கோப்பை அரையிறுதியில் டெல்லியை விளாசித் தள்ளி விட்ட தமிழக அணி, இறுதிப் போட்டியில் கர்நாடகாவுடன் மோதுகிறது. அந்த அணியின் இரண்டு இளைஞர்கள், இந்த சீசனில் அற்புதமாக ஆடியிருக்கிறார்கள்....**



* சரத்

முறிவு. "ஆறு மாதங்கள் படுத்த படுக்கையாக இருந்தபோது, இனி விளையாடவே முடியாதோ என்று பயந்து போனேன். என் அம்மாவும் பெங்களூரில் டாக்டராக இருக்கும் என் அத்தையும் கொடுத்த உற்சாகத்தால்தான் மீண்டும் பழையபடியே விளையாட ஆரம்பித்திருக்கிறேன்!" என்று கூறும் சரத் போட்டிகளில் விளையாடப் போகும்போது அம்மன், விநாயகர் படங்களைப் பாக்கெட்டில் வைத்துக் கொள்ளாமல் போவதில்லை!



* ரூபன் பால்

# இந்திய அணியில் இடம் கிடைக்குமா?

அறுபது பந்துகளில் நூறு ரன்கள், கடைசி ஐம்பது ரன்கள் பதின்மூன்றே பந்துகளில் எடுத்துச் சாதனை புரிந்த இன்னொரு நம்பிக்கை நட்சத்திரம் ரூபன் பால். இத்தனைக்கும் அவர் ஆடிய முதல் ரஞ்சிடிராஃபி மாட்ச் அது!

"பத்ராவதியில் கர்நாடகாவுக்கு எதிராக ஆடிய ஆட்டத்தில் எதிரணியினர் இரு இன்னிங்ஸில் 716 ரன்கள் எடுத்தபோதிலும் அவற்றில் ஒரு 'பை' (bye) கூட இல்லாமல் பார்த்துக் கொண்டேன்!" என்கிறார் விக்கெட் கீப்பரான இவர் காலரை நிமிர்த்திக் கொண்டு!

இருபத்து மூன்று வயதாகும் ரூபன் பால் இந்திய அணியில் இடம்பெற வேண்டும் என்கிற ஆசையைச் சிறு வயதிலிருந்தே வளர்த்து வந்திருக்கிறார்.

"மாநில அளவில் நடந்த 17-வயதுக்கு உட்பட்ட பிரிவில் ஒருமுறை செஞ்சுரி அடித்தேன். இருப்பினும் அடுத்த மூன்று முறைகளிலும் என் பெயர் அணியில் இடம்பெறவில்லை. இவ்வளவுக்கும் அப்போதைய அணித்தலைவர் ஆஷிஷ் என்னை அணியில் சேர்த்துக் கொள்ளவே விரும்பினார். இதற்குக் காரணம் 'பாலிடிக்ஸ்' என்று சொல்லப் பிடிக்கவில்லை. ஆனால் வேறு எந்த வார்த்தையை உபயோகப்படுத்தி அதுபோன்ற சூழ்நிலையை விளக்குவது?" என்று தாம் மனமொடிந்த சந்தர்ப்பங்களைக் குறிப்பிடுகிறார்.

உலகக் கோப்பைப் பந்தயத்தில் பங்குபெற்ற ஆஸ்திரேலிய அணியின் விக்கெட் கீப்பர் இயான் ஹில்லியை இவருக்கு ரொம்பப் பிடிக்குமாம். "என்னிடம் ரொம்ப நட்பாகப் பழகினார். வெவ்வேறு வகைப்பட்ட பாட்ஸ்மென்களை விக்கெட் - கீப்பிங்கில் எப்படிக் கையாள வேண்டும் என்பது பற்றி எனக்கு விளக்கினார்!" என்கிறார் ரூபன் பால்.

சரத் மாதிரியே இவரும் தீவிர பக்தர். தமது ஒவ்வொரு சாதனைக்கும் மாதா கோவிலுக்குச் சென்று காணிக்கை செலுத்தத் தவறுவதில்லை இவர். "ஆண்டவர் மனசு வச்சதால்தானே என்னால் இன்றைக்குப் பேர் சொல்லும்படி வளர முடிந்தது!" என்கிறார் பக்தியில் நெகிழ்ந்தபடி!

**- ஜி.எஸ்.எஸ்.**

படங்கள் : **சாரி**

# கல்யாண விருந்து

"இதுதான் உன்னோட ரூம்'' என்று பாலா அடையாளம் காட்டினான்.

கதவைத் திறந்ததும் நெடி குப்பென்று அடித்தது. காற்றுப் போக வசதி இல்லை.

"ஸ்டோர் ரூம் இன்-சார்ஜ்."

தலையில் கிரீடம் வைக்கப் பட்டது.

"டேய் பாலா..."

அவனது மாமா பின்னாலேயே வந்து விட்டார்.

"என்னடா இது... முதல்லே அவருக்கு டிபன், காப்பி தருவியா. வந்த உடனே பொறுப்பைத் தலையில கட்டிக்கிட்டு..."

இடைமறித்தேன்.

''நான்தான் விசாரிச்சேன். ஸ்டோர் ரூம் எதுன்னு..."

''வாங்கோ. மூணு நாளும் இங்கேதான் நிக்கப் போறேள். மத்தியானம்தான் சாமான் வேன்ல வருது. ராஜப்பா வந்திருவார்... என்ன மெனுன்னு ஒரு தடவை பார்த்திரலாம்"

கல்யாணம் ஒரு பெரிய வீட்டிலும் வந்து இறங்கிய நாங்கள் இன்னொரு வீட்டிலுமாக ஏற்பாடு. எதிர் வீடே மாமாவினுடையதாம்.

டிபன் சாப்பிடும் போது சொன்னேன்.

"இதான் எனக்கு ஃபர்ஸ்ட் எக்ஸ்பீரியன்ஸ், வில்லேஜ்ல மேரேஜ் அட்டெண்ட் பண்றது."

"எனக்கும். தலைசுத்தறது. எது வேணும்னாலும் மூணு கி.மீ. போகணும் டவுனுக்கு. எங்கப்பாவோட பெரிய பிரச்னை. நல்லவேளை தங்கை கல்யாணம் கிராமத்துலன்னு முடிவாச்சு. எவரெஸ்ட்ல வையின்னு சொல்லாம போனாரே..."

"கவலைப்படாதே...." என்றேன்.

"எனக்கென்ன... நீதான் பிராமிஸ் பண்ண மாதிரி கூடவே வந்துட்டியே. கண்ணன், சக்தி எல்லாம் மாப்பிள்ளை அழைப்புக்கே வரதாச் சொன்னாங்க. அவங்களும் வந்தாச்சுன்னா உனக்கும் ஒரு சேஞ்ஜ் கிடைக்கும்."

"ஒண்ணும் வேணாம். ஐ கேன் மானேஜ். ரெண்டு நாள் கூத்து."

பாலா தணிந்த குரலில் சொன்னான்.

''இங்கே பாரு... சட்டுனு கேட்ட உடனே எடுத்துக் கொடுத்துராதே. ஒரு கிலோ கேட்டா முக்கா கிலோ கொடு. அதையும் ஏன்... எதுக்குன்னு விசாரிச்சுட்டுக் கொடு. முழுசா மாமாவையும் நம்பிர முடியாது."

இதுவரை தெளிவாய் இருந்தவன் இப்போதுதான் குழம்பினேன்.

"என்ன.... சொல்றே?"

''பயந்துராதே. எப்படியும் போட்ட லிஸ்ட்படிதான் சாமான் வாங்கியிருக்கு. இருந்தாலும் கொஞ்சம் 'கெத்'தா இருந்தாத்தான் ஏமாத்தாம இருப்பாங்க. அதுக்குச் சொன்னேன்."

கைகழுவிய போது குளிர்ந்த நீர் பட்டு உடம்பு ஜிலீரென்றது.

வேன் நான்கு மணிக்குத்தான் வந்தது.

''எப்ப பட்சணம்



பண்றது?" என்று யாரோ பொருமிக் கொண்டிருந்தார்கள்.

இதற்காக சுமாரான வேட்டி, சட்டை கொண்டு வந்திருந்தேன். இறங்கிய பொருட்களை எடுத்து அடுக்கவே அரைமணியானது.

"காய்கறி வருமே.. அதை எங்கே வைக்கறது?"

"ஏகப்பட்ட எடம் இருக்கு. பின்கட்டுல போடுங்கோ. நறுக்கி வைக்கிறவாளுக்கும் வசதி."

பின்கட்டு, எடுத்துக் கட்டி, முற்றம், கேமரா ரூம், சம்புடம் என்று தனி அகராதி தேவைப்படுகிற அளவு புதுப்புது வார்த்தைகள்.

"இதான் முந்திரி, திராட்சை.. சர்க்கரை மூட்டை அதோ மூலைல..."

எனக்குச் சூழல் புரிபடுவதற்குள் கல்யாணம் முடிந்து விடுமென்று தோன்றியது.



**ரா**ஜப்பாவை எனக்கு அறிமுகம் செய்து வைத்தார்கள். தளர்ந்து போன உடம்பு. இடது கால் சற்று வீக்கம். பொடி மட்டை சொல்லி வைத்த மாதிரி கீழே விழுந்து கொண்டேயிருந்தது. மறுபடி எடுத்து ஒரு வசவுடன் இடுப்பில் சொருகிக் கொண்டார்.

மழமழவென்ற மரத்தூணில் சாய்ந்து கொண்டார்.

எட்டடி நீளக் குழிதான் அடுப்பு. கிட்ட நெருங்கும்போதே அனலடித்தது. நிரந்தரமாய் இரண்டு பெரிய அடுக்குகளில் கலங்கலாய் வெந்நீர். ஒன்றில் காப்பி பாத்திரம் கூட மிதந்தது.

"எத்தனை பேர் சாப்பிட வருவா... கரெக்டா சொல்லிட்டா... எனக்கும் வசதி..."

"நம்ம உறவுக்காரா... அப்புறம் இவங்க ஆபீஸ்காரான்னு எப்படியும் இருநூறு பேர் தேறலாம். கிராமத்து டிக்கெட் இருக்கே. ஒரு பய அடுப்பு மூட்ட மாட்டான்" என்றார் மாமா.

"ப்ச்... என்ன மாமா இது.. நாமதானே இன்வைட் பண்ணியிருக்கோம்..." என்றான் பாலா.

"போடா... இங்கே எவனுக்கும் சொரணையே இல்லே... திட்டினாக் கூட ஈன்னு இளிச்சுண்டு நிப்பான்..."

பாலா, மாமாவைப் பற்றி அதிருப்தி தெரிவித்ததன் காரணம் புரிந்தது. மனிதருக்கு எதிலுமே சீரியஸ்னஸ் இல்லை.

"சொல்லுங்கோ... என்ன போடலாம்"

ராஜப்பா மெனுவைப் பற்றி விசாரிக்க பாலா சொல்லிக் கொண்டிருந்தான்.

நகர்ந்தேன். கொல்லைப்புறம் விளக்கு வெளிச்சம் இல்லை. நூறடி நடந்தால்தான் டாய்லட் வசதி.

"இருட்டுல எப்படி போறது..." என்றேன் கவலையாக.

"குச்சி நட்டு டியூப்லைட் வச்சிருவான். எல்லாம் ஏற்பாடு ஆயிருத்து..." என்றார் மாமா.

திரும்பி வந்ததும் பாலா மீண்டும் என்னை ராஜப்பாவிடம் அறிமுகப்படுத்தினான்.

"என்ன சாமான் வேணும்னாலும்.... இதோ... இவர்தான்."

"பேஷா..." என்றார் சர்ரென்று பொடியை உறிஞ்சி.

**மா**ப்பிள்ளை அழைப்பன்று இரவு முகூர்த்தப் பை போடும் நேரம் பாலா என்னுடன் இருந்தான்.

சக்தி, கண்ணனின் வாழ்த்துத் தந்திகள் வந்தன. ஏதாவது சமாதானம் சொல்லி விடுவார்கள், திரும்பிப் போனதும்.

மற்ற நேரங்களில் என் சாம்ராஜ்யம் அனலடிக்கிற சமையலறையும், கால்களைக் கீழே வைக்கக் கூசுகிற அளவு 'சொத சொத'வென்ற தரையும், கலவையான நெடிகளும், 'விட்டு எப்போது ஓடலாம்' என்கிற மனோநிலையும்தான்.

**ரா**ஜப்பா கடைசி வரை உட்கார்ந்த இடத்தை விட்டு எழுந்திருக்கவே

**ரிஷபன்**

யில்லை.

"அண்ணா... சாம்பாருக்கு..."

"ஊறுகாய்க்கு இது போதுமா..."

"கோசுமல்லிக்கு."

அளவுகளைச் சரிபார்க்கச் சொன்னார்கள். முறத்தோடு உப்பை அள்ளிப் போய் பாத்திரத்தில் கவிழ்த்தார்கள். மிளகாய்ப் பொடி நெடி கமறியது.

"அய்யோ... அண்ணா.. இப்பத்தான் நான் உப்புப் போட்டேன்... சாம்பாருக்கு..."

இரண்டாம் தடவை போட்டு விட்டான் தவறுதலாய். ராஜப்பா நிதானமாய் பொடி உறிஞ்சி விட்டுச் சொன்னார்.

"உருளைக் கிழங்கு இருக்காடா."

"ஆயிருத்து..."

"போடா மடச்சாம்பிராணி... எடுரா... இந்த சைசுக்கு... சாதத்தை கெட்டியாப் பிடி.. போடு அதை சாம்பார்ல..."

பின்பு சாப்பிட்டவர்கள் எந்தக் குறையும் சொல்லவில்லை என்றதும் எனக்கு ஆச்சர்யம்.

"ஸாரை நன்னாக் கவனிடா. நம்ம கூட வெந்துண்டு இருக்கார்..." என்றார் நடுவில் என்னையும் கவனித்து.

"ஒண்ணும் வேணாம். பசியே இல்லே... எதுவுமே பிடிக்கலே" என்றேன்.

"என்னது... நீங்கதான் சர்டிபிகேட் தரணும்... போடுரா இலையை..." என்று சகாவை அதட்டினார்.

கைநீட்டி மறுத்தேன். இலையில் வைத்த சாதம் திணறியது.

"என்ன இப்படி முழிக்கிறீங்க. ரேஸ்கறி போடு..."

"வேணாம்... ஒரு அப்பளம் வைங்கோ..." என்றேன்.

என்னருகில் நகர்ந்து வந்தார். பக்கத்தில் தான் இலை போடப்பட்டு இருந்தது.

"போடுரா அப்பளத்தை..." என்றவர் அவன் நகர்ந்து போனதும் சொன்னார்.

"உங்களுக்குத் தெரியாதது இல்லே. டவுன்ல இருக்கிறவா படிச்சவா... கொரிக்கிறது இப்ப நாகரிகம். நாங்க அந்தக் காலம். வேணும் கிறதைக் கேட்டு வாங்கி ருசிச்சுச் சாப்பிட்டாலே எங்களுக்கு நிறைஞ்சுரும். எவ்வளவு மெனு பாருங்கோ. இதையெல்லாம் விட்டுட்டு கடை அப்பளத்தை கேட்கிறேளே... எங்களுக்கு எப்படி ஸார் திருப்தி வரும்?"

சுரீலென்றது. சைகை செய்ததும் ஒவ்வொன்றாய் ஒரு கரண்டி பரிமாறப்பட்டது.

"கஷ்டப்படுத்தலே... டேஸ்ட் பாருங்கோ. போதும்..."

அஸிஸ்டெண்ட் எதிரில் வந்தான்.

"அண்ணா... கரைச்சாப்ல கொண்டு வரவா..."

"ம்..." என்றார்.

மோர் சாதம் கரைத்துத் தரப்பட்டது.

"போதும்டா... எதேஷ்டம்.."

கடகடவென்று குடித்தார்.

"நீங்க போங்கோ... கொஞ்சம் ரெஸ்ட் எடுத்தா... நிம்மதி. சாயங்கால காரியம் இருக்கே... டேய்... அங்க பாரு... அடுப்புல தீய்றது..." என்றார் சட்டென்று திரும்பி.

கையலம்ப எழுந்து போன போது இந்தக் கல்யாணத்தை மறக்க மாட்டேன் என்று தோன்றியது.

## 'சுருக்–நறுக்' போட்டி முடிவு – 21

### மகிழ்ச்சி என்பது.....

- கடவுளைப் போல, அதை உணர்ந்தவர் உள்ளத்திலேயே ஊற்றெடுக்கும் ஊற்று நீர்.
  *– ஜி. இந்திரா, சென்னை – 40.*

- குருடனின் கண்களுக்குக் கூட காட்சி தரும் வானவில்.
  *– எல். பாபு, போளூர்.*

- பாலைவனத்தில் வீசப்பட்ட பனிக் கட்டித் துண்டுகளைப் போல விரைவில் மறைந்து போகும்.
  *– எஸ். சம்பத்குமார், மதுராந்தகம்.*

- மனநிறைவின் வெளிப்பாடு.
  *– வி. ஸ்வர்ணலட்சுமி, சென்னை – 17.*

- இன்று 'ஊழல்' பற்றி நாளிதழில் செய்தி வராமல் இருப்பது.
  *– விருதை க. தனசேகரன்*

- பிறருடன் பங்கிடப் பங்கிட அதிகரிக்கும் ஒரே பொருள்.
  *– வி.பி. மகராசி, மதுரை-16*

(ஒவ்வொன்றும் ரூ. 50 பரிசு பெறுகிறது)

# தாவணி!

தலையில் சுமந்து வந்து போட்ட வேலிக்கருவை முள்கட்டு தொப்பெனத் தரையில் விழுந்தது. சும்மாடாகிய சேலைத் தலைப்பை உதறி இடுப்பில் செருகினாள் அஞ்சலை. காலை எட்டு மணிக்கே வெயில் தகித்தது. உடலெங்கும் வியர்வை ஆறு போல் ஓட, கிழிந்திருந்த ரவிக்கை உடலோடு ஒட்டிக் கொண்டது. உடுத்தியிருந்த புடைவை வேர்வையால் நனைந்து முடைநாற்றம் வீசியது. தனக்குத் தானே முகத்தைச் சுழித்துக் கொண்டாள். 'இந்தப் பொங்கலுக்காச்சும் ஒரு சீலை எடுக்கணும்.'

சேலையைப் பற்றி யோசித்ததுமே முத்தம்மா கிழவிதான் நினைவுக்கு வந்தாள் அஞ்சலைக்கு. முத்தம்மா யாருமற்ற அனாதை. அவளது நிலையை உள்ளூர் வி.ஏ.ஓ.தான் தாசில்தாருக்கு எழுதி, மாதந்தோறும் உதவித் தொகை வந்து கொண்டிருக்கிறது. அதோடு கூட வருடத்துக்கு ஒருமுறை நூல் சேலை இலவசமாகக் கொடுக்கிறார்கள்.

பொங்கலுக்கு ஒரு புடைவை கிடைத்தது. சாம்பல் வண்ணத்தில் சிவப்பு நிறக் கரை போட்டு. உயரம் குறைவுதான் என்றாலும் கூட அந்தப் புடைவை பார்க்க மிகவும் அழகாக இருந்தது. பொங்கலன்று அதைக் கட்டிக் கொண்டு அஞ்சலையிடந்தான் முதலில் வந்தாள் முத்தம்மா.

"அஞ்சலே... எலே அஞ்சலே... ஏஞ்சீல நல்லாயிருக்கான்னு பாரு புள்ளே." சிறு குழந்தையின் மகிழ்ச்சி முகமெல்லாம் சிதறிக் கிடக்க, வாயில் வெற்றிலையை மென்றபடியே கூப்பிட்டவளைப் பார்த்தாள் அஞ்சலை. தையலே நெய்தலாய் ஆகிப் போயிருந்த புடைவையையே கட்டிக் கொண்டிருந்த முத்தம்மா மறைந்து, புத்தம் புதுச் சேலையில் அவளை அடையாளமே தெரியவில்லை அஞ்சலைக்கு.

"அத்தே... ரொம்ப நல்லாருக்கத்தே. அடையாளமே தெரியலைத்தே."

"அப்பிடியா சொல்றே... இந்தச் சீலய அந்தாபீஸுக்குப் போயி வாங்கிட்டு வர்றதுக்குள்ள என்பாடு ரொம்பக் கஷ்டமாப் போச்சு புள்ளே!"

"ஏன்த்தே... சீல சும்மாதான குடுத்தாங்க! நீ என்னமோ ரொம்பக் கஷ்டப்பட்டேங்கறியே..."

"சும்மா குடுத்ததுனாலதான்புள்ள அப்படி சீரழிச்சாங்க! காசு கொண்டு போயிக் கடையிலே வாங்கினா, நம்ம சவுகரியத்துக்கு வாங்கலாம்லே? என்ன கலரு இது! சோவையா.. ரத்தஞ்சுண்டுனாப்ல..."

அலுத்துக் கொண்டாள் முத்தம்மா. இதே முத்தம்மா சென்ற ஆண்டு வரை வேலையுமில்லாமல், கூலியுமில்லாமல் கிழிந்து நைந்து போன துணியுடன் உலாவியது நினைவுக்கு வந்தது. வானம் பொய்த்துப் போய்... மழையில்லாமல் கிணறுகளெல்லாம் வறண்டு போய்.... 'சென்ற ஆண்டின் கொடுமை எந்தக் காலத்துக்கும் வரக்கூடாது' என்று தனக்குள் முனகிக் கொண்டவளைப் பார்த்தாள் முத்தம்மா.

'தானங்குடுத்த மாட்டப் பல்லப் புடிச்சுப் பாத்தானாம்' கதையால்லே இருக்கு? ஒண்ணுமே இல்லாம நாறிப் போயிக் கெடந்ததுக்கு இது பத்தாதா இவளுக்கு? கலர் புடிக்கலையா முல்லே கலரு... கெழவிக்கி வந்த வாழ்வப் பாரேன்'. மனசுக்குள் நொடித்தாள். ஆனாலும் முகத்தில் முறுவல் காட்டினாள் அஞ்சலை.

"ஆமாத்தே... நீ சொல்றதும் சரிதான்... என்ன இருந்தாலும் காசு போட்டு வாங்குனம்னா அது கணக்கே தனிதானே..."

"ஆமா அஞ்சலை... புள்ளைங்கல்லாம் எங்க?"

"ஏத்தே? எதுக்குக் கேக்கற?"

"இல்ல புள்ள. நல்ல நாளும், பெரிய நாளுமாப் புள்ளைகளைப் பாத்துட்டுப் போகலாம்னு வந்தேன். எனக்காரு இருக்கா சொல்லு..."

"ஏத்தே, நாங்கல்லாம் இல்லியா... இப்பிடிப் பேசுனா எனக்குக் கெட்ட கோவம் வரும்!"

"சரி, பேசலடி தங்கம். புள்ளைங்க வந்துச் சுன்னா... இந்தா நாங் குடுத்தேன்னு ஆளுக்கு எட்டணா எடுத்துக்கச் சொல்லு."

இரண்டு ரூபாய்த் தாளை நீட்டினாள் முத்தம்மா. இதைச்

நாகை கவின்

சற்றும் எதிர்பார்க்கவில்லை அஞ்சலை. வாங்குவதற்குத் தயக்கமாக இருந்தது அவளுக்கு. அன்றைய நிலையில் இரண்டு ரூபாய் என்பது பெருந்தொகையே. எவ்வளவோ செலவுகளுக்காகும்.

"உக்காருத்தே காப்பித் தண்ணி குடிச்சிட்டுப் போவலாம்."

"ஏம் புள்ள பொங்க வைக்கலியா நீ?"

"எங்கத்தே பொங்கறது? என் மனசுதான் பொங்குது? அந்தப் பாவி மனுஷனுக்கு இப்படியா சாவு வந்து பொட்டுனு போவணும்... போனவரே போனாரு... எங்களையும் கூட்டிட்டு போயிருக்கக் கூடாதா... கண்ணுல்ல அந்த ஐயனாருக்கு."

"ஏங் கெடந்து புலம்பறே? நடந்தது நடந்து போச்சு... சமாளிக்கணும் புள்ள."

"சமாளிச்சிட்டுத்தானே இருக்கேன்த்தே!"

பேசிக் கொண்டே வெல்லத் தூள் போட்டு வடிகட்டிய வெறுங் காப்பியை வைத்தாள் அவள் முன். எடுத்துக் குடித்தபடியே கேட்டாள் :

"புள்ளைங்க எங்கன்னு கேட்டா பதிலு சொல்லலையே?"

"தப்புக் கடலை பொறுக்கப் போயிருக்குங்கத்தே."

"இப்ப ஆரு ஊட்லே கடலைக்காய் வெட்டுனாங்க... ஒண்ணுந் தெரியலியே..."

"அதான், பூச்சக் காட்ல."

"சரி சரி, புள்ளைங்க





# தாறுமாறாக விலையேறப் போகிறது தர்பூசணி!

*இந்த ஆண்டு தர்பூசணியின் விலையும் எக்கச்சக்கமாக உயர வாய்ப்பிருக்கிறது. காரணம்?*

*"இந்த தர்பூசணி மானாவாரிப் பயிர். 90 நாட்களில் விளையக் கூடியதுதான். என்றாலும் இது முழுக்க முழுக்க வட கிழக்குப் பருவ மழையைத்தான் நம்பியிருக்கிறது. இந்த ஆண்டோ 26 நாட்கள் பெய்ய வேண்டிய வ.கி. பருவமழை ஏமாற்றி விட்டது. வழக்கமாகப் பெய்வதில் முப்பது சதம்தான் பெய்துள்ளது. இதனால் வழக்கமான தர்பூசணி விளைச்சலில் 25 சதம்தான் இந்த ஆண்டு விளைந்துள்ளது!" என்று கூறும் விவசாய நிபுணர் எஸ்.எஸ். நாகராஜன், "இது நடுத்தர விவசாயிகளின் பயிர் என்பதால் இந்த ஆண்டு அவர்களுக்கும் ஏக பாதிப்பு!" என்கிறார்.*

*தர்பூசணிக்குக் கிராக்கி ஏற்பட்டதற்கு இன்னொரு சமூகக் காரணமும் இருக்கிறதாம். "முன்பெல்லாம் வசதிபடைத்தவர்கள் தர்பூசணி சாப்பிடுவதை கௌரவக் குறைச்சலாக நினைத்தார்கள். இப்போது ஐந்து நட்சத்திர ஹோட்டல்களிலும் இதை அலங்காரமாகப் பரிமாற ஆரம்பித்து விட்டதாலும் கிராக்கி அதிகமாகி விட்டது!" என்கிறார் நாகராஜன்.*

**- எஸ்.வி.என்.**
**வண்ணப்படம் : யோகா**

வர்றதுக்குள்ளே கஞ்சி காச்சு. ஆர்னாச்சும் பொங்கச் சோறு கொண் டாந்தா நா வந்து குடுக்கறேன்."

"சரித்தே."

மறக்காமல் இரண்டு ரூபாயைத் தந்து விட்டுத்தான் போனாள். அதற்கு முன் மூன்று நாட்களாகப் பட்டினி இல்லை. கடலைக்காய் வெட்டப் போயிருந்தாள் குழந்தைகளோடு. கடலை வெட்டும் போது எவ்வளவு கடலை வேண்டுமானாலும் தின்று கொள்ளலாம். அதற்குக் கட்டுப்பாடில்லை. ஆனால் வெட்டி முடிந்து, கடலையைக் கொடியிலிருந்து ஆய்ந்து, அளந்து கொட்டி விட்டு வரும் போது கூடையைக் கவிழ்த்து, மடியை உதறிக் காட்டி விட்டுத்தான் வர வேண்டும்.

கடலைக் காடு முழுக்க வெட்டி முடிந்ததும், பெட்டிக் கூடை, களைக் கொட்டோடு போய் மண்ணைச் சீய்த்து, மண்ணில் தப்பியிருக்கும் கடலைகளைப் பொறுக்கிக் கொள்ளலாம். மூன்று நாட்களாவது இடைவெளி வேண்டும். வெட்டிய உடனேயே தப்புக் கடலை பொறுக்க அனுமதிக்க மாட்டார்கள். ஆய்ந்த கடலையை மண்ணுக்குள் கொட்டி மறைத்து வைத்து விட்டுத் தப்புக் கடலை பொறுக்கும் சாக்கில், கடலையைத் திருடி விடுவார்கள் என்பது உரிமையாளர்களின் நினைப்பு.

வீட்டில் சமைக்க ஏதுமில்லை. பண்டிகை நாளாதலால் கூலி வேலைக்கும் போக முடியவில்லை. கூப்பிடவும் மாட்டார்கள். தப்புக் கடலை கொண்டு வந்தால், வேகவைக்கலாம். ஒருவேளையாவது பசியாறலாம். குழந்தைகளின் வரவை ஆவலோடு எதிர்பார்த்துக் காத்திருந்தாள் அஞ்சலை.

கிணறு தோண்டப் போன மாதையன் மேல், வெடி மருந்தில் பிளந்த பாறை விழுந்து ரத்தக் கூழாய் வெளியே வந்த போது கூட அவள் நிலைகுலைந்து போகவில்லை. நான்கும் பெண்கள். பதினைந்து வயது முதல் அடுத்தடுத்த இரண்டு வருடங்களில். காடு கழனி என்று அலைந்து திரிந்தாலும் ஒருவேளை சாப்பிடுவதே பெரும்பாடாக இருந்தது. பதினைந்து வயது பாப்பாத்தியும் அடுத்தவளும் தாவணி போடும் வளர்ச்சியில் இருந்தனர். குழந்தைகளை நினைத்துக் கொண்டே கொண்டு வந்து போட்டிருந்த முள்ளை வாகாகத் தரித்து அடுக்கிக் கொண்டிருந்தாள்.

வெறும் பெட்டிக் கூடையைத் தலையில் கவிழ்த்தவர்களாக நான்கு பேரும் சோர்ந்து போய் வந்தனர்.

"ஏண்டி குட்டிகளா என்னாச்சு? ஏன் இப்படி அழுது போயி வர்றீங்க?" பதறியபடி கேட்டாள் அஞ்சலை. தப்புக் கடலை பொறுக்கப் போனவர்கள் மதியவெயிலில் வெறுங்கூடையுடன்

## 'சுருக் - நறுக்' என்றொரு சொல்லோவியம் - 25

# பயணம் என்பது....

பயணம் செய்யாத மனிதர்களே இருக்க முடியாது. மனிதர்கள் மட்டுமா, பயணம் செய்யாத ஜீவராசிகளே கிடையாது!

அப்படிப்பட்ட பயணம் குறித்து ஒரு சொல்லோவியம் தீட்டுங்களேன்! நறுக்கென்று தீட்டுங்கள்.

பிரசுரமாகும் ஒவ்வொரு சொல்லோவியத்துக்கும் ஐம்பது ரூபாய் பரிசு. அடுத்த வாரத்தோடு முடியப் போகும் இந்தப் போட்டியில் உங்களில் யார் அதிக முறை பரிசுகள் வாங்குகிறீர்களோ, அவருக்கு ஒரு ஜோடி டைடன் கைக்கடிகாரங்கள் மெகா பரிசு!

முடிவு தேதி : 8.4.96

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

பயணம் என்பது : ....................................

....................................

....................................

....................................

....................................

பெயர் : ....................................

முகவரி : ....................................

....................................

....................................

....................................

வந்தது கூட அவளுக்குப் பெரிதாகப்ப
வில்லை. அழுது வீங்கிய முகம் தான் அவ
கவலையை அதிகரித்தது. மூத்தவள்தா
ஆரம்பித்தாள். மற்றதுகள் மூன்றும் அக்காவ
இடுப்பையும் தோளையும் ஆதாரமா
பற்றியிருந்தன.

"அம்மா... அம்மா... அந்தப் பூச்சக்காட்
பெரியய்யா..."

''பெரியய்யா என்னடி செஞ்சாரு
சொல்லித் தொலையேன்!'' படபடத்தா
அஞ்சலை.

"அம்மா, நாங்க காலைலேருந்து... நெறய
பொறுக்கினம்மா... என்னமோ தெரியல
சீய்க்க சீய்க்க நெறயை கடலை வந்துட்
இருந்துச்சு.. நாலு பேருக்கும் முக்கா
பொட்டிக் கூடைம்மா... அப்பப் பாத்துப் பெ
யய்யா வந்தாரும்மா."

"வந்தா என்ன? தப்புக் கடலை பொறு
வந்தமுன்னு சொல்றதுதானே?"

"சொன்னம்மா... அவுரு கேக்கலை..."

"என்னடி செஞ்சாரு?"

"நாலு பேரும் வரிசையா நில்லுங்கன்னா
ம்மா... அப்புறம்... அப்புறம்..." சொல்ல மு
யாமல் நால்வரும் அழுதனர்.

''சொல்லிப் போட்டாச்சும் அழு
தொலைங்கடீ. அடக் கண்ணுல்லாத க
வுளே..."

அடுத்தவள் தொடர்ந்தாள்.

"வரிசையாப் பாத்துட்டே வந்தவரு, எ
காட்ட போயித் தோள்லே கை வெச்சாரும்ம
நாங்க அப்புடியே களைக்கொட்டால ஆ
கொரு அடி போட்டதும், அவுரால நகர மு
லேம்மா. விழுந்துட்டாரு... நாங்க... ஓடிய
துட்டோம்!"

சொல்லி முடித்ததும் அழ ஆரம்பித்தவ
இன்னொருத்தி சொன்னாள். "இந்தத் தப்
கடலைக்காய்தானே அவர அப்படிச் செ
வச்சதுன்னு.. கீழே விழுந்த அந்தாளு மே
கொட்டிட்டு வந்துட்டோம்."

"யார்னாச்சும் பாத்தாங்களா...?"

''முத்தம்மா பாட்டிதான் சித்த மு
ந்தைக்கி போச்சு போல."

மனத்தில் பீதி படர்ந்தாலும் சமாளித்து
அஞ்சலை. சற்று நேரத்துக்கெல்லாம் முத்தம்
வந்தாள்.

முதல் வருடம் கொடுத்த அதே புடை
யில் முத்தம்மா கிழிசலாக. "நாளுங் கெழ
யுமா... இந்தாங்க. ஆளுக்கொண்ணா பெ
இரண்டும் கட்டிக்கங்க புள்ளைகளா."

சற்று முன் உடுத்தியிருந்த புதிய சிவப்
புடைவையை இரண்டாகக் கிழித்து, தாவ
களாக நீட்டினாள் முத்தம்மாக் கிழவி.

தன் புடைவைக் கிழிசல் இப்போது அ
சலைக்குத் தெரியவில்லை.